மஹாபாரதம், உபநிஷத்துக்கள், இராமாயணம், பாகவதம் களைவிட்டு நான் ஒருபோதும் இருந்திரேன். இதற்கு முன் ... மஹாபாரதத்தில் ஏதோ சில சில இடங்களைப் படித்தேனே ... முழுப்புஸ்தகத்தையும் படிக்கவில்லை. பலர் கொலையுண்ட ... தின் சரித்திரத்தையே அது தெரிவிப்பதென்றும், படிக் ... கச்செய்யும் விஸ்தாரமான வர்ணனைகள் அதில் அடங்கி ... றும் நான் தவறான அபிப்பிராயங்கொண்டிருந்தமையால், ... நூலில் வெறுப்பும் இருந்ததுண்டு. நெருக்கமாக அச்சிட்டுள்ள ... பக்கங்கள் கொண்ட அந்தப் பெரிய நூலை அணுகுவதென்றாலே எனக்குப் பயமாயிருந்தது. ஆனாலும், அதைப்படிக்கத் தொடங்கினேன், ஆரம்பித்தபின், எப்படியாவது அதை முழுதும் படித்துவிடவேண்டுமென்ற பேராவல் உண்டாயிற்று. சில பாகங்கள் தவிர, நூல்முழுவதுமே எனக்கு மிக்க ஆனந்தத்தைக் கொடுத்தது. 4-மாதங்களில் அதைப் படித்து முடித்தேன். தோண்டத் தோண்ட அதிக விலை பெற்ற ரத்னங்களைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும் ஒரு சுரங்கத்துக்கு அதனை ஒப்பிடலாமேயல்லாமல், விலையிலும் அளவிலும் அட... கிய பளபளப்புள்ள ரத்னங்களையுடைய ஒரு கஜானாப் பெட்டிக்கு ஒப்பிட எனக்கு மனமில்லை. மஹாபாரதத்தை ஒரு சரித்திர புஸ்தகமாக நான் கருதவில்லை. நிலையான தத்வங்களெல்லாம் கதைகளாக அதில் விளக்கப்பட்டுள்ளன.

இந்தக் கிரந்தமானது, நன்மை ... ஜீவன்-ஜடம், தேவன்-அஸுரன், இவைகளுக்குள் பரஸ் ... ருக்கக்கூடிய விரோதத்தைப்பற்றித் தெரிவிப்ப ... ன் ஆசிரியர், தமது அபிப்பிராயத்துக்கு ஏற் ... ந்தமான மனிதர்களையும் விஷயங்களையும் எடுத்துக்ெ ... ர்களாகவோ அஸுரர்களாகவோ மாற்றியிருக்கிறார். ஓடிக்ெ ... ருக்கையில், பல உபநதிகளையும் சில கலங்கலான சிறு நதிகளையும் மார்க்கத்தில் தன்னோடு சேர்த்துக்கொள்ளும் ஒரு மகாநதிபோன்றது இம்மஹாபாரதம். எல்லாம் ஒரு மஹா புத்திமானது அரியசெய்கை. இந்தப் புஸ்தகத்தின் முடிவு மிகவும் சிறப்பாயிருக்கிறது.

## rom the "Young India"

in the " Hindu " Sep. 10, 1924. Page 15.

*Mahatmaji's Jail Experiences"*

## His Jail Library, XI.

That which I would not have missed was the "Maha-rata" and the " Upanishads "; the " Ramayana " and " Bhagavat " * * * * * The " Mahabharata " I never read before except in scraps. I was even pre-ed against it, believing (falsely as it has now turned that it was nothing but a record of bloodshed and ssible long descriptions which would send me to sleep. aded to approach the bulky volumes covering over ly printed 6000-pages. But having once commenced eading, I was impatient to finish it, so entrancing it d to be except in parts. I compared it, as I finished t months, not to a Treasure Chest in which you find ng but polished gems limited as to quantity and y but to an inexhaustible mine which the deeper one he more precious ar the finds. The Mahabharata to me a histor ord * * but it deals with varieties ir al fashion. It takes up cal personage nd transforms them into or devils as it s se of the poet whose is the eternal du ood and evil, Spirit atter, God and Sata s like a mighty river in its progress absorbs many streams some even . It is the conception of one brain. * * * The of it is magnificent. * * * *

ஸ்ரீ:

# முகவுரை.

—:o:—

அன்பர்களே! ஸ்ரீகண்ணபிரானுடைய பரமகிருபையால், [1]ஐந்து பர்வங்களடங்கிய இந்தப் புஸ்தகம் பூர்த்தியாகி வெளிவந்ததை மிக்க களிப்புடன் தெரிவிக்கிறேன். மற்றப் புஸ்தகங்களை வெளியிட்டபோது உண்டானதைக்காட்டிலும், இந்தப் புஸ்தகத்தை வெளியிடுவதில் எனக்குப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. 'ஸ்ரீ மஹாபாரதம் முற்றிற்று' என்று போட்டுப் பார்க்கவேண்டுமென்று பல வருஷங்களாக இருந்த என் விருப்பம், கடவுள் அருளால், இந்தப் புஸ்தகத்தில் நிறைவேறியதன்றோ? மஹாபாரத அபிமானிகள் பலருக்கும் இது பெருமகிழ்ச்சியை விளைவிக்கும் என்பதிற் சந்தேகமில்லை. தங்களுக்குப் பிராயம் அதிகரிக்கிறதென்றும் ஸ்ரீமஹாபாரதம் பூர்த்தியாகிப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பம் தங்களுக்கு மிகுதியாயிருக்கிறதென்றும் அடிக்கடி எழுதி என்னைத் தூண்டிய பெரியோர்கள் பலருண்டு. அவர்களுள் முக்யமானவர்கள், ப்ரம்மஸ்ரீ, Prof. K. சுந்தரராம ஐயர் அவர்கள், M. A.; கொழும்பு, Hon'ble Sir. P. Ramanatham அவர்கள் K.C.C.M.G., M.L.C.; Late Mr. H Le. Fanu. I. C. S. அவர்கள் முதலியவர்கள். நற்சாக்ஷிப் பத்திரங்களில் நான் பதிப்பித்திருக்கிற அவர்களுடைய லிகிதங்களில் இந்தக் கருத்தைப் பரக்கக் காணலாம். ஸ்ரீ மஹாபாரதம் முழுதும் பூர்த்தியாயிற்றென்ற பூர்ண திருப்தி உண்டாகாவிட்டாலும், 'ஸ்ரீ மஹாபாரதம் முற்றிற்று' என்று போட்டுப் பார்க்கும் அளவில் ஒரு திருப்தி உண்டாகுமென்பது நிச்சயம். எஞ்சியுள்ள உத்யோகபர்வமும் ஆரண்யபர்வமுமா[illegible]யும் சில மாதங்களில் பூர்த்தியடைவித்து, மஹாபாரத அபிமானிகளுக்கும் பூர்ணதிருப்தி உண்டாகும்படி எம்பெருமான் அருள்புரிக.

ஸ்ரீ மஹாபாரதத்தை ஒரு [2]விருக்ஷமாக உருவகம் செய்தவிடத்தில், 'சாந்தி பர்வம் ஒரு பெரும் பழம்; ஆஸ்வமேதிக பர்வம் அமிருதத்

---

1. இவைகளுக்கு அந்திய பஞ்சகமென்று பெயர். மற்றவை, ஆதிய பஞ்சகம், யுத்த பஞ்சகம், சாந்தி த்ரயம் என்பன.

2 ஆதிபர்வம் 11-ம் பக்கம் பார்க்க.

# முகவுரை.

[illegible] ரஸம்; ஆஶ்ரமவாஸிக பர்வம் பறவைகளுக்கு ஆதாரமான இடம்; மௌஸலபர்வம் பறவைகளின் ஒலித்தொகுதி; சிஷ்டர்கள் இம்மரம் காத்த பறவைகள்' என்று கூறப்பட்டுளது. ஸ்ரீ வேதவியாஸ பகவானுடைய பெருமை ஸ்ரீமஹாபாரதம் முழுதும் நிரம்பியிருந்தாலும், ஆஶ்ரமவாஸிகபர்வத்திலுள்ள புத்ர தரிசன பர்வத்தால், அவருடைய மிக்க ஆச்சர்யகரமான திவ்ய சக்தி நன்கு விளங்குகிறது. மஹாப்ரஸ்தானிக பர்வத்திலும் ஸ்வர்க்காரோஹண பர்வத்திலும் அடங்கிய கதையால், பாரத வீரர்களுக்கு அவரவர்களுடைய குணகர்மங்களுக்குத் தக்கபடி மறுமைப்பயன் கிடைத்ததும், கதாநாயகராகிய யுதிஷ்டிரருடைய எந்த நிலைமையிலும் கலங்காத மன உறுதியும், அதனால் அவர் அடைந்த ஒப்புயர்வற்ற பெரும்பதவியும் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

இத்துணைச் சிறப்புவாய்ந்த இந்தப் பர்வங்களைப் பலபண்டிதர்களைக் கொண்டு மொழிபெயர்ப்பிக்க நேர்ந்தது. அப்படி மொழிபெயர்த்து உதவியவர்களுள், கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் ரிடயர்டு பிரதம ஸம்ஸ்கிருத பண்டிதர், ப்ரம்மஸ்ரீ, பண்டித, R. சிவராம சாஸ்திரிகளவர்களும், மஹாபாரத மொழிபெயர்ப்பில் பலபாகங்களை மூலத்தோடு ஒப்பிட்டுத் தந்தவர்களும் காவ்ய சாஸ்திரங்களில் மிக்க பாண்டித்யமுள்ளவர்களுமான ஸ்ரீ. உ. வே. குமார மங்கலம், நரஸிம்மாசாரியரவர்களும் முக்யமானவர்களாவார்கள். ஒருபண்டிதர்மொழிபெயர்த்ததை வேறொரு பண்டிதர் ஒப்பிட்டுப்பார்த்து அவர்களுக்குத் தோற்றுகிற கருத்து வேறுபாடுகளைக் குறித்து முதலில் மொழிபெயர்த்தவர்களுக்கு அனுப்புவதும், அவர்கள் பார்த்துத் தமக்கு உடன்பாடான விஷயங்களை ஏற்றுக்கொள்வதும், தாம் கூறியபொருளை பொருத்தமுடையதென்று தோன்றினால் அதற்குச் சமாதானம் சொல்வதும், பிறகு, நான் ஒப்பு நோக்கித் திருத்திப் [illegible]ம், இந்த மஹாபாரத மொழிபெயர்ப்பில் நான் அனுஷ்டி[illegible] முறை. இம்முறையில், இந்தப் பர்வங்களின் மொழிபெயர்ப்பைக் கும்பகோணம் கவர்ன்மெண்டு காலேஜ் ஸம்ஸ்கிருதபண்டிதர், மஹாவித்வான் ஸ்ரீ. உ. வே. அபிநவபட்டபாணர், R. V. கிருஷ்ணமாசாரியர்ஸ்வாமி மூலத்தோடு ஒப்பிட்டுக் கருத்து வேறுபாடுகளை அங்கங்கே குறித்தனுப்பினார்கள். அவர்கள் செய்திருந்த திருத்தங்கள், அவர்களுடைய காவ்யஜ்ஞானத்தையும் சாஸ்திர பரிஶ்ரமத்தையும் புத்தியின் நுட்பத்தையும் நன்கு விளக்குகின்றன. அவர்கள் காலேஜ்வேலை, வேறுமாணவர்களுக்குப் பாடம் சொல்லுதல், கிரந்த

# முகவுரை

ஆராய்ச்சி, கிரந்தங்கள்இயற்றுதல் முதலி
இந்தவேலையையும் சிறிதும்சலிப்பின்றிச்(
தக்கது. அவர்கள் என்னிடத்துள்ள அவ்யாஜமான அன்பு ஒன்றையே காரணமாகக்கொண்டு கைம்மாறு கருதாமற்செய்த இந்தப்பேருதவியை நான் என்றும் மறவேன்.

இதுவரை வெளிவந்த பர்வங்களில் சாந்திபர்வத்தைப் பதிப்பித்ததில் எனக்கு மிக்க சிரமம் உண்டாயிற்று. இந்த ஆச்வமேதிக பர்வத்திலும் பல இடங்களில் அப்படியே இருந்தது. இதில் 'அநுகீதை', 'வைஷ்ணவ தர்மம்' முதலியவற்றில் பல ச்லோகங்களுக்குப் பொருளும் மற்றும் பல விஷயங்களும் நிச்சயிக்கக் கூடாமல் முட்டுப்பாடுண்டாயிற்று. இத்தகைய பல அரிய விஷயங்களை, கும்பகோணம், மத்வ சாஸ்திர ஸம்பூர்ணர், பாரதவிம்மம், காபே. ராமசந்திராசாரியரவர்கள் எளிதில் விளங்கும்படி செய்தார்கள். எந்தக்காலத்தில் போனாலும் அவர்கள் பரமதிருப்தியோடு விஷயங்களை ஐயந்திரிபின்றித் தெரிவித்து வருகிறார்கள். இதிஹாஸ புராணங்களில் அவர்களுக்குள்ள பாண்டித்யம் மிகப் பாராட்டத்தக்கது. அவர்கள், மஹாபாரதத்தில் ஐம்பது வருஷங்களாக மிக ச்ரமப்பட்டு ஆராய்ச்சிசெய்து நிச்சயித்திருக்கிற விஷயங்களை இந்த மொழிபெயர்ப்புக்கு உபயோகமாகும்படி செய்து வருகிறார்கள். நான் இந்தமஹாபாரத கைங்கர்யத்தைத் தொடங்கிய காலமுதல் அவர்கள் செய்துவருகிற பேருதவி எல்லையில்லாதது. நான் நேரிலும் என் நண்பர்கள்மூலமாகவும் அவர்களுக்கு அடிக்கடி சிரமம் கொடுப்பதைச் சிறிதும் நினையாமல், தாம் தெரிந்துகொண்டிருக்கிற விஷயங்களை உபயோகிப்பதற்குத் தக்க ஸமயம் வாய்த்தது தமக்குப் பரமலாபமென்று சொல்லுவார்களானால் அவர்களுடைய அருமைக் குணத்தை என்னவென்று சொல்வது!

ஸம்ஸ்கிருதபண்டிதர்களுள்ளும் தமிழ்ப்பண்டிதர்களுள்ளும் இவர்களைப்போல நூல்களை வரலாற்றுமுறையில் கற்றுத் தேர்ந்தவர்கள் இக்காலத்தில் மிகச் சிலரே உள்ளனர். அவர்கள் அறிந்துகொண்ட விஷயங்கள் என்றும் அழியாமல் நிற்கும்படி செய்துகொள்ளாமலிருப்பது நமது தேசத்தார்களுடைய ஆலோசனையின்மையே. ஒரு தேசத்தின் பெருமையெல்லாம் அத்தேசத்திலுள்ள நூல்களால் வருபவை என்பதைத் தேசாபிமானிகளென்று சொல்லிக்கொள்ளுகிற பெரியோர்கள் சிந்திக்கவேண்டும். நமது முன்னோர்கள் அடைந்திருந்த மேலான நிலைமையையும் அவர்களுடைய அறிவின் முதிர்ச்சியையும் அவர்களியற்றிய நூல்களாலும் அவர்கள் செய்திருக்கிற சில்பம்முதலியவற்றாலுமன்றி வேறு எவ்வகையால் நாம் அறிந்துகொள்ளக்கூடும்? அவைகளை அழியாமல் காப்பதும், நம் நாட்டாரனைவரும் அவைகளை எளிதில் உணரும் உபாயம் தேடுவதும், நமது தேசாபிமானிகளுடைய கடமையாகும்.

இந்த மஹா பாரத கைங்கர்யத்தை மேற்கொண்டு பல வருஷங்கள் நடத்திவந்து, மேல் நடத்த இயலாமல் மனத்தளர்ச்சியுற்று நிறுத்தி

## கவுரை.

ழுது, இவ்வளவு நடத்திவந்து இடை எப்படியாவது நிறைவேற்றிவிட வேண்டுமென்றும் எனக்கு ஊக்கமுண்டாகும்படி சொல்லி, ஸ்ரீமான், ராவ் பகதூர். V. T. கிருஷ்ணமாசாரியர் அவர்கள், C.I.E. ஸ்ரீமான் R. நாராயண ஐயர் அவர்கள், M. A. Bar-at-Law I.C.S. முதலிய பல ஆப்தர்கள் செய்துவருகிற பேருதவியைப்பற்றிச் சல்யபர்வ முகவுரையிலும் விராடபர்வம் மூன்றும்பதிப்பின் முகவுரையிலும் ஒரு சிறிது தெரிவித்திருக்கிறேன். மஹாபாரதப்பதிப்புவேலை முழுதும் சில மாதங்களில் பூர்த்தியாகுமாதலாலும், அப்பொழுது, நூல் முழுதுக்கும் ஒரு முகவுரை எழுதப்படுமாதலாலும், இதனை ஆதரித்துவருகிற பரமோபகாரிகளுடைய பேருதவிகளை அதில் விவரமாகத் தெரிவிப்பேன்.

திருவாவடுதுறை ஆதீனத்துத் தலைவர்களாகிய மஹாகனம் பொருந்திய ஸ்ரீலஸ்ரீ **வைத்தியலிங்க தேசிகரவர்கள்,** இளமை தொடங்கி என்னிடத்து மிக்க அன்புடையவர்களாகையாலும் இந்த ஸ்ரீமஹாபாரத மொழிபெயர்ப்பை ஆரம்பமுதல் மிக்க ஶ்ரத்தையுடன் படித்து வருபவர்களாகையாலும், இதற்கு வேண்டிய உதவிகளை, அந்த ஆதீனத்திலுள்ள வழக்கப்படி, அப்போதப்போது குறிப்பறிந்து செய்துவருகிறார்கள். அவர்களுடைய அன்புடைமையை நான் என்றும் மறவேன். அவர்களுக்கு எல்லா நன்மைகளையும் அளித்தருளும்படி எல்லாம் வல்ல ஸர்வேஶ்வரனைப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீமஹா பாரத கைங்கர்யத்தைத் தலைக்கட்டிவைக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிற பரம ஆப்தர்கள், கையெழுத்துப்பிரதியைப் பல அச்சுக்கூடங்களில் பிரித்துக்கொடுத்து வேலையை விரைவாக நடத்தி முடிக்கவேண்டுமென்று நேரிலும் லிகிதமூலமாகவும் அடிக்கடி என்னைத் தூண்டுகிறார்கள். அது எனக்குப் பேரூக்கத்தை அளிக்கின்றது. நான் இதைத்தவிர வேறு ஒரு கார்யத்திலும் ஸம்பந்தம் வைத்துக்கொள்ளவில்லை. எனக்கு வேறு ஒன்றிலும் ஞாபகமுமில்லை. அப்படியிருந்தும், நான் தனியே செய்யக்கூடிய கார்யமாக இல்லாமையாலும், விஷயம் மிகக் கடினமாயிருத்தலாலும், பல ஸௌகர்யங்களை எதிர்பார்க்க வேண்டியிருத்தலாலும், நான் எவ்வளவு முயன்றும் இங்ஙனம் தாமதமாகிறது. இதனால், ஆப்தர்களுக்கு ஊக்கக் குறைவு உண்டாகாமலிருக்கவும், பல வருஷங்களாக மிக்க சிரமத்துடன் நடைபெற்றுவருகிற இந்த அரிய பெரிய நற்காரியம் சில மாதங்களில் பூர்த்தியடையவும், எல்லாம்வல்ல ஸர்வேஶ்வரன் அருள் புரிக.

மணலூர்,<br>
நரசிங்கன்பேட்டை, S.I.R.<br>
6—9—1926.

இங்ஙனம்.<br>
**ம. வீ. இராமாநுஜாசாரியன்.**

ஸ்ரீ:

ஸ்ரீ மஹாபாரதம்.

# ஆஸ்வமேதிக ஆஸ்ரமவாஸிக மௌஸல மஹாப்ரஸ்தானிக ஸ்வர்க்கா ரோஹண பர்வங்களின்

## விஷயஸூசிகை.

——:o:——

## I. ஆஸ்வமேதிகபர்வம்.

### அஸ்வமேதபர்வம்.

அத்யாயம். பக்கம்.

# விஷய ஸூசிகை.

அத்யாயம். பக்கம்.



## II. ஆஸ்ரமவாஸிகபர்வம்.

### ஆஸ்ரமவாஸபர்வம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்

நாரதாகமனபர்வம்.



## III. மௌஸலபர்வம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்

# IV. மஹாப்ரஸ்தானிகபர்வம்.

அத்யாயம். பக்கம்.



## ஸ்ரீமஹாபாரத ஶ்ரவணவிதி அத்யாயம்.



விஷயஸூசிகை முற்றிற்று.

ஸ்ரீமஹாபாரதம் முற்றிற்று.



ஶ்ரீ:

ஶ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

ஶ்ரீக்ருஷ்ணத்வைபாயனாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்.

## ஆஶ்வமேதிக பர்வம்.

### முதலாவது அத்யாயம்.

### அஶ்வமேதபர்வம்.

1நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம்
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்॥

**(கங்கையில் பீஷ்மருக்கு உதகதானம் செய்தபிறகு, பந்துக்களின் அழிவினால் துயரப்படும் யுதிஷ்டிரரைத் திருதராஷ்டிரன் ஸமாதானஞ்செய்து தான் விதுரருடைய வார்த்தையை அலக்ஷியம் செய்ததால் இவ் விதத்துன்பத்தை அடைந்ததாகக் கூறியது.)**

சிறந்தகைகளையுடைய தர்மபுத்திரர், தர்ப்பணம் செய்து, மனக் கலக்கமுற்று, திருதராஷ்டிரராஜனை முன்னிட்டுக்கொண்டு கங்கையி னின்று கரையேறினர். சிறந்தகைகளுள்ளவரும் நீர்ததும்பும் கண்களை யுடையவருமான அவர் கரையேறி, வேடனால் அடிக்கப்பட்ட யானை போலக் கங்கைக்கரையில் விழுந்தார். (அவ்விதம்) வருத்தமுறுகின்ற அவரைக் கேசவரால் ஏவப்பட்டபீமன் தாங்கிக்கொண்டான். பகைவ ரின்படையை அழிப்பவரான கோவிந்தரும், அவரைப்பார்த்து, 'இவ் விதம் (துயரப்பட) வேண்டாம்' என்று சொன்னர். அரசரே! துன்பமுற்றவரும் பூமியில் விழுந்திருப்பவரும் அடிக்கடி பெருமூச்சு விடுகின்றவரும் தர்மபுத்ரருமான அந்தயுதிஷ்டிரரை அரசர்கள் கண் டார்கள். தீனமானமனமுள்ளவரும் வலிமையற்றவருமான அந்தராஜ

ன் உரை விசேஷத்தை முன்பர்வங்களின் தொடக்கத்திற் காண்க.

ரைப்பார்த்து அதிக சோகத்தால் கவரப்பட்ட மற்றப்பாண்டவர்கள் அருகில் உட்கார்ந்தனர். அவ்விதமே, தைன்யமுற்றவனும் சிறந்தபுத்தியுள்ளவனும் அறிவைக் கண்ணாகக்கொண்டவனும் அரசனுமான திருதராஷ்டிரனும், சிறந்தகைகளுள்ளவரும் அரசருமான அந்த யுதிஷ்டிரரைநோக்கிப் பின்வரும் வாக்யத்தைச் சொல்லலானான்:— "குருப்ச்ரேஷ்ட! எழுந்திரு. மேலே செய்யவேண்டிய காரியத்தைச் செய். குந்தீ புத்திரனே! நீ இந்தப் பூமியை க்ஷத்ரியதர்மத்தால் ஜயித்தாய். அரசனே! நீ இந்தப்பூமியை ஸஹோதரர்களுடனும் நண்பர்களுடனும் சேர்ந்து அனுபவிப்பாயாக. தர்மத்தை ரக்ஷிப்பவரிற் சிறந்தவனே! நீ துயரப்படவேண்டியதாக நான் நினைக்கவில்லை. வேந்தே! நானும் காந்தாரியுமே துயரப்படவேண்டும். ஏனெனில், எங்களுடைய நூறுபுத்திரர்களும் கனவில்கிடைத்த பொருள்போல நசித்துவிட்டார்கள். கெட்டபுத்தியுள்ள நான், எனது நன்மையில் விருப்பமுள்ளவனும் மஹாத்மாவுமான விதுரனுடைய மிகச்சிறந்த அர்த்தமுள்ளசொற்களைக் கேளாமல் மிகவும் தவிக்கிறேன். தர்மாத்மாவும் திவ்யஜ்ஞானமுள்ளவனுமான விதுரன் என்னைப்பார்த்து,'துர்யோதனனுடைய குற்றத்தால் உம்முடையகுலம் அழியப்போகிறது. அரசரே! குலத்திற்கு க்ஷேமத்தை விரும்புவீராகில் நான் சொல்லுகிறபடி செய்யும். துஷ்டஸ்வபாவமுள்ளவனும் அறிவீனனும் அரசனுமான துர்யோதனன் கொல்லப்படவேண்டும். அல்லது, கர்ணனும் சகுனியும் இவனை ஒருபொழுதும் பார்க்கவேகூடாது. இம்மூவரும் சூதாடுவதற்காகச் சேருவதையும் ஜாக்கிரதையாயிருந்து தடுத்துவிடும். தர்மாத்மாவான யுதிஷ்டிரனை ராஜாவாக அபிஷேகம் செய்யும். இந்திரிய ஜயமுள்ள அவன் இந்தப்பூமியைத் தர்மமாகப்பரிபாலிப்பான். குந்தீபுத்திரனான அவனை அரசனாகச்செய்ய உமக்கு இஷ்டமில்லாவிட்டால் உம்முடையபுத்திரர்கள் அழிந்துபோவார்கள்; ஸந்தேஹமில்லை. அரசரே! அல்லது, நீரே [1]உறுதியாயிருந்துகொண்டு ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளும். ஞாதிகளை வளரச்செய்பவரே! எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாயிருப்பவரான உம்மை எல்லா ஞாதிகளும் அடுத்து ஜீவிக்கட்டும்' என்றான். குந்தீபுத்திரனே! நீண்ட ஆலோசனையுள்ளவனான விதுரன் இவ்விதம் சொல்லியும் பயனற்றபுத்தியுள்ள நான், பாபியான துர்யோதனனை அனுஸரித்தேன். நான் அறி

---

1 'மேடீ (வ்) பூத:' என்பது மூலம். இந்தவார்த்தைக்குப் பொருள்விளங்கவில்லை. 'மேயி:' என்கிறவார்த்தைக்குக் கட்டுத்தறிஎன்றபொருளுண்டு. அதனால் சிலர்; 'மத்யஸ்தராக இருந்துகொண்டு' என்றும் பொருள் கூறுவர்.

ஞுனை அந்தவிதுரனுடைய இனிமையான சொற்களைக் கேளாமல் அதின்பயனுன பெரிய துக்கத்தை அடைந்து சோகக்கடலில் மூழ்கி னேன். வேந்தே! நீ இப்பொழுது பிராயம் முதிர்ந்தவர்களும் துக் கத்தையடைந்தவர்களும் உன்னுடைய தாய்தந்தைகளுமான எங்க ளிருவரையும் பார். மன்னவ! இப்பொழுது நீ துக்கப்படவேண்டிய தாக எனக்குத் தோன்றவில்லை" என்றான்.



## இரண்டாவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)

**(திருதராஷ்டிரன் தேற்றியும் மௌனமாயிருக்கும் யுதிஷ்டிரரை வாஸுதேவர் தேற்றியதும், மறுபடியும் பீஷ்மரையும் துரோணரையும் கர்ணனையும் கொன்றதை நினைத்துத் துயரப்பட்டுக் கானகம் செல்ல வாஸு தேவரிடம் அனுமதிகேட்டும் யுதிஷ்டிரரை வ்யாஸர் ஸமாதானம் செய்ததும்.)**

அறிஞனை திருதராஷ்டிரனால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்த யுதிஷ்டிரராஜரோ பேசாமலிருந்தார். பிறகு, மேதாவியான வாஸுதேவர், அவரைப்பார்த்து, 'அரசரே! மனத்தினால் அதிகமாக் சிந்திக்கப்படும் சோகமானது, அவனுடைய முன்னிறந்த பிதா மஹர்களையும் ஸந்தாபப்படுத்துகிறது. மிகுதியான நல்ல தக்ஷிணை யுள்ளவைகளும் பலவகைப்பட்டவைகளுமான அனேகயாகங்களால் தேவர்களைப் பூஜியும், ஸோமரஸத்தால் தேவர்களையும் ஸ்வதையி னால் பித்ருக்களையும் அன்னபானங்களால் அதிதிகளையும் மற்ற இஷ்டங்களால் ஏழைகளையும் த்ருப்தியடையச் செய்யும். சிறந்தபுத் தியுள்ளவரே! உம்மைப்போன்றவனுக்கு இப்பொழுது இது தகுதி அன்று. நீர் தெரிந்துகொள்ளவேண்டியதைத் தெரிந்து கொண்டீர்: செய்யவேண்டியதையும் செய்தீர். நீர் கங்காபுத்திரரான பீஷ்மரிடமி ருந்தும் வியாஸரிடமிருந்தும். நாரதரிடமிருந்தும் விதுரரிடமிருந் தும் ராஜதர்மங்களையும் கேட்டிருக்கிறீர். நீர் மூடர்களுடைய இந்த நடையை அனுஸரித்தல் தகாது. தாதை மூதாதைகளின் நடையைக் கைக்கொண்டு ராஜ்யப்பொறுப்பை ஏற்றுக்கொள்ளும். க்ஷத்ரியர் கீர்த்தியுடன் ஸம்சயமின்றி ஸ்வர்க்கம்செல்லத் தகுந்தவரல்லரா? இந்த யுத்தத்தில் சூரர்களுள் ஒருவனாவது புறங்காட்டினவனுக்

கொல்லப்படவில்லை. மஹாராஜரே! சோகத்தைவிலக்கும். அது அவ் விதமே ஆகவேண்டியதன்றோ? இந்த யுத்தத்தில் கொல்லப் பட்டவர் கள் உம்மால் மறுபடியும் பார்க்கமுடியாதவர்கள்' என்றார். மிக்கதேஜ ஸுள்ளவரான வாஸுதேவர் தர்மராஜரான யுதிஷ்டிரரைப்பார்த்து இவ்வளவு சொல்லி ஓய்ந்தார்.

யுதிஷ்டிரர் அவரைப்பார்த்து, 'கோவிந்தரே! உமக்கு என்னிடத் திலுள்ள ப்ரீதியை நான் தெரிந்துகொண்டேன். நீர் ஸ்நேஹத்தா லும் ப்ரியத்தினாலும் எப்பொழுதும் என்னிடத்தில் கருணைபுரிகிறீர். சக்ரத்தையும் கதையையும் தரிப்பவரே! ஸ்ரீமானே! யாதவகுமாரரே! நீர் எனக்குத் தபோவனம்செல்ல அனுமதிகொடுப்பீராகில், உம்மால் எனக்கு மிகப் பெரிய விருப்பங்களெல்லாம் அன்புள்ள மனத்துடன் செய்யப்பட்டனவாகும். நானும் க்ருதார்த்தனுவேனென்பதுதான் என்னுடைய உறுதியான எண்ணம். கொடியவனான நான் பிதாமஹ ரான பீஷ்மரையும், புருஷஸ்ரேஷ்டரும் குருவும் வீர்யமும் பலமு முள்ளவருமான துரோணரையும், புருஷஸ்ரேஷ்டனும் யுத்தங்களில் புறங்காட்டி ஓடாதவனுமான கர்ணனையும்கொன்று ஆறுதலேக்காண வில்லை. பகைவரை அடக்குபவரே! எந்தக்கர்மாவினால் இக்கொடிய பாவம் என்னைவிட்டுவிலகுமோ எந்தக்கர்மாவினால் என் மனம் பரிசு த்தமாகுமோ அந்தக்கர்மாவை இப்பொழுது விதிக்கக்கடவீர்' என் றார். இவ்விதம் சொல்லுகின்றவரும் குந்தீபுத்திரருமான அந்த யுதிஷ் டிரரைப்பார்த்துத் தர்மங்களை அறிந்தவரும் மிகப்பெரியதேஜஸு ள்ளவருமான வியாஸர் ஸமாதானம்செய்து சுபமானதும் நல்ல அர்த்தமுள்ளதுமான வசனத்தைச் சொல்லலானார்.

'ஐய! நீ நல்ல நிச்சயம் செய்தாய்! திரும்பவும் பால்யத்தினால் மதிமயக்கம் கொள்ளுகிறாய். நாங்களெல்லாரும் ஆகாயத்திலா அடிக் கடி பிதற்றுகிறோம்? நீ க்ஷத்ரியகர்மங்களை அறிந்திருக்கிறாய். அவர் கள் யுத்தஞ்செய்துதானே பிழைக்க வேண்டும்? அவ்விதம் செய்த அரசனை நீ மனோவியாதியென்னும் பந்தத்தை அடையத் தக்கவ னில்லை. நீ மோக்ஷதர்மங்களனைத்தையும் உள்ளபடி கேட்டிருக்கி றாய். நீ அதனால் காமத்தாலுண்டாகிய மாயையை விலக்கிக்கொள் ளத் தகுந்தவன். காமத்தாலுண்டான உன்னுடைய ஸந்தேகங்களைப் பலமுறை நான் அறுத்திருக்கிறேன். நீ (எங்கள் வார்த்தைகளில்) நம் பிக்கையில்லாதவனும் புத்திகெட்டவனும் நினைவு அழிந்தவனுமாயி ருக்கிறாய்; நிச்சயம். நீ இவ்விதம் இராதே. இத்தகைய இந்த அஞ் ஞானம் உனக்குத் தகுந்ததன்று. குற்றமற்றவனே! நீ எல்லாப்

பிராயச்சித்தங்களையும் தெரிந்துகொண்டிருக்கிறாய். நீ எல்லா ராஜதர்மங்களையும் தானதர்மங்களையும் கேட்டிருக்கிறாய். பாரத! எல்லாத் தர்மங்களையும் அறிந்தவனும் எல்லா ஆகமங்களிலும் ஸமர்த்தனுமான அப்படிப்பட்ட நீ மறுபடியும் அஜ்ஞானத்தினால் ஏன் மதிமயங்குகிறாய்?

## மூன்றாவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(வியாஸர் மனிதனுடைய காரியங்கள் கடவுள் கட்டளையாலேயே செய்யப்படுதலால் அவை தோஷத்தைச்செய்யா என்றுசொல்லி யுதிஷ்டிரரை அஸ்வமேதயாகஞ்செய்யச் சொல்லியதும், அவர் போதுமான பொருளில்லாமையைத் தெரிவித்ததும், வியாஸர் மருத்தனுடைய யாகத்தில் மிஞ்சிய பொருளைக் கொண்டுவரச் சொல்லியதும்.)**

யுதிஷ்டிர! உன்னுடைய ஆலோசனையானது நன்றாயிருக்கவில்லையென்று நான் எண்ணுகிறேன். ஒருமனிதனும் ஸ்வாதீனனாயிருந்துகொண்டு தானாகக் காரியத்தைச்செய்கிறதில்லை. இந்தமனிதன் ஈஸ்வரனால் ஏவப்பட்டு நல்லதும் கெட்டதுமான [1]செய்கையைச் செய்கிறான் பாரத! மேலும், உன்னைப் பாவம்செய்தவனாகவே முடிவாக நினைக்கிறாயானால், அது விஷயத்தில் பாவத்தை விலக்கும் விதத்தைக்கேள்! யுதிஷ்டிர! பாவத்தைச்செய்த மனிதர்கள் தவங்களாலும் யாகங்களாலும் தானத்தாலும் எப்பொழுதும் (பாவத்தைத்) தாண்டுகின்றனர். அரசனே! புருஷஸ்ரேஷ்டனே! பாவத்தைச்செய்த மனிதர்கள் யாகத்தாலும் தவத்தாலும் தானத்தாலும் பரிசுத்தர்களாகின்றனர். மஹாத்மாக்களான தேவர்களும் அஸுரர்களும் புண்ணியத்திற்காக யாகமென்னும் கர்மாவைச் செய்கின்றனர். ஆகையால், யாகமானது முக்யமான கதியாக உள்ளது. மஹாத்மாக்களான தேவர்கள் யாகங்களாலேயே மேன்மை பெற்றவராயினர். ஆகையால், அவர்கள் (யாகமென்னும்) கிரியையைச்செய்து அஸுரர்களை அடக்கினார்கள். மன்னனே! யுதிஷ்டிர! நீ ராஜஸூயத்தையும் அஸ்வமேதத்தையும் ஸர்வமேதத்தையும் நரமேதத்தையும் செய். தசரதகுமாரரான ஸ்ரீராமர்போலவும்

1 வேறு பாடம்.

உனது முன்னோர்களின் பிதாமஹனும் சிறந்த வீர்யமுள்ளவனும் துஷ்யந்தனுக்குச் சகுந்தலையிடம் பிறந்தவனும் பூபதியுமான பரதனென்னும் அரசன் போலவும் நிறைந்த தக்ஷிணையுள்ளதும் அநேகவித விருப்பங்களும் அன்னமும் பொருளுமுள்ளதுமான அப்வமேத யாகத்தை விதிப்படி செய்." என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "அப்வமேதயாகமானது ஸம்சயமின்றிப் பூமியையும் கரையேற்றும். எனக்கோ ஓர் அபிப்பிராயம் இருக்கிறது. அதனை இப்பொழுது நீர் கேட்கவேண்டும். பிராம்மணஶ்ரேஷ்டரே! மிகப் பெரிய இந்த உறவினர்களின் வதத்தைச் செய்துவிட்டுச் சோகத்திற்கு வசப்பட்டிருக்கும் நான் தேவர்களை எவ்விதம் ஆராதிப்பேன்? என்னால் சொற்பமாகக் கொடுக்க முடியாது. என்னிடம் கொடுப்பதற்குப் பொருளுமில்லை. பாலர்களும் தீனர்களும் பொருளற்றவர்களும் கஷ்டத்தை அடைந்தவர்களுமான இந்த ராஜகுமாரர்களிடத்தில் தனத்தை யாசிக்க எனக்குப்பிரியமில்லை. பிராம்மணஶ்ரேஷ்டரே! நானே பூமியை அழித்துவிட்டு மிக்கசோகத்தை அடைந்திருக்கையில், நான் யாகத்திற்காக எவ்விதம் கப்பம் வாங்குவேன்? முனிவருள் மிகச்சிறந்தவரே! பூமியிலுள்ள மன்னர்கள் துர்யோதனனுடைய குற்றத்தால் எங்களை அபகீர்த்திக்கு உட்படுத்தி இறந்துபோய்விட்டார்கள். துர்யோதனன் வெற்றியைவிரும்பிப் பூமியைப் பாழாக்கிவிட்டான். கெட்டபுத்தியுள்ள துர்யோதனனுடைய தனசாலையும் சிதறிவிட்டது. அப்வமேதமென்னும் இந்தப் பெரியயாகத்தில் பூமியே தக்ஷிணையென்று கற்றறிந்தவர்கள் கண்டிருக்கின்றனர். மிகுத்து வைத்துக்கொள்வது விதிக்கு மாறாகும். தபோதனரே! (இதற்கு) பிரதியாக வேறு தக்ஷிணையைக் கொடுத்து யாகம்செய்ய எனக்கு இஷ்டமில்லை. பகவானே! இந்த விஷயத்தில் எனக்கு நீர் நன்றாக மந்திராலோசனையைச் செய்யவேண்டும்" என்றார். யுதிஷ்டிரரால் இவ்விதம் சொல்லப்பட்ட வியாஸரோ அப்பொழுது ஒரு முகூர்த்தம் ஆலோசித்து யுதிஷ்டிரரைநோக்கிச் சொல்லலானார்.

"பார்த்த! சிதறிப்போன இந்தப்பொக்கசமும் நிறைந்ததாகப்போகிறது. பூபதியே! மருத்தனுடைய யாகத்தில் பிராம்மணர்கள் வைத்துப்போன தனம் இமயமலையில் இருக்கிறது. குந்திபுத்ர! அதனைக்கொண்டுவா. அது போதுமானதாகும்" என்றார். யுதிஷ்டிரர், "[1]பேசுகிறவர்களுள் சிறந்தவரே! மருத்த

1 வேறுபாடம்.

னுடைய யாகத்தில் அந்தத்தனம் எவ்விதம் சேர்க்கப்பட்டது? அந்த அரசன் எந்தக்காலத்தில் இருந்தான்?" என்றார். வியாஸர், "பார்த்த! கரந்தமகுமாரனான மருத்தராஜனைப்பற்றிக் கேட்க விரும்புவாயாகில், சிறந்த வீர்யமும் மிக்க பொருளுமுள்ள அந்த மன்னன் இருந்தகாலத்தைச் சொல்லுகிறேன்; கேள்" என்றார்.

---

## நான்காவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)

(வியாஸர் யுதிஷ்டிரருக்கு ஸம்வர்த்தரையும் மருத்தனையும்பற்றிய வரலாற்றைச் சொல்லத் தொடங்கியதும், மருத்தராஜன் இமயமலையின் வடபுறத்தில் பொற்றட முதலிய ஸாதனங்களைக் கொண்டு யாகம் செய்யத் தொடங்கியதும்.)

யுதிஷ்டிரர், "தர்மங்களை அறிந்தவரே! அந்த ராஜரிஷியினுடைய கீர்த்தியைக் கேட்க விரும்புகிறேன். த்வைபாயனரே! குற்றமற்றவரே! அந்த மருத்தனுடையகதையை எனக்குச் சொல்லும்" என்று வினவ, வியாஸர் சொல்லலானார்.

"ஐயா! கிருதயுகத்தில் பிரபுவான மனு அரசராயிருந்தார். பிறகு, அவருடைய குமாரரும் பெரிய வில்லாளியுமான ப்ரஜாதி என்பவர் அரசரானார். ப்ரஜாதிக்கு க்ஷுதனென்று ப்ரஸித்திபெற்ற புத்ரன் உண்டானான். க்ஷுதனுக்குப் பூமியைக் காப்பவனும் பிரபுவுமான இக்ஷ்வாகு என்னும் புத்திரன் உண்டானான். வேந்தே! அந்த இக்ஷ்வாகுவுக்கு மிக்க தர்மிஷ்டர்களான நூறுபுத்திரர்கள் பிறந்தார்கள். இக்ஷ்வாகு அவர்களெல்லாரையும் பூபாலர்களாகச் செய்தான். அவர்களுள் மூத்தோனாகிய விம்சனே வில்லாளிகளுக்கு உவமையாக இருந்தான். பாரத! விம்சனுக்கு நற்குணமுள்ளவனான விவிம்சனென்னும் புத்ரன் உண்டானான். அரசனே! விவிம்சனுக்குப் பதினைந்து புத்ரர்கள் பிறந்தார்கள். எல்லாரும் வில்வித்தையில் தேர்ச்சிபெற்றவர்கள்; பிராம்மணர்களுக்கு நன்மையைச் செய்பவர்கள்; உண்மை உரைப்பவர்கள்; தானத்திலும் தர்மத்திலும் பற்றுதலுள்ளவர்கள்; சாந்தர்கள்; எப்பொழுதும் இன்சொற்சொல்லுபவர்கள். அவர்களுள் மூத்தவன் கனீநேத்ரனென்பவன். அவன் அவர்களெல்லாரையும் தன் வசப்படுத்தினான். விக்ரமமுள்ள கனீநேத்ரனே ராஜ்யத்தைப் பகைவரற்றதாகச் செய்தும் அதனை ரக்ஷிக்க முடியாதவனானான். பிரஜை

கள் அவனிடத்தில் பிரியப்படவில்லை. ராஜஶ்ரேஷ்டனே ! அவர்கள் அப்பொழுது அவனை விலக்கிவிட்டு அந்த ராஜ்யத்தில் அவனுடைய புத்திரனான ஸுவர்ச்சஸ் என்பவனை அபிஷேகஞ்செய்து மனத்தில்களிப்புற்றனர். அந்தஸுவர்ச்சஸ் பிதாவின் கெட்ட நடையையும் (அவனை) ராஜ்யத்திலிருந்து விலக்கியதையும் கண்டு, பிரஜைகளுக்கு நன்மையைச் செய்யும் விருப்பத்துடன் நியமமுள்ளவனும் பிராம்மணர்களுக்கு நன்மையைச் செய்பவனும், ஸத்யவாதியும் சுத்தனும் இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கினவனுமாக இருந்துகொண்டு (ராஜ்யத்தைப்) பரிபாலித்துவந்தான். எப்பொழுதும் தர்மத்திலிருப்பவனும் பெரிய மனமுள்ளவனுமான அவனிடத்தில் ஜனங்களும் பிரியமுள்ளவர்களானார்கள். தர்மத்தில்நிலைபெற்ற அந்த ஸுவர்ச்சஸனுடைய பொக்கசமும் வாகனங்களும் அழிந்தன. பொக்கசமழிந்த அவனைப் பக்கத்திலுள்ள மன்னர்கள் நாற்புறங்களிலும் (சூழ்ந்து) துன்பப்படுத்தினார்கள். அனேகர்களால் பீடிக்கப்படுகின்றவனும் பொக்கசமும் வாகனங்களும் அழிந்தவனுமான அந்த அரசன் வேலைக்காரர்களுடனும் பட்டணத்துடனும் மிகுந்த துன்பமடைந்தான். யுதிஷ்டிர! அந்த அரசன் நல்லநடையுள்ளவனும் தர்மத்தில் நிலைபெற்றவனுமாயிருந்ததால், படை அழிந்திருந்தும், அவனைக்கொல்லப் பகைவர்களால் முடியவில்லை. அந்த அரசன் பட்டணத்துடன் மிக்க துன்பத்தையடைந்தபொழுது, அவன் கையை (வாயினால்) ஊதினான். அதிலிருந்து ஸைன்யமுண்டாயிற்று. பிறகு, அவன் அந்தப்பகையரசர்களனைவரையும் ஜயித்தான். அரசனே ! இந்தக்காரணத்தால் அவன் [1]கரந்தமனென்று பிரஸித்திபெற்றான். அவனுக்கு முன்னம் த்ரேதாயுகத்தின் ஆதியில் இந்திரனைக்காட்டிலும் மேன்மைபெற்றவனும் ஸ்ரீமானும் தேவர்களாலும் சிறிதும் ஜயிக்கமுடியாதவனுமான [2]ஆவீக்ஷித்என்னும் புத்ரனுண்டானான். அவன் காரந்தமனென்று பிரஸித்திபெற்ற அரசனானான். அப்பொழுது, எல்லாமன்னர்களும் அவனுக்கு வசப்பட்டிருந்தனர். அவன் ஒழுக்கத்தினாலும் பலத்தினாலும் அந்த அரசர்களுக்குச் சக்ரவர்த்தியானான். (அந்த) அவிக்ஷித் தர்மாத்மாவும், சௌர்யத்தில் இந்திரனுக்கொப்பானவனும் யாகசீலனும் தர்மத்தில் பற்றுதலுள்ளவனும் தைரியமுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனும் தேஜ

1 கரம்=கையை, த்ம=ஊதினவன்.

2 இவன்பெயர் அவிக்ஷித்என்றும், காணப்படுகிறது.

வில் ஸூர்யனுக்கொப்பானவனும் பொறுமையில் பூமிக்கொப்பான வனும் புத்தியில் பிருஹஸ்பதிக்கு ஒப்பானவனும் இமயமலைபோல உறுதியுள்ளவனுமாயிருந்தான். அந்த அரசன் செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் ஸமதமங்களாலும் பிரஜைகளின் மனங்களை மகிழ்வித்துவந்தான். பிரபுவான அவன் நூறு அஶ்வமேத யாகங்களை விதிப்படி செய்தான். கற்றறிந்தவரும் பிரபுவுமான அங்கிரஸானவர் தாமே அவனுக்கு யாகம் செய்வித்தார். தர்மங்களை அறிந்தவனும் சக்ரவர்த்தியும் பெரும்புகழுள்ளவனும் பதினாயிரம் யானைகளுக்கொப்பான பலமுள்ளவனும் பிரத்யக்ஷமாகவந்த வேறு விஷ்ணுவைப் போன்றவனுமான மருத்தனென்னும் அவனுடைய புத்திரன், குணங்களால் தந்தைக்கு மேற்பட்டவனானான். தர்மாத்மாவான அவன், யாகம் செய்வதற்காக ஸுவர்ணமயமும் சுத்தமுமான ஆயிரக்கணக்கான பாத்திரங்களைச் செய்வித்தான். இமயமலைக்கு வடபுறத்தில் மேருமலைக்கருகில் ஸுவர்ணமயமானதும் மிகப்பெரிதுமான ஓர் குன்றிருக்கிறது. அந்த மருத்தன் அக்குன்றில் யாகத்தைச் செய்தான். அப்பொழுது தட்டார்கள்[1] குண்டங்களையும் பாத்திரங்களையும் ஸ்தாலிகளையும் ஆஸனங்களையும் கணக்கில்லாமல் செய்தார்கள். அம்மலையின் ஸமீபத்திலேயே யாகசாலை ஏற்பட்டது. தர்மாத்மாவும் பூபதியும் அரசனுமான அந்த மருத்தன் எல்லா அரசர்களுடனும் சேர்ந்து அவ்விடத்தில் விதிப்படி யாகஞ் செய்தான்" என்றார்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## அஶ்வமேதபர்வம் (தொடர்ச்சி.)

**(ஸம்வர்த்தர் காரணமின்றிப் பகைபாராட்டும் தம் தமயனான பிருஹஸ்பதி செய்யும் உபத்திரவம் பொறாமல் எல்லாப் பொருளையும் விட்டுவிட்டுக் கானகம் சென்றதும், இந்திரன் மருத்தனிடத்தில் பொறாமையடைந்து தான் மேன்மை பெறவிரும்பி மருத்தனுக்குப் புரோஹிதரான பிருஹஸ்பதியைப் பேதப்படுத்தியதும், பிருஹஸ்பதி மருத்தனுக்கு யாகம் செய்விப்பதில்லை யென்று பிரதிஜ்ஞை செய்ததும்.)**

யுதிஷ்டிரர், "பகவானே! தபோதனரே! கொடுப்பவருள் சிறந்த அந்த அரசன் எவ்வித வீர்யமுள்ளவனாக இருந்தான்? (அந்த) அரசனுக்கு (அவ்வளவு) ஸுவர்ணம் எவ்விதம் கிடைத்தது?

1 கலங்களின்வகைகள்.

அந்தத் திரவியம் இப்பொழுது எங்கே இருக்கிறது? அதனை நாங்கள் எப்படி அடையக்கூடும்?" என்று வினவ, வியாஸர் சொல்லத் தொடங்கினர்.

"ஐயனே! தக்ஷரென்னும் ஸ்ருஷ்டிகர்த்தருக்கு அஸுரர்களாகவும் தேவர்களாகவும் பல புத்திரர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டனர். அவ்வாறே, அங்கிரஸுக்குப் பிருஹஸ்பதியென்றும், பெரிய தேஜஸுள்ளவரும் தவத்தைத் தனமாகக்கொண்டவருமான ஸம்வர்த்தரென்றும் இரண்டு புத்திரர்கள் தந்தைக்குச் சமானர்களாக இருந்தார்கள். அரசனே! அவ்விருவரும் ஒருவரோடொருவர் அதிகமாகச் சண்டை செய்துகொண்டு தனித்தனியிருந்தனர். அந்தப் பிருஹஸ்பதி ஸம்வர்த்தரை அடிக்கடி பீடித்தார். பாரத! மூத்த ஸஹோதரரால் எப்பொழுதும் ஹிம்ஸிக்கப்படுகின்ற அந்த ஸம்வர்த்தர் பொருள்களைப் போட்டுவிட்டு (ஆடையின்றித்) திகம்பரராகக் காட்டில் வஸிக்கவிரும்பினர். இந்திரனும் எல்லா அஸுரர்களையும் கொன்று ஜயமடைந்து உலகங்களில் இந்திரபதவியைப்பெற்றுப் பிறகு அங்கிரஸின் மூத்தகுமாரரும் பிராம்மணர்களுள் சிறந்தவருமான பிருஹஸ்பதியைப் புரோஹிதராகவேண்டினன். உலகத்தில் ஒப்பற்ற வீர்யமும் ஒழுக்கமும் பலமுமுள்ளவனும் இந்திரன்போலத் தேஜஸுள்ளவனும் தர்மாத்மாவும் கடுமையான வ்ரதங்களுள்ளவனுமான கரந்தமனென்னுமரசன், முன்னமே அங்கிரஸுக்குச் சிஷ்யனாக இருந்தான். அரசனே! அவனுக்கு வாகனமும் போர்வீரர்களும் பல நண்பர்களும் மிக்க விலைபெற்ற சிறந்த பற்பல சயனங்களும் எல்லாம் நினைத்தமாத்திரத்தில் வாயினால் ஊதினவுடன் உண்டாயின. அந்த அரசன் எல்லாமன்னர்களையும் குணங்களால் வசப்படுத்தி இஷ்டமானகாலம்வரையில் நன்கு ஜீவித்திருந்து சரீரத்துடன் ஸுவர்க்கம் சென்றான். அவனுக்கு யயாதியைப்போலத் தர்மங்களை அறிந்தவனான அவிக்ஷித்தென்னும் புத்திரன் இருந்தான். அவன் பகைவர்களை வென்று பூமியை வசப்படுத்திக்கொண்டான். அந்த அரசன் வல்லமையினாலும் குணங்களாலும் தகப்பன்போல இருந்தான். அவனுக்கு இந்திரனுக்கொப்பானவனும் வீர்யமுள்ளவனுமான மருத்தனென்னும் புத்திரன் உண்டானன். கடல் சூழ்ந்த பூமியானது அவனிடம் பிரியமுள்ளதாயிருந்தது. அவன் எப்பொழுதும் ஓயாமல் இந்திரனிடம் பொறாமைகொண்டிருந்தான். பாண்டுபுத்திர! இந்திரனும் மருத்தனிடம் பகையுள்ளவனாக இருந்தான். பூபதியான அந்தமருத்

தன் சுத்தனும் நற்குணங்கள் பொருந்தியவனுமாயிருந்தான். (அதனால்) இந்திரன் முயற்சி செய்தும் அவனுக்கு மேலானவனாக வில்லை. அந்த இந்திரன் மேன்மைபெற முடியாமல் தேவர்களுடன் சேர்ந்துகொண்டு பிருஹஸ்பதியை அழைத்துப் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான். "பிருஹஸ்பதியே! நீர் எனக்குப் பிரியத்தைச் செய்பவராயிருந்தால், மருத்தனுக்கு எவ்விதத்திலும் தேவகார்யத்தையோ பித்ருகார்யத்தையோ செய்யாதீர். பிருஹஸ்பதியே! நான் ஒருவனே, மூவுலகங்களுள்ளும் தேவர்களுக்கும் இந்திரனாக இருக்கிறேன். மருத்தனோ பூமிக்கு மட்டும் அதிபதியாக இருக்கிறான். பிராம்மணரே! நீர் மரணமில்லாதவனும் தேவராஜனுமான எனக்குப் புரோஹிதராயிருந்துவிட்டு, ஆலோசியாமல், மரிக்கும் தன்மையுள்ள மருத்தனுக்கு எவ்விதம் புரோஹிதராயிருக்கலாம்? மருத்தனைவிட்டு என்னை (ச்சிஷ்யனாக) ஏற்றுக்கொள்ளும்; அல்லது என்னைவிட்டுப் பூபதியான மருத்தனை (ச்சிஷ்யனாக) ஏற்றுக்கொள்ளும்; இஷ்டம்போலச் செய்யும்" என்றான். குருகுலத்திற்பிறந்தவனே! தேவராஜனால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த ப்ருஹஸ்பதி, ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்துத் தேவராஜனை நோக்கி, "நீ பிராணிகளுக்கு அதிபதி. உன்னிடத்தில் உலகங்கள் வசப்பட்டிருக்கின்றன. நீ நமுசியையும் விஸ்வரூபனையும் பலனையும் கொன்றவன். தேவர்களுள் நீ ஒருவனே மேன்மைபெற்று வீரலக்ஷ்மியை ஸம்பாதித்தவன். பலனைக் கொன்றவனே! நீ எப்பொழுதும் பூமியையும் ஸுவர்க்கத்தையும் காப்பாற்றுகிறாய். தேவகணங்களுக்குத்தலைவனே! பாகசாஸன! நான் உனக்குப் புரோஹிதனாக இருந்துவிட்டு மனிதனான மருத்தனுக்கு எவ்விதம் யாகம் செய்விப்பேன்? தேவேந்திர! மனத்தைத் தேறுதலடையச் செய்துகொள். நான் ஒருபொழுதும் மனிதனுடைய யாகத்தில் ஸ்ருவத்தை எடுக்கப் போகிறதில்லை. என்னுடைய இந்த வார்த்தையையும் கேள். அக்னியானது உஷ்ணத்தை இழந்தாலும் பூமி சுழன்றாலும் ஸூர்யன் ஒளியை இழந்தாலும் நான் சத்தியம் தவறமாட்டேன்" என்றார். இந்திரன், அப்பொழுது பிருஹஸ்பதியின் வார்த்தையைக் கேட்டுப் பொறாமையற்றவனாகி அவரைப் புகழ்ந்து, பிறகு, தன்னுடைய வீட்டுக்கே சென்றான்.

---

## ஆறுவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(மருத்தன் பிருஹஸ்பதியை யாகம் செய்விக்க வேண்ட அவர் மறுத்ததும், அவன் நாரதர்சட்டளைப்படி ஸம்வர்த்தனரைத் தொடர அவர் ஓர் ஆலமரத்தின்அடியில் உட்கார்ந்ததும்.)**

இந்த விஷயத்திலும் பிருஹஸ்பதிக்கும் புத்திமானான மருத்தனுக்கும் நடந்த ஸம்வாதத்தைப் பற்றிய புராதனமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். பிருஹஸ்பதியானவர் தேவராஜனிடம் செய்த பிரதிஜ்ஞையைக் கேட்டு, மருத்தராஜன் மிக்ககோபமடைந்தான். கரந்தமனுடைய பேரனும் நன்கு பேசும் திறமையுள்ளவனுமான மருத்தன் யாகத்தைச் செய்ய மனத்தில் கருதி ப்ருஹஸ்பதியினிடம் சென்று பின்வரும் வசனத்தைச் சொல்லலானன். 'பகவானே! தபோதனரே! குருவே! நான் முன்பு உம்மிடம் வந்து உம்முடைய கட்டளைப்படி யாகம்செய்வதற்காகநிச்சயம்செய்தேன். அந்த யாகத்தை நான் இப்பொழுது செய்யவிரும்புகிறேன். ஸாமக்ரிகளையும் நான் சேகரித்துவிட்டேன். நல்லவரே! நான் உம்முடையசிஷ்யன். ஆகையால், வாரும்; (யாகத்தைச்) செய்வியும்' என்றான். பிருஹஸ்பதி, 'பூபதியே! உனக்கு யாகம் செய்விக்க எனக்கு விருப்பமில்லை. தேவராஜன் என்னைப் பிரார்த்தித்தான். நானும் அவனுக்குப் பிரதிஜ்ஞை செய்துவிட்டேன்' என்றார். மருத்தன், 'நான் உமக்குத் தந்தையினிடமிருந்து கிடைத்த பூமிபோன்றவன். உம்மிடத்திலும் மிக்க கௌரவம் பாராட்டுகிறேன். ஆதலால், உம்மால் யாகம் செய்விக்கத் தகுந்தவனாக இருக்கிறேன்; சரணமடைகிற என்னைக் காப்பாற்றும்' என்றான். ப்ருஹஸ்பதி, 'மருத்த! நான் தேவனுக்கு யாகம் செய்வித்துக்கொண்டு மனிதனுக்கும் எவ்விதம் செய்விப்பேன்? நீ போனாலும் போ; போகாமலிருந்தாலும் இரு. நான் இப்பொழுது (உனக்கு) யாகம் செய்விப்பதிலிருந்து விலகிவிட்டேன். சிறந்த கைகளுள்ளவனே! நான் இப்பொழுது உனக்கு யாகம் செய்விக்கமாட்டேன். நீ இப்பொழுது யாரை உபாத்தியாயராக விரும்புகிறாயோ, யார் உனக்கு யாகம் செய்விப்பரோ அவரை வரித்துக்கொள்' என்றார். இவ்வாறு சொல்லியதைக் கேட்ட மருத்தராஜன் வெட்கமடைந்து மிக்க மனவருத்தத்துடன் திரும்பி வரும்போது, வழியில் நாரதரைக் கண்டான். அந்த அரசன் தேவரிஷியான நாரதரிடம் சென்று விதிப்

படி அஞ்சலிசெய்துகொண்டு நின்றான். உடனே, நாரதர் அவனைப் பார்த்து, 'ராஜரிஷியே! ஏன் அதிக ஸந்தோஷமில்லாதவனாக இருக்கிறாய்? குற்றமற்றவனே! உனக்கு க்ஷேமமா? எங்கே போயிருந்தாய்? யாரிடமிருந்து இவ்விதமான வருத்தத்திற்குக் காரணம் ஏற்பட்டது? அரசனே! ராஜஶ்ரேஷ்ட! நான் கேட்கக்கூடியதாயிருந்தால், அதனை எனக்குச் சொல். மன்னவ! உன்னுடைய மனவருத்தத்தை எல்லா முயற்சிகளாலும் நான் போக்குகிறேன்' என்றார். இவ்வாறு சொல்லியதைக்கேட்ட அந்த மருத்தன் உபாத்யாயர் செய்த அந்த வஞ்சனையை ஸர்வஜ்ஞரான அந்த நாரதரிடம் விண்ணப்பம் செய்யலானான். 'நாரதரே! அங்கிரஸின் புத்திரரும் தேவர்களுக்கு ஆசார்யருமான பிருஹஸ்பதியை யாகத்திற்கு ரித்விக்காயிருக்கும்படி கேட்பதற்காகப் போயிருந்தேன். அவர் என்னிடத்தில் விருப்பம் வைக்கவில்லை. அவரால் நிராகரிக்கப்பட்டேன். நான் இப்பொழுது ஜீவித்திருக்கப் பிரியப்படவில்லை. குருவினால் விலக்கப்பட்டவனும் தூஷிக்கப்பட்டவனுமாயிருக்கிறேன்' என்றான். மஹாராஜனே! அரசன் இவ்வாறு சொல்லக்கேட்ட அந்த நாரதர், அவிக்ஷித்தின் குமாரனான அந்த மருத்தனைநோக்கித் தமது வார்த்தையினால் உயிரளிப்பவர்போல மறுமொழி கூறலானார். 'அரசனே! தார்மிகரும் அங்கிரஸின் புத்திரருமான ஸம்வர்த்தரென்பவர் திகம்பரராக ஜனங்களை மயக்கிக்கொண்டு எல்லாத்திசைகளிலும் ஸஞ்சரிக்கிறார். பிருஹஸ்பதி உனக்கு யாகம் செய்விக்கப் பிரியப்படாவிட்டால் அவரிடம் செல். மிக்க தேஜஸுள்ள (அந்த) ஸம்வர்த்தர் அருள் புரிந்து உனக்கு யாகம் செய்விப்பார்' என்றார். மருத்தன், 'நாரதரே! உம்முடைய இந்த வார்த்தையினால் நான் உயிர் பெற்றேன். பேசுகிறவர்களுள் சிறந்தவரே! (அந்த) ஸம்வர்த்தரை நான் எங்கு பார்க்கக்கூடும்? எனக்குச்சொல்லும். நான் அவரிடம் எவ்விதம் நடந்துகொள்ளவேண்டும்? அவர் என்னை எவ்விதம் கைவிடாமலிருப்பர்? அவரும் என்னை மறுத்துவிட்டால் நான் ஜீவித்திருக்க விரும்பமாட்டேன்' என்றான். நாரதர், 'அந்த ஸம்வர்த்தர் பித்தன்போல வேஷம்பூண்டு ஸுகமாக ஸஞ்சரிக்கிறார். ஆனால், வாராணஸியென்னும் பட்டணத்திற்கு அடிக்கடி வருவர். நீ அந்தப் பட்டணத்தின்வாயிலே அடைந்து ஓரிடத்தில் ஒருபிணத்தைப்போட்டுவை. அரசனே! அதைக் கண்டு எவர் திரும்புவரோ அவர்தாம் ஸம்வர்த்தர். வீர்யமுள்ளவரான அவர் போகுமிடத்திற்கு அவரைப் பின் தொடர்ந்து செல். அவரை ஏகாந்தத்தில் அடைந்து அஞ்சலி

செய்து சரணம் அடைவாயாக, 'என்னை உனக்கு எவன் சொன்னான்?' என்று உன்னை அவர் கேட்டால் 'நாரதர் சொன்னார்' என்று சொல். பகைவரை அழிப்பவனே! அந்த ஸம்வர்த்தர் என்னைப்பின்தொடர்ந்து வரவிரும்பி, 'அந்த நாரதர் எங்கே?' என்று உன்னைவினவினால், நான் அக்நியில் பிரவேசித்துவிட்டதாகப் பயமின்றிச் சொல்' என்றார். அந்த (மருத்தனென்னும்) ராஜரிஷியானவன், 'அப்படியே ஆகட்டும்' என்று ஒப்புக்கொண்டு நாரதரைப் பூஜித்து விடைபெற்றுக் கொண்டு வாராணஸிபட்டணம் சென்றான். பெருப்புகழ்பெற்ற அந்த மருத்தன், அவ்விடம் சென்று நாரதருடைய வார்த்தையை நினைத்துக்கொண்டு (அவர்) சொன்னபடி (அந்தப்) பட்டணத்தின் வாயிலில் ஒரு பிணத்தை வைத்தான். அதே ஸமயத்தில் (ஸம்வர்த்தரென்னும்) பிராம்மணரும் (அந்தப்) பட்டணத்தின் வாயிலுக்கு வந்தார். பிறகு, அவர் பிணத்தைக்கண்டு சீக்கிரமாகத் திரும்பினார். அவிக்ஷித்தின் குமாரனும் பூபாலனுமான அந்தமருத்தன் அந்த ஸம்வர்த்தர் திரும்பியதைப் பார்த்து அவருக்குச் சிஷ்யனாவதற்காக அஞ்சலி செய்துகொண்டு (அவரைப்) பின்தொடர்ந்து சென்றான். அந்த ஸம்வர்த்தரும் ஏகாந்தத்தில் அவ்வரசனைக் கண்டு (அவன்மீது) புழுதிகளையும் சேற்றையும் இறைத்துக் கோழையையும் எச்சிலையும் துப்பினார். அந்த மருத்தராஜன் ஸம்வர்த்தரால் அவ்விதம் இடையூறுகள் செய்யப்பட்டும், அஞ்சலி செய்துகொண்டு, அந்தரிஷியை அருள்புரியும்படிசெய்வதற்காகப் பின்தொடர்ந்தேசென்றான். பிறகு, ஸம்வர்த்தர் களைப்புற்றுத் திரும்பிக் குளிர்ந்த நிழலுள்ளதும் அநேகம் கிளைகளுள்ளதுமான ஓர் ஆலமரத்தையடைந்து (அதன் கீழே) உட்கார்ந்தார்.

## ஏழாவது அத்யாயம்.

## அச்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(ஸம்வர்த்தர் மருத்தனோடு ஒருடன்பாடு செய்துகொண்டு யாகஞ்செய்விப்பதாக ஒப்புக்கொண்டது.)**

ஸம்வர்த்தர், 'நீ என்னை எவ்விதம் தெரிந்துகொண்டாய்? எவன் என்னை உனக்குச்சொன்னான்? நீ, என்பிரீதியை விரும்பினால், இதனை உண்மையாக எனக்குச் சொல். உண்மையைச்சொன்னால் உன் இஷ்டங்களெல்லாம் நிறைவேறும். பொய்சொன்னால் உன்

தலை நூறாதுண்டாக வெடித்துப்போம்' என்றார். மருத்தன், 'வழியில்போய்க்கொண்டிருந்த நாரதர் நீர் என்னுடைய குருபுத்திரர் என்று என்னிடம் உர்மைப்பற்றிச் சொன்னார். அதனால், எனக்கு அதிகமான பிரீதியுண்டாயிற்று' என்றான். ஸம்வர்த்தர், 'நீ இதனை உள்ளபடியே சொன்னாய்; அவர், கபடவேஷத்தால் மறைந்திருக்கும் என்னை அறிவர். அவர் இப்பொழுது எங்கே? இதனை எனக்குச் சொல்' என்றார். மருத்தன், 'தேவரிஷிகளுள் மிகச்சிறந்த நாரதர் உம்மை எனக்குச் சொல்லி எனக்கு அனுமதிகொடுத்தபிறகு அக்னியில் பிரவேசித்துவிட்டார்' என்றான். ஸம்வர்த்தர், மருத்தராஜன் சொன்ன இந்த வார்த்தையைக் கேட்டு மனக்களிப்புற்று 'நானும் இவ்விதம் இவ்வளவு செய்யவல்லவன்' என்றார். அரசனே! பிறகு, பித்தன்போன்றவரும் பிராம்மணருமான ஸம்வர்த்தர் மருத்தனைக் குரூரமான வார்த்தையால் அடிக்கடி அதட்டிக்கொண்டு சொல்லலானார். 'வாயுவை முக்கியமாகக்கொண்டவனும் இஷ்டப்படி நடப்பவனும் இவ்விதம் விகாரமானரூபமுள்ளவனுமான என்னைக்கொண்டு எவ்விதம் யாகம் செய்யவிரும்புகிறாய்? என்னுடைய ஸஹோதரர் திறமையுள்ளவர்; இந்திரனுக்கு நண்பர்; யாகம்செய்விக்கும் தொழிலை மேற்கொண்டிருக்கிறார். அவரைக்கொண்டு கார்யங்களைச்செய்துகொள். என்னுடைய மூத்தஸஹோதரர் என்னுடைய கிருஹஸ்தாஶ்ரமத்தையும் சிஷ்யர்களையும் வீட்டிலுள்ள எல்லாத்தேவதைகளையும் கைப்பற்றிக்கொண்டு, இந்தச்சரீரத்தைமட்டும் விட்டிருக்கிறார். அவிக்ஷித்தின் புத்திரனே! நான் அவருடையஅனுமதியின்றி ஒருபொழுதும் எவ்விதத்திலும் உனக்கு யாகம்செய்விக்கமாட்டேன். அவர் என்னால் மிகவும்பூஜிக்கப்படத்தக்கவர். உனக்கு இப்பொழுது யாகம்செய்ய விருப்பமிருந்தால் பிருஹஸ்பதியினிடம் செல். அவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு வா. பிறகு, நான் உனக்கு யாகம் செய்விக்கிறேன்' என்றார். மருத்தன், 'ஸம்வர்த்தரே! நான் முன்பு பிருஹஸ்பதியினிடம் போயிருந்தேன். அங்கு நடந்ததைக் கேளும். அந்தப் பிருஹஸ்பதி முனிவர் இந்திரனால் தடுக்கப்பட்டு எனக்கு யாகம் செய்விக்க விரும்பவில்லை. அவர், 'தேவனைச் சிஷ்யனாகஅடைந்து மனிதனுக்கும் யாகம் செய்விக்கமாட்டேன். இந்திரன் என்னை, 'பிராம்மணரே! மருத்தனுக்கு யாகம் செய்விக்காதீர்; அந்தஅரசன் எப்பொழுதும் என்னுடன் வைரம் பாராட்டுகிறான்' என்று சொல்லித் தடுத்துவிட்டான்' என்றார். உம்முடைய ஸஹோதரர் இந்திரனைநோக்கி, 'அப்படியே ஆகட்டும்' என்றும் சொல்லியிருக்கிறார். முனிஶ்ரேஷ்

டரே! அவர் தேவராஜனை அடுத்தவராதலால், ப்ரியத்துடன்வந்த என்னைச் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. அதனைத் தெரிந்துகொள்ளும். நான் உம்மைக்கொண்டு, எல்லாப் பொருளையும் செலவு செய்தாவது, யாகம்செய்து உம்மால் ஏற்படும் குணங்களால் இந்திரனைக்காட்டிலும் மேன்மைபெற விரும்புகிறேன். பிராம்மணரே! (சிறிதும்) அபகாரம் செய்யாத என்னைப் பிருஹஸ்பதி அவ்விதம் மறுத்துவிட்டாராதலால் அவரிடம்செல்ல எனக்கு எண்ணம் இல்லை" என்றான். ஸம்வர்த்தர், 'அரசனே! நீ என்னுடைய இஷ்டங்களெல்லாவற்றையும் செய்தால் நீ செய்ய விரும்பின இதெல்லாம் இஷ்டப்படி உனக்கு நிறைவேறும். என்னால் யாகம்செய்விக்கப்படும் உன்னைப் பிருஹஸ்பதியும் இந்திரனும் மிகுந்தகோபம்கொண்டு பகைப்பார்கள். இது ஒன்றை நிச்சயித்துக்கொள்ளு. இப்பொழுது இந்த விஷயத்தில் எனக்கு எப்படி நம்பிக்கை பிறக்கும்? என்ஸம்சயத்தை நீக்கு. இப்பொழுது நான் கோபம்கொண்டு பந்துக்களுடன்கூடின உன்னைப் பஸ்மமாகச் செய்யாமலிருக்கவேண்டும்' என்றார். மருத்தன், 'நான் (உம்முடைய) ஸ்நேஹத்தை இழந்தால், எவ்வளவு காலம் ஸூர்யன் பிரகாசிப்பனோ, எவ்வளவுகாலம் பர்வதங்கள் இருக்குமோ அவ்வளவுகாலம் நல்ல உலகங்களை அடையமாட்டேன். (உம்முடைய) ஸ்நேஹத்தைவிட்டால் ஒருபொழுதும் நான் நல்லபுத்தியை அடையாமலிருக்கக் கடவேன். விஷயங்களில் பற்றும் உண்டாகட்டும்' என்றான். ஸம்வர்த்தர், 'அவிக்ஷித்தின் குமாரனே! உனக்குக் கர்மங்களில் நல்லபுத்தி உண்டாகுக. வேந்தனே! எனக்கும் யாகம் செய்விக்க வேண்டுமென்கிற எண்ணம் இருக்கிறது. அரசனே! குறைவற்றதும் உத்தமமுமான திரவியமிருக்குமிடத்தையும் உனக்குச் சொல்லுகிறேன். அதனால், தேவர்களையும் கந்தர்வர்களையும் இந்திரனையும் நீ கீழ்ப்படுத்தக்கூடும். எனக்குப் பணத்திலாவது சிஷ்யர்களிடத்திலாவது விருப்பமில்லை. ஆனால், ஸஹோதரரான பிருஹஸ்பதி இந்திரன் இருவர்களுக்கும் அப்ரியத்தைச்செய்ய விரும்புகிறேன். உன்னை நிச்சயமாக இந்திரனுக்குச் சமமாகவும் செய்துவிடுகிறேன். உனக்கு ப்ரியத்தையும் செய்கிறேன். இதனை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன்' என்றார்.

---

## எட்டாவது அத்யாயம்.

## அஶ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(ஸம்வர்த்தர்உபதேசத்தால் மருத்தன் ஈஶ்வரரைத் துதித்துப் பொருள் பெற்று யாகபாத்ரமுதலியவற்றைச் செய்வித்ததும், இந்திரன் பொறாமல் பிருஹஸ்பதியினிடம் சென்றதும்.)**

இமயமலைச்சாரலில் முஞ்சவான்என்கிற ஒருமலை இருக்கிறது. அதில் பகவானும் உமாபதியுமான மஹாதேவர் எப்பொழுதும் தவம் புரிகிறார். அதில், பகவானும் சூலாயுதமுள்ளவரும் சிறந்ததேஜஸுள்ளவரும் பலவிதபூதகணங்களால் சூழப்பட்டவருமான மஹேஶ்வரர் பார்வதியுடன் மரங்களின் அடிகளிலும் மேடுபள்ளமான கொடுமுடிகளிலும் பர்வதராஜனுடைய குகைகளிலும் இஷ்டப்படி ஸுகமாக வாஸஞ்செய்கிறார். அதில் ருத்ரர்களும் ஸாத்யர்களும் விஶ்வேதேவர்களும் வஸுக்களும் யமனும் வருணனும் பரிவாரங்களுடன் கூடின குபேரனும் பூதங்களும் பிசாசங்களும் பொய்சொல்லாதவர்களான அஶ்வினீதேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் யக்ஷர்களும் தேவரிஷிகளும் ஆதித்யர்களும் மருத்துக்களும் எல்லாராக்ஷஸர்களும், மஹாத்மாவும் பலவிதரூபமுள்ளவரும் உமாபதியுமான சங்கரரை உபாஸிக்கின்றார்கள். அரசனே! அதில் பகவானான அவர், விகாரமானவர்களும் விகாரமாக்கிக் கொண்டவர்களும் விளையாடுகின்றவர்களுமான குபேரனுடைய அனுசரர்களுடன் சந்தோஷமாகவிருக்கிறார். தேஜஸினால் ஜ்வலிக்கின்ற அவர் பால ஸூர்யனுக்கு ஒப்பான காந்தியுள்ளவராகக் காணப்படுகின்றார். அவருடைய உருவமும் அதன்அமைப்பும் ஸாதாரணமான கண்ணுள்ள மனிதர் எவராலும் ஒருபொழுதும்இவ்விதமென்று அறிய முடியாதவை. அரசனே! அவ்விடத்தில் உஷ்ணமும் குளிரும் வாயுவும்ஸூர்யனும் மூப்பும் பசியும் தாகமும் மரணமும் பயமும் இல்லை. ஜயமுள்ளவர்களுள் சிறந்தவனே! அந்தப்பர்வதத்தின் எல்லாப்பக்கங்களிலும் ஸுவர்ணப்பொடிகள் ஸூர்யனுடைய கிரணங்கள் போல இருக்கின்றன. மன்னவ! அவற்றைக் குபேரனுடைய கிங்கரர்கள் மஹாத்மாவான குபேரனுக்குப் பிரியத்தைச்செய்ய விரும்பி ஆயுதங்களைக் கையிலேந்திக்கொண்டு ரக்ஷிக்கின்றனர். ராஜரிஷியே! நீ அவ்விடஞ்சென்று சிறந்தபோகங்களுக்கு ஈஶ்வரரான சங்கரரை அதிக பக்தியுடன் அருகில்சென்று வந்தனஞ்செய். பகவானும் (உ

கங்களைப்) படைப்பவரும் அழிப்பவருமான அவருக்கு வந்தனம் செய்து, எல்லாவித்தைகளையும் தரிப்பவரான அந்தத்தேவரைப் பின் வரும் நாமங்களால் ஸ்தோத்திரம்செய். [1]ருத்ரரும் கறுத்தகழுத்துள்ளவரும் அழகிய ரூபமுள்ளவரும் நல்ல காந்தி யுள்ளவரும் ஜடையுள்ளவரும் பயங்கரரும் பொன்னிறமான கண்களுள்ளவரும் வரமளிப்பவரும் முக்கண்ணரும் சூரியனுடைய பற்களைத்தகர்த்தவரும் குள்ளரும் சுபமளிப்பவரும் (எல்லாவற்றையும்) அடக்குபவரும் அவ்யக்தமான ரூபமுள்ளவரும் நல்ல நடையுள்ளவரும் சங்கரரும் க்ஷேமத்தைச்செய்பவரும் பொன்னிறமான தலைமயிருள்ளவரும் ஸ்தாணுவும் புருஷரும் பொன்னிறமானகண்களுள்ளவரும் முண்டரும் கோபமுள்ளவரும் (ஸம்ஸாரத்தினின்று) கரையேற்றுபவரும் பிரகாசிப்பவரும் ஸத்குருவும் தேவதேவரும் வேகமுள்ளவரும் தலைப்பாகையுள்ளவரும் நல்லமுகமுள்ளவரும் ஆயிரம்கண்களுள்ளவரும் எல்லாவற்றையும் படைக்குந்தன்மையுள்ளவரும் மலையில் சயனிப்பவரும் மிக்க சாந்தரும் ஸந்யாஸியும் மரவுரியை ஆடையாகக்கொண்டவரும் வில்வதண்டம் தரித்தவரும் ஸித்தரும் எல்லாரையும் சிக்ஷிப்பவரும் (யாகமாகிற) மானை (அடிக்கும்)வேடுவரும் மஹானும் வில்லுள்ளவரும்(எல்லாவற்றையும்,) படைப்பவரும் சிறந்தவரும் சந்திரன்போன்ற முகமுள்ளவரும் ஸித்தர்களின் மந்திரமாயிருப்பவரும் (உலகத்திற்குக்) கண்ணாக இருப்பவரும் பொன்மயமானகைகளுள்ளவரும் [2]உக்ரரும் திசைகளுக்குப் பதியும் (கடைவாய்களை) அடிக்கடி நக்கிக்கொள்பவரும் ஜீவர்கள் இருக்குமிடமும் மந்திரஸித்தியுள்ளவரும் வ்ருஷ்ணியும் பசுக்களுக்குப் பதியும் பூதங்களுக்குப் பதியுமான சிவனுக்கு நமஸ்காரம். வ்ருஷரும் மாத்ரு பக்தியுள்ளவரும் படைத்தலைவரும் மத்யஸ்தரும் (பக்தர்களை) எதிர்பார்க்கும் முகமுள்ளவரும் பதியும் எல்லாத்தேஜஸ்வரூபியும் ஸ்ருவத்தைக் கையில் கொண்டவரும் பதியும் வில்லாளியும் பார்க்கவரும் பிறப்பற்றவரும் கறுத்த கண்களுள்ளவரும் விரூபமான கண்களுள்ளவரும் கூரிய கோரப்பற்களுள்ளவரும் தீக்ஷ்ணரும் அக்னியை முகத்தில் கொண்டவரும் மஹாத்மாவும் அனங்கரும் எல்லாமாக இருப்பவரும் ஜனங்களுக்குப் பதியும் ருத்ரரும் பதியும் பருத்தவரும் தோலை உடுப்பவரும் மிகச் சிவந்தவரும் பிரகாசிப்பவரும் பிரகாசிக்கும் கண்களுள்ளவரும் சிறந்த தேஜ

1 சில நாமங்கள் 2 3 முறைவருகின்றன.

2 ஒரு சொல் விடப்பட்டது.

ஸுகமுள்ளவரும் தனத்தை ரேதஸாகக்கொண்ட நல்லசரீரமுள்ளவரும் பருத்தவரும் யானைத்தோலே வஸ்திரமாகக்கொண்டவரும் கபாலமாலை யுள்ளவரும் ஸுவர்ணகிரீடம் தரித்தவரும் மஹாதேவரும் கறுத்த வரும் முக்கண்ணரும் தோஷமற்றவரும் கோபமுள்ளவரும் க்ரூரத் தன்மையற்றவரும் மிருதுவாயிருப்பவரும் கைகளால் விளங்குகிற வரும் தண்டம் தரித்தவரும் தவம் செய்தவரும் க்ரூரத்தன்மையற்ற செய்கைகளுள்ளவரும் ஆயிரம் தலைகளுள்ளவரும் ஆயிரம்கால்களு ள்ளவரும் ஸ்வதாஸ்வரூபியும் அநேகரூபங்களுள்ளவரும் கோரப்பற் களுள்ளவருமான சிவனுக்கு நமஸ்காரம். பினாகியும்மஹாதேவரும் சிற ந்தபோகமுள்ளவரும் அழிவற்றவரும் த்ரிசூலத்தைக் கையிற்கொண் டவரும் வரமளிப்பவரும் த்ரியம்பகரும் உலகங்களுக்கு ஈஸ்வரரும்த்ரி புரத்தைஅழித்தவரும் முக்கண்ணரும் மூவுலகங்களுக்குமீசரும் சிறந்தபலமுள்ளவரும் எல்லாப்பிராணிகளுக்கும் உத்பத்தி ஸ்தான மும், கொடுப்பவரும் பூமியைத் தரிப்பவரும் ஈசானரும் சங்கரரும் ஸர்வரும் சிவரும் விஸ்வேஸ்வரரும் பவரும் உமாபதியும் பசுபதியும் விஸ்வரூபரும் மஹேஸ்வரரும் விரூபாக்ஷரும் பத்துக்கைகளுள்ளவ ரும் (கருணையைப்) பெருக்குகின்றவரும் வ்ருஷபத்வஜரும் உக்ரரும் ஸ்தாணுவும் சிவரும் ரௌத்ரரும் சர்வரும் கௌரீசரும் ஈஸ்வரரும் நீலகண்டரும் அஜரும் சுக்கிரரும் ப்ருதுவும் பருத்தவைகளையும் அழிப்பவரும் சிறந்தவரும் விஸ்வரூபரும் விரூபாக்ஷரும் அநேகரூபங் களுள்ளவரும் உமாபதியும் தேவரும் மன்மதனுடைய சரீரத்தை அழித்தவரும் (பக்தர்களுடைய பாவத்தை) அபஹரிப்பவரும் சரண் யரும் மஹாதேவரும் நான்குமுகமுள்ளவருமான பரமசிவனைத் தலை வணங்கிச் சரணமடைவாயாக. அரசனே! 'சரீரத்தால் நன்கு விளங்கு கின்றவரும் திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவரும் ஆதியும் அந்தமுமற்றவரும் பிறப்பில்லாதவரும் ஸுகத்தைக் கொடுப்பவரும் எல்லாவற்றையும் வியாபித்திருப்பவரும் ஈஸ்வரரும் முக்குணங்களும் அற்றவரும் பயமில்லாதவரும் நிர்மலரும் தேஜஸுகளுக்குநிதியுமான சங்கரரை நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு, (துஷ்டர்களை) ஹிம் ஸிப்பவரும் (பக்தர்களின் துயரத்தை) அபஹரிப்பவருமான அவ ரைச்சரணமடைகிறேன். நன்கு பூஜிக்கத்தக்கவரும் சலனமற்றவரும் நித்தியரும் (பாவிகளிடத்தில்) கருணையற்றவரும் (புண்யபாபங்களில்) பற்றுதலில்லாதவரும் உபநிஷத்ஸ்வரூபியுமான அவரை அடைந்து அடிக்கடி சரணமடைகிறேன். ஆத்மஸ்வரூபத்தைத் தியானிப்பவர்கள் எவருடைய அழிவற்றஸ்தானத்தை மோக்ஷமாகக்கருதுகின்றனரோ

எவரைத் தத்வமார்க்கத்திலிருப்பவர்கள் யோகிகளுக்குஈசராகவும் அழிவற்ற மோக்ஷஸ்தானமாகவும் முக்தர்கள் அன்புள்ளவராகவும் ஸமமாகப்பார்ப்பவர்கள் (எங்கும்) ஸமமாகஇருப்பவராகவும் கருதுகிறார்களோ, உலகங்களுக்கு உத்பத்திகாரணரும் தமக்கு உத்பத்திகாரணமில்லாதவரும் நிர்க்குண ஸ்வரூபமுள்ளவருமான அவரைச் சரணமடைகிறேன். எவர் பூதம் முதலானவைகளையும் ஸநாதனமான ஏழு உலகங்களையும் படைத்தவரோ ஸத்யலோகத்திற்குமேல் ஸ்திரமாயிருப்பவரோ ஸனாதனரான அவரைச் சரணமடைகின்றேன். பக்தர்களுக்கு எளிதில் அடையக்கூடியவரும் பக்தியில்லாதவர்களுக்கு அடைய முடியாதவரும் அருகிலிருப்பவரும் பிரகிருதிக்கு அப்புறத்திலிருப்பவரும் தேவரும் எல்லா உலகங்களிலுமிருப்பவருமான அவரை நமஸ்கரிக்கிறேன்; சரணமடைகிறேன்' என்று இவ்விதம் மஹாதேவரும் வேகமுள்ளவரும் மஹாத்மாவுமான அவருக்கு நமஸ்காரம் செய்து அந்த ஸுவர்ணத்தை அடைவாய். மனிதர்கள் அவரிடத்தில் மனத்தைச் செலுத்திக் கணங்களுக்குப் பதியாயிருக்கும் தன்மையையும் அடைகின்றனர். ஸுவர்ணபாத்திரங்களைப்பற்றி என்ன ஸந்தேகம்? ஆகையால், நீ (சீக்கிரம்) செல். தாமதம் செய்யாதே. உனக்கு மிகப்பெரிய லாபம் கிடைக்கும். ஆகையால், ஸுவர்ணத்தைக் கொண்டுவருதற்காக யானைகளுடனும் குதிரைகளுடனும் ஒட்டகங்களுடனும் உன்னுடைய ஆட்கள் அவ்விடம் செல்லுக' என்றார்.

இவ்விதம் சொல்லக்கேட்ட காரந்தமபுத்திரனான அந்த மருத்தன், அவர் சொன்னபடி செய்தான். கங்காதரரை நமஸ்கரித்து உத்தமமானதனத்தை அடைந்தான். மஹாதேவருடைய அருளால் அந்தத்தனத்தை அடைந்து குபேரன்போலானான். பிறகு, மனிதர்களால் செய்யமுடியாத யாகத்திற்கேற்ற எல்லா ஏற்பாடுகளையும் செய்தான். அந்த யாகத்திற்காகச் சிற்பிகள் ஸுவர்ணமயமான பாத்திரங்களையும் யாகசாலைகளையும் (மற்ற எல்லா) ஸாமக்ரிகளையும் அப்பொழுது ஸம்வர்த்தருடைய கட்டளையினால் நன்றாகச் செய்தார்கள். பிருஹஸ்பதியோ, தேவர்களுடைய செல்வத்தைக்காட்டிலும் மேன்மை பெற்றதான மருத்தராஜனுடைய அந்த நிறைந்தசெல்வத்தைக் கேட்டு அதிக ஸந்தாபத்தையடைந்தார். 'எனக்குப் பகைவனான ஸம்வர்த்தன் செல்வமுடையவனாகப் போகிறான்' என்று ஸந்தாபத்தை அடைந்தவரான பிருஹஸ்பதி நிறம்மாறி மிக இளைத்தவரானார். அப்பொழுது, தேவராஜன் அந்தப்பிருஹஸ்பதி மிக்க ஸந்தாபமடைந்திருப்பதைக்கேட்டு, தேவர்களால் சூழப்பெற்று, அவரிடம் சென்று பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான்.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(பிருஹஸ்பதி, ஸம்வர்த்தர் மருத்தனுக்கு யாகஞ்செய்விப்பதைத் தடுக்கும்படி இந்திரனுக்குச் சொல்லியதும், இந்திரன் பிருஹஸ்பதியை ஏற்றுக்கொள்ளும்படி அக்நிமூலமாக மருத்தனுக்குச் சொல்லியனுப்ப அவர் மறுத்ததும், மறுபடியும் அக்நியை மருத்தனிடம் போகச்சொல்ல அவன் மறுத்ததும்.)**

இந்திரன், 'பிருஹஸ்பதியே! நீர் ஸுகமாகத்தூங்குகிறீரா? உம்முடையவேலைக்காரர்கள் குறிப்பறிந்து நடக்கிறார்களா? பிராம்மணரே! நீர் தேவர்களுக்கு ஸுகத்தைச் செய்யவிருப்பமுள்ளவராயிருக்கிறீரா? தேவர்கள் உம்மை ரக்ஷிக்கின்றார்களா?' என்றான். ப்ருஹஸ்பதி, 'தேவராஜனே! படுக்கையில் ஸுகமாகப் படுக்கிறேன். அவ்வாறே என்னுடைய பரிசாரகர்களும் மனத்திற்கின்பமாக இருக்கிறார்கள். எப்பொழுதும் தேவர்களுக்கு ஸுகத்தைச் செய்ய விருப்பமுள்ளவனாகவே இருக்கிறேன். தேவர்களும் என்னை மிகவும் நன்றாகப் பரிபாலிக்கின்றனர்' என்றார். இந்திரன், 'பிராம்மணரே! இந்தத் துக்கம் எதனால்? மனத்திலுண்டானதா? தேகத்திலுண்டானதா? நீர் ஏன் இப்பொழுது வெளுத்தும் வர்ணக்குறைந்தும் இருக்கிறீர்? என்னிடம் சொல்லும். உமக்குத் துக்கத்தைச்செய்த அவர்களெல்லாரையும் இப்பொழுதே கொல்லுகிறேன்.' என்றான். பிருஹஸ்பதி, 'இந்திரனே! மருத்தன் உத்தமமான தக்ஷிணையுள்ள பெரிய யாகம் செய்யப்போகிறானென்று சொல்லுகிறார்கள். ஸம்வர்த்தன் யாகம் செய்விக்கப்போகிறானென்றும் நான் கேட்டேன். ஆகையால், ஸம்வர்த்தன் (மருத்தனுக்கு) யாகம்செய்விக்கக் கூடாதென்று விரும்புகிறேன்' என்றார். இந்திரன், 'பிராம்மணரே! நீர் எல்லா இஷ்டங்களையும் அடைந்திருக்கிறீர். தேவர்களுக்குப் புரோஹிதராயிருந்துகொண்டு அவர்களுக்கு ஆலோசனை சொல்லுகிறீர். மூப்பு மரணம் இரண்டும் உம்மைவிட்டு விலகிவிட்டன. பிராம்மணரே! ஸம்வர்த்தர் இப்பொழுது உமக்கு என்ன செய்யப்போகிறார்?' என்றான். பிருஹஸ்பதி, 'தேவேந்திர! நீ தேவர்களுடன் சேர்ந்துகொண்டு அஸுரர்களைத் துரத்திவிட்டு, ஆங்காங்கு செல்வம் நிறைந்தவர்களாகக் காணப்படுகிற அவர்களையெல்லாம் சுற்றத்தாருள்படக் கொல்லவும் விரும்புகிறாயல்லவா? பகைவர்கள் செல்வம்நிறைந்திருப்பது துக்கத்

திற்குக் காரணமன்றோ? ஆகையால், என்னுடைய பகைவன் வ்ருத்தி யடைகிறானென்பதைக்கேட்டு நான் நிறம் மாறின உருவமுள்ளவனாக இருக்கிறேன். இந்திர! எல்லா உபாயங்களாலும் ஸம்வர்த்தனை யாவது மருத்தராஜனையாவது அடக்கு' என்றார்.

இந்திரன்,(அக்நியை நோக்கி), 'அக்னியே! வா. (என்னால் அனுப்பப்பட்டு, மருத்தனிடம் பிருஹஸ்பதியைச் சேர்ப்பதற்காகச் செல். (அவனிடம்), 'இந்தப் பிருஹஸ்பதி உனக்கு யாகம் செய்விப்பார். உன்னை அமரனாகவும் செய்வார்' என்று சொல்' என்றான். அக்னி, 'இந்திர! நான் இப்பொழுது உனக்குத் தூதனாக இருந்துகொண்டு மருத்தனிடம் பிருஹஸ்பதியைச் சேர்ப்பதற்கும் புருஹூதனான உன்னுடைய வார்த்தையை ஸத்யமாகச் செய்வதற்கும் பிருஹஸ்பதிக்குப் பூஜையைச் செய்வதற்கும் விரும்பிச்செல்லுகிறேன்.' என்றான். பிறகு, மஹாத்மாவான அக்னியானவன், மரங்களையும் கொடிகளையும் அழித்துக்கொண்டு ஹேமந்தருதுவின்முடிவில் இஷ்டப்படி திசைகளைமீறிச்செல்லுகின்றவனும் எங்கும்ஸஞ்சரிப்பவனுமான வாயுவைப் போலக் கர்ஜித்துக்கொண்டு சென்றான். மருத்தன், 'முனிவரே! இப்பொழுது சரீரத்துடன் அக்னிவந்ததை ஆச்சர்யமாகப் பார்க்கிறேன். ஆஸனத்தையும் அர்க்கியத்தையும் பாத்யத்தையும் பசுவையும் கொண்டுவாரும்' என்றான். அக்னி,'குற்றமற்றவனே! உன்னால் கொடுக்கப்பட்ட ஆஸனத்தையும் ஜலத்தையும் பாத்தியத்தையும் பற்றி ஸந்தோஷிக்கிறேன். என்னை இந்திரனால் கட்டளையிடப்பட்டு வந்திருக்கும் தூதனாகத் தெரிந்துகொள்' என்றான். மருத்தன், 'அக்நியே! தேவராஜன் ஸம்பத்துள்ளவனாகவும் ஸுகமாகவும் இருக்கிறானா? நம்மிடத்தில் ப்ரீதியுள்ளவனாக இருக்கிறானா? தேவர்கள் வழக்கம் போல் அவனுக்கு வசப்பட்டிருக்கிறார்களா? தேவனே! நீ எனக்கு எல்லாவற்றையும் சொல்' என்றான். அக்நி, 'ராஜஶ்ரேஷ்டனே! இந்திரன் மிகவும் நல்லஸுகமுள்ளவனாகஇருக்கிறான். அவன் உன்னுடன் அழிவற்ற ப்ரீதியை விரும்புகிறான். அரசனே! எல்லாத் தேவர்களும் அவனுக்கு வசப்பட்டிருக்கிறார்கள். தேவராஜன் என்னிடம் சொன்ன ஸமாசாரத்தை நீ கேள். அவன் பிருஹஸ்பதியை மருத்தனான உன்னிடம் சேர்த்துவைப்பதற்காக என்னை உன்னிடம் அனுப்பினான். வேந்தனே! அந்தப் பிருஹஸ்பதி உனக்கு யாகம் செய்விக்கட்டும். மனிதனாக இருக்கும் உன்னைத் தேவனாகச் செய்யட்டும்' என்றான். மருத்தன், 'இந்த ஸம்வர்த்தரென்னும் பிராம்மணர் எனக்கு யாகம் செய்விப்பார். அந்தப் பிருஹஸ்பதிக்கு இதோ அஞ்

சலி செய்கிறேன். மகேந்திரனுக்கு யாகம் செய்விக்குமவர் மனித னுக்கு யாகம் செய்வித்தால் அவருக்குச் சோபை குறையும்' என் ருன். அக்னி, 'இந்தப் பிருஹஸ்பதி உனக்கு யாகம் செய்வித்தால் தேவராஜனுடைய அனுக்ரஹத்தால் தேவலோகத்திலுள்ள சிறந்த உலகங்களை அடைவாய். நீ புகழ்பெற்று ஸ்வர்க்கத்தை ஜயிப்பாய். நிச்சயம். அரசனே! பிருஹஸ்பதி யாகம் செய்வித்தால் நீ மானிட லோகங்களையும் தேவலோகங்களையும் பிரம்மதேவரின் பெருமை பெற்றலோகங்களையும் எல்லாத் தேவராஜ்யத்தையும் [1] ஜயிப்பாய்' என்ருன். ஸம்வர்த்தர், 'அக்னியே! நீ பிருஹஸ்பதியை மருத்தனி டம் சேர்ப்பதற்காக எவ்விதத்திலும் மறுபடி வரவேண்டாம். நான் கோபங்கொண்டு பயங்கரமான கண்ணுல் உன்னை எரிக்கவேண்டாம். நீ (இதைத்) தெரிந்துகொள்' என்ருர். பிறகு, அக்னி, (தன்னை) ஸம்வர் த்தர் எரித்துவிடுவரென்று பயந்து மனம் வருந்தி அரசிலைபோல் நடுங்கிக்கொண்டு தேவர்களிடம் சென்ருன். மஹாத்மாவான இந்தி ரன் அந்த அக்னியைப்பார்த்துப் பிருஹஸ்பதியின் முன்னிலையில், 'அக்னியே! பிருஹஸ்பதியை மருத்தனிடம் சேர்ப்பதற்காக என் ஞல் அனுப்பப்பட்டு நீ சென்ருயே? யாகம் செய்யப்போகிற அந்த மருத்தராஜன் அதைப்பற்றி என்ன சொன்ஞன்? அந்த வார்த்தை யை ஏற்றுக்கொண்டாஞ?' என்று வினவினுன். அக்னி, 'மருத்தன் உன்னுடைய வார்த்தையில் பிரியப்படவில்லை. அவன் பிருஹஸ்பதி க்கு [2] அஞ்சலியை அனுப்பினுன். நான் அடிக்கடி வேண்டியும் 'ஸம் வர்த்தர் எனக்கு யாகம் செய்விப்பர்' என்றே சொன்ஞன். 'பிருஹஸ் பதியோடு ஸ்நேஹம் செய்து (அதஞல்) எனக்கு மானிடலோ கங்களும் தேவலோகங்களும் பிரம்மதேவரின் சிறந்த உலகங்க ளும் கிடைக்குமாஞலும் விரும்பமாட்டேன்' என்று உறுதி யாகச் சொன்ஞன்' என்ருன். இந்திரன், 'மறுபடியும் நீ மருத்தராஜனிடம் சென்று நல்லகருத்துள்ள என்வார்த்தையைச் சொல். மறுபடியும் உன்ஞல் சொல்லப்பட்ட அவன் (அந்த) வார்த் தையை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அவன்மீது வஜ்ரத்தைப் பிர யோகிக்கிறேன்' என்ருன். அக்னி, 'இந்தக் கந்தர்வராஜன் அங்கு தூதனுகச் செல்லட்டும். இந்திர! நான் அங்குசெல்லப் பயப்படு கிறேன். கடுஞ்சினமுள்ளவரும் பிரம்மசர்யத்தை அனுஷ்டித்தவரு மான ஸம்வர்த்தர் கோபங்கொண்டு என்னைப் பார்த்து, '(அக்னியே!

---

1 அடையத்தக்கவஞவாய் என்பது.

2 வரவேண்டாமென்பதைத் தெரிவித்தபடி.

பிருஹஸ்பதியை மருத்தனிடம் சேர்ப்பதற்காக நீ மறுபடியும் இவ் விடம் எவ்விதத்திலாவது வந்தால் நான் கோபங்கொண்டு பயங்கர மான கண்ணால் உன்னை எரித்துவிடுவேன்' என்று சொன்னார். இந்திர! நீ இதனைத் தெரிந்துகொள்' என்றான். இந்திரன், 'அக்னியே! நீதான் மற்றவர்களை எரிக்கிறாய். பஸ்மமாகச்செய்பவன் உன்னைத் தவிர வேறொருவன் இல்லை. உன்னுடைய ஸ்பர்சத்திற்கு எல்லா உலகமும் பயப்படுகிறது. அக்னியே! நம்பத்தகாதவார்த்தையைச் சொல்லுகிறாய்' என்றான். அக்னி, 'தேவேந்திர! நீ உன்னுடைய பலத்தி னாலேயே ஸுவர்க்கத்தையும் எல்லாப்பூமியையும் வியாபித்துக்கொண் டிருக்கிறாய். நீ இவ்விதம்இருக்கும்போது முன்பு வ்ருத்ரன் எவ் விதம் ஸுவர்க்கத்தைக் கைப்பற்றினான்?' என்றான். இந்திரன், 'அக் நியே! நான் மலையைக் கொசுவைப்போல அணுவாகச்செய்வேன். சத் ருக்கள்கொடுக்கும் ஸோமரஸத்தைப் பானம்பண்ணமாட்டேன். குறைந்தவனிடத்தில் வஜ்ரத்தைப் பிரயோகிக்கமாட்டேன். எந்தமனி தன் எனக்குத் [1]துன்பமுண்டாகும்படி அடிப்பான்? பூமியில் கால கேயர்களைத் [2]துரத்தினேன். அஸுரர்களை ஆகாயத்தினின்று துரத்தினேன். ஸுவர்க்கத்திலிருந்து பிரஹ்லாதனை முடிவு பெறும்படி செய்தேன். எந்தமனிதன் எனக்குத் துன்பமுண்டாகும் படி அடிப்பான்?' என்றான். அக்னி, 'மஹேந்திர! முன் ச்யவனர் சர்யாதிக்கு யாகம் செய்வித்து அச்வினீதேவர்களோடு ஒருவராக ஸோம ரஸத்தைப் பெற்றுக்கொண்டார். அவரை நீ கோபங் கொண்டு தடுத்தாய். அந்தச் சர்யாதியின்யாகத்தை நினைத்துக்கொள். புரந்தர! நீ அதிகோரமான வஜ்ரத்தைஎடுத்து ச்யவனரை அடிக்க முயற்சிசெய்தாய். அந்தப்பிராம்மணர் கோபங்கொண்டு தவத்தினால் வஜ்ரத்துடன்கூடின உன்னுடைய கையை அசைவற்றதாகச் செய்தார். பிறகு, அவர் மறுபடியும் கோபங்கொண்டு எங்கும் கோரமான ரூபமுள்ளவனும் மதனென்று பெயருள்ள விச் வரூபனுமான அஸுரனை உனக்குச் சத்துருவாக உண்டுபண்ணினார். அவனைக்கண்டு நீ கண்களை மூடிக்கொண்டாய். அந்தப் பெரிய அஸு ரனுடைய ஒரு [3] ஹனுவானது பூமியிலிருந்தது. மற்றொன்று ஆகா

1 எவன் என்னை-அடித்து நன்மை அடைவானென்றும் கொள்ளலாம்.

2 'ப்ரவ்ராஜயேயம்' என்பது மூலம்; அதற்குத் துரத்துவேன்' என்பது பொருள்.

3 வாயைத் திறந்தால் அடிப்பக்கம் பூமியிலும் மேற்பக்கம் ஆகாயத்திலும் இருந்தன என்பது கருத்து.

யத்தை அடைந்திருந்தது. (அவனுக்கு) நூறுயோஜனை நீளமும் மிக்க கூர்மையும் கோரரூபமுமுள்ள ஆயிரம் பற்களிருந்தன. வட்டமான வைகளும் பருத்தவைகளும் வெள்ளித் தூண்போன்ற நிறமுள்ளவை களும் இருநூறு யோஜனை நீளமுள்ளவைகளுமான நான்கு கோரப் பற்களிருந்தன. அவன் உன்னைக் கொல்லவிரும்பிக் கோரமான சூல த்தை (க்கையில்) ஏந்திப் பற்களைக் கடித்துக்கொண்டு எதிர்த்துவந் தான். அப்பொழுது கோரமான ரூபமுள்ள அவனை உன்னால் பார்க்க முடியவில்லை. பார்க்கும்படியாயிருந்த உன்னை எல்லாரும் பார்த்தார் கள். அஸுரர்களைக்கொல்பவனே! நீ அவனிடம் பயந்துகொண்டும் அஞ்சலி செய்துகொண்டும் ச்யவனமஹரிஷியைச் சரணம்அடைந் தாய். இந்திர! க்ஷத்ரியர்களின்பலத்தைவிடப் பிராம்மணர்களின் பலம் மிகப் பெரிது. பிரம்ம பலத்தைவிட மிகமேலானது ஒன்றுமில்லை. பிரம்மதேஜஸை உள்ளபடி அறிந்த நான் ஸம்வர்த்தரிடம் போக விரும்பவில்லை' என்றான்.

## பத்தாவது அத்யாயம்.

## அஶ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



(இந்திரன் பிருகஸ்பதியை ஆசார்யாராகக் கொள்ளும்படி மருத்தனுக்குச் சொல்லியனுப்ப அவன் மறுத்ததும், இந்திரன் கெடுக்கமுயல ஸம்வர்த்தர் தடுத்ததன்மேல் இந்திரன் அனுகூலனாகி யாகத்தை நிறைவேற்றியதும், வியாஸர் அதில் மிகுந்த திரவியத்தைக் கொணர்ந்து அஶ்வமேதம்செய்யும்படி யுதிஷ் டிரனுக்குச் சொல்லியதும்.)

இந்திரன்,-இது உண்மைதான். பிராம்மணருடைய பலம் மிகச் சிறந்ததே. பிராம்மணபலத்தைக் காட்டிலும் மற்றொன்று சிறந்த தன்று. ஆவிக்ஷிதனுடைய பலத்தையோ நான் பொறுத்திருக்க முடி யாது. கோரமான வஜ்ரத்தை அவன்மீது போடுவேன். திருதராஷ்டிர! நீ (என்னால்) அனுப்பப்பட்டு மருத்தனிடம் செல். ஸம்வர்த்தரோடு சேர்ந்திருக்கும் அவனை நோக்கி, 'ராஜனே! நீ பிருஹஸ்பதியைப் புரோஹிதராக வைத்துக்கொள். இல்லாவிடில், கோரமான வஜ்ரத் தால் உன்னை அடிப்பேன்' என்று (நான் சொன்னதாகச்) சொல்' என் றான். பிறகு, திருதராஷ்டிரனென்னும் கந்தர்வன் மருத்தராஜனிடம் சென்று (அவனைநோக்கி) இந்திரனுடைய வார்த்தையைப் பின்வரு

மாறு உரைக்கலானான்:— 'அரசனே! (இந்திரன் சொன்னதைச்) சொல்ல விரும்பி உன்னிடம் வந்திருக்கும் திருதராஷ்டிரனென்னும் கந்தர்வனென்று என்னைத் தெரிந்துகொள். ராஜஶ்ரேஷ்டனே! உலகங்களுக்கு அதிபதியும் மஹாத்மாவுமான இந்திரன் சொன்ன வாக்கியத்தை என்னிடமிருந்துகேள். 'நீ ப்ருஹஸ்பதியைப் புரோஹிதராக வரித்துக்கொள். நீ என்னுடைய இந்தவார்த்தையைச் செய்யாவிட்டால் கோரமான வஜ்ரத்தால் உன்னை அடிப்பேன்' என்று சிந்திக்க முடியாத செய்கையுள்ள இந்திரன் இவ்வளவான இந்தவார்த்தையைச்சொன்னான்' என்றான். மருத்தன், 'நீயும் இந்திரனும் விஶ்வேதேவர்களும் வஸுக்களும் அஶ்வினீதேவர்களும் இதனை அறிவீர்கள். உலகத்தில் மித்ரத்துரோஹத்திற்குப் பிராயச்சித்தம் இல்லை. அது பிரம்மஹத்திக்கொப்பான பெரிய பாவம். ப்ருஹஸ்பதி தேவஶ்ரேஷ்டனும் வஜ்ரத்தைத்தரிப்பவருள் மிகச்சிறந்தவனுமான மஹேந்திரனுக்கு யாகம் செய்விக்கட்டும். அரசனே! ஸம்வர்த்தர் எனக்கு யாகம் செய்விக்கட்டும். இப்பொழுது உன்னுடைய வார்த்தையிலாவது இந்திரனுடைய வார்த்தையிலாவது பிரியப்படமாட்டேன்' என்றான். கந்தர்வன், 'ராஜஶ்ரேஷ்டனே! ஆகாயத்தில் கர்ஜிக்கும் இந்திரனுடைய சத்தத்தைக் கேள். இந்திரன் உன்மீது நிச்சயமாக வஜ்ரத்தைப் பிரயோகிப்பான். வேந்தனே! க்ஷேமத்தைப்பற்றி ஆலோசனை செய்ய இது ஸமயம்' என்றான். அரசனே! திருதராஷ்டிரனால் இவ்விதம்சொல்லப்பட்ட மருத்தன், கர்ஜிக்கின்ற இந்திரனுடைய சப்தத்தைக்கேட்டு, தவத்தில் நிலைபெற்றவரும் தர்மத்தை அறிந்தவருள் சிறந்தவருமான ஸம்வர்த்தரிடம் கார்யத்தைத்தெரிவிக்கலானான்.

'பிராம்மணஶ்ரேஷ்டரே! நீர் ஸமீபத்தில் வருகின்ற என்னைப் பாரும். வழி தூரமாகஇருப்பதால் இப்பொழுது (இந்திரன்) காணப்படவில்லை. உம்மிடமிருந்து நான் ஸுகம்பெறவேண்டும். பிராம்மணஶ்ரேஷ்டரே! ஆகையால், (எனக்கு) அபயம் கொடும். இதோ வஜ்ரபாணியான இந்திரன் பத்துத்திசைகளையும் பிரகாசிக்கும்படி செய்துகொண்டு வருகிறான். மனிதரால் செய்யமுடியாத கோரமான சப்தத்தால் நம்முடையஸதஸிலுள்ளவர்கள் பயமடையும்படி செய்யப்பட்டார்கள்?' என்றான். ஸம்வர்த்தர், 'ராஜஶ்ரேஷ்டனே! உனக்கு இந்திரனிடமிருந்து உண்டானபயம் விலகட்டும். மிக்க கோரமான இந்தப்பயத்தை நான் ஸம்ஸ்தம்பினி என்னும் வித்தையினால் சீக்கிரமாகவே போக்குகிறேன். இந்த இந்திரன் (உன்னை)

அடித்துவிடுவான் என்று நீ பயப்படாதே. நம்பிக்கையுடன் இரு. ராஜனே! நீ இந்திரனிடம் பயப்படாதே. நான் (அவனை) அடக்கு கிறேன். எல்லாத் தேவர்களுடைய ஆயுதங்களும் என்னால் அழிக் கப்படும். வஜ்ரமானது திசைகளில் செல்லட்டும். காற்றாகிச் செல்லட் டும்; மழையாகஆகிக் காடுகளில் பொழியட்டும். ஆகாயத்தில் ஜலம் பெருகட்டும். மின்னல் வீணைகக்காணப்படுகிறது; நீ பயப்படாதே. அக்னிதேவனாவது உன்னை நாலுபக்கங்களிலும் காப்பாற்றட்டும். இந் திரனாவது (உன்னுடைய) எல்லா இஷ்டங்களையும் பொழியட்டும். அவ்வாறே, ஜலப்பிரவாகங்களுடன் கொல்லுவதற்கு வருகின்ற மிக்க கோரமான வஜ்ரத்தை நிறுத்தட்டும்' என்றார். மருத்தன் 'பிராம் மணரே! கோரமான சப்தம் கேட்கப்படுகிறது. இது காற்றுடன் கூடிய வஜ்ரத்தினுடைய பேரொலி.என்னுடையஆத்மாவானதுஅடிக் கடி மிக்க வருத்தமடைகின்றது. இப்பொழுது எனக்குக் கவலையில் லாநிலைமை உண்டாகவில்லை' என்றான். ஸம்வர்த்தர், 'வேந்தே! உன க்கு இப்பொழுது உக்ரமான வஜ்ரத்தினிடமிருந்து பயம் விலகட்டும். வஜ்ரமானது காற்றாகிச் செல்லுக. பயத்தைவிட்டு வேறு வரத்தைக் கேட்டுக்கொள். நான் உனக்கு எந்த இஷ்டத்தைத் தவத்தால் நிறை வேற்ற வேண்டும்?' என்றார். மருத்தன், 'பிராம்மணரே! இந்திரன் நேரில் விரைவாக வரவேண்டும்.யாகத்தில் ஹவிஸையும் பெற்றுக்கொ ள்ளவேண்டும். தேவர்களும் தம்தம்ஹவிஸை அடையவேண்டும்.ஹோ மம்செய்யப்பட்ட ஸோமரஸத்தையும் பெற்றுக்கொள்ளவேண்டும்' என்றான். ஸம்வர்த்தர், 'ராஜனே! இந்த இந்திரன் இப்பொழுது என் னால் இந்தயாகத்திற்காக மந்திரத்தால் அழைக்கப்பட்டு வேகமுள்ள எல்லாத்தேவர்களாலும் ஸ்தோத்திரம் செய்யப்பெற்றுப் பச்சைக் குதிரைகளுடன் வருகிறான். மந்திரத்தால் தளர்ச்சியுற்ற சரீரமுள்ள இவனைப் பார்' என்றார். பிறகு, தேவராஜன் தேவர்களுடன் கூடிப் பச்சைநிறமுள்ள அந்தச் சிறந்தகுதிரைகளை ரதத்தில்பூட்டி (அதில் ஏறிக்கொண்டு) அவிக்ஷித்தின்குமாரனும் அளவிடமுடியாத மஹி மையுள்ளவனும் ராஜனுமான மருத்தனுடைய யாகத்திற்கு ஸோமரஸத்தைப் பானஞ்செய்யவிரும்பி வந்தான். மருத்தன் தேவக்கூட்டங்களுடன் வருகின்ற அந்தஇந்திரனைப் புரோஹித ருடன் எதிர்கொண்டுசென்று ப்ரீதியுடன் அவனுக்குச் சாஸ்திரப் படியும் முறைப்படியும் சிறந்த பூஜையைச் செய்தான். ஸம்வர்த்தர், 'புருஹூத! வித்வானே! இப்பொழுது உன்வரவு நல்லவரவாகுக. இந்திர! நீ அருகில் வந்திருப்பதால் இந்தயாகமும் மிகவும் அதிக

மாகப் பிரகாசிக்கிறது. பலாஸுரனையும் விருத்ரனையும் கொன்றவனே! நான் பிழிந்தெடுத்த ஸோமரஸத்தைப் பானம் செய்' என்றார். மருத்தன், 'தேவேந்திர! என்னை க்ஷேமத்தைத்தரும் (கண்ணால்) பார். உன்னை நமஸ்கரிக்கிறேன். யாகம் நிறைவேறிற்று. என்னுடைய உயிர்வாழ்க்கை பயன் பெற்றதாயிற்று. பிருஹஸ்பதிக்கு இளைய ஸஹோதரரான இந்தஸம்வர்த்தர் எனக்கு யாகம்செய்விக்கிறார்' என்றான். இந்திரன், 'ராஜனே! உனக்குக் குருவும் தபோதனரும் பிருஹஸ்பதிக்குஇளையஸஹோதரரும் தீக்ஷ்ணமான தேஜஸுள்ளவருமான இந்த ஸம்வர்த்தரை எனக்குத் தெரியும். இவர் அழைத்ததனால் நான் (இங்கு) வந்தேன். எனக்கு இப்பொழுது உன்னிடத்தில் பிரீதி உண்டாகிவிட்டது. கோபம் நீங்கி விட்டது' என்றான். ஸம்வர்த்தர், 'தேவராஜனே! நீ ப்ரீதியுள்ளவனாக இருந்தால் யாகத்தில் செய்யவேண்டியகாரியத்தை நீ நேரில் கட்டளையிடு. தேவேந்திர! நீயே எல்லாப் பிரிவுகளையும் செய். தேவனே! இந்த உலகமெல்லாம் தெரிந்துகொள்ளட்டும்' என்றார். ஸம்வர்த்தரால் இவ்வாறு சொல்லப்பட்ட இந்திரன், தானே தேவர்களைநோக்கி, 'கந்தர்வர்களுக்கும் அப்ஸரஸுகளுக்கும் ஆச்சர்யகரமானவைகளும் நிறைந்த செல்வமுள்ளவைகளுமான ஸபைகளையும் சிறந்தவாஸஸ்தானங்களையும் ஆயிரக்கணக்காகச் செய்யுங்கள். சீக்கிரமாகத் தூண்களை நிறுத்துங்கள். படிகளைக்கட்டுங்கள். எல்லா அப்ஸரஸுகளும் அந்த ஸபைகளில் நர்த்தனம்செய்வார்கள். யாகசாலையை ஸுவர்க்கத்திற்கு ஒப்பானதாகச் செய்யுங்கள்' என்று கட்டளையிட்டான். அரசனே! இவ்வாறு சொல்லப்பட்ட அந்தத் தேவர்கள், இந்திரன் சொன்னபடி விருப்பத்துடன் செய்தார்கள். மன்னனே! பிறகு, பூஜிக்கப்படுகிறவனான இந்திரன் பிரியத்துடன் மருத்தராஜனைப் பார்த்து, 'ராஜனே! புருஷஸ்ரேஷ்டனே! இப்பொழுது உன்னிடம் சேர்க்கைபெற்று நானும் உன்னுடைய முன்னோர்களும் மற்ற எல்லாத்தேவர்களும் ஸந்தோஷமடைந்தோம். அரசே! (எல்லோரும்) உன்னுடைய ஹவிஸைப் பெற்றுக் கொள்ளட்டும். மன்னவ! பிராம்மணஸ்ரேஷ்டர்கள் [1]அக்னியைத் தேவதையாகக் கொண்ட சிவப்பு நிறமுள்ள காளையையும், விஸ்வே தேவர்களைத் தேவதையாகக் கொண்ட அநேகநிறமுள்ள காளையையும், நீலநிறமுள்ளதும் அசைகின்ற குறியையுடையதும் யாகத்திற்கு ஏற்றதும் (பெரியோர்களால்) குறிப்பிடப்பட்டதுமான காளையை

[1] 'அக்கிதேவதையை உத்தேசித்து' என்றும், 'விஸ்வேதேவர்களை உத்தேசித்தும்' என்றும் கொள்ளலாம்.

யும் ஆலம்பனம்செய்யட்டும்' என்று சொன்னான். அரசனே! பிறகு, அந்த ராஜனுடையயாகம் விருத்தியடைந்தது. அதில் தேவர்கள் தாமே அன்னங்களைப் பெற்றுக்கொண்டார்கள். அதில் பச்சைக் குதிரைகளுள்ளவனும் தேவராஜனுமான இந்திரன், பிராம்மணர்களால் பூஜிக்கப்பட்டு ஸதஸ்யனாக இருந்தான். பிறகு, யாகமேடையையடைந்தவரும் மஹாத்மாவும் நன்றாக ஜ்வலிக்கின்ற இரண்டாவது அக்னிபோன்றவருமான ஸம்வர்த்தர் மிக்க பிரியத்துடன் மந்திரங்களால் தேவக்கூட்டங்களை உரக்க அழைத்து, ஹவிஸுகளை அக்னியில் ஹோமஞ்செய்தார். பிறகு, இந்திரனும் ஸோமபானஞ் செய்யும் மற்ற எல்லாத்தேவக்கூட்டங்களும் சிறந்ததான ஸோமரஸத்தைப் பானஞ்செய்து இஷ்டப்படி திருப்தியடையும்படி செய்யப்பட்டு ஸந்தோஷமடைந்து மருத்தராஜனால் அனுமதிகொடுக்கப்பட்டுச் சென்றார்கள். பிறகு, பகைவர்களைக் கொல்பவனான மருத்த ராஜன் ஒவ்வோரிடத்திலும் ஸுவர்ணக்குவியல்களை ஏற்படுத்தி ஸந்தோஷத்துடன் பிராம்மணர்களுக்கு மிகுதியான தனத்தைக் கொடுத்து, குபேரன்போல விளங்கினான். பிறகு, மருத்தன் மனக்களிப்புடன் பலவிதமான தனத்தைச் சேர்த்துப் பொக்கசமாக்கி (அங்கு) வைத்துவிட்டுக் குருவினிடம் அனுமதிபெற்றுத் திரும்பி வந்து கடல் சூழ்ந்த பூமி முழுதையும் ஆண்டு வந்தான். மருத்த ராஜன் இவ்வுலகில் இவ்விதகுணங்களுள்ளவனாக இருந்தான். அவனுடையயாகத்தில் மிகுதியான அந்தஸுவர்ணமிருந்தது. அரசனே! நீ அந்தத் தனத்தைக்கொண்டு ஸுவர்ணமயமான பாத்திரங்களால் தேவர்களைக்குறித்து யாகம்செய்' என்றார். பிறகு, பாண்டுகுமாரரான யுதிஷ்டிரராஜர் ஸத்யவதியின் புத்திரரான வியாஸருடைய வாக்கியத்தைக் கேட்டு மிக்க மனக்களிப்புற்று அந்தத் தனத்தால் யாகம் செய்ய நினைத்துப் பிறகு திரும்பவும் மந்திரிகளுடன் ஆலோசிக்கலானார்.

---

## பதினோராவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(வாஸுதேவர் இந்திரனுக்கும்வ்ருத்ரனுக்கும் நடந்த போரின் வரலாற்றை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)**

அந்த யுதிஷ்டிரராஜர் ஆச்சர்யமான செய்கையுள்ள வியாஸரால் இவ்வாறு சொல்லப்பட்டபொழுது, சிறந்த தேஜஸுள்ளவரும் வரு

ஷ்ணிகுலத்தாருள் சிறந்தவருமான வாஸுதேவர், ஞாதிகளையும்பந்துக் களையும் இழந்தவரும் எளிமையுற்ற மனமுள்ளவரும் ராஹுவினால் பிடிக்கப்பட்ட ஸூர்யன் போன்றவரும் புகையுடன்கூடின அக்னி போன்றவரும் குந்தியின் புத்திரரும் அரசருமான தர்மபுத்திரர் மனத் தில்துயரமுற்றிருத்தலைத் தெரிந்து அவரைத்தேறுதல்செய்து, பிறகு, (பின்வரும்) வசனத்தைச் சொல்ல ஆரம்பித்தார். 'கோணலான (காம முதலிய) எல்லாம் ஸம்ஸாரத்தைக் கொடுக்கக்கூடியவை. நேரான (சமமுதலானவை)எல்லாம் மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியவை. இவ் வளவுதான் அறியவேண்டும்; வீணைவார்த்தையால் என்னபயன்? உம்மால் செய்யப்படவேண்டிய கார்யம் செய்யப்படவே இல்லை. உம் சத்துருக்கள் ஜயிக்கப்படவேயில்லை. உமது சரீரத்திலிருக்கும் [1]சத் துருவை நீர் ஏன் தெரிந்து கொள்ளவில்லை? இந்த விஷயத்தில் [2]இந் திரனுக்கு விருத்ரனுடன் யுத்தம் நடந்த விதத்தைத் தர்மத்தை மீறு மல் கேட்டபடி உமக்குச் சொல்லுகிறேன். அரசரே! முற்காலத்தில் விருத்ரன் பூமியை வியாபித்துக்கொண்டான். பூமி வியாபிக்கப்பட் டதைக்கண்டு கந்தமென்னும் விஷயமானது அபகரிக்கப்பட்டவுடன், பூமியை அபஹரித்ததாலுண்டான துர்க்கந்தமென்னும் விஷயம் உண்

1 அஞ்ஞான ரூபமான சத்துருவை என்பது பழைய உரை.

2 ஆத்மாவுக்கு அஹங்காரனுடன் என்பது பழைய உரை.

3 'அஹங்காரமானது ஸ்தூலசரீரத்தை ஆத்மா என்று எண்ணிற்று. பிறகு, பிரம்மாண்டத்தையும் தனக்கு விஷயமாக எண்ணிற்று. உடனே, ஆத்மா விவே கத்தை அடைந்து சரீரம் ஆத்மாஅன்று என்று தெரிவித்தது. பிறகு, அஹங்கார மானது சந்திரலோகத்தில் போகத்திற்காகக் கிடைத்த ஜலமயமான திவ்யசரீ ரத்தை ஆத்மாவென்று கருதி திவ்யலோகம் தன்னுடையதென்றெண்ண ஆத் மா விவேகத்தால் அந்த எண்ணத்தைப் போக்கிற்று. பிறகு, அஹங்காரமானது கிடைத்த தேஜோமயமான சரீரத்தை ஆத்மா என்றும் அங்குகாணப்படுவதைத் தன்னுடையதென்றும் நினைக்க, ஆத்மா விவேகத்தால் அந்த எண்ணத்தையும் போக்கிற்று. பிறகு, அஹங்காரமானது கிடைத்த வாயுமயமான ஸூக்ஷ்மசரீரத் தை ஆத்மாவாகவும் பிரம்மலோகத்தில் நினைத்தமாத்திரத்தில் கிடைத்தவை களைத் தன்னுடையவையென்றும் நினைத்தது. ஆத்மா விவேகத்தால் அதையும் போக்கிற்று. பிறகு, அஹங்காரமானது கிடைத்த ஆகாயசரீரத்தை ஆத்மா என்றும் அதிலுள்ள விஷயத்தைத் தன்னுடையதென்றும் நினைக்க, ஆத்மா விவேகத்தால் அந்த எண்ணத்தையும் போக்கிற்று. பிறகு, அஹங்காரமானது ஆத்மாவைத்தெரிந்துகொண்டு அதன்குணங்களில் அபிமானம் பெற்றது. பிறகு, குருவானவர் உபநிஷத்தால் அஹங்காரத்தைவிலக்கி ஆத்மாவுக்குப் பிரம்ம ஜ்ஞானத்தையுண்டுபண்ணினார்' என்பது இந்த அத்யாயத்தின் கருத்து.

டாயிற்று. கந்தமென்னும் விஷயம் அபஹரிக்கப்பட்டவுடன், இந்திரன் கோபங்கொண்டான். பிறகு, கோபங்கொண்ட அந்த இந்திரன் வ்ருத்திரன்மீது கோரமானவஜ்ரத்தைப் பிரயோகித்தான். மிக்க தேஜஸுள்ள வஜ்ரத்தால் மிகவும் அதிகமாக அடிக்கப்படும் அந்த வ்ருத்ரன், சீக்கிரமாக ஜலத்தில்பிரவேசித்து அதிலிருந்து விஷயத்தைக் கவர்ந்தான். ஜலம் வ்ருத்ரனால் கிரஹிக்கப்பட்டு (அதிலுள்ள) ரஸமென்னும் விஷயமும் கிரஹிக்கப்பட்டபோது, இந்திரன் மிக்க கோபங்கொண்டு அதில் வஜ்ரத்தைப் பிரயோகித்தான். அதில் அதிக தேஜஸுள்ள வஜ்ரத்தினால் அடிக்கப்படும் அந்தவ்ருத்ரன் சீக்கிரமாக ஜ்யோதியில் பிரவேசித்து அதிலிருந்து விஷயத்தைக் கிரஹித்தான். வ்ருத்ரனால் ஜ்யோதியில் வியாபிக்கப்பட்டு ரூபமென்னும் விஷயமும் அபஹரிக்கப்பட்டவுடன், இந்திரன், அதிக கோபம் கொண்டு அதில் வஜ்ரத்தைப் பிரயோகித்தான். அளவற்ற தேஜஸுள்ள வஜ்ரத்தினால் அதில் அடிக்கப்படும் வ்ருத்ரன், சீக்கிரமாக வாயுவில் பிரவேசித்தான்; அதிலிருந்து விஷயத்தைக் கிரஹித்தான். வ்ருத்ரனால் வாயு வியாபிக்கப்பட்டு ஸ்பர்சமென்னும் விஷயம் கவரப்பட்டவுடன், இந்திரன் அதிக கோபங்கொண்டு அதில் வஜ்ரத்தைப் பிரயோகித்தான். அளவற்ற தேஜஸுள்ள வஜ்ரத்தால் அதில் அடிக்கப்படும் அந்தவ்ருத்ரன் ஆகாயத்தை நோக்கிச்சென்றான்; அதிலிருந்து விஷயத்தைக் கிரஹித்தான். ஆகாசம் வ்ருத்ரனால் அடையப்பட்டுச் சப்தமென்னும் விஷயமும் (அவனால்) அபஹரிக்கப்பட்டவுடன், இந்திரன் அதிககோபங்கொண்டு அதில் வஜ்ரத்தைப் பிரயோகித்தான். அளவற்ற தேஜஸுள்ள வஜ்ரத்தால் அதில் அடிக்கப்படும் அந்தவ்ருத்ரன், சீக்கிரமாக இந்திரன்மீது பிரவேசித்தான்; அவனிடமிருந்து விஷயத்தையும் கிரஹித்தான். வ்ருத்ரனால் க்ரஹிக்கப்பட்ட அந்த இந்திரனுக்குப் பெரியமதிமயக்கம் உண்டாயிற்று. வஸிஷ்டர் 'ரதந்தரம்' என்னும் ஸாமத்தால் அவனைப் பிரஜ்ஞையை அடையும்படி செய்தார். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, இந்திரன் (தன்) சரீரத்திலிருக்கும் வ்ருத்ரனைக் காணக்கூடாத வஜ்ரத்தால் கொன்றான்' என்று நமக்குக் கேள்வி. அரசரே! தர்மத்தைக் கொடுப்பதும் ரஹஸ்யமுமான இந்தச்சரித்ரமானது இந்திரனால் மஹரிஷிகளுக்குச் சொல்லப்பட்டது. ரிஷிகள் எனக்குச் சொன்னார்கள். அதனை நீர் தெரிந்துகொள்ளும்.

## பன்னிரண்டாவது அத்யாயம்.

## அச்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(மாதவர் உடம்பைப்பற்றியதும் மனத்தைப்பற்றியதுமான நோய்களைப் போக்கும் உபாயத்தை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)**

சாரீரம் மானஸம் என்று இரண்டு விதமான வியாதிகள் உண்டாகின்றன. அவைகளின் பிறப்பானது ஒன்றோடொன்று சேர்ந்து இரட்டையாகவன்றி உண்டாகிறதில்லை. சரீரத்தில் உண்டாகும் வியாதி சாரீரமென்றும் மனத்தில் உண்டாகும்வியாதி மானஸமென்றும் சொல்லப்படுகின்றன. அரசரே! [1]சீதமும் உஷ்ணமும் வாயுவும் சரீரத்திலுண்டான குணங்கள். அக்குணங்கள் ஸமமாக இருந்தால், அதை (ஆத்மா) தன்னிலைமையில் இருப்பதற்கு அடையாளம் என்று சொல்லுகிறார்கள். உஷ்ணத்தால் சீதமும் சீதத்தால் உஷ்ணமும் தடுக்கப்படுகின்றன. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்றும் ஆத்மாவின் குணங்களாகக் கருதப்படுகின்றன. அந்தக்குணங்கள் ஸமமாக இருந்தால் அதனை (ஆத்மா) ஸ்வஸ்தனாக இருப்பதற்கு அடையாளமாகச் சொல்லுகிறார்கள். அவைகளுள் ஒன்று விருத்தியடைந்தால் (அதை அடக்க) உபாயம் உபதேசிக்கப்படுகிறது. மகிழ்ச்சியால் சோகமும் சோகத்தால் மகிழ்ச்சியும் பாதிக்கப்படுகின்றன. துக்கத்தை அனுபவிக்கும் ஒருவன் (முன்சென்ற) ஸுகத்தையும் ஸுகத்தை அனுபவிக்கும் ஒருவன் (முன்சென்ற) துக்கத்தையும் நினைக்கவிரும்புகிறான். குந்தியின் புத்திரரே! நீர் துக்கத்தை அனுபவிக்கும்போது (அந்தத்)துக்கத்தையும், ஸுகத்தை அனுபவிக்கும்போது(அந்த)நல்ல ஸுகத்தையும் நினைக்க விரும்பவேண்டாம். தெய்வமானது மிக்கபலமுள்ளதன்றோ? பார்த்தரே! அல்லது, இது உம்முடையஇயற்கை. அதனால், நீர் இழுக்கப்படுகிறீர். பாண்டவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போது, ஸபையை அடைந்தவளும் ஒற்றை வஸ்திரம் தரித்தவளும் வீட்டுக்கு விலக்கானவளுமான திரௌபதியைப் பார்த்ததை நீர் நினைக்க விரும்பாதீர். பட்டணத்தினின்று வெளியில் செல்லும்படி செய்யப்பட்டுக் கிருஷ்ணாஜினம் தரித்துப் பெரியகாடுகளில் வாஸம்செய்ததை நினைக்க விரும்பாதீர். ஜடாஸுரனிடத்தினின்றுண்டான துன்பத்தையும் சித்ரஸேனனோடுநேர்ந்த யுத்தத்தையும் ஸைந்தவனித்திடனின்றும் உண்டான துன்பத்தையும் நினைக்க விரும்பா

---

1 கபமும் பித்தமும் என்பது பழைய உரை.

தீர். பார்த்தரே! மேலும், அஜ்ஞாதவாஸம் செய்யும்போது கீசகன் திரௌபதியைக் காலாலுதைத்ததை நினைக்கவிரும்பாதீர். பகைவரை அடக்குபவரே! துரோணருடனும் பீஷ்மருடனும் உமக்கு யுத்தம் நேர்ந்ததுபோல, அகங்காரமொன்றுடன் செய்யவேண்டிய யுத்தமானது உமக்கு ஸமீபித்திருக்கிறது. பரதர்களுள் சிறந்தவரே! ஆகையால், நீர் யுத்தத்திற்கு ஸஜ்ஜமாக இருக்கவேண்டும். அவ்யக்த ரூபமான மனத்தினுடைய அக்கரையை யோகத்தாலும் உமது கர்மங்களாலும் அடைவீராக. பாணங்களாலும் வேலைக்காரர்களாலும் பந்துக்களாலும் செய்யத்தகாததும் ஆத்மா ஒன்றுமே செய்யத்தக்கதுமான அந்த யுத்தம் உமக்கு ஸமீபித்திருக்கிறது. யுத்தத்தில் அந்தமனத்தை ஜயிக்காவிட்டால் துக்கப்படும் நிலைமையை அடைவீர். கௌந்தேயரே! நீர் இதைத் தெரிந்துகொண்டால் கிருதகிருத்யராகிவிடுவீர்; இந்தப்புத்தியையும் பிராணிகளின் உத்பத்தி லயங்களையும் நன்கு நிச்சயித்துத் தகப்பன் பாட்டன்மார்களின் நடையை அனுஸரித்து ராஜ்யத்தை உசிதமாக ஆளுவீராக.

---

பதின்மூன்றுவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



(மாதவர் ஆசை வெல்லற்கரிதென்பதையும் அதனை வெல்லுமுபாயத்தையும் யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

பாரதரே! வெளியிலுள்ள பொருளை விடுவதால் ஸித்திஉண்டாகிறதில்லை. சரீரத்திலுள்ள காமமுதலிய பொருளைவிட்டால் ஸித்தியானது உண்டாகும்; [1]உண்டாகாமலும் இருக்கும். வெளியிலுள்ள பொருள்களில் பற்றற்றும், சரீரத்திலுள்ள (காமம் முதலிய) வைகளில் பற்றுள்ளவனுக்கு உண்டாகும் தர்மமும் ஸுகமும் உம்முடைய பகைவர்களுக்கு உண்டாகட்டும். இரண்டு அக்ஷரம் ஸம்ஸாரத்திற்குக் காரணமாகும். மூன்று அக்ஷரம் சாஸ்வதமான பிரம்மத்தை அடையக் காரணமாகும், [2]'மம'என்னும் இரண்டக்ஷரம் ஸம்ஸாரத்திற்குக் காரணமாகும்; [3]'நமம' என்பது சாஸ்வதமான பிரம்மத்தை

1 விவேகமில்லாதவனுக்கு ஸித்தி உண்டாகாது.

2 'என்னுடையது' என்பது பொருள்.

3 'என்னுடைய தன்று' என்பது பொருள்

அடையக் காரணமாகும். அரசரே! ஆகையால், பிரம்மத்திற்குக்கார ணமான பற்றின்மையும் ஸம்ஸாரத்திற்குக்காரணமான பற்றும் சித் தத்திலேயே காணப்படாமலிருந்துகொண்டு பிராணிகளைச் சண்டை யிடும்படி செய்கின்றன. ஸம்சயமில்லை. பாரதரே! இந்த ஆத்மதத்வத் திற்கு அழிவில்லையென்று நிச்சயமாகத் தெரிந்துகொண்டால், அவன் பிராணிகளின் சரீரத்தைப் பிளந்தாலும் ஹிம்ஸை செய்தவனாகான். ஸ்தாவரஜங்கமங்களுடன் கூடின பூமிமுழுதையும் அடைந்தும் மமதையே இல்லாமலிருப்பவனை அந்தப் பூமியானது என்ன செய்யும்? குந்திபுத்திரரே! அல்லது, காட்டிலுள்ளவற்றைப் புஜித்துக்கொண்டு காட்டில் வஸித்தாலும் பொருள்களில் மமதை விலகாதவன் மிருத்யுவின்வாயில் இருப்பவனாவான். பாரதரே! வெளி யிலும் உள்ளிலுமுள்ள பகைவர்களின் ஸ்வபாவத்தைப் பாரும் அதை அநாதியாயுள்ளதாகப் பாராதவன், பெரிய பயத்தைத் தரக் கூடிய ஸம்ஸாரத்தினின்று விடப்படுவான். உலகத்தில் ஆசையுள்ள மனமுள்ளவனை (ப்பெரியோர்கள்) புகழ்கிறதில்லை. இவ்வுலகில் ஆசை யில்லாமல் ஒரு பிரவ்ருத்தியும் இல்லை. ஐயா! எல்லாக்காமங்களும்மன த்தினின்றும் உண்டாகின்றன. அவைகளைப் பண்டிதனை யோகியான வன் அடிக்கடி ஜன்மங்களில் (மனத்தை அடக்கிய)பழக்கத்தால் யோ கத்தை மோக்ஷமார்க்கமாகக் கருதித் தானத்தையும் வேதாத்யயனத் தையும்தவத்தையும் காம்யமானகர்மங்களையும் வைதிககர்மங்களையும் வ்ரதத்தையும் யஜ்ஞங்களையும் நியமங்களையும் த்யானயோகங்களையும் பயனில் ஆசையின்றிச் செய்து, 'மனிதன் பயனில் ஆசைப்படுவது தர்மமன்று; ஆசையை அடக்குவது தர்மம். அது (மோக்ஷத்திற்குக்) காரணம்' என்று ஆலோசித்துத் தெரிந்து அடக்குகிறான். யுதிஷ் டிரரே! இந்த விஷயத்தில், பூர்வவ்ருத்தாந்தம் தெரிந்தவர்கள் காம னால் பாடப்பட்ட காதைகளைச் சொல்லுகின்றனர். அவைகளை முழு தும் சொல்லுகிறேன்; கேள். (அவற்றின் பொருளாவது,) 'காமன், 'ஒரு பிராணியாலும் உபாயமின்றி என்னைக் கொல்லமுடியாது. எவன் [1]ஆயுதத்திலுள்ள பலத்தைத் தெரிந்து என்னைக் கொல்ல முயற்சிசெய்கிறானோ அவனுடைய அந்த [2]ஆயுதத்தில் நான் மறுபடி யும் தோன்றுகிறேன். எவன் என்னைப் பலவித தக்ஷிணைகளுள்ள யாகங்களால் கொல்ல முயற்சி செய்கிறானோ, தர்மாத்மாவானவன் ஜங்கமங்களுள் (உயர்ந்த ஜாதியில்) பிறப்பதுபோல நான் மறுபடி

1 ஜபாதி சாஸ்திரம். 2 மனம்.

யும் அவனுடைய (சித்தத்தில்) தோன்றுகிறேன். எவன் என்னை வேதங்களாலும் வேதாந்தத்தில் சொல்லியஸாதனங்களாலும் கொல்ல முயற்சி செய்கிறானோ அவனிடத்தில் ஜீவன் ஸ்தாவரங்களில் தோன்றுவதுபோல நான் தோன்றுகிறேன். உண்மையான பராக்ரமமுள்ளஎவன் என்னைத் தைர்யத்தினால் கொல்ல முயற்சி செய்கிறானோ அவனுடைய சித்தமாக நான் ஆகிறேன். அவனும் என்னைத் தெரிந்துகொள்ளுகிறானில்லை. கடுமையான வ்ரதமுள்ள எவன் என்னைத் தவத்தால் கொல்ல முயற்சி செய்கிறானோ, அவனுடைய தவத்தில், பிறகு, நான் மறுபடியும் தோன்றுகிறேன். எந்தப் பண்டிதன் மோக்ஷத்தைக் கருதி என்னைக் கொல்ல விரும்புகிறானோ, மோக்ஷத்தில் ஆசையுள்ள அவனிடத்தில் நான் நர்த்தனம் செய்கிறேன்; நகைக்கிறேன். எப்போதுமுள்ளநான் ஒருவனே ஒரு பிராணியினாலும்கொல்லமுடியாதவன்' என்றான்' என்பது. மஹாராஜரே! ஆகையால், நீரும் பலவகைத்தக்ஷிணைகளுள்ளயாகங்களால் அந்தக் காமத்தைத் தர்மத்தில் செலுத்தும். அந்தக் காமம் உமக்குத் தர்மத்தில் உண்டாகும். விதிப்படி தக்ஷிணையுள்ள அஶ்வமேத யாகத்தையும் செல்வம்நிறைந்தவைகளும் போதுமான தக்ஷிணையுள்ளவைகளும் பலவிதங்களுமான மற்றயாகங்களையும் செய்யும். கொல்லப்பட்ட பந்துக்களை அடிக்கடி நினைத்து நீர் துயரப்படாதீர். இந்தயுத்தரங்கத்தில் கொல்லப்பட்டவர்களை உம்மால் மறுபடியும் பார்க்கமுடியாது. அப்படிப்பட்ட நீர் செல்வம் நிறைந்தவைகளும் போதுமான தக்ஷிணையுள்ளவைகளுமான பெரிய யாகங்களைச் செய்து உலகத்தில் பெரியபுகழ்பெற்று மேலான கதியை அடைவீராக' என்றார்.

---

## பதினான்காவது அத்யாயம்.

## அஶ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)

**(வியாஸர் முதலியோர் யுதிஷ்டிரரைத் தேற்றிப் போனதும், யுதிஷ்டிரர் பீஷ்மர் முதலியோருக்கு அபரகாரியங்களைச் செய்து ஹஸ்தினபுரம் வந்ததும்.)**

ராஜரிஷியும் பந்துக்களையிழந்தவருமான யுதிஷ்டிரர் இவ்வாறே தவத்தைத் தனமாகக்கொண்ட அந்த முனிவர்களால் பலவித வாக்யங்களால் தேறுதலடையும்படி செய்யப்பட்டார். அரசரே! (பகைவர்களை) அவமதிப்பவரான அந்த யுதிஷ்டிரர் ஸாக்ஷாத் கிருஷ்ணபகவா

னாலும் த்வைபாயனரென்னும் வியாஸராலும் தேவஸ்தானராலும் நாரதராலும் பீமனாலும் நகுலனாலும் திரௌபதியினாலும் ஸஹதேவனாலும் புத்திமானான அர்ஜுனனாலும் மற்றுமுள்ள புருஷஶ்ரேஷ்டர்களாலும் சாஸ்திரங்களை உணர்ந்தவர்களான பிராம்மணர்களாலும் ஸமாதானம் செய்யப்பட்டுச் சோகத்தாலுண்டான துக்கத்தையும் மனத்திலுண்டான ஸந்தாபத்தையும் விட்டார். அவர் தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜித்தார். குருகுலத்தில் பிறந்தவரும் தர்மாத்மாவுமான அவர், பிறகு, (உறவினர்) அனைவர்களுக்கும் பிரேதகார்யங்களைச்செய்து ஸமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பரிபாலித்தார். மிக்க சாந்தமான மனமுள்ளவரும் குருகுலத்தில் பிறந்தவருமான யுதிஷ்டிரராஜர் பகைவரற்ற தமது ராஜ்யத்தை அடைந்து வியாஸரையும் நாரதரையும் மற்றுமுள்ளவர்களையும் நோக்கி, 'முன்பு நான் பெரியோர்களும் முனிஶ்ரேஷ்டர்களுமான உங்களால் தேற்றப்பட்டேன். இப்பொழுது எனக்கு ஒரு துயரமும் சிறிதுமில்லை. தேவர்களைக் குறித்து யாகம் செய்வதற்கு வேண்டிய மிகவும் அதிகமான பொருளும் அடையப்பட்டது. இப்பொழுது உங்களை முன்னிட்டுக்கொண்டு யாகத்தை நன்கு செய்வோம். பிதாமஹரே! நாங்கள் உம்மால் ரக்ஷிக்கப்பட்டு இமயமலைக்குச் செல்லவேண்டும். பிராம்மணஶ்ரேஷ்டரே! அந்தப் பிரதேசமானது மிக்க ஆச்சர்யகரமென்று கேட்டிருக்கிறோமன்றோ? பகவானான உம்மாலும் தேவரிஷியான நாரதராலும் தேவஸ்தானராலும் விசித்ரமாயும் மங்களகரமாயுமுள்ள அநேக வார்த்தைகள் சொல்லப்பட்டன. பாக்யமற்ற ஒரு மனிதன் வ்யஸனம் வந்தகாலத்தில் நல்லோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவர்களும் ஸுஹ்ருத்துக்களுமான இப்படிப்பட்ட ஆசார்யர்களை அடையமாட்டான்' என்றார். யுதிஷ்டிர ராஜரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த எல்லா மஹரிஷிகளும் அவரிடத்திலும் கிருஷ்ணன் அர்ஜுனன் இருவர்களிடத்திலும் அனுமதிபெற்றுக்கொண்டு அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவ்விடத்திலேயே அந்தர்த்தானமானார்கள். பிறகு, பிரபுவும் அரசருமான தர்மபுத்திரர் அவ்விடத்திலேயே உட்கார்ந்திருந்தார். கௌரவர்களுள் சிறந்தவரே! அப்பொழுது, பீஷ்மர் மரித்த விஷயத்தில் சுத்தியைத் தரும் கார்யங்களைச் செய்வதிலும் பிராம்மணர்களுக்குப் பெரிய தானங்களைக் கொடுப்பதிலும் பீஷ்மர் கர்ணன் முதலான கௌரவர்களுக்கு உத்தரகிரியையைச் செய்வதிலும் பாண்டவர்களுக்கு இவ்விதம் சிறிது காலம் சென்றது. அந்த யுதிஷ்டிரர் திருதராஷ்டிரனுடன்

சேர்ந்து உத்தரக்ரியையைச் செய்தார். பிறகு, பாண்டவஸ்ரேஷ்டரான யுதிஷ்டிரர் பிராம்மணர்களுக்கு மிகுதியான தனத்தைக் கொடுத்துத் திருதராஷ்டிரனை முன்னிட்டுக்கொண்டு ஹஸ்திநபுரம் சென்றார்.

## பதினைந்தாவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



**(யுதிஷ்டிரர் அரசாட்சியில் ஜனங்கள் மிக்க நன்மையடைந்தது.)**

தர்மாத்மாவான அந்த யுதிஷ்டிரர், அறிவையே கண்ணாகக் கொண்டவனும் பிரபுவும் பிதாவுமான திருதராஷ்டிரனை ஸமாதானஞ் செய்து தம்பியர்களுடன் சேர்ந்து பூமியைப் பரிபாலித்தார். பரதஸ்ரேஷ்டரான அவர் மனுவென்னும் மஹாராஜன் போலவும் தசரத குமாரரான ராமர்போலவும் பூமியைப் பரிபாலித்தார். புருஷஸ்ரேஷ்டரே! அப்பொழுது கிருதயுகத்திற்போல அதர்மமான காரியம் நடக்கவேயில்லை. எல்லா ஜனங்களும் தர்மத்தில் பிரியமுள்ளவர்களாயிருந்தார்கள். ராஜகுமாரரும் புத்தியுள்ளவரும் தர்மபலத்தை அதிகமாகக்கொண்டவருமான யுதிஷ்டிரர் நெருங்கிப் பிரவேசிக்க விரும்பிய கலியைத் தடுத்துப் பிராதாக்களுடன் விளங்கினார். பகவானான இந்திரன் (தகுந்த) காலத்திலும் (தகுந்த) தேசத்திலும் வேண்டிய அளவு மழைபொழிந்தான். உலகம் வியாதியற்றிருந்தது. பசியும் தாகமும் சிறிதுமில்லை. மனுஷ்யர்களுக்கு மனோவ்யாதியில்லை. புத்தி (சூதாட்டம் முதலிய) வியஸனத்தில் செல்லவில்லை. பிராம்மணர்முதலான வர்ணங்கள் தம்தம் தர்மத்தை மேலாகக்கொண்டு க்ஷேமமாகவும் தர்மத்தையும் ஸத்யத்தையும் பிரதானமாகக் கொண்டவைகளாகவும் இருந்தன. ஸத்யமானது நல்ல விஷயத்துடன் சேர்ந்திருந்தது. தர்மாஸனத்திலிருப்பவரும் வித்வான்களுடன் கூடினவருமான அந்தயுதிஷ்டிரர் ஜீவனமில்லாதவர்களுக்கு ஜீவனத்தைக்கொடுப்பது முதலானவைகளாலும் யாகம்முதலானவைகளாலும் மனக்கவலையில்லாமல் செய்வதாலும் ஸ்த்ரீகளையும் பாலர்களையும் ரோகிகளையும் முதியோர்களையும் வர்ணமுறைப்படி நன்கு போஷித்து, முழுதும் ரக்ஷிக்க முயன்றார். பரலோகபயம் இல்லை. இவ்வுலகத்திய ஸௌக்யமோ முன்பே செய்யப்பட்டுவிட்டது. அந்த யுதிஷ்டிரர் ராஜ்யபரிபாலனம் செய்யும்

பொழுது உலகம் ஸ்வர்க்கம்போன்றதாக இருந்தது. உயர்ந்த ஸுகமே மேலிட்டு மிக அதிகமாக இருந்தது. ஸ்திரீகளெல்லாரும் பதிவ்ரதைகளும் நல்ல அழகுள்ளவர்களும் நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களும் சாஸ்திரத்தில் சொல்லியபடி ஒழுக்கமுள்ளவர்களும் தம் குணங்களால் ப்ரீதிக்குக் காரணர்களுமாக இருந்தனர். புருஷர்கள் பரிசுத்தமானஸ்வபாவம் நிறைந்தவர்களும் தம்தம் தர்மத்தை அனுஸரித்தவர்களும் ஸுகமுள்ளவர்களும் ஒருபொழுதும் சிறிதும் பாவம்செய்யாதவர்களுமாக இருந்தார்கள். பூமியில் பெரும்பான்மையாக எல்லாப் புருஷர்களும் ஸ்திரீகளும் எப்பொழுதும் பிரியமாகப் பேசுகின்றவர்களும் கபடமற்ற மனமுள்ளவர்களும் சுத்தர்களும் சிரமமில்லாதவர்களும் குண்டலங்களாலும் ஆரங்களாலும் கடகங்களாலும் அரைஞாண்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களும் நல்ல ஆடையுடுத்தவர்களும் நல்லவாஸனை நிறைந்தவர்களுமாக இருந்தார்கள். எல்லாப்பிராம்மணர்களும் பிரம்மவித்துக்களும் எல்லாக் கார்யங்களிலும் தேர்ச்சிபெற்றவர்களும் திரையும் நரையுமில்லாதவர்களும் ஸுகமுள்ளவர்களும் நீண்ட ஆலோசனையுள்ளவர்களுமாயிருந்தார்கள். (புருஷர்களுக்கு) பரஸ்த்ரீகளிடத்திலும் (ஸ்திரீகளுக்குப்) பரபுருஷர்களிடத்திலும் விருப்பம் உண்டாகவில்லை. வர்ணங்களில் ஸாங்கர்யம் என்னும் கலப்பு உண்டாகவில்லை. மஹாராஜரே! மனுஷ்யர்களின் வரம்பு நன்கு நிலைபெற்றிருந்தது. அந்த ராஜ ப்ரேஷ்டர் ராஜ்ய பரிபாலனம் செய்யும்பொழுது மிருகங்களும் துஷ்டயானைகளும் பாம்புகளும் ஒன்று (தன் இனத்தில்) மற்றொன்றையாவது மற்றப்பிராணிகளையாவது ஒருபொழுதும் பீடிக்கவில்லை. பசுக்கள் நல்ல பால்நிறைந்தவைகளாகவும் அழகானவாலும் முகமும் வயிறுமுள்ளவைகளாகவும் கிருஷிகர் முதலியவர்களால் துன்பப்படுத்தப்படாதவைகளாகவும் வியாதியற்ற கன்றுள்ளவைகளாகவும் இருந்தன. புருஷர்கள் புருஷார்த்தங்களில் முறைப்படி காலத்தைப் பயனுள்ளதாகச் செய்பவர்களும் விலக்கப்படாத விஷயங்களிலும் வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் முயற்சியுள்ளவர்களுமாயிருந்தார்கள். காளைமாடுகள் அழகுள்ளவைகளும் கொழுத்தவைகளும் [1]நாக்கினால் பிரகாசிக்கின்றவைகளும் ஸுகமுள்ளவைகளுமாயிருந்தன. சப்தமும் ஸ்பர்சமும் மிக்க மதுரமாகவும், ரஸமானது மிக்க இனிமை

1 'ரஸநாஹா:' என்பது மூலம்,' 'பிரியப்படுத்தும் காந்தியுள்ளவைகள்' என்றும்: 'கயிற்றால் சோபிக்கின்றவைகள்' என்றும்; 'நாபிஸ்தானத்தில் கோரோசனையுள்ளவைகள்' என்றும் கொள்ளலாம்.

யாகவும், ரூபம் பார்க்கத்தக்கதாகவும் அழகாகவும், கந்தமானது மனத்தைக்கவர்கிறதாகவும் விளங்கின. (மனிதர்களின்) மனமானது அறம்பொருளின்பங்களுள்ளதும் மோக்ஷமென்னும் மேன்மைக்கு ஸாதனமாயுள்ளதும் களிப்பை உண்டுபண்ணுகின்றதும் பரிசுத்தமுமாக இருந்தது. விருக்ஷங்கள் அனேகம் புஷ்பங்கள் நிறைந்தவைகளும் கனிகளையும் நிழலையும் கொடுக்கின்றவைகளும் நல்லஸ்பர்சமுள்ளவைகளும் விஷமற்றவைகளும் அழகிய இலைகளும் பட்டையும் தளிர்களுமுள்ளவைகளும் எல்லாருடையமனத்திற்கும் அனுகூலமாயிருப்பவைகளும் பிசாசங்களின்செய்கையற்றவைகளுமாயிருந்தன. ராஜரிஷியான யுதிஷ்டிரர் அவ்விதம் இருந்தார். அவர்நடையே பூமியில் இருந்தது. எல்லாப்பாண்டவர்களும், எல்லாலக்ஷணங்களும் நிறைந்தவர்களும் தர்மத்தைச்செய்பவர்களும் தமையனரான யுதிஷ்டிரரைஅனுஸரிப்பவர்களும் பிரியமான காட்சியுள்ளவர்களுமாயிருந்தார்கள். எல்லாப் பாண்டவர்களும் ஸிம்மத்தினுடைய மார்புபோன்ற மார்புள்ளவர்களும் கோபத்தை வென்றவர்களும் காந்தியும் வன்மையும் பொருந்தினவர்களும் முழந்தாள்வரையில் (நீண்ட) கைகளுள்ளவர்களும் தானம்செய்யும்தன்மையுள்ளவர்களும் ஐம்பொறிகளையும் ஜயித்தவர்களுமாயிருந்தார்கள். அவர்கள் பூமியை ஆளும்பொழுது, ருதுக்கள் தம் குணங்களுடன் விளங்கின. கிரஹங்களும் நக்ஷத்ரகணங்களும் ஸுகத்தை உண்டுபண்ணிக்கொண்டிருந்தன. பூமியும் மிகுதியான பயிர்களுள்ளதும் எல்லா ரத்தினங்களையும் மிக விளைவிப்பதும் காமதேனுவைப்போல ஆயிரம் விதமான போகங்களை [1]விளைவிப்பதுமாக இருந்தது. குலங்களில் ஆசாரங்கள் முன்பு மனுமுதலானவர்களால் மனுஷ்யர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட எல்லா வரம்புகளையும் மீருமல் இருந்தன. (மற்ற) அரசர்கள் யுதிஷ்டிரருக்குப் பிரியத்தைச் செய்பவர்களாக (ப்பூமியை) ஆண்டார்கள். அவர்கள் தர்மத்தில் நிலைபெற்றவர்களும் சிறந்தவம்சங்களை மிகுதியாக விருத்திபண்ணுகிறவர்களுமாக மனுவினுல் ஏற்படுத்தப்பட்ட நடையுடன் பூமியைப் பரிபாலித்தார்கள். பூமியில் அரசர்களுடைய அந்த நடையானது எப்பொழுதும் தர்மத்தில் நிலைபெற்றதாயிருந்தது. ஐயா! ஜனங்களுடைய புத்தியானது பெரும்பான்மையாக மன்னர்களுடைய நடையை அனுஸரித்திருந்தது. இவ்விதம் யுதிஷ்டிரராஜர், காண்டீவமென்னும் வில்லைத் தரித்த அர்ஜுனனுடன், இந்திரன் ஸ்வர்க்கத்தைப் பரிபாலிப்பதுபோலப் பாரதவர்ஷமென்னும் பூமியைப் பரிபாலித்தார்" என்ருர்.

1 'பலதி' என்றிருத்தல்வேண்டும்.

பதினாறுவது அத்யாயம்.

## அஸ்வமேதபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணார்ஜுனர்கள் விளையாடியதும், மாதவர் தாம் ஊருக்குப் போக யுதிஷ்டிரரிடம் விடைகேட்கும்படி அர்ஜுனனுக்குச் சொல்லியதும்.)

ஜனமேஜயர், "பிராம்மணஸ்ரேஷ்டரே! பாண்டவர்கள் ராஜ்யத்தைஜயித்துச் சோகம் தணிந்தபின், வீரர்களான வாஸுதேவரும் தனஞ்சயனும் [1]என்ன செய்தார்கள்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"வேந்தரே! பாண்டவர்கள் ராஜ்யத்தை ஜயித்து யுதிஷ்டிர ராஜருக்கும் சோகந்தணிந்தபின், வாஸுதேவரும் தனஞ்சயனும் ஸந்தோஷமுள்ளவர்களானார்கள். மஹாத்மாக்களான அந்தக் கிருஷ்ணனும் தனஞ்சயனும் இந்திரப்பிரஸ்தத்தில், ஸுவர்க்கத்தில் இரண்டு தேவராஜர்கள்போல ஸந்தோஷமுள்ளவர்களாகவும், விசித்திரமான வனங்களிலும் மலைகளிலும் தாழ்வரைகளிலும் புண்ய தீர்த்தங்களிலும் தடாகங்களிலும் நதிகளிலும், நந்தவனத்தில் அஸ்வினீதேவர்கள் ஸஞ்சரிப்பது போல ஸந்தோஷத்துடன் ஸஞ்சரிப்பவர்களாகவும் ஆனந்தமடைந்தார்கள். பாரதரே! அரசரே பிரீதியுள்ளவர்களும் மஹாத்மாக்களும் [2]புராதனர்களும் ரிஷிஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவர்களும் அழகான அந்த ஸபையில் பிரவேசித்து உலாவி, எப்பொழுதும் கதைகள் சொல்லும் ஸமயங்களிலெல்லாம் விசித்திரமான யுத்தகதைகளையும் சிரமங்களையும் ரிஷிகள் தேவர்கள் இவர்களுடைய வம்சங்களையும் சொல்லிக்கொண்டார்கள். நிச்சயத்தைத் தெரிந்தவரான அந்தக் கேசவர் பார்த்தனுக்கு இனிமையானவைகளும் விசித்திரமானவைகளும் விசித்ரமான அர்த்தமும் பதமும் நிச்சயமுமுள்ளவைகளுமான கதைகளைச் சொன்னார். சூரகுலத்திலுதித்தவரான ஜனார்த்தனர், புத்திரர்கள் ஆயிரக்கணக்கான ஞாதிகள் இவர்களுடைய (மரணத்தாலுண்டான) சோகத்தால் மிக்க தாபத்தை அடைந்திருக்கும் அர்ஜுனனைக் கதைகளால் தேறுதல் அடையச்செய்தார். விதிப்படி செய்யவேண்டியவைகளை அறிந்தவரும் சிறந்ததவமுள்ளவருமான அந்தவாஸுதேவர் அந்த அர்ஜுனனைத் தேறுதலடையும்படிசெய்து தமதுபாரத்தை நிவிருத்திசெய்து இளைப்

---

1 வேறுபாடம்: 2 நரநாராயணர்கள்.

பாறினவர்போலிருந்தார். பிறகு, அவர் கதையின் முடிவில் அர்ஜுன னை நோக்கி மிருதுவான வார்த்தையால் ஸமாதானம் செய்துகொண்டு பின்வருமாறு காரணங்களுள்ள வார்த்தையைச் சொல்லலானார்.

'ஸவ்யஸாசியே! பகைவரை வாட்டுகிறவனே! அரசரான தர்மபுத்ரர் உன்னுடைய கைவன்மையையடுத்து இந்தப்பூமி முழு தையும் ஜயித்தார். புருஷர்களுள் சிறந்தவனே! தர்மராஜரான யுதி ஷ்டிரர் பீமஸேனன் நகுலஸஹதேவர்கள் இவர்களுடைய பிரபாவத் தால் பூமியைப் பகைவரற்றதாக அனுபவிக்கிறார். யுதிஷ்டிரமஹாராஜர் தர்மத்தால் பகைவரற்ற ராஜ்யத்தை அடைந்தார். அந்த ராஜாவான துர்யோதனனும் தர்மத்தால் போரில் கொல்லப்பட்டான். எப்பொ ழுதும் அதர்மத்தில் பிரியமும் பேராசையுமுள்ளவர்களும் அப்பிரிய மாகப் பேசுகின்றவர்களும் துராத்மாக்களுமான திருதராஷ்டிரபுத் திரர்கள் பரிவாரங்களுடன் கொல்லப்பட்டார்கள். குந்தியின் புத்திர னே! கௌரவர்களுள் சிறந்தவனே! அரசரான தர்மபுத்திரர் உன்னால் ரக்ஷிக்கப்பட்டுப் பூமிக்குப் பதியாகிக் கலகம்தணிந்த பூமிமுழுதையும் அனுபவிக்கிறார். பாண்டவ! பகைவரையழிப்பவனே! நானும் உன்னு டன் அரண்யங்களிலும் மகிழ்கிறேன்; இந்த ஜனங்களும் குந்தியு முள்ள இடத்தில் மகிழ்கிறேனென்பதில் என்ன ஸந்தேஹம்? ராஜா வான தர்மபுத்திரரும் பிக்கவன்மையுள்ள பீமஸேனனும் மாத்ரீபுத்தி ரர்களான நகுலஸஹதேவர்களும் வஸிக்குமிடத்தில் (வாஸம்செய்ய) ஆசை அதிகம். கௌரவனே! குற்றமற்றவனே! உன்னுடன் சேர்ந்து ஸ்வர்க்கத்திற்கு [1]ஒப்பான ஸபைகளிலும் அழகாயிருப்பவைகளும் புண்யத்தைக்கொடுப்பவைகளுமான இடங்களிலும் வஸிக்கும்எனக்கு வஸுதேவரையும் பலராமரையும் மற்றுமுள்ள விருஷ்ணி ஶ்ரேஷ்டர் களையும்பாராமல் நீண்டகாலம் சென்றுவிட்டது. நான் துவாரகாநக ரத்திற்குப் போகவிரும்புகிறேன். புருஷஶ்ரேஷ்டனே! நான் போகிற தை நீ பிரியமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். சோகத்தால் இளைத்தவ ரானயுதிஷ்டிரராஜருக்கு நாமும் பீஷ்மரும் அந்த அந்தக்காலங்களில் தகுந்தவையான பலவித ஸமாதானங்களைச் சொன்னோம். உபதேசிப் பவராக இருந்தாலும் பாண்டவரான யுதிஷ்டிரர் எங்களால் உப தேசிக்கப்பட்டார். சிறந்த மஹாத்மாவான அவர் அந்த வார்த்தை யை நன்றாக ஏற்றுக்கொண்டார். தர்மத்தையும் நன்றியையும் அறிந்தவரும் உண்மை உரைப்பவருமான தர்மபுத்திரரிடத்திலோ உண்மையும் தர்மமும் சிறந்த புத்தியும் மரியாதையும் எப்பொழுதும்

1 வேறுபாடம்

நிலைத்திருக்கின்றன. அர்ஜுன! உனக்கு இஷ்டமிருந்தால் அங்கே சென்று மஹாத்மாவான அந்த யுதிஷ்டிரராஜரிடம் நாம் போகும் விஷயத்தைப்பற்றிய வார்த்தையைச் சொல். உயிர் போகும்படி நேர்ந்தாலும், அவருக்குப் பிரியமில்லாத கார்யத்தைச் செய்யமாட்டேன். நீண்ட கைகளுள்ளவனே! துவாரகா பட்டணத்திற்குப் போவது அவருக்கு அப்பிரியமாயிருந்தால் செய்யமாட்டேனென்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பார்த்த! நான் இவற்றையெல்லாம் உனக்குப் பிரியத்தையும் நன்மையையும் விரும்பிச்சொல்லுகிறேன். கௌரவ்ய! இது உண்மை. எவ்விதத்திலும் பொய்யன்று. அர்ஜுன! நான் இங்கு வஸிப்பதாலாகிய பிரயோஜனமும் நிறைவேறிற்று. துர்யோதனராஜன் சேனையுடனும் பரிவாரங்களுடனும் கொல்லப்பட்டான். ஐயனே! பாண்டவ! கடலை ஆடையாகக் கொண்டதும் மலைகளுடனும் பூந்தோட்டங்களுடனும் காடுகளுடனும் கூடியதும் பலவித ரத்தினங்கள் நிறைந்ததுமான பூமியும், புத்தியுள்ளவரும் குருராஜருமான தர்மபுத்திரருடைய வசத்தில் நிலைபெற்றது. பரதஶ்ரேஷ்டனே! தர்மங்களை அறிந்தவரான யுதிஷ்டிரராஜர், மஹாத்மாக்களான முனிவர்களாலும் ஸித்தர்களாலும் உபாஸிக்கப்படுகிறவரும் வந்திகளால் எப்பொழுதும் ஸ்தோத்திரம் செய்யப்படுகிறவருமாயிருந்துகொண்டு, பூமிமுழுதையும் தர்மத்தால் ரக்ஷிக்கட்டும். கௌரவஶ்ரேஷ்டனே! நீ, இப்பொழுது, கௌரவர்களை வ்ருத்திசெய்கின்றவரும் அரசருமான அந்த யுதிஷ்டிரரிடம் என்னுடன் வந்து நான் துவாரகைக்குப் போக வேண்டியதைப்பற்றி உத்தரவுகேள். பார்த்த! கௌரவர்களுக்கு அதிபரும் சிறந்த புத்தியுள்ளவருமான யுதிஷ்டிரர், எப்பொழுதும் எனக்கு அன்புள்ளவரும் பூஜிக்கத்தக்கவருமாயிருப்பவர். ஆகையால், என்னுடைய இந்தச் சரீரத்தையும் வீட்டிலுள்ள தனத்தையும் எப்பொழுதும் யுதிஷ்டிரரிடத்தில் அர்ப்பணம் செய்திருக்கிறேன். ராஜகுமார! நான் (இங்கு) வஸிப்பதற்கு உன்னுடன் சேர்ந்திருப்பதைத் தவிர (வேறு) பிரயோஜனமும் இல்லை. பார்த்த! பூமியானது, உன்னுடைய குருவும் நல்ல நடையுள்ளவருமான யுதிஷ்டிரருடைய கட்டளைக்கு உட்பட்டிருக்கிறது' என்றார். அரசரே! அப்பொழுது மஹாத்மாவான ஜனார்த்தனர் இவ்விதம் சொல்ல, அளவற்ற பராக்கிரமமுள்ளவனான அர்ஜுனன் அவரைப் பூஜித்துத் துக்கத்துடன் 'அப்படியே ஆகட்டும்' என்ற வாக்கியத்தைச் சொன்னான்" என்றார்.

அஶ்வமேத பர்வம் முற்றிற்று.

---

பதினேழாவது அத்யாயம்.

# அநுகீதா பர்வம்.

**(அர்ஜுனன் கீதையை மறுபடியும் உபதேசிக்கும்படி கோவிந்தரைக் கேட்டதும், அவர் ஸித்தகாஸ்யப ஸம்வாதத்தைக் கூறியதும்.)**

ஜனமேஜயர், "பிராம்மணரே! பகைவர்களைக் கொன்றுவிட்டு அச்சபையில் வஸிக்கின்றவர்களும் மஹாத்மாக்களுமான கிருஷ்ணார்ஜுனர்களுள் என்ன பேச்சு நடந்தது?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"பார்த்தன் பகைவரற்றதான தனது ராஜ்யத்தை அடைந்து வாஸுதேவருடன் சேர்ந்து ஸந்தோஷமுள்ளவனாகத் திவ்யமான அந்த ஸபையில் விளையாடினான். அரசரே! அவ்விருவரும் ஸந்தோஷமுள்ளவர்களாகச் சுற்றத்தார்களால் சூழப்பட்டு ஸ்வர்க்கத்திற்கொப்பான அச்சபையின் ஓரிடத்திற்குத் தற்செயலாகச் சென்றார்கள். பிறகு, பாண்டு குமாரனான அர்ஜுனன் வாஸுதேவருடன் அழகான அச்சபையைப் பார்த்து ஸந்தோஷமடைந்து பின்வரும் வசனத்தைச் சொல்லலானான். 'நீண்ட கைகளுள்ளவரே! தேவகியின் மைந்தரே! யுத்தம் நேர்ந்த பொழுது உம்முடைய மகிமையையும் ஈஸ்வரஸ்வரூபத்தையும் நான் தெரிந்துகொண்டேன். கேசவரே! புருஷஸ்ரேஷ்டரே! முன்பு நீர் அன்புடன் சொன்ன விஷயத்தையெல்லாம் மனத்தில் கவலையுற்ற நான் மறந்துவிட்டேன். எனக்கு அந்த விஷயங்களை அடிக்கடி (கேட்க) மிக்க ஆவா இருக்கிறது. மாதவரே! நீரோ சீக்கிரத்தில் துவாரகைக்குப் போகிறவர்போல இருக்கிறீரே' என்றான். இவ்வாறு சொல்லக் கேட்டவரும் சிறந்த தேஜஸுள்ளவரும் பேசுகிறவர்களுள் சிறந்தவருமான வாஸுதேவர் அந்த அர்ஜுனனைத் தழுவி மறுமொழி கூறலானார். 'பார்த்த! நான் உனக்குரஹஸ்யமும் ஸனாதனமுமான தர்மத்தின் ஸ்வரூபத்தையும் சாஸ்வதமான எல்லா உலகங்களையும் சொல்லித் தெரிவித்தேன். நீ புத்திக்குறைவால் அதனை மனத்தில்தரிக்காதது எனக்கு மிகப்பெரிய அப்பிரியமாக இருக்கிறது. இப்பொழுது, மறுபடியும் அது எனக்கு நினைவுக்கு வரமாட்டாது. பாண்டவ! நீ ஸ்ரத்தையில்லாதவனும் புத்திகெட்டவனுமாயிருக்கிறாய். இது நிச்சயம். தனஞ்சய! மறுபடியும், முழுதும் சொல்ல முடியாது. அந்தத்தர்மமோ ப்ரம்மத்தின் ஸ்தானத்தை அறிவதற்கு

மிகவும்போதுமானது. அதனை முழுதும் மறுபடியும் அவ்வாறே சொல்ல என்றால் முடியாது.நான் சித்தத்தை ஒருவழிப்படுத்தி அந்தப்பரப் பிரம்மத்தையன்றோ சொன்னேன்? ஆனால்,(இப்பொழுது)அந்த விஷயத்தில் புராதனமான ஓர் இதிஹாஸத்தைச் சொல்லுகிறேன். அதனைத் தெரிந்துகொண்டால் மேலான கதியைப் பெறுவாய்.தர்மத்தைச் செய்கிறவர்களுள் சிறந்தவனே! எல்லாவற்றையும் நான் சொல்லுகிறேன்; கேள். பகைவரை அடக்குபவனே! (ஒருவராலும்) அவமதிக்க முடியாத ஒரு பிராம்மணர் ஸ்வர்க்கலோகத்திற்கும் பிரம்மலோகத்திற்கும் போய்விட்டு வந்தார். அவரை நாம் பூஜித்தோம். பரதஶ்ரேஷ்டனே! பார்த்த! நம்மால் வினவப்பட்ட அவர், திவ்யமான முறையுடன் சொல்லிய அதனைச் சொல்லுகிறேன்; கவலையின்றிக் கேள்.

பிராம்மணர் சொல்லியது:—'வாஸுதேவரே!மஹாத்மாவே!பிராணிகளிடம் கருணையால் எனதுமோஹத்தை நீக்கிய எந்த மோக்ஷதர்மத்தைப்பற்றி என்னிடம் கேட்டீரோ அதனை நான் உமக்கு உள்ளபடி சொல்லுகிறேன். மாதவரே! நான் சொல்லும்போது ஜாக்ரதையுடன் கேளும். தவமுள்ளவரும் தர்மத்தை நன்கு உணர்ந்தவருமான காஶ்யபரென்னும் ஒரு பிராமணர், தர்மங்களைப்பற்றிய சாஸ்திர ரஹஸ்யத்தை அறிந்தவரும் எல்லா வேதங்களையும் அறிந்தவரும் சாஸ்திரத்தாலுண்டான ஞானத்தின் முடிவையும் யோகத்தாலுண்டான ஞானத்தின் முடிவையும் அடைந்தவரும் உலகத்தின் தத்வார்த்தத்தில் ஸமர்த்தரும் ஸுக துக்கங்களை அறிந்தவரும் பிறவிகளை நினைக்கும் தத்வத்தை அறிந்தவரும் புண்ய பாவங்களை அறிந்தவரும் உயர்ந்தனவும் தாழ்ந்தனவுமான பிராணிகளுக்குக் கர்மங்களாலுண்டான கதியைக் கண்டவரும் முக்தன்போல ஸஞ்சரிப்பவரும் ஸித்தரும் மிக்க அடக்கமுள்ளவரும் இந்திரியங்களை அடக்கினவரும் பிரம்மதேஜஸினால் ஜ்வலிப்பவரும் எங்கும் ஸஞ்சரிப்பவருமான ஓர் பிராம்மணரை அடைந்தார்.மேதாவியும் பிராம்மணஶ்ரேஷ்டருமான அந்தக் காஶ்யபர் அந்த அந்தணரை அந்தர்த்தானகதியை அறிந்தவரும், மறைந்திருப்பவர்களும் [1]சக்ரத்தைத் தரிப்பவர்களுமான ஸித்தர்களுடன் செல்பவரும், ஏகாந்தத்தில் அவர்களுடன் பேசிக்கொண்டு உட்கார்ந்திருப்பவரும் காற்றுப்போலப் பற்றுதலின்றித் தற்செயலாகச் செல்லுகின்றவருமாயிருப்பதாகக் கேள்வியுற்று அருகில்சென்று தர்மத்தை விரும்பி மிக்க அமைதியும் சிறந்த பக்தியுமுள்ளவராக

1 'வட்டமாகச் சூழ்ந்திருப்பவர்களுமான' அல்லது 'கூட்டமாகச் செல்லுகின்ற' என்றும் கொள்ளலாம்.

அப்பொழுது அவருடைய பாதங்களில் விதிப்படி நமஸ்கரித்தார். காஸ்யபரானவர், ஆச்சர்யமாக இருப்பவரும் பிராம்மணஸ்ரேஷ்டருமான அவரைக்கண்டு வியப்புற்றுச் சிறந்த பணிவிடையால் குருவான அவரை ஸந்தோஷப்படுத்தினர். காஸ்யபர், ஆவையனைத்தையும் ஏற்றுக்கொண்டவரும் கல்வியும் நல்லொழுக்கமும் பொருந்தியவருமான அவரைக் குருவுக்குச் செய்யவேண்டியதைச்செய்து[1] அந்தரங்கத்துடன் ஸந்தோஷப்படுத்தினர். ஜனார்த்தனரே! அந்தக் குருவானவர் மனமகிழ்ந்து கிருபையுடன் சிஷ்யரான அந்தக் காஸ்யபருக்குச் சிறந்த ஸித்தியை நன்றாகப் பார்த்து எதைச் சொன்னரோ அதை என்னிடமிருந்து கேளும். அந்தஸித்தர் சொல்லலானர்:—

'ஐயா! மனிதர்கள் பலவித கர்மங்களால் இவ்வுலகில் அடையவேண்டியதையும் தனித்த புண்ணியங்களால் தேவலோகத்தில் இருப்பையும் அடைகிறார்கள்; ஓரிடத்திலும் அழிவற்ற ஸுகத்தை அடைகிறதில்லை; ஓரிடத்திலும் சாஸ்வதமாக இருக்கிறதில்லை; ஸ்ரமப்பட்டு அடையப்பட்ட பெரியஸ்தானத்தினின்றும் அடிக்கடி நழுவுதல் ஏற்படுகிறது. காமமும் கோபமும் சூழ்ந்தவனும் ஆசையால் மதிமயக்கமுள்ளவனுமான நான் பாவங்களைச்செய்து கஷ்டங்களும் அசுபங்களுமான கதிகளை அடைந்தேன்; அடிக்கடி மரணத்தையும் அடிக்கடி ஜனனத்தையும் அடைந்தேன்; பலவித ஆகாரங்களைப் புஜித்தேன். பலவகை ஸ்தனங்களைப் பானம் செய்தேன்; பலவகையான தாய்களையும் வெவ்வேறுவிதமான தந்தைகளையும் பார்த்தேன். குற்றமற்றவனே! விசித்ரமான ஸுகங்களையும் துக்கங்களையும் நான் அனுபவித்தேன். பலமுறை பிரியர்களை விட்டுப் பிரிந்தும் ப்ரியமில்லாதவர்களுடன்சேர்ந்தும் வஸித்தேன். ஸ்ரமப்பட்டுத் தனத்தை ஸம்பாதித்து அந்தத்தனத்தைப் பறிகொடுத்தேன். உறவினரிடமிருந்தும் பிறரிடமிருந்தும் மிகக் கஷ்டமான அவமானங்களையும் மிகக் கொடியவைகளும் சரீரத்திலும் மனத்திலும் உண்டானவைகளுமான துன்பங்களையும் உக்கிரமானவையும் பொறுக்க முடியாதவையுமான கட்டுவது கொல்லுவது என்னும் அவமானங்களையும் அடைந்தேன். யமலோகத்தில் நரகத்தில் விழுந்து துன்பங்களை அனுபவித்தேன். நான் இவ்வுலகில் மூப்பையும் ரோகங்களையும் (விருப்பு வெறுப்புக்கள் முதலிய) த்வந்த்வங்களாலுண்டான அநேக வ்யஸனங்களையும் எப்பொழுதும் மிக அனுபவித்தேன்.

1 வேறுபாடம்.

பிறகு, ஒரு ஸமயம் [1]மிக அவமதிக்கப்பட்டவனும் மிக்க துயரத்தால் பீடிக்கப்பட்டவனுமான நான் ஒழிவையடைந்து [2] லோகவ்யவஹாரத்தை விட்டேன். நான் இவ்வுலகில் இந்த (ஸித்த) மார்க்கத்தைத் தெரிந்து அப்யஸித்தேன். அதனால், நான் மனந்தெளிந்து இந்த ஸித்தியை அடைந்தேன். நான் மறுபடியும் இவ்வுலகத்திற்கு வரமாட்டேன். பிரஜைகளின் ஸ்ருஷ்டிதொடங்கி மோக்ஷம்வரையில் என்னுடைய சுபமான கதிகளையும் உலகங்களையும் நான் பார்க்கிறேன். பிராம்மணஶ்ரேஷ்ட! அவ்வாறே, உத்தமமான இந்த ஸித்தியையும் அடைந்தேன். இவ்வுலகத்தைக் காட்டிலும் மேலான ஸத்யலோகத்தை அடையப்போகிறேன். மீண்டும் அதைக்காட்டிலும் மிகச் சிறந்ததும் அவ்யக்தமும் பிரம்மத்தின் பதமுமான மோக்ஷத்தை அடையப்போகிறேன். உனக்கு இதில் ஸம்சயம் வேண்டாம். நான் மறுபடியும் இந்த மானிடலோகத்திற்கு வரப்போகிறதில்லை. சிறந்த அறிவுள்ளவனே! உன்னிடத்தில் பிரீதியுள்ளவனாக இருக்கிறேன். உனக்கு நான் என்ன செய்யவேண்டும்? சொல். நீ எதை அடைய விரும்பி (என்னிடம்) வந்தாயோ, அதற்கு ஸமயம் இதோ வந்துவிட்டது. நீ எதற்காக என்னிடம் வந்தாயோ அதனை நான் அறிவேன். நான் சீக்கிரத்தில் (மேலுலகம்) போகப்போகிறேன். அதனால், உன்னைத் தூண்டினேன். பண்டிதனே! நான் உன்னுடைய ஒழுக்கத்தால் மிக்க பிரீதியுள்ளவனாகிறேன். நீ தெரிந்துகொள்ள விரும்பியவற்றையெல்லாம் கேள். உனக்குச் சொல்லுகிறேன். உன்னுடைய அறிவைக் கௌரவித்து மிகவும் பூஜிக்கிறேன். காஶ்யப! என்னை நீ தெரிந்துகொண்டதால் சிறந்தபுத்தியுள்ளவனாக இருக்கிறாய்' என்று சொன்னார்.

---

## பதினெட்டாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)

(ஸித்தர் பிராணிகளின் ஜனன மரண முதலியவற்றைக் காஶ்யபருக்குக் கூறியது.)

பிறகு, காஶ்யபர் அந்த ஸித்தருடைய பாதங்களில் நமஸ்கரித்துச் சொல்வதற்கு மிகக்கடினமான கேள்விகளைக் கேட்டார்.

---

1 'பிரம்மத்தை ஆஶ்ரயித்தவனும்' என்பது வேறு பாடம்.

2 'லோகத்தாலுண்டாகிய துக்கத்தை' என்பது பழைய உரை.

தர்மத்தைச் செய்பவருள் சிறந்தவரான அந்த ஸித்தரும் அந்தத் தர்மங்களைச் சொன்னார். காஸ்யபர், [1] 'ஜீவன் சரீரத்திலிருந்து எவ்வி தம் விலகுகிறது? எவ்விதம் (சரீரத்தை) அடைகிறது? ஜனனமரண மாகிய ஸம்ஸாரத்தையடைந்த ஜீவன் கஷ்டமான அதிலிருந்து எவ் விதம் விடுதலையடைகிறது? [2] ஆத்மாவானது பிரகிருதியையும் அத ஞலுண்டான சரீரத்தையும் எவ்விதம் விடுகிறது? சரீரத்திலிருந்து விடுபட்டு எவ்விதம் [3] வேறொன்றை அடைகிறது? இந்தப் புருஷன் சுபாசுபகர்மங்களை எவ்வாறு அனுபவிக்கிறான்? சரீரமற்ற ஆத்மா வுக்கு (ச்சரீரத்திற்குக் காரணமான) கர்மம் எங்கிருந்து வருகிறது?' என்று வினவினர். வ்ருஷ்ணிகுலத்திலுதித்தவரே! இவ்விதம் வின வப்பட்ட ஸித்தர் அந்தக் கேள்விகளுக்கு வரிசையாக மறுமொழி கூறினர். அதனை நான் சொல்லுகிறேன்; கேளும்.

ஸித்தர், 'கர்மங்கள் இந்த ஜன்மத்திலேயே சீக்கிரத்தில் பய னைத் தருபவைகளும் ஆயுளை வ்ருத்தி செய்கின்றவைகளுமாகக் கருதப்படுகின்றன. மனிதன் இந்த ஜன்மத்தில் ஆயுளையும் கீர்த்தி யையும் உண்டுபண்ணுகிற எந்தக் கர்மங்களைச் செய்கிறானோ அவை கள் வேறு சரீரமெடுத்து முழுதும் நசித்தபின், ஆயுளின் குறைவை அடைந்த அம்மனிதன் விபரீதமான கர்மங்களைச் செய்கிறான். விநா சம் நெருங்கினபொழுது அவனுடைய புத்தியும் மாறுகிறது. அறி வில்லாதவன் தன்னுடைய ஸ்வபாவத்தையும் பலத்தையும் காலத்தை யும் அறிந்துகொள்ளாமல் தனக்கு விரோதமானவைகளை மித மின்றிப் புஜிக்கிறான். அப்பொழுது அவன் மிகவும் கஷ்டமான எல்லாவற்றையும் செய்கிறான். ஒரு ஸமயம் அதிகமாகப் புஜிக்கி றான். (ஒரு ஸமயம்) புஜிக்காமலுமிருக்கிறான். தோஷமுள்ள அன் னத்தையும் மாம்ஸத்தையும் மத்யத்தையும் ஒன்றுக்கொன்று விரோதமான ஆகாரத்தையும் கடினமான ஆகாரத்தையும் பகலில் (முன் புஜித்தது) நன்கு ஜீர்ணமாகாமலிருக்கும்பொழுது மறுபடி யும் மிதமின்றிப் புஜிக்கிறான்; அதிகமான வேலையையும் ஸம்போகத் தையும் செய்கிறான். எப்பொழுதும் வேலையில் ஆசையினால், நேர்ந்த (மல மூத்திரங்களின்) வேகத்தை அடக்கிக்கொள்ளுகிறான். ருசி யுள்ள அன்னத்தைப் புஜிக்கிறான். பகலில் நித்திரை செய்கிறான்;

[1] 'சரீரம் எவ்விதம் நசிக்கிறது? எவ்விதம் உண்டாகிறது?' என்பது வேறு பாடம்.

[2] வேறு பாடம்

[3] 'அன்யத்' என்பது மூலம்; 'ப்ரம்மத்தை' என்பது பழைய உரை.

அகாலத்தில் அபக்வமான அன்னத்தைப் புஜித்துத் நானாக(வாதமுத லான) தோஷங்களை விருத்தி செய்துகொள்ளுகிறான். தன்தோஷங் களை விருத்திசெய்து மரணத்தை முடிவாகக்கொண்ட ரோகத்தை அடைகிறான். அல்லது [1] உத்பந்தனம் முதலான விபரீத கார் யங்களைச் செய்கிறான். அப்பொழுது அந்த ஜந்துவுக்கு அந்தக் காரணங்களால் சரீரம் நசிக்கிறது. உயிர்வாழ்வதைப்பற்றிச் சொல் லப்படுவதை உள்ளபடி தெரிந்துகொள். சரீரத்திலுள்ள உஷ்ண மானது கடுமையான வாயுவினால் தூண்டப்பட்டு விருத்தியடைந்து சரீரத்தில் பரவி எல்லாப் பிராணன்களையும் தகைகிறது. சரீரத்தில் அதிக பலமுள்ள உஷ்ணமானது விருத்தியடைந்து ஜீவஸ்தானங்க ளான [2] மர்மங்களைப் பிளக்கிறது. உண்மையாகத் தெரிந்துகொள். பிறகு, வேதனையுள்ள ஜீவன் உடனே [3] சரீரத்திலிருந்து விலகுகிறான். பிராம்மண ஶ்ரேஷ்ட! ஜீவனானவன் மர்மங்கள் பிளக்கப்படும்போது வேதனைகள்சூழ்ந்த ஸ்வரூபமுள்ளவனாகிச் சரீரத்தை விடுகிறான். அதைத் தெரிந்துகொள். பிராம்மணஶ்ரேஷ்ட! எப்பொழுதும் எல் லாப்பிராணிகளும் ஜனனமரணங்களில் பயமுள்ளனவாகவும் சரீரங் களைவிடுகின்றனவாகவும் காணப்படுகின்றன. மனிதன் கர்ப்பத்தி லுள்ள சரீரத்தையடையும்பொழுதும் கர்ப்பத்திலிருந்து வெளிப்படும் பொழுதும் அப்படிப்பட்டவேதனையையே அடைகிறான். மனிதன் மூட்டுக்கள் விட்டு ஜலத்தால் அழுகிப்போதலை அடைகிறான். ஐந்து பூதங்களிலும் பிராணாபானஸ்தானங்களிலும் நிலைத்திருக்கும் வாயுவா னது, சரீரத்தில் கடுமையான வேறுவாயுவினால் தூண்டப்பட்டுச் சைத் யத்தால்விருத்தியடைந்து ஐந்து பூதங்களையும் பிரியும்படி செய்து கொண்டு ஶ்ரமத்துடன் ஜீவர்களைவிட்டு மேற்செல்லுகிறது. இவ்விதம் சரீரத்தையும்விடுகிறது. மனிதன் ஶ்வாஸமற்றவனாகக்காணப்படுகிறான். சூடும் மூச்சும் ஒளியும் உணர்ச்சியும் செய்கையுமற்ற மனிதன் மரித் தவன் என்று சொல்லப்படுகிறான். சரீரத்தையடைந்த ஜீவன் எந்த இந்திரியங்களால் இந்திரியவிஷயங்களை அறிகிறானோ அந்த இந்திரி யங்களாலேயே (பிராணன் போனபின்) அறிகிறதில்லை. எந்த ஜீவன் அந்தச் சரீரத்திலேயே ஆகாரத்தாலுண்டான பிராணன்களை ஏற்ப டுத்திக்கொள்ளுகிறானோ அந்த ஜீவன் அழிவற்றவன். மரணகாலத் தில் எது எது விடப்பட்டதாகிறதோ அது அது மர்மஸ்தான மென்று தெரிந்துகொள். அது அவ்விதம் சாஸ்திரத்தில் காணப்பட்

1 கழுத்தில் சுருக்கிட்டுக்கொள்வது.

2 வேறு பாடம்.

3 வேறு பாடம்.

டிருக்கிறது. அந்த மர்மங்கள் பிளக்கப்படும்போது அந்தப் பிராணன் அந்தமர்மங்களினின்று கிளம்பியதாகிப் பிராணியினுடைய ஹ்ருதயத்தில் பிரவேசித்துச் சீக்கிரத்தில் அறிவையும் மறைக்கிறது. பிறகு, சைதன்யமுள்ள அந்தப்பிராணியானது தமஸினால் அறிவும் மர்மங்களும் மூடப்பட்டு ஒன்றையும் அறிகிறதில்லை. அந்த ஜீவன் இருப்பிடமற்று வாயுவினால் நிலைகுலையச் செய்யப்படுகிறான். பிறகு, அந்த ஜீவன் பயங்கரமாகவும் அதிகமாகவும் பெருமூச்சுவிட்டு வெளிக்கிளம்பும்போது சைதன்யமற்ற அந்தச்சரீரத்தைச் சீக்கிரமாக அசையும்படிசெய்கிறான். அந்த ஜீவன் சரீரத்திலிருந்து வெளிப்பட்டுத்தன்னுடையவைகளான நன்மையைச்செய்யும் புண்யகர்மங்களாலும் பாவகர்மங்களாலும் சூழப்பட்டவனும் அடையாளம் செய்யபட்டவனுமாகிறான். இருளில் ஆங்காங்குபிரகாசிக்கின்ற மின்மினிப்பூச்சியைக்கண்ணுள்ளவர்கள் பார்ப்பதுபோல ஞானம் நிறைந்தவர்களும் உள்ளபடி சாஸ்திரநிச்சயமுள்ளவர்களும் ஞானக்கண்ணுள்ளவர்களுமான பிராம்மணர்கள் புண்ணியம்செய்தவனையும் பாவம்செய்தவனையும் அடையாளங்களால் பார்த்துத் தெரிந்துகொள்ளுகிறார்கள். ஸித்தர்கள் இவ்விதமானஜீவன் கர்ப்பத்தில் பிரவேசிப்பதையும் சரீரத்தினின்றுவெளிப்படுவதையும்பிறப்பதையும்திவ்யமான கண்ணால்பார்க்கிறார்கள். அந்த ஜீவனுக்கு இவ்வுலகில் பலவித ஸ்தானங்கள் சாஸ்திரத்தால் காணப்பட்டிருக்கின்றன. பிராணிகள் வஸிக்கும் இந்தப் பூமியானது கர்மபூமி. ஆகையால், எல்லாப் பிராணிகளும் புண்ணிய பாபகர்மங்களைச் செய்து இவ்வுலகத்திலேயே தம் கர்மங்களால் பலவிதமான போகங்களை அடைகின்றன. இவ்வுலகத்திலேயே பாபகர்மங்களைச் செய்தவர்கள் நரகத்தை அடைகிறார்கள். இந்தக் கதியானது இழிந்ததும் கஷ்டமுமானது. இதில் மனிதர்கள் வேவிக்கப்படுகிறார்கள். இதிலிருந்து மோக்ஷம் கிடைப்பது மிக அரிது. ஆகையால், ஆத்மாவை நன்கு ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். பிராணிகள் மேலுலகம் சென்று எந்த ஸ்தானங்களில் வஸிக்கிறார்களோ அவைகளை நான் இப்பொழுது சொல்லுகிறேன்; உள்ளபடி தெரிந்துகொள். அதைக்கேட்டு மனவுறுதியையும் கர்மங்களின் நிச்சயத்தையும் தெரிந்துகொள். எந்த இடத்தில் எல்லா நக்ஷத்திரங்களும் சந்திரமண்டலமும் இருக்கின்றனவோ, எந்த லோகத்தில் ஸூர்யமண்டலமானது தன் காந்தியால் பிரகாசிக்கிறதோ அவைகளைப் புண்ணியஞ்செய்தவர்கள் வஸிக்கும் ஸ்தானங்களாகத் தெரிந்துகொள். அவர்களெல்லாரும் கர்மங்கள் (அனுபவித்து) நசித்தவுடன், அடிக்கடி (அவ்விடங்களிலிருந்து)

கீழுலகத்திற்கு வருகின்றனர். அந்தத் தேவலோகத்திலும் உயர்வு தாழ்வு நடு என்னும் விசேஷம் இருக்கிறது. அவ்விடத்திலும் மிகவும் பிரகாசிக்கும் (மற்றவனுடைய) ஸம்பத்தைப் பார்த்து ஸந்தோஷம் உண்டாகிறதில்லை. இவ்விதம் இந்த எல்லாக் கதிகளையும் உனக்குத் தனித்தனியாகச் சொன்னேன். இனிமேல், கர்ப்பம் உண்டாகும் விதத்தைச் சொல்லுகிறேன். பிராம்மண! அவ்விதத்தைச் சொல்லும் போது ஸாவதானமாகக் கேள்.

---

## பத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(ஸித்தர், ஜீவன் கர்ப்பத்தை அடைவது முதலியவற்றைக் காச்யபருக்குச் சொல்லியது.)

இவ்வுலகில் புண்யகர்மங்களும் பாபகர்மங்களும் நாசமடைகிறதில்லை. அவைகள் ஒவ்வொருசரீரத்தையும் அடைந்து அடைந்து அதற்குத் தக்கபடி பயனைத்தருகின்றன. நன்கு காய்த்த பலவிருக்ஷமானது மிகுதியான கனிகளைத் தருவதுபோலச் சுத்தமான மனத்துடன் செய்யப்பட்ட புண்ணியமானது மிகுதியான பயனைத் தரும். அவ்வாறே கெட்டமனத்துடன் செய்யப்பட்டபாவமும் மிகுதியான பயனைக் கொடுக்கும். இவ்வுலகில் ஆத்மாவானவன் மனத்தை முன்னிட்டுக் கர்மாவில் பிரவ்ருத்திக்கிறானன்றோ? கர்மங்களாலும் காமக்குரோதங்களாலும் சூழப்பட்ட மனிதன் கர்ப்பத்தில் பிரவேசிக்கும் விதத்தைப்பற்றிய மறுமொழியையும் கேள். சுக்ரமானது ஸ்திரீயின் கர்ப்பப்பையை அடைந்து சோணிதத்துடன் சேர்கிறது. ஜீவன் கர்மங்களால் உண்டானதும் சுபமாகவோ அசுபமாகவோ இருப்பதுமான (அந்தச் சுக்ரத்தாலாகிய) சரீரத்தை அடைகிறான். பிரம்மஜ்ஞானியானவன் ஸௌக்ஷ்மமாகவும் அவ்யக்தமாகவும் இருப்பதால் சரீரத்தை அடைந்து ஒன்றிலும் பற்றுதலடைகிறதில்லை; ஆகையால், சாச்வதமான அந்தப் பிரம்மத்தை அடைகிறான். அந்தப் பிரம்மமானது எல்லாப் பூதங்களுக்கும் உத்பத்தி காரணம். அதனால், பிராணிகள் ஜீவிக்கின்றன. [1] அந்த ஜீவன் வரிசையாக எல்லாப்பிராணிகளின் கர்ப்பத்திலும் பிரவேசித்து இந்திரியஸ்தானங்களில் இருந்துகொண்டு உடனே ஞானத்தை அடைகிறான். அறிவுடன் கூடின

---

1 'அந்தப்பிரம்மம் ஜீவனாகி' என்பது பழைய உரை.

கர்ப்பத்திலிருக்கும் அந்தஜீவன், பிறகு, அவயவங்களை அசையும்படி செய்கிறான். (தாம்ர முதலியவைகளால் பிரதிமை செய்யும்போது அந்தத் தாம்ர முதலியவை) சிறிது தங்க முதலியவற்றைச் சேர்த்து விட்டால் அவை அந்தப் பிரதிமையின் சரீரம் (முழுவதும்) பரவுவதுபோல (ஸூக்ஷ்மனான) ஜீவன் கர்ப்பத்தில் முழுதும்வியாபிக்கிறானென்று தெரிந்துகொள். [1]நெருப்பானது இரும்பு உருண்டையிற் பிரவேசித்துத் தபிக்கச் செய்வதுபோலக் கர்ப்பத்தில் ஜீவன் பிரவேசித்திருப்பதைத் (தெரிவிப்பதென்று) நீயும் தெரிந்துகொள். ஜ்வலிக்கின்ற தீயானது வீட்டைப் பிரகாசிக்கச் செய்வதுபோல ஜீவன் சரீரங்களைப் பிரகாசிக்கும்படி செய்கிறான். முன் ஜன்மத்தில் சுபமோ அசுபமோ எந்த எந்தக் கர்மாவைச் செய்கிறானோ அவற்றையெல்லாம் அவஶ்யமாக அனுபவிக்கிறான். (அந்தக் கர்மமானது) அனுபவத்தால் நசிக்கிறது. மறுபடியும் வேறு கர்மம் செய்யப்படுகிறது. எதுவரையில் மோக்ஷமடைவதற்குரிய தர்மத்தைத் தெரிந்து கொள்ளவில்லையோ அதுவரையில் (இவ்விதம் செய்கிறான்.) ஸாதுக்களுள் சிறந்தவனே! பலவகைப் பிறவிகளில் சுழன்றுகொண்டிருப்பவன் எந்தத் தர்மத்தால் ஸுகம்பெறுவானோ அந்தத் தர்மத்தை உனக்குச் சொல்லுகிறேன். தானம்,வ்ரதம், பிரம்மசர்யம், சாஸ்திரத்தில் சொல்லியபடி வ்ரதங்களைச் செய்வது, மனத்தை அடக்குவது, மிக்க சாந்தனாக இருப்பது, பிராணிகளிடம்கருணை புரிவது, இந்திரியங்களை அடக்குவது, குரூரனாக இல்லாமலிருப்பது, பிறருடைய பொருளைக் கவராமலிருப்பது, பூமியில் பிராணிகளுக்கு மனத்தாலும் அப்பிரியங்களைச் செய்யாமலிருப்பது, தாய்தந்தைகளுக்குப் பணிவிடை செய்வது, தேவதைகளையும் அதிதிகளையும் பூஜிப்பது, குருவைப் பூஜிப்பது,(தகாதவைகளில்)[2] அருவருப்பு, சுத்தனாக இருப்பது, எப்பொழுதும் இந்திரியங்களை அடக்கியிருத்தல், சுபகார்யங்களைச் செய்வது ஆகிய இவைகள் ஸாதுக்களின் வ்ரதமாகச் சொல்லப்படுகின்றன. இவைகளால் சாஶ்வதர்களான ஜீவர்களை ரக்ஷிக்கக்கூடிய தர்மமானது உண்டாகிறது. ஸாதுக்களால் செய்யப்பட்ட தர்மமானது ஸதாசாரமென்று உறுதி செய்யப்பட்டது. அது ஸ்வர்க்கம் மோக்ஷம் என்னும் இரண்டு பயன்களையும் தருவதாகும். இவ்விதம் ஸாதுக்க

1 'காய்ச்சின இரும்பு உருண்டையில் கண்ணுக்குப் புலப்படாமலிருக்கும் அக்னியை உஷ்ணத்தினால் தெரிந்துகொள்வதுபோல் சரீரத்தில் ஜீவன் இருப்பதை ஜீவகார்யத்தால் தெரிந்துகொள்' என்பது கருத்து.

2 'க்ருணா' என்பது மூலம்.

ளிடத்தில் எப்பொழுதும் பார்க்கவேண்டும். அவர்களிடத்தில் இந்த மர்யாதை நிலைத்திருக்கும். ஸாதுக்கள் அனுஷ்டிக்கும் ஆசாரமானது தர்மத்தைச் சொல்லுகிறது. ஸனாதனதர்மமான அந்தக்கர்மமானது அந்த ஸாதுக்களிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. அதனை நன்கு அனுஷ்டிப்பவன் கெட்ட கதியை அடையமாட்டான். ஆகையால், தர்ம மார்க்கங்களினின்று நழுவின ஜனங்கள் சிக்ஷிக்கப்படுகின்றனர். யோகியானவன் முக்தனே. அவன் இவர்களிலும் சிறந்தவன். எவ்வி தத்திலும் தர்மத்துடனிருக்கும் மனிதன் வெகு காலம் சென்று ஸம்ஸாரத்தைத் தாண்டுவான். இவ்விதம் எல்லாப் பிராணிகளும் முன்செய்த வினையின் பயனை அடைகின்றன. அந்த வினையெல் லாம் (பிறவிக்குக்) காரணம். இந்த ஆத்மாவானவன், அதனால் அவ மதிக்கப்பட்டு இந்தச் சரீரத்தை அடைந்தான். இந்த ஆத்மா ஆதி யில் அடைந்த சரீரம் யாரால் அமைக்கப்பட்டது என்று உலகம் ஸம்சயமடைகிறது. இனி, அதனையும் சொல்லுகிறேன். எல்லா உலகங்களுக்கும் பிதாமஹரான பிரம்மதேவர் தமக்குச் சரீரத்தைச் செய்துகொண்டு ஸ்தாவரஜங்கமரூபமான மூவுலகங்களையும் முழு தும் படைத்தார். பிறகு, அவர் பிராணிகளுக்கு (தேயு அப்பு பிரு திவி இம்மூன்றுலாகிய) பிரதானமென்னும் [1]பிரகிருதியை (சரீரத் தைப்) படைத்தார். அதனால், இவ்வுலகமெல்லாம் வியாபிக்கப் பட்டிருக்கிறது. அதனை உலகத்தில் மேலானதாகக் கருது கின்றனர். இந்தச் சரீரமானது க்ஷரமென்றும், சரீரத்தைக் காட்டிலும் வேறானதும் அழிவற்றதுமான ஜீவன் அக்ஷரமென் றும் சொல்லப்படுகின்றன. சரீரம் ஜீவன் பிரம்மம் இம்மூன்றனுள் சரீரமும் ஜீவனும் முற்றும் ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறாக இருக்கின் றன. (ஸ்ருஷ்டிக்கு) முன் (சாஸ்திரத்தால்) காணப்பட்டபிரம்மதேவர் (ஆகாய முதலான)எல்லாப் பூதங்களையும் ஸ்தாவரங்களையும்ஜங்கமங் களையும் படைத்தார் என்று பழமையான வேதம் கூறுகிறது. அந் தப் பிதாமஹரானவர் அந்தச் சரீரத்திற்குக் கால அளவையும் பிராணிகளுக்குப் பலபிறவிகளில் சுழல்வதையும் திரும்பிவருதலையும் அமைத்தார். முன் ஜன்மத்திய தன்நிலைமையை அறிந்த ஒரு மேதாவி போல நான் சொல்வன எல்லாம் உண்மையாக இருக்கும். எவன் ஸுகத்தையும் துக்கத்தையும் அநித்தியமாகவும் சரீரத்தை அசுத்த வஸ்துக்களால் அமைந்ததும் அழிவுள்ளதும் கர்மாவினால் ஏற்பட்டது மாகவும் நன்றாகப்பார்க்கிறானோ ஸுகமெல்லாம் துக்கமாகக்காணப்

1 வேறு பாடம்.

பட்டதென்றுநினைக்கிறானோ அவன் கோரமானதும் எவ்விதத்திலும் தாண்டமுடியாததுமான ஸம்ஸாரஸமுத்திரத்தைத் தாண்டுவான். ஜனனம்மரணம்என்னும்ரோகங்களால்வியாபிக்கப்பட்டவனும் பிரதானத்தை அறிந்தவனுமானவன் சைதன்யமுள்ள பிராணிகளிடத்தில் சைதன்யத்தை ஸமமாகப் பார்க்கிறான். ஸாதுக்களில்சிறந்தவனே! ஆகையால்,எவன் ஒருவன் மேலானபதத்தைத் தேடிக்கொண்டு (விஷயங்களில்) வைராக்யத்தை அடைகிறானோ அவனுக்கு உபதேசிக்க வேண்டியதை உள்ளபடி சொல்லுவேன். பிராம்மண! இனி, சாச்வதனும் அழிவற்றவனுமான ஆத்மாவைப்பற்றிய உத்தமமான ஞானத்தை நான் சொல்லுகிறேன். இதனை முழுதும் தெரிந்துகொள்.

---

இருபதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(ஸித்தர் மோக்ஷஸாதன முதலியவற்றைக் காச்யபருக்குக் கூறியது.)

எவன் ஏகாந்தஸ்தலத்தில் உட்கார்ந்துகொண்டு பேசாமலும் ஒன்றையும் ஆலோசியாமலும் முன்முன் உள்ளதை விடுகிறானோ அவன் [1]கர்மமற்றவனாவான். எல்லாரையும் மித்திரராகக்கொண்டவனும் எல்லாவற்றையும் ஸஹிப்பவனும் சித்தத்தை அடக்குவதில் பற்றுதலுள்ளவனும் இந்திரியங்களைவென்றவனும் பயமும் கோபமுமற்றவனும் காமமற்றவனுமான மனிதன் வீடு பெறுவான். எவன் எல்லாப் பிராணிகளிடத்திலும் தன்னிடத்திற்போல நடந்துகொள்பவனும் அடக்கமுள்ளவனும் சுத்தனும் எப்பொழுதுமே நீதிதவறாமல் நடப்பவனும் இந்திரியங்களை அடக்கினவனும் கர்வமும் அபிமானமும் அற்றவனுமாயிருக்கிறானோ அவன் எல்லாவற்றிலிருந்தும் விடுதலை அடைந்தவனே. எவன் ஜீவித்திருப்பதிலும் மரிப்பதிலும் ஸுகத்திலும் துக்கத்திலும் லாபத்திலும் அலாபத்திலும் நண்பனிடத்திலும் பகைவனிடத்திலும் ஸமமாக இருக்கிறானோ அவன் விடுதலை அடைகிறான். ஒன்றையும் விரும்பாதவனும் ஒன்றையும் அவமதியாதவனும் த்வந்த்வமற்றவனும் ஆசையற்ற மனமுள்ளவனுமாக இருப்பவன் எவ்வகையிலும் முக்தனே. பகைவரும் உறவினரும் மக்களும் [2]இல்லாதவனும்

1 'பந்தத்திலிருந்து விடுபட்டவனாவான்' என்பது வேறுபாடம்.

2 'அவர்களிடம் பகையும் ஸ்நேஹமுமற்றவன்' என்பது கருத்து.

அறம் பொருளின்பங்களைவிட்டவனும் ஒரிடத்திலும்பற்றில்லாதவனுமாக இருப்பவன் விடுதலையடைகிறான். எவன் தர்மமும் அதர்மமும் அற்றவனும் ப்ராரப்தகர்மாவை(அனுபவித்து)அழித்தவனும் [1]தாதுக்கள் குறைந்தவனும் நன்கு அடங்கின மனமுள்ளவனும்த்வந்த்வமற்றவனுமாக இருக்கிறானோ அவன் விடுதலை அடைகிறான். கர்மங்களும் ஆசையுமற்றவனும் உலகத்தை நிலையற்றதும் தன் நிலைமையிலிராததும் எப்பொழுதும் தன்வசமற்றதும் பிறப்பும் மூப்பும் மரணமுமுள்ளதுமாகப்பார்ப்பவனும் எப்பொழுதும்வைராக்யமுள்ள புத்தியுள்ளவனும் தன்னிடத்திலுள்ள தோஷங்களை நன்றாகப் பார்ப்பவனுமாக இருப்பவன் சீக்கிரத்தில் ஆத்மாவைப் பந்தத்தினின்றும்விடுபட்டதாகச்செய்கிறான். கந்தமும் ரஸமும் ஸ்பர்சமும் சப்தமும் பந்தமும் ரூபமும் அற்றதும் (எளிதில்) அறியமுடியாததுமான ஆத்மாவைக்கண்டவன் மோக்ஷமடைகிறான். எவன் [2]ஐந்து பூதங்களின் குணங்களும் (ஸூக்ஷ்ம) சரீரமும் பற்றுதலும் குணங்களும் இல்லாததும் குணங்களை அனுபவிப்பதுமான ஆத்மாவைப்பார்க்கிறானோ அவன் மோக்ஷம அடைகிறான். எவன் சரீரத்தாலும் மனத்தாலும் உண்டான எல்லா ஸங்கல்பங்களையும் புத்தியினால்விலக்கி விறகற்ற அக்னிபோல மெல்லச் சாந்தியைஅடைந்தவனும் எல்லா [3]ஸம்ஸ்காரங்களும் த்வந்த்வங்களும் பந்தமுமற்றவனுமாகி இந்திரிய ஸமூகத்தைத் தவத்தில் செலுத்துகிறானோ அவன் முக்தனே. எல்லா ஸம்ஸ்காரங்களாலும் விடப்பட்டவன் பிறகு ஸனாதனமும் மேலானதும் மிக்க சாந்தமானதும் அசைவற்றதும் நித்தியமானதும் அழிவற்றதுமான பிரம்மத்தை அடைகிறான். உலகத்தில் யோகிகள் எதனை அறிந்து தம்மை ஸித்தர்களாகப் பார்க்கிறார்களோ மிகச்சிறந்ததான அந்த யோகசாஸ்திரத்தை இனிமேல் சொல்லுகிறேன். எந்த யோகங்களால் எப்பொழுதும் தியானம் செய்பவன் ஆத்மாவைத் தன்னிடத்தில் பார்க்கிறானோ அவற்றின் உபதேசத்தைச் சொல்லுகிறேன். அதனை உள்ளபடி என்னிடமிருந்து தெரிந்துகொள். இந்திரியங்களை (விஷயங்களிலிருந்து) திருப்பி மனத்தை ஆத்மாவினிடத்தில் நிலை நிறுத்தவேண்டும். முந்திக் கடுந்தவம்புரிந்து பிறகு மோக்ஷயோகத்

---

1 'மறுபடியும் மறுபடியும் பிறப்பைத் தரக்கூடிய ஐந்துபூதங்களும் குறைந்துவிட்டமையால் நன்கு அடங்கின மனமுள்ளவனும்' என்பதுபழைய உரை.

2 ஸ்தூலசரீரம்.

3 முன் ப்ரவிருத்தியினாலுண்டானதும் பிற்காலம் ப்ரவிருத்திக்குக்காரணமுமான வாஸனை.

தை அனுஷ்டிக்கவேண்டும். தவம் செய்பவனும் நித்யமான வஸ்துவை அடைய விருப்பமுள்ளவனும் டம்பமும் அகங்காரமுமற்றவனும் வித்வானுமான பிராம்மணன் மனத்தால் பரமாத்மாவைத் தன்னிடத்தில் பார்க்கிறான். அந்த ஸாதுவானவன் சித்தத்தைப் பரமாத்மாவினிடத்தில் செலுத்தச் சக்தியுள்ளவனாயிருந்தால் அப்பொழுது அவன் பிரம்மத்தை அடைவிக்கும் தியானம்செய்யும் தன்மையுள்ளவனாக இருந்துகொண்டு பரமாத்மாவைத் தன்னிடத்தில் பார்க்கிறான். எவன் எப்பொழுதும் அடக்கமும் தியானமுமுள்ளவனும் தைர்யமுள்ளவனும் இந்திரியங்களை வென்றவனுமாக இருக்கிறானோ அவன் நன்கு யோகம்செய்து மனத்தால் பரமாத்மாவைப் பார்க்கிறான். ஒரு மனிதன் ஸ்வப்னத்தில் கண்டவனை (விழித்துக்கொண்டபின்) பார்த்து (க்கனவில் கண்டவன்) இவனென்று பார்ப்பதுபோல நன்றாக யோகம் செய்பவன் (யோகம்செய்யும்பொழுது பரமாத்மாவை உலகஸ்வரூபமாகக் கண்டு யோகம் நின்றபின்னும்) பரமாத்மாவை அவ்விதஸ்வரூபமுள்ளவர்போலவே பார்க்கிறான். முஞ்சத்திலிருந்து ஈர்க்கை வேறுபடுத்திக் காட்டுவதுபோல் யோகியானவன் ஆத்மாவைத் தேகத்திலிருந்து வேறுபடுத்திப் பார்க்கிறான். முஞ்சத்தைச் சரீரமாகவும் இஷீகத்தை ஆத்மாவைப்பற்றிய மாயையாகவும் சொல்லுகிறார்கள். யோகத்தைத் தெரிந்தவர்களால் இது மிகச் சிறந்த உதாரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சரீரியான (யோகியான) வன் எப்பொழுது தன்னை யோகியாக நன்கு பார்க்கிறானோ அப்பொழுது அவனுக்கு மூவுலகங்களுக்கும் பிரபுவாயிருந்தாலும் ஒருவனும் பிரபுவல்லன். (அந்த யோகியானவன்) மூப்புச் சாக்காடுகளை விலக்கி இஷ்டப்படி வெவ்வேறு சரீரங்களை அடைகிறான்; துக்கப்படவுமாட்டான்; ஸந்தோஷப்படவுமாட்டான். இந்திரிய ஜயமுள்ள யோகியானவன் தேவர்களுக்கும் தேவனாயிருக்கும் தன்மையைப் பெறுவான்; நிலையற்றதான சரீரத்தை விட்டு அழிவற்ற பிரம்மத்தையும் அடைவான். உலகங்கள் அழியும் போதும் அவனுக்குப் பயம் உண்டாகிறதில்லை. பிராணிகள் கஷ்டப்படும் போதும் அவன் ஒன்றாலும் கஷ்டப்படான். ஆசையற்றவனும் சாந்தமான மனமுள்ளவனுமான யோகியானவன், சேர்க்கையினாலும் ஸ்நேகத்தினாலும் உண்டானவைகளும் கோரமுமான துக்கம் சோகம் என்னும் மலங்களால் நிலைகுலையமாட்டான்; இவனை ஆயுதங்கள் அடிக்கமாட்டா. இவனுக்கு மரணமும் இல்லை. இதைக் காட்டிலும் மேலானஸுகம் ஒன்றும் உலகத்தில் ஓரிடத்திலும் காணப்படவில்லை.

அவன் ஆத்மாவை நன்கு யோகமுள்ளதாகச்செய்து பரமாத்மாவி னிடத்திலேயே நிலைபெற்றிருப்பான். அவன் ஜரையும் துக்கமும் அற்றவனாகி ஸுகமாக நித்திரையும் செய்வான். இந்த மானிடசரீரத் தைவிட்டு இஷ்டப்படி (வேறு) சரீரங்களை எடுத்துக்கொள்வான். அவன் (யோகத்தாலாகிய ஐச்வர்யத்தை) அனுபவிக்கும்போது (யோகத்திலிருந்து) வைராக்கியத்தை எவ்விதத்திலும் அடையக் கூடாது. நன்றாக யோகம் செய்தவன் எப்பொழுது பரமா த்மாவைத் தன்னிடத்திலேயே பார்க்கிறானோ அப்பொழுதே ஸா க்ஷாத் இந்திரனுடைய பதவியையும் விரும்பமாட்டான். பிரம்மத் தை அடைவிக்கும் தியானம்செய்யும் ஸ்வபாவமுள்ளவன் யோகத் தை அடையும் விதத்தைக் கேள். வேதாந்தச்ரவணஞ்செய்து அவ் வுபதேசத்தை ஆலோசித்து எந்தச் சரீரத்தில் வஸிக்கிறானோ அந் தச் சரீரத்திற்குள் மனத்தை நிறுத்த வேண்டும்; வெளியில் செலுத் தக் கூடாது. சரீரத்தினுள்ளிருந்துகொண்டு வாஸம் செய்வதற் கேற்றதான மூலாதாரம் முதலான சக்ரங்களுள் ஒன்றில் கர்மேந்திரி யங்களுடனும் ஞானேந்திரியங்களுடனும்கூடின மனத்தை நிலை நிறுத்தவேண்டும். (அந்தச்) சக்ரத்தில் தியானம்செய்து எல்லாமா யிருக்கும் பிரம்மத்தை அவன் [1]எந்தக் காலத்தில் பார்க்கிறானோ அந் தக் காலத்தில் அவனுடைய மனமும் வெளியிலுள்ள ஒன்றையும் அறிகிறதில்லை. ஜனங்களில்லாத வனத்தில் சப்தமில்லாத இடத்தில் இந்திரியங்களின்கூட்டத்தை நன்றாக அடக்கிச் சரீரத்திற்கு வெளி யிலும் உள்ளிலும் நிறைந்திருக்கும் பிரம்மத்தை ஒருவழிப்பட்ட மனமுள்ளவனாக இருந்துகொண்டு தியானம் செய்யவேண்டும். [2]பற்க ளிலும் தாலுவிலும் நாவிலும் நாவின்கீழ்ப்பக்கத்திலும் கண்டத்தி லும் ஹிருதயத்திலும் [3]ஹிருதயபந்தனத்திலும் தியானம் செய்ய வேண்டும்' என்றேன். [4]மதுஸூதனரே! என்னால் இவ்விதம்சொல்லப் பட்ட மேதாவியான அந்தச் சிஷ்யன் மறுபடியுமே சொல்ல மிகக்கடி னமான இந்த மோக்ஷதர்மத்தைப்பற்றி வினவலானான்.

---

1 வேறு பாடம்.

2 'பற்களால் கடித்துத் தின்னக் கூடிய உணவுகளிலும்' என்பது பழைய உரை.

3 நாடிகள் என்பது பழைய உரை,

4 விதுரர் காச்யபருக்குச் சொன்னதாக ஆரம்பித்து இங்கு பிராம்மணர் கிருஷ்ணனை அழைத்துத் தாம் சிஷ்யனுக்குச் சொன்னதாகச் சொல்லியிருக்

சிஷ்யன், 'புஜிக்கப்பட்ட இந்த அன்னமெல்லாம் வயிற்றில் எவ்வாறுபக்குவமாகிறது? எவ்விதம் ரஸமாகிறது? எவ்விதம் ரக்தமாகிறது? அவ்வாறே மாம்ஸத்தையும் மேதஸையும் நரம்புகளையும் எலும்புகளையும் எவ்வாறு வ்ருத்திசெய்கிறது? பிராணிகளுக்கு இந்தச் சரீரங்களெல்லாம் எவ்விதம் விருத்திஅடைகின்றன? சரீரமானது விருத்தியடையும்போது பலம் எவ்விதம் விருத்தியடைகிறது? மலங்களைத் தனித்தனியாக வெளிப்படுத்துவதும் அடக்குவதும் எவ்விதம்? இந்த ஆத்மாவானவன் மூச்சுவிடுவதும் மூச்சை உள்ளே இழுப்பதும் எதனால்? இந்த ஆத்மா சரீரத்தில் எந்த இடத்தை அடைந்திருக்கிறான்? ஜீவன் எவ்விதம் சேஷ்டையுள்ளவனாகச் சரீரத்தைத் தாங்குகிறான்? [1]மறுபடியும் எவ்வித வர்ணமுள்ளதும் எப்படிப்பட்டதுமான சரீரத்தை அடைகிறான்? பகவானே! குற்றமற்றவரே! நீர் இதனை எனக்கு உள்ளபடி சொல்ல வேண்டும்' என்று வினவினான். மாதவரே! சிறந்தகைகளுள்ளவரே! பகைவரை அடக்குகிறவரே! அந்த அந்தணனால் இவ்விதம் வினவப்பட்ட நான் (குருவினிடமிருந்து) கேட்டபடி மறுமொழி கூறினேன்.

'ஒருவன் தன்வீட்டில் ஓர்பாண்டத்தை வைத்துவிட்டு அதனைத் தேடுவதுபோல் சலனமற்ற இந்திரியங்களால் மனத்தைத் தன் சரீரத்தினுள் செலுத்தி அஜாக்ரதையின்றி அவ்விடத்தில் ஆத்மாவைத் தேடவேண்டும். இவ்விதம் எப்பொழுதும் முயற்சியுள்ளவனும் ஸந்தோஷமுள்ள மனமுள்ளவனுமான மனிதன் எந்தப் பிரம்மத்தைக் கண்டால் பிரதானத்தை அறிந்தவனாவனோ அந்தப் பிரம்மத்தை அடைவான். இந்தப் பரமாத்மாவை நேத்திரத்தினாலும் மற்றுமுள்ள எல்லா இந்திரியங்களாலும் அறிய முடியாது. மனமாகிற சிறந்த தீபத்தினாலேயே காணலாம். அவர் எங்கும் கைகளும் பாதங்களுமுள்ளவர்; எங்கும் கண்களும் தலைகளும் முகங்களுமுள்ளவர். எங்கும் காதுகளுள்ளவர். உலகத்தில் எல்லாவற்றையும் வியாபித்துக்கொண்டிருக்கிறார். [2]ஜீவனானவன் சரீரத்தைக் காட்டினும் வேறான ஆத்மாவை நன்றாகத்தெரிந்துகொண்டு அவ்விதமான தன் சரீரத்தை (ப்பற்றிய அபிமானத்தை) விட்டுச் சுத்தஸ்வரூபியான பிரம்மத்தை அடையவேண்டும். ஜீவன் உள்ளத்தில் நகைப்

---

1 வேறுபாடம்.

2 'யோகியான ஜீவன் (மரணகாலத்தில்) சரீரத்திலிருந்து தான் வெளிப்படுவதை அறிவான். (அப்பொழுது) அவன் அந்தத்தேகத்தை விட்டுவிட்டுப் பிரம்மத்தை அடைவான்' என்றும் கொள்ளலாம்.

பவன்போலப் பரமாத்மாவைப்பார்ப்பான். அந்தப் பிரம்மத்தைஇவ்விதம் ஆஸ்ரயித்துப் பிறகு [1]மோக்ஷமடைகிறான். பிராம்மணஸ்ரேஷ்டனே! இந்த எல்லா ரஹஸ்யத்தையும் நான் உனக்குச் சொன்னேன். நான் செல்ல அனுமதி கேட்கிறேன். பிராம்மண! நீயும் ஸுகமாகச் செல்' என்றேன். கோவிந்தரே! அப்பொழுது என்னால் இவ்விதம் சொல்லப்பட்டவனும் சிறந்த தவமுள்ளவனும் பிராம்மணனுமான அந்தச் சிஷ்யன் ஸம்சயமற்றவனாகி இஷ்டப்படி சென்றான்' என்றார். குந்தீபுத்திர! அந்தப் பிராம்மணஸ்ரேஷ்டர் அப்பொழுது என்னைப் பார்த்து மோக்ஷதர்மத்தைப்பற்றிய இவ்விதமான வாக்கியத்தை நன்றாகச்சொல்லிவிட்டு அவ்விடத்திலேயே மறைந்தார். பார்த்த! நீ இதனை ஸாவதானமான மனத்துடன் கேட்டாயா? அப்பொழுதும் நீ தேரிலிருந்துகொண்டு இதனையே கேட்டாய். பார்த்த!வேறு ஞாபகமுள்ளவனால் இது தெரிந்துகொள்ளமுடியாதென்று நான் எண்ணுகிறேன். (வேறுவிஷயத்தில்) பற்றுதலற்றவனும் பரிசுத்தமானசித்தமுள்ளவனுமான மனிதனால் தெரிந்துகொள்ளத்தக்கது. பரதஸ்ரேஷ்ட! தேவர்களுக்கும் மிக்க ரஹஸ்யமான இதனைச் சொன்னேன். பார்த்த! இவ்வுலகில் எப்பொழுதாவது மனுஷ்யன் இதனைக்கேட்டதுண்டா? குற்றமற்றவனே! உன்னைத்தவிர வேறுமனிதன் இதனைக் கேட்கத் தக்கவனல்லன். வேறு விஷயத்தில் பற்றுள்ள சித்தமுள்ள மற்றவனால் இது அறிய முடியாதது. குந்தீகுமாரனே! புண்ணிய கர்மங்களைச் செய்தவர்கள் தேவலோகத்தில் வியாபித்திருக்கின்றனர். மனிதர்கள் தமக்குமேலிருப்பதென்னும் இது தேவர்களுக்கு இஷ்டமாக இருக்கவில்லை. பார்த்த! எது ஸனாதனமான பிரம்மமோ, எதை அடைந்தவன் துக்கத்தைவிட்டு எப்பொழுதும் ஸுகமுள்ளவனாகி அமிருதனாக இருக்கும் தன்மையை அடைகிறானோ, அது உயர்ந்த கதியன்றோ? இழிவான ஜாதியில் பிறந்தவர்களாயிருந்தாலும் ஸ்திரீகளாயிருந்தாலும் வைஸ்யர்களாயிருந்தாலும் சூத்திரர்களாயிருந்தாலும் (ஆத்மதரிசனமென்னும்) இந்தத் தர்மத்தை அடைந்தால் உத்தம கதியை அடைவார்கள். பார்த்த! பல சாஸ்திரங்களைக் கற்றவர்களும் தமக்குரிய தர்மங்களில் பற்றுதலுள்ளவர்களும் பிரம்மலோகத்தை உயர்ந்தகதியாகக் கொண்டவர்களுமான பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் உத்தம கதியை அடைவார்களென்பதில் என்ன ஸந்தேஹம்? காரணங்களுள்ள இந்தத் தர்மத்தையும் இதனை அடைவதற்குள்ள உபாயங்களையும் ஸித்தியையும் பயனையும் மோக்ஷத்தை

[1] 'மயி' என்னும் சொல் விடப்பட்டது.

யும் துக்கத்தின் நிவிருத்தியையும் சொன்னேன். பரதஸ்ரேஷ்டனே! இதனிலும் மேலான ஸுகம் வேறென்றுமில்லை. பாண்டவ! (நீ இதை) ப்ரத்தையும் உறுதியுமுள்ளவனுகக் கேட்டாய். எந்த மனிதன் உலகத்தில் பொன் வெள்ளி முதலிய ஸாரமான பொருள்களைப்புல்பூண்டு முதலிய இழிவானபொருள்களைப் போல விட்டுவிடுகிறானே அவன் இந்த உபாயங்களால் சீக்கிரமாக உயர்ந்தகதியை அடைகிறான். பார்த்த! இவ்வளவுதான் சொல்லக் கூடியது. [1]இதற்குமேல் ஒன்றுமில்லை. ஆறு மாஸம் எப்பொழுதும் யோகம் செய்கிறவனுக்கு யோகம் ஸித்திக்கிறது.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)

**(க்ருஷ்ணன் பூதங்கள் பிராணன்முதலியவற்றைப்பற்றித் தம்பதிகள் பேசிக்கொண்டதை அர்ஜுனனுக்குச் சொல்லியது.)**

**பார்த்த**! பரதர்களுள் சிறந்தவனே! இந்த விஷயத்தில் ஒரு கணவனுக்கும் மனைவிக்கும் நடந்த ஸம்வாதமாகிய பின்வரும்பழைய இதிஹாஸத்தையும் உதாகரிக்கின்றனர். ஞான விஜ்ஞானங்களின் கரையை அடைந்தவரும் ஏகாந்தஸ்தலத்தில் உட்கார்ந்திருப்பவரும் தன் கணவருமான ஒரு பிராம்மணரைப் பார்த்து அவருடைய மனைவியான ஒரு பிராம்மணி சொல்லலானாள்:

'(அக்னிஹோத்ர முதலான) கர்மங்களை விட்டு உட்கார்ந்திருப்பவரும் என்னிடத்தில் தயையில்லாதவரும் (எனக்கு உம்மைத் தவிர வேறுகதியில்லை யென்பதைத்) தெரிந்து கொள்ளாதவருமான உம்மைப் பதியாக அடைந்த நான் எந்தலோகத்தை அடையப் போகிறேன்? மனைவிகள் கணவர்களால் ஸம்பாதிக்கப்பட்ட உலகங்களை அடைகிறார்களென்று நாம் கேட்டிருக்கிறோம். உம்மை நான் பர்த்தாவாக அடைந்து எந்தக் கதியை அடையப் போகிறேன்?' என்றாள். இவ்வாறு சொல்லக்கேட்டவரும் சாந்தமான சித்தமுள்ளவருமான அந்தப்பிராம்மணர் அவளைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு, 'நல்ல அதிர்ஷ்டமுள்ளவளே! குற்றமற்றவளே! உன்னுடைய இந்த வார்த்தையில் நான் அஸூயைப்படவில்லை. கிரஹிக்கத்தக்கதும் பார்க்கத்தக்கதும் கேட்கத்தக்கதுமாக எந்தக் கர்

---

1 வேறுபாடம்.

மம ...ருக்கிறதோ அதனையே கர்மஞ் செய்பவர்கள் 'கர்மா, கர்மா' என்று நிச்சயிக்கின்றனர். ஞானமின்றிக் கர்மங்களைச் செய்பவர்கள் மோகத்தையே அடைகின்றனர். இவ்வுலகில் [1]உருவமுள்ள வஸ்துவில் கர்மமில்லாமை காணப்படமாட்டாது. சரீரத்தாலும் மனத்தாலும் வாக்காலும் செய்யப்படும் நல்வினையும் தீவினையும் பிறப்பு முதலிய சரீர வேற்றுமைகளுக்குக் (காரணமாக) பிராணிகளிடத்தில் இருக்கின்றன. பார்க்கவும் கேட்கவும்கூடிய கர்மங்கள் [2]ராக்ஷஸர்களால் கெடுக்கப்படும்போது அதனால் நான் (வைராக்யமடைந்து) [3]ஆத்மாவுக்கு இருப்பிடமான ஓர் [4]இடத்தைப் புத்தியினால் பார்த்துக்கொண்டேன். அவ்விடத்தில் துவந்துவமற்ற அந்தப் பிரம்மம் இருக்கிறது. அவ்விடத்தில் [5]ஸோமன் [6]அக்னியுடன் வஸிக்கிறான். புத்தியைத் தூண்டுகிறவனும் பிராணிகளைத் தரிக்கிறவனுமான வாயு எப்பொழுதும் ஸஞ்சாரம் செய்கிறான். அவ்விடத்தில் பிரம்மதேவர் முதலானவர்களும், நல்ல விரதமும் சாந்தமான மனமுமுள்ளவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான வித்வான்களும் ஜாக்ரதையுள்ளவர்களாக அக்ஷரமான அந்தப் பிரம்மத்தை உபாஸிக்கிறார்கள். அந்தப் பிரம்மத்தை மூக்கினால் மோக்கமுடியாது; நாவினால் ருசி பார்க்க முடியாது. அந்தப் பிரம்மத்தை த்வக்கினால் தொடமுடியாது. மனத்தினால்மட்டும் அறியலாம். அது கண்ணால் பார்க்கமுடியாதது. செவிப்புலனுக்கு விஷயமாகாத ஒரு வஸ்து; கந்தமற்றது; ரஸமற்றது; ஸ்பர்சமற்றது; ரூபமற்றது; சப்தமற்றது; ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்கள் அந்தப் பிரம்மத்தினிடமிருந்தே உண்டாகின்றன. இவ்வுலகமானது அந்தப் பிரம்மத்தினிடம் நிலைபெற்றிருக்கிறது. பிராணனும் அபானனும் ஸமானனும் வியானனும் உதானனும் அந்தப் பிரம்மத்தினிடமிருந்தே உண்டாகின்றன; அந்தப் பிரம்மத்தினிடத்திலேயே லயமடைகின்றன. ஸமானனுக்கும் வ்யானனுக்கும் நடுவில் பிராணனும் அபானனும் ஸஞ்சரிக்கின்

1 'முஹூர்த்தகாலங்கூடக் கர்மமில்லாமலிருக்க முடியாது' என்பது வேறு பாடம்.

2 'துர்ஜனர்களால்' என்பது பழைய உரை.

3 'சரீரத்திலுள்ள' என்றும் கொள்ளலாம்.

4 'புருவங்களுக்கும் மூக்குக்கும் நடுவிலுள்ள இடம்' என்பது பழைய உரை.

5 'இடா' என்பது பழைய உரை. 6 'பிங்களா' என்பது பழைய உரை

றன. பிராணனும் அபானனும் [1]லயமடைந்தால் ஸமானனும் வியானனும் லயமடைகின்றன. அபானனுக்கும் பிராணனுக்கும் நடுவில் உதானன் வியாபித்துக்கொண்டிருக்கிறது. அதனால், படுத்துக்கொண்டிருக்கும் புருஷனைப் பிராணனும் அபானனும் விடுகிறதில்லை. பிராணனைக் கெடுக்காத காரணத்தால் அதனை உதானனென்று சொல்லுகிறார்கள். ஆகையினால், பிரம்மவாதிகள் தவத்தை அதனிடமிருந்து உண்டானதாக நிச்சயிக்கின்றனர். ஒன்றோடொன்று சேர்ந்து சரீரத்தில் ஸஞ்சாரம்செய்யும் அந்த எல்லா வாயுக்களுக்கும் நடுவிலுள்ள ஸமானனுக்கு ஸ்தானமான நாபியின் நடுவில் வைஸ்வாநரனென்னும் அக்கினியானது ஏழுவிதமாக அமைக்கப்பட்டிருக்கிறது. மூக்கு, நா, கண், த்வக்கு, காது, மனம், புத்தி, இவைஏழும் வைஸ்வாநராக்னியின் ஜ்வாலைகள். மோக்கத்தக்கது, குடிக்கத்தக்கது, பார்க்கத்தக்கது,தொடத்தக்கது, கேட்கத்தக்கது, நினைக்கத்தக்கது, அறியத்தக்கது இவை ஏழும் ஸமித்துக்களென்று கருதப்பட்டிருக்கின்றன. மோப்பவன் பக்ஷிப்பவன் பார்ப்பவன் தொடுபவன் கேட்பவன் நினைப்பவன் அறிபவன் இவ்வேழுபேர்களும் சிறந்த ரித்விக்குக்களாகின்றனர். நல்ல பாக்கியமுள்ளவளே! மோக்கத்தக்கதிலும் குடிக்கத்தக்கதிலும் பார்க்கத்தக்கதிலும் தொடத்தக்கதிலும் கேட்கத்தக்கதிலும் நினைக்கத்தக்கதிலும் அறியத்தக்கதிலும் எப்பொழுதும் (இவ்விதம்) பார்ப்பாயாக. வித்வான்களான ஏழு ஹோதாக்களும் ஏழுவிதமான ஹவிஸுகளையும் ஏழு அக்னிகளில் நன்றாக ஹோமம்செய்து தானென்னும் பிரம்மமாகிற காரணங்களில் பிருதிவிமுதலியவற்றைப் பிறப்பிக்கின்றனர். பிருதிவி, வாயு, ஆகாயம், ஜலம், தேயு, மனம், புத்தி இவை ஏழும் (அறிவு பிரகாசிப்பதற்குக்) காரணமென்று சொல்லப்பட்டன. ஹவிஸாக இருக்கும் (மோக்கத்தக்கது முதலிய)எல்லா விஷயங்களும் (இந்திரியங்களாகிற) அக்னிகளால் உண்டான [2]விஷ்யஜ்ஞானரூபமான புத்திவிருத்தியை அடைந்து சித்தத்தில் வாஸஞ்செய்து (மறுபடி) தம் காரணங்க(ளான இந்திரியங்க)ளில் உண்டாகின்றன. அவைகள் பூதங்களைப்படைக்கின்றன. [3] பிரளயத்தில் அந்தச் சித்தத்திலேயே தங்கியபடுகின்றன. அதிலிருந்து கந்தமுண்டாகிறது. அதிலிருந்து ரஸம்

---

1 'புருவங்களுக்கும் மூக்குக்கும் நடுவில் தங்கியப்பட்டால்'என்பது பழைய உரை.

2 வேறு பாடம்.

3 ஸுஷுப்தி காலத்தில்.

உண்டாகிறது. அதிலிருந்து ரூபம் உண்டாகிறது. அதிலிருந்து ஸ்பர்சம் உண்டாகிறது. அதிலிருந்து சப்தம் உண்டாகிறது. அதிலிருந்து ஸம்சயம் உண்டாகிறது. அதிலிருந்து நிச்சயபுத்தி உண்டாகிறது. இவ்விதம் ஏழு விதமான ஜன்மாவை அறிகிறார்கள். புராதனர்களானரிஷிகள் இவ்விதமாகவே அறிந்துகொண்டிருக்கின்றனர். அவர்களோ(எங்கும்) நிறைந்த பிரம்மத்தின் [1]ஆஹுதிகளால் நிறைந்தவர்களும் தேஜஸால் நிறைந்தவர்களுமாக இருக்கின்றனர்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பத்து இந்திரியங்களின் குணங்களையும்பற்றிப் பிராம்மண தம்பதிகளுக்கு நடந்த ஸம்பாஷணை.)**

இந்தவிஷயத்தில் புராதனமான இந்த இதிஹாஸத்தையும் எடுத்துக் கூறுகின்றனர். இதுவிஷயத்தில் பத்து ஹோதாக்களின் விதி எப்படிப்பட்டதென்பதைத் தெரிந்துகொள். பெண்ணே! காது த்வக்கு கண்கள் நாக்கு மூக்கு கால்கள் கைகள் உபஸ்தம் பாயு வாக்கு என்று பத்து ஹோதாக்கள். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் கந்தம், நடை, செய்கை, ரேதஸையும் மூத்திரத்தையும் விடுவது, மலத்தை வெளிப்படுத்துவது, வாக்யம் ஆகிய பத்தும் ஹவிஸுகள். பெண்ணே! திசைகள் வாயு ஸூர்யன் சந்திரன் பிருதிவி அக்னி விஷ்ணு இந்திரன் பிரஜாபதி மித்திரன் இப்பத்தும் அக்னிகள். பெண்ணே! பத்து இந்திரியங்களும் ஹோதாக்கள். ஹவிஸுகளென்னும் பத்து விஷயங்களாகிற ஸமித்துக்கள் பத்து அக்னிகளில் ஹோமஞ் செய்யப்படுகின்றன. [2] சித்தமானது ஸ்ருவமாகவும் (ஸம்ஸ்காரம் அல்லது புண்ய பாபங்கள்) தனமாகவும் பரிசுத்தமான ஞானம் மிச்சமாகவும் இருக்கின்றன. ஞானத்தைக் காட்டிலும் வேறான இவை

---

1 'தியானத்தால்' என்பது கருத்து. 'ஆஹ்வானங்களால்' என்பது பழைய உரை.

2 ஸ்ருவத்தால் ஆஜ்யத்தை அக்னியில் ஹோமம்செய்து ஸ்ருவத்தையும் தக்ஷிணைக்காகத் தனத்தையும் தியாகம்செய்வதுபோலச் சித்தத்தால் விஷயங்களுடன்கூடின இந்திரியங்களைக் காரணத்திலடக்கிக் காரணமான சித்தத்தையும் புண்ணியபாபங்களையும் விட்டுப் பரிசுத்தமும் உத்தமமுமான ஞானத்தை அடையவேண்டும். சித்தமும் ஸம்ஸ்காரம் அல்லது புண்ணிய பாபங்களும் விஷயங்களை உண்டுபண்ணுகின்றன என்பது கருத்து.

முந்தி ஜகத்தாக ஆயினவென்று கேள்வி. [1]ஞானத்தை விரும்புகிறவன் எல்லாம் இந்தச்சித்தத்திலிருப்பதாகத் தெரிந்துகொள்ள வேண்டும். [2]ரேதஸினால்உண்டான சரீரத்தில் அபிமானமுள்ளவனும் ஸூக்ஷ்மசரீரத்தில் அபிமானமுள்ளவனும் அறிபவனுமான ஜீவன் சரீரத்தில் இருக்கிறான். சரீராபிமானியான ஜீவன் ஹ்ருதயமென்னும் கார்ஹபத்தியாக்னியாகிறான். அந்த அக்னியிலிருந்து ஆஹவனீயமென்னும் மனமாகிற அக்னி உண்டாகிறது. அதில் ஹவிஸானது ஹோமம் செய்யப்படுகிறது. அதிலிருந்து வேதமென்னும் வாக்கு உண்டாயிற்று. அதை [3]மனமானது பார்த்தது. (அதிலிருந்து) [4]வர்ணமற்றதான பிராணவாயு உண்டாயிற்று. அது மனத்தை அனுஸரித்தது' என்று சொன்னார்.

பிராம்மண ஸ்திரீ, 'என்ன காரணத்தினால் வாக்கு முதலில் உண்டாயிற்று? எந்தக் காரணத்தால் மனம் பின்பு உண்டாயிற்று? முந்தி மனத்தால் ஆலோசிக்கப்பட்டதைத் தானே வாக்கு அடைகின்றது? எந்தச் சாஸ்திர ஞானத்தால் பிராணனானது சித்தத்தை அடைந்ததாகத் தெரிந்து கொள்ளலாம்? அது (ஸுஷுப்தியில்) ஏன் விருத்தியடைந்து விஷயங்களை அடையவில்லை? யார் அதனைத் தடுக்கிறார்?' என்று வினவினாள். பிராம்மணர் சொல்லத்தொடங்கினார். '[5]அபானன் அந்தப் பிராணனுக்குப் பிரபுவாக இருக்கிறது. ஆகையால், அதை (ஸுஷுப்தியில்) அபானனாகச் செய்கிறது. அந்தப்பிராணனுடையகதியைமனத்தினுடைய கதிக்கு ஸாதனமாகச்சொல்லுகிறார்கள். அதனால், மனமானது பிராணனுடைய கதியை அபேக்ஷிக்கிறது. நீ வாக்கையும் மனத்தையும்பற்றிய கேள்வியைக்கேட்டமையால், உனக்கு அவைகளுடைய ஸம்வாதத்தையே சொல்லுகிறேன். வாக்கு மனம் இரண்டும் [6]பூதாத்மாவினிடம் சென்று, 'பிரபுவே! எங்களிருவருள் சிறந்தவன் யார்? சொல்லும். எங்களுடையஸந்தேஹத்தை நிவிருத்தி செய்யும்' என்று வினவின. அப்பொழுது பகவான் வாக்கை நோக்கி 'மனம்தான் சிறந்

1 அதிகபாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

2 ரேதஸ் சரீரமாக மாறுகிறது. அந்தச்சரீரத்தில் அதனைத் தரித்துக் கொண்டிருப்பவன், அறிவுள்ள ஜீவன் என்றும் கொள்ளலாம்.

3 'மனோமயமான ஸூத்ராத்மா' என்பது பழைய உரை.

4 வேறுபாடம்.

5 வேறுபாடம்.

6 'ஜீவன்' என்பது பழைய உரை.

தது' என்று சொல்லினர். பிறகு, வாக்கானது அவரை நோக்கி, 'நான் தான் உமக்கு இஷ்டங்களைக் கொடுக்கிறேன்' என்று சொல்லிற்று. ([1]பிராம்மணர் அதனை நோக்கி) [2]ஸ்தாவரத்தையும் [3]ஜங்கமத்தையும் என்னுடைய இரண்டு [4]மனங்களாகத் தெரிந்துகொள். (அவைகளில்) ஸ்தாவரமானது என் வசத்திலும் ஜங்கமமானது உன் வசத்திலும் இருக்கின்றன. உனக்கு விஷயமாகும் மந்திரமும் வர்ணமும் ஸ்வரமும் ஜங்கமம் என்னும் மனமாகும். அதைக் காட்டிலும் நீ மேன்மை பெற்றவளாகிறாய். அழகாக இருப்பவளே! ஆகையால், நான் உன்னை அடைந்து க்ஷேமம் பெறத்தக்கவனாகிறேன். ஸரஸ்வதி! ஆகையால், தேறுதல் செய்துகொண்டு சொல்லுகிறேன். பெரிய பாக்கியமுள்ளவளே! பிராணனுக்கும் அபானனுக்கும் நடுவில் எந்த வாக்கானது எப்பொழுதும் இருக்கிறதோ அது ஸந்தோஷத்துடன் என்னையும் பிராணனையும் விட்டுவிட்டுப் பிரம்மாவினிடம் சென்று, 'பகவானே! கிருபை செய்யும்' என்று சொல்லிற்று. பிறகு, மறுபடியும் வாக்கை விருத்தி செய்துகொண்டு பிராணன் உண்டாயிற்று. வாக்கானது அதனால் பிராணனை அடைந்து ஒருபோதும் பேசுகிறதில்லை. (அந்த வாக்கானது) [5] கோஷிணியாகவும் [6]ஜாதநிர்க்கோஷையாகவும் எப்பொழுதுமே பிரவிர்த்திக்கிறது. அவ்விரண்டனுள்ளும் கோஷிணியைக்காட்டிலும் நிர்க்கோஷையே சிறந்ததாகும். உத்தமமாகப் பிரகாசிக்கும் கோஷிணியானது பசுவைப்போலச் சிறந்த பொருள்களைப் பெருக்குகிறது. உபநிஷத் வார்த்தையான இந்த நிர்க்கோஷையோ சாஸ்வதமும் நித்யஸித்தமுமான மோக்ஷத்தைக் கொடுக்கிறது. சுத்தமான சிரிப்புள்ளவளே! ஸூக்ஷ்மமும் முயற்சியுள்ளவைகளுமான வாக்கு மனம் இவ்விரண்டினுக்குமுள்ள [7]திவ்யமும் [8]அதிவ்யமுமான பிரபாவத்தாலாகிய

---

1 'மனமென்னும் பிராம்மணன்' என்பது பழைய உரை.

2 'வெளியிலுள்ள இந்திரியங்களால் அறியத்தக்கது' என்பது பழைய உரை.

3 'இந்திரியங்களுக்குப் புலப்படாத ஸ்வர்க்க முதலானவை' என்பது பழைய உரை.

4 'மனத்தினால் உண்டு பண்ணப்பட்டவை' என்பது கருத்து.

5 சப்த முள்ளது.

6 சப்த மில்லாதது.

7 தேவர்கள் முதலானவர்களை வரவழைக்கக் கூடிய ஸாமர்த்தியம்' என்பது பழைய உரை.

8 'வ்யவஹார முதலான ஸாமர்த்தியம்' என்பது பழைய உரை.

வேற்றுமையைப் பார்' என்று சொன்னார். ப்ராம்மணஸ்த்ரீ, 'வாக்கியங்கள் உண்டாகாமலிருக்கும்போது [1] பேசவேண்டுமென்கிற இச்சையினால் தூண்டப்பட்டு ஸரஸ்வதிதேவியானவள் அப்பொழுது முதலில் எவ்விதம் பேசினாள்?' என்று வினவ, பிராம்மணர் சொல்லலானார்: 'வாக்கானது பிராணனால் சரீரத்தினுள் உண்டாகிப் பிராணனிடமிருந்து அபானனை அடைந்து உதானனுடன் கலந்து சரீரத்தை விட்டு வியானனுடன் சேர்ந்து ஆகாயத்தையெல்லாம் வியாபிக்கிறது. பிறகு, ஸமானனிடத்தில் நிலைபெறுகிறது. இவ்விதமே வாக்கு முதலில் பேசிற்று. ஆகையால், மனமானது ஸ்தாவரமாக இருப்பதால், சிறந்ததாகிறது. அவ்விதமே, ஸரஸ்வதீதேவியானவள் ஜங்கமமாக இருப்பதால் சிறந்தவளாகிறாள்.

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



**(இந்திரியங்களின் குணங்களையும் அவற்றுக்கு மனத்தோடு நடந்த விவாதத்தையும்பற்றிப் பிராம்மண தம்பதிகளுக்கு நடந்த ஸம்பாஷணை.)**

நல்ல பாக்கியமுள்ளவளே! இந்த விஷயத்திலும் ஏழுஹோதாக்களின் விதி எப்படிப்பட்டதென்பதைப்பற்றிப் பழமையான இந்த இதிஹாஸத்தையும் உதாஹரிக்கின்றனர். க்ராணம் சக்ஷுஸ் ஜிஹ்வை துவக்கு ஶ்ரோத்ரம் மனம் புத்தி என்னும் இந்த ஏழுஹோதாக்களும் தனிமையான ஆஶ்ரயமுள்ளவைகள்; ஸூக்ஷ்மமான [2] இடத்தில் இருக்கும் இவைகள் ஒன்றையொன்று பார்க்கிறதில்லை. கல்யாணி! இந்த ஏழுஹோதாக்களையும் ஸ்வபாவமாக இருப்பவைகளாக நீ தெரிந்துகொள்' என்று சொன்னார். ப்ராம்மணி, 'பகவானே! பிரபுவே! ஸூக்ஷ்மமான இடத்திலிருக்கும் அவைகள் எவ்விதம் ஒன்றையொன்று பாராமல் இருக்கின்றன? எவ்வித ஸ்வபாவமுள்ளவைகள்? இவற்றை எனக்குச் சொல்லும்' என்று வினவ, பிராம்மணர் சொல்லத்தொடங்கினார். [3] 'குணங்களை அறியாமை அவிஜ்ஞானமாகும். குணங்களை அறிவது அபிஜ்ஞதையாகும். இவைகள் ஒருபொழுதும் ஒன்று மற்றொன்றின்குணங்களை அறிகிறதில்லை. நாக்கும் கண்ணும் காதும் த்வக்கும் மனமும் புத்தியும் கந்தங்களை அறிகிறதில்லை. மூக்கு அக்கந்தங்களை அறிகிறது. மூக்கும் கண்ணும்

1 வேறு பாடம். 2 வேறுபாடம். 3 வேறுபாடம்.

காதும் துவக்கும் மனமும் புத்தியும் ரூபங்களை அறிகிறதில்லை. கண் அந்த ரூபங்களை அறிகிறது. மூக்கும் நாக்கும் கண்ணும் காதும் புத்தியும் மனமும் ஸ்பர்சங்களை அறிகிறதில்லை. த்வக்கு அவைகளை அறிகிறது. மூக்கும் நாக்கும் கண்ணும் துவக்கும் மனமும் புத்தியும் சப்தங்களை அறிகிறதில்லை. காது அவைகளை அறிகிறது. மூக்கும் நாக்கும் கண்ணும் த்வக்கும் காதும் புத்தியும் ஸங்கல்பங்களை அடைகிறதில்லை. மனம் அவைகளை அடைகிறது. மூக்கும் நாக்கும் கண்ணும் துவக்கும் காதும் மனமும் நிச்சயத்தை அடைகிறதில்லை. புத்தியானது அதனை அடைகிறது. பெண்ணே! இந்த விஷயத்திலும் இந்திரியங்களுக்கும் மனத்துக்கும் நடந்த ஸம்வாதமான புராதனமான இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர்.

மனம், 'நானில்லாமல் மூக்கு மோக்கிறதில்லை. நாக்கு ரஸத்தை அறிகிறதில்லை. கண் ரூபத்தை அறிகிறதில்லை. துவக்கு ஸ்பர்சத்தைஅறிகிறதில்லை. நானில்லாமல், காது எவ்விதத்திலும் சப்தத்தைஅறிகிறதில்லை. (ஆகையால்) நான் எல்லாப் பூதங்களுள்ளும் மிகச்சிறந்தவனும் ஸநாதனனுமாக இருக்கிறேன். ஜனங்களில்லாத வீடுகள்போலவும் ஜ்வாலைதணிந்த அக்னிகள்போலவும் நானில்லாத இந்திரியங்கள் ஒருபோதும் பிரகாசிக்கிறதில்லை. நானில்லாவிட்டால் எல்லாப்பிராணிகளும் முயற்சியுள்ளவைகளான இந்திரியங்களாலும் குணங்களென்னும் விஷயங்களை ஈரமுள்ளவையும் உலர்ந்தவையுமாயிருக்கும் விறகுகள் (ஒன்றையும் அறியாததுபோல) அறிகிறதில்லை' என்று சொல்லிற்று. இந்திரியங்கள், '(மனமே!) நாங்களில்லாமல் நீ எங்களுடைய விஷயங்களாகிற போகங்களை அனுபவிப்பாயானால், நீ எண்ணியபடி இது இவ்விதமே உண்மையாகும். நாங்கள் லயமடைந்திருக்கும் போது நீ போகங்களை அனுபவித்துப் பிராணனைத் தரிக்கக்கூடிய திருப்தி ஏற்படுமானால் நீ எண்ணியவண்ணம் இது உண்மையாகும். அல்லது, நாங்கள் லயத்தைஅடைந்து விஷயங்களிலிருக்கும்போது நீ ஸங்கல்பத்தினால்மட்டும் போகங்களை உள்ளபடி அனுபவிப்பாயானால், நீ எண்ணியபடி இது உண்மையாகும். அல்லது, எங்கள் விஷயங்களில் எப்பொழுதும் ஸித்தியானது, (உன்னால் உண்டாவதாக) நீ நினைப்பாயானால், மூக்கினால் ரூபத்தையும் நேத்திரத்தால் ரஸத்தையும் காதினால் கந்தங்களையும் நாவினால் ஸ்பர்சங்களையும் துவக்கினால் சப்தத்தையும் புத்தியினால் ஸ்பர்சத்தையும் அறிவாயாக. மிக்க துர்ப்பலர்களான எங்களுடைய நியமங்கள் பலமுள்ளவைகளும் பிறருக்கு வசப்படாதவைகளுமாயிருக்கின்றன. நீ புதியனவான போகங்களை

அனுபவி. எச்சிலைப் புஜிக்கத்தகுந்தவனல்ல. சிஷ்யனானவன் வேதார்த்தத்தை உபதேசிக்கும் ஆசாரியரிடம் சென்று அவரிடம் கேட்டதைத் தெரிந்துகொண்டு வேதார்த்தத்தைச் சிந்திப்பதுபோல நீ எங்களால் காண்பிக்கப்பட்டவைகளும் கனவிலும் விழிப்பிலும் அனுபவிக்கப்பட்டுச் சென்றவைகளுமான விஷயங்களை இவ்விதம் நினைக்கிறாய். மனவருத்தமுள்ளவைகளும், மனோபலமற்றவைகளுமான பிராணிகளுக்கு எங்கள்விஷயமான கார்யம் செய்யப்பட்டபொழுது உயிர் வாழ்தல் காணப்படுகிறது. ஒருவன் அனேகமான ஸங்கல்பங்களை நினைத்தாலும் ஸ்வப்னங்களை அனுபவித்தாலும் அனுபவிக்கவேண்டுமென்ற இச்சையால் பிடிக்கப்பட்டு விஷயங்களைக்குறித்தே செல்லுகிறான். பாஹ்யேந்திரியங்களில்லாததுபோலிருக்கும் ஹிருதயாகாசத்தில் நாள்தோறும் பிரவேசித்து ஸங்கல்ப போகங்களென்னும் விஷயங்களை அனுபவியாமல் மனம் லயமடைந்திருக்கும்போது ஜ்வலிக்கின்ற அக்னியானது விறகு இல்லாதபோது தணிவதுபோலச் சாந்தியை அடைகிறான். [1] நாங்கள் எங்களுடைய குணங்களைக் கிரஹிக்கிறோம். ஒருவனுடைய குணத்தை மற்றொருவன் அறிகிறதில்லை. நாங்களில்லாமல் (உனக்கு) ஸங்கல்பம் என்னும் ஞானம் உண்டாகிறதில்லை. அந்த ஸங்கல்பஞானம் இல்லாவிட்டால் உனக்கு ஸந்தோஷம் உண்டாகிறதில்லை' என்றன.

---

இருபத்துநான்காவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(பிராணாபானங்களின் சிறப்பின் விவாதத்தைப்பற்றிய பிராம்மண தம்பதிகளின் ஸம்பாஷணை.)**

நல்ல அழகுள்ளவளே ! இந்த விஷயத்தில் ஐந்து ஹோதாக்களுடைய விதி இவ்வுலகில் எப்படி இருக்கிறதென்பதைப்பற்றிய புராதனமான இந்த இதிஹாஸத்தையும் எடுத்துக் கூறுகின்றனர். வித்வான்கள், பிராணன் அபானன் உதானன் ஸமானன் வியானன் ஆகிய இவ்வைந்து ஹோதாக்களைப்பற்றியும் அவற்றின் மேன்மையைப்பற்றியும் அறிவார்கள்' என்று சொன்னார். பிராம்மணி, 'இயற்கையினால் ஏழு ஹோதாக்களென்று முந்தி நான் எண்ணியிருந்தேன். ஐந்து ஹோதாக்களென்பதையும் அவற்றின் மேன்மையையும் சொல்லும்'

---

1 வேறு பாடம்.

என்று வினவ, பிராம்மணர் சொல்லத் தொடங்கினர். 'பிராணனால் தரிக்கப்பட்ட வாயு பிறகு அபானனாக ஆகிறது. அபானனால் வஹிக்கப்பட்ட வாயு பிறகு வியானனாகிறது. வியானனால் வஹிக்கப்பட்ட வாயு பிறகு உதானனாகிறது. உதானனால்வஹிக்கப்பட்ட வாயு பிறகு ஸமானனாகிறது. அவைகள் முற்காலத்தில் முந்திப் பிறந்தவரான பிதாமஹரிடம் சென்று, 'எங்களுக்குள் எவன் சிறந்தவனென்பதைச் சொல்லும். அவனே எங்களுள் சிறந்தவனாகட்டும்' என்று வினவின. பிரம்மதேவர், 'பிராணிகளுடைய சரீரத்தில் எது லயமடைந்தால் எல்லாப் பிராணன்களும் லயமடைகின்றனவோ, எது கிளம்பினால் மீண்டும் ஸஞ்சரிக்கின்றனவோ அதுவே சிறந்தது. இஷ்டமான இடத்திற்குச் செல்லுங்கள்' என்று சொன்னர். பிராணன், 'பிராணிகளுடைய சரீரத்தில் நான் லயமடைந்தால் எல்லாப் பிராணன்களும் லயமடைகின்றன; நான் கிளம்பினால் மீண்டும் ஸஞ்சரிக்கின்றன. நான்தான் சிறந்தவன். நான் லயமடைகிறேன்; பாருங்கள்' என்று சொல்லிற்று. பிறகு, பிராணன் லயமடைந்தது; மறுபடியும் ஸஞ்சரித்தது. கல்யாணி! மறுபடியும், ஸமானனும் உதானனும் (பிராணனைப் பார்த்து), 'பிராண! நீ இந்தச் சரீரத்தில் எங்களைப்போல இதை யெல்லாம் வியாபித்துக்கொண்டிருக்கவில்லை. நீ எங்களுக்குச் சிறந்தவனல்லன். அபானன்தான் உன்னுடைய வசத்திலிருக்கிறான்' என்ற வார்த்தையைச் சொல்லின. மறுபடியும், பிராணன் ஸஞ்சரித்தது. பிறகு, அபானன், 'பிராணிகளுடைய சரீரத்தில் நான் லயமடைந்தால் எல்லாப் பிராணன்களும் லயமடைகின்றன; நான் கிளம்பினால் மறுபடியும் ஸஞ்சரிக்கின்றன. நான்தான் சிறந்தவன். நான் லயமடைகிறேன்; பாருங்கள்' என்று சொல்லிற்று. பிறகு, வியானனும் உதானனும் (அவ்விதம்) பேசுகின்ற அந்த அபானனைப்பார்த்து, 'அபான! நீ சிறந்தவனல்லை. பிராணனன்றோ உனக்கு வசப்பட்டிருக்கிறான்?' என்று சொல்லின. பிறகு, அபானன் ஸஞ்சரித்தது. மறுபடியும், வியானன் அந்த அபானனைப்பார்த்து, 'நான் எந்தக் காரணத்தினால் எல்லோருக்கும் சிறந்தவனாக இருக்கிறேனென்பதைக் கேள். பிராணிகளின்சரீரத்தில் நான் லயமடைந்தால் எல்லாப்பிராணன்களும் லயமடைகின்றன. நான் கிளம்பினால் மறுபடியும் ஸஞ்சரிக்கின்றன. நான்தான் சிறந்தவன். நான் லயமடைகிறேன்; பாருங்கள்' என்று சொல்லிற்று. பிறகு, வியானன் லயமடைந்தது; மறுபடியும் ஸஞ்சரித்தது. பிராணனும் அபானனும் உதானனும் ஸமானனும் அந்த வியானனை நோக்கி, 'வியான! நீ எங்களுக்குச் சிறந்தவனல்லன்.

ஸமானன் உன் வசத்திலிருக்கிருன்' என்று சொல்லின. மறுபடியும், வியானன் ஸஞ்சரித்தது. ஸமானன் மறுபடியும், 'எந்தக் காரணத்தால் நான் எல்லோரிலும் சிறந்தவனென்பதைக் கேளுங்கள். பிராணிகளுடைய சரீரத்தில் நான் லயமடைந்தால் எல்லாப் பிராணன்களும் லயமடைகின்றன. நான் கிளம்பினுல் மறுபடியும் ஸஞ்சரிக்கின்றன. நான்தான் சிறந்தவன். நான் லயமடைகிறேன்; பாருங்கள்' என்று சொல்லிற்று. பிறகு, ஸமானன் லயமடைந்தது; மறுபடியும் ஸஞ்சரித்தது. பிராணனும் அபானனும் உதானனும் வியானனும் அந்த ஸமானனைநோக்கி, 'ஸமான! நீ சிறந்தவனல்லன். வியானன்தான் உன் வசத்திலிருக்கிருன்' என்றன. பிறகு, ஸமானன் ஸஞ்சரித்தது. உதானன் அந்த ஸமானனைப்பார்த்து, 'நான் எந்தக்காரணத்தால் எல்லோரிலும் சிறந்தவனென்பதைக் கேளுங்கள். பிராணிகளுடைய சரீரத்தில் நான் லயமடைந்தால் எல்லாப்பிராணன்களும் லயமடைகின்றன; நான் கிளம்பினுல் மறுபடியும் ஸஞ்சரிக்கின்றன. நானே சிறந்தவன். நான் லயமடைகிறேன்; பாருங்கள்' என்று சொல்லிற்று. பிறகு, உதானன் லயமடைந்தது; மறுபடியும் ஸஞ்சரித்தது, பிராணனும் அபானனும் ஸமானனும் வியானனும் அந்த உதானனை நோக்கி, 'உதான! நீ சிறந்தவனல்லன். வியானன்தான் உன் வசத்திலிருக்கிருன்' என்றன. பிறகு, பிரம்மதேவர் சிரித்துக்கொண்டு அவைகளெல்லாவற்றையும் நோக்கி, 'நீங்கள் எல்லோரும் சிறந்தவர்களும் சிறந்தவர்களல்லாதவர்களுமாக இருக்கிறீர்கள். எல்லாரும் ஒருவரையொருவர் அபேக்ஷித்தவர்களாயிருக்கிறீர்கள். எல்லாரும் தம் தம் காரியத்தில் சிறந்தவர்கள். எல்லாரும் ஒருவருடைய தர்மத்தை மற்ருெருவர் அடுத்தவர்களாக இருக்கிறீர்கள்' என்று சொன்னுர். பிரம்மதேவர், சேர்ந்திருக்கும் அவைகளனைத்தையும் நோக்கிப் பின்வருமாறு கூறலானுர். 'ஒருவன் ஸ்திரமாக இருப்பவன்; மற்றவர்கள் ஸஞ்சரிப்பவர்கள். விசேஷித்து ஐந்து வாயுக்களும் ஸஞ்சரிக்கின்றன. ஒருவனே எல்லோருக்கும் ஆத்மாவாக இருந்துகொண்டு பலவிதமாக விருத்தியடைகிருன். நீங்கள் ஒருவருக்கொருவர் ஸுஹ்ருத்துக்களாகவும் ஒருவரையொருவர் ரக்ஷிப்பவர்களாகவும் இருங்கள். ஒருவரையொருவர் தாங்குவீர்களாக. க்ஷேமமாகச் செல்லுங்கள். உங்களுக்கு மங்களம் உண்டாகுக' என்று சொன்னுர்.

---

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(நாரதரும் தேவமதரும் படைப்புமுதலியவற்றைப்பற்றிப் பேசிக்கொண்டதைக்குறித்துப் பிராம்மண தம்பதிகளின் ஸம்பாஷணை.)**

இந்த விஷயத்திலும் ரிஷியான நாரதருக்கும் தேவமதருக்கும் நடந்த ஸம்வாதமும் புராதனமுமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். தேவமதர், நாரதரை நோக்கி, 'பிறக்கும் பிராணிக்கு எது முதலில் உண்டாகிறது? பிராணனா? அபானனா? ஸமானனா? வியானனா? உதானனா?' என்று கேட்டனர். நாரதர், 'இந்தப் பிராணியானது எதனால் படைக்கப்படுகிறதோ அதைக்காட்டிலும் வேறொன்று அந்தப் பிராணியை முதலில் அடைகிறது. பிராணத் துவந்துவமும், 1 திர்யக்கும், 2 உயர்ந்ததும் 3 தாழ்ந்ததும் தெரிந்துகொள்ளத் தக்கன' என்று சொன்னார். தேவமதர், 'இந்தப் பிராணியானது எதனால் படைக்கப்படுகிறது? வேறு எது முந்தி அதனை அடைகிறது? (இவற்றையும்) பிராணத்துவந்துவத்தையும் திர்யக்கையும் மேலானதையும் கீழானதையும் எனக்குச் சொல்லும்' என்று கேட்க, நாரதர் சொல்லத் தொடங்கினார்.

'ஆனந்தமானது, ஸங்கல்பத்தாலும் சப்தத்தாலும் ரூபரஸகந்த ஸ்பர்சங்களினாலும் உண்டாகிறது. சுக்கிலமும் சோணிதமும் சேர்வதிலிருந்து முதலில் பிராணன் நடைபெறுகிறது. (அந்தப்) பிராணனால் சுக்கிலம் ஒரு மாறுதலையடையப் பிறகு அபானன் உண்டாகிறது. சுக்கிலத்தாலும், ரஸத்தாலும் அபானன் உண்டாகிறது. தம்பதிகளின் (மத்தியில்) ஹர்ஷம்தான் உதானனுடைய ரூபமாகிறது. காமத்திலிருந்து சுக்கிலமும் சுக்கிலத்திலிருந்து ரஜஸும் உண்டாகின்றன. ஸமானனுக்கும் வியானனுக்கும் பொதுவாகச் சுக்கிலமும் சோணிதமும் உண்டாகின்றன. பிராணன் அபானன் என்கிற த்வந்துவமானது மேலும் கீழும் செல்லுகிறது. வியானனும் ஸமானனும் குறுக்காகச் செல்லும் துவந்துவமாகின்றன.

'அக்னிதான் எல்லாத்தேவதைகளாயும் இருக்கிறான்.' என்ற பகவானுடைய கட்டளையினால் பிராணிகளிடத்தில் புத்தியோடுகூடிய

'1 மானிடர் முதலியவர், 2 தேவர் முதலியவர், 3 பசு முதலியன' என்பது பழைய உரை.

ஞானம் உண்டாகிறது. நல்லதேஜஸுள்ள அந்தப் பரமாத்மாவாகிற அக்னிக்குத் தமோரூபம் புகையாகவும் ரஜஸ் பஸ்மமாகவும் இருக்கின்றன. எந்தப் பரமாத்மாவாகிற அக்னியில் ஹவிஸ் ஹோமம் பண்ணப்படுகிறதோ அதிலிருந்து எல்லாம் உண்டாகின்றன. யஜ்ஞத்தைத் தெரிந்தவர்கள் ஸமானனும் வியானனும் ஹவிஸென்று கருதுகின்றனர். பிராணனும் அபானனும் ஆஜ்யபாகங்கள். அவ்விரண்டின் நடுவிலும் பரமாத்மாவாகிற அக்னி இருக்கிறது. உதானனென்னும் பிரம்மத்தினுடைய சிறந்ததான இந்த ரூபத்தைப் பிராம்மணர்கள் அறிகிறார்கள். நிர்த்வந்த்வமென்பதை நான் சொல்லுகிறேன்; கேள். [1] அஹஸும் [2] ராத்ரியுமாகிய இவை துவந்துவமாகும். அவைகளின்நடுவில் பரமாத்மாவென்னும் அக்னி இருக்கிறது. உதானனென்னும் பிரம்மத்தினுடைய சிறந்ததான இந்த ரூபத்தைப் பிராம்மணர்கள் அறிகிறார்கள். மெய் பொய் இரண்டும் துவந்துவம்; அவைகளின் நடுவில் (பரமாத்மா என்னும்) அக்னி இருக்கிறது. உதானனென்னும் பிரம்மத்தினுடைய சிறந்ததான இந்தரூபத்தைப் பிராம்மணர்கள் அறிகிறார்கள். [3] ஸத்தும், [4] அஸத்தும் துவந்துவம். அவைகளின் நடுவில் (பிரம்மமென்னும்) அக்னி இருக்கிறது. உதானனென்னும் பிரம்மத்தினுடைய சிறந்த இந்தரூபத்தைப் பிராம்மணர்கள் அறிகின்றனர். சுபம் அசுபம் இரண்டும் துவந்துவமாகும். அவைகளின் நடுவில் (பிரம்மமென்னும்) அக்னி இருக்கிறது. உதானனென்னும் பிரம்மத்தினுடைய சிறந்ததான இந்த ரூபத்தைப் பிராம்மணர்கள் அறிகின்றனர். மேலான அந்தப் பிரம்மமானது (எந்த ஸங்கல்பத்தால்) ஸமானனாகவும் வ்யானனாகவும் ஆகிறதோ அந்த ஸங்கல்பத்தினால் கர்மமானது விஸ்தரிக்கப்படுகிறது. [5] இரண்டாவதோ ஸமானனால் மறுபடியுமே நிச்சயிக்கப்படுகிறது. வாமதேவருடைய ஞானமானது சாந்தியைப் பிரயோஜனமாகக் கொண்டது. சாந்தியானது ஸனாதனமான பிரம்மம். உதானனென்னும் பிரம்மத்தினுடைய இந்தச் சிறந்த ரூபத்தைப் பிராம்மணர்கள் அறிகிறார்கள்' என்று சொன்னார்.

1 2 'வித்யை அவித்யை என்றாவது, ஸுஷுப்தி ஜாகரணம் என்றாவது, உத்பத்தி பிரளயம் என்றாவது கொள்ளலாம்' என்பது பழைய உரை.

3 4 காரணம், கார்யம்.

5 'மூன்றாவதோ' என்பது வேறு பாடம்.

## இருபத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(செய்பவனையும் செய்கையையும்பற்றிப் பிராம்மண தம்பதிகளின் ஸம்பாஷணை.)

இந்த விஷயத்திலும், [1]சாதுர்ஹோத்ரவிதானத்தின் விதி எப்படிப்பட்டதென்பதைப்பற்றிப் புராதனமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். கல்யாணி! அதன் விதியை யெல்லாம் முறைப்படி உபதேசிக்கிறேன். ரஹஸ்யமும் ஆச்சரியமுமான இதை நான் சொல்லுகிறேன்; கேள், பெண்ணே! கரணம், கர்மா, கர்த்தா, மோக்ஷம் என்னும் இந்நான்கும் ஹோதாக்கள். இவைகளால் உலகம் வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஹோதாக்களின் ஸாதனமனைத்தையும் முழுதும் கேள். மூக்கு, நாக்கு, கண், த்வக்கு, காது, மனம், புத்தி, இவ்வேழும்(அவித்யை யென்னும்)கரணத்தைக் காரணமாகக்கொண்டவைகளென்று அறியத்தக்கவை. கந்தம், ரஸம், ரூபம், சப்தம், ஸ்பர்சம், நினைக்கத்தக்கது, அறியத்தக்கது இவ்வேழும் கர்மாவைக் காரணமாகக்கொண்டவை. மோப்பவன், பக்ஷிப்பவன், பார்ப்பவன், தொடுபவன், கேட்பவன், நினைப்பவன், அறிபவன் இவ்வெழுவரும் கர்த்தாவைக் காரணமாகக்கொண்டவர்களாக அறியத்தக்கவர்கள். ([2]க்ராண முதலான) குணங்களுள்ள இவர்கள் சுபாசுபங்களாக இருக்கின்ற (கந்த முதலான) தம் குணங்களை அனுபவிக்கின்றனர். இவ்வெழுவரும் [3]அபிமானமும் குணங்களுமற்றவர்களாகி மோக்ஷத்திற்குக் காரணமாகின்றனர். [4] தம் தம் ஸ்தானத்தை விதிப்படி அறிந்த வித்வான்களுக்கு அந்த (இந்திரியங்களென்னும்)குணங்கள் தேவதைகளாகி எப்பொழுதும் (விஷயங்களென்னும்) ஹவிஸை [5]அனுபவிக்கின்றன. ஹவிஸுகளையும் அன்னங்களையும் புஜிப்பவன் [6]மமதை

1 'இதிஹாஸத்தின் பெயர்' என்பது பழைய உரை.

2 'ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களுள்ள இவர்கள் தம் குணங்களாலாகிய சுபாசுபங்களை அனுபவிக்கின்றனர்' என்றும் கொள்ளலாம்.

3 'நான் என்பதற்குப் பொருளான ஜீவன் (இயற்கையில்) குணமற்றவன்; முடிவற்றவன்' என்பது வேறு பாடம்.

4 'இந்திரியங்களுக்கு அதிஷ்டானமான அவித்யை முதலானவற்றை' என்பது பழைய உரை.

5 அவர்களுக்கு விஷயங்களில் பற்றுதலில்லை என்பது கருத்து.

6 என்னுடையதென்னும் அபிமானம்.

யால் கெடுக்கப்படுகிறான். தனக்காக அன்னத்தைச் சமைக்கும்படி செய்பவன் மமதையால் கெடுக்கப்படுகிறான். அவனைப் புஜிக்கத் தகாததைப்புஜிப்பதும் மத்யபானமும் கெடுக்கின்றன. அவன் அன்னத்தைக் கொல்லுகிறான். அன்னம் அவனைக் கொல்லுகிறது. அவன் (அன்னத்தைக்)கொன்று, பிறகு,(அன்னத்தால்) கொல்லப்படுகிறான். (இவற்றை) [1]அறிந்தவன் இந்த அன்னத்தைப் புஜித்தால் ஈஶ்வரனாகி மறுபடியும் (இதை) உண்டுபண்ணுகிறான். அவனுக்கு அன்னத்தால் சிறிதும் தோஷம் உண்டாகிறதில்லை. மனத்தால் நினைக்கப்படுவதும் வாக்கால் சொல்லப்படுவதும் காதினால் கேட்கப்படுவதும் கண்ணால் பார்க்கப்படுவதும் துவக்கினால் தொடப்படுவதும் மூக்கால் மோக்கப்படுவதுமாகிய இந்த ஹவிஸுகளையெல்லாம் [2]மனத்தை ஆறுவதாகக்கொண்ட இந்திரியங்களை அடக்கி (ஹோமம் செய்யவேண்டும்.) என்னுடைய சரீரத்தினுள் காரணப்பிரம்மமாகிற அக்னியானது ஜ்வலிக்கிறது. எனக்கு [3]ஞானமாகிற அக்னியைக் கொடுப்பதும் பிராணனை ஸ்தோத்ரமாகக்கொண்டதும் அபானனைச் சஸ்திரமாகக் கொண்டதும் எல்லாவற்றையும் விடுவதை நல்ல தக்ஷிணையாகக்கொண்டதுமான யோகமாகிறயாகம் ஏற்பட்டுவிட்டது இந்தயாகத்திற்கு அஹங்காரமும் மனமும் புத்தியும் பிரம்மமாகவே இருந்துகொண்டு (முறையே) ஹோதாவாகவும் அத்வர்யுவாகவும் உத்காதாவாகவும், ஸத்யமானது ப்ரஶாஸ்தாவாகவும் அவருடைய சஸ்த்ரமாகவும், மோக்ஷமானது தக்ஷிணையாகவும் இருக்கின்றன. [4]நாராயணரை அறிந்தவர்களான ஜனங்கள் இந்த விஷயத்தில் ருக்குக்களையும் (பிரமாணமாகச்) சொல்லுகின்றனர். தேவரான நாராயணரை அடைவதற்காக முற்காலத்தில் இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்டவர்கள் அவர்விஷயத்தில் ஸாமங்களைக் கானம்செய்கிறார்கள். அவர் விஷயத்தில் திருஷ்டாந்தத்தையும் சொல்லுகிறார்கள். பயந்தவளே! தேவரான அந்த நாராயணரை எல்லாவற்றிற்கும் ஆத்மாவாகத் தெரிந்துகொள்.

---

1 'எல்லா உலகமும் தன்னிடம் லயமடையகிறதென்று தெரிந்து கொண்டவன்' என்பது பழைய உரை. 2 வேறு பாடம். 3வேறு பாடம்.

4 'வேதத்தை அறிந்தவர்கள்; அல்லது, ஆத்மாவை அறிந்தவர்கள்' என்பது பழைய உரை.

## இருபத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



**(பிரம்மாவானவர் ஒரே சொல்லால் பிரம்மத்தை உபதேசித்தபோது தேவர்கள்முதலியோர் தம்தம் அறிவுக்குத்தக்கபடி கிரகித்ததைப்பற்றிய பிராம்மண தம்பதிகளின் ஸம்பாஷணை.)**

(நாராயணர்) ஒருவரே கட்டளையிடுபவர். கட்டளையிடுபவர் இரண்டாமவர் இல்லை. எவர் ஹிருதயத்திலிருக்கிறாரோ அவரைக் குறித்து நான் சொல்லுகிறேன். பள்ளத்தில் ஜலம் செல்வதுபோல் அவருடனேயே சேர்ந்துகொண்டு அவரால் எவ்விதம் ஏவப்பட்டேனோ அவ்விதம் கார்யத்தைச் செய்கிறேன். (அவர்) ஒருவரே குரு. அவரைத்தவிர இரண்டாமவர் இல்லை. எவர் ஹிருதயத்திலிருக்கிறாரோ அவரைக்குறித்து நான் சொல்லுகிறேன். அந்தக்குருவினால் எப்பொழுதும் உத்தரவுசெய்யப்பட்ட தானவர்கள் எல்லோரும் முற்காலத்தில் கொல்லப்பட்டார்கள்.[1] (அவர்) ஒருவரே பந்து. அவரைக்காட்டிலும் இரண்டாமவர் இல்லை. எவர் ஹிருதயத்தில் இருக்கிறாரோ அவரைக்குறித்து நான் சொல்லுகிறேன். அவரால் உபதேசிக்கப்பட்ட பந்துக்கள் பந்துக்களுள்ளவர்களாகின்றனர். ஸப்தரிஷிகள் ஆகாயத்தில் பிரகாசிக்கின்றனர். (அவர்) ஒருவரே கேட்பவர். அவரைக்காட்டிலும் இரண்டாமவர் இல்லை. எவர் ஹிருதயத்தில் இருக்கிறாரோ அவரைக்குறித்து நான் சொல்லுகிறேன். குருவான அவரிடத்தில் இந்திரன் குருவினிடத்தில் வஸிப்பதுபோல வாஸம்செய்து எல்லா உலகங்களுக்கும் தேவனாக இருக்கும் தன்மையை அடைந்தான். (அவர்) ஒருவரே த்வேஷிப்பவர். அவரைக்காட்டிலும் இரண்டாமவர் இல்லை. எவர் ஹிருதயத்திலிருக்கிறாரோ அவரைக்குறித்து நான் சொல்லுகிறேன். குருவான அவரால் உபதேசிக்கப்பட்ட எல்லாப்பன்னகர்களும் எப்பொழுதுமே உலகத்தில் த்வேஷமுள்ளவர்களாக இருக்கின்றனர். இந்த விஷயத்திலும் பிரம்மதேவரிடத்தில் பன்னகர்களுக்கும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் ஏற்பட்ட அறிவைப்பற்றிய புராதனமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். தேவர்களும் ரிஷிகளும் நாகர்களும் அஸுரர்களும், உட்கார்ந்திருக்கும் பிரம்மதேவரிடம் சென்று, 'எங்களுக்கு ச்ரேயஸைச் (மேன்மையைத்தருவதை) சொல்லும்' என்று கேட்டார்கள். பகவா

1 'பார்த்த' என்னும் விளி பொருந்தாமையால் விடப்பட்டது,

னபிரம்மதேவர் ஸ்ரேயஸைக்கேட்கும் அவர்களுக்கு, ஓம் என்னும் ஓர் அக்ஷரமானது 'பிரம்மம்' என்று சொன்னார். அவர்கள் (அதைக்) கேட்டுப் பலமார்க்கங்களை அடைந்தார்கள். (அந்த) உபதேசத்தைக் கேட்டு, (அதை) அனுஸரிக்கும் அவர்களுள் முதலில் [1]ஸர்ப்பங்களுக்குக் கடிப்பதில் எண்ணம் உண்டாயிற்று. [2]அஸுரர்களுக்கு இயற்கையாலுண்டான டம்பத்தில் எண்ணம் உண்டாயிற்று. [3]தேவர்கள் தானத்தை (ஸ்ரேயஸாக) நிச்சயித்தனர். [4]மஹரிஷிகள் இந்திரியங்களை அடக்குவதை (ஸ்ரேயஸென்று)நிச்சயித்தனர். எல்லாஸர்ப்பங்களும் அஸுரர்களும் தேவர்களும் ரிஷிகளும் ஒரு குருவை அடைந்து ஒரு சப்தத்தால் உபதேசிக்கப்பட்டுப் பலவித நிச்சயத்தை அடைந்தனர். இந்த நாராயணரோ சொல்லப்படுவதைக் கேட்கிறார்; உள்ளபடி அறிகிறார்; கேட்பவர்களுக்கு அவற்றை மறுபடியும் உபதேசிக்கிறார். (ஆகையால்) இவரைக்காட்டிலும் வேறான குரு இல்லை. இவருடைய அனுமதி ஏற்பட்டபிறகு கர்மம் நடக்கிறது. குருவும் பந்துவும் சிக்ஷிப்பவனும் பகைப்பவனும் ஹிருதயத்திலிருக்கின்றனர். உலகத்தில் இந்த ஜீவன் பாவச்செய்கையைச் செய்தால் பாபியும் புண்ணியகாரியத்தைச் செய்தால் புண்ணியமுள்ளவனும் ஆகிறான். இஷ்டப்படி இந்திரியஸுகத்தில் பற்றுதலுள்ளவன் காமசாரியாகிறான். எப்பொழுதுமே இந்திரியஜயத்தில் பற்றுதலுள்ளவன் பிரம்மசாரியாகிறான். விரதங்களையும் கர்மங்களையும்விட்டுச் சுத்தப்பிரம்மத்தினிடம் நிலைபெற்றுப் பிரம்மமாகி உலகத்தில் ஸஞ்சரிப்பவன்பிரம்மசாரியாகிறான். இவனுக்குப் பிரம்மமே ஸமித்துக்கள்; பிரம்மமே அக்னி; பிரம்மமே [5]ஸம்ஸ்தரம்; பிரம்மமே ஜலம்; பிரம்மமே குரு. அவன் பிரம்மத்தினிடத்தில் நிலைபெற்றவன். வித்வான்கள்

---

1 'பிரம்மதேவர் 'ஓம்' என்று சொல்லும்போது வாயைத்திறந்து மூடுதைக்கண்டு தம் ஸ்வபாவத்தை அனுஸரித்து வாயைத்திறந்து மூடிச் செய்யக்கூடிய கடிப்பதே ஸ்ரேயஸென்று ஸர்ப்பங்கள் எண்ணின' என்பது பழைய உரை.

2 'உதடுகளைத் திறந்து மூடுவதைக்கண்டு டம்பத்திற்காக ஜபம் செய்வது ஸ்ரேயஸ் என்று எண்ணினார்கள்' என்பது பழைய உரை.

3 'வேண்டியதை ஓம் என்று அங்கீகரிப்பதுபற்றி தானத்தை ஸ்ரேயஸென்று எண்ணினார்கள்' என்பது பழைய உரை.

4 உதடுகளைத் திறந்து மூடினதைக்கண்டு இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்புவதை ஸ்ரேயஸென்று எண்ணினார்கள்' என்பது பழைய உரை.

5 பரப்பின தர்ப்பங்கள்,

இவ்விதமான இதனையே ஸூக்ஷ்மமான பிரம்மசரியமென்று அறிகிறார்கள். அறிந்து, தத்வஜ்ஞானியால் உபதேசிக்கப்பட்டு அனுஷ்டித்தார்கள்.

---

## இருபத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(வித்தையையும் பிரம்மத்தையும் வனமாகச் சொல்லும் பிராம்மண தம்பதிகளின் ஸம்பாஷணை.)**

ஸங்கல்பங்களாகிற ஈயும் [1]கொசுகுமுள்ளதும் சோகமும் களிப்புமாகிற பனியும் வெயிலுமுள்ளதும் மோகமாகிறபேரிருளுள்ளதும் ஆசையும் வியாதியுமாகிற ஸர்ப்பங்களுள்ளதும் விஷயங்களாகிற ஒற்றையடிப்பாதையுள்ளதும் காமமும் க்ரோதமுமாகிற வேடர்களுள்ளதுமான அந்தப் பெரிய துர்க்கத்தைத்தாண்டிப் பெரிய வனத்தில் பிரவேசித்தேன்' என்று சொன்னார். பிராம்மணி, 'சிறந்த ஞானமுள்ளவரே! அந்த வனம் எங்கே இருக்கிறது? விருக்ஷங்கள் எவை? நதிகள் எவை? பர்வதங்கள் எத்தனை? அந்த வனம் எவ்வளவு தூரமுள்ள வழியில் இருக்கிறது?' என்று வினவ, பிராம்மணர் சொல்லத்தொடங்கினார்.

'அதைக்காட்டிலும் வேறாகப் பதார்த்தம் இருக்கிறதென்பதில்லை. அதைக்காட்டிலும் வேறான ஒரு ஸுகம் இருக்கிறதென்பதில்லை. அதைக் காட்டிலும் அபின்னமாகப் பதார்த்தம் இருக்கிறதென்பதில்லை. துக்கத்தைத் தாண்டுவிக்கும் ஸாதனம் அதைத் தவிர ஒன்று இருக்கிறதென்பதில்லை. அதைக் காட்டிலும் மிகச் சிறியது இல்லை. அதைக்காட்டிலும் மிகப்பெரியது இல்லை. அதைத்தவிரத் துக்கத்திலிருந்து தாண்டுவிப்பது (ஒன்றும்) இல்லை. அதற்கு ஸமமான வேறு ஸுகம் இல்லை. அதனை அடைந்த பிராம்மணர்கள் துக்கப்படமாட்டார்கள்; ஸந்தோஷப்படமாட்டார்கள்; ஒருவரிடத்திலும் பயப்படமாட்டார்கள். ஒருவரும் அவர்களிடமிருந்து பயப்படமாட்டார்கள். அந்த வனத்தில் [2]ஏழு பெரியமரங்களும் [3]ஏழுகனிகளும் [4]ஏழு அதிதிக

---

1 கொசு என்பது உலக வழக்கு.

2 'மஹத்தும் அஹங்காரமும் ஐந்து தன்மாத்திரைகளும் சேர்ந்த சரீரம்' என்பது பழைய உரை.

3 'அச்சரீரத்திற்குக் காரணமும் யாகாதிகளாலுண்டானதுமான அபூர்வம்' என்பது பழைய உரை.

4 அந்த அபூர்வத்திற்குக் காரணமும் தேவதாரூபமான அதிதிகளின்பிரீதிக்குச் சாதனமுமான யாகக் கிரியை' என்பது பழைய உரை.

ளும் [1]ஏழு ஆஸ்ரமங்களும் [2]ஏழு ஸமாதிகளும் [3]ஏழு தீக்ஷைகளும் இருக்கின்றன. இதுதான் அந்த அரண்யத்தின் ஸ்வரூபம். அதில் (மனமாகிய) மரங்கள் (சப்தம் முதலான விஷயங்களென்னும்) ஐந்து வர்ணங்களுள்ளவைகளும் சிறந்தவைகளுமான (விஷயானுபவங்களென்னும்) புஷ்பங்களையும் (அவைகளாலுண்டான பிரீதிமுதலானவைகளென்னும்) கனிகளையும் உண்டுபண்ணிக்கொண்டு அந்த வனத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றன. அதில் (கண்களென்னும்) மரங்கள் நல்ல நிறமுள்ளனவும் (ஸுகதுக்கங்களென்னும்) இரண்டு வர்ணங்களுள்ளனவுமான (விஷயானுபவமென்னும்) புஷ்பங்களையும் (பிரீதி முதலானவையென்னும்) கனிகளையும் உண்டுபண்ணிக்கொண்டு அந்த வனத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றன. அதில்(அவித்தையென்னும்) மரங்கள் ஸுகத்தைச் செய்கின்றவைகளும் (ஸத்வம் ரஜஸ் தமஸென்னும்) மூன்று வர்ணங்களுள்ளவைகளுமான (விஷயானுபவமென்னும்)புஷ்பங்களையும் (பிரீதி முதலானவையென்னும்)கனிகளையும்உண்டுபண்ணிக்கொண்டு அந்தவனத்தை வியாபித்துக் கொண்டிருக்கின்றன. அதில்(யாகமுதலானவைகளென்னும்) மரங்கள் வாஸனையுள்ளவைகளும்(ஸுகதுக்கங்களாகிற)இரண்டு வர்ணங்களுள்ளவைகளுமான (ஸ்வர்க்கமுதலானவைகளாகிற) மலர்களையும் (பிரீதி முதலானவைகளாகிற) கனிகளையும் உண்டுபண்ணிக்கொண்டு அந்த வனத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றன. அதில் (தியானமுதலானவைகளாகிற) மரங்கள் வாஸனையுள்ளவைகளும் (ஸுகமாகிற) ஒரே வர்ணமுள்ளவைகளுமான (பிரம்மானுபவமாகிற) மலர்களையும் (ஆநந்தமென்னும்) கனிகளையும் உண்டுபண்ணிக்கொண்டு அந்த வனத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றன. (புத்தியும் மனமுமாகிற) இரண்டு பெரிய மரங்கள் அவ்யக்தமான ஸ்வரூபமுள்ள (மனோரதங்களாகிற)மலர்களையும் (பிரீதி முதலானவைகளாகிற) கனிகளையும் உண்டுபண்ணிக்கொண்டு அந்த வனத்தை வியாபித்துக்கொண்டிருக்கின்றன. அதில் (ஞானமென்னும்) ஓர் அக்னியும் (ஆத்மாவாகிற) [4]பிராம்மணனும் நல்ல மனமும் புத்தியுமாகிற (ஸ்ருக்கும் ஸ்ருவமும்)

---

1 'அந்தயாகக்கிரியைக்கு ஆஸ்ரயனான கர்த்தா' என்பது பழைய உரை.

2 'கர்மங்களில் ஜனங்களுக்கு அபிமானத்தை உண்டு பண்ணுகிற ராகமுதலியவை' என்பது பழைய உரை.

3 'வேறு தர்மங்களை ஆஸ்ரயிப்பது, (அதாவது) சரீரமுதலியவைகளின் தர்மங்களைத் தன்னுடையனவாக ஏற்றுக்கொள்வது' என்பது பழைய உரை.

4 ஹோமம் செய்பவன்.

ஐந்து இந்திரியங்களாகிற ஸமித்துக்களும் இருக்கின்றன. (மனமுத லானவைகளை ஹோமம் செய்தால்) அவைகளிலிருந்து [1]ஏழு [2]மோக்ஷங்கள் உண்டாகின்றன. [3]தீக்ஷைகள் பிரதானங்களல்லாத பயன்களைத் தருகின்றன. (தேவதைகளாகிற) அதிதிகள் (அந்தப்) பயன்களை அனுபவிக்கின்றனர். அதில் [4]ஏழுமஹரிஷிகள் அதிதிபூஜையைப் பெற்றுக்கொள்ளுகின்றனர். அவர்கள் பூஜிக்கப்பட்டு லயத்தை அடைந்த பொழுது, (அவர்களைவிட) வேறானவனம் பிரகாசிக்கிறது. (அதில்) மோக்ஷமாகிற கனியுள்ளதும் சாந்தியாகிற நிழலுள்ளதும் (சாஸ்திரத்தினாலும் ஆசார்யோபதேசத்தாலும் உண்டான) ஞானமாகிற ஆஸ்ரயமுள்ளதும் திருப்தியாகிற ஜலமுள்ளதும் உள்ளிலுள்ள க்ஷேத்திரஜ்ஞனாகிற ஸூர்யனுள்ளதுமான [5]பிரஜ்ஞையாகிற விருக்ஷத்தை அடைந்த ஸாதுக்களுக்கு மீண்டும் பிறவி உண்டாகாது. அந்த விருக்ஷத்திற்கு உயரத்திலும் ஆழத்திலும் குறுக்கிலும் முடிவு அறியப்படுகிறதில்லை. (பிரஜ்ஞையாகிற விருக்ஷத்தை அடைந்த) அவனிடத்தில் உண்மையாக இருப்பவர்களும் (புருஷனை வசப்படுத்த முடியாமல் வெட்கித்) தலை குனிந்தவர்களும் ஒளி பொருந்தினவர்களும் (மற்ற) ஜனங்களைவிடச் சிறந்தவைகளாக எல்லா விஷயானந்தங்களையும் எடுத்துக்கொடுப்பவர்களுமான (கிராண முதலானவைகளாலுண்டான விருத்திகளாகிற) ஏழு ஸ்திரீகள் ஸஞ்சரிக்கின்றனர். (ஞானிக்கு உண்டாகும் ஸுகமும் மூடனுக்கு உண்டாகும் ஸுகமும்)நித்யமான பொருளும் அநித்யமான பொருளும்போல வேற்றுமையுள்ளவை.அந்த ஞானியினிடத்திலேயே(மனம் புத்தி ஐம்புலன்களென்னும்)ஏழுகளாகிற ஸப்த ரிஷிகளும் வஸித்தர்களும் செல்வம் நிறைந்தவர்களும் லயமடைகின்றனர். மறுபடியும் அவனிடத்திலேயே உண்டாகின்றனர். நிலைபெற்ற தேஜஸுள்ள இந்த ஞானிக்குக் கீர்த்தியும் பிரகாசமும் செல்வமும் வெற்றியும் உண்டாகின்றன. ஏழுஜோதிகளும் இந்த ஞானியாகிற ஸூர்யனையே அனுஸரிக்கின்றன. அவனிடத்தில் ரிஷிகளும் மலைகளும் பிரம்மத்தினிடமிருந்து உண்டான ஜலத்தை நாற்புறங்களிலும் பெருக்கும் நதிகளும் சேர்ந்திருக்கின்ற

1 'மோக்ஷம் ஒன்றுதான், ஆனாலும், காரணங்கள் பலவாதல்பற்றி பலவாகக் கூறப்பட்டது' என்பது பழைய உரை. 2 வேறுபாடம்.

3 முக்தனுக்கு அனுஷ்டானங்களால் உண்டாகும் புண்ணியங்களைத் தேவர்கள் அடைகின்றனர் என்பது கருத்து.

4 'இந்திரியாதிஷ்டான தேவதைகள்' என்பது பழைய உரை.

5 '(ப்ரம்ம) ஸாக்ஷாத்காரம்' என்பது பழைய உரை.

னர். யோகமென்னும் யாகம் செய்யும் இடமும் மிக்கரஹஸ்யமுமான ஹிருதயாகாசத்தில் நதிகளுடைய ஸங்கமமும் இருக்கிறது. தம் ஆத்மாவில் திருப்தியடைந்தவர்கள் அதிலிருந்து ஸாக்ஷாத்பிதாமஹரை யே அடைகின்றனர். ஆசையற்றவர்களும் நல்ல விரதமுள்ளவர்களும் சாந்தர்களும் தவத்தால் பாவத்தை எரித்தவர்களுமான பிராம்மணர்கள் மனத்தைப் பரமாத்மாவினிடத்தில் செலுத்தி அவரை உபாஸிக்கின்றனர். 'வித்தையாகிற அரண்யத்தைஅறிந்தஜனங்கள் இந்த விஷயத்தில் இந்திரியங்களின் அடக்கத்தையே (மேலானதென்று) புகழ்கின்றனர். அந்த அரண்யத்தை அடைந்தவன் உண்மையை மீருதவனுகிறுன். பிராம்மணர்கள் இப்படிப்பட்ட இந்த அரண்யத்தையே புண்ணியமாக அறிகின்றனர். அறிந்து, பரியாலோசனை யுள்ள ஆத்மாவினுல் (சமமுதலானவைகளையும்) அனுஷ்டிக்கின்றனர்.

---

## இருபத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)

**(யாகத்தில் செய்யும் ஹிம்ஸை தோஷமாகாதென்பதைப்பற்றி அத்வர்யுவுக்கும் யதிக்கும் ஸம்பாஷணை)**

பெண்ணே! நான் கந்தங்களை மோப்பதில்லை; ரஸங்களை அறிகிறதில்லை; ரூபத்தைப் பார்க்கிறதில்லை; (ஸ்பரிசத்தைத்) தொடுகிறதில்லை; பலவிதசப்தங்களையும் கேட்கிறதில்லை; ஒருவித ஸங்கல்பத்தையும் அடைகிறதில்லை. விருப்பும் வெறுப்பும் உண்டாகாமலிருக்கும் பொழுதும் பிராணனும் அபானனும் இயற்கையாகப் பிராணிகளின் சரீரங்களில் பிரவேசித்து (ஆகாரத்தைப் பாகம் செய்வது முதலான காரியங்களைச் செய்வதுபோலப் புத்திமுதலானவைகளின்) இயற்கையே இஷ்டமான பொருள்களை விரும்புகிறது. இயற்கையே பகைக்கத்தக்கவைகளையெல்லாம் பகைக்கிறது. (ஜாக்ரதவஸ்தையிலுள்ள க்ராணம் க்ரேய முதலான) அந்தப் பதார்த்தங்களைக்காட்டிலும் வேருன (ஸ்வப்னவஸ்தையிலுள்ள) பதார்த்தங்களையும் அவற்றிலுள்ள நித்யமான ஸ்வபாவங்களையும் பரமாத்மாவையும் நான் சரீரத்தில் பார்க்கிறேன். அந்தப் பரமாத்மாவினிடத்தில் நிலைபெற்றிருக்

1 'வித்தை ஒன்ருலேயே அடையக்கூடிய பிரம்மத்தை' என்பது பழைய உரை.

கும் நான் எவ்விதத்திலும் (மற்றவைகளில்) பற்றுதலடையமாட்டேன். காமமும் க்ரோதமும் ஜரையும் மரணமும் என்னைத் தொடர மாட்டா. விரும்பத்தக்கவைகளையெல்லாம் விரும்பாதவனும் தோஷங்களையெல்லாம் பகைக்காதவனுமான எனக்கு ஜலத்திவலைக்குத் தாமரையிலைகளில் பற்றுதலுண்டாகாததுபோல ஸ்வபாவங்களில் பற்றுதலுண்டாகிறதில்லை. அனேக ஸ்வபாவங்களைப்பார்ப்பவனும் நித்யனுமான இவனுடைய (காமங்கள்) நித்தியங்களாகும். கர்மங்களைச் செய்தாலும் இவனைப் போகங்களின் ஸமூகமானது ஸூரியனுடைய கிரணங்களின் ஸமூகமானது ஆகாயத்தைப் பற்றாததுபோலப் பற்றுகிறதில்லை. புகழ்பெற்றவளே! இந்தவிஷயத்திலும் அத்வர்யுவுக்கும் யதிக்கும் நடந்த ஸம்வாதமும் புராதனமுமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். அதனைத் தெரிந்துகொள். யாக கர்மாவில் ப்ரோக்ஷிக்கப்படுகின்ற பசுவைக்கண்டு அருகிலிருக்கும் ஒரு ஸந்யாஸி அத்வர்யுவை நோக்கி, 'இது ஹிம்ஸை' என்று நிந்தித்துக் கூறினர். அத்வர்யுவானவர் அவரைநோக்கி, 'இந்த ஆடென்னும் பிராணியானது கெடுதலை அடையாது. யாகத்தால் மேன்மையை அடைகிறது. வேதம் அவ்விதம் கூறுகிறது. இதனுடைய பிருதிவியின் பாகமானது பிருதிவியையும் ஜலபாகமானது ஜலத்தையும் நேத்ரமானது ஸூரியனையும் செவிகள் திசைகளையும் பிராணன் ஆகாயத்தையும் அடையப்போகின்றன. வேதத்தில் சொல்லியபடி நடக்கும் எனக்கு ஒரு தோஷமுமில்லை' என்று மறுமொழிகூறினர். ஸந்யாஸி, (யாகத்திற்காக) உயிரைஇழந்ததனால் ஆட்டுக்கு 'ச்ரேயஸை நீ பார்ப்பாயானால் யாகமானது ஆட்டுக்காக நடக்கிறது. உனக்கு என்ன பிரயோஜனம்? (உன்னுடைய) தாயார் உன்னை அனுமதிக்கட்டும். (உன்னுடைய)பிதா உன்னை அனுமதிக்கட்டும்' என்னும் மந்திரஞானத்தை ஆலோசித்து விசேஷமாகச் செய்கிறேன்' என்று நீ சொல்வாயானால் அவர்கள் இவ்விதமே அனுமதி கொடுக்கவேண்டும். நீ அவர்களைப்பார்க்கவேண்டும். அவர்களுடைய அனுமதியைக்கேட்டு ஆலோசனை செய்யவேண்டும். [1]இந்தப்பசுவின் பிராணன்களும் தம் உத்பத்திஸ்தானங்களை அடையும்படி செய்யப்பட்டன. சேஷ்டையற்ற சரீரமட்டும் மிச்சமிருக்கிறது என்பது என்னுடைய எண்ணம். சைதன்யமற்றதும் விறகுக்கு ஒப்பானதுமான சரீரத்தால் யாகம்செய்யவிரும்புகிறவர்களுக்கு விறகு பசுவென்னும் பெயருள்ளதாயிருத்தலால் அது

1 பொருந்தாமையால், 'அத்வர்யுருவாச' என்னும் சொற்கள் விடப்பட்டன.

ஹிம்ஸையேயாம். எல்லாத்தர்மங்களுள்ளும் அஹிம்ஸை (சிறந்தது) என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். எந்தக்கர்மமானது ஹிம்ஸையற்றதாகுமோ அதுவே செயயத்தக்கது என்று அறிகிறோம். இது அஹிம்ஸைதான் என்று பிரதிஜ்ஞை செய்வதானால், அதற்கு மேல் சொல்வேன். உம்மால் கார்யங்களைப் பலவிதமாகத் தூஷித்துக் கூறமுடியும். எக்காலத்திலும் எந்தப்பிராணிகளுக்கும் ஹிம்ஸைசெய்யாமலிருப்பதே எங்கள் விருப்பம். பிரத்யக்ஷமாக (உண்டாகும் ஹிம்ஸையை ஹிம்ஸையாகக்) கூறுகிறோம். கண்ணுக்குப்புலப்படாததை (ஹிம்ஸையாகக்)கருதுகிறோமில்லை' என்றுசொன்னார். அத்வர்யு, 'பிராமணரே! பூமியின் கந்தமென்னும் குணங்களைப் புசிக்கிறீர்; ஜலமயமான ரஸங்களை அருந்துகிறீர்; ஜ்யோதிகளுடைய ரூபத்தைப் பார்க்கிறீர்; காற்றிலுண்டான குணங்களை ஸ்பரிசிக்கிறீர்; ஆகாயத்திலுண்டானசப்தங்களைக் கேட்கிறீர்; மனத்தால் ஸங்கல்பத்தைச் செய்கிறீர்; இந்தப் பூதங்களை எல்லாம் பிராணனுள்ளவைகளென்று எண்ணுகிறீர். பிராணன்களைவாங்குவதில் ஒழிவடைந்திருப்பதாக நினைக்கிறீர்; ஆனால், நீர் ஹிம்ஸையே செய்துகொண்டிருக்கிறீர்; ஹிம்ஸையின்றி ஒருகாரியமுமில்லை; நீர் என்ன எண்ணுகிறீர்?' என்று வினவினார். ஸன்யாஸி, 'ஆத்மாவானது அக்ஷரம் என்றும் க்ஷரம் என்றும் இரண்டுவிதமாக இருக்கிறது. அவைகளில் மூன்றுகாலங்களிலும் இருப்பது அக்ஷரமென்றும் மூன்றுகாலங்களிலும் இல்லாதது க்ஷரமென்றும் சொல்லப்படுகின்றன. பிராணனும் நாக்கும் மனமும் புத்தியும் மாயையினால் இருப்பவைகளாகின்றன. இந்தப் பதார்த்தங்களால் விடப்பட்டவனும் த்வந்த்வமற்றவனும் விருப்பமற்றவனும் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாக இருப்பவனும் மமதையற்றவனும் மனத்தை ஜயித்தவனும் எல்லாவிஷயங்களினாலும் விடப்பட்டவனுமான மனிதனுக்கு ஓரிடத்திலும் பயமில்லை' என்று சொன்னார். அத்வர்யு, 'அறிஞருள் சிறந்தவரே! இவ்விஷயத்தில் வித்வான்களோடேயே ஸம்வாதம் செய்யவேண்டும். உம்முடைய அபிப்பிராயத்தைக் கேட்டு எனக்குப் புத்தி பிரகாசிக்கிறது. பகவானே! மஹிமைபொருந்தின உம்முடைய உபதேசத்தினால்அறிவுண்டானவனாகிய நான் சொல்லுகிறேன். பிராம்மணரே! மந்திரங்களால் ஏற்பட்ட விரதத்தை அனுஷ்டிக்கும் எனக்கும் தோஷமில்லை' என்றுசொன்னார். அதன்பிறகு, ஸன்யாஸி, யுக்தமாக இருந்ததால் பேசாமலிருந்தார். அத்வர்யுவும் மோகமற்றவராகிப் பெரியயாகத்தைச் செய்தார். பிரம்மஜ்ஞானிகள் இவ்விதமான மோக்ஷமானது இவ்விதம் மிகவும்ஸூக்ஷ்மமென்றறிகின்றனர்;

கார்யத்தை உணரும் ஆத்மாவினால் தெரிந்துகொண்டு அனுஷ்டிக்கவும் செய்கின்றனர்.

## முப்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(பிராம்மணர் கொலைகூடாதென்பதைவிளக்கப் பரசுராமர்கதையைத் தம்மனைவிக்குக் கூறியது.)**

பெண்ணே! இந்தவிஷயத்திலும் கார்த்தவீர்யனுக்கும் ஸமுத்திரத்திற்கும் நடந்த ஸம்பாஷணையும் புராதனமுமான இந்த இதிஹாஸத்தை எடுத்துக்கூறுகின்றனர். ஆயிரம்கைகளுள்ளவனும் ஸமுத்திரம் வரையிலுள்ள பூமியை வில்லால் ஜயித்தவனுமானகார்த்தவீர்யார்ஜுனனென்னும் ஓர் அரசனிருந்தான். பலத்தால் கர்வம்கொண்ட அவன் ஒருஸமயம் ஸமுத்திரத்தினருகில் ஸஞ்சரித்துக்கொண்டு ஸமுத்திரத்தின்மீது நூறுபாணங்களைப் பிரயோகித்தானென்று நமக்குக்கேள்வி. ஸமுத்திரமானது அவனை நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு, 'வீர! (என்மீது) பாணங்களைப் பிரயோகம் செய்யாதே. உனக்கு நான் என்ன செய்யவேண்டும்? ராஜஶ்ரேஷ்ட! நீ பிரயோகம் செய்த சிறந்த பாணங்கள் என்னை அடைந்திருக்கும் பிராணிகளைக் கொல்லுகின்றன. பிரபுவே! அவைகளுக்கு அபயத்தைக் கொடு' என்று சொல்லிற்று. கார்த்தவீர்யார்ஜுனன், 'யுத்தத்தில் எனக்குச் சமமான வில்லாளி எங்கேயாவது இருந்தால் பெரிய யுத்தத்தில் எனக்குச் சமமான அவனை (எனக்கு)ச் சொல்' என்று சொன்னான். ஸமுத்திரம், 'அரசனே! ஜமதக்னிமஹரிஷியைப்பற்றி நீ முந்திக்கேள்விப்பட்டிருப்பாய். அவருடைய புத்திரர் உனக்கு உள்ளபடி அதிதிபூஜை செய்யத்தகுந்தவர்' என்று சொல்லிற்று. பிறகு, அந்த அரசன் அதிக கோபத்தால் மூடப்பட்டவனாகி அந்த(ஜமதக்னியின்) ஆஶ்ரமம் சென்று பரசுராமரையே அடைந்தான். அவன் (தன்னுடைய) பந்துக்களுடன் பரசுராமருக்குப் பிரதிகூலமான காரியங்களைச் செய்து மஹாத்மாவான அவருக்கு மனவருத்தத்தை உண்டுபண்ணினான் தாமரைமலர்போன்ற கண்களுள்ளவளே! பிறகு, அள

வற்ற தேஜஸுள்ள பரசுராமருக்கு அப்பொழுது பகைவரின் படைகளை எரிப்பதான கோபாக்னியானது மிகவும் ஜ்வலித்தது. பிறகு, அந்தப் பரசுராமர் கோடாலியை எடுத்துக்கொண்டு ஆயிரம்கைகளுள்ள அந்தக் கார்த்தவீர்யார்ஜுனனை அனேகம் கிளைகளுள்ள மரத்தைப் போல் விரைவாக வெட்டினர். கொல்லப்பட்டு விழுந்திருக்கும் அந்தக் கார்த்தவீர்யார்ஜுனனைக் கண்டு (அவனுடைய) பந்துக்களனைவரும் ஒன்றுகூடிக் கத்திகளையும் சக்திகளையும் எடுத்துக்கொண்டு பரசுராமரைச் சூழ்ந்துகொண்டார்கள். பரசுராமரும் வில்லையெடுத்துக் கொண்டு விரைந்து ரதத்திலேறிச் சரமாரிகளைப் பொழிந்து அரசனுடைய படையை அடித்தார். பிறகு, சில க்ஷத்திரியர்கள் ஜமதக்னியைக் கொன்றுவிட்டு ஸிம்மத்தால் பீடிக்கப்பட்ட மான்கள்போலக் கிரிதுர்க்கங்களில் புகுந்தார்கள். அந்தப் பரசுராமரிடம்பயந்து தமக்கு ஏற்பட்ட கர்மாவை அனுஷ்டிக்காத அவ்வரசர்களுடைய பிரஜைகள் பிராம்மணர்களைக் காணாமையால் சூத்திரத்தன்மையை அடைந்தார்கள். இவ்விதம் திரவிடர்களும் ஆபீரர்களும் புண்ட்ரர்களும் சபரர்களுமான அவர்கள் க்ஷத்திரியதர்மமில்லாததினால் சூத்திரத்தன்மையை அடைந்தார்கள். பிறகு, கணவரை இழந்த க்ஷத்திரிய ஸ்திரீகளிடம் பிராம்மணர்களால் உண்டுபண்ணப்பட்ட க்ஷத்திரியர்களைப் பரசுராமர் அடிக்கடி வெட்டினர். (இவ்விதம்) இருபத்தொருமுறை நடந்தபின் சரீரமற்றதும் திவ்யமும் மதுரமாகஇருப்பதும் எல்லா ஜனங்களாலும் கேட்கப்பட்டதுமான வாக்கானது பரசுராமரை நோக்கி, 'ராம! ராம! (யுத்தத்தினின்று)திரும்பு. ஐயா! இந்த க்ஷத்ரிய அதமர்களை அடிக்கடி கொல்வதில் என்னபிரயோஜனத்தைக் காண்கிறாய்?' என்று சொல்லிற்று. அவ்வாறே அப்பொழுது ரிசீகர்முதலான பிதாமஹர்களும் மஹாத்மாவான அந்தப் பரசுராமரைநோக்கி, 'பெரிய பாக்கியமுள்ளவனே! (யுத்தத்தினின்று) நிவ்ருத்தியடை' என்று சொன்னார்கள். பரசுராமரோ தந்தையின் வதத்தைப் பொறாமல் அந்தரிஷிகளை நோக்கி, 'நீங்கள் இப்பொழுது என்னைத்தடுக்கலாகாது' என்றுசொன்னர். பித்ருக்கள்சொல்லலானார்கள். 'ஜயிப்பவர்களுள் சிறந்தவனே! நீ அற்பர்களான க்ஷத்திரியர்களைக்கொல்லத் தக்கவனல்லை. பிராம்மணனாக இருக்கும் நீ இப்பொழுது அரசர்களைக்கொல்வது தக்கதன்று.

## முப்பத்தோராவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பரசுராமருடைய பித்ருக்கள் அவருக்கு அலர்க்கன் கதையைக்கூறியதும், அவர் க்ஷத்திரிய வதத்தை விட்டதும்.)**

பிராம்மண ச்ரேஷ்டனே! இந்த விஷயத்திலும் புராதனமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். நீ இதனைக் கேட்டு அவ்விதம் செய்யவேண்டும். மிகச் சிறந்ததவமுள்ளவனும் தர்மங்களை அறிந்தவனும் ஸத்தியவாதியும் மஹாத்மாவும் மிக்க உறுதியான வ்ரதமுள்ளவனுமான அலர்க்கனென்னும் ராஜரிஷி ஒருவன் இருந்தான். அவன் ஸமுத்திரம் சூழ்ந்த இந்தப்பூமியை வில்லினால் ஜயித்துச் செய்தற்கு அருமையான காரியத்தைச்செய்து மோக்ஷத்தில் மனத்தைச் செலுத்தினான். சிறந்த புத்தியுள்ளவனே! பிறகு, மிகப்பெரிய ராஜ்யத்தை விட்டு மரத்தினடியில் இருக்கும் அந்த அலர்க்கனுக்கு ஸூக்ஷ்மமான பிரம்மத்தைப்பற்றிய ஆலோசனை உண்டாயிற்று. அவன், 'என்னுடைய மனத்திற்குப் பலம் உண்டாயிருக்கிறது. மனத்தைஜயித்தால் ஜயம் நிச்சயம். பகைவர்களால் சூழப்பட்ட நான் (வெளியிலுள்ள பகைவர்களைவிட) வேறானவர்களிடம் பாணங்களைப் பிரயோகிக்கப்போகிறேன். எல்லாமனிதர்களையும் ஆசையினால் கர்மாவைச் செய்யும்படி செய்கிற இந்த மனத்தைக்குறித்து நான் மிகக் கூர்மையான முனையுள்ள பாணங்களைப் பிரயோகிக்கப்போகிறேன்' என்று சொன்னான். மனம், 'அலர்க்க! இந்தப்பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா. உன்னுடைய உயிர்நிலைகளையே பிளக்கும். நீ மர்மம் பிளக்கப்பட்டவனாகி மரிக்கப்போகிறாய்.(ஆகையால்) நீ என்னை கொல்லக்கூடியவேறு பாணங்களைப்பார்' என்றுசொல்லிற்று. அந்த அலர்க்கன் அதைக்கேட்டு ஆலோசித்து, பிறகு, 'க்ராணமானது பலவிதமான வாஸனைகளைமோந்து அவைகளைப்பற்றியேஆசைப்படுகிறது. ஆகையால், நான் க்ராணத்தின்மீது கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகிக்கப்போகிறேன்' என்று சொன்னான். க்ராணம், 'அலர்க்க! இந்தப் பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா. உன்னுடையமர்மத்தையே பிளக்கப்போகின்றன. நீ மர்மம்பிளக்கப்பட்டு மரிக்கப்போகிறாய். என்னைக்கொல்லக்கூடிய வேறுபாணங்களைப்பார்' என்றுசொல்லிற்று.

அந்த அலர்க்கன் அதைக்கேட்டு ஆலோசித்து, பிறகு, 'இந்த நாவானது ருசியுள்ள ரஸங்களைப் புஜித்து (ப்பிறகும்) அவைகளையே விரும்புகிறது. ஆகையால், நான் நாவைக்குறித்துக் கூர்மையுள்ள கணைகளைத்தொடுக்கப்போகிறேன்' என்று சொன்னான். நா, 'அலர்க்க! இந்தப் பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா. உன்னுடைய உயிர்நிலையையே பிளக்கப்போகின்றன. பிறகு, உயிரை இழக்கப்போகிறாய். நீ என்னைக் கொல்லக்கூடிய வேறுபாணங்களைப் பார்' என்று சொல்லிற்று. அந்த அலர்க்கன் அதைக்கேட்டு ஆலோசித்து, பிறகு, 'துவக்கானது பலவிதஸ்பர்சங்களை அனுபவித்து (மறுபடியும்) அவைகளையே விரும்புகிறது. ஆகையினால், துவக்கைக் கழுகிறகுபூண்ட பலவிதமான பாணங்களால் பிளக்கப்போகிறேன்' என்ற வசனத்தைச் சொன்னான். துவக்கு, 'அலர்க்கா! இந்தப்பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா. உன்னுடைய மர்மத்தையே பிளக்கப்போகின்றன. நீ மர்மம் பிளக்கப்பட்டு மரிக்கப்போகிறாய். நீ என்னைக் கொல்லக்கூடிய வேறுபாணங்களைப் பார்' என்று சொல்லிற்று. அந்த அலர்க்கன் அதைக்கேட்டு ஆலோசித்துப் பிறகு, 'காதானது பலவித சப்தங்களைக்கேட்டு (மறுபடியும்) அவற்றையே விரும்புகிறது. ஆகையால், நான் ஶ்ரோத்ரத்தைக் குறித்துக் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகிக்கிறேன்' என்ற வசனத்தைச் சொன்னான். ஶ்ரோத்ரம், 'அலர்க்க! இந்தப் பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா. உன்னுடைய மர்மத்தையே பிளக்கப்போகின்றன. பிறகு, உயிரை இழக்கப்போகிறாய். நீ என்னைக் கொல்லக்கூடிய வேறுபாணங்களைப் பார்' என்று சொல்லிற்று. அந்த அலர்க்கன், அதைக்கேட்டு ஆலோசித்து, பிறகு, 'நேத்திரமானது பலவித ரூபங்களைப்பார்த்து (மறுபடியும்) அவைகளையே விரும்புகிறது. ஆகையால், நான் கூர்மையுள்ள பாணங்களால் கண்ணை அடிக்கப்போகிறேன்' என்றவசனத்தைச் சொன்னான். கண், 'அலர்க்க! இந்தப்பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா; உன்னுடைய மர்மத்தையே பிளக்கப்போகின்றன. நீ மர்மம் பிளக்கப்பட்டு மரிக்கப்போகிறாய். நீ என்னைக் கொல்லக்கூடிய வேறுபாணங்களைப்பார்' என்று சொல்லிற்று. அந்த அலர்க்கன் அதைக்கேட்டு ஆலோசித்து, பிறகு, 'இந்தப்புத்தியானது பிரஜ்ஞையினால் பலவித நிச்சயங்களைச் செய்கிறது. ஆகையால், நான் புத்தியைக்குறித்துக் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகிக்கப்போகிறேன்' என்றவார்த்தையைச் சொன்னான். புத்தி, 'அலர்க்க!

இந்தப்பாணங்கள் என்னை எவ்விதத்திலும் மீறமாட்டா; உன்னுடைய மர்மத்தையே பிளக்கப்போகின்றன. நீ மர்மம் பிளக்கப்பட்டு மரிக்கப்போகிறாய். நீ என்னை அடிக்கக்கூடிய வேறுபாணங்களைப் பார்' என்று சொல்லிற்று. பிறகு, அலர்க்கன் அவ்விடத்திலேயே (ஒருவராலும்) செய்யமுடியாத கோரமான [1]தவத்தைச் செய்தும் இந்த ஏழுபேர்கள்மீதும் (பிரயோகிக்கத்தக்க) சிறந்த பாணத்தைச் சக்தியினால் அடையவில்லை. பிறகு, பிரபுவான அவன் சித்தத்தை நன்குஅடக்கி ஆலோசித்தான். பிராம்மணஸ்ரேஷ்டனே! அறிஞருள் சிறந்தவனான அந்த அலர்க்கன் நெடுங்காலம்ஆலோசித்து [2]யோகத்தைக்காட்டிலும் சிறந்த மேன்மையை அறியவில்லை. வீர்யமுள்ளவனான அவன் மனத்தை ஒருவழிப்படுத்தி அசையாமல் யோகத்தை அடைந்து சீக்கிரத்தில் ஒரே பாணத்தால் இந்திரியங்களைக் கொன்றான். (அந்த) ராஜரிஷியானவன் யோகத்தால் பரமாத்மாவை அடைந்து மேலான ஸித்தியைப் பெற்று வியப்புற்றுப் பின் வரும் காதையையும் சொன்னான். (அதன் பொருளாவது:) 'அந்தோ! கஷ்டம்! [3]நாம் வெளியிலுள்ள எல்லாக் காரியத்தையும் செய்தோம். முன்பு போகத்தில் ஆசையுள்ள நாம் ராஜ்யத்தை உபாஸித்தோம். பிறகு, நான் யோகத்தைக்காட்டிலும் மேலான ஸுகம் இல்லை என்று தெரிந்து கொண்டேன்' என்பது. பரசுராம! நீ இவ்விதம் தெரிந்து கொள்; க்ஷத்திரியர்களைக் கொல்லாதே; கோரமான தவத்தைச்செய்; அதனால் மேன்மையை அடைவாய்' என்று சொன்னார்கள். சிறந்த பாக்கியமுள்ளவளே! பித்ருக்களால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தப் பரசுராமர் பிறகு கடுந்தவம்புரிந்து மேலானஸித்தியை அடைந்தார்.

1. 'ஆலோசனை' என்பது பழைய உரை.

2. 'சித்தத்தைமட்டும் அடக்குவதென்னும் ராஜயோகம்' என்பது பழைய உரை.

3. முன்பு பலருடன் கூடினமையால் நாமென்றும் பின்பு அவர்களைப் பிரித்தமையால் நானென்றும் கூறியபடி.

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



**(காமமுதலியவற்றைவிட்டுப் பகவத்ஸ்வரூபத்தை அறிவது மோக்ஷஸாதன மென்னும் விஷயத்தில் அம்பரீஷன் சொல்லிய காதைகளைப் பிராம்மணர் தம்மனைவிக்குக் கூறியது.)**

உலகத்தில் (ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும்) மூன்று குணங்களே சத்துருக்கள். (அவை) மனத்தின் செய்கைவேறுபாட்டினால் ஒன்பதுவிதங்களாகக் கருதப்படுகின்றன.[1]ப்ரஹர்ஷம், [2]பிரீதி, [3]ஆநந்தம் இம்மூன்றும் ஸத்வத்தாலுண்டான குணங்கள். [4]சோகம், கோபம், த்வேஷம் இவைகள் ரஜஸால் உண்டான குணங்களென்று கருதப்பட்டன. [5]ஸ்வப்நம், சோம்பல், மோஹம் இம்மூன்றும் தமஸால் உண்டான குணங்கள். தைரியமுள்ள மனிதன் சோம்பலின்றி (சமம் முதலியனவாகிற) பாணஸமூகங்களால் இவைகளை வெட்டி மனஅடக்கமும் இந்திரியங்களின் ஜயமுமுள்ளவனாகி மற்றவைகளை ஜயிக்கமுயலவேண்டும். இந்த விஷயத்தில் முந்தின கல்பத்தை அறிந்த ஜனங்கள் ராஜ்யத்தை ஆளும் அம்பரீஷராஜனால் கானஞ் செய்யப்பட்ட காதைகளைச் சொல்லுகின்றனர். (ராகமுதலான) தோஷங்கள் விருத்தியடைந்து (சமமுதலான) ஸாதுக்கள் பீடிக்கப்படும்பொழுது அம்பரீஷன் விரைவாக ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டானென்று கேள்வி. அவன் தன்னுடைய தோஷங்களை விலக்கி ஸாதுக்களைப் பூஜித்துப் பெரியஸித்தியைப் பெற்று இந்தக் காதைகளைச்சொன்னான். (அவற்றின் பொருளாவது:) 'நான் அதிகமான தோஷங்களை வென்றேன். எல்லாப்பகைவர்களையும் கொன்றேன். ஒருதோஷம் மிகப்பெரிதாக இருக்கிறது. கொல்லப்படவேண்டிய அது என்னால் கொல்லப்படவில்லை. இந்தப்

1. வேறு பாடம்; 'விரும்பியது கிடைக்கும் என்ற நிச்சயம் உண்டான பொழுது உண்டான ஸுகம்' என்பது பழைய உரை.

2. 'விரும்பியது கிடைத்தபொழுது உண்டான ஸுகம்' என்பது பழைய உரை.

3. 'விரும்பியதை அனுபவிக்கும்பொழுது உண்டாகும் ஸுகம்' என்பது பழைய உரை.

4. ஆசையென்பது வேறு பாடம்.

5, ப்ரமம் என்பது வேறு பாடம்.

பிராணியானவன் எதனால் ஏவப்பட்டு வைராக்கியத்தை அடையாமல், தாகத்தால் பீடிக்கப்பட்டு ஓடுகிறவன் பள்ளங்களைத் தெரிந்து கொள்ளாததுபோல,ஆசையால் பீடிக்கப்பட்டு இழிவானகர்மங்களைத் தெரிந்துகொள்ளுகிறதில்லையோ, இவ்வுலகில் மனிதன் எதனால் ஏவப்பட்டு அகாரியத்தையும் செய்கிறானோ அந்த லோபத்தைக் கூர்மையுள்ள கத்திகளால் வெட்டினவன் ஸுகமாக விருத்தியடைவான். லோபத்தால் (பொருள்களில்) ஆசையுண்டாகிறது. அதனால், மனக்கவலை உண்டாகிறது. (பொருள்களை) அடைய விருப்பமுள்ள அவன் மிகுதியான ராஜஸகுணங்களை அடைகிறான்; விரும்பியவைகிடைத்த பொழுது மிகுதியான தாமஸகுணங்களை அடைகிறான். அவன் அந்தக் குணங்களால் கெடுக்கப்பட்ட சரீரபந்தத்தையுடையவனாகி அடிக்கடி பிறக்கிறான்; கர்மத்தையும் செய்கிறான்; மரிக்கும்பொழுது பிளந்துசிதறின சரீரமுள்ளவனாகி மறுபடியும் பிறந்து மரிக்கிறான். ஆகையால், இந்தலோபத்தை நன்றாகப் பார்த்துத் தைரியத்தால் மனத்தில் அடக்கி (பரமானந்தம் என்னும்) ராஜ்யத்தை விரும்ப வேண்டும். இவ்வுலகில் இதுதான் ராஜ்யம்; வேறுராஜ்யம் இல்லை. உள்ளபடி அறியப்பட்ட ஆத்மாவே அரசன்' என்பது. புகழ்பெற்றவனும் சக்ரவர்த்தியாக இருந்தும் முக்கியமான லோபத்தை அறுத்தவனுமான அம்பரீஷனென்னும் அரசன் இவ்விதம் காதைகளைப் பாடினான்.

## முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(பிராம்மணர் மமதையை விடுவது மோக்ஷஸாதனமென்னும் விஷயத்தில் பிராம்மணஜனகஸம்பாஷணையைத் தம்மனைவிக்குக் கூறியது.)**

பெண்ணே! இந்தவிஷயத்திலும் ஒரு பிராம்மணனுக்கும் ஜனகனுக்கும் நடந்த ஸம்வாதமான இந்தப் பழையஇதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். ஜனகராஜன் குற்றம்செய்தவனான ஒரு பிராம்மணனை நோக்கி, '(பிராம்மண! நீ) என்தேசத்தில் வஸிக்கக்கூடாது' என்று சிக்ஷையை விதித்தான். (ஜனகனால்) இவ்விதம் சொல்லப்பட்ட அந்தப்பிராம்மணன், பிறகு, (அந்த) ராஜச்ரேஷ்டனைப்பார்த்து, 'அரசனே! எவ்வளவு தேசம் உன்னுடைய வசத்திலிருக்கிறது?

சொல். பிரபுவே! நான் வேறுமன்னனுடைய தேசத்தில் வஸிக்க விரும்புகிறேன். வேந்தனே! சாஸ்திரத்தை மீறாததான உன்னுடைய வார்த்தையைச் செய்ய விரும்புகிறேன்' என்று மறுமொழி கூறினன். புகழ்பெற்ற பிராம்மணனால் இவ்வாறு சொல்லப்பட்ட ஜனகராஜன் அப்பொழுது அடிக்கடி உஷ்ணமாகப் பெருமூச்சுவிட்டு ஒன்றும் மறுமொழிசொல்லாமலிருந்தான். ஆலோசித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பவனும் அளவற்ற தேஜஸுள்ளவனுமான ஜனகராஜனை, ஸூர்யனை (ராஹுவென்னும்) க்ரஹம் அடைவதுபோலச் சீக்கிரமாக மோகம் அடைந்தது. பிறகு, ஜனகராஜன், அப்பொழுது ஒரு முகூர்த்தகாலத்திற்குமேல் மோகம்விலகியபின் தேறுதல் செய்துகொண்டு அந்தப்பிராம்மணனை நோக்கி, '(பிராம்மண!) தகப்பன் பாட்டன்பரம்பரையாகவந்த நகரமும் தேசமும் (என்னுடைய) வசத்திலிருக்கும்போது நான் பூமியில் தேடியும் என்னுடைய தேசத்தை அறியவில்லை. நான் எப்பொழுது பூமியில் (என்னுடைய தேசத்தைத்) தெரிந்துகொள்ளவில்லையோ அப்பொழுது மிதிலையில் தேடினேன். அதிலும் நான் (என்னுடைய தேசத்தை) அறியாதபொழுது என்னுடைய பிரஜைகளைத் தேடினேன். அவைகளிலும் (என்னுடையதை) அறியாதபொழுது எனக்கு மதிமயக்கம் உண்டாயிற்று. மூர்ச்சை தெளிந்தபின் எனக்கு மறுபடியும் (நல்ல) புத்தி உண்டாயிற்று. அப்பொழுது, '(ஒன்றும்) என்னுடைய தேசமன்று; அல்லது, எல்லாத்தேசமும் என்னுடையது; அல்லது, இந்தச் சரீரமும் என்னுடையதன்று; அல்லது, எல்லாப் பூமியும் என்னுடையது' என்று எண்ணினேன். பிராம்மணஸ்ரேஷ்ட! எனக்கு எப்படியோ அப்படியே மற்றவர்களுக்கும் என்று நினைக்கிறேன். இஷ்டமுள்ளவளவு (இவ்விடத்தில்) வாஸஞ்செய். விரும்பிய வரையில் அனுபவி' என்ற வாக்கியத்தைச் சொன்னன்.

பிராமணன், 'தகப்பன்பாட்டன்வழியாகக் கிடைத்த நகரமும் தேசமும் வசத்திலிருக்கும்போது நீ எந்தப் புத்தியைக்கொண்டு (என்னுடையதென்னும்) மமதையை விட்டாய்? எந்தப்புத்தியைக்கொண்டு எல்லாம் உன்னுடைய தேசமாக இருக்கிறது? நீ எந்தக்காரணத்தினல் (ஒன்றையும்) உன்னுடைய தேசமாக அறியவில்லை? (எதனல்) எல்லாம் உன்னுடைய தேசமாயிற்று? சொல்' என்று வினவ, ஜனகன் சொல்லத்தொடங்கினன். 'இவ்வுலகில் எல்லாக்கர்மங்களிலும்முயற்சிகள் முடிவுள்ளனவாக அறியப்பட்டிருக்கின்றன. ஆகையினல், நான், 'இது என்னுடையது' என்று ஒன்றிருப்பதாக அறியவில்லை.

அப்படியே, 'இது யாருடையது; யாருடைய தனம்' என்று வேத வாக்கியம் இருக்கிறது. (ஆகையால்) நான் புத்தியினால் (ஆலோசித்தும்) இது என்னுடையது என்றிருப்பதை அறியவில்லை. நான் இந்தப் புத்தியைக்கைக்கொண்டு மமதையைவிட்டேன். எந்தப்புத்தியை அடைந்து எல்லாம் என்னுடையதாயிற்றோ (அந்தப்) புத்தியையும் கேள். மூக்கில் இருக்கும் கந்தங்களையும் நான் எனக்காக விரும்புகிறதில்லை. ஆகையால், பூமியானது என்னால் ஜயிக்கப்பட்டு எப்பொழுதும் என் வசத்திலிருக்கிறது. வாயில் இருக்கின்ற ரஸங்களையும் நான் எனக்காக விரும்புகிறதில்லை. ஆகையால், ஜலம் என்னால் ஜயிக்கப்பட்டு எப்பொழுதும் என்வசத்திலிருக்கிறது. நான் நேத்திரத்திலுள்ள ரூபத்தையும் ஜோதியையும் எனக்காக விரும்புகிறதில்லை, ஆகையால், ஜோதியானது என்னால் ஜயிக்கப்பட்டு எப்பொழுதும் என்வசத்தில் இருக்கிறது. நான் த்வக்கிலிருக்கும்ஸ்பரிசங்களையும் எனக்காக விரும்புகிறதில்லை. ஆகையால், வாயுவானது என்னால் ஜயிக்கப்பட்டு எப்பொழுதும் என்வசத்திலிருக்கிறது. நான் காதிலிருக்கும் சப்தங்களையும் எனக்காக விரும்புகிறதில்லை. ஆகையால், ஆகாயமானது, என்னால் ஜயிக்கப்பட்டுஎப்பொழுதும்என் வசத்தில்இருக்கிறது.நான் எப்பொழுதும் மனத்திலுள்ளிருக்கும்ஸங்கல்பத்தை எனக்காக விரும்புகிறதில்லை. ஆகையால், மனமானது என்னால் ஜயிக்கப்பட்டு எப்பொழுதும் என்வசத்திலிருக்கிறது. நான் எல்லாக்காரியங்களையும் தேவர்கள்,பித்ருக்கள்,பூதங்கள்,அதிதிகள் இவர்களுக்காக என்றேசெய்கிறேன்'என்றுசொன்னான்.பிறகு,பிராம்மணன் நகைத்து மறுபடியும் ஜனகனை நோக்கி, 'என்னை இப்பொழுது உன்னைப் பரீக்ஷிப்பதற்காக இங்கு வந்திருக்கும் தர்மமென்று தெரிந்து கொள். [1]பிரம்மத்தை நாபியாகக்கொண்டதும் தடுக்கமுடியாததும் ஒழிவடையாததும் ஸத்வகுணமாகிற கட்டுக் கட்டப்பட்டதுமான இந்த (ஞானமாகிற) சக்ரத்தை நீயொருவனே நடத்துகிறவன்' என்று கூறினான்.

1 'பிரம்மத்தை அடைவதற்குக் காரணமாயுள்ளதும்' என்பது வேறு பாடம்.

# முப்பத்துநான்காவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(பிராம்மணர் தம்மகிமையை மனைவிக்குச்சொல்லியது.)

பயந்தவளே! நீ என்னை எவ்விதமாகஎண்ணி அதட்டுகிருயோ அவ்விதம் நான் உலகத்தில் ஸஞ்சரிக்கவில்லை. பிராம்மணனும் முக்தனும் வனத்தில் ஸஞ்சரிப்பவனும் கிருஹஸ்ததர்மமுள்ளவனும் விரதங்களுள்ளவனுமாக இருக்கிறேன். நீ என்னைப் புண்ணியபாவங்களில் பற்றுதலுள்ளவனுகப் பார்க்கிருய். நான் அவ்விதம் இருக்கவில்லை. பூமியிலிருக்கும் இதெல்லாம் என்னுல் வியாபிக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமான பிராணிகளையெல்லாம் அக்னியானது மரங்களைநாசம்செய்வதுபோல நான் நாசம்செய்பவனென்று தெரிந்துகொள். ராஜ்யத்திலும் எல்லாப்பூமியிலும் ஸ்வர்க்கத்திலும் இந்தப் புத்தியானது அவ்விதம் அறிகிறது. எனக்குப் புத்தியே தனம். பிரம்மசாரிகள், கிருஹஸ்தர்கள், வானப்பிரஸ்தர்கள், ஸந்யாஸிகள் இவர்களுள் பிரம்மஜ்ஞானிகளுக்கு (ஞானமென்னும்) மார்க்கம் ஒன்றே. பிரம்மஜ்ஞானிகள் அந்த மார்க்கத்தினுலேயே (நற்கதியை) அடைகின்றனர். பலவித (ஆஸ்ரம) அடையாளங்களுள்ளவர்களும், அமைதியுள்ளவர்களாகப் புத்தியொன்றையே உபாஸிக்கின்றனர். பலவித அடையாளங்களுள்ள ஆஸ்ரமங்களிலுள்ள எவர்களுக்குப் புத்தியானது அடக்கமுள்ளதாக இருக்கிறதோ, அவர்கள், நதிகள் ஸமுத்திரத்தை அடைவதுபோல, ஒன்றுயிருக்கும் ஞானத்தை அடைகின்றனர். இந்த (ஞானமென்னும்) மார்க்கமானது புத்தியினுல் அடையப்படுகிறது; சரீரத்தினுல் அடையப்படுகிறதில்லை. கர்மங்கள் ஆதியும் முடிவுமுள்ளவை. சரீரமானது கர்மங்களால் உண்டானது. நல்ல அழகுள்ளவளே! ஆகையால், எனக்குப் பரலோகத்தைப்பற்றியபயம் இல்லை. (நீயும்) பிரம்மஜ்ஞானத்தில் பற்றிய புத்தியுள்ளவளாயிருந்தால் என்னுடைய ஆத்மாவையே அடைவாய்' என்று சொன்னுர்.



## முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(மாதவர், பிராம்மணி பிராம்மணர் என்பன புத்தியும் மனமுமே என்பதை அர்ஜுனனுக்குக் கூறியது.)**

பிராம்மணி, 'இந்த விஷயமானது அற்பபுத்தியுள்ளவனாலும் பயிற்சிபெறாத புத்தியுள்ளவனாலும் அறியமுடியாதது. இது பெரிதாகவும் சிறிதாகவும் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் இருக்கிறதென்று நான் எண்ணுகிறேன். இந்தப்புத்தியை அடைவதற்குரிய உபாயத்தை எனக்குச் சொல்லும். இந்தப்புத்தி உண்டாவதற்குரிய காரணத்தை உம்மிடமிருந்தே நான் அறியவேண்டும்' என்றுசொன்னாள். பிராம்மணர், 'பிரம்மத்தைப்பற்றிய புத்தியை அரணியாகவும் குருவை அதற்குமேலரணியாகவும் வேதாந்தஶ்ரவணத்தையும் (மனன நிதித்யாஸன ரூபமான) ஆலோசனையையும் கடையும் ஸாதனமாகவும் தெரிந்துகொள். அதிலிருந்து ஞானமாகிற அக்னியானது உண்டாகிறது' என்றுசொன்னார். பிராம்மணி, [1]'க்ஷேத்திரஜ்ஞனென்று பெயருள்ள பிரம்மத்தினுடைய எந்தஸ்வரூபத்தை எந்தலக்ஷணத்தால் அறியலாமோ அந்தப்பிரம்மஸ்வரூபத்தின் அந்தலக்ஷணத்தைச் சொல்லும்' என்று வினவினாள்.

பிராம்மணர், 'அதற்கு ஸ்வரூபமும் இல்லை. குணமும் இல்லை. (இவற்றை) அடையக் காரணமுமில்லை. அதைத் தியானம்செய்யக்கூடிய உபாயத்தையேசொல்லுகிறேன். அதனை நன்றாக உபதேசித்தாலோ அமிர்தத்தினால் திருப்தியடைவதுபோல் திருப்தியடைவாய். கர்மங்களில்பற்றின புத்தியுள்ளவன் (பிரம்மத்தைப்பற்றிய) புத்தியில்லாததினால் ஞானஸ்வரூபியான பிரம்மத்தினிடமிருந்து விலக்கப்பட்டவனாவான். மோக்ஷங்களில், 'இதனைச் செய்யவேண்டும்; இதனைச் செய்யவேண்டாம்' என்று உபதேசிக்கப்படவில்லை. (எதைப்) பார்த்துக்கொண்டிருந்தாலும் (எதைக்) கேட்டுக்கொண்டிருந்தாலும் புத்தியானது ஆத்மாவினிடத்திலேயே இருக்கவேண்டும். இது விஷயத்தில் எல்லா அனுமானங்களோடுங்கூடினவைகளும் பிரத்

1 'க்வநு' என்னும் வேறுபாடம் கொண்டு, 'க்ஷேத்ரஜ்ஞனென்று பெயருள்ள ஜீவன் பிரம்மத்தின் ஸ்வரூபமாவது எவ்விதம்? எதனால் எது அறியமுடியுமோ அது எவ்விதம் அதன் ஸ்வரூபமாகும்? (அதைச் சொல்லும்)' என்பது பழையவுரை.

யக்ஷத்தைக் காரணமாகக்கொண்டவைகளுமான அவ்யக்தமாக இருப்பவைகளேயும் வ்யக்தமான ஸ்வரூபமுள்ளவைகளேயும் எல்லாவற்றையும் எவ்வளவு அம்சங்களாகப் பிரிக்கமுடியுமோ அவ்வளவு அம்சங்களாக நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பிரிக்க வேண்டும். எதற்கு மேலானது இல்லையோ அந்தப்பிரம்மஜ்ஞானமானது (சமமுதலியவைகளே) அப்யஸித்தால் உண்டாகும்' என்று சொன்னார். பிறகு, அந்தப் பிராம்மண ஸ்திரீயினுடைய புத்தியானது ஜீவாத்மாவைப் பரமாத்மாவினிடம் லயிக்கச்செய்வதற்காக க்ஷேத்ர (மென்னும் சரீர)த்தை அறிந்துகொண்டு ஜீவர்களேவிட மேலான பரமாத்மாவினிடம் சென்றது'' என்று சொன்னார்.

அர்ஜுனன், "அச்சுதரே! இவ்விதமான ஸித்தியை அடைந்தவர்களான அந்தப் பிராம்மணியும் அந்தப் பிராம்மண ஶ்ரேஷ்டரும் எங்கே? அவ்விருவர்களேயும் எனக்குச் சொல்லும்'' என்றுகேட்டான். மாதவர், " தனஞ்சய ! என்னுடைய மனத்தைப் பிராம்மணனாகவும் என்னுடைய புத்தியைப் பிராம்மண ஸ்திரீயாகவும் தெரிந்துகொள். க்ஷேத்திரஜ்ஞனென்று சொல்லப்பட்டவன் நானே'' என்று சொன்னார்.

---

## முப்பத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(வாஸுதேவர், பரப்பிரம்ம ஸ்வரூபத்தையும் அதனே அடையும் வழியையும் பற்றிய குரு சிஷ்ய ஸம்வாதத்தை அர்ஜுனனுக்குக் கூறியது.)**

அர்ஜுனன், "கோவிந்தரே ! அறியத்தக்கதும் சிறந்ததுமான (அந்தப்) பிரம்மத்தை நீர் எனக்கு விரித்துரைக்கவேண்டும். உம்முடைய அருளால் என்னுடைய புத்தியானது ஸூக்ஷ்மத்தில் பற்றியிருக்கிறதன்றோ?'' என்று வினவ, வாஸுதேவர் சொல்லத்தொடங்கினர். "(அர்ஜுன !) இந்த விஷயத்திலும் சிஷ்யனுக்கும் குருவுக்கும் நடந்த ஸம்வாதமும், [1]மோக்ஷத்துடன்கூடியதும் புராதனமுமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். பகைவர்களேத்தபிக்கச்செய்பவனே! மேதாவியான ஒரு சிஷ்யன் உட்கார்ந்திருப்பவரும் கடுமையான விரதங்களுள்ளவரும் ஆசார்யருமான பிராம்ம

---

1 'கேட்டவுடன் மோக்ஷத்தைத் தரக்கூடியது' என்பது பழைய உரை.

ணரை நோக்கி, 'பிராம்மணரே! ச்ரேயஸ் எது? மோக்ஷத்தை முக்யமான கதியாகக்கொண்ட நான் பகவானான உம்மைச் சரணமடைந்தேன். உம்மைத் தலைவணங்கி யாசிக்கிறேன். நான் கேட்டதை எனக்குச் சொல்லும்' என்று கேட்டனன். பார்த்த! குருவானவர் இவ்விதம் சொல்லுகின்ற அந்தச் சிஷ்யனை நோக்கி, 'பிராம்மண! உனக்கு எதில் ஸம்சயம் இருக்கிறதோ அதைச்சொல்; சொல்லுகிறேன்' என்று சொன்னார். கௌரவச்ரேஷ்டனே! சிறந்தபுத்தியுள்ளவனே! குருவினால் இவ்விதம் சொல்லப்பட்டவனும் குருவினிடத்தில் பக்தியுள்ளவனுமான அந்தச் சிஷ்யன் கைகுவித்துக்கொண்டு கேட்டதைக் கேள். சிஷ்யன், 'பிராம்மணரே! நான் எதிலிருந்து உண்டானேன்? நீர் எதிலிருந்து உண்டானீர்? மேலானதும் ஸத்யமுமான அதனைச்சொல்லும். 1ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமான பூதங்கள் எதிலிருந்து உண்டாயின? (ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமான) பூதங்கள் எதனால் ஜீவிக்கின்றன? அவைகள் எதில் லயிக்கின்றன? ஸத்யம் எது? தவம் எது? ஸாதுக்களால் சொல்லப்பட்ட குணங்கள் எவை? க்ஷேமத்தைத் தரக்கூடிய மார்க்கங்கள் எவை? எது சுகம்? எது துக்கம்? பகவானே! நல்ல விரதமுள்ளவரே! பிரம்மரிஷியே! இப்பொழுது என்னுடைய இந்தக்கேள்விகளை உள்ளபடி சொல்ல வேண்டும். இவ்வுலகில் உம்மைத்தவிர வேறொருவரும் இந்தக் கேள்விகளைச் சொல்லத்தகுந்தவரல்லர். தர்மத்தை அறிந்தவர்களுள் சிறந்தவரே! சொல்லும். எனக்கு(க் கேட்க) ஆவல் அதிகமாக இருக்கிறது. நீர் மோக்ஷதர்மங்களின் கருத்தை விளக்குவதில் திறமையுள்ளவரென்று உலகங்களில் கானம் செய்யப்படுகிறீர். எல்லா ஸந்தேகங்களையும் அறுப்பவர் உம்மைத் தவிர வேறொருவருமில்லை. நாம் ஸம்ஸாரத்தில் பயமுள்ளவர்களும் மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்களுமாக இருக்கிறோம்'என்று வினவினன். பார்த்த! குருகுலத்தார்களுள் சிறந்தவனே! பகைவரை அடக்குபவனே! சிறந்த புத்தியுள்ளவரும் விரதங்களை அனுஷ்டிப்பவருமான அந்தக் குருவானவர் நன்கு சரணமடைந்தவனும் உள்ளபடி கேட்பவனும் நற்குணங்களுள்ளவனும் அடக்கமுள்ளவனும் குருவை அனுஸரிப்பவனும் நிழல்போலிருப்பவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் முயற்சியுள்ளவனும் பிரம்மசாரியுமான அந்தச்சிஷ்ய

1 '(ஆகாயமுதலான) பூதங்களும் ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் எதிலிருந்து உண்டாயின?' என்பது பழையஉரை.

னுக்கு அந்த எல்லாக்கேள்விகளுக்கும் நன்றாக மறுமொழி கூறலா னார். '(சிஷ்ய !) சிறந்த ரிஷிகளால் அனுஷ்டிக்கப்பட்டதும் வேத வித்தையிலிருந்து அடையப்பட்டதும் உண்மைப்பொருளைப்பற்றிய விசாரமுள்ளதுமான இந்தத்தர்மத்தைப் பிரம்மதேவர் சொல்லியிருக் கிறார். பிரம்மஜ்ஞானமே மேலானது. ஸந்யாஸமே உத்தமமான தவமென்று அறிகிறோம். எவன் எவ்விதத்திலும் அழிவற்றதான ஞானதத்துவத்தையும் எல்லாப் பிராணிகளிடத்திலுமுள்ள பரமாத் மாவையும் நிச்சயமாக அறிகிறானோ அவன் எல்லா உலகங்களிலும் (இஷ்டப்படி) ஸஞ்சரிப்பானென்று கருதப்படுகிறான். (எவன்சித்தும் ஜடமும்) சேர்ந்திருப்பதையும் பிரிந்திருப்பதையும் அவ்வாறே (ஜீவே ஸ்வரர்களுடைய) அபேதத்தையும் பேதத்தையும் பார்க்கிறானோ அவன் துக்கத்திலிருந்து விடுபடுகிறான். எவன் ஒன்றையும் விரும்பு கிறதில்லையோ, ஒன்றிலும் அபிமானம் வைக்கிறதில்லையோ அவன் இவ்வுலகில்இருக்கும்பொழுதே பிரம்மத்தன்மையை அடையத்தகுந் தவனாகிறான். மாயை(ஸத்வ முதலான)குணங்கள் இவற்றின் தத்வத் தை அறிந்தவனும் எல்லாப்பிராணிகளின் காரணத்தையும் அறிந்த வனும் மமதையும் அகங்காரமுமற்றவனுமான மனிதன் முக்தி பெறுகிறான். இதில் ஸந்தேகமில்லை. அஜ்ஞானமாகிற வேரும் முளையுமுள்ளதும், மஹத்தத்துவமாகிற அடிமரமுள்ளதும், பெரிதா யிருப்பதும்,பெரிய அகங்காரமாகிற தளிர்களுள்ளதும், இந்திரியங்க ளாகிற (துன்பங்களென்னும் கொடிகளின்) முளைகளுள்ள பொந்துக ளுள்ளதும், (ஆகாயமுதலான) மஹாபூதங்களாகிற அரும்புகளுள் ளதும், ஸ்தூலகார்யங்களாகிற சிறு கிளைகளுள்ளதும், எப்பொழு தும் (ஸங்கல்பங்களாகிற) இலைகளுள்ளதும், எப்பொழுதும் (கர்மங் களாகிற) புஷ்பங்களுள்ளதும், [1]ஸுகதுக்கங்களாகிற கனிகளுள்ள தும், எல்லாப்பிராணிகளும் ஜீவித்திருக்கக்காரணமானதும், ஸநாத னமுமான பிரம்மமாகிற விதையை அறிந்து ஞானமாகிற சிறந்த கத்தியினால் (அவ்யக்தமுதலான) தத்துவங்களை வெட்டினால் தேவத் தன்மையை அடைந்து ஜனன மரணங்களற்றவனாவான். சிறந்தஅறி வுள்ளவனே! சென்றதும் நிகழ்கிறதும் வருவதுமான பூமிமுதலா னவைகள் அறம்பொருளின்பங்கள் இவற்றின்நிச்சயமுள்ளதும் ஸித் தர்களுடைய கூட்டங்களால் அறியப்பட்டதும் முந்திய கல்பத்தி லுள்ளதும் ஸநாதனமும் உத்தமமுமான பதத்தை நான் இப்பொ

1 'புண்யபாபங்களாகிற கனிகளுள்ளதும்.' என்றும் கொள்ளலாம்.

ழுது உனக்குச்சொல்லுகிறேன். இவ்வுலகில் வித்வான்கள் அதனை அறிந்து இப்பொழுது நன்கு ஸித்திபெற்றவர்களாவார்கள். முற்காலத்தில் (மோக்ஷதர்மத்தை) அறிய விருப்பமுள்ளவர்களும் தம்கர்மங்களால் எல்லா மார்க்கங்களிலும் ஸஞ்சரித்துக் களைத்தவர் களும் பிரம்மரிஷிகளுமான பிரஜாபதி, பரத்வாஜர், கௌதமர், பார்க்கவர், வஸிஷ்டர், கச்யபர், விஸ்வாமித்ரர், அத்ரி இவர்கள் ஒருவரோடொருவர் (ஆலோசித்து) வயது முதிர்ந்தவரான ஆங்கிரஸரென்னும் ரிஷியை முன்னிட்டுக்கொண்டு பிரம்மலோகம் சென்று தோஷமற்றவரான பிரம்மதேவரைக் கண்டார்கள். (அந்த) மஹரிஷிகள், ஸுகமாக வீற்றிருக்கும் மஹாத்மாவான அந்தப்பிரம்மதேவரை நமஸ்கரித்து வணக்கத்துடன் சிறந்ததான மோக்ஷதர்மத்தைப் பற்றிப் பின்வருமாறு கேட்கலானார்கள். '(தேவரே!) எவ்விதம் செய்தால் கர்மம் நல்லதாகும்? பாவத்திலிருந்து எவ்விதம் விடப்படலாம்? எந்தமார்க்கங்கள் எங்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கின்றனவாகும்? எது ஸத்யம்? எது பாபம்? (மனிதர்கள்) அடையக் கூடிய தக்ஷிணம் உத்தரம் என்னும் இரண்டு கர்மமார்க்கங்கள் எவை? நரகமும் மோக்ஷமும் பிராணிகளுடைய ஜனனமரணங்களும் எவை?' என்று கேட்டார்கள். சிஷ்யனே! முனிஸ்ரேஷ்டர்களால் இவ்வாறு வினவப்பட்ட அந்தப்பிரம்மதேவர் எதைச்சொன்னாரோ வேதத்தை அனுஸரித்ததான அதை நான் உனக்கு நன்றாகச்சொல்லுகிறேன்; கேள். பிரம்மதேவர் சொல்லத்தொடங்கினார். '(ரிஷிகளே! அவ்யக்த முதலான) பூதங்களும் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் ஸத்தியமான பிரம்மத்தினிடமிருந்து உண்டாயின. அவைகள் கர்மத்தால் ஜீவிக்கின்றன. அப்படி ஜீவிப்பதே நல்ல விரதமாகிறது. (முன் சொல்லிய சராசரவடிவமான உலகம்) திரும்பவும் தன் காரணத்தை அடைந்து தன் கர்மத்துடன் இருக்கிறது. அழிவற்றதும் ஸத்யமுமான பிரம்மமே குணங்களுடன் சேர்ந்ததாகி ஐந்து ஸ்வரூபங்களுள்ளதாகிறது. ஈஸ்வரன் ஸத்யம்; தர்மம் ஸத்யம்; ஜீவன் ஸத்யம்; ஸத்யத்திலிருந்து உண்டான (ஆகாயமுதலான) பூதங்கள் ஸத்யம்; பூதங்களாலாகிய உலகம் ஸத்யம். ஆகையால், எப்பொழுதும் யோகத்தை முக்கியகதியாகக்கொண்டவர்களும் கோபமும் தாபமும் அற்றவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் தர்மத்துக்கு அணையாக இருப்பவர்களுமான பிராம்மணர்கள் ஸத்யத்தை ஆஸ்ர

யித்திருக்கின்றனர். [1] ஒருவரிடம் ஒருவர் அடங்கினவர்களும் வித்தையுள்ளவர்களும், தர்மமாகிற அணையை நிலைநிறுத்துகின்றவர்களும் சாஸ்வதர்களும் உலகத்தைப் படைப்பவர்களுமான அவர்களைப்பற்றி நான் சொல்லுகிறேன். வித்வான்கள் (அறம்பொருளின்பங்களுக்குக் காரணமான) நான்குவித்தைகளையும் தனித்திருக்கும் (நான்கு) வர்ணங்களையும் நான்கு ஆஶ்ரமங்களையும் நான்குபாதங்களுள்ள தர்மம் ஒன்றையுமே நிலைத்திருப்பவையாகச்சொல்லுகின்றனர். பிராம்மணர்களே! சுபத்தையும்க்ஷேமத்தையும் செய்வதும் பிரம்மபாவத்தை அடைவதற்கு இன்றியமையாதகாரணமும் முந்தி வித்வான்களால் அடையப்பட்டதுமான மார்க்கத்தை உங்களுக்குச்சொல்லுகிறேன். பேசும் திறமையுள்ளவர்களே! பெரும்பாக்யமுள்ளவர்களே! இங்கு இப்பொழுது என்னால்சொல்லப்படுவதும் மற்றவர்களால் அறியமுடியாததும் பரமபதத்தைப்பற்றியதுமான மார்க்கத்தை முழுதும்தெரிந்துகொள்ளுங்கள். இவ்வுலகிலேயே பிரம்மசர்யாஶ்ரமத்தை முதலாவது பதமாகச் சொல்லுகின்றனர். க்ருஹஸ்தாஶ்ரமம் இரண்டாவது பதமாகும். வானப்பிரஸ்தாஶ்ரமம் அதற்கு மேலான பதமாகும். ஸந்யாஸாஶ்ரமமானது அதற்கும் மேலான சிறந்தபதமென்று அறிய வேண்டும். ஸந்யாஸம்பெற்று ஆத்மதரிசனம் உண்டாகாதவரையில் தேஜஸ், ஆகாயம், ஸூரியன், வாயு, இந்திரன், ப்ரஜாபதி இவர்களை அறியமுடியாது; முந்தி அதற்கு உபாயத்தைச் சொல்லுகிறேன். அதனைத் தெரிந்துகொள்ளுங்கள். இருபிறப்புள்ளவைகளான மூன்றுவர்ணங்களுக்கும் கனிகளையும் கிழங்குகளையும் காற்றையும் புஜித்துக்கொண்டு காட்டில் வஸிப்பதென்னும் வானப்பிரஸ்தாஶ்ரமம் உபதேசிக்கப்படுகிறது. [2] க்ருஹஸ்தாஶ்ரமமானது எல்லாவர்ணங்களுக்குமே விதிக்கப்படுகிறது. வித்வான்கள் தர்மமானது ஶ்ரத்தையை முக்கியமான லக்ஷணமாகக் கொண்டிருக்கின்றது சொல்லுகிறார்கள். நைஷ்டிகப் பிரம்மசாரியானாலும் ஸந்யாஸியானாலும் வைராக்கியமுள்ளவனாக இருந்தால் பிரம்மத்தைக்காண்பவனாவான். புத்தியுள்ளவர்களான வித்வான்களால் கர்மங்களால் அடையப்பட்டவைகளும் தர்மத்திற்கு அணையாக இருப்பவைகளுமான தேவயானமென்னும் மார்க்கத்தை அடைவதற்குரிய உபாயங்கள் இவ்விதம் உங்களுக்குச் சொல்லப்பட்டன. தீக்ஷ்ணமான விர

1. 'ஒருவரை ஒருவர் அஞ்சித் தர்மத்தை மீறாதவர்கள்' என்பது பழைய உரை.

2. வேறுபாடம்.

தங்களுள்ள எவன் இவைகளுள் ஒரு தர்மத்தை முக்கியமாக அநுஷ்டிக்கிருனே அவன் சிலகாலத்தில் பிராணிகளுடைய உத்பத்தி நாசங்களை எப்பொழுதும் பார்ப்பான். இனிமேல், (புத்திக்கு)விஷய மாக இருப்பவைகளும் தனித்தனியாக இருப்பவைகளுமான எல் லாத்தத்வங்களையும் உண்மையாக யுக்தியினல் சொல்லுகிறேன். மஹத்தத்வமும் அவ்யக்தமும் அஹங்காரமும் பதினேர்இந்திரியங்க ளும் ஐந்துமஹாபூதங்களும் ஐந்து பூதங்களின் (சப்த முதலான) விசேஷகுணங்களும் தத்வங்களென்று வேதத்தில் சொல்லப்பட் டிருக்கின்றன. [1] இந்த இருபத்துநான்கு தத்வங்களும் உங்களுக் குச் சொல்லப்பட்டன. எந்த வித்வான் எல்லாத்தத்வங்களுடைய உத்பத்தி நாசங்களையும் அறிகிருனே எல்லாப்பிராணிகளுள்ளும் அவன் மோகமடையமாட்டான். எவன் தத்வங்களையும் எல்லாக் குணங்களையும் எல்லாத்தேவதைகளையும் உள்ளபடி அறிகிருனே அவன் பாவங்களற்றவனுகிப் பந்தத்தைவிட்டு விலகி நிர்மலமான எல்லா உலகங்களையும் அடைவான்.

## முப்பத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(பிரம்மதேவர் தமோகுணத்தின் காரியத்தைக் கச்யபர் முதலியோருக்குக் கூறியது.)**

(முனிவர்களே!) அந்தத்தத்வங்களுள் ஸமமாகஇருக்கும் (ஸத் வம் ரஜஸ் தமஸ் என்னும்) மூன்று குணங்களையும் அவ்யக்தமென்று அறியவேண்டும். அந்த அவ்யக்தமானது எல்லாக்கார்யங்களையும் வியாபித்ததும்அழிவற்றதும் அசைவற்றதுமானது.அந்தஅவ்யக்தமே வேற்றுமையடைந்தால் ஐந்துபூதங்களுள்ளதும் [2] 'ஒன்பது துவாரங் களுள்ளதுமான சரீரமாகிறதென்று அறியவேண்டும். பதினேர் இந் திரியங்களுள்ளதும் மனத்தினலேயே பிரகாசிக்கும் விஷயஸ்வரூப மானதும் புத்தியை ஸ்வாமியாகக்கொண்டதுமான இந்தச் சரீரமா

---

1. 'ஸ்ர காஅ' என்பது வேறுபாடம். 'புருஷனையும் கிரஹித்துக் கொள்ள வேண்டும்' என்பது பழைய உரை.

2. 'ஐந்து இந்திரியங்கள், மனம், புத்தி, ப்ராணன், அபிமானமென்று பெயருள்ள அஹங்காரம்' என்பது பழைய உரை.

னது [1]சிறந்ததும் பதினோராவதுமான மனத்தினால் உண்டானதாகும். இந்தச் சித்தமாகிற நதியில் (ஹிம்ஸையேயில்லாத தர்மத்தில் பிரவிருத்தி, ஹிம்ஸையேயுள்ள தர்மத்தில் பிரவிருத்தி, ஹிம்ஸை கலந்த தர்மத்தில் பிரவிருத்தியென்னும்) மூன்று பிரவாஹங்களும் இவைகளைப்பெருகச்செய்யும் முக்குண(ங்களின்வாஸனை)வடிவமானமூன்று வாய்க்கால்களும் எப்பொழுதும் பெருகியோடுகின்றன. ஸத்வம், ரஜஸ், தமஸ் இவைகளைக் குணங்களாகச் சொல்லுகின்றனர். இவைகளெல்லாம் ஒன்றோடொன்றுசேர்ந்தவைகளும் ஒன்றையொன்று அடுத்து ஜீவிக்கின்றவைகளுமாக இருக்கின்றன; ஒன்றையொன்று ஆஸ்ரயித்தவைகளும் ஒன்றையொன்று அனுஸரித்தவைகளும் ஒன்றோடொன்று கலந்தவைகளுமாக இருக்கின்றன. ஐந்து மஹாபூதங்களும் முக்குணங்களாலாகியவை. ஸத்வம்(அதிகமானால்)தமஸை அழிக்கும். ரஜஸ் (அதிகமானால்) ஸத்வத்தை அழிக்கும். ஸத்வம் (அதிகமானால்) ரஜஸை அழிக்கும். தமஸ் (அதிகமானால்) ஸத்வத்தை அழிக்கும். தமஸ் எப்பொழுது அடங்குகிறதோ அப்பொழுது ரஜஸ் [2]கிளம்புகிறது. ரஜஸ் எப்பொழுது அடங்குகிறதோ அப்பொழுது ஸத்வம் கிளம்புகிறது. தமஸை அந்தகாரஸ்வரூபமாகவும் (மற்றிரண்டுடன் சேர்ந்து) முக்குணஸ்வரூபமுள்ளதாகவும் மோஹமென்று பெயருள்ளதாகவும் அறியவேண்டும். இது அதர்மத்தை லக்ஷணமாகக்கொண்டதும் பாபகர்மங்களில் பற்றுதலுள்ளதுமாகஇருக்கிறது. தமஸினுடைய இந்தரூபமானது பொருத்தமுள்ளதாகக் காணப்படுகிறது. விபரீதத்தைச் செய்யும் ரஜஸைப் பிரகிருதியின் ஸ்வரூபமாகவே சொல்லுகின்றனர். அது எல்லாப்பிராணிகளிடத்திலும் இருப்பதும் பிரவிருத்தியை லக்ஷணமாகக் கொண்டதுமாகப் பார்க்கத்தக்கது. எல்லாப்பிராணிகளிடத்திலும் பிரகாசமும் (தர்மஜ்ஞானமுதலியவற்றால்) அழகாயிருப்பதும் ஸ்ரத்தையும் ஸத்வகுணத்தின் ரூபமாகும். இவ்விதம் (தர்மஜ்ஞானமுதலியவற்றால்) அழகாயிருப்பது ஸாதுக்களுக்கு இஷ்டமானது. இக்குணங்களின் கார்யஸ்வரூபங்கள் உண்மையான காரணங்களுடன் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் சொல்லப்படும். அவைகளை உண்மையாகத்தெரிந்துகொள். மோஹம், அஞ்ஞானம், ஈயாமை, கர்மங்களைநிச்சயிக்காமை, நித்திரை, கர்வம், பயம், பேராசை, சோகம், புண்ணியத்தைத்தூஷிப்பது, மறதி,

1. 'பிரம்மத்தில் ஆரோபிதமானதால் பிரம்மமாகும்' என்பது பழைய உரை. 2. வேறுபாடம்.

நல்ல புத்தியின்மை, நாஸ்திகனாக இருப்பது, கெட்டநடை, யுக்தா யுக்தங்களைத் தெரிந்துகொள்ளாமை, எல்லா இந்திரியங்களையும் உள்ளபடி அறியாமை, தாழ்ந்தஜாதியின் தொழில்களைச் செய்வது, செய்யப்படாததைச் செய்யப்பட்டதாக நினைப்பது, அஜ்ஞானத்தை ஞானமாக நினைப்பது, நட்பின்மை, கெட்ட அபிப்பிராயம், அஶ்ரத்தை, மூடபுத்தி, நேர்மையில்லாமை, நல்லறிவின்மை, பாபகார்யம், அறியாமை,(சோம்பல் முதலியவற்றால்)ஒன்றும் செய்யாமலிருப்பது, (தேவதை முதலானவர்களிடம்) பக்தியில்லாமை, இந்திரியங்களை ஜயிக்காமலிருப்பது, இழிவான கார்யத்தில்ஆசை இவைகளெல்லாம் தமோகுணத்தினால் ஏற்பட்ட காரியங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வுலகில் [1]அபிப்பிராயம் என்று பெயர் பெற்று, நன்மையைப்பயவாமல் ஆங்காங்குநிஷேதிக்கப்படும் மற்றுமுள்ள எல்லா எண்ணங்களும் தமோகுணத்தின்காரியங்களே. எப்பொழுதும் (பிறரைத்) தூஷிப்பதும் தேவர்களையும் பிராம்மணர்களையும் பகைப்பதும் ஈயாமையும் அதிககர்வமும் மோகமும் கோபமும் பொறாமையும் பிராணிகளிடம் மாத்ஸரியமும் தமோகுணத்தின் காரியமென்று கருதப்படுகின்றன. வீணானகாரியங்களும் வீணான தானங்களும் வீணாகப் புஜிப்பதுமான இவைகளும் தமோகுணத்தின் காரியங்களென்று கருதப்படுகின்றன. அதிகமாகப்பேசுவதும் பொறாமையும் மாத்ஸர்யமும் அபிமானமும் அஶ்ரத்தையும் தமோகுணத்தின் காரியங்களென்று கருதப்படுகின்றன. உலகத்தில் இவ்விதமான பாவகாரியத்தைச் செய்தவர்களும் வரம்பு கடந்தவர்களுமான மனிதர்களெல்லாரும் தாமஸர்களென்று கருதப்பட்டவர்கள். பாவச்செய்கையுள்ளவர்களும் அவாக் என்னும்நரகத்தை அடைபவர்களும் திர்யக் என்னும் நரகத்தை அடைபவர்களுமான அவர்களுக்கு அவஶ்யமாக ஏற்படக்கூடிய பிறவிகளைச் சொல்லுகிறேன். ஸ்தாவரங்களான பிராணிகள், பசுக்கள், வாகனங்கள், மாம்ஸத்தைப்புஜிக்கும் பிராணிகள், ஸர்ப்பங்கள், பூச்சிகள், புழுக்கள், பறவைகள், ஜலத்திலுண்டாகும்பிராணிகள், நான்குகால்களுள்ள ஜந்துக்கள், பயித்தியம் பிடித்தவர்கள், செவிடர்கள், ஊமைகள், கெட்ட ரோகமுள்ளவர்கள்ஆகிய தமஸில் மூழ்கினவர்களும் தீயவொழுக்கமுள்ளவர்களும் தம் கர்மங்களால் செய்யப்பட்ட அடையாளமுள்ளவர்களும் அஜ்ஞானத்தில் அழுந்தினவர்களும் தாமஸ

1. 'ஹாவர' என்பது மூலம்'

களுமான இவர்கள் எல்லாரும் [1]அவாக்ஸ்ரோதஸுகளென்று சொல்லப்படுகின்றனர். நான் இனிமேல் அவர்கள் மேலானகதியை அடையும் விதத்தையும் அவர்களுக்குப் புண்ணியம் உண்டாகும் விதத்தையும் அவர்கள் புண்ணியம்செய்து புண்ணியம் செய்தவர் களுக்குரிய உலகங்களை அடையும் விதத்தையும் சொல்லுகிறேன். 'இழிவான பிறவியை அடைந்தவர்களோ தம் கர்மங்களில் பற்றுத லுள்ளவர்களும் சுபத்தை விரும்புகின்றவர்களுமான பிராம்மணர்க ளுடைய கர்மங்களில் [2]உபயோகப்பட்டு ஸம்ஸ்காரத்தால் மேலான பிறவியை அடைந்து (புண்ணியகர்மங்களில்) முயன்று ஸ்வர்க்கத்தில் தேவர்களுடன் ஸாலோக்கியத்தை அடைகின்றனர்' என்று வேதத் தில் சொல்லியிருக்கிறது. இழிவானபிறவியை அடைந்தவர்களும் தமக்குரியகர்மங்களில் விசேஷ ஞானமுள்ளவர்களுமான அவர்கள் மீண்டும் பிறக்கும் தன்மையுள்ளவர்களாகி இவ்வுலகில் மனிதர்களா கப் பிறக்கின்றனர். பாவப்பிறவியைஅடைந்து சண்டாளர்களாகவும் ஊமைகளாகவும் திக்கிப்பேசுகின்றவர்களாகவும் பிறந்து வரிசையாக மேன்மேலான பிறவியை அடைகின்றனர். சூத்திரப் பிறவியைத் தாண்டினவுடன், (வைச்ய ஜன்மத்தில்) தமோகுணமென்னும் பிரவா ஹத்தின் மத்தியில் (கோபம் முதலான) மற்றத்தாமஸகுணங்கள் வந்து சேரும். காமமுதலான விஷயங்களில் ஆசையானது மஹா மோஹமென்று கருதப்பட்டது. [3]ரிஷிகளும் [4]முனிவர்களும் தேவர் களும் ஸுகத்தில் விருப்பமுற்று இந்த விஷயங்களில் மோஹிக்கின்ற னர். தமஸ், மோஹம், மஹாமோஹம், தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் ஆகிய இவற்றுள் அந்ததாமிஸ்ரம் மரணமென்றும் தாமிஸ்ரம் குரோத மென்றும் சொல்லப்படுகின்றன. பிராம்மணர்களே ! ஸ்வரூபத்தி லும் குணத்திலும் பிறவியிலும் உண்மையில் தமஸாகவே

1. 'இழிவான கதியை அடைவதற்கேற்ற சித்தவிருத்தியுள்ளவர்கள்' என் பது பழைய உரை.

2. 'கொல்லப்பட்டு' என்பது பழைய உரை.

3. வேதமந்த்ரங்களைக்கண்டவர்கள்; சிறந்தஞானமுள்ளவர்கள். ஆதிபர்வம் 114-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

4. மனனம் செய்பவர்கள். 'துக்கங்களில் வருந்தாத மனத்தையுடையவ னும் ஸுகங்களில் பற்றுதலற்றவனும் ஆசையையும்பயத்தையும் கோபத்தையும் விட்டவனும் நிச்சயபுத்தியுள்ளவனுமாயிருப்பவன் முனி என்று சொல்லப்படு வான்' ஸ்ரீபகவத்கீதை, 2-வது அத்யாயம் 56-வது ச்லோகம்.

இருக்கும் இவையெல்லாம் உங்களுக்கு முறைப்படி சொல்லப்பட்டன. எவன் இவற்றை நன்றாகத்தெரிந்துகொள்ளுவான்? எவன் இவற்றை ஆராய்ந்துபார்ப்பான்? உண்மையல்லாததை உண்மையாகப்பார்ப்பது தமஸின் லக்ஷணமாகும். பலவிதமான தமஸின் குணங்களைச் சொன்னேன். சிறந்ததும் இழிந்ததுமான தமஸை யும் உள்ளபடி சொன்னேன். இந்தக்குணங்களை எப்பொழுதும் அறியும் மனிதன் எல்லாத்தாமஸ குணங்களிலிருந்தும் விடப்படுவான்.

---

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பிரம்மதேவர் ரஜோகுணகாரியத்தை மஹரிஷிகளுக்குச் சொல்லியது.)**

**ஸா**துக்களுள் சிறந்தவர்களே! நான் உங்களுக்கு ரஜோகுணத்தை உள்ளபடி சொல்லுகிறேன். சிறந்தபாக்யமுள்ளவர்களே! ரஜோகுணத்தாலுண்டான குணங்களையும் நடைகளையும் தெரிந்துகொள்ளுங்கள். பிராம்மணர்களே!ஸந்தாபம், ரூபம்,ஶ்ரமம், ஸுகம், துக்கம், குளிர், வெப்பம், ஐஶ்வர்யம், சண்டை, [1]சேர்க்கை, யுக்திவாதம், வெறுப்பு, பொறுமை, பலம், செளர்யம், மதம், கோபம், அலைதல், கலகம், பொருமை, ஆசை, கோள்சொல்லுவது, யுத்தம், மமதை, ரக்ஷிப்பது, கொல்லுவது, கட்டுவது, கஷ்டம், விற்பது, வாங்குவது, 'அறு, வெட்டு, பிள' என்று சொல்லிப் பிறனுடைய [2]மர்மத்தைப் பிளப்பது, உக்ரமாகவும் பயங்கரமாகவும் உரக்கப்பேசுவது, பிறனுடைய தனத்தில் ஆசைப்படுவது, லோகத்தைப்பற்றினகவலை, தொடர்ச்சியான கவலை, மாத்ஸர்யம், அவமதித்துப்பேசுவது, [3]பொய்யான கொடை, பொய்சொல்வது, விபரீதமாகப்பேசுவது, நிந்திப்பது, ஸ்தோத்திரம்செய்வது, கொண்டாடுவது, ப்ரதாபம், அதட்டல், பரிசர்யை, சுஶ்ரூஷை, ஸேவை, ஆசை, (பிறரை) அடுப்பது, வியவஹாரத்தில் திறமை, நீதிபேசுவது, தவறுதல், அபவாதம் சொல்வது (எல்லாவற்றையும்) ஏற்றுக்கொள்வது, உலகங்களில் புருஷர்களையும்

1. வேறு பாடம். 2. 'மர்ம' என்று பாடங்கொள்ளப்பட்டது.
3. வேறு பாடம்.

மாதர்களேயும் (மற்றப்) பிராணிகளேயும் பொருள்களேயும் [1]வீடுகளே யும் பற்றித் தனித்தனியாக ஏற்படும் [2]செம்மைப்படுத்தும் வகைகள், மனவருத்தம், நம்பிக்கையின்மை, 'நான் எப்பொழுதும் தலைவனுக வும் விருப்பங்கள் நிறைவேறினவனுகவும் இருக்கவேண்டும்' என் றெண்ணிச் செய்யும் விரதங்கள், நியமங்கள், (பயனேவிரும்பிச் செய் யும்) ஸ்வாஹாகாரம், நமஸ்காரம், ஸ்வதாகாரம், வஷட்காரம், யாகம் செய்விப்பது, ஓதுவித்தல், யாகம்செய்வது, அத்யயனம் செய்வது, கொடுப்பது, வாங்குவது, பிராயச்சித்தங்கள், மங்களமானகாரியம், 'இது எனக்குக் கிடைக்கவேண்டும்; இது எனக்குக் கிடைக்கவேண் டும்' என்று குணத்தாலுண்டான ஸ்நேகம், துரோஹம், கபடம், வஞ் சனே, அகங்காரம், திருட்டு, ஹிம்ஸை, அருவருப்பு, (பந்துக்களின் குறையைப்பற்றிய) மனவருத்தம், மிகவும் விழித்துக்கொண்டிருப் பது, டம்பம், கர்வம், ஆசை, பக்தி, திருப்தி, மிகுந்தஸந்தோஷம், சூது, ஜனங்களேப்பற்றிய பேச்சு, ஸ்திரீகளால் ஏற்பட்ட ஸம்பந்தங் கள், நர்த்தனம் வாத்தியம் கானம் இவைகளே அனுபவிப்பது இந்தக் குணங்களெல்லாம் ராஜஸங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன. இவர்கள், பூமியில் சென்றதும் நிகழ்கின்றதும் வருவதுமான பதார்த் தங்களேப்பற்றிச் சிந்திப்பவர்களும் அறம்பொருள் இன்பமென்னும் மூன்று புருஷார்த்தங்களிலும் எப்பொழுதும் பற்றுதலுள்ளவர் களும் இஷ்டமான நடையுள்ளவர்களும் எல்லா இஷ்டங்களும் நிறைந்தவர்களுமாக அதிக ஸந்தோஷமடைகின்றனர். ரஜோகுணத் தால் சூழப்பட்ட இந்த மனிதர்கள் [3]அர்வாக்ஸ்ரோதஸுக்கள் என்று சொல்லப்படுகின்றனர். இவர்கள் இவ்வுலகில் அடிக்கடி பிறந்து ஸந் தோஷிப்பவர்களும் மறுஜன்மத்தில் உண்டாகக்கூடியதும் இவ்வுல கில் உண்டாகக்கூடியதுமான க்ஷேமத்தை விரும்புகின்றவர்களும் கொடுப்பவர்களும் வாங்குபவர்களும் திருப்தி செய்விப்பவர்களும் ஹோமம் செய்பவர்களுமாக இருப்பார்கள். உங்களுக்குப் பலவித மான ரஜோகுணங்களேயும் அவற்றின் நடையையும் உள்ளபடி சொன் னேன். இந்தக் குணங்களே எப்பொழுதும் தெரிந்துகொள்ளும் மனி தன் ராஜஸமான எல்லாக் குணங்களாலும் விடப்படுவான்.

---

1. 'ரக்ஷிப்பவர்களேயும்' என்பது பழைய உரை.

2. 'வாஸனேகள்' என்றும் கொள்ளலாம்.

3. 'பூமிக்குமேலும் ஸுவர்க்கத்திற்குக் கீழும் செல்லத்தகுந்த சித்த விருத்தியுள்ளவர்கள்' என்பது பழைய உரை.

## முப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மதேவர் ஸத்வகுண காரியத்தை மஹரிஷிகளுக்குக் கூறியது.)

பிராம்மணர்களே! இனி, உலகத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையைப்பயப்பதும் ஸாதுக்களின் தர்மமும் இகழப்படாததும் உத்தமமும் மூன்றாவதுமான ஸத்வகுணத்தைச் சொல்லுகிறேன். ஆனந்தம், பிரீதி, மேன்மை, பிரகாசமாகஇருத்தல், ஸுகம், தைன்ய மில்லாதிருத்தல், பயமில்லாமலிருத்தல், ஸந்தோஷம், ஶ்ரத்தை, பொறுமை, தைரியம், அஹிம்ஸை, ஸமமாக இருத்தல், உண்மை, நேர்மை, கோபமின்மை, அஸூயையின்மை, சுத்தி, ஸாமர்த்தியம், பராக்ரமம் (இவை ஸத்வகுணத்தின் காரியங்கள். பிரம்மத்தைப்பற்றுத) ஞானமும் கர்மமும் ஸேவையும் ஶ்ரமமும் வீணானவை என்றெண்ணி யோகிகளின் தர்மத்தை அனுஷ்டிப்பவன் மேலுலகில் அழிவற்ற பயனை அனுபவிப்பான். எனதென்னும்பற்றற்றவனும் நானென்னும் எண்ணமில்லாதவனும் விருப்பமற்றவனும் எல்லாவற்றிலும் ஸமமானவனும் காமத்தால் கெடுக்கப்படாதவனுமாயிருப்பதே ஸநாதனமான தர்மமாகும். (சாஸ்திரமுதலியவைகளில்) நம்பிக்கை, (அகாரியத்தில்) வெட்கம், பொறுமை, ஈதல், சுத்தி, சோம்பலில்லாமை, குரூரத்தன்மையில்லாமை, மோகமில்லாமை, பிராணிகளிடம் கருணை, கோள் சொல்லாமை, ஸந்தோஷம், திருப்தி, கர்வமின்மை, வணக்கம், நல்ல கார்யத்தைச் செய்வது, மோக்ஷத்திற்குரிய கர்மத்தைக் கபடமின்றிச் செய்தல், சுத்தசித்தனாக இருப்பது, (விஷயங்களில் பற்றுதலை) விடுவது, உதாஸீனனாக இருப்பது, பிரம்மசரியம், எல்லா ஆசைகளையும் விடுவது, மமதையில்லாமை, ஒன்றையும் விரும்பாமை, தர்மம்கெடாமலிருப்பது, (இவை ஸாத்விககுணங்கள்). தானமும் யாகமும் அத்யயனமும் விரதமும் பிரதிக்ரஹமும் தர்மமும் தவமுமாகிய இவை வீணானவை (என்ற எண்ணமும்) இவ்வித நடையுமுள்ளவர்களும் ஸத்வகுணத்தை ஆஶ்ரயித்தவர்களும்வேதத்திற்குக்காரணமான பிரம்மத்தினிடத்தில் நிலைபெற்றவர்களும் தைரியமுள்ளவர்களும் இவ்வுலகிலுள்ளவர்களுமான பிராம்மணர்களே நல்ல ஞானமுள்ளவர்கள். (ராஜஸமும் தாமஸமுமான) எல்லாப் பாபகர்மங்களையும் விட்டுச் சோகமும் ஜரையும் மரணமுமற்றவர்களான அந்த அறிஞர்கள் திவ்யசக்திபெற்றுப் பிறகு (அநேகம்) சரீரங்

களைப் படைத்துக்கொள்வார்கள். (அந்த) மஹாத்மாக்கள் தேவலோகத்திலுள்ள தேவர்கள்போல ஈசித்வம், வசித்வம், லகுத்வம், அணுத்வம் இவைகளையும் அடைந்து (மனத்தைப்) பலவிதமாகச்செய்வார்கள். [1]ஊர்த்வஸ்ரோதஸுகளென்றும் வைகாரிகதேவர்களென்றும் கருதப்பட்ட இவர்கள் இயற்கையால் மனத்தைப் போகத்தில் பற்றியதாகச் செய்து அந்த அந்தப் போகத்திற்காக ஸுவர்க்கம் சென்று விரும்பியதை எல்லாம் அனுபவிப்பார்கள்; பிறருக்கும்கொடுப்பார்கள். பிராம்மணஶ்ரேஷ்டர்களே! இவ்விதம் ஸத்வகுணத்தின் காரியத்தை உங்களுக்குச்சொன்னேன். இவற்றை முறைப்படி தெரிந்துகொண்டவன் விரும்பியதையெல்லாம் அடைவான். ஸத்வகுணங்களையும் அவற்றின் நடையையும் உள்ளபடி விசேஷமாகச் சொன்னேன். இந்தக்குணங்களை எப்பொழுதும் தெரிந்துகொள்ளும் மனிதன் குணங்களை அனுபவிப்பான்; அவைகளில் பற்றுதல் அடையமாட்டான்.

## நாற்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மதேவர் முக்குணங்களையும் மஹரிஷிகளுக்குச் சொல்லியது.)

ரிஷிகளே! எல்லாக்குணங்களையும் தனித்தனியாகச் சொல்ல முடியாது. ரஜஸும் ஸத்வமும் தமஸும் கலந்திருப்பவைகளாகக் காணப்படுகின்றன. எல்லாக்குணங்களும் ஒன்றையொன்று விரும்பினவைகளும் ஒன்றையொன்று அடுத்துப் பிழைப்பவைகளும் ஒன்றையொன்று பற்றிடமாகக்கொண்டவைகளும் ஒன்றையொன்று அனுஸரிப்பவைகளுமாக இருக்கின்றன. ஸத்வம் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு ரஜஸ் இருக்கிறது. இதில் ஸம்சயமில்லை. தமஸும் ஸத்வமும் எவ்வளவு இருக்கின்றனவோ அவ்வளவு ரஜஸ் இருப்பதாக இவ்வுலகில் சொல்லப்படுகிறது. (இவைகள்) சேர்ந்து காரியத்தைச் செய்பவைகளும் சேர்ந்து கூட்டமாக ஸஞ்சரிப்பவைகளுமாக இருக்கின்றன. சேர்ந்துவஸிக்கும் இவைகள் காரணங்களிருந்தும் இல்லாமலும் (வேற்றுமையுள்ளனவுமாக) இருக்கின்றன. ஒன்றையொன்று அனுஸரித்து வளர்கின்றவைகளும் ஸமமாகஇருப்பவைகளுமான அவைகள் அதிகமாகஇருக்கும் விதத்தையும் ஸமமாக

1. 'உயர்ந்தகதியை நோக்கினவர்கள்' என்பது பழைய உரை.

இருக்கும் விதத்தையும் முழுதும் சொல்லுகிறேன். திர்யக்ஜந்துக்களை அடைந்ததான தமஸானது எப்பொழுது அதிகமாகுமோ அப்பொழுது ரஜஸானது குறைந்ததாகவும் ஸத்வமானது மிகக்குறைந்ததாகவும் இருக்குமென்று தெரிந்துகொள்ளவேண்டும். மத்யஸ்ரோதஸை அடைந்ததான ரஜஸானது எப்பொழுது அதிகமாகுமோ அப்பொழுது தமஸானது குறைந்ததாகவும் ஸத்வமானதுமிகக்குறைந்ததாகவும் இருக்குமென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஊர்த்வஸ்ரோதஸை அடைந்ததான ஸ்த்வமானது எப்பொழுது அதிகமாகுமோ அப்பொழுது தமஸானது அல்பமாகவும் ரஜஸானது மிக அல்பமாகவும் இருக்குமென்றுதெரிந்துகொள்ளவேண்டும். ஸத்வமானது இந்திரியங்களுக்குவைகாரிகாஹங்காரஸம்பந்தமுள்ளதும் விஷயங்களைவிளங்கச் செய்வதுமான காரணம். ஸத்வத்தைவிட மேலான [1]பதார்த்தமானது வேறொன்றும் விதிக்கப்படவில்லை. ஸத்வகுணமுள்ளவர்கள் மேலான கதியை அடைகின்றனர். ரஜோகுணமுள்ளவர்கள் நடுநிலைமையுள்ள கதியிலிருப்பார்கள். தமோகுணமுள்ளவர்கள் இழிவானகுணங்களுள்ளவர்களாகி இழிவான கதியை அடைகிறார்கள். தமோகுணமானது சூத்திரனிடத்திலும் ரஜோகுணமானது க்ஷத்திரியனிடத்திலும் உத்தமமான ஸத்வகுணமானது பிராம்மணனிடத்திலும் இருக்கின்றன. இவ்விதம் மூன்று குணங்களும் மூன்று வர்ணங்களிலும் இருக்கின்றன. (ஒருகுணமிருக்கக்கூடிய வர்ணத்தில் மற்றிரண்டும்) சிறிதாவது காணப்படுவதால் அவைகள் சேர்ந்து கூட்டமாக ஸஞ்சரிப்பவைகளாகும். தமஸையும் ஸத்வத்தையும் ரஜஸையும் தனித்தனியாக இருப்பவைகளாகக் கேள்விப்படுகிறோம். ஸூர்யன் உதிப்பதைக்கண்டு இழிவான திருடர்களுக்குப் பயம் உண்டாகிறது. வழி நடப்பவர்கள் உஷ்ணத்தால் துயரமுற்று மிக்கதாபமடைகின்றனர். ஸூர்யன் ஸத்வகுணமுள்ளவனென்று சொல்லப்பட்டிருக்கிறான். இழிவான திருடர்களோ தமோகுணமுள்ளவர்கள். வழி நடப்பவர்களின் ஸந்தாபமானது ரஜஸின்காரியமாகச் சொல்லப்படுகிறது. ஸூர்யன் பிரகாசமாக இருப்பது ஸத்வகுணத்தின் கார்யமாகவும் ஸந்தாபம் ரஜஸின்காரியமாகவும் அவனுக்குப் பர்வகாலங்களில் உண்டாகும் கிரஹணமென்னும் துன்பமானது தமஸின் கார்யமாகவும் தெரிந்துகொள்ளவேண்டும். இவ்வாறு, எல்லாத் தேஜஸுகளிலும் முக்குணங்களும் இருக்கின்றன. ஆங்காங்கு அவ்வவ்விதம் முறை

---

1. 'தர்ம:' என்பது வேறுபாடம், 'தர்மத்திற்குக்காரணம்' என்பது பழைய உரை.

யாக இருக்கின்றன. ஸ்தாவரங்களான பதார்த்தங்களில் தமஸ் அதிகமாக இருக்கிறது. (அழகு, உறைப்பு, புளிப்பு முதலான) ராஜஸ குணங்களும் மாறுகின்றன. (நெருப்பை உண்டுபண்ணிப் பிரகாசிக்கச் செய்வதால்) ஸ்நேஹமென்னும் ஸாத்விககுணமும் இருக்கிறது. இவ்விதமே பகலும் இரவும் மாஸமும் பக்ஷமும் வருஷமும் ருதுக்களும் ஸந்திகளும் மூன்றுவிதமாக அறியத்தக்கவைகள். கொடுக்கப்படும் தானங்களும் நடக்கும் யாகமும் உலகங்களும் தேவர்களும் வித்தைகளும் கதிகளும் மூன்றுவிதமாக இருக்கின்றன. சென்றதும் நிகழ்கின்றதும் வருவதும் தர்மமும் அர்த்தமும் காமமும் பிராணனும் அபானனும் உதானனும் ஆகிய இவைகளும் முக்குணங்களே. ஆங்காங்கு அவ்வவ்விதம் முறையாகப் பிரவிர்த்திக்கின்றன. இவ்வுலகிலுள்ள எல்லாப்பொருள்களும் முக்குணங்களே. மூன்று குணங்களும் அவ்யக்தங்கள்; எப்பொழுதுமே நடைபெறுகின்றன. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களின்ஸ்ருஷ்டி ஸநாதனமானது; அவ்யக்தமானது தமஸ், அவ்யக்தம், சிவம், தாமம், ரஜஸ், ஸநாதனம், யோனி, பிரகிருதி, விகாரம், பிரளயம், பிரதானம், பிரபவம், அப்யயம், அனுத்ரிக்தம், அநூனம், அகம்பம், அசலம், த்ருவம், ஸத், அஸத், முக்குணங்கள் (என்று பெயருள்ளதாகக்) கருதப்பட்டிருக்கிறது. ஆத்மஸ்வரூபத்தைச்சிந்திக்கும் மனிதர்கள் (அவ்யக்தத்தின்) பெயர்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். எவன் அவ்யக்தத்தினுடைய எல்லாப் பெயர்களையும் குணங்களையும் எல்லாக்கதிகளையும் உள்ளபடி அறிகிறானோ அவன் தேஹாபிமானம் விலகியவனும் பிரிவுகளின் உண்மைஅறிந்தவனும் கெடுதியற்றவனுமாகி எல்லாக்குணங்களாலும் விடப்படுகிறான்.

---

நாற்பத்தோராவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பிரம்மதேவர் மஹத் அஹங்காரமென்னும் தத்வங்களை மஹரிஷிகளுக்குச் சொல்லியது.)**

அவ்யக்தத்திலிருந்து முதலில் சிறந்தபுத்தியுள்ள மஹத்தத்வம் உண்டாயிற்று. அது எல்லாக் குணங்களின் கார்யங்களுள்ளும்

ஆதியும் முந்தின ஸிருஷ்டியுமாகச் சொல்லப்படுகிறது. (அந்த) மஹத்தத்வமானது மஹாத்மா, மதி, விஷ்ணு, ஜிஷ்ணு, சம்பு, வீர்யவான், புத்தி, பிரஜ்ஞை, உபலப்தி, க்யாதி, த்ருதி, ஸ்ம்ருதி என்னும் ஒரே அர்த்தமுள்ள சப்தங்களால் சொல்லப்படுகிறது. அதனை அறிந்த வித்வானான பிராம்மணன் மதிமயக்கமடையான். அது எங்கும் கைகளும் கால்களுமுள்ளது; எங்கும் கண்களும் முடிகளும் முகங்களுமுள்ளது; எங்கும் செவிகளுள்ளது; உலகத்தில் எல்லாவற்றையும் வியாபித்துக்கொண்டிருக்கிறது. எல்லாருடைய ஹிருதயத்திலுமிருக்கும் மஹாப்பிரபாவமுள்ள புருஷனும் அணிமாவும் லகிமாவும் பிராப்தியும் ஈசானனும் ஜோதியும் அழிவற்றதும் அதுவே. அறிஞர்களால் காணத்தகுந்தஅதில் நல்லபக்தியுடன் பற்றுதலுள்ளவர்களும் தியானமுள்ளவர்களும் எப்பொழுதும் யோகமுள்ளவர்களும் ஸத்யஸந்தர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களும் ஞானமுள்ளவர்களும் ஆசையற்றவர்களும் கோபத்தை ஜயித்தவர்களும் தெளிந்த மனமுள்ளவர்களும் தைரியமுள்ளவர்களும் மமதையும் அஹங்காரமுமற்றவர்களுமாக இருப்பவர்களெல்லாரும் மஹத்தத்வத்தை அடைவார்கள். (மஹத்தத்வமென்னும்) மஹாத்மாவினுடைய புண்யமும் உத்தமமுமானகதியை அறிந்தவனும் மஹத்தத்வத்தை அடைவான். பிருதிவி, வாயு, ஆகாசம், ஜலம், தேஜஸ் என்னும் ஐந்து மஹாபூதங்களும் அஹங்காரத்திலிருந்து உண்டாயின. (எல்லாப்) பிராணிகளும் அந்த ஐந்து மஹாபூதங்களிலும் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம், கிரியை இவைகளிலும் சேர்க்கைபெற்றிருக்கின்றன. அறிஞர்களே! மஹாபூதங்க(ளாலாகியசரீரங்க)ளுக்குநாசம் உண்டானபிறகும் பிரளயம் நெருங்கியிருக்கும்பொழுதும் எல்லாப் பிராணிகளுக்கும் பெரிதான பயம் உண்டாகிறது. எல்லா உலகங்களுள்ளும் வித்வானான அந்த மஹாத்மா (ஒருவனே) மதிமயக்கமடைகிறதில்லை. ஆதியானஸிருஷ்டிகளில் பிரபுவான விஷ்ணு ஒருவரே தாமாக உண்டாகிறார். எவன் (எல்லாப்பிராணிகளின்) ஹிருதயகுகையிலுமிருப்பவரும் பிரபுவும் மேலானவரும் புராணபுருஷரும் விச்வரூபரும் ஸுவர்ணமயரும் புத்திமான்களுக்குச் சிறந்தகதியுமான பரமாத்மாவை இவ்விதம் அறிகிறானோ புத்தியுள்ளவனான அவன் புத்தியை மீறி நிற்பான். எந்த மஹத்தத்வம் முதலில் உண்டாயிற்றோ அதுவே "நான்" என்றே உண்டானமையால் அஹங்காரமென்று சொல்லப்படுகிறது. இது இரண்டாவது ஸிருஷ்டியாகச் சொல்லப்

படுகிறது. அஹங்காரமானது [1] பூதாதி [2]வைகாரிகன் என்று கருதப் பட்டது. [3]தைஜஸனென்னும் சேதனனும் பிரஜைகளின் ஸிருஷ்டிக்குக் காரணமான பிரஜாபதியும் அதுவே. அது இந்திரியங்களுக்கும் மனத்திற்கும் உத்பத்திஸ்தானமாகவும் விளையாடுவதாகவும் மூவுலகங்களையும்படைப்பதாகவும் இருக்கிறது. அவையெல்லாம் நான் என்று எண்ணுவதே அபிமானம் என்று சொல்லப்படுகிறது. ஆத்மாவைப்பற்றின ஞானத்தால் திருப்தியுள்ளவர்களும் மனத்தை அடக்கினவர்களும் வேதாத்தியயனத்திலும் யாகத்திலும் ஸித்தி பெற்றவர்களுமான முனிவர்களுக்கு (அனிருத்தனென்று பெயருள்ள) இதுவே ஸனாதனமான லோகம். அகங்காரத்தினால் (சப்தம் முதலான) இக்குணங்களை அனுபவிக்க விரும்பும் புருஷனுக்குப் பூதாதியென்னும் தாமஸாஹங்காரமானது இவ்விதம் (ஆகாயமுதலான பூதங்களைப்) படைக்கிறது. (அதனால்) அது பூதகிருத்தாகிறது. வைகாரிகாஹங்காரமானது எல்லா இந்திரியங்களையும் படைத்து (அவைகளால் பார்ப்பது கேட்பது முதலான) இந்தக்காரியங்களைச் செய்கிறது. தைஜஸாஹங்காரமானது தன் தேஜஸால் (கர்மேந்திரியங்களையும் ஐந்து பிராணன்களையும் ஸிருஷ்டித்து) உலகத்தை ஸந்தோஷிக்கச் செய்கிறது.

## நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மதேவர் அஹங்காரதத்வத்திலிருந்து பூதமுதலியன படைக்கப் படுதலை மஹரிஷிகளுக்குக் கூறியது.)

முனிவர்களே! தாமஸாஹங்காரத்திலிருந்து பிருதிவி, வாயு, ஆகாசம், ஜலம், தேஜஸ் என்னும் ஐந்து மஹாபூதங்களும் உண்டாயின. அந்த ஐந்து மஹாபூதங்களிலுமுள்ள சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், க்ரியை இவற்றில் பிராணிகள் மோகிக்கின்றன. அறி

1. 'பூதங்களுக்கு ஆதியாயுள்ளது. தாமஸாஹங்காரத்திற்குக் காரணப் பெயர்' என்பது பழைய உரை.

2. 'மஹான் என்னும் விகாரத்தினிடமிருந்து உண்டானது' என்பது பழைய உரை.

3. 'ரஜஸின் விகாரம்' என்பது பழைய உரை.

ஞர்களே! மஹாபூதங்களாலாகிய சரீரங்களுக்கு நாசமுண்டான பொழுதும் பிரளயம் ஸமீபித்திருக்கும்பொழுதும் எல்லாப்பிராணிகளுக்கும் பெரியபயம் உண்டாகிறது. எந்தப்பூதம் எதிலிருந்து உண்டாயிற்றோ அது அதில் லயமடைகிறது. (பூதங்கள்) வரிசையாக உண்டாகின்றன. விபரீதமாக லயிக்கின்றன. ஸ்தாவரஜங்கமஸ்வரூபமான எல்லாப் பூதங்களும் லயித்தபொழுதும் (முன்பிறவியின்) ஸ்மரணமுள்ளவர்களான அறிஞர்கள் ஒருபொழுதும் லயமடைகிறதில்லை. மனத்துடன் கலந்து (ஸூக்ஷ்மமாக) இருக்கும் சப்தமும் ஸ்பர்சமும் ரூபமும் ரஸமும் கந்தமும் (அவற்றைக் கிரஹிக்கும்) க்ரியைகளும் (நித்யமாகவும்) ஸ்தூலமாக இருக்கும் அவைகள் அநித்யமாகவும் ஆகின்றன. ஸ்தூல சரீரங்களென்பவை பயனைக்கருதிச் செய்தகர்மங்களால் உண்டானவைகளும் (எல்லாம் ஐந்து பூதங்களாலுண்டானவைகளாக இருப்பதால்) வேற்றுமையற்றவைகளும் உண்மையான ஒன்றும் இல்லாதவைகளும் மாம்ஸ ரக்தங்களின்கூட்டமாக இருப்பவைகளும் ஒன்றையொன்று அடுத்துப்பிழைப்பவைகளும் பசிமுதலானவைகளால் பீடிக்கப்பட்டவைகளும் [1]வெளியிலுள்ள ஸாதனங்களால் ஜீவிக்கின்றவைகளும் (அநித்யங்களுமாக) இருக்கின்றன. பிராணன், அபானன், உதானன், ஸமானன், வியானன் என்னும் இந்த ஐந்து வாயுக்களும் அந்தராத்மாவினிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. வாக்கு, மனம், புத்தி என்னும் இவைகளுடன் சேர்ந்து எட்டாக இருக்கும் அவைகளே உலகமாக இருக்கின்றன. (இவை ஜீவனுக்கு மோக்ஷம்வரையில் நித்யமாகஇருக்கும் ஸூக்ஷ்மசரீரமாகும்.) எவனுடைய த்வக்கும், க்ராணமும், ச்ரோத்ரமும், நேத்ரமும், நாவும், வாக்கும் அடக்கப்பட்டவைகளாகவும் மனம் பரிசுத்தமாகவும் புத்தி (பிரம்மத்தைவிட்டு) மீறாததாகவும் இருக்கின்றனவோ, இவை எட்டுமாகிற அக்னிகளும் எப்பொழுதும் [2]அஹங்காரங்களை எரிக்கின்றனவோ அவன் அதனிலும் மேலானதொன்றில்லாத சுபமான பிரம்மத்தை அடைவான். அகங்காரத்திலிருந்து உண்டானவைகளாகச் சொல்லப்படும் பதினோர்இந்திரியங்களின் பெயர்களையும் விசேஷித்துச் சொல்லுகிறேன். செவி, த்வக்கு, கண்கள், நாக்கு, ஐந்தாவதான மூக்கு, பாதங்கள், பாயு, குறி, கைகள், பத்தாவதான வாக்கு என்னும் இவை இந்திரியஸமூஹம்; மனம் பதினோரா

1. 'இழிவான ஜீவனமுள்ளவைகளும்' என்றும் கொள்ளலாம்.

2. 'மனத்தைஎரிக்கவில்லையோ' என்பது வேறு பாடம்.

வதாகும். இந்தக் கூட்டத்தை முந்தி ஜயிக்கவேண்டும். பிறகு, பிரம்மம் பிரகாசிக்கும். (இவற்றுள்) ஐந்து ஞானேந்திரியங்களென்றும் ஐந்து கர்மேந்திரியங்களென்றும் சொல்லுகிறார்கள். செவி முதலான ஐந்தும் உண்மையில் புத்தியுடன்கூடினவைகளென்றும் மற்றவைகள் (ஐந்தும்) வேற்றுமையின்றிக் கர்மத்துடன் கூடியவைகளென்றும் சொல்லுகிறார்கள். இருவகை இந்திரியங்களிலும் மனம், (அநுஸரித்திருப்பதாக) அறியவேண்டும். புத்தியோ பன்னிரண்டாவதாகும். இவ்விதம் இந்தப் பதினோர் இந்திரியங்களையும் முறையாகச் சொன்னேன். பண்டிதர்கள் இவைகளைத் தெரிந்துகொண்டு கிருதகிருத்யர்களாவார்கள். பிராணிகளுக்குப் பூமி,ஜலம், ஆகாயம் என்று ஸ்தானங்கள் மூன்று; நாலாவது இல்லை. ஜன்மமும் [1]அண்டஜம், உத்பிஜ்ஜம், ஸ்வேதஜம், ஜராயுஜம் என்று நான்கு விதம். பிராணிகளின் ஸமூஹத்திற்கு ஜன்மம் நான்குவிதமென்னும் இது காணப்படுகிறது. ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் பிராணிகளையும் எல்லா ஸர்ப்பங்களையும் அண்டஜங்களாகவும் தாழ்ந்தவைகளாகவும் அறியவேண்டும். கிருமிகள் ஸ்வேதஜங்களென்றும் [2]ஜந்துக்களென்றும் சொல்லப்படுகின்றன. இரண்டாவதான இந்த ஜன்மமானது மிகவும் இழிவானதாகச்சொல்லப்படுகிறது. பிராம்மணஶ்ரேஷ்டர்களே! எந்தப்பூதங்கள் காலக்ரமத்தில் பூமியைப்பிளந்துகொண்டு கிளம்புகின்றனவோ அந்தப்பூதங்களை உத்பிஜ்ஜங்களென்று சொல்லுகின்றனர். ஸாதுக்களுள் சிறந்தவர்களே! இரண்டு பாதங்களுள்ளவைகளும் அநேகம் பாதங்களுள்ளவைகளும் திர்யக்கான கதியுள்ளவைகளுமான பூதங்களை ஜராயுஜங்களாகவும் வேறுபாடுள்ளவைகளாகவும் சொல்லுகிறார்கள். பிரம்மஸாக்ஷாத்காரத்தை அடைவதற்கு ஸநாதனமான காரணம், தவம் புண்யகர்மம் என இரண்டுவிதமென்று தெரிந்துகொள்ளவேண்டும். இது வித்வான்களின் கருத்து. கர்மமானது பலவிதமென்று தெரிந்துகொள்ளவேண்டும். யாகமும் அந்த யாகத்தில் கொடுப்பதும் வேதாத்தியயனமும் புண்யகர்மமென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். பிராம்மண ஶ்ரேஷ்டர்களே! இதனை விதிப்படி தெரிந்துகொண்டவன் முக்தனுவானென்றும் எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுதலைபெறுவானென்றும் தெரிந்துகொள்ளுங்கள். இனி, பலவிதமான எல்லா இந்திரியங்களையும் சொல்

1. ஆதிபர்வம் 57 வது பக்கம் குறிப்பிற்காண்க.

2. இழிந்தபிறப்பையுடைய பிராணி.

லுகிறேன். ஆகாயம் முதலாவது பூதம்; ஶ்ரோத்ரம் அத்யாத்ம மென்று சொல்லப்படுகிறது; சப்தம் அதிபூதம்; திசைகள் அதிதெய் வதம். வாயு இரண்டாவது பூதம்; த்வக் அத்யாத்மம் என்பது பிர ஸித்தம்; ஸ்பரிசிக்கத்தக்கது அதிபூதம்; அதில் மின்னல் அதிதைவ தம். மூன்றாவது பூதம் தேஜஸென்று சொல்லுகிறார்கள்; நேத்தி ரம் அத்யாத்மமென்று கருதப்படுகிறது; ரூபம் அதில் அதிபூதம்; ஸூர்யன் அதில் அதிதைவதம். ஜலம் நான்காவதென்று தெரிந்து கொள்ளவேண்டும்; நாக்கு அத்யாத்மமாகக் கருதப்படுகிறது; அதில் ரஸம் அதிபூதம்; ஸோமன் அதிதைவதம். பிருதிவி ஐந்தாவது பூதம்; க்ராணம் அத்யாத்மமென்று சொல்லப்படுகிறது; அதில் கந்தம் அதி பூதம்; வாயு அதிதைவதம். இந்த ஐந்து பூதங்களிலும் நான்கு விதி கள் சொல்லப்பட்டன. இனி, மூன்றுவிதமாயுள்ள எல்லா இந்திரி யங்களையும் சொல்லுகிறேன். உண்மையை அறிந்தவர்களான பிராம் மணர்கள் பாதங்களை அத்யாத்மமென்று சொல்லுகிறார்கள். அவற் றில் நடை அதிபூதம்; விஷ்ணு அதிதைவதம்; பாயுவானது அத்யாத் மமென்று கருதப்படுகிறது; அபானன் (அதன்வழியாகக்) கீழாகச் செல்லுகிறது; அதில் (ஜலமலங்களை) விடுவது அதிபூதம்; மித்திரன் அதிதைவதம். எல்லாப்பிராணிகளையும் உண்டுபண்ணுகிறகுறிகள் அத்யாத்மமென்று சொல்லப்படுகின்றன; சுக்ரம் அதிபூதம்; குறி அதிதைவதம். அத்யாத்மத்தை அறிந்த ஜனங்கள் கைகளை அத்யாத் மமென்று சொல்லுகிறார்கள்; கிரியைகள் அதிபூதம்; இந்திரன் அத ற்கு அதிதைவதம். எல்லாத்தேவர்களுமாக இருப்பதும் மனத்தை முந்தினதாகக் கொண்டதுமான வாக்கு அத்யாத்மமென்று சொல் லப்படுகிறது; பேசுவது அதிபூதம்; அக்னி அதற்கு அதிதைவதம். ஐந்து பூதங்களாலுமாகிய சரீரத்தைச் செய்கையுள்ளதாகச் செய்யும் மனத்தை அத்யாத்மமென்று சொல்லுகிறார்கள்; ஸங்கல் பம் அதிபூதம்; சந்திரன் அதிதைவதம். எல்லாருக்கும் ஸம்ஸாரத் திற்குக் காரணமான அகங்காரம் அத்யாத்மம்; அபிமானம் அதிபூதம்; ருத்திரன் அதற்கு அதிதைவதம். ஆறு இந்திரியங்களையும் விசாரிக் கிற புத்தியை அத்யாத்மமென்று சொல்லுகிறார்கள்; அறிவது அதி பூதம்; [1]அஹஸ் அதற்கு அதிதைவதம். இந்த அத்யாத்மவிதியை நான் உங்களுக்கு உள்ளபடி சொன்னேன். தர்மத்தை அறிந்தவர் களே! இதனுடைய ஞானத்தை இவ்வுலகில் அறிஞர்கள் அடைந்

1. 'பிரம்மா' என்பது வேறு பாடம்,

திருக்கின்றனர். இந்திரியங்கள், இந்திரிய விஷயங்கள், ஐந்து மஹா பூதங்கள் இவைகளையெல்லாம் மனத்துடன் சேர்த்துத்தரிக்கவேண்டும். எல்லாமாக இருக்கும் மனமானது (பிரம்மத்தினிடத்தில்)லயித்தால் (புருஷர்களுக்குப்) பிறவியில் உண்டான ஸுகத்தில் விருப்பம் உண்டாகாது. பிரம்மஜ்ஞானத்துடன்கூடின புத்தியுள்ள வித்வான்களுக்கு (பிரம்மஜ்ஞான ரூபமான) அந்தஸுகம்தான் இஷ்டமாகும். இனி, மிருதுவான உபாயத்தினாலாவது கடினமான உபாயத்தினாலாவது (மனத்தை) ஸூக்ஷ்மமாகச்செய்வதும் மங்களகரமானதும் [1]எல்லாப்பிராணிகளும் அனுஷ்டிக்கத்தக்கதுமான நிவ்ருத்தியைச் சொல்லுகிறேன். (கர்வத்திற்குக்காரணமானதால் பாண்டித்யமுதலான) குணங்களைக் குணங்களல்லாதனவாகக் கொண்டதும் அபிமானமற்றதும் ஏகாந்தத்தில் வஸிப்பதும் பேதமற்றதும் பிராம்மணர்களுக்குரியதுமான இந்த நடையை எல்லாஸுகங்களுமுள்ள ஸுகமாகச் சொல்லுகின்றனர். வித்வானும், ஆமையானது அவயவங்களைச்சுருக்கிக்கொள்வதுபோல எல்லாக்காமங்களையும் சுருக்கிக்கொண்டவனும், பாவமற்றவனும், எல்லாவற்றிலுமிருந்தும் விடுதல்பெற்றவனுமான மனிதன் எப்பொழுதும் ஸுகமுள்ளவனாவான். காமங்களைத் தன்னிடத்தில் அடக்கினவனும் ஆசையற்றவனும் அடக்கமுள்ளவனும்எல்லாப்பிராணிகளுக்கும் [2]ஸுஹ்ருத்தும் மித்திரனுமாகஇருப்பவன் பிரம்மத்தன்மையை அடையத்தகுந்தவனாகிறான். விஷயங்களில் விருப்பமுள்ளவைகளான எல்லா இந்திரியங்களையும் அடக்குவதால் எல்லாஉலகங்களிலும் ஆசையற்ற முனிவருக்கு ஆத்மஜ் ஞானமாகிற அக்னியானது நன்குஜ்வலிக்கும். விறகுகளால் ஜ்வலிக்கும்படிசெய்யப்பட்ட அக்னியானது பெரிய ஜ்வாலைகளுள்ளதாகப் பிரகாசிப்பதுபோல இந்திரியங்களை அடக்குவதால் மஹானான ஆத்மா பிரகாசிக்கும். நிர்மலமான சித்தமுள்ளவன் எப்பொழுது தன்னுடைய ஹிருதயத்தில் (எல்லாப்) பிராணிகளையும் பார்க்கிறானோ அப்பொழுது ஸூக்ஷ்மத்தைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாகஇருப்பதும் தனக்குமேலில்லாததும் தானே பிரகாசிப்பதுமான ஜ்யோதிஸை அடைகிறான். சரீரமானது தேஜஸை ரூபமாகவும் ஜலத்தை உதிரமாகவும் வாயுவைத் துவக்காகவும் பூமியைக் கந்தத்தைக்கிரஹிக்

1. 'பிராம்மணர் முதலான எல்லாரும்' என்பது பழைய உரை.

2. சாந்திபர்வம் 385 வது பக்கத்திலும், ஸ்திரீபர்வம் 3-வது பக்கத்திலும் காண்க.

கும் க்ராணமாகவும் ஆகாயத்தைச் செவியாகவும் கொண்டதும், ஸூர்யனைக்கொண்டு காணத்தகுந்ததென்று ஆத்மஞானமுள்ள ஜனங்களால் சொல்லப்படுவதும், ரோகத்தினாலும் சோகத்தினாலும் நன்கு சூழப்பட்டதும், ஐந்து இந்திரியஸ்தானங்களால் சூழப்பட்டதும், ஐந்து பூதங்களோடுங்கூடினதும், ஒன்பது துவாரங்களுள்ளதும், (ஜீவன் பரமேச்வரன் என்னும்) இரண்டு தேவதைகளுள்ளதும், அழுக்குள்ளதும், பார்க்கத்தகாததும், மூன்றுகுணங்களும் ஏழு தாதுக்களுமுள்ளதும், (அன்னமுதலானவைகளின்) சேர்க்கையால் ஸந்தோஷமடைவதும், சைதன்யமற்றதுமாக இருக்கிறதென்பது நிச்சயம். இந்தப்பிராணிஸமூகத்தில் (வியாதிமுதலியவற்றால் பீடிக்கப்பட்டு) செவ்வைப்படுத்தமுடியாததும் புத்தியைப் பற்றியதுமான இந்தச்சரீரமே இவ்வுலகில் காலசக்ரமாகப் பிரவ்ருத்திக்கிறது. கோரமாகவும் ஆழமாகவுமுள்ள பெரிய ஸமுத்திரம்போன்றதும் மோகமென்று பெயருள்ளதுமான இந்தச்சரீரமே (நிமித்தமாக இருந்துகொண்டு) உலகத்தைப் படைப்பதும் அழிப்பதும் மோகிக்கச் செய்வதும் உறங்கச்செய்வதுமாகும். (ஒருவன்) இந்திரியங்களை அடக்கினால் (எப்பொழுதும்) இருப்பவைகளும் விடமுடியாதவைகளுமான காமத்தையும் குரோதத்தையும் பயத்தையும் லோபத்தையும் துரோகத்தையும் பொய்யையும் விடலாம். உலகத்தில் எவன் மூன்று குணங்களும் ஐந்து பூதங்களுமுள்ள இந்தச்சரீரங்களை ஜயிக்கிறானோ அவனுக்கு ஆகாயத்தில் சிறந்ததும் அழிவற்றதுமான ஸ்தானம் காணப்படும். ஐம்புலன்களாகிற பெரிய கரைகளுள்ளதும் மனமாகிற வெள்ளத்தால் பயத்தை உண்டுபண்ணுவதும் மோகமாகிற மடுவுள்ளதுமான (சரீரமாகிற) நதியைக்கடந்து, காமம் குரோதம் இரண்டினையும் ஜயிக்கவேண்டும். மனத்தை ஹிருதயதாமரையில் செலுத்திச் சரீரத்திலுள்ள ஆத்மாவைப்பார்ப்பவன் எல்லாத்தோஷங்களாலும் விடப்பட்டவனாகி, பிறகு அந்தப் பரப்பிரம்மத்தைப் பார்ப்பான். எல்லாவற்றையும் அறிந்தவன் தன்னிடத்திலும் எல்லாப் பிராணிகளிடத்திலும் ஆத்மாவைப்பார்ப்பான்; ஆங்காங்கு ஒன்றாகவும் பலவாகவும் செய்துகொள்வான்; ஒரு தீபத்திலிருந்து அநேகம் தீபங்கள் (உண்டாவது) போல (ஸங்கல்பத்தால் உண்டாகும் பல) சரீரங்களைப் பார்ப்பான். அவனே விஷ்ணு; மித்ரன்; வருணன்; அக்னி; பிரஜாபதி. அவனே தாதா; விதாதா. அவனே பிரபு; எங்கும் முகமுள்ளவன்; எல்லாப் பிராணிகளுக்கும் ஹிருதயமாக இருப்பவன்; மஹாத்மாவாகப் பிரகாசிப்பவன். அந்த யோகியைப்

பிராம்மணர்களுடைய கூட்டங்களும் தேவர்களும் அஸுரர்களும் யக்ஷர்களும் பிசாசங்களும் பிதிருக்களும் பறவைகளும் ராக்ஷஸர்களுடைய கூட்டங்களும் எல்லாப்பூதகணங்களும் மஹரிஷிகளும் எப்பொழுதும் ஸ்தோத்திரம் செய்கின்றனர்.

---

## நாற்பத்து மூன்றுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பிரம்மதேவர் க்ஷத்ரியர்களுக்கு ரஜோகுணமே முக்கியமென்றும் அவர்கள் ஸத்வத்தை முக்கியமாகக்கொண்ட பிராம்மணர்களைக் காப்பாற்ற வேண்டுமென்றும் கூறி ஒவ்வோரினத்திலும் சிறந்தவைகளையும் கொல்லாமை முதலிய தர்மங்களையும் மகரிஷிகளுக்குக் கூறியது.)**

முனிவர்களே! மனிதர்களுக்கு ரஜோகுணத்தைப் பிரதானமாகக்கொண்ட க்ஷத்ரியன் அரசன். வாகனங்களுக்கு யானையும், அரண்யத்தில் வஸிப்பவைகளுக்கு ஸிம்மமும், எல்லாப்பசுக்களுக்கும் ஆடும், வளைகளில் வஸிப்பவைகளுக்கு ஸர்ப்பமும், கோக்களுக்கு விருஷபமும், பெண்களுக்கு ஆண்களும், விருக்ஷங்களுக்கு ஆலமரம் நாவன்மரம், அரசமரம், முள்ளிலவமரம், சிம்சபை, மேஷச்ருங்கம், கீசகமென்னும் மூங்கில்களாகிய இவைகளும், கணங்களுக்கு மருத்துக்களும் அரசுகள். இமயமலை, பாரியாத்ரம், ஸஹ்யம், விந்தியம், த்ரிகூடவான், ச்வேதம், நீலம், பாஸம், [1]ராஷ்ட்ரவான் என்னும் மலை, ப்ருசஸ்கந்தம், மஹேந்த்ரம், மால்யவான் என்னும்மலை இவை மலைகளுக்கு அரசுகள். [2]க்ரஹங்களுக்கு ஸூர்யனும் நக்ஷத்ரங்களுக்குச் சந்திரனும் பித்ருக்களுக்கு யமனும் நதிகளுக்கு ஸமுத்திரமும் அதிபர்கள். ஜலங்களுக்கு வருணனும் தேவர்களுக்கு இந்திரனும் அரசர்களாகச் சொல்லப்படுகின்றனர். உஷ்ணங்களுக்கு ஸூர்யனும் ஜ்யோதிகளுக்குச் சந்திரனும் அதிபதிகளாகச் சொல்லப்படுகின்றனர். அக்னியானது எப்பொழுதும் பூதங்களுக்குப் பதி. பிராம்மணர்களுக்குப் பிருஹஸ்பதியும், ஓஷதிகளுக்குச் சந்திரனும், பலிஷ்டர்களுக்கு விஷ்ணுவும் பிரபுக்கள். ரூபங்களுக்குத் [3]துவஷ்டா சிறந்த அரசன். பசுக்களுக்குச் சிவன் ஈச்வரன். தக்ஷிணைகளுக்கு யாகமும் வேதங்களுக்கு ருக்குக்களும் திசைகளுக்கு வடக்கும் பிராம்ம

---

1. 'கோஷ்டவான்' என்பது வேறுபாடம். 2. மூன்று சொற்கள் விடப்பட்டன. 3. 'தீக்ஷிதர்களுக்கு' என்பது வேறுபாடம்.

ணர்களுக்குப் பிரதாபமுள்ளசந்திரனும் அரசர்கள். எல்லா ரத்தினங் களுக்கும் குபேரனும் தேவதைகளுக்குப் புரந்தரனும் பிரபுக்கள் இந்த ஸ்ருஷ்டியானது பூதங்களின் அதிபதிகளைச் சேர்ந்தது. பிரஜை களுக்குப் பிரஜாபாலகர் பிரபு. பிரம்மஸ்வரூபியான நான் எல்லாப் பிராணிகளுக்கும் பிரபு. என்னையும் விஷ்ணுவையும்விட மிகச்சிறந்த பிராணியானது இல்லை. பிரம்மஸ்வரூபியும் மஹானுமான விஷ்ணு வானவர் எல்லாருக்கும் ராஜாதிராஜர். அவரை நாம் ஈப்வரரென்று அறிந்திருக்கிறோம். அவரே ப்ரபு. அவரே பிரஜைகளுக்குப் பதி. அவர் மனிதர்கள், கின்னரர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், உரகர் கள், ராக்ஷஸர்கள், தேவர்கள், தானவர்கள், நாகர்களாகிய இவர்க ளெல்லாருக்கும் ஈப்வரரன்றோ? காமுகர்களால் அனுஸரிக்கப் பட்ட எல்லாஸ்திரீகளுக்கும் அழகான கண்களுள்ளவளும் மஹேப் வரருடைய மனைவியும் மஹாதேவியுமான அந்தப்பார்வதியானவள் பிரபுவாகச் சொல்லப்படுகிறாள். பார்வதீதேவியை ஸ்திரீகளுள் சிறந்தவளாகவும் மங்களகரியாகவும் தெரிந்துகொள்ளுங்கள். ஸந் தோஷங்களுள் தனலாபத்தாலுண்டான ஸந்தோஷம் மேலானது. அவ்வாறே, ஸ்திரீகளுள் அப்ஸரஸுகள் மேலானவர்கள். அரசர்கள் தர்மத்தில் விருப்பமுள்ளவர்கள். பிராம்மணர்கள் தர்மத்திற்கு அணை யாக இருப்பவர்கள். ஆகையால், இவ்வுலகில் அரசன் பிராம்மணர் களை ரக்ஷிக்கமுயலவேண்டும். எந்த மன்னர்களுடைய தேசத்தில் ஸாதுக்கள் கஷ்டப்படுகின்றனரோ தமக்குரிய (மற்ற) எல்லாக்குணங் களுமுள்ளவர்களான அந்த மன்னர்கள் இறந்தபின் இழிவான கதியை அடைவார்கள். பிராம்மண ப்ரேஷ்டர்களே! எந்த மன் னர்களுடைய தேசத்தில் ஸாதுக்கள் நன்கு காக்கப்பட்டிருக்கின்ற னரோ மஹாத்மாக்களான அவர்கள் இவ்வுலகில் மிக்க மகிழ்ச்சி பெற்று இறந்தபின்னும் ஆனந்தத்தை அடைகின்றனரென்று தெரிந்துகொள்ளுங்கள். இனி, நிச்சயமான தர்மத்தின் லக்ஷ ணத்தைச் சொல்லுகிறேன். தர்மமானது அஹிம்ஸையை லக்ஷணமா கக் கொண்டது. அதர்மமானது ஹிம்ஸையை லக்ஷணமாகக் கொண்டது. தேவர்கள் பிரகாசத்தை லக்ஷணமாகக்கொண்டவர் கள். மனிதர்கள் கர்மத்தை லக்ஷணமாகக் கொண்டவர்கள். ஆகா யம் (எழுத்தொலிகளும் பிறவொலிகளுமாகிய) சப்தத்தை லக்ஷண மாகக் கொண்டது. வாயுவானது ஸ்பரிசத்தை லக்ஷணமாகக்கொண் டது; ஜோதியானது ரூபத்தை லக்ஷணமாகக்கொண்டது. ஜலம் ரஸத்தை லக்ஷணமாகக்கொண்டது. எல்லாப்பிராணிகளையும் தரிக்

கும் பூமியானது கந்தத்தை லக்ஷணமாகக் கொண்டது. உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் சீர்திருத்தமுமுள்ள ஸரஸ்வதியானது (சொற்களும் சொற்றொடர்களுமாகிய) சப்தத்தை லக்ஷணமாகக்கொண்டது. மனமானது சிந்தையை லக்ஷணமாகக்கொண்டது. [1] சிந்தையானது புத்தியை லக்ஷணமாகக்கொண்டதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வுலகில் (புருஷனானவன்) மனத்தால் ஆலோசிக்கப்பட்ட விஷயங்களைப் புத்தியினால் நிச்சயிக்கிறான். புத்தியானது நிச்சயத்தால் அறியப்படுகிறது; இதில் ஸம்சயமில்லை. மனத்திற்குத் தியானம் லக்ஷணம். ஆத்மாவுக்கு [2] அவ்யக்தம் லக்ஷணம். கர்மமானது பிரவ்ருத்தியை லக்ஷணமாகக் கொண்டது. ஞானமானது ஸந்யாஸத்தை லக்ஷணமாகக் கொண்டது. ஆகையால், இவ்வுலகில் அறிவுள்ளவன் ஞானத்தைமுன்னிட்டு ஸந்யாஸம் செய்துகொள்ளவேண்டும். ஞானத்துடன்கூடின ஸந்யாஸியானவன் (ஸுகம் துக்கம் முதலான) த்வந்துவத்தையும் அஜ்ஞானத்தையும் மரணத்தையும் மூப்பையும் கடந்தவனாகி உயர்ந்தகதியை அடைவான். பூதங்கள் இந்திரியங்கள் முதலானவற்றின் ஸ்வரூபத்தையும் லக்ஷணத்தையும் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பதையும் நான் உங்களுக்கு விதிப்படி சொன்னேன். இனி, அவற்றைக் கிரஹிக்கும் ஸாதனத்தை நன்றாகச் சொல்லுகிறேன். பிருதிவியின் குணமான கந்தமானது க்ராணத்தால் கிரஹிக்கப்படுகிறது. வாயுவானது கிராணத்திலிருந்துகொண்டு கந்தத்தைஅறியும்விஷயத்தில் உதவிபுரிகிறது. ஜலத்தின் ஸாரமான ரஸமானது எப்பொழுதும் நாக்கினால் கிரஹிக்கப்படுகிறது. சந்திரன் நாக்கில் இருந்துகொண்டு ரஸத்தை அறியும் விஷயத்தில் உதவி புரிகின்றது. தேஜஸின் குணமான ரூபமானது நேத்திரத்தால் கிரஹிக்கப்படுகிறது. ஸூர்யன் நேத்திரத்திலிருந்துகொண்டு ரூபத்தை அறியும் விஷயத்தில் உதவிபுரிகிறது. வாயுவின் குணமான ஸ்பரிசமானது எப்பொழுதும் த்வக்கினால் அறியப்படுகிறது. வாயுவானது எப்பொழுதும் த்வக்கிலிருந்துகொண்டு ஸ்பரிசத்தை அறியும் விஷயத்தில் உதவிபுரிகிறது. ஆகாயத்தின் குணமாகிய சப்தமானது செவியினால் கிரஹிக்கப்படுகிறது. எல்லாத்திசைகளும் செவியிலிருந்துகொண்டு சப்தத்தை அறியும் விஷயத்தில் (உதவிபுரிகின்றனவென்று) சொல்லப்பட்டிருக்கின்றன.

---

1 வேறு பாடம். 2 'வேறொன்றால் பிரகாசியாமல் தானே பிரகாசிப்பது' என்பது பழைய உரை.

மனத்தின் குணமான சிந்தையானது பிரஜ்ஞையினால் கிரஹிக்கப்படுகிறது. ஜீவன் ஹிருதயத்திலிருந்துகொண்டு (சிந்தையுடன் கூடின) மனத்தை அறியும் விஷயத்தில் உதவிபுரிகிறது. புத்தியானது (தன் ஸ்வரூபமான) நிச்சயத்தாலும், மஹத்தத்துவமானது(தன் ஸ்வரூபமான) [1] ஞானத்தாலும் அறியப்படுகின்றன. இவை நிச்சயித்து அறிவதால் வ்யக்தமானாலும் (இயற்கையில்) அவ்யக்தமே; இதில் ஸம்சயமில்லை. க்ஷேத்ரஜ்ஞனானவன் லிங்கத்தால் அறிய முடியாதவனும் நித்தியனும் நிர்க்குணஸ்வரூபனுமாக இருக்கிறான். ஆகையினால், க்ஷேத்ரஜ்ஞன் லிங்கமற்றவனும் ஞானத்தையே ஸ்வரூபமாகக் கொண்டவனுமாக இருக்கிறான். அவ்யக்தமென்று சொல்லப்பட்ட க்ஷேத்திரத்தையும் குணங்களுடைய உத்பத்திநாசங்களையும் நான் மறைந்தவனாக இருந்துகொண்டு எப்பொழுதும் பார்க்கிறேன்; அறிகிறேன்; கேட்கிறேன். புருஷன் அந்த க்ஷேத்திரத்தைஅறிகிறான்; அதனால், க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லப்படுகிறான். க்ஷேத்ரஜ்ஞனானவன் அடியும் நடுவும் முடிவுமுள்ளதும் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றதும் சைதன்யமற்றதும் குணங்களால் ஏற்பட்டதுமான அந்த க்ஷேத்திரத்தை முழுதும் பார்க்கிறான். அடிக்கடி ஸிருஷ்டிக்கப்படுகின்ற குணங்கள் ஆத்மாவை அறிகிறதில்லை. அனுபவிக்கத்தக்கவைகளான குணங்களைக்காட்டிலும் மேலானதும் மிகச் சிறந்ததும் ஸத்தியமுமான பிரம்மத்தை ஒன்றும் [2] அறிகிறதில்லை; க்ஷேத்ரஜ்ஞனே அறிகிறான். ஆகையால், இவ்வுலகில் [3] தத்வத்தை அறிந்தவன் குணங்களையும் [4]தத்வத்தையும் இழந்து தோஷங்களும் குணங்களுமற்றவனாகிப் பிறகு பரமாத்மாவை அடைகிறான். துவந்துவமற்றவரும் நமஸ்காரமற்றவரும் ஸ்வதாகாரமற்றவரும் சலனமற்றவரும் [5]இருப்பிடமற்றவரும் க்ஷேத்ரஜ்ஞருமான அவர் மேலான [6] தெய்வம்.

---

1. வேறு பாடம்.
2. 'அடைகிறதில்லை' என்பது வேறுபாடம்.
3. 'தர்மத்தை அறிந்தவன்' என்பது வேறுபாடம்.
4. 'புத்தியை' என்பது வேறுபாடம்.
5. 'ஸ்வாஹாகாரமற்றவரும்' என்பது வேறுபாடம்.
6. 'விபு' என்பது வேறுபாடம்.

## நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மா, ஒவ்வொரு ஜாதியிலும் சிறந்தபொருள் இன்னதென்பதையும் ஞானம் அழியாதென்பதையும் அதுவே மோக்ஷஸாதனமென்பதையும் மஹரிஷிகளுக்குக் கூறியது.)

முனிவர்களே! எது அடியும் நடுவும் முடிவுமுள்ளதும், அடைவதில் உபாயமுள்ளதும், பெயருடனும் லக்ஷணத்துடனும் கூடியதுமாக இருக்கிறதோ அதனை முழுதும் உள்ளபடி சொல்லுகிறேன். 'பகல் முந்தியுள்ளது. இரவு பிறகுஉள்ளது. மாஸங்கள் சுக்லபக்ஷத்தை ஆதியாகக் கொண்டவைகளென்று கருதப்பட்டிருக்கின்றன. நக்ஷத்திரங்கள் ஶ்ரவணத்தை ஆதியாகக்கொண்டவை. ருதுக்கள் சிசிரருதுவை ஆதியாகக்கொண்டவை. பூமியானது கந்தங்களுக்கு ஆதியாக உள்ளது. ஜலம் ரஸங்களுக்கு ஆதி. அக்னியானது ரூபங்களுக்குஆதி. வாயு ஸ்பர்சங்களுக்கு ஆதியென்றுசொல்லப்படுகிறது. ஆகாயம் சப்தத்திற்கு ஆதி. (கந்தம் முதலான) இவை பூதங்களால் உண்டுபண்ணப்பட்ட குணங்கள். இனி, பூதங்களுக்கு உத்தமமான ஆதியைச்சொல்லுகிறேன். ஸூர்யன் தேஜஸ்ஸுகளுக்கு ஆதி. அக்னியானது பூதங்களுக்கு ஆதியென்று சொல்லப்படுகிறது. எல்லா வித்தைகளுக்கும் ஸாவித்ரீ ஆதியாகவுள்ளது. இவ்வுலகில் ஜபிக்கத்தகுந்தவையெல்லாம் ஸாவித்ரீ என்று சொல்லப்படுகின்றது. தேவதைகளுக்குப் பிரம்மாவும் எல்லா வேதங்களுக்கும் ஓங்காரமும் வாக்குக்களுக்குப் பிராணனும் ஆதியானவை. காயத்ரீயானது சந்தஸ்ஸுகளுக்கு ஆதி. பிரஜைகளுக்கு ஸிருஷ்டிகாலம் ஆதி என்றுசொல்லப்படுகிறது. நாற்கால்பிராணிகளுக்கு கோக்கள் ஆதி. மனிதர்களுக்குப் பிராம்மணர்கள் ஆதி. பக்ஷிகளுக்குப் பருந்து ஆதி. யாகங்களுள் [1]ஹோமம் செய்யப்பட்டது உத்தமம். பிராம்மணஶ்ரேஷ்டர்களே! ஊரும்ஜந்துக்களெல்லாவற்றுள்ளும் [2]ஸர்ப்பம் முந்தினது. எல்லாயுகங்களுக்கும் கிருதயுகம் ஆதி. இதில் ஸம்சயமில்லை. எல்லாச்சிறந்தபொருள்களுக்கும் ஹிரண்யமும் ஓஷதிகளுக்கு யவமும் ஆதி. எல்லாப் பக்ஷ்யபோஜ்யங்களுள்ளும் அன்னம் சிறந்ததென்று சொல்லப்படுகிறது. குடிக்கத்தகுந்தவைகளான எல்லா த்ரவபதார்த்தங்களுள்ளும் ஜலம்சிறந்தது. ஸ்தாவரங்களான

---

1. 'அக்னியினிடத்திலாவது பிராம்மணனிடத்திலாவது தேவதைகளை உத்தேசித்துக் கொடுக்கப்பட்டது' என்பது பழைய உரை.

2. 'வாஸுகி' என்பது பழைய உரை.

எல்லா இடங்களுள்ளும் வேற்றுமையின்றிப் பிரம்மக்ஷேத்ரம் புண்ணியமானது. ஸ்தாவரங்களான எல்லா விருக்ஷங்களுள்ளும் [1]ப்லக்ஷமரம் மிகச்சிறந்ததென்று கருதப்படுகிறது. எல்லாப் பிரஜாபாலகர்களுக்கும் நான் மேலானவன்; இதில் ஸம்சய மில்லை. சிந்திக்கமுடியாத ஸ்வபாவமுள்ளவரும் தாமாக ஆவிர்ப்ப விப்பவருமான விஷ்ணுவானவர் எனக்கு மேலானவரென்று நன்கு கருதப்பட்டவர். எல்லாமலைகளுள்ளும் மஹாமேருவானது முந்தி உண்டானதென்று கருதப்பட்டது. திசைகள் மூலைத்திசை கள் இவைகளுள் கிழக்குத்திசையானது சிறந்ததும் முந்தினதுமா னது. நதிகளுள் மூன்று மார்க்கங்களில் செல்லும் கங்கையானது முந்தி உண்டானதாகக் கருதப்பட்டது. ஸமுத்திரமானது தடா கங்களும் கிணறுகளுமாகிய இவைகளெல்லாவற்றுக்கும் முந்தி உண் டானது. தேவர்கள், தானவர்கள், பூதங்கள், பிசாசங்கள், உரகர் கள், ராக்ஷஸர்கள், மனிதர்கள், கின்னரர்கள், யக்ஷர்கள் இவர்க ளெல்லாருக்கும் [2]ஈஶ்வரர் பிரபு. எல்லா ஜகத்துக்கும் பிரம்மஸ்வ ரூபரும் மஹிமைபெற்றவருமான விஷ்ணுவானவர் ஆதி. இம்மூவுல கிலும் அவரைவிடமேலான பொருள் இல்லை. எல்லா ஆஶ்ரமங்க ளுள்ளும் கிருஹஸ்தாஶ்ரமம் சிறந்தது. இதில் ஸம்சயமில்லை. அவ்யக்தமானது எல்லா உலகங்களுக்கும் ஆதியாகவும் முடிவாகவும் உள்ளது. பகல் ஸூர்யாஸ்தமனத்தை முடிவாகக் கொண்டது. இரவு ஸூரியோதயத்தை முடிவாகக்கொண்டது. எப்பொழுதும் ஸுகத்தின் முடிவு துக்கம். எப்பொழுதும் துக்கத்தின் முடிவு ஸுகம். எல்லாக்கூட்டங்களும் அழிவை முடிவாகக் கொண்டவை கள். (உயர்ச்சிகள் விழுதலை முடிவாகக்கொண்டவைகள்.) சேர்க் கைகள் பிரிவை முடிவாகக்கொண்டவைகள். உயிர் வாழ்தல், மரண த்தை முடிவாகக்கொண்டது. செய்யப்பட்டவையெல்லாம் அழிவை முடிவாகக்கொண்டவை. பிறந்தவனுக்கு மரணம் நிச்சயம். எப்பொ ழுதும் இவ்வுலகிலுள்ள ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் சாஶ்வத மானவைகளல்ல. யாகம், தானம், தவம், அத்யயனம், விரதங்கள், நியமங்கள் இவைகளெல்லாம் முடிவில் நாசமுள்ளவைகள். ஞானத் திற்கு நாசமில்லை. ஆகையால், மிகஅடங்கின மனமுள்ளவனும் இந்திரியங்களை வென்றவனும் மமதையும் அஹங்காரமுமற்றவனு மான புருஷன் சுத்தமான ஞானத்தால் எல்லாப்பாவங்களினின்றும் விடப்படுகிறான்.

---

1. அரசமரத்தின் ஒருவகை.
2. ருத்ரர் என்பது பழைய உரை.

## நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மதேவர், சரீரம் காலசக்ரம்போன்றதென்பதை ரிஷிகளுக்குக் கூறி இல்லறமே சிறந்ததென்றது.)

முனிவர்களே! புத்தியை ஸாரமாகக்கொண்டதும் மனத்தை ஸ்தம்பமாகக்கொண்டதும் இந்திரிய ஸமூகத்தைக் கட்டாகக் கொண்டதும் [1]மஹாபூதங்களாகிற ஆர்களுக்குக் குடமாயிருப்பதும் நிமேஷமாகிற வட்டையுள்ளதும் ஜரையினாலும் சோகத்தாலும் நன்கு வியாபிக்கப்பட்டதும் [2]வியாதியும் வியஸனமும் ஸஞ்சரிக்கப் பெற்றதும் தேசத்தாலும் காலத்தாலும் ஸஞ்சரிப்பதும் ஶ்ரமத்தாலும் அலைதலாலும் சப்தமுள்ளதும் இரவும்பகலுமாகிற நடத்தும் ஸாதனங்களுள்ளதும் சீதோஷ்ணங்களாகிற [3]பரிவேஷமுள்ளதும் ஸுக துக்கங்களாகிற ஸந்தியுள்ளதும் பசிதாகங்களாகிற உள்ளாழிகளுள்ளதும் நிழலும் வெயிலுமாகிற வெட்டுகிறவர்களுள்ளதும் கண்களை மூடுவதனாலும் திறப்பதனாலுமே தளர்ச்சியடைவதும் சோகத்தாலும் மோகத்தாலும் ஜரையினாலும் வியாபிக்கப்பட்டதும் எப்பொழுதும் சென்றுகொண்டிருப்பதும் அறிவற்றதும் மாஸத்தாலும் பக்ஷத்தாலும் அளக்கப்பட்டதும் ஒரேவிதமாக இராததும் (மேலாகவும் நடுவாகவும் கீழாகவுமுள்ள) உலகங்களில் ஸஞ்சரிப்பதும் தமோகுண ஸமூகமாகிற சேறுள்ளதும் ரஜோகுணத்தின் வேகமாகிற தூண்டுகிறவனுள்ளதும் ஸத்வமாகிற அலங்காரத்தால் பிரகாசிப்பதும் குணங்களுடைய கூட்டமாகிற மண்டலமுள்ளதும் [4]ஆசையின்மையைக் கைப்பற்றுவதால் பயமற்றதும் சோகத்தாலும் மரணதுக்கத்தாலும் ஜீவனமுள்ளதும் கர்மங்களாகிற காரணங்களோடுகூடினதும் ஆசையாகிற அகல நீளமுள்ளதும் லோபமும் ஆசையுமாகிற மேடு பள்ளங்களிலுண்டாகும் இடியுள்ளதும் [5]விசித்ரமான அஜ்ஞானத்திலிருந்து உண்டானதும் பயமும் மோகமுமாகிற பரிவாரங்க

---

1. 'மஹாபூத பரிஸ்கந்தம்' என்பது வேறு பாடம். 'மஹாபூதங்களின் ஸமூகரூபமாயுள்ளதும்' என்பது பழைய உரை.

2. 'வியாதிக்கும் வியஸனத்துக்கும் உத்பத்தி ஸ்தானமும்' என்பது பழைய உரை. 3. சந்திரஸூர்யர்களைச் சுற்றியுள்ள வட்டமான ரேகை.

4. 'வேறுபாடங்கொண்டு' விரும்பியவை கிடைக்காததினாலுண்டான பரிதாபங்களாகிற கட்டும்பட்டங்களுடைய ஸமூகமுள்ளதும்' என்பது பழைய உரை. 5வேறு பாடம்.

ளுள்ளதும் பிராணிகளுக்கு மதிமயக்கத்தைச் செய்வதும் ஆனந்தத்திற்காகவும் பிரீதிக்காகவும் ஸஞ்சரிப்பதும் காமத்திற்கும் குரோதத்திற்கும் ஸ்வாதீனமானதும் மஹத்தத்வம் முதல் [1]விசேஷம்வரையிலுள்ள பதார்த்தங்களுள்ளதும் அவ்யக்தமானதும் அழிவற்ற ஸம்ஸாரகாரணமும் மனமாகிற வேகமுள்ளதுமான [2]காலமாகிற சக்ரமானது ஒழிவற்றுச் சென்றுகொண்டிருக்கிறது. (மானுவமான முதலான) த்வந்துவங்களோடுகூடினதும் அசேதனமுமான இந்தச் சரீரமாகிற சக்கரமானது உலகத்தைப் படைக்கும்; அழிக்கும்; விழித்துக்கொள்ளச் செய்யும்; உறங்கச்செய்யும். எந்த மனிதன் சரீரமாகிற சக்ரத்தின் பிரவிருத்தி காரணத்தையும் நிவிருத்தி காரணத்தையும் உண்மையாகஅறிகிறானே, பிராணிகளுள் அவன் எப்பொழுதும் மோகமடையமாட்டான். எல்லாக் கஷ்டங்களினின்றும் விடப்பட்டவனும் எல்லாத்துவந்துவங்களையுங்கடந்தவனும் எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபட்டவனுமான (அந்த) முனிவன் உத்தமமான கதியை அடைவான். பிரம்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன், ஸந்யாஸி என்று நான்கு ஆஶ்ரமங்கள் சொல்லப்பட்டன. எல்லாம் கிருஹஸ்தாஶ்ரமத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. இவ்வுலகில் இவைகளுள் புகழ்பெற்றதான ஏதாவது ஓர் [3]ஆஶ்ரமத்தினுடைய முடிவை அடைவது மேன்மையும் ஸநாதனமானகீர்த்தியுமாகும். குணங்களால் மேன்மைபெற்ற (பிராம்மண) ஜாதியில் பிறந்தவன் முந்தி (ஜாதகர்மமுதலான) ஸம்ஸ்காரங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்டவனாகி உள்ளபடி விரதங்களை அனுஷ்டித்து வேதங்களை அறிந்தவனாகி ஸமாவர்த்தனம் செய்துகொள்ளவேண்டும். (கிருஹஸ்தாஶ்ரமம் சென்று) எப்பொழுதும் தன்மனைவியினிடத்தில் ஆசையுள்ளவனும் சிஷ்டர்களின் ஒழுக்கமுள்ளவனும் இந்திரியங்களை வென்றவனுமாகி ஶ்ரத்தையுடன் [4]ஐந்துமஹாயஜ்ஞங்களையும் செய்ய வேண்டும். தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் (அர்ப்பணம்செய்து) மிச்சத்தைப்புஜிப்பவனும் வேதத்தில் சொல்லிய கர்மங்களில் பற்றுதலுள்ளவனும் சக்திக்குத்தக்கவாறு விதிப்படியாகவும் தானமும்செய்பவனுமாக இருக்கவேண்டும். பாணி, பாதம், கண், வாக்கு, சரீரம் இவைகளின் விஷயங்களில் ஆசையற்று முனியாக இருக்கவேண்டும்.

1. 'ஸ்தூலபிண்ட முதலியவை' என்பது பழைய உரை
2. இங்கு, காலமென்பதற்குச் சரீரமென்பது பொருள்.
3. 'ஆகம: ' என்பது வேறுபாடம். 'விதிநிஷேத சாஸ்திரம்' என்பது பழைய உரை.
4. ஆதிபர்வம் 559-ம் பக்கம் குறிப்பிற் பார்க்க.

இது சிஷ்டனுடைய லக்ஷணம். எப்பொழுதும் யஜ்ஞோபவீதமுள்ள வனும் வெண்மையான ஆடை உடுத்தவனும் சுத்தமான விரதமுள்ள வனும்மனவடக்கத்தாலும் தானத்தாலும் பரிசுத்தனுமாயிருக்கவேண் டும். எப்பொழுதும் சிஷ்டர்களுடன் வஸிக்கவேண்டும். [1]காமத்தை யும் வயிற்றையும் ஜயித்தவனும் (பிராணிகளிடம்) நட்புள்ளவனும் சிஷ்டாசாரம் பொருந்தியவனுமாகி மூங்கில்தண்டத்தையும் தீர்த்த முள்ள கமண்டலுவையும் தரிக்கவேண்டும். ஆசமனத்திற்கு ஒன்றும், பாதங்களை அலம்புவதற்கு ஒன்றும், சுத்திசெய்துகொள்வதற்கு ஒன் றுமாக மூன்று கமண்டலுக்களைச் சோம்பலின்றி எப்பொழுதும் தரிக்கவேண்டும். (பிராம்மணன்) ஓதல், ஓதுவித்தல், யாகமசெய்தல், யாகம் செய்வித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறுவிதமான தொழில் களையும் செய்யவேண்டும். (இவற்றுள்) யாகம் செய்வித்தல், ஓதுவித் தல், நல்லவனிடமிருந்து ஏற்றல் என்னும் மூன்று கர்மங்களையும் பிராம்மணர்களுக்கு ஜீவனோபாயமாகத் தெரிந்துகொள்ளுங்கள். தானம், அத்யயனம், யாகம் என்னும் மிச்சமான மற்றக் கர்மங்கள் மூன்றும் தர்மத்துடன் கூடியவைகள். தர்மங்களை அறிந்தவன், இந்தி ரியங்களை அடக்கினவனும் (எல்லாப்பிராணிகளிடத்திலும்) ஸ்நேஹ முள்ளவனும் பொறுமையுள்ளவனும் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாயிருப்பவனும் முனியுமாயிருந்துகொண்டு இந்த மூன்று கர்மங் களிலும் தவறுதலின்றி இருக்கவேண்டும். சுத்தனான பிராம்மணன் இவற்றையெல்லாம் இயன்றவரையில் செய்யவேண்டும். இவ்விதம் செய்பவனும் கடுமையான விரதங்களுள்ளவனுமான கிருஹஸ்தன் ஸ்வர்க்கத்தை ஜயிப்பான்.

---

## நாற்பத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பிரம்மதேவர் பிரம்மசர்யவானப்ரஸ்ததர்மங்கள் மேலானவையென்று மஹரிஷிகளுக்குக் கூறியது.)**

ரிஷிகளே! பிரம்மசாரியானவன் இவ்விதம் முன்கூறிய இந்த மார்க்கத்தோடு விதிப்படி தன்சக்திக்குத்தக்கபடி அத்யயனம் செய் பவனும் பிரம்மசர்யமுள்ளவனும் தன்தர்மத்தில் பற்றுதலுள்ளவ னும் கற்றறிந்தவனும் எல்லா இந்திரியங்களையும் அடக்கினவனும்

1. மூலத்தில் வேறுவிதமாக இருக்கிறது.

முனியும் குருவுக்குப் பிரியமும் ஹிதமுமானகார்யத்தில் முயற்சியுள்ளவனும் ஸத்யத்தையும் தர்மத்தையும் பிரதானமாகக்கொண்டவனும் சுத்தனும் குருவினால் நன்கு அனுமதிகொடுக்கப்பட்டு அன்னத்தையும் ஹவிஸையும் பக்ஷ்யத்தையும் இகழாமல்புஜிப்பவனும் (தனக்கேற்ற) இடங்களிலும் ஆஸனங்களிலும் இருப்பவனும் சுத்தனாகவும் ஜாக்ரதை உள்ளவனாகவுமிருந்துகொண்டு இரண்டுகாலங்களிலும் அக்னியில் (ஸமித்துக்களை) ஹோமம் செய்பவனும் எப்பொழுதும் பில்வதண்டத்தையாவது பலாசதண்டத்தையாவது தரிப்பவனுமாக இருக்கவேண்டும். பிராம்மணனானவன் பட்டையாவது. பருத்தி வஸ்திரத்தையாவது மான்தோலையாவது முழுதும் காஷாயத்தால் சிவந்திருக்கும் வஸ்திரத்தையாவது உடுத்துக்கொள்ளவேண்டும். முஞ்சத்தால்செய்த அரைநாணுள்ளவனும் ஜடைதரித்தவனும் நித்தியம் ஸ்நானம் செய்பவனும் யஜ்ஞோபவீதமுள்ளவனும் அத்யயனம்செய்பவனும் அவப்யமான விரதங்கள் கெடாதவனும் நல்ல எண்ணத்துடன் பரிசுத்தமான ஜலத்தால் எப்பொழுதும் தேவதைகளுக்குத்தர்ப்பணம் செய்பவனுமான பிரம்மசாரியானவன் புகழப்படுகிறான். இவ்விதம் செய்பவனும் ஊர்த்வரேதஸாக இருப்பவனும் ஜாக்கிரதையுள்ளவனுமானவன் ஸ்வர்க்கத்தை ஜயிப்பான். உயர்ந்தஸ்தானத்தை அடைந்தவன் பிறவிகளில் ஸஞ்சரிக்கமாட்டான். எல்லாஸம்ஸ்காரங்களாலும் ஸம்ஸ்கரிக்கப்பட்டவனும் பிரம்மசர்யத்தை அனுஷ்டித்தவனுமான புருஷன் கிராமத்தினின்று வெளிப்பட்டு வனம்சென்று எல்லாவற்றையும்விட்டு முனியாக வஸிக்கவேண்டும்; தோலையும் பட்டையையும் உடுப்பவனும் காலையிலும் மாலையிலும் ஸ்நானம் செய்பவனுமாக எப்பொழுதும் ஆரண்யத்திலேயே வஸிக்கவேண்டும். மீண்டும் கிராமத்திற்குப் போகக்கூடாது. காலத்தில் அதிதிகளைப் பூஜிப்பவனும் (வந்தவர்களுக்கு) வஸிக்க இடம்கொடுப்பவனும் சிறந்தனவல்லாத கனிகளாலும் கிழங்குகளாலும் இலைகளாலும் சாமையாலும் ஜீவிப்பவனுமாக இருக்கவேண்டும். அவன் எப்பொழுதும் ஜலத்தையும் காற்றையும் வனத்திலுண்டான (மற்றுமுள்ள) எல்லாவற்றையும் ஆச்ரயிக்கவேண்டும். சோம்பலின்றித் தீக்ஷைக்குத்தக்கபடி வரிசையாகப் புஜிக்கவேண்டும். அவன் வந்தஅதிதியைக் கனி கிழங்குகீரைமுதலானவைகளால் பூஜிக்கவேண்டும். தான் எதைப் புஜிக்கிறானோ அதை எப்பொழுதும் சோம்பலின்றிப் பிக்ஷையாகக் கொடுக்கவேண்டும். எப்பொழுதும் தேவதைகளையும் அதிதிகளையும் பூஜித்தபின் மௌனத்துடன் புஜிக்கவேண்டும். மனம் சலியாதவனும் மிதமாகப் புஜிப்பவ

னும் தேவதைகளை ஆஸ்ரயித்தவனும் இந்திரியங்களை அடக்கினவனும் (எல்லாப்பிராணிகளிடத்திலும்) ஸ்நேஹமுள்ளவனும் பொறுமையுள்ளவனும் தலைமயிர்களையும் மீசையையும் தரிப்பவனும் ஹோமம் செய்பவனும் வேதாத்யயனத்தை ஸ்வபாவமாகக் கொண்டவனும் ஸத்யத்தையும் தர்மத்தையும் முக்யகதியாகக் கொண்டவனும் எப்பொழுதும் சரீரத்தில் அபிமானமற்றவனும் ஸமர்த்தனும் எப்பொழுதும் வனத்திலேயே வஸிப்பவனும் ஜாக்ரதையுள்ளவனுமாக இருக்கவேண்டும். இவ்விதம்செய்பவனும் இந்திரியங்களை வென்றவனுமான வானப்ரஸ்தனானவன் ஸ்வர்க்கத்தை ஜயிப்பான். பிரம்மசாரியானாலும் கிருஹஸ்தனானாலும் வானப்ரஸ்தனானாலும் எவன் மோக்ஷத்தை அடைய விரும்புகிறானோ அவன் உத்தமமான நடையைப் பின்பற்றவேண்டும். எல்லாப்பிராணிகளுக்கும் அபயங்கொடுத்துப் பயனில்விருப்பமின்றிக் கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டும். எல்லாப்பிராணிகளுக்கும் நன்மை செய்பவனும் நண்பனும் எல்லா இந்திரியங்களையும் அடக்கினவனும் முனியுமாக இருக்கவேண்டும். யாசியாமலும் நிச்சயிக்காமலும் தற்செயலாகக் கிடைக்கும் பிக்ஷையைக்குறித்து முற்பகலில் ஸஞ்சரிக்கவேண்டும். மோக்ஷத்தை அறிந்தவன் புகைஅடங்கி ஜனங்கள் புஜித்தபின் (பிக்ஷா) பாத்ரங்களின் நடமாட்டம் ஓய்ந்தபிறகு பிக்ஷையை வாங்கவிரும்பவேண்டும்; கிடைத்தால் ஸந்தோஷத்தையும்கிடைக்காவிட்டால் மனவருத்தத்தையும் அடையக்கூடாது; அதிகமாகப் பிக்ஷைவாங்கக்கூடாது; பிராணனைத்தரிப்பதற்கு வேண்டியதை மட்டும் பெற்றுக்கொள்ளவேண்டும்; பிராணயாத்திரையைவிரும்பிக் காலத்தை எதிர்பார்த்து மனவடக்கத்துடன் பிக்ஷையெடுக்கவேண்டும்; பொதுவான லாபத்தை விரும்பக்கூடாது;பூஜிக்கப்பட்டுப்புஜிக்கக்கூடாது. பிக்ஷையெடுப்பவன் பூஜிக்கப்பட்டுக்கிடைப்பதில் வெறுப்பைஅடையவேண்டும்; புஜிக்கும்பொழுது கசப்பும் துவர்ப்பும் கார்ப்புமுள்ள புஜிக்கப்படும்அன்னங்களையும் மதுரமான ரஸங்களையும் ருசிபார்க்கக்கூடாது; பிராணனைத்தரிப்பதற்கு வேண்டியதை மட்டும் புஜிக்கவேண்டும். மோக்ஷத்தை அறிந்தவன் பிராணிகளுக்கு ஹிம்ஸையின்றி ஜீவனோபாயத்தை விரும்பவேண்டும். பிக்ஷையெடுப்பவன் எவ்விதத்திலும் வேறு அன்னத்தைஅடைய விரும்பக்கூடாது; (தான் செய்யும்) தர்மத்தை வெளியிடக்கூடாது; ஒருவருமில்லாதவிடத்தில் சுத்தனாக ஸஞ்சரிக்கவேண்டும்.ஜனங்களில்லாதவீட்டிலாவதுகாட்டிலாவதுமரத்தினடியிலாவது நதிக்கரையிலாவது மலையின்குகையிலாவது வஸிக்கவேண்டும். கோடைக்காலத்தில் ஒரு கிராமத்தில் ஓரிரவும் மழைக்

காலத்தில் ஒரே இடத்திலும் வாஸம்செய்யவேண்டும்; ஸூர்யனால் காட்டப்பட்டமார்க்கமுள்ளவனாகப்புழுப்போலப் பூமியில் ஸஞ்சரிக்க வேண்டும்; பிராணிகளிடம் கருணையினால் பூமியை உற்றுப்பார்த்து ஸஞ்சரிக்கவேண்டும்; பதார்த்தங்களைச் சேர்த்துவைத்துக்கொள்ளக் கூடாது; (ஒருவனிடத்திலுள்ள) ஸ்நேஹத்தினால் (ஓரிடத்திலும்) வஸிக்கக்கூடாது; மோக்ஷத்தை அறிந்தவன் பரிசுத்தமான ஜலத்தினால் நித்யமான கர்மாவைச் செய்யவேண்டும். மனிதன் எப்பொழுதும் (பாத்திரத்தில்) எடுக்கப்பட்ட ஜலத்தால் ஆசமனம் செய்ய வேண்டும். அஹிம்ஸை, பிரம்மசர்யம், ஸத்யம், கபடமின்மை, குரோதமின்மை, அஸூயையின்மை, எப்பொழுதும் மனவடக்கம், கோட்சொல்லாமை இந்த எட்டு விரதங்களிலும் பற்றுதலுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனுமாக இருக்கவேண்டும். பாவமும் வஞ்சனையுமற்றதும் தர்மம்தவறாததுமான நடையை எப்பொழுதும் அனுஷ்டிக்கவேண்டும். எப்பொழுதும் ஆசையின்றிக் கிடைத்ததும் புஜிக்கத்தக்கதுமான ஆஹாரத்தைப் புஜிக்கவேண்டும்; சரீரத்தையும் உயிரையும் தரிப்பதற்கு வேண்டியதைமட்டும் புஜிக்கவேண்டும்; தர்மமாகக் கிடைத்ததைப் புஜிக்கவேண்டும். தன்னிஷ்டத்தை அனுஸரிக்கக்கூடாது; ஆஹாரத்தையும் வஸ்திரத்தையும் தவிர மற்றதை எவ்விதத்திலும் பெற்றுக்கொள்ளக்கூடாது; எவ்வளவு உபயோகித்துக்கொள்ளக் கூடுமோ அவ்வளவே பெற்றுக்கொள்ள வேண்டும்; அதிகமாகப் பெற்றுக்கொள்ளக்கூடாது; எப்பொழுதும் பிறர்களிடம் வாங்கவும் கொடுக்கவும் கூடாது; வித்வானானவன் எப்பொழுதும் கருணையினால் பிராணிகளுக்குப் பிரித்துக்கொடுக்க வேண்டும். பிறருடைய பொருள்களைப் பெற்றுக்கொள்ளக்கூடாது; எடுத்துக்கொள்ளக்கூடாது; யாசிக்கக்கூடாது; எந்த விஷயத்தையாவது அனுபவித்து மறுபடியும் அதற்கு ஆசைப்படக்கூடாது. வெளிப்படையாகவும் பொதுவாகவுமுள்ள மண்ணையும் ஜலத்தையும் ஆஹாரங்களையும் இலைகளையும் புஷ்பங்களையும் கனிகளையும் காரியமிருப்பவன் எடுத்துக்கொள்ளலாம்; சில்பவேலையினால் ஜீவிக்கக் கூடாது; இரண்டுதடவை அன்னத்தை விரும்பக்கூடாது; (ஒருவரையும்) பகைக்கக்கூடாது; (ஒருவருக்கும்) உபதேசம் செய்யக் கூடாது; ஸஹாயமற்றவனாக இருக்கவேண்டும்; ச்ரத்தையினால் பரிசுத்தமாக இருப்பவைகளைப் புஜிக்கவேண்டும்; (பிக்ஷைநடைபெறக்) காரணமான செய்கைகளை விலக்கவேண்டும். பயனில் விருப்பமில்லாத செய்கைகளை உடையவனும் (ஒன்றிலும்) பற்றுதலற்றவனும்

ஒரு பிராணியுடனும் சேராதவனுமாக இருக்கவேண்டும். பயனில் விருப்பத்துடன் செய்யும் எல்லாக் கர்மங்களேயும் ஹிம்ஸையுள்ள கர்மங்களேயும் உலகத்தாரைக் கட்டுப்படுத்தும் தர்மத்தையும் செய்யவும் செய்விக்கவும் கூடாது. எல்லா எண்ணங்களேயும் கடந்து பாரமற்றவனுகி எல்லாவற்றையும் விட்டு ஸஞ்சரிக்கவேண்டும்; ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான எல்லாப் பிராணிகளிடத்திலும் ஸமமாக இருக்கவேண்டும்; பிறன் ஒருவனேயும் பயமடையும்படி செய்யக்கூடாது; (தானும்) ஒருவரிடமும் பயப்படக்கூடாது. எல்லாப் பிராணிகளுக்கும் நம்பத்தகுந்தவனுக இருப்பவன் மோக்ஷத்தை அறிந்தவர்களுள் சிறந்தவனென்று சொல்லப்படுகிறுன். வரப்போவதைப்பற்றித் தியானம் செய்யக்கூடாது; சென்றதைப்பற்றிக் கவலேப்படக் கூடாது; நிகழ்கின்றதை உபேக்ஷிக்கவேண்டும். காலத்தை எதிர்பார்ப்பவனும் ஜாக்ரதையுள்ளவனுமாக இருக்கவேண்டும். கண்ணுலும் மனத்தாலும் வாக்காலும் ஒன்றையும் தூஷிக்கக்கூடாது. நேரிலாவது மறைவிலாவது கெட்டகாரியம் ஒன்றையும் செய்யக்கூடாது. ஆமையானது அவயவங்களே அடக்குவதுபோல இந்திரியங்களே எல்லாவிஷயங்களினின்றும் அடக்கி இந்திரியங்களேயும் மனத்தையும் புத்தியையும் அடக்கினவனும் ஆசையற்றவனும் எல்லாத் தத்வங்களேயும் அறிந்தவனும் துவந்துவங்களும் நமஸ்காரமும் ஸ்வாஹாகாரமும் மமதையும் அஹங்காரமும் யோகக்ஷேமங்களும் அற்றவனும் தைர்யமுள்ளவனும் விருப்பமும் குணங்களுமற்றவனும் அடக்கமுள்ளவனும் பற்றுதலும் ஆச்ரயமுமற்றவனும் ஆத்மாவில் பற்றுதலுள்ளவனும் தத்துவத்தை அறிந்தவனுமான புருஷன் மோக்ஷத்தை அடைவான்; இதில் ஸம்சயமில்லே. காலும் கையும் பின்புறமும் தலேயும் வயிறும் இல்லாததும் ஒரேவிதமான குணமும் செய்கையுமுள்ளதும் தனித்திருப்பதும் நிர்மலமானதும் ஸ்திரமானதும் கந்தமும் ரஸமும் ஸ்பரிசமும் ரூபமும் சப்தமுமற்றதும் அனுஸரிக்கத்தக்கதும் (ஒன்றிலும்) பற்றுதலற்றதும் தசையற்றதும் கவலேயற்றதும் அழிவற்றதும் திவ்யமானதும் எப்பொழுதும் வீட்டிலிருந்தாலும் எல்லாப்பிராணிகளிடத்திலுமிருப்பதுமான ஆத்மாவைப்பார்த்தவர்களுக்கு மரணம் இல்லே. புத்தியும் இந்திரியங்களும் தேவர்களும் வேதங்களும் யஜ்ஞங்களும் உலகங்களும் தவமும் விரதங்களும் அந்த ஆத்மாவை அடையமாட்டா. அது ஞானிகளால் அடையக்கூடியதும் அடையாளங்களால் அறியமுடியாததுமாகக் கருதப்பட்டது. ஆகையால், அடையாளமற்ற தர்மத்தைத் தெரிந்து

கொண்டு அந்த உண்மையான தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். வித்வானானவன் ரஹஸ்யமான தர்மத்தை ஆச்ரயித்துச் சாஸ்திர ஞானத்திற்குரிய நடையை அனுஷ்டிக்கவேண்டும். ஞானியாயிருந்தும் அஜ்ஞானிபோலத் தர்மத்தைத் தூஷிக்காமல்செய்யவேண்டும். மற்றவர்கள் எப்பொழுதும் தன்னை அவமதிக்கக்கூடிய செய்கையுள்ளவனும் அடக்கமுள்ளவனும் ஸாதுக்களுடைய தர்மங்களை இகழாதவனுமாக ஸஞ்சரிக்கவேண்டும். இவ்விதமான நடையுள்ளவன் சிறந்த முனிவனாகச் சொல்லப்படுகிறான். இந்திரியங்கள், இந்திரிய விஷயங்கள், ஐந்து மஹாபூதங்கள், மனம், புத்தி, அஹங்காரம், அவ்யக்தம், புருஷன் இவைகளெல்லாவற்றையும் உள்ளபடி நன்கு தெரிந்து தத்துவங்களின் நிச்சயத்தை அடைந்தவன் பிறகு எல்லாப் பந்தங்களாலும் விடப்பட்டு ஸ்வர்க்கத்தை அடைவான். இவ்வளவு தெரிந்து தத்வங்களை அறிந்தவன் முடிவுக்காலத்தில் ஏகாந்தமான இடத்திலிருந்துகொண்டு (பரமாத்மாவை) தியானம் செய்யவேண்டும்; பிறகு, பற்றற்றவனாகி முக்திபெறுவான். ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் வாயுவைப்போல எல்லா ஸங்கங்களினின்றும் விடப்பட்டவனும் (அன்னமயமுதலான) கோசங்கள்நசித்தவனும் துன்பமற்றவனுமான புருஷன் இந்த உத்தம பதத்தை அடைவான்.

---

## நாற்பத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(பிரம்மதேவர் துறவு, அறிவு, தவம் ஆகியஇவை மோக்ஷஸாதனமென்பதை மஹரிஷிகளுக்குக் கூறியது.)

ரிஷிகளே! நிச்சயமாகச் சொல்லும் பெரியோர்கள், ஸந்யாஸத்தைத் தவமென்று சொல்லுகின்றனர். வேதத்தை நன்குஉணர்ந்த பிராம்மணர்கள் ஞானத்தைப் பரப்பிரம்மமாகக் கருதுகின்றனர். சுத்தமான சித்தமுள்ளவர்களும் பரிசுத்தர்களும் ரஜோகுணத்தைக்கடந்தவர்களும் பாவமற்றவர்களுமான பண்டிதர்கள் மிக்க தூரத்திலிருக்கும் ஸ்வரூபமுள்ளதும் வேதவித்தையை ஆச்ரயித்ததும் த்வந்துவங்களும் குணங்களுமற்றதும் நித்யமும் சிந்திக்கமுடியாத குணங்களுள்ளதும் உத்தமமுமான அந்தப் பரப்பிரம்மத்தை ஞானத்தாலும் தவத்தாலும் பார்க்கின்றனர். எப்பொழுதும் ஸந்யாஸத்தில் பற்றுதலுள்ளவர்களும் பிரம்மத்தை அறிந்தவர்களுமான ஜனங்கள் தவத்

தால் க்ஷேமத்தைத் தரும் மார்க்கமான பரமேஸ்வரரை அடைகின்றனர். தவமானது சிறந்ததீபமென்றும் ஒழுக்கம் தர்மத்திற்குஸாதகமென்றும் கூறுகின்றனர். ஞானத்தைச் சிறந்ததாகவும் ஸந்யாஸத்தை உத்தமமான தவமாகவும் தெரிந்துகொள்ளவேண்டும். எவன் தத்துவங்களை நிச்சயமாகத் தெரிந்துகொண்டு சிறிதும் துன்பமற்ற ஞானஸ்வரூபியும் எல்லாப்பிராணிகளிடத்திலுமிருப்பதுமான ஆத்மாவைஅறிகிறானோ அவன் எல்லாவற்றையும்அறிந்தவனென்று இவ்வுலகில்சொல்லப்படுகிறான். எந்தவித்வானவன்சேர்ந்திருப்பதையும் பிரிந்திருப்பதையும் ஒன்றாகஇருப்பதையும் பலவாகஇருப்பதையும் பார்க்கிறானோ அவன் துக்கத்திலிருந்துவிடப்படுகிறான். எவன் ஒன்றையும்விரும்பாமலும் ஒன்றையும்அவமதியாமலும்இருக்கிறானோ அவன் இவ்வுலகில் இருக்கும்பொழுதே பிரம்மத்தின்தன்மையைஅடையத் தகுந்தவனாகிறான். பிரதானம் குணங்கள் இவற்றின் தத்துவத்தை உணர்ந்தவனும் எல்லாப்பிராணிகளுடைய ஸிருஷ்டியையும் அறிந்தவனும் மமதையும் அஹங்காரமுமற்றவனுமான புருஷன் விடுதலைப் பெறுவான்; இதில் ஸம்சயமில்லை. த்வந்த்வங்களும் நமஸ்காரமும் ஸ்வதாகாரமுமற்றவன் நிர்க்குணமும் நித்யமும் த்வந்த்வமற்றதுமான பிரம்மத்தை மிக்க மனவடக்கத்தினாலேயே அடைகிறான். குணமயமான எல்லாப் புண்ணியகர்மத்தையும் பாபகர்மத்தையும் விட்டவனும் மெய்பொய் இரண்டையும் விட்டவனுமான மனிதன் மோக்ஷமடைவான்; இதில் ஸம்சயமில்லை. மாயையாகிறவிதையினின்று உண்டானதும் புத்தியாகிற அடிமரமுள்ளதும் பெரியதும் மஹத்தத்துவமும் அஹங்காரமுமாகிற தளிர்களுள்ளதும் இந்திரியங்களிருக்கும் இடங்களாகிற பொந்துகளுள்ளதும் மஹாபூதங்களாகிற பெரிய கிளைகளுள்ளதும் பேதஜ்ஞானமாகிற சிறியகிளைகளுள்ளதும் எப்பொழுதும் இலைகளுள்ளதும் எப்பொழுதும் மலர்களுள்ளதும் புண்ணிய பாபங்களாகிற கனிகளின் உத்பத்தியுள்ளதும் எல்லாப் பிராணிகளுக்கும் அடுத்துப் பிழைக்கத்தக்கதும் ஸநாதனமுமான பிரம்மமாகிறவிருக்ஷத்தைத் தத்துவஜ்ஞானமாகிறகத்தியினால் வெட்டிப் பிளந்து மரணத்தையும் ஜன்மத்தையும் ஜரையையும் கொடுக்கக்கூடியவைகளான பற்றுதல்களென்னும் பாசங்களைவிட்டு மமதையும்அஹங்காரமுமற்ற பண்டிதன் முக்திபெறுவான்; இதில் ஸம்சயமில்லை. (இந்த மரத்தில்) நித்யமானவைகளும் அடங்கினவைகளும் அசேதனங்களுமான இரண்டுபறவைகள் இருக்கின்றன. எவன் இவைகளைவிட மேலானவனும் வேறானவனுமாயிருக்கிறானோ அவன் சைதன்யமுள்ளவனென்று சொல்லப்படுகிறான். அசேதனன்போன்ற

றவனும் ஜீவர்களுக்குரிய உபாதிகளால் விடப்பட்டவனும் புத்தியைக் காட்டிலும் மேலானவனும் சைதன்யத்தை உண்டுபண்ணுகிறவனும் அந்தராத்மாவும் க்ஷேத்ரஜ்ஞனும் எல்லாப் புத்திகளுக்கும் ஸாக்ஷியும் குணங்களைக் கடந்தவனுமான ஜீவன் எல்லாப் பாவங்களாலும் விடப் படுகிறான்.

---

## நாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(பிரம்மதேவர் யோகிகளின் நான்கு வகைகளையும் மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் தெரிந்துகொள்ளவேண்டிய பல விஷயங்களையும் முனிவர்களுக்குக் கூறியது.)**

முனிவர்களே! [1]சிலர் (பிரபஞ்சமாகிற) விருக்ஷத்தைப் பிரம்ம மயமாகவும் சிலர் (பிரபஞ்சமாகிற) வனத்தைப் பிரம்மமயமாகவும் சொல்லுகின்றனர். [2]சிலர் பிரம்மத்தை அவ்யக்தமாகவும் சிலர் பிரம் மத்தை விகாரமற்றதாகவும் சொல்லுகின்றனர். ([3]சிலர்) இப்பிரபஞ் சத்தையெல்லாம் மாயையிலிருந்து உண்டாகி அதில் லயமடைகிற தாகவும் கருதுகின்றனர். [4]எவன் மரணகாலத்தில் மூச்சுவிடுமளவு பொழுதாவது பிரம்மத்தைத்தியானம்செய்து (பிரம்மத்துடன்) ஸமமாக இருக்கிறானோ அவன் மோக்ஷமடையத் தகுந்தவனாகிறான். ([5]எக்காலத்திலும்) நிமிஷகாலமாவது சித்தத்தைப் பரமாத்மாவினிடம் அடக்கி ஆத்மாவின் அனுக்ரஹம் பெற்றால் வித்வான்கள் அடையக் கூடியதும் அழிவற்றதுமான மோக்ஷத்தை அடைவான். [6]பத்து அல் லது [7]பன்னிரண்டு விதமான [8]பிராணாயாமங்களால் அடிக்கடி பிரா

---

[1]பிரம்மமே உலகமாக ஆகிறது என்பவர்.

[2]பிரம்மம் உலகமாக ஆகிறதில்லை; உலகம் பிரம்மத்தினிடம் தோற்று கிறது என்பவர்.

[3]ஸாங்கியர்கள். [4] முதலாவது மதம். [5]இரண்டாவது மதம்.

[6]மூன்றாவது மதம்; 'யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யா ஹாரம், தியானம், தாரணை, ஸமாதி, யுக்தி, வைராக்யம்' என்பது பழைய உரை.

[7]'யுக்தியையும் வைராக்யத்தையும் விலக்கி மற்ற எட்டு, மைத்திரீ, கருணை, முதிதை, உபேக்ஷை ஆகப்பன்னிரண்டு' என்பது பழைய உரை. (தசத்வாத சபி: என்பதற்கு இருபத்திரண்டுஎன்று பொருள்கொண்டு)யமம் ஐந்து, நியமம் ஐந்து, பிராணாயாமம் முதலியவை ஆறு, மைத்ரீ முதலியவை நான்கு, யுக்தி வைராக்யம் இரண்டு ஆக இருபத்திரண்டு' என்பது பழைய உரை.

[8] ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, புத்தி, மனம் இப் பன்னிரண்டையும் அடக்கும் உபாயம் என்பது பழைய உரை.

ணன்களை அடக்கினால் இருபத்து நான்காவ (தான அவ்யக்தத்) தைக் காட்டிலும் [1]மேலான (இருபத்தைந்தாமவனான) புருஷனை அடைவான். இவ்விதம் நிர்மலமான ஸத்வகுணமுள்ளவன் முதலில் விரும்பியவற்றையெல்லாம் அடைவான். அவ்யக்தத்தை அடைந்து ஸத்வ குணம் மிக அதிகமாக இருந்தால் அமிருதனாக இருப்பதற்குத் தகுந்தவனாகிறான். பிராம்மணப்ரேஷ்டர்களே! ஸத்வத்தைக்காட்டிலும் மேலானது வேறில்லையென்று அதனை அறிந்தவர்கள் இவ்வுலகில் புகழ்கின்றனர். புருஷனிடத்தில் ஸத்வமிருக்கிறதென்பதை அனுமானத்தினால் தெரிந்துகொள்ளுகிறோம். (ஸத்வமுள்ள) புருஷனை ஸத்வமில்லாதவனென்று அறியமுடியாது. பொறுமையும் தைரியமும் கொல்லாமையும் ஸமமாகஇருப்பதும் உண்மையும் நேர்மையும் ஞானமும் தியாகமும் ஸந்யாஸமும் ஸத்வத்தின் கார்யமென்று கருதப்படுகின்றன. வித்வான்கள் இந்த அனுமானத்தினாலேயே, 'ஸத்வமும் புருஷனும் (ஒன்று;) இதில் ஆலோசனை இல்லை' என்று எண்ணுகின்றனர். ஞானத்தில் நன்கு நிலைபெற்ற சில வித்வான்கள், 'புருஷனுக்கும் ஸத்வத்திற்கும் ஐக்யமென்பது பொருந்தாது. ஸத்வமானது எப்பொழுதும் வேறாக இருக்கிறதென்பதும் ஆலோசிக்கப்படாததாகும்; ஆகையால், ஸத்வமானது வேறாக இருக்கிற பதார்த்தமென்றும் உண்மையில் இயற்கையாக இருக்கிறதென்றும் தெரிந்துகொள்ளவேண்டும்' என்று கூறுகின்றனர். அவ்வாறே, (புருஷனுக்கும் ஸத்வத்திற்கும்) [2]ஏகத்வமும் [3]நாநாத்வமும் கருதப்படுகின்றன. இதில் வித்வான்களின் யுக்தி இருக்கிறது. அத்திப்பழத்திற்கும் (அதன் உள்ளே இருக்கும்) கொசுக்கும் ஒற்றுமையும் வேற்றுமையும் காணப்படுகின்றன. அந்தப் புருஷனுக்கும் ஸத்வத்திற்குமுள்ள சேர்க்கையானது மீன் ஜலத்தில் வேறாகஇருப்பதுபோன்றதும் ஜலத்திவலைகளுக்குத் தாமரையிலைகளோடுள்ள சேர்க்கைபோன்றதுமாக இருக்கிறது.' என்று சொன்னார். (சிஷ்ய!) இவ்விதம் சொல்லியதைத் தெரிந்துகொண்டவர்களும் முனிவருள் மிகச்சிறந்தவர்களுமான அந்த அந்தணர்கள் அப்பொழுது மறுபடியும் ஸம்சயமடைந்து உலகங்களுக்குப் பிதாமஹரான பிரம்மதேவரை நோக்கிக் கேட்கத் தொடங்கினார்கள்.

---

1 வேறுபாடம்.

2. ஒன்றாயிருத்தல். 3. பலவாயிருத்தல்.

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(மஹரிஷிகள் பலர் பலவாறாகச் சொல்லும் தர்மங்களில் தங்களுக்குள்ள ஸந்தேகங்களைப் பிரம்மதேவரிடம் கேட்டது.)**

'(பிரம்மதேவரே!) இவ்வுலகில் தர்மங்களுள் எது அவஶ்யம் அநுஷ்டிக்கத் தக்கதாகக் கருதப்பட்டது? தர்மத்தின் கதி பலவிதமாக இருப்பதால் ஒன்றோடொன்று முரண்பட்டதுபோலப் பார்க்கிறோம். சிலர் தேகம் நசித்தபின்னும் ஆத்மா இருக்கிறதென்றும், சிலர் இல்லையென்றும், சிலர் எல்லாம் ஸம்சயமென்றும், சிலர் நிச்சயமென்றும், சிலர் (எல்லாம்) அநித்யமென்றும், (சிலர்) நித்யமென்றும், (சிலர்) இல்லையென்றும், சிலர் இருக்கிறதென்றும், சிலர் (ஜீவன் பிரம்மம் ஜடம் என்று) மூன்று விதமென்றும்; சிலர் (ஞானம் ஒன்றே 'இது நான்' என்னும்) இரண்டு பொருளாக இருக்கிறதென்றும், சிலர் அபின்னமாகவும் பின்னமாகவும் இருக்கிறதென்றும் சொல்லுகின்றனர். ப்ரம்மத்தை அறிந்தவர்களும் உண்மையைக் கண்டவர்களுமான பிராம்மணர்களே, சிலர் (பிரம்மம்) ஒன்றே இருக்கிறதென்றும், சிலர் கர்மங்கள் தனித்துக் காரணங்களென்றும், சிலர் மற்றும் அனேக காரணங்கள் உண்டென்றும் எண்ணுகிறார்கள். சிலர் தேசம் காலம் இரண்டும் காரணங்களென்றும், சிலர் ஒன்றும் இல்லை யென்றும் சொல்லுகிறார்கள். சிலர் ஜடையையும் மான்தோலையும் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். சிலர் தலையை முண்டனம்செய்துகொண்டு ஆடையின்றி இருக்கிறார்கள். சிலர் நைஷ்டிகப் பிரம்மசர்யத்தையும் சில ஜனங்கள் கிருஹஸ்தாஶ்ரமத்தையும் விரும்புகின்றனர். உண்மையைக் கண்டவர்களும் பிரம்மத்தை அறிந்தவர்களும் பிரகாசிப்பவர்களுமான பிராம்மணர்கள் தியானம் செய்கின்றனர். சிலர் ஆஹாரத்தை விரும்புகின்றனர், சிலர் உபவாஸத்தில் நோக்கமுள்ளவர்களாக இருக்கிறார்கள். சிலர் கர்மாவைப் புகழ்கின்றனர். சில ஜனங்கள் அடக்கத்தைப் புகழ்கின்றனர். சிலர் மோக்ஷத்தைப் புகழ்கின்றனர். சிலர் பலவிதமான போகங்களைப் புகழ்கின்றனர். சிலர் தனங்களை விரும்புகிறார்கள். சிலர் வறுமையை விரும்புகிறார்கள். மற்றும் சிலர் (தியானம் முதலான) ஸாதனத்தை அநுஷ்டித்து, பிறகு, 'இது இல்லை' யென்று சொல்லுகிறார்கள். சிலர் புண்யத்திற்கும் புகழுக்குமாக முயலவேண்டும்' என்கிறார்கள். சிலர்

'இது இல்லை' என்கிறார்கள். சிலர் நல்ல காரியத்தில் பற்றுள்ளவர்களும் சிலர் (செய்தது இருக்குமோ இராதோ என்னும்) ஸம்சயமுள்ளவர்களுமாக இருக்கிறார்கள். சிலர் துக்க நிவிருத்திக்காகவும் சிலர் ஸுகத்திற்காகவும் சிலர் (பயனைக் கருதாமலும்) தியானம் செய்யவேண்டுமென்று சொல்லுகிறார்கள். சில பிராம்மணர்கள் யஜ்ஞத்தையும் சிலர் தானத்தையும் சிலர் தவத்தையும் சில ஜனங்கள் வேதாத்யயனத்தையும் புகழ்கின்றனர். சிலர் ஞானமானது ஸந்யாஸத்தால் உண்டாகிறதென்று சொல்லுகிறார்கள்; வஸ்துக்களின் தத்வத்தை விசாரிப்பவர்கள் ஸாதனங்கள் எல்லாம் பூர்த்தியாக இருப்பதினாலேயே உண்டாகிறதென்று சொல்லுகிறார்கள். சிலர் எல்லாவற்றையும் புகழ்கிறார்கள். சிலர் எல்லாம் இல்லையென்று சொல்லுகிறார்கள். ஸாதுக்களுள் சிறந்தவரே! தர்மமானது இவ்விதம் பலவிதமாகச் சொல்லப்பட்டிருப்பதால் எது ஸ்ரேயஸ் என்று நாங்கள் நிச்சயத்தை அடையாமலிருக்கிறோம். ஜனங்கள், 'இது ஸ்ரேயஸ், இது ஸ்ரேயஸ்' என்று முயல்கின்றனர். எவன் எந்தத்தர்மத்தில் பற்றுதலுள்ளவனாக இருக்கிறானோ அவன் அதை எப்பொழுதும் பூஜிக்கிறான். ஸாதுக்களுள் சிறந்தவரே! அதனால் எங்களுடைய புத்தியானது சிக்ஷிக்கப்படாததாக இருக்கிறது; மனமும் பலவகையாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஸ்ரேயஸ் எது என்பதைப்பற்றி (உம்மால்) சொல்லப்பட்டதை (க்கேட்க) விரும்புகிறோம். அதற்குமேல் எது ரஹஸ்யமோ அதை நீர் சொல்லவேண்டும். ஸத்வத்திற்கும் க்ஷேத்ரஜ்ஞனுக்கும் சேர்க்கை எந்தக் காரணத்தினால் உண்டாயிற்று?' என்று வினவினார்கள்.

அந்தப் பிராம்மணர்களால் இவ்வாறு வினவப்பட்டவரும் பகவானும் உலகங்களைப் படைப்பவரும் தர்மாத்மாவும் சிறந்த புத்தியுள்ளவருமான அந்தப் பிரம்மதேவர் அந்தப் பிராம்மணர்களுக்கு உண்மையாகச் சொல்லத் தொடங்கினார்.

---

## ஐம்பதாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மதேவர், தருமத்தை எடுத்துக்காட்டி அதனோடுகூடிய ஞானமே மோக்ஷ ஸாதனமென்பதையும் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்பந்தத்தையும் பஞ்ச பூதங்களின் குண முதலியவற்றையும் முனிவர்களுக்குச் சொல்லியது.)

பிரம்மதேவர், 'ஸாதுக்களுள் சிறந்தவர்களே! நீங்கள் என்னிடம் எதை வினவினீர்களோ அதை உங்களுக்குக் கருணையால் சொல்லுகிறேன். குருவானவர் சிஷ்யனை அடைந்து எதைச் சொன்னாரோ அதைத் தெரிந்துகொள்ளுங்கள். இப்பொழுது அது முழுதையும் கேட்டு நன்றாக மனத்தில் தரித்துக்கொள்ளுங்கள். எல்லாப் பிராணிகளுக்கும் ஹிம்ஸை செய்யாமலிருப்பதென்பது சிறந்த செய்கை யென்று கருதப்படுகிறது. இது பயமற்ற ஸ்தானமும் மிகச் சிறந்ததும் தர்மத்திற்கு லக்ஷணமுமாக இருக்கிறது. நிச்சயத்தை அறிந்த பெரியோர்கள் ஞானத்தை மோக்ஷத்திற்கு ஸாதனமென்று சொல்லுகிறார்கள். ஆகையால், சுத்தமான ஞானத்தால் எல்லாப் பாவங்களினின்றும் விடப்படுகிறான். ஹிம்ஸையில் நோக்கமுள்ளவர்களும் நாஸ்திக வியாபாரமுள்ளவர்களும், லோபமும் மோகமுமுள்ளவர்களாகி நரகத்தை அடைகின்றனர். எவர்கள் கர்மங்களைச் சோம்பலின்றிப் பயனில் விருப்பத்துடன் செய்கிறார்களோ அவர்கள் இவ்வுலகில் அடிக்கடி பிறந்து மிக்க ஸந்தோஷமடைகின்றனர். எந்த வித்வான்கள் பயனில் விருப்பமின்றி ச்ரத்தையுடன் கர்மங்களைச் செய்கிறார்களோ அவர்கள் நன்கு உணர்ந்தவர்கள். ஸாதுக்களுள் சிறந்தவர்களே! இனி, ஸத்வத்திற்கும் க்ஷேத்திரஜ்ஞனுக்குமுள்ள சேர்க்கையையும் பிரிவையும்பற்றிச் சொல்லுகிறேன். அதனைத் தெரிந்துகொள்ளுங்கள். எப்பொழுதும் புருஷன் விஷயியாகவும் ஸத்வம் விஷயமாகவும் கருதப்படுகின்றனர். இவர்கட்கு விஷயவிஷயீபாவமானது ஸம்பந்தமாகச் சொல்லப்படுகிறது. இவ்விருவரும் முன் உபதேசத்தில் அத்திப்பழமும் (அதன்) பூச்சியும் போன்றவரென்று விரித்துரைக்கப்பட்டனர். எப்பொழுதும் அசேதனமான ஸத்வமானது (அத்திப்பழம்போல) புஜிப்பவனை அறிகிறதில்லை. எவன் (அதிலுள்ள பூச்சிபோல்) புஜிப்பவனையும் புஜிக்கப்படுவதையும் தெரிந்துகொள்ளுகிறானோ அவன் க்ஷேத்திரஜ்ஞன். அறிஞர்கள் ஸத்வத்

தை அநித்யமாகவும் (ஸுகதுக்கமுதலான) த்வந்த்வமுள்ளதாகவும் சொல்லுகின்றனர். க்ஷேத்ரஜ்ஞனோ த்வந்த்வமற்றவனும் அம்ச மற்றவனும் நித்யனும் நிர்க்குணஸ்வரூபமுள்ளவனுமாக இருக்கிறான். (ஸத்வத்திற்கு) ஸமமாக இருப்பவனும் (ஸத்வத்தின்) பெயரை அனு ஸரித்தவனும் எங்கும் நிலைபெற்றவனுமான புருஷன் ஜலமானது தாமரையிலையில் பற்றாததுபோல ஸத்வத்தில் எப்பொழுதும்பற்றுத லடைகிறதில்லை. வித்வானானவன் எல்லாக்குணங்களோடும் சேர்ந் திருந்தாலும் (அவற்றால்) பற்றப்படுகிறதில்லை. தாமரையிலையிலுள்ள ஜலத்திவலையானது எப்படி பற்றாமலிருக்கிறதோ அவ்விதமே புருஷ னும் (ஒன்றிலும்) ஸம்பந்தப்படாமலிருக்கிறான்; ஸந்தேஹமில்லை. (ஆனாலும்,) ஸத்வமும் [1]புருஷனும் (சேர்ந்து ஒரு) திரவ்யமாகவே ஆயின என்பது நிச்சயம். (இது என்னப்படும்) பொருளும் (நான் என்னப்படும்) கர்த்தாவும்போல இவைகள் சேர்ந்திருக்கின்றன. ஒருவன் இருட்டில் தீபத்தை எடுத்துக்கொண்டு செல்வதுபோலப் பரமரிஷிகள் ஸத்வமாகிற தீபத்தால் செல்லுகின்றனர். எண்ணெயும் திரியுமுள்ளவரைக்கும் தீபம் பிரகாசிக்கிறது. எண்ணெயும் திரியும் நசித்தால் ஒளி மறைந்துவிடுகிறது. இவ்விதம் வ்யக்தமான ஸத்வ குணம் திரியாகவும் புருஷன் எண்ணெயாகவும் சொல்லப்படுகின்ற னர். பிராம்மணர்களே ! இதைத் தெரிந்துகொள்ளுங்கள். மேலும், உங்களுக்குக் கருணையால் சொல்லுகிறேன். கெட்ட புத்தியுள்ளவன் [2]ஆயிரத்தாலும் புத்தியை அடையான். புத்தியுள்ளவன் நான்கில் ஓர் அம்சத்தாலும் ஸுகமாகவளருவான். இவ்விதம் தர்மத்தை ஸம்பா திப்பதற்கேற்ற மார்க்கத்தை உபாயத்தால் தெரிந்துகொள்ளவேண் டும். உபாயத்தை அறிந்த மேதாவிதான் அழிவற்ற ஸுகம்பெறு வான். கட்டுச்சோறின்றி வழிநடக்கும் மனிதன் ஓரிடத்தில் மிகக்கஷ் டப்பட்டுச் செல்லுகிறான்; நடுவில் மரித்தும் விடுகிறான். அதுபோல வே, பயன் உண்டாவதும் உண்டாகாமல் இருப்பதும் கர்மங்களைச் சார்ந்தனவென்று தெரிந்துகொள்ளவேண்டும். புருஷனுக்குத் தன்னு டைய ஸ்ரேயஸானது புண்யபாவங்களைத் திருஷ்டாந்தமாகக்கொண் டது. தத்துவஞானமில்லாதவன்கதி முன்பார்த்திராத நீண்டவழியை ஒருவன் கால்களாலேயே நடந்துபோவதை ஒத்திருக்கிறது. அறிஞ னின் கதி, அதே நீண்டவழியில் வேகமாகச் செல்லும் குதிரைவண் டியிலேறினவனது கதியைப் போன்றிருக்கும். உயர்ந்த மலையிலேறிப்

1. வேறு பாடம். 2. ஆயிரக்கணக்காகத் திருத்தப்பட்டாலும்.

பூமியைப்பார்க்கக்கூடாது. (சாஸ்திரமாகிற) ரதத்தினால் அறிவின்றிக் கஷ்டப்படும் (ஜீவனாகிற) ரதிகனைப்பார்க்கவேண்டும். அவன் ரதம் போகக்கூடிய மார்க்கமுள்ளவரையில் ரதத்தால் செல்லுகிறான். வித்வானானவன் ரதம் போகக்கூடிய மார்க்கமற்றவுடன் ரதத்தைவிட்டுச் செல்லுகிறான். இவ்விதம் சிறந்தபுத்திசாலியும் தத்வம் யோகம் இவற்றின் விதியை அறிந்தவனும் குணங்களை அறிந்தவனுமான புருஷன் நன்றாகத் தெரிந்துகொண்டு மேன்மேலும் மேன்மைபெற்ற பதத்தை அடையவேண்டும். மிக்க கோரமான கடலைத் தெப்பமின்றிக் கைகளாலேயே நீந்துவதாக அறியாமையால் பிரவேசிப்பவன், ஸந்தேகமில்லாமல் நாசத்தை விரும்புகிறான். [1]பகுத்தறிவுள்ள பிராஜ்ஞன் நல்ல துடுப்புக்களுள்ள ஓடத்தால் ஜலத்தில் பிரவேசித்து ச்ரமமின்றி விரைவாகக் கடலைத் தாண்டுகிறான். [2]அக்கரையைக்கடந்தபின் ஓடத்தைவிட்டுவிட்டு மமதையின்றிச் செல்லவேண்டும். முந்திய விதியில் ரதத்தையும் பதாதியையும் (உதாரணமாக) நன்கு உபதேசித்தேன். (ஞானம் உண்டானபிறகும் ஆசாரியனாகிற) தெப்பத்தில் ஸ்நேஹத்தால் மதிமயக்கமுள்ளவன் தெப்பக்காரன்போல மமதையால் கவரப்பட்டு அதிலேயே சுழலுவான். [3]ஓடத்தில் ஏறிக்கொண்டு பூமியில் ஸஞ்சரிக்கமுடியாது. அவ்வாறே, ரதத்தின்மீது ஏறிக்கொண்டு ஜலத்தில் ஸஞ்சரிக்கமுடியாது. இவ்விதம் அந்தஅந்த ஆச்ரமத்திற்குரிய கர்மத்தைச் செய்யவேண்டுமென்று தெரிந்துகொள்ளுங்கள். உலகத்தில் எவ்விதம் கர்மம் செய்யப்பட்டதோ அவ்விதம் அது பயனைத் தரும். எது கந்தமும் ரஸமும் ரூபமும் ஸ்பரிசமும் சப்தமும் இல்லாததும், மனத்தாலும் புத்தியாலும் அறியமுடியாததுமாக இருக்கிறதோ அதைப் பிரதானமென்று சொல்லுகிறார்கள். அந்தப் பிரதானமே அவ்யக்தமென்று சொல்லப்படுகிறது. அவ்யக்தத்தின்குணம் மஹத்தத்வம். பிரதானத்தின்கார்யமான மஹத்தத்துவத்தின்குணம் அஹங்காரம். அஹங்காரத்திலிருந்து மஹாபூதங்களாகச் செய்யப்பட்ட குணம் உண்டாயிற்று. தனிமையாயுள்ள (சப்தமுதலான)விஷயங்களே பூதங்களின் குணங்களாகக் கருதப்படுகின்றன. அவ்யக்தமானது காரணமாகவும் காரியமாகவும் இருப்பதுபோல் மஹத்தத்து

1. ஆசாரியனுள்ளவன் ஸம்ஸாரத்தைத் தாண்டுவான் என்பது கருத்து.
2. ஞானமுண்டானபின் குருவை விட்டுவிடவேண்டும் என்பது கருத்து.
3. 'கர்மாதிகாரி யோகத்தையும் யோகாதிகாரி கர்மத்தையும் செய்யக்கூடாதென்பது கருத்து' என்பது பழைய உரை.

வமும் காரணமாகவும் காரியமாகவும் இருக்கிறதென்று நமக்குக் கேள்வி. விதைபோலிருக்கும் அஹங்காரத்திலிருந்தும் அடிக்கடி ஸிருஷ்டி உண்டாகிறது. ஐந்து மஹாபூதங்களும் காரணங்களாகவும் காரியங்களாகவும் இருக்கின்றன. [1]ஐந்துபூதங்களின் விசேஷகுணங்களும் காரணங்களாகவும் காரியங்களாகவும் இருக்கின்றனவென்று சொல்லுகிறார்கள். அவைகளின் விசேஷத்தைத் தெரிந்துகொள்ளுங்கள். அவற்றுள் ஆகாயமானது ஒரு குணமுள்ளது; வாயுவானது இரண்டு குணங்களுள்ளதென்று சொல்லப்படுகிறது; தேஜஸானது மூன்று குணங்களுள்ளதென்று சொல்லுகின்றனர்; ஜலம் நான்கு குணமுள்ளது; சரங்களும்அசரங்களும்நிறைந்ததும் எல்லாப்பிராணிகளையும் உண்டுபண்ணுவதும் புண்ணிய பாவங்களைக்காண்பிப்பதுமான பூமிதேவியானது ஐந்து குணங்களுள்ளதாக அறியத்தக்கது. பிராம்மணஶ்ரேஷ்டர்களே ! சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், ஐந்தாவதான கந்தம் இந்த ஐந்தும் பூமியின் குணங்களாக அறியத்தக்கவை. கந்தமானது எப்பொழுதும் பூமியைச் சார்ந்தது. (அந்தக்)கந்தமும் பலவிதமாகக் கருதப்பட்டிருக்கிறது. அந்தக்கந்தத்தில் அனேக குணங்களை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். பூமியின் குணமான கந்தமானது, [2]இஷ்டம், அனிஷ்டம், மதுரம், அம்லம், கடு, நிர்ஹாரி, ஸம்ஹதம், ஸ்நிக்தம், ரூக்ஷம், விசதம் என்று இப்படிப் பத்துவிதமென்று அறியத்தக்கது. சப்தமும் ஸ்பரிசமும் ரூபமும் த்ரவமும் ஜலத்தின் குணங்களாகக் கருதப்பட்டவை. ரஸத்தின் ஞானத்தைச் சொல்லுகிறேன். ரஸமோ பலவிதமாகக் கருதப்பட்டிருக்கிறது. ஜலத்தின் குணமான ரஸமானது இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, கசப்பு, துவர்ப்பு, உவர்ப்பு என்று ஆறுவிதமான விஸ்தாரமுள்ளதென்று கருதப்பட்டிருக்கிறது. தேஜஸானது சப்தம், ஸ்பரிசம், ரூபம் என்று மூன்று குணங்களுள்ளதாகச் சொல்லப்படுகிறது. ரூபமானது தேஜஸின் குணம். (அந்த) ரூபமும் பலவிதமாகக் கருதப்பட்டிருக்கிறது. தேஜஸின் குணமான ரூபமானது வெண்மை, கருமை, செம்மை, நீலம், மஞ்சள்நிறம்கலந்த சிவப்பு, குட்டை, நீளம், இளைத்தது, பருத்தது, நாற்கோணமுள்ளது, அணு, வட்டம் என்று பன்

1. 'சித்தம்' என்று பாடங்கொண்டு, 'ஐந்து பூதங்களின் (சப்தமுதலான) விசேஷகுணங்களும் (அனுபவகாலத்தில் காரியங்களாக இருந்தாலும்) சித்தத்தில் (வாஸனாரூபமான) காரணங்களாகவும் இருந்துகொண்டு காரியத்தைச் செய்கின்றன' என்பது பழைய உரை.

2. விருப்பமானது, வெறுப்பானது, இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, அதிவாஸனை, ஸ்திரவாஸனை, நெய்ப்புள்ளது, நெடி, விட்டுவிட்டுக் கமழ்வது.

னிரண்டு வகையுள்ளதாக அறியத்தக்கதென்று பிராயமுதிர்ந்தவர்களும் தர்மத்தை அறிந்தவர்களும் ஸத்யவாதிகளுமான பிராம்மணர்கள் சொல்லுகின்றனர். வாயுவானது சப்தம், ஸ்பர்சம் என்று இரண்டு குணங்களுள்ளதாகச் சொல்லப்படுகிறது. ஸ்பர்சமானது வாயுவைச் சார்ந்தகுணமாகும். ஸ்பர்சமும் அநேகவிதமாகக் கருதப்பட்டிருக்கிறது. வாயுவின் குணமான ஸ்பரிசமானது உஷ்ணம், சீதம், ஸுகம், துக்கம், ஸ்நிக்தம், விசதம், கடினம், சிக்கணம், ஸ்லக்ஷ்ணம், பிச்சிலம், தாருணம், மிருது என இப்படிப் பன்னிரண்டு விதமுள்ளதென்று ஸித்திபெற்றவர்களும் மந்திரத்தை அறிந்தவர்களும் தத்வத்தைக் கண்டவர்களுமான பிராம்மணர்கள் விதிப்படி சொல்லுகின்றனர். அவற்றுள், ஆகாயமானது சப்தமென்று கருதப்பட்ட ஓரே குணமுள்ளது. அந்தச் சப்தத்தினுடைய பலகுணங்களை விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். ஆகாயத்திலிருந்து உண்டான சப்தமானது ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், இதற்குமேலுள்ளதாக அறியத்தகுந்த நிஷாதம், தைவதம், இஷ்டம், அனிஷ்டம், ஸம்ஹதம், பிரதிபானவான் என்று இப்படி அநேகவிதமுள்ளதாக அறியத்தகுந்தது. ஆகாயமானது உத்தமமான பூதம். அஹங்காரம் அதனிலும் மேலானது. அஹங்காரத்தைக்காட்டிலும் புத்தி மேலானது. அந்தப் புத்தியைக்காட்டிலும் ஆத்மா மேலானது. அந்த ஆத்மாவைக்காட்டிலும் அவ்யக்தம் மேலானது. அவ்யக்தத்தைக் காட்டிலும் பிராணிகளுடைய உயர்வுஇழிவுகளை அறிந்தவனும்எல்லாக் தர்மங்களின் விதியையும் அறிந்தவனும் எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாயிருக்கும் ஸ்வரூபமுள்ளவனுமான புருஷன் மேலானவன். அவனை அடைந்தவன் அழிவற்றவனாக இருக்கும் தன்மையை அடைவான்.

---

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)

(கண்ணபிரான் கதையை முடித்துத் துவாரகைசெல்ல விரும்பியதும், அர்ஜுனன் தர்மபுத்திரரிடம் விடைபெற்றுச் செல்லலாமென்றதும்.)

இந்த ஐந்து பூதங்களுக்கும் மனம் ஈச்வரன், பூதங்களுடைய ஸ்ருஷ்டியிலும் ஸம்ஹாரத்திலும் மனமே காரணம். மனமானது எப்பொழுதும் மஹாபூதங்களுக்கு அதிஷ்டாதாவாகவும் ஜீவனாகவும்

இருக்கிறது. (அதனுடைய) தலைமையைப் புத்தி சொல்லுகிறது. ஸாரதியானவன் நல்லகுதிரைகளை நடத்துவதைப்போல மனமானது இந்திரியங்களை நடத்துகிறது. இந்திரியங்களும் மனமும் புத்தியும் எப்பொழுதும் க்ஷேத்ரஜ்ஞனிடத்தில் சேர்ந்திருக்கின்றன. [1]சரீராபிமானியான அந்த ஜீவன் (இந்திரியங்களாகிற) பெரியகுதிரைகளோடு கூடினதும் (ஸாரதியாக இருக்கும்) புத்தியினால் நடத்தப்பட்டது மான (சரீரமாகிற) ரதத்தில் ஏறிக்கொண்டு எங்கும் அலைகிறான். [2]இந்திரியக்கூட்டத்துடன் கூடினதும் மனமாகிற ஸாரதியுள்ளதும் புத்தியாகிற சாட்டையுள்ளதுமான (சரீரமாகிற) ரதமானது எப்பொழுதும் பெரிதாகவும் பிரம்மமயமாகவும் ஆகிறது. எந்த வித்வான் இவ்விதம் எப்பொழுதும் பிரம்மமயமான ரதத்தை அறிகிறானோ அந்தப் பண்டிதன் எல்லா உலகங்களிலும் மோஹத்தை அடையமாட்டான். அவ்யக்தம் முதல் (சப்தமுதலான) விசேஷம் வரையிலுள்ள பதார்த்தங்களுள்ளதும், ஸ்தாவர ஜங்கமங்களுடன் கூடியதும், ஸூர்ய சந்திரர்களின் காந்தியால் பிரகாசிப்பதும், கிரஹங்களாலும் நக்ஷத்திரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், நதிகள் பர்வதங்கள் இவற்றின் கூட்டங்களால் எங்கும் அலங்கரிக்கப்பட்டதும், பலவகையான தீர்த்தங்களால் எப்பொழுதும் அலங்கரிக்கப்பட்டதும், எல்லாப்பிராணிகளாலும் ஜயிக்கப்படாததும், எல்லாப்பிராணிகளுக்கும் கதியும், நித்யமுமான இந்தப் பிரம்மமாகிறவனத்தில் க்ஷேத்ரஜ்ஞன் ஸஞ்சரிக்கிறான். இவ்வுலகிலுள்ள ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பிராணிகளே முந்தி லயமடைகின்றன. பிறகு, பூதங்களின் குணங்கள் லயிக்கின்றன. குணங்களுக்குப் பிறகு ஐந்துபூதங்கள் லயிக்கின்றன. இது பூதங்களின் கௌரவம். தேவர்கள், மனிதர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், அஸுரர்கள், ராக்ஷஸர்கள் ஆகிய எல்லாரும் இயற்கையாக உண்டானவர்கள்; (யாக முதலான) கர்மங்களாலும் (பிரம்மா முதலான) காரணங்களாலும் உண்டாகவில்லை. பிராம்மணர்களே, இவ்வுலகில் எல்லாவற்றையும் படைப்பவர்களான இந்த ஸ்ருஷ்டிகர்த்தர்களாக அடிக்கடி ஜனிக்கின்றனர். அவைகளிலிருந்து உண்டானவர்கள் அந்த ஐந்து மஹாபூதங்களிலேயே, அலைகள் ஸமுத்திரத்தில் லயிப்பதுபோலக் காலம் தவறாமல் லயிக்கின்றனர். உலகங்களைப் படைக்

1. 'சரீரத்தில் அபிமானமுள்ளவன் இஷ்டப்படி இந்திரியங்களை விஷயங்களில் செலுத்தி அலைகிறான்' என்பது கருத்து.

2 'மனத்தாலும் புத்தியாலும் இந்திரியங்களை அடக்கினவன் பிரம்மஜ்ஞானியாகிறான்' என்பது கருத்து.

கும் பூதங்களைக்காட்டிலும் எல்லா மஹாபூதங்களும் மேலானவை. முக்தனானவன் ஐந்து பூதங்களையும்காட்டிலும் மேலான கதியை அடைவான். பிரபுவான பிரஜாபதியானவர் இவற்றையெல்லாம் மனத்தினாலேயே படைத்தார். அவ்வாறே, ரிஷிகள் தவத்தால் தேவர்களை அடைந்தார்கள். இவ்வுலகில் ஸங்கல்பத்தின் கிரமத்தால் கனிகளையும் கிழங்குகளையும் புஜிப்பவர்களும் ஸமாதியுள்ளவர்களுமான ஸித்தர்கள் தவத்தால் மூவுலகங்களையும் பார்க்கின்றனர். வியாதியைப் போக்கக்கூடிய ஔஷதங்களும் பலவிதமான வித்தைகளும் எல்லாம் தவத்தினாலேயே நன்கு ஸித்திக்கின்றன. தவமானது முக்யஸாதனமன்றோ? அடையமுடியாததும் கற்கமுடியாததும் அவமதிக்க முடியாததும் நிவிர்த்திக்க முடியாததுமான எல்லாம் தவத்தினால் ஸித்திக்கின்றன. தவமானது (ஒருவராலும்) மீறமுடியாததன்றோ? கள்ளைக்குடித்தவனும் பிராம்மணனைக் கொன்றவனும் திருடனும் கர்ப்பத்தை அழித்தவனும் குருவின் மனைவியைப் புணர்ந்தவனும், நன்கு செய்யப்பட்ட தவத்தினாலேயே அந்த அந்தப் பாபத்தினின்றும் விடப்படுகின்றனர். மனிதர்களும் பித்ருக்களும் தேவர்களும் பசுக்களும் மிருகங்களும் பறவைகளும் மற்றுமுள்ள ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமான பிராணிகளும் எப்பொழுதும் தவத்தை முக்யமாகக் கொண்டவர்கள்; எப்பொழுதும் தவத்தால் ஸித்திபெறுகின்றனர். அவ்வாறே, தேவர்களும் தவத்தால் பெரும்பாக்யமுள்ளவர்களாகி ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். பயனில் விருப்பங்கொண்டு அஹங்காரத்துடன் சோம்பலின்றிக் கர்மங்களைச் செய்பவர்கள் பிரம்மதேவரின் அருகில் (வஸிப்பார்கள்.) சுத்தமான தியானயோகத்தால் மமதையும் அஹங்காரமுமற்ற மஹாத்மாக்கள் பெரிதும் சிறந்ததுமான உலகத்தை அடைகின்றனர். எப்பொழுதும் தியானயோகத்தை அடைந்து தெளிந்த புத்தியுள்ளவர்களும் ஆத்மாவை நன்கு அறிந்தவர்களுமான புருஷர்கள் ஸுகங்களின் விருத்திக்குக் காரணமான [1] அவ்யக்தத்தை அடைகின்றனர். இவ்வுலகில் மமதையும் அஹங்காரமுமற்றவர்களும் தியானயோகம் பூர்த்தியாகாமல் மரித்தவர்களுமான மனிதர்கள் மஹான்களுடைய உத்தமலோகமான அவ்யக்தத்தை அடைகிறார்கள். அவ்யக்தத்திலிருந்தே உண்டானவர்கள் காலத்தை அறிந்தவர்களும் தமஸாலும் ரஜஸாலும் விடப்பட்டவர்களுமாகித் தனிமையான ஸத்வத்தைஅடைந்து மீண்டும்(அதனையே) அடைகின்றனர். எல்லாப்பாவங்களினின்றும் விடப்பட்டவனும் சுத்

1. 'பூர்ணமான ஆநந்தத்தை' என்பது பழைய உரை.

தனுமாயிருப்பவன் எல்லாவற்றையும் விடுவான். அவனை க்ஷேத்ரஜ்ஞனென்று தெரிந்துகொள்ளவேண்டும். எவன் அவனை அறிகிறானோ அவன் வேதத்தை அறிந்தவனாகிறான். முனியானவன் மனத்தால் ஞானத்தை அடைந்து அடக்கத்துடன் இருக்கவேண்டும். 1(எவன்) எதைத் தியானம்செய்கிறானோ (அவன்) அவசியம் அதுவாகிறான். இது ஸநாதனமான ரஹஸ்யம். அவ்யக்தமுதல் விசேஷம் வரையிலுள்ளது அவித்தையால் ஏற்பட்டதென்று கருதப்பட்டிருக்கிறது. அவ்வாறே, ஞானத்தைக் குணங்களால் ஏற்பட்டதாகத் தெரிந்து கொள்ளுங்கள். ('என்னுடையது' என்ற பொருளுள்ள) 'மம' என்னும் இரண்டு அக்ஷரங்கள் ஸம்ஸாரத்திற்குக் காரணமும் ('என்னுடையதன்று' என்ற பொருளுள்ள) 'நமம' என்னும் மூன்று அக்ஷரங்களும் சாஸ்வதமான பிரம்மத்தை அடைவதற்குக் காரணமும் ஆகின்றன. சிலமனிதர்கள் புத்திக்குறைவால் கர்மாவைப் புகழ்கின்றனர். மஹாத்மாக்களான பெரியோர்கள் கர்மாவைப் புகழ்கிறதில்லை. ஜீவனானவன் கர்மாவினால் 2பதினாறினாலாகிய ஸ்வரூபமுள்ள சரீரமுள்ளவனாகிப் பிறக்கிறான். அந்தக் கர்மங்களால் அடையத்தக்கவனும் தேவர் முதலானவர்களுக்கு அர்ப்பணம்செய்து மிச்சத்தைப் புஜிப்பவனுமான புருஷனை வித்தை அடைகிறது. ஆகையால், கரையைக் கண்டவர்கள் கர்மங்களில் ஆசைப்படுகிறதில்லை. 'இந்தப் புருஷன் வித்யாமயனே; கர்மமயனல்லன்' என்று கருதப்பட்டிருக்கிறான். எவன் இவ்விதம் மரணமற்றவனும் நித்யனும் அறியமுடியாதவனும் எக்காலத்திலும் குறையாதவனும் சித்தத்தை வசப்படுத்தினவனும் (ஒன்றிலும்) ஸம்பந்தப்படாதவனுமான ஆத்மாவைத்தெரிந்துகொள்ளுகிறானோ அவனுக்கு மரணமில்லை. வேறு பிரமாணங்களால் அறியப்படாதவரும் செய்யப்படாதவரும் நித்யரும் கூடஸ்தரும் அறிய முடியாதவரும் ஈஸ்வரனையும் ஸம்ஹரிப்பவருமான ஆத்மாவை எவன் இவ்விதம் அடைகிறானோ அவன் பின்வரும் காரணங்களால், அறிய முடியாதவனும் மரணமற்றவனும் நித்யனுமாகிறான். (மைத்ரி முதலான) எல்லா ஸம்ஸ்காரங்களையும் (சித்தத்திற்கு) உறுதியாகச் செய்துகொண்டு சித்தத்தை ஹ்ருதயத்தில் அடக்கியிருப்பவன் சுபமும் தனக்கு மேலானதில்லாததுமான அந்தப்பிரம்மத்தை அறிகிறான்; சித்தம் தெளிந்தால் சாந்தியை நன்கு அடைவான். ஸ்வப்னத்திற் போலிருப்பது சித்தம் தெளிந்திருப்பதற்கு லக்ஷணம். சித்

1. வேறு பாடம்.
2. 'பஞ்சமஹாபூதங்களும் பதினொருவிகாரங்களும்' என்பது பழைய உரை.

தம் தெளிந்திருப்பது ஞானத்தில் நிலைபெற்ற முக்தர்களின் வழி. அவர்கள் மாறுதலால் உண்டாகும் எல்லாப் பதார்த்தங்களையும் பார்க்கிறார்கள். இது விரக்தர்களுக்குக் கதி; இது ஸநாதனமான தர்மம்; இது ஞானிகளுக்கு அடையக்கூடியது; இது இகழப்படாத நடை. எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாக இருப்பவனும் வைராக்யமுள்ளவனும் விருப்பமற்றவனும் எங்கும் ஸமமான புத்தியுள்ளவனுமாக இருப்பவனால் இந்தக்கதியானது அடையத்தக்கது. சிறந்த பிரம்மரிஷிகளே! நான் இவற்றையெல்லாம் உங்களுக்குச் சொன்னேன். இவ்விதம் சீக்கிரம் செய்யுங்கள். அதனால் ஸித்தியை அடைவீர்கள்' என்று சொன்னார். குருவானபிரம்மாவினால் இவ்விதம் சொல்லப்பட்ட மஹாத்மாக்களான அந்த முனிவர்கள் அவ்வாறே செய்து அதனால் உத்தமமான உலகத்தை அடைந்தார்கள். சிறந்த பாக்கியமுள்ளவனே! நீயும் என்னால்சொல்லப்பட்ட பிரம்மாவினுடையஇந்த வார்த்தையை நன்றாகச் செய். சுத்தமான சித்தமுள்ளவனே! அதனால் ஸித்தியை அடைவாய்' என்று சொன்னார். குந்தியின் மைந்தனே! குருவினால் உத்தமமான தர்மத்தைப்பற்றி இவ்விதம் சொல்லப்பட்ட அந்தச் சிஷ்யன் எல்லாவற்றையும் செய்தான்; அதனால் மோக்ஷத்தைஅடைந்தான். குருகுலப்ரேஷ்டனே!'கிருதகிருத்யனான அந்தச் சிஷ்யன், அப்பொழுது, எந்தப்பதத்தை அடைந்தவன் துயரப்படமாட்டானோ அந்தப்பதத்தை அடைந்தான்' என்று சொன்னார்.

அர்ஜுனன், 'ஜநார்த்தனரே! அந்த அந்தணர் யார்? சிஷ்யன் யார்? பிரபுவே! இதை நான் கேட்கக்கூடுமானால் எனக்கு உண்மையாகச் சொல்லும்' என்று வினவினான். வாஸுதேவர், 'மிக்க புஜபலமுள்ளவனே! நான்தான் குரு; என்னுடைய மனத்தைச் சிஷ்யனாகத் தெரிந்துகொள். தனஞ்சய! உன்னிடத்திலுள்ள பிரியத்தினால் ரஹஸ்யமான இதனை உனக்குச் சொன்னேன். குருகுல ப்ரேஷ்ட! நல்ல விரதங்களுள்ளவனே! உனக்கு என்னிடத்தில் எப்பொழுதும் பிரியம் இருக்குமானால் நீ ஆத்மாவைப்பற்றிய இந்தத் தர்மத்தைக் கேட்டு நன்றாக அனுஷ்டானம்செய். பகைவரை அழிப்பவனே! இந்தத் தர்மத்தை நன்கு அனுஷ்டித்தால் அதனால் நீ எல்லாப் பாபங்களும்தொலைந்து சுத்தமான மோக்ஷத்தைஅடைவாய். சிறந்த கைகளுள்ளவனே! முந்தியும், யுத்தம் செய்யும் தருணம்நெருங்கியபொழுது, இதனையே நான் உனக்குச் சொன்னேன். ஆகையால், இதில் மனத்தைச் செலுத்து. பரதஸ்ரேஷ்ட! பல்குன! பிரபுவான (என்னு

டைய)பிதாவை நான் பார்த்துப் பலநாளாயின. உன்னுடைய அனுமதியின்மேல் அவரை நான் பார்க்கவிரும்புகிறேன்' என்று சொன்னார். தனஞ்சயன், இவ்வாறு வார்த்தையைச் சொன்ன கிருஷ்ணனைப் பார்த்து, 'எல்லாருக்கும் ஈஸ்வரரான நீர் இஷ்டப்படிசெய்யும். எங்களைக் காப்பாற்றும். எல்லா உலகங்களின் உருவமுமாயிருப்பவரே! நாராயணரே! பரந்தபரே! உமக்கு நமஸ்காரம். மனம் சுத்தமாக இராமையினால் தவம்செய்ய முடியாது. அஜ்ஞானத்தினால் கர்மம் கெடுக்கப்பட்டிருக்கிறது. பொருளின் தோஷத்தால் தானமும் பயனற்றதாக இருக்கிறது. ஆகையால், கலியில் (உம்முடைய) பெயரைத் தியானம்செய்யவேண்டும். வாஸுதேவரே! உமக்குநமஸ்காரம். உமக்கு (துவாரகைக்குச்) செல்ல எண்ணமிருக்குமானால், இப்பொழுது ஹஸ்தினாபுரம் செல்வோம். அங்கு தர்மாத்மாவும் அரசருமான யுதிஷ்டிரரிடம் சென்று அவரிடம் அனுமதிபெற்றுக்கொண்டு நீர் உம்முடைய நகரத்திற்குப் போகலாம்' என்று மறுமொழி கூறினான்.

ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(கிருஷ்ணார்ஜுனர்கள் ஹஸ்தினாபுரத்திற்குச் செல்லுகையில் அர்ஜுனன் கோவிந்தரைப் புகழ்ந்து அவருடைய உண்மையைத்தானறிந்ததை வியாஸர்முதலியோருக்குக் கூறியதும், இருவரும் நகர் சென்று த்ருதராஷ்டிரன்முதலியோரை வணங்கிய பின் கண்ணபிரான் யுதிஷ்டிரர் முதலியோரிடம் விடைபெற்று ஸுபத்ரையுடனும் ஸாத்யகியுடனும் துவாரகைக்குப் புறப்பட்டதும்.)**

பிறகு, வாஸுதேவர் தாருகனை நோக்கி, 'ரதத்தை ஸித்தம் செய்' என்று கட்டளையிட்டார். தாருகனும் ஒரு முகூர்த்தத்திற்குள், 'ஸித்தமாகவேயிருக்கிறது' என்று தெரிவித்தான். அவ்வாறே, அர்ஜுனன், ஸைனிகர்களை நோக்கி, 'ஆயத்தர்களாக இருங்கள்; ஹஸ்தினாபுரம் போவோம்' என்று உத்தரவு செய்தான். அரசரே! இவ்வாறு சொல்லப்பட்ட அந்த ஸைனிகர்கள் ஸன்னத்தர்களாகி அளவற்ற தேஜஸுள்ள பார்த்தனிடம், 'ஸித்தமாயிருக்கிறோம்' என்று தெரிவித்தனர். மன்னரே! பிறகு, அந்தக் கண்ணபிரானும் அர்ஜுனனும் தேரில் ஏறிக்கொண்டு பிரியத்துடன் விசித்ரமான கதைகளைப் பேசிக்

கொண்டு சென்றார்கள். பரதர்களுள் மிகச் சிறந்தவரே! மிக்க தேஜஸ்ஸுள்ள அர்ஜுனன் ரதத்திலிருக்கும் கிருஷ்ணனை நோக்கி மறுபடியுமே பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானான்.

'விருஷ்ணிகுலத்தைக் காப்பவரே! யுதிஷ்டிரராஜர் உம்முடைய அனுக்ரஹத்தால் பகைவர்களைக்கொன்று வெற்றிபெற்றுப் பகைவரற்ற ராஜ்யத்தை அடைந்தார். மதுஸூதனரே! பாண்டவர்கள் உம்மால் நாதனுள்ளவர்களானார்கள். நாங்கள் உம்மைத் தெப்பமாக அடைந்து கௌரவர்களாகிற ஸமுத்திரத்தைத் தாண்டினோம். பக்தர்களும் (உம்மை) அடுத்தவர்களுமான எங்களை இவ்வுலகிலும் பரலோகத்திலும் காப்பாற்றும், விச்வகர்மாவே! விச்வாத்மாவே! விச்வஸத்தமரே! உமக்கு நமஸ்காரம். நான் எவ்விதம் உமது ஸ்வரூபமாக எண்ணப்பட்டேனோ அவ்விதம் உம்மை நான் அறிகிறேன். மதுஸூதனரே! அக்னி எப்பொழுதும் உம்முடைய தேஜஸிலிருந்து உண்டாகிறான். பிரபுவே! உம்முடைய இச்சையானது லீலாமயமாகவும் ஆகாயமும் பூமியும் உம்முடைய மாயையாகவும் இருக்கின்றன. ஸ்தாவர ஜங்கமஸ்வரூபமான இவ்வுலகமெல்லாம் உம்மிடத்தில் இருக்கிறது. நீரே நான்குவிதமான பிராணிகளின் ஸமூகத்தையும் பூமியையும் அந்தரிக்ஷத்தையும் ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் முழுதும் படைக்கிறீர். மாசற்ற நிலவானது உம்முடைய நகைப்பாகவும் ருதுக்கள் உம்முடைய இந்திரியங்களாகவும் எப்பொழுதும் சென்றுகொண்டிருக்கும்வாயுவானது பிராணனாகவும் ஸநாதனமான மிருத்யுவானது கோபமாகவும் இருக்கின்றன. சிறந்த புத்தியுள்ளவரே! உம்மிடத்திலும் (உம்முடைய) அனுக்கிரஹத்திலும் தாமரைமலரைக் கையில் கொண்ட ஸ்ரீதேவியானவள் எப்பொழுதும் வஸிக்கிறாள். உம்மிடத்தில் பிரீதியும் ஸந்தோஷமும் தைரியமும் பொறுமையும் புத்தியும் காந்தியும் சராசரங்களும் இருக்கின்றன. மாசற்றவரே! இவ்வுலகில் நீரே பிரளயகாலங்களில் ஸம்ஹாரம் செய்பவராகச் சொல்லப்படுகிறீர். மிகவும் நீண்டகாலத்தாலும் உம்முடையகுணங்களையும் சிறந்ததான ஸ்வரூபத்தையும் சொல்ல என்னால் முடியாது. தாமரைமலர் போன்ற கண்களுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். (ஒருவராலும்) சிறிதும் ஜயிக்க முடியாதவரே! நாரதர், தேவலர், வியாஸர், பீஷ்மர் இவர்களிடமிருந்து நான் உம்மைத் தெரிந்துகொண்டேன். எல்லாம் உம்மிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. நீர் ஒருவரே ஜனங்களுக்கு ஈச்வரர். குற்றமற்றவரே! ஜனார்த்தனரே! அனுக்கிரஹத்துடன்நீர்சொன்ன

இவற்றையெல்லாம் நான் நன்றாக அனுஷ்டிக்கிறேன். எங்களுக்குப் பிரியத்தைச்செய்யவிரும்பி மிக்க ஆச்சரியமான இந்தக்காரியத்தையும் செய்தீர். குருகுலத்தில் பிறந்தவனும் திருதராஷ்டிர குமாரனுமான துர்யோதனன் போரில் கொல்லப்பட்டான். உம்மால் எரிக்கப்பட்ட அந்தச் சேனையை நான் யுத்தத்தில் ஜயித்தேன். நீர் செய்த உதவியினால் நான் வெற்றிபெற்றேன். உம்முடைய புத்தியின் பராக்கிரமங்களால் யுத்தத்தில் துர்யோதனன், கர்ணன், பாவியான ஸைந்தவன், பூரிஸ்ரவஸ் இவர்களைக் கொல்லும்உபாயமானது உள்ளபடி காட்டப்பட்டது. ஆகையால், நீரே ஆலோசித்து எப்படிச் செய்தால் நன்மையாகுமோ அப்படிச் செய்யும். தேவகிகுமாரரே! நானும், பிரீதியுள்ளவரான நீர் சொல்லியதைச் செய்கிறேன். எனக்கு இதில் ஆலோசனை இல்லை. தர்மத்தை அறிந்தவரே! குற்றமற்றவரே! நான் தர்மாத்மாவான யுதிஷ்டிரராஜரிடம் சென்று நீர் போகவேண்டிய விஷயத்தைப்பற்றித் தெரிவிக்கிறேன். பிரபுவே! நீர் துவாரகைக்குப் போதலை நான் ஒப்புக்கொண்டேன். ஜனார்த்தனரே! நீர் சீக்கிரமாகவே என்னுடைய மாதுலரான வஸுதேவரையும் (ஒருவராலும்) அவமதிக்கமுடியாத பலராமரையும் மற்றுமுள்ள விருஷ்ணிஸ்ரேஷ்டர்களையும் பார்ப்பீர்' என்று சொன்னான். அவ்விருவரும் இவ்விதம் பேசிக்கொண்டு ஹஸ்தினாபுரம் சென்று மிக்க களிப்புற்ற மனிதர்கள் நிறைந்த அந்தப்பட்டணத்தில் பிரவேசித்தனர். மஹாராஜரே! அவ்விருவர்களும் இந்திரனுடைய வீட்டுக்கொப்பான திருதராஷ்டிரனுடைய வீட்டுக்குச் சென்று ஜனேஸ்வரனை திருதராஷ்டிரனையும் சிறந்த புத்தியுள்ள விதுரரையும் அரசரான யுதிஷ்டிரரையும் (ஒருவராலும்) அவமதிக்கமுடியாத பீமஸேனனையும் மாத்ரீபுத்ரர்களான நகுல ஸஹதேவர்களையும் திருதராஷ்டிரனுடைய ஸமீபத்தில் உட்கார்ந்திருப்பவனும் தோல்வியடையாதவனுமான யுயுத்ஸுவையும் அறிவிற் சிறந்த காந்தாரியையும் குந்தியையும் 1 கோபஸ்வபாவமுள்ள திரௌபதியையும் ஸுபத்திரைமுதலான பரதர்களுடைய மனைவிகளெல்லாரையும் காந்தாரியின்தாதியர்களான எல்லா ஸ்திரீகளையும் பார்த்தார்கள். பிறகு, பகைவர்களை அடக்குபவர்களான அவ்விருவரும் திருதராஷ்டிரராஜனிடம் சென்று தங்கள் பெயர்களைத் தெரிவித்து அவனுடைய பாதங்களைத் தொட்டு வணங்கினார்கள். மஹாத்மாக்களாகிய அவ்விருவரும், அவ்வாறே காந்தாரி, குந்தி, தர்மபுத்திரர், பீமஸேனன் இவர்களுடைய பாதங்களையும் தொட்டு

1 'ஹாமினீம்' என்பது மூலம்.

வணங்கினார்கள். அவ்விருவரும் விதுரரைக் கையைப பிடித்து க்ஷேமத்தைப் பூர்ணமாக வினவி, மஹாத்மாவும் வேஸ்யாபுத்திரனும் மஹாரதனுமான யுயுத்ஸுவைத்தழுவி, பிறகு, அவர்களுடன் பிராயமுதிர்ந்தவனான திருதராஷ்டிரராஜனைச் சூழ்ந்து உட்கார்ந்தனர். பிறகு, மேதாவியான திருதராஷ்டிரமஹாராஜன், இரவு வந்தவுடன், கிருஷ்ணனையும் கௌரவஸ்ரேஷ்டர்களையும் வீட்டிற்கு அனுப்பினான். அரசனால் அனுமதிகொடுக்கப்பட்ட அவர்கள் தம் தம் வீட்டுக்குச் சென்றார்கள். வீர்யமுள்ளவரான கோவிந்தரோ, அர்ஜுனனுடைய வீட்டுக்கே சென்றார். மேதாவியான அவர் அவ்விடத்தில் எல்லா இஷ்டங்களாலும் முறைப்படி மரியாதையுடன் பூஜிக்கப்பெற்று அர்ஜுனனுடன் நித்திரைசெய்தார். மிகவும் பூஜிக்கப்பட்டவர்களான அவ்விருவரும், இரவு சென்று விடியற்காலமானவுடன், காலைக்கடனை முடித்துக்கொண்டு, மிக்க பலமுள்ளவரான தர்மபுத்திரர் மந்திரிகளுடன்வீற்றிருக்கப்பெற்றதான அவருடைய வீட்டுக்குச் சென்றார்கள். மஹாத்மாக்களான அவ்விருவரும் மிகவும் பூஜிக்கப்பட்டதான அந்த வீட்டுக்குச் சென்று அஸ்வினீதேவர்கள் தேவராஜனைக் காண்பதுபோலத் தர்மபுத்திரரைக் கண்டார்கள். விருஷ்ணிகுலத்தில் பிறந்த கண்ணபிரானும் கௌரவஸ்ரேஷ்டனான அர்ஜுனனுமாகிய அவ்விருவரும் யுதிஷ்டிரராஜரிடம் சென்று, பிரீதியுள்ள அவரால் அனுமதிகொடுக்கப்பட்டு உட்கார்ந்தார்கள்.

பிறகு, மேதாவியும் பேசுகிறவர்களுள் சிறந்தவரும் ராஜஸ்ரேஷ்டருமான அந்த அரசர், அவ்விருவர்களையும் (ஏதோ) சொல்லவிருப்பமுள்ளவர்களாகக்கண்டு, 'யாதவர்களையும் கௌரவர்களையும் தாங்குபவர்களே! வீரர்களே! நீங்கள்(ஏதோ) சொல்ல விரும்புகிறீர்களென்று நினைக்கிறேன்; சொல்லுங்கள். உங்களுடைய விருப்பத்தையெல்லாம் சீக்கிரத்தில் செய்கிறேன்; ஆலோசிக்க வேண்டாம்' என்ற வசனத்தைச் சொன்னார். அப்பொழுது, இவ்விதம் சொல்லப்பட்டவனும் நன்றாகப் பேசுந்திறமையுள்ளவனுமான அர்ஜுனன், வணக்கத்துடன் அருகிற்சென்று தர்மபுத்திரரை நோக்கி, 'அரசரே! பிரதாபமுள்ளவரான இந்த வாஸுதேவர் இங்குவந்து நெடுங்காலமாகிவிட்டது. உம்மிடம் அனுமதிபெற்றுக்கொண்டு தந்தையைப் பார்க்க விரும்புகிறார். உமக்கு இஷ்டமிருந்தால் இந்த வீரர் உம்மால் அனுமதி கொடுக்கப்பெற்று துவாரகைக்குச் செல்லட்டும். நீர் அதற்கு உத்தரவளிக்கவேண்டும்' என்ற வாக்கியத்தைச் சொன்னான். யுதிஷ்டிரர், 'புண்டரீகாக்ஷரே! உமக்கு மங்களமுண்டாகுக.

மதுஸூதனரே! பிரபுவே! நீர் இப்பொழுது சூரனுடைய புத்திரரான வஸுதேவரைப் பார்ப்பதற்காகத் துவாரகாபுரத்திற்குச் செல்லும். சிறந்தகைகளுள்ளவரே! கேசவரே! நீர் (துவாரகைக்குச்) செல்வது எனக்கு இஷ்டம்தான். நீர் என்னுடைய மாதுலரான வஸுதேவரையும் தேவகிதேவியையும் பார்த்து நெடுங்காலமாகிவிட்டது. கௌரவத்தைக் கொடுப்பவரே! சிறந்தப்ராஜ்ஞரே! மாதுலரையும் பலதேவரையும் அடைந்து என் வார்த்தையால் தக்கபடி பூஜை செய்யும். கௌரவத்தைக் கொடுப்பவரே! என்னையும் பலிஷ்டர்களுள் சிறந்தவனான பீமஸேனனையும் அர்ஜுனனையும் ஸஹதேவனையும் நகுலனையும் எப்பொழுதும் நினையும். நீண்ட கைகளுள்ளவரே! குற்றமற்றவரே! நீர் ஆனர்த்ததேசத்து ஜனங்களையும் தந்தையையும் விருஷ்ணிகளையும் பார்த்துவிட்டு மறுபடியும் என்னுடைய அஶ்வமேதத்திற்கு வாரும். ஸாத்வதரே! நீர் பலவிதரத்தினங்களையும் தனங்களையும் உமது மனத்திற்கினிய மற்றவற்றையும் எடுத்துக் கொண்டு செல்லும். கேசவரே! வீரரே! உம்முடைய அனுக்ரஹத்தால் இந்தப் பூமிமுழுவதும் எங்களை அடைந்தது. பகைவர்களும் கொல்லப்பட்டார்கள். ஸம்ஸாரமாகிற காட்டில் ஜ்வலிக்கின்ற அக்னியை அவிக்கும் மேகமே! உமது பக்தர்களுக்கு ஸுவர்க்கமும் மோக்ஷமும் விஷயமும் அடைதற்கரியவையல்ல' என்று சொன்னார்.

குந்திபுத்திரரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர் இவ்விதம் சொல்லும்பொழுது, புருஷோத்தமரான வாஸுதேவர் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானார். 'நீண்ட கைகளுள்ளவரே! ரத்தினங்களும் எல்லாத்தனமும் எல்லாப் பூமியும் இப்பொழுது உம்முடையனவே. ஈஶ்வரரே! என்னுடைய வீட்டிலுள்ள மற்றத்திரவியத்திற்கும் எப்பொழுதும் நீரே ஈஶ்வரர்' என்று சொன்னார். பிறகு, தர்மபுத்திரரால், 'அப்படியே' என்று சொல்லிப் பூஜைசெய்யப்பட்டவரும் வீர்யமுள்ளவருமான கண்ணபிரான் அப்பொழுது தந்தையின் ஸஹோதரியான குந்தியிடம் சொல்லிக்கொண்டு, (அவளால்) விதிப்படி மரியாதை செய்யப்பட்டு (அவளை)ப்பிரதக்ஷிணம் செய்தார். பிறகு, தாமே விஷ்ணுவான அந்த வாஸுதேவர் அந்தக் குந்தியினாலும், அவ்வாறே, விதுரர் முதலான எல்லாராலும் மிகக்கொண்டாடப்பட்டுத் திவ்யமான ரதத்துடன் ஹஸ்தினபுரத்தினின்றும் வெளியில் செல்லலானார். நீண்டகைகளுள்ளவரான ஜனார்த்தனர், யுதிஷ்டிரர், தந்தையின் ஸஹோதரியான குந்தி இவர்களுடைய ஸம்மதத்தின்மேல் ஸுபத்திரையை ரதத்தில் ஏற்றிவைத்துக்கொண்டு பட்டணத்து

ஜனங்களால் சூழப்பட்டு வெளியே புறப்பட்டார். அந்த மாதவரை, சிறந்த வானரக்கொடியுள்ள அர்ஜுனனும் ஸாத்யகியும் மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களும் ஆழமான புத்தியுள்ள விதுரரும் கஜராஜனுடைய விக்ரமம் போன்ற விக்ரமமுள்ள பீமஸேனனும் பின்தொடர்ந்து சென்றார்கள். பிறகு, வீர்யமுள்ளவரான அந்த ஜனார்த்தனர் குருராஷ்டிரத்தை விருத்திசெய்பவர்களான அவர்களெல்லாரையும் விதுரரையும் திருப்பிஅனுப்பிவிட்டு, விரைவுடன், தாருகனையும் ஸாத்யகியையும் பார்த்து, 'குதிரைகளை ஓட்டுங்கள்' என்றுசொன்னார். பிறகு, பகைவர்களின் கூட்டங்களை அழிப்பவரும் சிறந்த பிரதாபமுள்ளவருமான ஜனார்த்தனர் சினிகளுள் சிறந்தவனான ஸாத்யகியுடன் இந்திரன் சத்துருக் கூட்டத்தைக் கொன்று ஸுவர்க்கம் சென்றதுபோலத் துவாரகைக்குச் சென்றார்.

---

## ஐம்பத்துமூன்றுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(வாஸுதேவர் துவாரகைக்குச் செல்லுகையில் உதங்கர் கண்டு கௌரவநாசத்துக்காகச் சபிப்பதாகச் சொல்ல, உண்மையை அவருக்குச் சொல்லத் தொடங்கியது.)

அவ்வாறு, துவாரகையை நோக்கிச் செல்லுகின்ற கிருஷ்ணனைப் பரிவாரங்களுடன் கூடினவர்களும் பகைவரை வாட்டுகின்றவர்களுமான பரதஸ்ரேஷ்டர்கள் ஆலிங்கனம்செய்து திரும்பினார்கள். அர்ஜுனன் அந்தக்கிருஷ்ணனை அடிக்கடி ஆலிங்கனம்செய்து கண்ணுக்குப் புலப்படும் வரையில் அடிக்கடி பார்த்தான். அர்ஜுனன் கோவிந்தரிடத்தில் நிலைநிறுத்தப்பட்ட பார்வையை அவரிடமிருந்து ச்ரமப்பட்டே திருப்பினான். ஜயிக்கப்படாதவரான ஸ்ரீ கண்ணபிரானும் அவ்விதம் செய்தார். மஹாத்மாவான அவர் போகும்போது உண்டான மிக்க ஆச்சரியமான பல சகுனங்களை நான் சொல்லுகிறேன்; கேளும். காற்றானது, ரதத்திற்குமுன்னால் வழியைக் கற்களும் புழுதியும் முள்ளும் அற்றதாகச் செய்துகொண்டு மிக்க வேகத்துடன் வீசிற்று. இந்திரனும், சுத்தமும் நல்ல வாஸனையுள்ளதுமான ஜலத்தையும் தேவலோகத்திலுள்ள மலர்களையும் வாஸுதேவருக்கு எதிரில் வருஷித்தான். சிறந்த கைகளுள்ள

வரான அந்த மாதவர் ஸமமாக இருக்கும் பாலைவனங்களில் போகும்போது, முனிவர்களுள் சிறந்தவரும் அளவற்ற தேஜஸுள்ளவரும் தவத்தால் ஸித்திபெற்றவரும் எல்லா உலகங்களிலும் நன்கு பிரஸித்தி பெற்றவருமான [1]உதங்கரென்னும் மஹரிஷியைக் கண்டார். தேஜஸ்வியும் விசாலமான கண்களுள்ளவருமான அந்தமாதவர் அந்த முனிவரை நன்குபூஜித்து அவராலும் பூஜிக்கப்பெற்று அப்பொழுது க்ஷேமம் விசாரித்தார். அந்தக் கண்ணபிரானால் க்ஷேமம் விசாரிக்கப்பட்டவரும் பிராம்மணஶ்ரேஷ்டருமான அந்த உதங்கர், பிறகு, மதுவைக்கொன்றவரான மாதவரை நன்கு பூஜித்து வினவலானார்.

'மாதவரே! நீர் கௌரவ பாண்டவர்களுடைய கிருஹம் சென்று அவர்களுக்கு ஸஹோதர ஸ்நேஹத்தை ஸ்திரமாக இருக்கும்படி செய்தீரா? அதனை நீர் எனக்கு விரிவாக உரைக்கவேண்டும். கேசவரே! விருஷ்ணிகளுள் சிறந்தவரே! வீரர்களும் ஸம்பந்திகளும் எப்பொழுதும் உமக்கு இஷ்டர்களுமான அவர்களுக்கு ஒற்றுமையை உண்டாக்கிவிட்டு வந்தீரா? பகைவரை வாட்டுபவரே! ஐந்து பாண்டவர்களும் திருதராஷ்டிரருடைய புத்திரர்களும் உம்முடன் கூட உலகங்களில் விளையாடுவார்களா? கேசவரே! நாதரான உம்மால் கௌரவர்கள் ஸமாதானத்தை அடைந்திருக்கும்பொழுது அந்தப் பாண்டவர்களும் அரசர்களாகி ஸுகத்தை அடைவார்களா? ஐயா! எனக்கு உம்மிடத்தில் எப்பொழுதும் எந்த எண்ணமிருந்ததோ அது உம்மால் பரதர்கள்விஷயத்தில் பயனுள்ளதாகச் செய்யப்பட்டதா?' என்றார்.

ஸ்ரீபகவான் சொல்லலானார். 'கௌரவர்களை ஸமாதானம் செய்வதற்காக நான் முந்தி முயற்சிசெய்தேன். அவர்களை ஒழுங்காக ஸமாதானப்படுத்த முடியவில்லை. அப்பொழுது, அவர்களெல்லாரும் புத்திரர்களுடனும் பந்துக்களுடனும் மரணமடைந்தார்கள். மஹரிஷியே! குற்றமற்றவரே! புத்தியினாலும் பலத்தினாலும் தெய்வத்தை மீறமுடியாது. இஃதெல்லாம் உமக்கு நன்றாகத் தெரியுமே. அவர்கள், நானும் பீஷ்மரும் விதுரரும் சொன்ன புத்தியைக் கேட்கவில்லை. அதனால், ஒருவரோடொருவர் சண்டைசெய்து யமலோகம் சென்றார்கள். ஐந்துபாண்டவர்கள்மட்டும், மித்திரர்களும் புத்திரர்களும் கொல்லப்பட்டு மிகுந்தார்கள். திருதராஷ்டிரருடைய புத்திரர்கள் எல்லாரும் புத்திரர்களுடனும் பந்துக்களுடனும் கொல்லப்பட்டார்கள்.' என்று சொன்னார். வாஸுதேவர் இவ்விதமான வார்த்

1. 'உத்தங்கர்' என்பது வேறுபாடம்.

தையைச் சொன்னவுடன், உதங்கர் மிக்க கோபங்கொண்டு கோபத்தால் மலர்ந்தகண்களுள்ளவராகி மாதவரைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார். 'வாஸுதேவரே! ஸம்பந்திகளும் பிரியர்களுமான கௌரவஶ்ரேஷ்டர்களைச் சக்தியிருந்தும் நீர் காப்பாற்றாமலிருந்ததால் நான் உம்மை நிச்சயமாகச் சபிக்கப்போகிறேன். மதுஸூதனரே! நீர் அவர்களைப் பலாத்காரமாக அடக்கித் தடுக்காமலிருந்ததால் நான் மிக்க கோபங்கொண்டு உம்மைச் சபிப்பேன். மாதவரே! நீர் திறமையுள்ளவராயிருந்தும் கபடமாக இருந்துகொண்டு ஒன்றுசேர்ந்து நாசமடையும் அந்தக்கௌரவஶ்ரேஷ்டர்களை உபேக்ஷித்தீர்' என்று சொன்னார். வாஸுதேவர், 'பிருகுகுலத்தில் பிறந்தவரே! நான் சொல்வதை விஸ்தாரமாகக் கேளும். 1.பார்க்கவரே! ஸமாதானத்தையும் ஏற்றுக்கொள்ளும். நீர் தபஸ்வியாக இருக்கிறீரல்லவா? இப்பொழுது ஆத்மவிஷயமான என்னுடைய வார்த்தையைக் கேட்டுச் சாபத்தைக் கொடும். மனிதனால் அற்பமான தவத்தைக்கொண்டு என்னை அவமதிக்கமுடியாது. தபஸ்விகளுள் சிறந்தவரே! உம்முடைய தவம் அழிந்துபோவதில் எனக்கு விருப்பமில்லை. உம்முடைய தவமானது மிகப் பெரிதாக ஜ்வலிக்கிறது. உம்மால் குருக்களும் ஸந்தோஷப்படுத்தப்பட்டார்கள். பிராம்மண ஶ்ரேஷ்டரே! நீர் இளமைமுதல் அனுஷ்டிக்கும் பிரம்மசரியத்தை நான் அறிவேன். ஆகையால், ஶ்ரமப்பட்டு ஸம்பாதித்த உம்முடைய தவம் அழிவதில் எனக்கு இஷ்டமில்லை' என்று சொன்னார்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் தம் மகிமையை உதங்கருக்குக் காட்டித் தம் சொல்லைக் கேளாமையால் துரியோதனாதியர் அழிந்தனரென்றது.)**

உதங்கர், 'கேசவரே! நீர் மேன்மைபெற்ற அத்யாத்மத்தை உண்மையாகச் சொல்லும். ஜனார்த்தனரே! (அதைக்) கேட்டு உமக்கு க்ஷேமத்தையாவது சாபத்தையாவது செய்கிறேன்' என்று சொல்ல, வாஸுதேவர் சொல்லலானார்.

'தமஸ், ரஜஸ், ஸத்வம் என்னும் குணங்கள் என்னை அடுத்திருப்பவைகளாகத் தெரிந்துகொள்ளும். நான் ஸ்ருஷ்டியையும் பரிபாலனத்தையும் பிரளயத்தையும் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று பெய

---

1 வேறு பாடம்.

ருள்ளவனாக இருந்துகொண்டு நடத்துகிறேன். ஒருஸமயம் தமோ குணத்தைஆப்ரயித்து ருத்திரனாகவும் ஸத்வகுணத்தைஆஸ்ரயித்து விஷ்ணுவாகவும் ரஜோகுணத்தை ஆஸ்ரயித்துப் பிரம்மாவாகவும் இருக்கிறேன். (இவர்களுக்குத்)தத்தமக்குரியகுணத்தைத்தவிர மற்ற இரண்டு குணங்களுமுண்டு. ப்ரணவஸ்வரூபியாயிருந்துகொண்டு சப்தமுதலானவைகளையும், முக்குணஸ்வரூபியாயிருந்துகொண்டு ஸ்தாவர ஜங்கமங்களையும் வியாபித்துக்கொண்டிருக்கிறேன். பிராம்மணரே! ருத்திரர்களையும் வஸுக்களையும் என்னிடமிருந்து உண்டானவர்களாகத் தெரிந்துகொள்ளும். எல்லாப்பிராணிகளும் என்னிடம் இருக்கின்றன என்றும் நான் எல்லாப் பிராணிகளிடத்திலும் இருக்கிறேன் என்றும் தெரிந்துகொள்ளும். இதில் உமக்கு ஸம்சயம்வேண்டாம். பிராம்மணரே! அப்படியே, எல்லா அஸுரக்கூட்டங்களையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் ராக்ஷஸர்களையும் நாகர்களையும் அப்ஸரஸுகளையும் என்னிடமிருந்து உண்டானவர்களாகத் தெரிந்துகொள்ளும். ஸத் அஸத் என்று சொல்லப்படுவதும் அவ்யக்தமும் வ்யக்தமும் அக்ஷரமும் க்ஷரமும் ஆகிய இவையெல்லாம் என் ஸ்வரூபமாக இருக்கின்றன. முனிவரே! நான்கு ஆஸ்ரமங்களுக்கும் விதிக்கப்பட்டிருக்கும் தர்மங்களும் வைதிககர்மங்களும்ஆகிய எல்லாவற்றையும் என் ஸ்வரூபமாகத் தெரிந்துகொள்ளும். அஸத்தாகவும் ஸத்தாகவுமுள்ள ஜகத்தும் ஸத்தையும்அஸத்தையும்விட மேலான அவ்யக்தமும் நானே. தேவர்களுக்குத் தேவனும் ஸனாதனனுமான [1]என்னிலும் மேலானதில்லை. பிருகுக்களுள் சிறந்தவரே! என்னைஓங்காரத்திலிருந்து உண்டான வேதங்களாகவும் யாகத்திலுள்ள யூபமாகவும் தேவர்களுக்குத் திருப்தியைஉண்டுபண்ணுகிற ஸோமமாகவும் சருவாகவும் ஹோமமாகவும் தெரிந்துகொள்ளும். பிருகுநந்தனரே! என்னை ஹோதாவாகவும் ஹவ்யமாகவும் தெரிந்துகொள்ளும். அத்வர்யுவும் கல்பத்தைச் செய்தவனும் நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்ட ஹவிஸும் நானே. பெரியயாகத்தில் உத்காதாவும், கானகோஷங்களால் என்னையே கானம்செய்கிறான். பிராம்மணரே! பிராம்மணஶ்ரேஷ்டரே! பிராயச்சித்தங்களுக்காகச் சாந்திஸூக்தங்களையும் மங்களஸூக்தங்களையும் சொல்பவர்கள் எல்லாக் கர்மஸ்வரூபியுமான என்னையே எப்பொழுதும் ஸ்தோத்திரம்செய்கிறார்கள். பிராம்மணஶ்ரேஷ்டரே! தர்மத்தை என்னுடைய மூத்தகுமாரனாகத் தெரிந்துகொள்ளும். பிராம்மணரே! எல்லாப் பிராணிகளிடத்திலும் தயை செய்வ

---

1. வேறு பாடம்.

தென்னும் தர்மமானது (என்னுடைய) பிரியமான மானஸபுத்திரன் ஸாதுக்களுள் சிறந்தவரே! நான் அந்தத் தர்மத்தை அனுஷ்டிப்பவர்களும் விட்டவர்களுமான மனிதர்களோடு பல பிறவிகளில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன். பார்க்கவரே! உலகங்களைக் காப்பதற்காகவும் தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும் அந்த அந்த வேஷங்களோடும் ரூபங்களோடும் மூவுலகங்களிலும் வஸிக்கிறேன். விஷ்ணுவும் பிரம்மாவும் இந்திரனும் உத்பத்திலயஸ்தானமும் நானே. எல்லாப் பூதவர்க்கத்தையும்படைப்பவனும் ஸம்ஹரிப்பவனும் நானே. அச்சுதனான நான், யுகமானது மாறிமாறிக்கொண்டிருக்கும்போது பிரஜைகளுக்கு ஹிதத்தைச் செய்யவிரும்பி அந்த அந்தப் பிறவிகளில் பிறந்து அதர்மத்திலிருக்கும் எல்லாருக்கும் தர்மமென்னும் அணையைக் கட்டுகிறேன். பிருகுநந்தனரே! நான் தேவஜாதியில் பிறந்திருக்கும்பொழுது தேவன்போல எல்லாவற்றையும் செய்கிறேன்; ஸம்சயமில்லை. பிருகுநந்தனரே! பார்க்கவரே! நான் கந்தர்வஜாதியில் பிறந்திருக்கும்போது கந்தர்வன்போல எல்லாக்காரியங்களையும் செய்கிறேன். நாகஜாதியில் பிறந்தபொழுது நாகன்போல இருக்கிறேன். யக்ஷஜாதியிலும் ராக்ஷஸஜாதியிலும் பிறந்தால் நான் அவர்கள்போல நடக்கிறேன். மனுஷ்யஜாதியில் இருக்கும் இப்பொழுதோ (கௌரவர்களை) நான் கெஞ்சி யாசித்தேன். அவிவேகிகளான அவர்கள் மதிமயக்கம்கொண்டு என்னுடையவார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. நான் பெரிய பயத்தைக் குறிப்பிட்டுக் கௌரவர்களைப் பயமுறுத்தினேன்; மேலும், கோபங்கொண்டு உள்ளபடி (என்ஸ்வரூபத்தையும்) காட்டினேன். அதர்மத்தைச் செய்பவர்களும் மரணம் கிட்டியவர்களுமான அவர்கள் யுத்தத்தில் தர்மமாகக்கொல்லப்பட்டு ஸுவர்க்கம் சென்றார்கள்; ஸம்சயமில்லை. பிராம்மணஶ்ரேஷ்டரே! பாண்டவர்களும் உலகங்களில் பிரஸித்தியை அடைந்தார்கள். நீர் என்னை எதைக் கேட்டீரோ அதை முழுதும் உமக்குச் சொன்னேன்' என்று சொன்னார்.

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(கோவிந்தர் தமது விஸ்வரூபத்தை உதங்கருக்குக் காட்டி அவருக்கு நீர்வேட்கைவருந்தோறும் தீர்த்தம்கிடைக்கும்படி வரமளித்து இந்திரனை உதங்கருக்கு அமிர்தம்கொடுக்கச்சொல்லியதும், இந்திரன் சண்டாளவடிவந்துடன்வர உதங்கர் மறுத்ததும், கோவிந்தர் பாலைநிலத்திலும் ஜலங்கிடைக்கும்படி உதங்கருக்கு வரமளித்ததும்).

உதங்கர், 'ஜநார்த்தனரே! உம்மை உலகத்தைப்படைப்பவராக அறிகிறேன். இது எனக்கு உம்முடைய அனுக்ரஹம்தான்; ஸம்சயமில்லை. அச்சுதரே! என்னுடைய சித்தமானது மிகத்தெளிந்து உம்மையே பற்றியிருக்கிறது. பகைவரை வாட்டுபவரே! என்னுடைய கோபமும் விலகிவிட்டதென்று நீர் தெரிந்துகொள்ளும். ஜநார்த்தனரே! நான் உம்மிடமிருந்து ஓர் அனுக்கிரஹத்தைப்பெறத்தகுந்தவனானால் உம்முடைய விஷ்ணுரூபத்தைப் பார்க்கவிரும்புகிறேன். அதனைக் காட்டும்' என்று சொன்னார்.

பிறகு, அந்த வாஸுதேவர் உள்ளம்மகிழ்ந்து (முன்பு) சிறந்த புத்தியுள்ள அர்ஜுனனால் பார்க்கப்பட்டதும் சாஸ்வதமும் விஷ்ணுவினுடையதுமான அந்தச் சரீரத்தை அந்தஉதங்கருக்குக்காட்டினார். அந்த உதங்கர் விஸ்வஸ்வரூபியும் நீண்டகைகளுள்ளவரும் ஆயிரம் ஸூரியர்களுக்கொப்பானவரும் ஜ்வலிக்கும் அக்னிபோன்றவரும் ஆகாயத்தை முழுதும் வியாபித்துநிற்பவரும் எங்கும்முகங்களுள்ளவருமான மஹாத்மாவைக் கண்டார். பிராம்மணர், சிறந்ததும்ஆச்சரியமுமான கேசவருடைய அந்த வைஷ்ணவரூபத்தைக்கண்டு அவரைப் பரமேஸ்வரராகத் தெரிந்து வியப்புற்றார். உதங்கர், 'எல்லாஸ்வரூபமாகவுமிருப்பவரே! நாராயணரே! சிறந்த ஸ்வரூபமுள்ளவரே! பரமாத்மாவே! பத்மநாபரே! புண்டரீகாக்ஷரே! மாதவரே! உமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம். ஹிரண்யகர்ப்பரூபமாக இருப்பவரும் (பக்தர்களை) ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுகிறவரும் புராணபுருஷரும் சாந்தரும்ஸ்யாமவர்ணமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். அஜ்ஞானமாகிற இருட்டுக்குஸூரியனும் ஸம்ஸாரமாகிற வியாதிக்குச்சிறந்த ஔஷதியும் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்திற்குச் சிறந்த வஸ்துவுமான உம்மை நமஸ்கரிக்கிறேன். நீர் (எனக்குக்) கதியாகவேண்டும். எல்லா

வேதங்களாலும் முக்கியமாக அறியத்தக்கவரும் எல்லாவேதஸ்வரூப ரும் வாஸுதேவரும் நித்யரும் பக்தர்களிடம் பிரியமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். நீர் இப்பொழுது என்னைத் துக்கத்திலிருந்தும் மோஹத்திலிருந்தும் க்ருபைசெய்து கரையேற்றவேண்டும். ஜனார்த் தனரே! பல பாபகர்மங்களால் கட்டப்பட்ட என்னைக் காப்பாற்றும், எல்லாக் கர்மங்களின் உருவமுமாயிருப்பவரே! விஶ்வாத்மாவே! உல கங்களுக்கு உத்பத்திஸ்தானமாக இருப்பவரே! உமக்கு நமஸ்காரம். உம்முடைய பாதங்களால் பூமி வியாபிக்கப்பட்டது. சிரத்தால் ஆகா யம் வியாபிக்கப்பட்டது. ஆகாயத்திற்கும் பூமிக்கும் நடுவிலுள்ள பிர தேசமானது உம்முடைய வயிற்றால் வியாபிக்கப்பட்டது. கைகளால் திசைகள் வியாபிக்கப்பட்டன. அச்சுதரே! நீர் இந்த எல்லா உலகமு மாக இருக்கிறீர். தேவரே! குறைவற்றதும் உத்தமமுமான (இந்த) ரூப த்தை மறுபடியும் ஸ்ருக்கிக்கொள்ளும். மறுபடியும் சாஶ்வதமான உம்மை உமது ரூபத்தோடு கூடினவராகப் பார்க்கவிரும்புகிறேன்' என்றுசொன்னார். ஜனமேஜயரே! அப்பொழுது, கோவிந்தர் மனத் தில் கிருபைகூர்ந்து அந்த உதங்கரைப் பார்த்து, 'வரத்தைக்கேளும்' என்று சொல்ல, உதங்கர் அந்தவாஸுதேவரைநோக்கி, 'சிறந்த காந்தி யுள்ளவரே! (எல்லாவற்றிற்கும்) உத்பத்தி லயஸ்தானமான உம் முடைய இந்த ரூபத்தைப் பார்க்கிறேனென்னும் இதுவே உம் மிடமிருந்து இப்பொழுது போதுமானவரமாயிற்று' என்றுசொன் னார். ஜனார்த்தனர் மறுபடியும் அவரைப்பார்த்து, 'நீர் இதுவிஷயத் தில் ஆலோசனைசெய்யவேண்டாம். இது அவஶ்யம் செய்யத்தக்கது. என்னுடையதர்சனம் வீண்போகாது' என்று சொல்ல, உதங்கர், 'பிரபு நீர்! வே இதனை அவஶ்யம்செய்ய வேண்டுமென்று நினைப்பீரானால் இஷ் டமான இடத்தில் ஜலத்தை(அடைய)விரும்புகிறேன். இது பாலைவனங் களில் கிடைப்பதரிதன்றோ?' என்றுசொன்னார். பிறகு, ஈஶ்வரர் அந்தத் தேஜஸைச் சுருக்கி, உதங்கரை நோக்கி, 'ஜலம் வேண்டிய இடத்தில் என்னை நினைத்துக்கொள்ளும்' என்று சொல்லிவிட்டுத் துவாரகைக் குச் சென்றார். பிறகு, ஒரு ஸமயம் பகவானான உதங்கர் பாலைவனத் தில் தாகம்கொண்டு ஜலத்தை விரும்பி அலைந்தும்(கிடைக்காமையால்) அச்சுதரை நினைத்தார். பிறகு, புத்திமானான உதங்கர், அந்தப் பாலை வனத்தில் திகம்பரனும் மிக்க அழுக்குள்ளவனும் நாய்க்கூட்டங் களால் சூழப்பட்டவனும் பயங்கரனும் (இடுப்பில்) கத்தியைக் கட் டிக்கொண்டவனும் பாணங்களையும் வில்லையும் தரித்தவனுமான ஒரு புலையனைக் கண்டார். பிராம்மணஶ்ரேஷ்டரான உதங்கர் அவனுடைய

கால்பக்கத்திலுள்ள தோற்பையில் அதிக ஜலமிருக்கக் கண்டார். புலையன் (கோவிந்தரின் கட்டளையை) நினைத்து நகைத்துக்கொண்டே அவரை நோக்கி, 'உதங்கரே! வாரும்; பிருகுகுலத்தைத் தாங்குபவரே! என்னிடமிருந்து ஜலத்தைப்பெற்றுக்கொள்ளும்; தாகங்கொண்ட உம்மைப்பார்த்து எனக்கு மிகப்பெரிய கருணை உண்டாயிற்று' என்று சொன்னான். அந்தப் புலையன் இவ்வாறு சொல்லக் கேட்ட அந்த முனிவர், அந்த ஜலத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. புத்திசாலியான அவர் அந்த அச்சுதரைக் கடுஞ்சொற்களால் நிந்தித்தார். புலையன் அடிக்கடி அந்த பிராம்மணரை, (ஜலத்தைக்) குடியும்' என்று சொன்னான். கோபங்கொண்டவரும் சித்தம் கலங்கினவருமான அவர் (ஜலத்தைக்) குடிக்கவில்லை. மஹாராஜரே ! மஹாத்மாவான அவரால் அவ்விதம் நிச்சயங்கொண்டு மறுக்கப்பட்ட அந்தப் புலையன் நாய்களுடன் அவ்விடத்திலேயே மறைந்தான். உதங்கர் அந்தப்புலையன் அவ்விதம் மறைந்ததைக் கண்டு மனத்தில் வெட்கிப் பகைவரை அழிப்பவரான கிருஷ்ணர் தம்மை வஞ்சித்ததாக நினைத்தார். பிறகு, அதே வழியாகச் சங்கத்தையும் சக்ரத்தையும் கதையையும் தரித்தவரும் நீண்டகைகளுள்ளவருமான பகவான் வந்தார். உதங்கரும் அவரை நோக்கி, 'புருஷோத்தமரே! பிரபுவே! நீர் பிராம்மணஸ்ரேஷ்டர்களுக்குப் புலையனுடைய தோற்பையிலுள்ள அவ்விதமான ஜலத்தைக் கொடுப்பது யுக்தம் அன்று' என்று சொன்னார். சிறந்த புத்தியுள்ள ஜனார்த்தனர் இவ்விதம் வார்த்தைசொன்ன அந்த உதங்கரை இன்சொல்லால் ஸமாதானம் செய்துகொண்டு பின்வருமாறு சொல்லலானார்.

'இப்பொழுது எவ்விதரூபத்தைத்தரித்து ஜலம் கொடுக்கத் தகுமோ அவ்விதம் உமக்குக் கொடுக்கப்பட்டது. அதை நீர் தெரிந்து கொள்ளவில்லை. நான் உமக்காக வஜ்ரபாணியும் பிரபுவுமான இந்திரனை நோக்கி, 'உதங்கருக்கு ஜலரூபமாக அமிருதத்தைக் கொடு' என்று சொன்னேன். பிருகுநந்தனரே! அந்தத் தேவேந்திரன் என்னை நோக்கி, 'மனிதன் தேவனாகவேண்டாம். அவருக்கு வேறு வரத்தைக் கொடும்' என்று பல முறை சொன்னான். '(அவருக்கு) அமிருதத்தையே கொடுக்க வேண்டும்' என்று என்னால் சொல்லப்பட்ட சசிபதியான அந்த இந்திரன் என்னை அருள்புரியும்படிசெய்து மறுபடியும் பின்வருமாறு சொல்லலானான். 'சிறந்த புத்தியுள்ளவரே! மஹாத்மாவும் பார்க்கவருமான உதங்கருக்கு அமிருதம் அவச்யம் கொடுக்கவேண்டுமானால் நான் சண்டாளவேஷம் தரித்துக் கொடுப்

பேன். பிரபுவே! உதங்கர் இப்பொழுது அமிருதத்தை இவ்விதம் பெற்றுக்கொள்வாரானல் அவருக்கு அமிருதத்தைக் கொடுப்பதற்காக நான் இதோ போகிறேன். அவர் என்னை அவமதித்தால் எவ்விதத்திலும் கொடுக்கமாட்டேன்' என்று சொன்னன். அந்த இந்திரன் அவ்விதம் பிரதிஜ்ஞை செய்துகொண்டு அவ்வித ரூபத்துடன் அமிருதம் கொடுப்பதற்காக அருகில் வர, சண்டாளரூபியான அந்தப் பகவானை நீர் மறுத்தது உம்மீது மிகப்பெரிய குற்றம். திரும்பவும் நீர் விரும்பியதைச்செய்ய என்னல் முடியும். உமக்கு ஜலத்தினுள்ள அடக்கமுடியாத விருப்பத்தை நான் பயன்பெறச் செய்கிறேன். பிராம்மணரே! உமக்கு எந்தத் தினங்களில் ஜலத்தில் விருப்பம் உண்டாகுமோ அந்தத் தினங்களில் பாலைவனத்திலானுலும் ஜலம் நிறைந்த மேகங்கள் தோன்றப்போகின்றன. பிருகு நந்தனரே! அவைகள் உமக்கு ருசியுள்ள ஜலத்தையும் கொடுக்கப் போகின்றன. அவைகள் உதங்கமேகங்களென்று சொல்லப்பட்டுப் பிரஸித்தியையும் அடையப்போகின்றன' என்று சொன்னர். கிருஷ்ணரால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தப் பிராம்மணர் ஸந்தோஷமுள்ளவரானர். பாரதரே! இப்பொழுதும் பாலைவனத்தில் உதங்கமேகங்கள் மழைபொழிகின்றன" என்று சொன்னர்.

---

## ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(குருவான கௌதமர் உதங்கரது பணிவிடைக்கு மகிழ்ந்து அவருக்கு இல்லறத்தை அடைய அநுமதி கொடாமலிருக்கையில் உதங்கர் முதுமைவரக்கண்டு வருந்த, கௌதமர் தமது பெண்ணைக் கொடுக்க நிச்சயித்ததும், உதங்கர் குருபத்னியின் விருப்பப்படி குண்டலங் கொண்டுவர ஸௌதாஸனிடம் சென்றதும்.)**

ஜனமேஜயர், "எல்லாவற்றிற்கும் பிரபுவான விஷ்ணுவுக்கும் சாபம்கொடுக்க விரும்பியவரும் சிறந்த மனமுள்ளவருமான உதங்கர் எவ்விதத் தவமுள்ளவர்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர். "ஜனமேஜயரே! [1] உதங்கர் பெரிய தவத்தையுடையவர். குருவினிடத்தில் பக்தியுள்ளவர்; தேஜஸுள்ளவர்; அவர்

1. இந்தச் சரித்திரம் ஆதிபர்வத்திற் சொல்லியதற்குச் சிறிது வேறுபடுகிறது.

வேறொன்றையும் பூஜித்தவரல்லர். பாரதரே! எல்லா ரிஷிகுமாரர்களுக்கும் 'உதங்கரைப்போல நாம் குருவுக்குப் பணிவிடை செய்ய வேண்டும்' என்று விருப்பம் உண்டாயிற்று. ஜனமேஜயரே! அக்காலத்தில் கௌதமருக்கு அநேக சிஷ்யர்களுள் உதங்கரிடத்தில் அதிகமான பிரீதியும் ஸ்னேஹமும் உண்டாயின. அந்தக் கௌதமர் அந்த உதங்கருடைய [1]தமத்தாலும் சுத்தியினாலும் விக்ரமமுள்ள செய்கையினாலும் நல்ல உபசாரத்தாலும் பிரீதியுள்ளவரானார். பிறகு, கௌதமர் பல்லாயிரம் சிஷ்யர்களுக்கு அனுமதிகொடுத்து உதங்கருக்கு மட்டும் மிக்க பிரீதியினால் அனுமதிகொடுக்க விரும்பவில்லை. ஐயா! அந்த உதங்க மஹாமுனிவருக்கு நாளடைவில் கிழத்தனம் வந்தது. குருவினிடத்தில் பிரீதியுள்ள அந்தமுனிவர் அப்பொழுது (அதைத்) தெரிந்து கொள்ளவில்லை. ராஜஸ்ரேஷ்டரே! பிறகு, ஒரு ஸமயம் அவர் விறகு கொண்டுவருவதற்காகச் சென்று பெரிய விறகுசுமையைக் கொண்டுவந்தார். பகைவரை அடக்குபவரே! அரசரே! அந்தப் பாரத்தால் துன்பமுற்ற சித்தமுள்ளவரும் பசியினால் களைத்தவருமான அந்தஉதங்கர் விறகுகட்டைப் பூமியில் போட்டார். விறகில் மாட்டிக்கொண்டிருந்ததும் வெள்ளிக்கொப்பான காந்தியுள்ளதுமான அவருடைய ஒருஜடையானது அப்பொழுது அந்த விறகுகளுடன் பூமியில் விழுந்தது. பாரதரே! பிறகு, பாரத்தால் துன்பமடைந்தவரும் பசி மீறினவருமான அந்த உதங்கர் அந்த வயதின் நிலைமையைக் கண்டு அப்பொழுது தீனஸ்வரத்துடன் அழுதார். பிறகு, தாமரைமலர்போன்ற முகமுள்ளவளும் அழகிய பின்தட்டுள்ளவளும் விசாலமான கண்களுள்ளவளும் (பிதாவின்) [2] கருத்தை அறிந்தவளுமான குருவினுடையபெண்ணானவள் பிதாவினுடைய உத்தரவினால் அப்பொழுது தலைவணங்கி அந்த உதங்கருடைய கண்ணீரைக் கையினால் ஏந்தினாள். அவளுடைய கைகள் அந்தக் கண்ணீர்த்திவலைகளால் எரிக்கப்பட்டுப் (பூமியில்) விழுந்தன. அந்தக் கண்ணீர்விழுதலைப் பூமியினால் தாங்கமுடியவில்லை. கௌதமரோ பிரியமானமனத்துடன் பிராம்மணரான உதங்கரைப் பார்த்து, 'அப்பா! இப்பொழுது உன்னுடைய இந்த மனமானது ஏன் அதிக துக்கமுள்ளதாகஇருக்கிறது? பிரம்மரிஷியே! நீ இஷ்டப்படி சொல். உள்ளபடி கேட்க விரும்புகிறேன்' என்று வினவினார். உதங்கர் '(குருவே!) நான் உமக்குப் பிரியத்தைச் செய்ய வேண்டுமென்கிற

1 மன அடக்கம்.

2 'தர்மத்தை அறிந்தவளும்' என்பது வேறுபாடம்.

விருப்பத்தால் உம்மை அடைந்ததும் உம்மிடத்தில் பக்தியை அடைந்ததும் உம்முடைய கருத்தை அனுஸரித்ததுமான மனத்தால் இந்த ஜரையைத் தெரிந்துகொண்டேனில்லை. நான் ஒரு ஸுகத்தையும் அறியவில்லை. நூறு வருஷம் வஸித்த எனக்கு நீர் அனுமதி கொடுக்கவில்லை. பிராம்மணஶ்ரேஷ்டரே! எனக்குப் பின்வந்தவர்களும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் உள்ளவர்களும் யோக்யர்களுமான சிஷ்யர்கள் உம்மால் அனுமதிகொடுக்கப்பட்டார்கள்' என்று சொன்னார். கௌதமர், 'பிராம்மணஶ்ரேஷ்ட! நீ செய்த குருசுஶ்ரூஷையால் உன்னிடம் பிரீதியுள்ளநான் அதிககாலம் சென்றதை அறியவில்லை. பார்க்கவ! ஆனால், இப்பொழுது உனக்குப்போக இஷ்டமிருந்தால் நீ அனுமதிபெற்றுக்கொண்டு உன்வீட்டுக்குப்போ; தாமதம் வேண்டாம்' என்று சொன்னார். உதங்கர், 'பிராம்மணஶ்ரேஷ்டரே! நான் எதைக் குருதக்ஷிணையாகக் கொடுக்கவேண்டும்? நீர் சொல்லும். பிரபுவே! அதைக்கொடுத்து உம்மிடம் அனுமதிபெற்றுக்கொண்டு யான் செல்லுவேன்' என்று சொன்னார். கௌதமர், 'பிருகுஶ்ரேஷ்ட! ஆசாரியர்கள் ஸந்தோஷமடைவதே தக்ஷிணையாகுமென்று ஸாதுக்கள் சொல்லுகின்றனர். தர்மத்தைஅனுஷ்டிக்கும் உன்னிடத்தில் நான் ஸந்தோஷமடைந்தேன்; ஸந்தேஹமில்லை. இவ்விதம் என்னை ஸந்தோஷமடைந்தவனாகத் தெரிந்துகொள். பிராம்மண! நீ இப்பொழுது பதினாறு பிராயமுள்ள தருணனாக ஆனால் கன்னியான என்னுடைய பெண்ணை உனக்குப் பத்னியாகக் கொடுக்கிறேன். இவளைத்தவிர வேறு பெண்ணினால் உன்னுடைய தேஜஸைத் தாங்க முடியாது' என்று சொன்னார். பிறகு, உதங்கர் தருணராகிப் புகழ்பெற்ற அந்தப் பெண்ணைப்பெற்றுக்கொண்டு குருவினால் அனுமதி கொடுக்கப்பெற்று, பிறகு, குருபத்னியைநோக்கி, 'நான் உமக்கு எதைக் குருதக்ஷிணையாகக் கொடுக்கவேண்டும்? எனக்கு உத்தரவு செய்யும். (உமக்குப்) பிரியமும் ஹிதமுமான காரியத்தைப் பிராணனைக்கொண்டும் தனத்தைக்கொண்டும் செய்ய விரும்புகிறேன். இவ்வுலகில் கிடைக்கவரியதும் மிக்க ஆச்சரியமானதும் சிறந்ததுமான ரத்தினத்தையும் நான் தவத்தால் கொண்டுவருவேன். இதில் எனக்கு ஸம்சயமில்லை' என்று சொன்னார். அஹல்யை, 'பிராம்மண! குற்றமற்றவனே! உன்னுடைய இடைவிடாதபக்தியினால் நான் உன்னிடத்தில் ஸந்தோஷமடைந்தேன். இதுவேபோதுமானது. உனக்கு க்ஷேமமுண்டாகுக. ஐயா! இஷ்டப்படி செல்' என்று சொன்னாள். மஹாராஜரே! உதங்கரோ, மறுபடியும், 'தாயே!

எனக்கு உத்தரவு செய்யும். உமக்குப் பிரியமானதைச்செய்யவேண்டும்' என்ற வார்த்தையைச் சொன்னார். அஹல்யை, 'ஸௌதாஸனுடைய பத்னி அணிந்துகொண்டிருக்கும் திவ்யமான ரத்னகுண்டலங்களைக் கொண்டுவா. உனக்கு க்ஷேமமுண்டு; (இவ்விதம்செய்தால்) குருதக்ஷிணை நன்குசெய்யப்பட்டதாகும்' என்றுசொன்னாள். ஜனமேஜயரே! அந்த உதங்கர், அப்பொழுது, 'அப்படியேஆகட்டும்' என்று ஒப்புக்கொண்டு குருபத்னிக்குப் பிரியத்தைச் செய்வதற்காகஅந்தக் குண்டலங்களைக்கொண்டுவரச்சென்றார். பிறகு, பிராம்மணஶ்ரேஷ்டரான அந்தஉதங்கர் ரத்னகுண்டலங்களையாசிப்பதற்காக, மனிதர்களைத்தின்பவனான ஸௌதாஸனிடம் விரைவாகச்சென்றார். கௌதமரோ, பத்னியை நோக்கி, 'உதங்கன் (எங்கே?) இங்கு காணப்படவில்லையே?' என்று கேட்டார். இவ்விதம் வினவப்பட்ட அந்த அஹல்யை அவரை நோக்கி, 'உதங்கன் குண்டலங்களுக்காகப் போயிருக்கிறான்' என்று சொன்னாள். பிறகு, அந்தக் கௌதமர் பத்னியைப் பார்த்து, 'நீ செய்த இது நல்லகாரியமன்று. சாபம் பெற்றவனான அந்த அரசன் அந்தப் பிராம்மணனை நிச்சயமாகக் கொன்றுவிடுவான்' என்று சொன்னார். அஹல்யை, 'பகவானே! நான் அறியாமையால் அந்தப்பிராம்மணனை அனுப்பினேன். (ஆனாலும்), உம்முடையஅனுக்கிரஹத்தால் அந்த உதங்கனுக்குச் சிறிதும் பயம் உண்டாகாமலிருக்கவேண்டும்' என்று சொன்னாள். இவ்விதம் சொல்லப்பட்ட கௌதமர் அந்தப் பத்தினியைப் பார்த்து, 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னார். உதங்கரும் ஒருவருமில்லாத வனத்தில் அந்த அரசனைக்கண்டார்.

---

## ஐம்பத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(சாபத்தால் அரக்கனானஸௌதாஸன் உதங்கரைத்தின்ன யத்தனிக்க உதங்கர் குருதக்ஷிணை கொடுத்துவருவதாகச்சொல்லி, அவனனுமதிப்படி அவன் மனைவியிடம் குண்டலங்களைக்கேட்க, அவள் அவற்றின் சிறப்பைக்கூறி அரசனுத்தரவுவேண்டுமென்றது.)**

அந்த உதங்கரென்னும் பிராம்மணர், அவ்விதமானவனும் பார்க்கப் பயங்கரனும் நீண்ட மீசையைத் தரிப்பவனும் மனிதர்களுடைய உதிரத்தால் நன்குநனைக்கப்பட்டவனுமான அந்த(ஸௌதாஸனென்னும்) அரசனைக்கண்டு மனவருத்தமடையவில்லை. பிறகு, மிக்க தேஜ

ஸ்வபாவனும் பயங்கரனும் யமன்போன்றவனுமான அரசனே எதிர் வந்து இவரை நோக்கி, 'நல்ல ஸ்வபாவமுள்ளவனே! பிராம்மண ச்ரேஷ்ட! ஆகாரத்தைத் தேடிக்கொண்டிருக்கும் என்னுடைய ஸமீபத்தில் [1] ஆறுவது காலத்தில் நீ தெய்வச்செயலாக வந்தாய்' என்று சொன்னான். உதங்கர், 'ராஜனே! என்னைக் குருதக்ஷிணையைவிரும்பி ஸஞ்சரித்துக்கொண்டு இவ்விடம் வந்தவனாகத் தெரிந்துகொள். குரு தக்ஷிணைக்காக முயல்பவனைக் கொல்லக்கூடாதென்று வித்வான்கள் சொல்லுகிறார்கள்' என்று சொன்னார். அரசன், 'பிராம்மண ச்ரேஷ்ட! நீ எனக்கு ஆறுவது காலத்தில் ஆகாரமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறாய். இப்பொழுது பசியுள்ள என்னால் உன்னை விடமுடியாது' என்று சொன்னான். உதங்கர், 'மஹாராஜனே! இவ்விதமே ஆகட்டும்; ஆனால், என்னுடைய பிரதிஜ்ஞையை ஏற்றுக்கொள். குருவின் காரியத்தை நிறைவேற்றிவிட்டு மீண்டும் உனது வசம் வருகிறேன். ராஜ ச்ரேஷ்டனே! குருவுக்குக் கொடுப்பதாக நான் உறுதிசொன்னபொருள் உன்னிடமிருக்கிறது. ராஜச்ரேஷ்டனே! நரேச்வர! நான் அதனை உன்னிடம் யாசிக்கிறேன். நீ எப்பொழுதும் பிராம்மணச்ரேஷ்டர்களுக்கு ரத்தினங்களைக் கொடுக்கிறாய். புருஷப்புலியே! இவ்வுலகில் நீ தகுந்த கொடையாளியாக இருக்கிறாய். ராஜச்ரேஷ்டனே! பெற்றுக்கொள்வதற்குப் பாத்திரனென்று என்னைத்தெரிந்துகொள். பகைவரை அடக்குபவனே! ராஜேந்திர! உன்னிடத்திலிருக்கும் குருவுக்குக் கொடுக்கவேண்டிய பொருளைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு பிரதிஜ்ஞைசெய்தபடி மறுபடியும் இங்கு உனது வசம் வருகிறேன். உன்னிடத்தில் உண்மையாகப் பிரதிஜ்ஞை செய்கிறேன். இது விஷயத்தில் எவ்விதத்திலும் பொய்யில்லை. நான் இதுவரையில் விளையாட்டுக்களிலும் பொய்சொன்னதில்லை. மற்றவிஷயத்தில்சொல்லுவேனா?' என்று சொன்னார். ஸௌதாஸன், 'உன்னுடைய குருதக்ஷிணையானது என்னிடத்தில் இருக்குமானால் அது நிறைவேற்றப்பட்டதேயாகும். [2]பெற்றுக்கொள்ளக்கூடியது (என்னிடம்) இருந்தால் அதனை இப்பொழுது எனக்குச் சொல்' என்று சொன்னான். உதங்கர், 'புருஷச்ரேஷ்ட! நீ கொடுக்கத்தகுந்தவனென்று எப்பொழுதும் நான் எண்ணியிருக்கிறேன். நான் ரத்தினகுண்டலங்களையாசிப்பதற்காக உன்னிடம் வந்திருக்கிறேன்' என்றுசொன்னார். ஸௌதாஸன், 'பிரம்மரிஷியே! அந்த மணிகுண்டலங்கள் என்மனைவிக்குஏற்ற

---

1. சாந்திபர்வம், 900-ம் பக்கம் பார்க்க.

2. 'கொடுக்கத்தகுந்தவனாக நான் இருந்தால்' என்பது வேறு பாடம்.

வைகள். நல்ல விரதங்களுள்ளவனே! நீ வேறுபொருளைக் கேள். அதனை உனக்குக் கொடுக்கிறேன்' என்று சொன்னான். உதங்கர், 'அரசே! நீ சாக்குச் சொல்ல வேண்டாம். நம்மிடத்தில் உனக்கு நம்பிக்கை இருந்தால் குண்டலங்களை எனக்குக் கொடு. ஸத்யவாதியாகிவிடு' என்று சொன்னார். இவ்விதம் சொல்லப்பட்ட அரசனை, மறுபடியும் அந்த உதங்கரைப் பார்த்து, 'ஸாதுக்களுள் சிறந்தவனே! நீ என் மனைவியினிடம் சென்று நான் (கொடுக்கச்) சொன்னதாகச்சொல்லி, 'கொடு' என்று கேள். பிராம்மணஸ்ரேஷ்ட! சுத்தவிரதமுள்ளவளான அவள் உன்னால் இவ்வாறு சொல்லப்பட்டு என்னுடைய வாக்யத்தால் நிச்சயமாகக் குண்டலங்களை உனக்குக்கொடுப்பாள். ஸந்தேஹமில்லை' என்று சொன்னான். உதங்கர், 'வேந்தே! உன்னுடைய மனைவியை நான் எங்கே பார்க்கக்கூடும்? நீ யாது காரணத்தால் மனைவியினிடம் நேரில் போகவில்லை?' என்று வினவினார். ஸௌதாஸன், 'நீ அவளை இப்பொழுது ஒரு காட்டாற்றினருகில் பார்ப்பாய். ஆறாவது காலமாகிய இப்பொழுது என்னால் அவளைப்பார்க்கமுடியாது' என்று சொன்னான். பரதஸ்ரேஷ்டரே! அவ்விதம் சொல்லப்பட்ட அந்த உதங்கரோ சென்று மதயந்தியையும் கண்டு தமதுகாரியத்தைத் தெரிவித்தார். ஜனமேஜயரே! விசாலமான கண்களுள்ள அந்த மதயந்தியானவள் ஸௌதாஸனுடைய வார்த்தையைக்கேட்டுப் பிறகு சிறந்த புத்தியுள்ள உதங்கரை நோக்கி மறுமொழி கூறலானாள்.

'சிறந்த பிராம்மணரே! இது இவ்விதமே. குற்றமற்றவரே! நீர் பொய்சொல்லவில்லை. ஆனால், நீர் ஓர் அடையாளம் வாங்கிவரவேண்டும். என்னுடைய திவ்யமான இந்த ரத்னகுண்டலங்களைத் தேவர்களும் யக்ஷர்களும் மஹரிஷிகளும் அந்த அந்த உபாயங்களால் கவர்ந்துகொள்ள விரும்பி எப்பொழுதும் ஸமயம்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த ரத்னத்தைப் பூமியில்வைத்தால் பன்னகர்கள்வந்து கவர்ந்துகொள்வார்கள்; அசுத்தியுடன் தரித்தால் யக்ஷர்கள்கவர்ந்து கொள்வார்கள்; தூங்கிவிட்டால் தேவர்கள் கவர்ந்துகொள்வார்கள். பிராம்மணஸ்ரேஷ்டரே! இவ்வித ஸமயங்களில் இந்தக் குண்டலங்களை எப்பொழுதும் தேவர்களும் ராக்ஷஸர்களும் நாகர்களும் அபஹரிப்பார்கள். (ஆகையால்), ஜாக்கிரதையாகத் தரிக்கவேண்டும். பிராம்மணஸ்ரேஷ்டரே! இவை இரவிலும் பகலிலும் பிரகாசிக்கின்றன. இரவில் [1]நக்ஷத்திரங்கள் [2]தாரைகள் இவைகளுடைய காந்தியை மீறி இருக்கின்றன. பகவானே! இவற்றை அணிந்துகொண்டால்,

1. அஸ்வினி முதலியன. 2. மற்றும் ஆகாயத்தில் பிரகாசிப்பவை.

பசியாலும் தாகத்தாலும் உண்டாகும் பயம் ஏது? விஷம், அக்னி, துஷ்டமிருகங்கள் இவைகளினிடமிருந்து ஒருபொழுதும் பயம் இல்லை. இவைகள் குட்டையானவள் அணிந்தால் அப்பொழுது சிறியவைகளாக இருக்கும்; (வடிவத்தால் இவற்றுக்குத்) தகுந்தவள் அணிந்தால் இந்த அளவுள்ளனவாக இருக்கும். இப்படிப்பட்டவைகளான என்னுடைய இவ்விரண்டு குண்டலங்களும் மிகப் பூஜிக்கப்பட்டனவும் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றனவுமாக இருக்கின்றன. ஆகையால், அடையாளம் வாங்கிவாரும்' என்றுசொன்னாள்.

---

## ஐம்பத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(உதங்கர் அடையாளங்கொடுத்துக் குண்டலம் பெற்று வருகையில் நாகர் அவற்றைக் கவர்ந்துசெல்ல, அவர் இந்திரனுதவியால் நாகலோகஞ்சென்று அவற்றைப்பெற்றுவந்து குருபத்னிக்குக் கொடுத்தது.)

அந்த உதங்கர் [1] மித்ரஸஹனிடம் சென்று அடையாளத்தை யாசித்தார். இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தவர்களுள் சிறந்தவனான அந்த ஸௌதாஸன், அப்பொழுது, அந்த உதங்கருக்கு அடையாளம் கொடுக்கலானான். அவன், 'இந்தக்கதியானது க்ஷேமகரமன்று. வேறு கதியுமில்லை. என்னுடைய இந்த உண்மையை அறிந்து மணிகுண்டலங்களைக் கொடு' என்று சொன்னான். இவ்விதம் சொல்லப்பட்ட உதங்கரோ, பிறகு, அந்த மதயந்தியினிடம் கணவனுடைய வாக்கியத்தைச் சொன்னார். அவளும் அப்பொழுது கேட்டவுடன் அந்த உதங்கருக்கு ரத்தின குண்டலங்களைக் கொடுத்தாள். உதங்கர் அந்தக் குண்டலங்களைப் பெற்றுக்கொண்டு மறுபடியும் அரசனை நோக்கி, 'வேந்தே! இதென்ன ரஹஸ்யவார்த்தை? கேட்கவிரும்புகிறேன்' என்று சொன்னார். ஸௌதாஸன், 'பிரஜைகளைப் படைத்ததுமுதல் க்ஷத்திரியர்கள் பிராம்மணர்களைப் பூஜித்துக்கொண்டு வருகின்றனர். எங்களுக்குப் பிராம்மணர்களிடமிருந்து அநேக தோஷங்களும் உண்டாகின்றன. பிராம்மணர்களிடம் வணக்கமுள்ள நான் பிராம்மணர்களிடமிருந்து கெடுதியை அடைந்தேன். மதயந்தியை ஸஹாயமாகக்கொண்ட நான் வேறு கதியைக் காணவில்லை. கதியுள்ளவர்களுள் சிறந்தவனே! பிராம்மணஶ்ரேஷ்ட! ஸ்வர்க்கமார்க்கத்தில் செல்வதற்கும் இவ்விடத்தி

---

[1] ஸௌதாஸனுக்கு மற்றொரு பெயர். இவனுக்கே, கல்மாஷபாதனென்று வேறொரு பெயருமுண்டு.

லேயே இருப்பதற்கும் வேறுகதியை நான் பார்க்கவில்லை.முக்கியமாகப் பிராம்மணர்களுடன் விரோதமுள்ள அரசனால் இவ்வுலகில் இருப்ப தற்கும் இறந்தபின் ஸ்வர்க்கத்தை அடைவதற்கும் முடியாது. ஆகை யால், விருப்பமானவையும் எங்களுடையவையுமான இந்த ரத்ன குண்டலங்களை நான் உனக்குக் கொடுத்தேன். நீ என்னிடம் செய்த பிரதிஜ்ஞையை இப்பொழுது பயனுள்ளதாகச்செய்' என்று சொன் ஞன். உதங்கர், 'அரசனே! இப்பொழுது அவ்விதமே செய்கிறேன்; மறுபடியும் உன்னிடம் வருகிறேன். பகைவரை வாட்டுபவனே! உன்னை ஓர் கேள்விகேட்க விரும்புகிறேன்' என்று சொன்னார், ஸௌ தாஸன், 'பிராம்மண ! விரும்பியதைக்கேள். உனது வார்த்தைக்கு மறுமொழி கூறுகிறேன். இப்பொழுது உன்னுடைய ஸம்சயத்தை அறுக்கிறேன். எனக்கு இதில் ஆலோசனை இல்லை' என்று சொன் ஞன். உதங்கர், 'அரசனே! தர்மத்தின் ரஹஸ்யத்தைக் கண்டவர்கள் வாக்கை அடக்கியவனைப் பிராம்மணனாகச் சொல்லுகிறார்கள். மித்தி ரர்களுக்கு விரோதம் செய்பவனைத் திருடனென்றே கருதுகின்றனர். நீ இப்பொழுது எனக்கு மித்திரனாகிவிட்டாய். புருஷஶ்ரேஷ்டனே! நீ எனக்கு இஷ்டமான புத்தியை உண்டுபண்ணு. நான் இங்கு இப் பொழுது பிரயோஜனத்தை அடைந்தவனாக இருக்கிறேன். நீயும் மனிதனைத் தின்பவனாக இருக்கிறாய். நான் (மறுபடியும்) உன்னிடம் வருவது உசிதமா? இல்லையா?' என்று வினவினார். ஸௌதாஸன், 'சிறந்த பிராம்மணர்களுள் சிறந்தவனே! பிராம்மணஶ்ரேஷ்ட! நான் இது விஷயத்தில் உசிதமானதைச் சொல்ல வேண்டுமானால், நீ எவ் விதத்திலும் என்னிடம் வரக்கூடாது. பிருகுகுலஶ்ரேஷ்ட! இவ் விதம் செய்தால் உனக்கு க்ஷேமமுண்டாகுமென்று நினைக்கிறேன். பிராம்மண! நீ வந்தால் மரணமடைவாய். ஸம்சயமில்லை' என்று சொன் ஞன். அறிஞனான அரசன் இவ்விதம் தகுந்ததாகவும் அனுகூலமாக வும் சொல்லக்கேட்ட அந்த உதங்கர், அப்பொழுது, அரசனிடம் அனுமதிபெற்றுக்கொண்டு அஹல்யையை நோக்கிச் சென்றார். குரு பத்னிக்குப் பிரியத்தைச் செய்பவரான அவர் திவ்யமான குண்டலங் களைப்பெற்றுக்கொண்டு அதிகவேகத்துடன் கௌதமருடைய ஆஶ்ர மத்தைக் குறித்துச்சென்றார். அந்தக் குண்டலங்களை ரக்ஷிக்கும் விஷ யத்தில் மதயந்தி எவ்விதம் சொன்னாளோ அவ்விதம் அவர் அக்குண் டலங்களை அப்பொழுது கிருஷ்ணாஜினத்தில் முடிந்துகொண்டு போனார். அந்த உதங்கர் மிக்க பசியுள்ளவராகி, ஓரிடத்தில் நிறைந்த பழங்களுள்ள பில்வமரத்தைக் கண்டு அதில் ஏறினார். பகைவரை

அடக்குபவரே! அந்தப் பிராம்மணஸ்ரேஷ்டர் அப்பொழுது அந்தமரத்தின் கிளைகளிலேயே கிருஷ்ணாஜினத்தை மாட்டிவிட்டுப் பில்வப் பழங்களை உதிர்த்தார். பிரபுவே! பிறகு, அவர் பில்வப்பழங்களையே கண்களால் பார்த்துக்கொண்டு அவற்றைப் பறித்துப் போடும்போது, அவை அந்தக் கிருஷ்ணாஜினத்திலேயே விழுந்தன. பிறகு, பிராம்மணரால் குண்டலங்கள் கட்டப்பட்டுள்ள கிருஷ்ணாஜினமானது அப்பொழுது பில்வப்பழங்களால் அடிக்கப்பட்டு முடிச்சவிழ்ந்து, பிறகு, சீக்கிரமாகக் குண்டலங்களுடன் மரத்தினின்று கீழே விழுந்தது. அந்தக் கிருஷ்ணாஜினமானது முடிச்சவிழ்ந்து பூமியில் விழுந்தவுடன், ஓர் ஸர்ப்பமானது அதிலுள்ள அந்த ரத்தினகுண்டலங்களைப் பார்த்தது. ஐராவதகுலத்தில் தோன்றின அந்த ஸர்ப்பமானது அப்பொழுது விரைந்து குண்டலங்களை வாயில்கௌவிக்கொண்டு பிறகு புற்றில் நுழைந்தது. அந்த உதங்கர் ஸர்ப்பம் குண்டலங்களைக் கவர்ந்ததைக் கண்டு,பயமும் துயரமும் மிக்க கோபமுமுள்ளவராகி மரத்திலிருந்துகுதித்தார். பாரதரே! அப்பொழுது அந்த அந்தணஸ்ரேஷ்டர் கோபத்தாலும் பொறாமையினாலும் மிக்க தாபத்தையடைந்தவராகிப் பருத்ததடியை எடுத்துக்கொண்டு பரபரப்பின்றி முப்பத்தைந்து நாள் அந்தப்புற்றைக் கல்லினார். பருத்ததடியினால் குத்தப்பட்டசரீரமுள்ள பூமியானவள் ஸகிக்கமுடியாத அவருடைய அந்த வேகத்தைத் தாங்காமல் மிகக் கலக்கமுற்று நடுங்கினாள். பிறகு, அந்தப் பிரம்மரிஷியானவர் நாகலோகத்திற்கு வழியைச் செய்ய நிச்சயமான எண்ணங்கொண்டு பூதலத்தைத் தோண்டிக்கொண்டேயிருக்கும்போது,அதிக தேஜஸுள்ளவனும் வஜ்ரத்தைக் கையில் கொண்டவனுமான இந்திரன் பச்சைக் குதிரைகள் பூட்டின ரதத்திலேறிக்கொண்டு அவ்விடம் வந்து அந்தப் பிராம்மணஸ்ரேஷ்டரைக் கண்டான். அந்த இந்திரனே, அவர் படும் துக்கத்தால் தானும் துக்கமுற்று,பிராம்மண வேஷம் பூண்டு உதங்கரை நோக்கி, 'இது உம்மால் முடியாது. இவ்விடமிருந்து நாகலோகம் ஆயிரம் யோஜனை தூரமிருக்கிறது. நீர் செய்யும் இந்தக் காரியம் தடியால் நிறைவேற்ற முடியாததென்று நான் நினைக்கிறேன்.' என்று சொன்னான். உதங்கர், 'பிராம்மணரே! பிராம்மணோத்தமரே! நாகலோகத்தில் குண்டலங்களை அடைய என்னால் முடியாமற்போனால், நீர் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, உயிரை விடுவேன்' என்று சொன்னார். வஜ்ரபாணியான அந்த இந்திரன் அந்த உதங்கருடைய நிச்சயத்தை மாற்ற முடியாமற்போனவுடன், தண்டத்தில் வஜ்ராஸ்திரத்தைப் பிரவேசிக்கச் செய்தான்.

ஜனமேஜயரே! பிறகு, பூமியானது வஜ்ரத்தின் அடிகளால் பிளக்கப் பட்டு நாகலோகத்திற்கு வழியைச் செய்தது. பெரிய பாக்யமுள்ள வரே! அவர் அப்பொழுது அந்த வழியாக ஆயிரம் யோஜனை அளவி லுள்ள நாகலோகம் சென்று மணிகளாலும் முத்துக்களாலும் நன்கு அலங்கரிக்கப்பட்ட ஸுவர்ணமயமும் திவ்யமுமான பிராகாரக் கூட் டங்களுடன் கூடின நாகலோகத்தையும் (அதிலுள்ள) ஸ்படிகமயமான படிகளுள்ள வாவிகளையும் நிர்மலமான ஜலமுள்ள நதிகளையும் பலவித மான பக்ஷிக்கூட்டங்களுடன்கூடின பலவிருக்ஷங்களையும் பார்த் தார். பிருகுஸ்ரேஷ்டரான அவர் அந்த உலகத்தின்வாயிலையும் கண் டார். அவர் ஐந்துயோஜனை விஸ்தாரமுள்ளதும் நூறுயோஜனை நீள முள்ளதுமான நாகலோகத்தைப் பார்த்து அப்பொழுது மனத்தளர்ச்சி அடைந்து குண்டலங்களைக் கொண்டுவரும் விஷயத்தில் ஆசையற்றவ ரானார். குருகுலத்தில் பிறந்தவரே! அவ்விடத்தில் கறுத்தும் வெளு த்துமுள்ள வாலுள்ளதும் சிவந்த முகமும் கண்களுமுள்ளதும் தேஜ ஸினால் மிக ஜ்வலிப்பதுபோலிருப்பதுமான குதிரையானது அவ ரைப் பார்த்து, 'பிராம்மண! என்னுடைய இந்த அபானத்தில் ஊது. அதனால், நீ ஐராவதனுடைய புத்திரனால் இங்கு கொண்டுவரப்பட்ட உன்னுடைய குண்டலங்களை அடைவாய். புத்திர! நீ இந்தவிஷயத்தில் எவ்விதத்திலும் வெறுப்பை அடையவேண்டாம். நீ இந்தக் கார்யத்தை அக்காலத்தில் கௌதமருடைய ஆஸ்ரமத்தில் நன்கு அனுஷ்டித்திருக் கிறாய்' என்று சொல்லிற்று. உதங்கர், 'நான் உன்னை எவ்விதம்தெரிந்து கொள்வேன். உபாத்தியாயருடைய ஆஸ்ரமத்தில் நான் முன்னதைச் செய்தேனென்பதைக் கேட்க விரும்புகிறேன்' என்று சொன்னார். குதிரை, 'பிராம்மண! என்னை (உனது) குருவுக்குக்குருவும் ஜ்வலிக்கின் றதுமான அக்னியாகத் தெரிந்துகொள். பிராம்மண! பிருகுநந்தன! நீ என்னை எப்பொழுதும் சுத்தனாக இருந்துகொண்டு குருவுக்காக எப் பொழுதும் விதிப்படி பூஜித்திருக்கிறாய். ஆகையால், உனக்குக்ஷேமத் தைச்செய்கிறேன். இவ்விதம் செய். தாமதம் வேண்டாம்' என்றுசொல் லிற்று. அக்னியால் இவ்விதம் சொல்லப்பட்ட உதங்கர் அவ்விதமே செய்தார். அக்னியானது ஸந்தோஷமடைந்து (நாகலோகத்தை) எரிக்க விரும்பிஜ்வலித்தது. பாரதரே! பிறகு, ஊதப்படுகின்ற அக்குதிரையின் மயிர்த்துவாரங்களினின்று நெருங்கியதும் நாகலோகத்திற்குப்பயத் தைச்செய்வதுமான புகை உண்டாயிற்று. பாரதரே! மஹாராஜரே! விருத்தியடைகின்றதும் அதிகமாயுள்ளதுமான அந்தப்புகையால்நாக லோகத்தில் ஒன்றும் அறியப்படவில்லை. ஜனமேஜயரே! ஐராவதன்

வாஸுகிமுதலான நாகர்களுடைய வீடுகளெல்லாம் ஆ! ஆ! என்னும ஒலியுள்ளனவாயின. பாரதரே! வீடுகள் புகையால் சூழப்பட்டு, பனியால் மூடப்பட்ட காடுகளும் மலைகளும்போல விளங்காமலிருந்தன. புகையால் சிவந்த கண்களுள்ளவரும் அக்னியின் தேஜஸால் மிக்க தாபமடைந்தவர்களுமான அவர்கள் மஹாத்மாவும் பார்க்கவருமான உதங்கருடைய நிச்சயத்தைத் தெரிந்துகொள்வதற்காக வந்தார்கள். நிலைகுலைந்து அலையும்கண்களுள்ளவர்களானஎல்லாரும், அதிக தேஜஸுள்ள அந்த மஹரிஷியின் நிச்சயத்தைக் கேட்டு விதிப்படி அவரைப் பூஜித்தார்கள். எல்லா நாகர்களும் முதியவர்களையும் இளைஞர்களையும் முன்னிட்டுத் தலைவணங்கி அஞ்சலி செய்துகொண்டு 'பகவானே! கிருபைசெய்யும்' என்று சொன்னார்கள். அந்தப் பன்னகர்கள் பிராம்மணரை அருள்புரியும்படிசெய்து பாத்யத்தையும் அர்க்கியத்தையும் அர்ப்பணம் செய்து, மிகவும் பூஜிக்கப்பெற்ற திவ்யகுண்டலங்களைக் கொடுத்தார்கள். பிறகு, நாகர்களால் பூஜிக்கப்பட்டவரும் பிரதாபமுள்ளவருமான அந்த உதங்கர் அப்பொழுது அக்னியைப் பிரதக்ஷிணம் செய்து குருவின் வீட்டுக்குச் சென்றார். மன்னரே! குற்றமற்றவரே! அந்த உதங்கர் அப்பொழுது கௌதமருடைய வீட்டுக்கு விரைந்து சென்று திவ்யமான குண்டலங்களைக் குருவின் மனைவியினிடம் கொடுத்தார். ஜனமேஜயரே! பிராம்மணஸ்ரேஷ்டரான உதங்கர், குருவினிடம் வாஸுகிமுதலான நாகர்களுடைய வரலாறனைத்தையும் உள்ளபடி சொன்னார். ஜனமேஜயரே! மஹாத்மாவான அந்த உதங்கர் இவ்விதம் மூவுலகங்களிலும் ஸஞ்சரித்துப் பிறகு, திவ்யமான அந்த ரத்னகுண்டலங்களைக் கொண்டுவந்தார். பரதஸ்ரேஷ்டரே! உதங்கரென்னும் அம்முனிவர் இவ்வித மஹிமை பொருந்தியவர்; சிறந்த தவமுள்ளவர். நீர் என்னை வினவியதைச் (சொன்னேன்)" என்று சொன்னார்.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் உதங்கருக்கு வரங்கொடுத்து ரைவதக மலையில் வந்ததும், அங்குவிளையாட்டுக்கள் நடந்ததும், கோவிந்தர் துவாரகைக்கு வந்து பெற்றோரை வணங்கியதும்.)**

ஜனமேஜயர், "பிராம்மணஸ்ரேஷ்டரே! சிறந்த புஜபலமுள்ளவரும் பெரும் புகழ்பெற்றவருமான கோவிந்தர் உதங்கருக்கு வரத்

தைக்கொடுத்துவிட்டு அ [redacted] என்னசெய்தார்?'' என்று வினவ, வைசம்பாயனர் சொ [redacted] கிறார்.

''கோவிந்தர் உத [redacted] தைக்கொடுத்துவிட்டு, ஸாத்யகியுடன், சீக்கிரமாகச் [redacted] சிறந்த குதிரைகளால் துவாரகையைக் குறித்தே சென் [redacted], அவர் தடாகங்களையும் நதிகளையும் வனங்களையும் ம [redacted] கடந்து அழகான துவாரகாபட்டணத்தை அடைந்தார் [redacted] ஜரே! அப்பொழுது, தாமரைக்கண்ணர் ஸாத்யகியுடன் [redacted] லைக்கு நடக்கும் உத்ஸவத்திற்குச் சென்றார். புருஷ [redacted] அந்தமலையோ பலவித ரூபமுள்ளவைகளும் சித்திரவேலைசெய்யப்பட்டவைகளும் ரத்தினமயமுமான கவசங்களால் மூடப்பட்டு விளங்கிற்று. (அந்தப்) பெரிய மலையானது சிறந்த பொன்மாலைகளாலும் புஷ்பங்களாலும் வஸ்திரங்களாலும் கல்பகவிருக்ஷங்களாலும் ஸுவர்ணமயமான தீபவிருக்ஷங்களாலும் அடிக்கடி காந்தியுள்ளதாகச் செய்யப்பட்டுக் குகைகளிலும் அருவிகளுள்ள இடங்களிலும் பகல்போலப் பிரகாசமுள்ளதாயிருந்தது. நாற்புறங்களிலும் விசித்ரமானவைகளும் மணிகளுடன்கூடியவைகளுமான பதாகைகளாலும் ஆடவர்களாலும் மகளிர்களாலும் ஒலியுள்ளதாகச் செய்யப்பட்டுக் கானம்செய்வதுபோலவும் முனிகணங்களுடன்கூடின மேருகிரிபோலப் பார்க்க மிக்க அழகாகவும் இருந்தது. பாரதரே! மதித்தவர்களும் மிக்க ஸந்தோஷமுள்ளவர்களுமான மங்கையரும் ஆடவரும் கானம்செய்யும் ஒலியானது மலைகளுள் சிறந்த ரைவதகத்தினுடைய ஒலிபோல ஆகாயத்தை அளாவியது. விளையாட்டு முதலானவற்றில் ஆசையால் மதித்தவர்களும் மத்யம் முதலியவற்றால் மதித்தவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களுமான ஜனங்கள் கர்ஜிக்கும் சப்தத்தால் நிறைந்ததும், அவ்வாறே, கலகலவென்னும் ஒலியோடு கூடினதுமான அந்த மலையானது மனத்திற்கு இன்பமாக இருந்தது. கடைகளும் கடைவீதிகளுமுள்ளதும் அழகானதும் பக்ஷ்யபோஜ்யங்களின் ஸஞ்சாரமுள்ளதும் வஸ்திரங்கள் மாலைகள் இவற்றின்குவியலுள்ளதும் வீணையும் புல்லாங்குழலும் மிருதங்கமுமுள்ளதும் தீனர்களுக்கும் குருடர்களுக்கும் ஏழைகளுக்கும் எப்பொழுதும் கள்ளும் சாராயமும் கலந்த பக்ஷ்யமும் போஜ்யமும் கொடுக்கப்படுவதுமான அந்தச் சிறந்த மலையின் உத்ஸவமானது சிறந்த கல்யாணமாக விளங்கிற்று. ரைவதக மலையின் உத்ஸவத்தில் புண்யமானவீடுகளுள்ளதும் புண்யம்செய்த வீரர்கள் வஸிக்கப் பெற்றதும் விருஷ்ணிவீரர்களுக்கு விளையாட்டிடமும் பலவித வீடுகள்நிறைந்ததும் மாதவர் நேரில்

வந்திருப்பதால் ஸந்தோஷத்துடன் (வந்திருக்கும்) தேவக்கூட்டங்களுள்ளதுமான அம்மலையானது அப்பொழுது தேவலோகம்போல விளங்கிற்று. தேவர்களும் கந்தர்வர்களும் ரிஷிகளும் மறைந்திருந்துகொண்டு, (கோவிந்தரை நோக்கி), 'தேவரே! நீர் எல்லாத் தர்மங்களையும் வ்ருத்திக்கச் செய்பவரும் அஸுரர்களை அழிப்பவரும் படைப்பவரும் படைக்கப்படும் பொருளும் ஆதாரமும் காரணமும் தர்மத்தையும் வேதத்தையும் அறிந்தவருமாக இருக்கிறீர். உம்மால் உலகம் படைக்கப்படுகிறது. இதனை நாங்கள் (உம்முடைய)மாயையால் அறியவில்லை. உம்மை ரக்ஷகராகவும் பரமேஶ்வரராகவும்மட்டும் அறிகிறோம். கோவிந்தரே! (உம்முடைய) ஸாந்நித்யமானது பிரம்மாமுதலானவர்களுக்கும் பாதுகாப்பாக இருக்கிறது. (உமக்கு) நமஸ்காரம்' என்று ஸ்தோத்திரம் செய்தார்கள். இவ்விதம் (தேவர்களும்) மனிதர்களும் தேவகீபுத்திரரை ஸ்தோத்திரம்செய்து பூஜிக்கும்போது அந்தச் சிறந்த மலையானது இந்திரனுடைய வீடுபோல இருந்தது. பிறகு, (இவ்விதம்)பூஜிக்கப்படும் அந்தவாஸுதேவரும் ஸாத்யகியும் சுபமான தம்வீட்டுக்குச் சென்றார்கள். வாஸுதேவர், நெடுநாள் அயலூருக்குச் சென்றிருந்து, இந்திரன் தானவர்களிடத்தில் செய்வதைப்போல் எளிதில் செய்யமுடியாதகார்யத்தைச்செய்து, மிக்கமனக்களிப்புடன் (தமது வீட்டில்) பிரவேசித்தார். வருகின்றவரும் மஹாத்மாவுமான அவரைப் போஜர்களும் விருஷ்ணிகளும் அந்தகர்களும், தேவர்கள் இந்திரனை எதிர்கொள்வதுபோல, எதிர்கொண்டுவந்தார்கள். மேதாவியான அவர் அப்பொழுது அவர்களைப் பூஜித்து க்ஷேமம் விசாரித்து ஸந்தோஷத்துடன் தந்தையையும் தாயையும் நமஸ்கரித்தார். அந்தத் தாய்தந்தையர்களால் நன்கு ஆலிங்கனம்செய்து இனிய மொழியுரைக்கப் பெற்றவரும் சிறந்த கைகளுள்ளவருமான அந்தக் கிருஷ்ணரை அந்த எல்லா விருஷ்ணிகளும் அருகில் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். பாதங்களைக்கழுவிச் சுத்தம்செய்துகொண்டவரும் இளைப்பாறினவரும் அதிகதேஜஸுள்ளவருமான அந்தக் கேசவர், பிதாவினால் வினவப்பட்டு, அந்தப் பெரிய யுத்தத்தை முழுமையும் சொல்லலானார்.

---

[redacted]ு அத்யாயம்.

அந க[redacted]வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் ப[redacted]ஸுதேவர் முதலானவர்களுக்குச் சொல்லியது.)

வஸுதேவ[illegible]ஷ்ணி குலத்தில் பிறந்தவனே! புத்திர! தினந்தோறும் கதைக[illegible]ம்பங்களில் மனிதர்கள் சொல்லிக்கொண்டிருக்கும்போது, [illegible]த்புதமான யுத்தத்தைக் கேட்டிருக்கிறேன். குற்றமற்றவனே! சிறந்த [illegible]களுள்ள நீயோ நேரில் பார்த்தவன்; கார்யத்தை அறிந்தவன். ஆகையால், யுத்தத்தை நடந்தபடி எனக்கு நன்றாகச் சொல். மகாத்மாக்களான பாண்டவர்களுக்கும், அஸ்திரப் பயிற்சியுள்ளவர்களும் பலவிதமான வேஷமும் வடிவமுமுள்ளவர்களும் பல தேசங்களில் வஸிப்பவர்களுமான மற்றுமுள்ள அநேக அரசர்களுக்கும், பீஷ்மர், கர்ணன், கிருபர், துரோணர், சல்யன் முதலானவர்களுடன் மிகச் சிறந்ததான அந்த யுத்தம் நடந்த விதத்தைச் சொல்' என்று வினவினார். இவ்விதம் தந்தையால் அன்னையின் பக்கத்தில் வினவப்பட்ட தாமரைக்கண்ணர் அப்பொழுது யுத்தத்தில் கௌரவவீரர்கள் நசித்ததை உள்ளபடி சொல்லலானார்.

வாஸுதேவர், 'மஹாத்மாக்களான க்ஷத்திரியர்களுடைய மிக்க ஆச்சரியமான செயல்கள் மிகுதியாக இருப்பதால், அவை நூறு வருஷங்களானாலும் கணக்கிட்டுச் சொல்ல முடியா. தேவருடைய காந்தி போன்ற காந்தியுள்ளவரே! மன்னர்களுடைய முக்கியமான செய்கைகளைச் சுருக்கமாக நான் உள்ளபடி சொல்லுகிறேன்; கேளும். [1] சுப்பிரமணியர் தேவர்களுக்குச் சேனாதிபதியாயிருந்ததுபோல, குருகுலத்தில் தோன்றிய பீஷ்மர், கௌரவஸ்ரேஷ்டர்களுடைய பதினோர் அக்ஷௌஹிணி ஸேனைகளுக்கும் தலைவரான ஸேனாதிபதியாக இருந்தார். புத்திசாலியான சிகண்டியானவன், ஸ்ரீமானான அர்ஜுனனால் ரக்ஷிக்கப்பட்டுப் பாண்டவர்களுடைய ஏழு அக்ஷௌஹிணி ஸேனைகளுக்குந் தலைவனாகி ஸேனாதிபதியாக இருந்தான். மஹாத்மாக்களான அந்தப் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பத்துநாட்கள் மிகப் பெரியதும் மயிரரும்பச் செய்வதுமான யுத்தம் நடந்தது. சிகண்டியானவன் அர்ஜுனனுடன் சேர்ந்து மிக்க காந்தியுள்ளவரும் யுத்தம் செய்யாமலிருப்பவருமான அந்தப் பீஷ்மரை அநேக பாணங்க

1 'வாஸவ:' என்பது வேறுபாடம்.

ளால் அடித்தான்: பிறகு, அவர் தி [illegible] ராகிச் சரதல்பத்தை அடைந்து, தக்ஷிணாயனம் சென் [illegible] வந்தபின் (பரலோகம் செல்வதாகக்) காலத்தை ஏற்படு [illegible] ார். பிறகு, சுக்கிரன் அஸுரராஜனுக்கு ஸேனாதி [illegible] போல அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்தவரும் [illegible] மான துரோணர் கௌரவராஜனான துர்யோதனனுக்கு [illegible] யாக இருந்தார். பிராம்மணச்ரேஷ்டரான துரோணர், [illegible] ன்பது அக்ஷௌஹிணிகளால் சூழப்பட்டவரும் கிருபர் [illegible] அச்வத்தாமா முதலானவர்களால் ரக்ஷிக்கப்பட்டவரு [illegible] உத்ஸாஹத்துடன் இருந்தார். சிறந்த அஸ்திரங்களை [illegible] ம் மேதாவியுமான திருஷ்டத்யும்னனே மித்திரனால் [illegible] க்கப்படுவது போலப் பீமனால் ரக்ஷிக்கப்பட்டுப் பாண்டவர் [illegible] ஸேனாபதியாக இருந்தான். பெரிய மனமுள்ள அவனும் [illegible] தன் தங்கைக்குச் செய்த அபகாரங்களை நினைத்துத் [illegible] விரும்பி யுத்தத்தில் பெரிய காரியத்தைச் செய் [illegible] பத்ரைகும் திருஷ்டத்யும்னனுக்கும் நடந்த அந்த யுத்தத்தில் பல தேசாகளிலிருந்து வந்தவர்களும் வீரர்களுமான அந்த மன்னர்கள் பெரும்பான்மையாக மரணமடைந்தார்கள். மிக்க பயங்கரமான அந்த யுத்தம் ஐந்துநாள் நடந்தது. பிறகு, துரோணர் களைத்துத் திருஷ்டத்யும்னனுக்கு வசப்பட்டார். பிறகு, யுத்தத்தில் துரியோதனனுடைய படையில் கர்ணன் மிச்சமுள்ள ஐந்து அக்ஷௌஹிணிகளால் சூழப்பட்டு ஸேனாபதியாக இருந்தான். பெரும்பாலும் சிறந்த வீரர்கள் கொல்லப்பட்டவைகளான பாண்டவர்களுடைய மூன்று அக்ஷௌஹிணி ஸேனைகளோ அர்ஜுனனால் காக்கப்பட்டு நிலைபெற்று நின்றன. பிறகு, இரண்டாவது தினத்தில் கொடியவனான கர்ணன், விட்டிற்பூச்சிகள் நெருப்பை எதிர்ப்பதுபோல அர்ஜுனனை எதிர்த்து மரணமடைந்தான். கர்ணன் கொல்லப்பட்டவுடன், கௌரவர்கள் உத்ஸாஹமும் பராக்கிரமமும் அற்று மூன்று அக்ஷௌஹிணிகளுடன் மத்திர தேசத்தரசனான சல்யனைச் சூழ்ந்துகொண்டார்கள். பெரும்பான்மையாக வாகனங்கள் கொல்லப்பட்டுள்ள பாண்டவர்களோ, உத்ஸாஹமற்று மிச்சமுள்ள ஓர் அக்ஷௌஹிணியுடன் யுதிஷ்டிரரைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது, குருராஜரான யுதிஷ்டிரர் செய்ய மிக அரிதான காரியத்தைச்செய்து அன்று நடுப்பகலில் மத்திரராஜனான சல்யனைக் கொன்றார். சல்யன் கொல்லப்பட்டவுடன், கம்பீரமான மனமுள்ளவனும் அளவற்ற பாராக்ரமமுள்ளவனுமான ஸஹ

தேவன் அந்தச்சண்டை ருஷ்ண, த சகுனியைக் கொன்றான். சகுனிகொல்லப்பட்டவு முன்னின் லும் ஸேனாவீரர்கள் கொல் லப்பட்டுத் துரியோதன ன கமனத்துயரமுற்றுக்கதாயுதத்தை க்கையிலேந்திக்கொண ஓடினான். பிரதாபசாலியான பீமஸேனன் மிக்க கோபங்கொண்டு வனைப் பின் தொடர்ந்து சென்று த்வை பாயனமென்னும் மடுவை ஜலத்திலிருக்கும் அவனைக்கண்டான். பிறகு, கொல்லப்பட்டதுபோ மிச்சமுள்ள ஸேனையோடு ஐந்து பாண்ட வர்களும் மடுவிலிரு ம் அந்தத்துரியோதனனை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு ஸந்தோ கார்ந்தார்கள். ஜலத்தில் முழுகி யிருக்கும் அந்நும் மிக்க தவருக்கடுஞ்சொற்களாகிற பாணங்களால் மிகவும் அடிக்கப்பொழுது வலக் கதாயுதத்தைக் கையிலேந்தி வெளியில் வந்தானர். ள்ள அருகில் வந்தான். பிறகு, அந்தத் துர்யோதன ஜன பெரிய யுத்தத்தில் அரசர்கள் பார்த்துக்கொண் டிருக்கும் து பீமஸேனனால் பராக்கிரமத்தால் கொல்லப்பட் டிறற்றுக் க துரோண புத்திரரான அச்வத்தாமா தந்தையின் வதத் ன பொறாமல் இரவில் பாசறையில் நன்கு நித்திரை செய்யும் அந் தப் பாண்டவ ஸேனையைக் கொன்றார். புத்திரர்களும் மித்திரர்களும் ஸேனையும் கொல்லப்பட்டு ஐந்து பாண்டவர்களும் ஸாத்யகியை ஸஹாயமாகக்கொண்ட நானும் மிஞ்சினோம். கிருபரும் க்ருதவர் மாவும் துரோணபுத்திரரும் யுத்தத்தினின்று விடப்பட்டார்கள். கௌரவனான யுயுத்ஸுவும் பாண்டவர்களை அடுத்திருந்ததால் விடப்பட்டான். கௌரவேந்திரனான துர்யோதனன் பரிவாரங் களுடன் கொல்லப்பட்டவுடன், விதுரரும் ஸஞ்சயனும் தர்ம புத்திர ரிடம் வந்தார்கள். பிரபுவே! இவ்விதம் அந்த யுத்தமானது பதி னெட்டு நாள் நடந்தது. அந்த யுத்தத்தில் அந்த அரசர்கள் கொல் லப்பட்டு ஸுவர்க்கம் சென்றார்கள்' என்று சொன்னார்.மஹாராஜரே! மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணுகின்ற அந்தக் கதையைக்கேட்ட விருஷ்ணிகளுக்கு அப்பொழுது துக்கமும் சோகமும் வருத்தமும் உண்டாயின.

---

ஸ்ரீ ம ஹ [redacted] : ப ஸ வ

அறுபத ர் திய [redacted] ண்ணை

அநுக்ரா ப ம ... வு

(கோவிந்தர் அபிமன்யுவதத்தைச் சொல்லாய[redacted] ட ஸுபத்திரை அதனைச் சொல்லச்சொல்லியதும், வஸுதேவ[redacted] அதனைக்கேட்டு மூர்ச்சித்துவிழக் கோவிந்தர் தேற்றியதும்.)

பிரதாபமுள்ளவரும் வீரரும் சிறந்த புத்தியுள்ளவரும் கம்பீரமான மனமுள்ளவருமான அந்த வாஸுதேவர் அப்பொழுது பிதாவின் முன்னிலையில் மஹாபாரதயுத்தத்தை ... பிக்கொண்டே அந்தக் கதையின் முடிவுவரையில், வஸுதேவருக்கு அப்பிரியம் உண்டாக வேண்டாமென்றும் சிறந்த புத்தியுள்ள ... தேவர் பெண்ணின்மைந்தனுடைய மிக்க கொடுமையான வதத்தைக் கேட்டுத் துக்கத்தாலும் சோகத்தாலும் மிகத் தபிக்கப்பட்டவராக வேண்டா என்றும் கருதி, அபிமன்யுவின் வதத்தைச்சொல்லவில்லை. ஸுபத்ரையோ யுத்தத்தில் நேர்ந்த தன்புத்திரனுடைய வதத்தைச் (சொல்லாமல்) தாண்டிச் செல்லும் அந்தக் கிருஷ்ணனை நோக்கி, 'கிருஷ்ண! அபிமன்யுவின்வதத்தைச் சொல்லும்' என்று சொல்லிப் பூமியில் விழுந்தாள். அப்பொழுது, பூமியில் விழுந்த அந்த ஸுபத்ரையைக் கண்டவுடன், அந்த வஸுதேவரும் துக்கத்தால் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தார். மஹாராஜரே! பிறகு, பேரனுடைய வதத்தால் துக்கத்தாலும் சோகத்தாலும் தாக்குண்ட அந்தவஸுதேவர், மாதவரை நோக்கி, 'தாமரைக் கண்ண! நீ பூமியில் ஸத்யவாதி என்று பிரஸித்தி பெற்றவனல்லையோ? பகைவரைக் கொல்பவனே! இப்பொழுது எனக்குப் பேரனுடையவதத்தை நீ சொல்ல வில்லையே? பிரபுவே! ஆகையால், நீ தங்கையின் புத்திரனுடைய வதத்தை எனக்கு உண்மையாகச்சொல். உனக்குக் கண்ணுக்குச்சமமான அபிமன்யு யுத்தத்தில் பகைவர்களால் எவ்வாறு கொல்லப்பட்டான்? ஆ! விருஷ்ணிகுலத்தில் பிறந்தவனே! மனிதர்களால் காலம்வராமலிருக்கும்போது மரிக்க முடியாது. ஆகையால், என்னுடைய ஹிருதயமானது துக்கத்தால் நூறுகவெடிக்கவில்லை. தாமரைக்கண்ண! சஞ்சலமான கண்களுள்ளவனும் எனக்குப் பிரியனுமான அபிமன்யுவானவன் யுத்தத்தில் உன்னிடத்தில் தாயாரான ஸுபத்ரையைக்குறித்தும் என்னைக்குறித்தும் என்ன சொன்னான்? கோவிந்த! யுத்தத்தில் புறங்காட்டாமல் பகைவர்களால் கொல்லப்பட்டானே? அவனால் யுத்தத்தில் முகமானது விகாரமுள்ளதாகச்

செய்யப்படாமலிருந்ததா [redacted] ருஷ்ண, [redacted] நந்த தேஜஸுள்ளவனும் ஸமர்த்தனுமான அவன் [redacted] முன்னிலையி [redacted] தான் (பகைவரை) ஜயிப்பதாகச் சிறுபிள்ளைத் [redacted] னத்தால் புகழ் [redacted] ந்து சொன்னான். கேசவ! பாலனை அவன், துரோ [redacted] ர் கர்ணன் கிரு [redacted] பர் முதலானவர்களால் வஞ்சிக்கப்படாமல் கொல்ல [redacted] ட்டுப் பூமியில் [redacted] டுத்தானா? அதனை எனக்குச் சொல். என் பெண் [redacted] ன் அருமைப் [redacted] தல்வனான அந்த அபிமன்யுவோ எப்பொழுதும் [redacted] யுத்தத்தில் து [redacted] ராணரையும் பீஷ்மரையும் பலிஷ்டர்களுள் சிறந்த [redacted] னான கர்ணனையும் பகைத்துக் கொண்டிருந்தான்' என்ற வாக்கியத்தைச் சொன்னார். இவ்விதம் பலவாறாகப் புலம்புகின்றவரும் மிக்க துயரமுற்றவருமான பிதாவைப் பார்த்து, கோவிந்தர் அப்பொழுது மிகவும் துக்கத்துடன் பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானார்.

'அவன் போர் முனையில் முகத்தை விகாரப்படுத்திக்கொள்ளவில்லை. அவன் கடத்தற்கரிய போரில் பின்வாங்கவில்லை. மன்னர்களை நூற்றுக் கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் கூட்டமாகவும் கொன்று துரோணராலும் கர்ணனாலும் துன்புறுத்தப்பட்டுத் துச்சாஸன குமாரனுக்கு வசப்பட்டான். பிரபுவே! அபிமன்யு ஒருவனோடு போர் புரிந்தால் யுத்தத்தில் அவனொருவனைக் கொல்ல இந்திரனாலும் ஒரு காலும் முடியாது. அப்பொழுது, ஸம்சப்தகர்கள் அர்ஜுனனை யுத்தத்திற்காக அழைத்துப் போக, துரோணர்முதலானவர்கள் கோபங்கொண்டு யுத்தத்தில் அந்த அபிமன்யுவைச் சூழ்ந்து கொண்டார்கள். தந்தையாரே! விருஷ்ணிகுலத்தில் பிறந்தவரே! பிறகு, உம்முடைய பேரனான அபிமன்யுவானவன் யுத்தத்தில் சத்துருக்களுக்கு மிகப் பெரியவதத்தைச் செய்து துச்சாஸன குமாரனுக்கு வசப்பட்டான். சிறந்த புத்தியுள்ளவரே! அவன் நிச்சயமாக ஸுவர்க்கத்தை அடைந்தான். சோகத்தை விடுவீராக. நல்ல புத்தியுள்ளவர்கள் வியஸனத்தை அடைந்தாலும் மனவருத்தமடையார். எவன் மஹேந்திரனுக்கொப்பான துரோணர் கர்ணன் முதலானவர்களை யுத்தத்தில் எதிர்த்துப் போர் புரிந்தானோ அவன் ஏன் ஸுவர்க்கத்தை அடையமாட்டான்? (பிறரால்) ஜயிக்கமுடியாதவரே! நீர் சோகத்தை விடும். கோபத்திற்கும் வசப்படாதீர். பகைவரின் பட்டணங்களை ஜயிப்பவனான அவன் சஸ்திரங்களால் பரிசுத்தமான கதியை அடைந்தான். அந்தவீரன் கொல்லப்பட்டவுடன், என்னுடைய ஸஹோதரியான இந்த ஸுபத்திரையானவள் துக்கத்தால் பீடிக்கப்பட்டுப் புத்திரனை அடைந்து குரரிபக்ஷிபோல அழுதாள். த்ரௌ

பதியினிடம் சென்று [illegible] தது[illegible]மமா! குழந்தைகளெல்லா ரும் எங்கே? அவர்களை [illegible]ான் பார்க்க[illegible]ருமபுகிறேன்' என்று சொல் லிப் பரிதபித்தாள். இ[illegible]ளுடைய வா[illegible]தையைக் கேட்டு அந்தக் கௌரவஸ்திரீகளெல்லே[illegible] நம் இவளைக[illegible]களால் பிடித்துக்கொண்டு மிக்க வருத்தத்துடன் அழுதார்கள்; இ[illegible]ர உத்தரையை நோக்கி, 'நல்லவளே! உன்னுடைய பர்த்தா எங்கே சென்றான்? அவனுடைய வரவை நீ எனக்குச் சீக்கிரம் அறிவிப்பாயாக. விராடன் பெண்ணே! உன்னுடைய கணவன் எப்பொழுதும் என்னுடைய வார்த்தையைக் கேட்டவுடன் வீட்டிலிருந்து வெளியில்வருவானல்லவா? இப்பொழு து ஏன் வரவில்லை? அபிமன்யுவே! மஹாரதர்களும் பச்சாத்தாபமு ள்ளவர்களுமான உன்னுடைய மாதுலர்களெல்லாரும் நீ இங்கு யுத் தம் செய்யவிரும்பி வந்திருப்பதாகவும் க்ஷேமமாக இருப்பதாகவும் சொன்னார்கள். பகைவரை அடக்குபவனே! இப்பொழுது முன் போல யுத்தத்தைப்பற்றி எனக்குச் சொல். இவ்விடத்தில் இவ்விதம் புலம்பும் எனக்கு நீ ஏன் இப்பொழுது மறுமொழி கூறவில்லை' என்று புலம்பினாள். விருஷ்ணிகுலத்தில் பிறந்தவளான இவளுடைய இவ்விதமான அந்த அழுகையைக் கேட்டுக் குந்தியானவள் மிக்க துக்கத்தால் பீடிக்கப்பட்டு, பிறகு, மிருதுவாக (ப்பின்வரும்) வாக்கி யத்தைச் சொல்லலானாள். 'ஸுபத்திரையே! வாஸுதேவனாலும் ஸாத் யகியினாலும் பிதாவினாலும் அருமையாக வளர்க்கப்பட்ட அந்தப்பா லன் காலதர்மத்தால் கொல்லப்பட்டான். யதுகுலத்தில் பிறந்தவ ளே! மனிதர்களுடைய தர்மம் இவ்விதமிருக்கிறது. துயரப்படாதே. (ஒருவராலும்) அவமதிக்க முடியாத உன்னுடைய புத்திரனே உத் தமமான கதியை அடைந்தான். தாமரையிதழ்போன்ற கண்களுள்ள வளே! நீ மஹாத்மாக்களான க்ஷத்திரியர்களுடைய பெரிய குலத் தில் பிறந்தவளாக இருக்கிறாய். சஞ்சலமான கண்களுள்ள குழந்தை யைப்பற்றித் துயரப்படாதே. நல்லவளே! கர்ப்பமுள்ளவளான உத் தரையை நீ பார்த்துக்கொள். துயரப்படாதே. இந்தப் பெண் சீக் கிரத்தில் அவனுடைய புத்திரனைப் பெறுவாள்' என்று சொன்னாள். யதுகுலத்தைத் தாங்குபவரே! குந்தியானவள் இவ்விதம் இவளை ஸமாதனம் செய்து அடக்க முடியாத சோகத்தை விட்டு அவனுக்கு ஸ்ராத்தத்தை செய்வித்தாள். தர்மத்தை அறிந்தவரான யுதிஷ்டிர ராஜரிடமும் பீமனிடமும் யமனுக்கொப்பான நகுலஸஹதேவர்களி டமும் அனுமதிபெற்றுப் பலவிதமான தானங்களைக் கொடுத்தாள். யதுகுலத்தைத் தாங்குபவரே! விருஷ்ணிகுலத்தில் பிறந்தவ

ளான குந்தியானவள், பிற . . . பிராம்மணர்களுக்கு அநேகம் பசுக் களைக் கொடுத்து ஸந் . . . ஷமடைந்து விராடனுடைய புத்திரி யான உத்தரையைப் பார் . . . து,' விராடன் . . . பெண்ணே! இகழப்படாத வளே! நீ இப்பொழுது . . . த்தாவைக் கு . . . த்து வருத்தப்படவேண் டாம். அழகிய இடை . . . ளவளே! கர் . . . த்திலிருக்கும் சிசுவைக் காப்பாற்று' என்று இந்த வார்த்தையைச் . . . சொன்னாள். சிறந்த காந்தி யுள்ளவரே! குந்தியானவள் அப்பொழுது இவ்விதம் சொல்லி ஓய்ந் தாள். நான் அவளிட . . . அனுமதிபெற்றே இந்த ஸுபத்திரையை (இவ்விடம்) அழைத்து வந்தேன். கௌரவத்தைக் கொடுப்பவரே! உம்முடைய பெண்ணின் புத்திரனை அந்த அபிமன்யு இவ்விதம் மரணமடைந்தான். (பிறரால்) அவமதிக்க முடியாதவரே! மனவருத் தத்தை விடும். துக்கத்தில் மனத்தைச் செலுத்தாதீர்' என்று சொன் னார்.

---

அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(வஸுதேவர்முதலியோர் அபிமன்யுவுக்கு ஶ்ராத்தஞ்செய்ததும், வியாஸர் அஸ்தினபுரம் வந்து உத்தரைமுதலியோரைத்தேற்றித் தர்ம புத்திரரைஅஶ்வமேதயாகஞ் செய்யச்சொல்லிச் சென்றதும்.)**

தர்மாத்மாவும் சூரனுடையபுத்திரருமான வஸுதேவர், புத்திர ருடைய இந்த வசனத்தைக் கேட்டு, அப்பொழுது சோகத்தைவிட்டு (அபிமன்யுவைக் குறித்து) மிகச் சிறந்ததான ஶ்ராத்தத்தைச் செய் தார். அவ்வாறே, வாஸுதேவரும், ஸஹோதரியின் புத்திரனும் மஹாத்மாவும் பிதாவுக்கு எப்பொழுதும் பிரியனுமான அபிமன்யு வுக்கு ஶ்ராத்தத்தைச் செய்தார். சிறந்த தேஜஸுள்ள அறுபது லக்ஷம் பிராம்மணர்களை எல்லாக் குணங்களுடனும்கூடின போஜ் யத்தை விதிப்படி புஜிக்கும்படி செய்தார். சிறந்த புஜபலமுள்ள அவர், அப்பொழுது பிராம்மணர்களுக்கு உடுக்கவஸ்திரங்களைக் கொடுத்துப் பொருளாசையைப் போக்கினார். அது மயிர்க்கூச் சத்தை உண்டுபண்ணுவதாயிருந்தது. அப்பொழுது, பிராம்மணர்கள் (கிருஷ்ணனால்) கொடுக்கப்படும் ஸுவர்ணத்தையும் பசுக்களையும் படுக்கைகளையும் ஆடைகளையும் மிக அதிகமென்று கூறினார்கள். பிறகு, வாஸுதேவரும் தாசார்ஹருமான கிருஷ்ணரும் பலராமரும் ஸாத் யகியும் ஸத்யகனும் அப்பொழுது அபிமன்யுவுக்கு ஶ்ராத்தத்தைச்

செய்து மிக்க துயரத்தால் வருந்தி [illegible]தலை அடையவில்லை. அவ்வாறே, ஹஸ்தினபுரத்தில் வீரர்களான பாண்டவர்களும் அபிமன்யுவைவிட்டுப் பிரிந்து ஆறுதலை அடையவில்லை. ராஜேந்திரரே! விராடன்பெண்ணான உத்தரையானவள் கணவன் (மரித்த) துக்கத்தால் பீடிக்கப்பட்டுப் பல நாள் பாஜனஞ்செய்[illegible]மலிருந்தாள். அது மிகவும் துக்கிக்கத்தக்கதாக இருந்தது. (உத்தரையால்) தரிக்கப்பட்ட அந்தக் கர்ப்பமானது வயிற்றிலிருக்கும்பொழுதே, அறிஞரும் சிறந்த தேஜஸுள்ளவருமான வியாஸர் (அதைத்) திவ்யதிருஷ்டியால் அறிந்து, பிறகு, (ஹஸ்தினபுரம்) வந்து விசாலமான கண்களுள்ள குந்தியையும் உத்தரையையும் நோக்கி, 'இந்தச் சோகத்தை விட்டுவிடுங்கள். புகழ்பெற்றவளே! வாஸுதேவனுடைய பிரபாவத்தாலும் நான் சொல்வதாலும் உனக்கு அதிக தேஜஸுள்ள புத்திரன் பிறப்பான். இவன் பாண்டவர்களுக்குப் பிறகு பூமியைப் பரிபாலிக்கப்போகிறான்' என்று சொன்னார். பாரதரே! வியாஸர் தனஞ்சயனைப் பார்த்துத் தர்மராஜர் கேட்டுக்கொண்டிருக்கும்போது, (அவர்களைக்)களிக்கச்செய்துகொண்டு, 'குருஶ்ரேஷ்ட! பகைவரை அழிப்பவனே! உனக்குப் பெரிய பாக்கியமுள்ளவனும் சிறந்த சித்தமுள்ளவனுமான பேரன் பிறக்கப்போகிறான். அவன் கடல்சூழ்ந்த பூமியைத் தர்மமாகப் பரிபாலிக்கப் போகிறான். ஆகையால், நீ சோகத்தைவிடு. இது விஷயத்தில் நீ ஆலோசிக்க வேண்டாம். இது உண்மையே ஆகும். குருநந்தன! முந்தி விருஷ்ணிவீரனான கிருஷ்ணன் சொன்னது அவ்விதமே ஆகும். நீ இதுவிஷயத்தில் ஆலோசிக்கவேண்டாம். அழிவற்றவைகளும் தன்னால் ஜயிக்கப்பட்டவைகளுமான தேவர்களுடைய உலகங்களை அடைந்தவனும் வீரனுமான அந்த அபிமன்யுவைப்பற்றி நீயும் மற்றக் கௌரவர்களும் துயரப்பட வேண்டாம்' என்று இந்த வாக்கியத்தைச் சொன்னார். மஹாராஜரே! பிதாமஹரான வியாஸர் இவ்விதம் சொல்லியதைக் கேட்ட தர்மாத்மாவான அந்தத்தனஞ்சயன் அப்பொழுது சோகத்தைவிட்டு ஸந்தோஷமுள்ளவனானான். தர்மத்தை அறிந்தவரே! சிறந்த புத்தியுள்ளவரே! உம்முடைய தந்தையாரும், அந்தக் கர்ப்பத்தில், சுக்லபக்ஷத்தில் சந்திரன்போல இஷ்டப்படி விருத்தியடைந்தார். பிறகு, அந்த வியாஸர் அப்பொழுது யுதிஷ்டிரராஜரை அஶ்வமேதத்தைச் செய்யும்படி உத்தரவு செய்துவிட்டு மறைந்தார். ஐயா! மேதாவியான தர்மராஜரும் வியாஸருடைய அந்த வார்த்தையைக் கேட்டுத் தனத்தைக் கொண்டுவருவதற்காகச் செல்ல நினைத்தார்" என்று சொன்னார்,

## அறுபத்[redacted]ருவது அ[redacted]ாயம்.

## அநுகீ ர்வம்.[redacted]தொடர்ச்சி.)

(தருமபுத்திரர் வியாஸ[redacted] கட்டளைப்ப[redacted]பீமன் முதலியவருடன் ஆலோசித்து ய[redacted]க்குப் பொருள்[redacted]காண்டுவருதற்காகத் தம்பியர்[redacted]வருடன் இமயம[redacted]யை நோக்கிப் [redacted] புறப்பட்டது.)

ஜனமேஜ[redacted]ராம்மணரே! மஹாத்மாவான வியாஸர் சொன்ன இந்த வார்த்தையைக் கேட்டு, (தர்மபுத்திரர்), அப்பொழுது அஸ்வமேதத்தைக் குறித்து மேலே என்ன செய்தார்? பிராம்மணஸ்ரேஷ்டரே! மருத்தன் பூமியில் வைத்திருந்த ரத்தினத்தை எவ்விதம் அடைந்தார்? அதனை எனக்குச் சொல்லும்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

"தர்மராஜரான யுதிஷ்டிரர் வியாஸருடைய வார்த்தையைக் கேட்டு எல்லா ஸஹோதரர்களையும் வரவழைத்துப் பீமஸேனனையும் அர்ஜுனனையும் மாத்ரீபுத்திரர்களும் இரட்டையர்களுமான நகுல ஸஹதேவர்களையும் பார்த்துக் காலத்திற்கேற்ற வார்த்தையைச் சொல்லலானர். 'வீரர்களே! [1]மிக்க பிராஜ்ஞர்களே! மஹாத்மாவும் கௌரவர்களுக்கு நன்மையை விரும்புகிறவரும் கிருஷ்ணனென்று பெயருள்ளவரும் அறிஞரும் தவத்தில் முதிர்ந்தவரும் பூஜ்யரும் ஸுஹ்ருத்துக்களுக்கு க்ஷேமத்தை விரும்புகிறவரும் குருவும் தர்மசீலரும் ஆச்சர்யமான செய்கையுள்ளவருமான வியாஸரும் பீஷ்மரும் புத்தியுள்ள கோவிந்தரும் பிரியத்துடன் சொன்ன வார்த்தையை நீங்கள் கேட்டீர்களா? பாண்டவர்களே! நான் அதனை நினைத்து நன்றாகச் செய்ய விரும்புகிறேன். அது வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் நம்மெல்லாருக்கும் ஹிதமானதன்றோ? பிரம்மவாதியான வியாஸருடைய வார்த்தை எப்பொழுதும் சுபத்தைத் தரத்தக்கது. குருஸ்ரேஷ்டர்களே! இந்த எல்லாப் பூமியும் ரத்தினங்கள் குறைந்ததாக இருக்கிறது. அரசர்களே! ஆகையினால்தான், அப்பொழுது வியாஸர் மருத்தனுடைய தனத்தைப்பற்றிச் சொன்னர். இது உங்களுக்கு இஷ்டமானல், இதைத் தகுந்ததென்று நீங்கள் நினைப்பீர்களானல், எல்லோரும் இதைக் கொண்டுவருவோம். பீம! உன்னுடைய அபிப்பிராயம் என்ன?' என்று வினவினர்.

1 'மஹா ப்ராஜ்ஞா:' என்று மாற்றப்பட்டது.

குருகுலஸ்ரேஷ்ட ர! அபம-பா[redacted] யுதிஷ்டிரராஜர் இவ்வித மான வாக்யத்தைச் செ ன்னவுடன், [redacted]ஸேனன் அஞ்சலிசெய்து கொண்டு ராஜஸ்ரேஷ்ட ன யுதிஷ்டி[redacted]ர நோக்கி, 'சிறந்த கைக ளுள்ளவரே! வியாஸர் ச ரிய தனத்தை[redacted] கொண்டுவருதலைப்பற்றி நீர் சொன்னது எனக்கு ஷ்டம். பிரபு[redacted] எந்தத் தனம் விரும்பப் பட்டதோ அதைத் தர் ாக அடைவே[redacted] மஹாராஜரே! காரியம் நிறைவேறினதே ஆகு மன்பது என் ய எண்ணம். நாம் மஹாத்மாவான பார்வதரா ஜனை நமஸ்கரித்து ரமசிவனைப் பூஜித்து அதைக் கொண்டுவருவோம். உமக்கு க்ஷேம டாகுக. விபுவும் தேவதேவர்களுக்கும் ஈசரும் சூலத்தைக் கையிற்கொண்டவரும் மூன்று கண்களுள்ளவரும் ஆதியுமஅந்தமுமற்றவரும் மஹேஸ்வர ருமான அந்தச் சம்புவை நமஸ்கரிப்போம். உலகங்களுக்கு நாதரும் கணங்களுக்கு அதிபதியுமான அவரையும் அவருடைய அந்தப் பரி வாரங்களையும் வாக்கினாலும் மனத்தினாலும் செய்கையினாலும் அருள் புரியும்படி செய்து நிச்சயமாகத் தனத்தை அடைவோம். விருஷப த்வஜர் கிருபை செய்தால் அந்தத் திரவியத்தை ரக்ஷிப்பவர்களும் பார்க்கப் பயங்கரர்களுமான கின்னரர்களும் வசப்படுவார்கள். பிரபு வான அந்தப் பரமேஸ்வரர் கிருபை செய்தால் பக்தர்களுக்கு அம ரத்தன்மையையும் கொடுப்பார். ஸுவர்ணத்தைக் கொடுப்பதில் என்ன ஸந்தேஹம்? முற்காலத்தில் வனத்திலிருக்கும்போது அர்ஜு னனுக்குப் பிரஸன்னராகிப் பாசுபதமென்னும் சிறந்த அஸ்திரத்தை யும் பயங்கரமான பிரம்மசிரஸ் என்னும் அஸ்திரத்தையும் கொடுத் தார். தனத்தைப்பற்றிச் சொல்லவேண்டுமா? கௌரவ நந்தனரே! நாமெல்லாரும் அவருடைய பக்தர்கள். அவரும் நம்மிடத்தில் கிருபையுள்ளவர். அவருடைய அனுக்கிரஹத்தால் இந்த ராஜ்யம் அடையப்பட்டது. அபிமன்யுவின் வதம் நேர்ந்து தனஞ்சயன் ஜயத் ரதனைக் கொல்வதாகப் பிரதிஜ்ஞை செய்தவுடன், அவன், கேசவ ருடன் சேர்ந்து இரவில் ஸ்வப்னத்தில் [1] லோக குருவான பரம சிவனை அருள்புரியச்செய்து அஸ்திரத்தை அடைந்தான். அந்த யுத் தத்தில், இரவு விடிந்தவுடன், பிரபுவான பரமசிவன் ஸவ்யஸாசி யான பல்குனனுக்கெதிரில் பிரத்தியக்ஷமாகிச் சூலத்தினால் (பகை வரின்) சேனையைக் கொன்றார். மஹாராஜரே! சிறந்த வில்லாளிகளும் (பகைவரை) அடிக்கும் திறமையுள்ளவர்களுமான துரோணர் கர் ணன் (முதலான) பலிஷ்டர்களுடன்கூடின அந்தச் சேனையைத்

---

1 'லோக குரும்' என்று மாற்றப்பட்டது.

தேவரும் சிறந்த வில்லாளி[redacted]பலவித ரூப[redacted]ளவருமான மஹேஸ்வரரைத் தவிர (வேறு) எவ[redacted]னத்தாலாவ[redacted] ஆக்ரமிப்பான்? அவருடைய அனுக்ரஹத்தினா[redacted]ய உம்முடை[redacted] பகைவர்கள் கொல்லப்பட்டார்கள். அவரே உ[redacted]முடைய அ[redacted]மேதத்தை நிறைவேறச் செய்யப்போகிறார்' என்[redacted]சொன்னான்.

பாரதரே! இவ்விதம்[redacted]சொல்லுகின்ற [redacted]ந்தப பீமனுடைய வாக்கியத்தைக் கேட்டு யுதி[redacted]ஷ்டிரராஜர் மிக்க [redacted]ஸந்தோஷமுள்ளவரானார். பாரதரே! அர்ஜுனன்[redacted]தலானவர்களும் [redacted] 'அப்படியே' என்னும் வார்த்தையைச் சொன்[redacted]ர்கள். பாண்டவர்களெல்லாரும் ரத்னங்களைக் கொண்டுவர நிச்சயித்து, [1]ரோஹிணீநக்ஷத்திரம்கூடிய பானுவாரத்தில் ஸேனையை (ப்புறப்படும்படி) கட்டளையிட்டார்கள். பிறகு, பாண்டவர்கள் பிராம்மணர்களை ஸ்வஸ்திவாசனம் செய்யும்படி செய்து முந்தியே தேவஸ்ரேஷ்டரும் மஹாத்மாவுமான மஹேஸ்வரரை மோதகங்களாலும் பாயஸத்தாலும் மாம்ஸத்தாலும் அபூபங்களாலும் பூஜித்துப் பிரார்த்தித்து மிக்க மனக்களிப்புடன் சென்றார்கள். பிரயாணம் புறப்படுகின்ற அவர்களுக்கு அப்பொழுது பட்டணத்திலுள்ள பிராம்மணஸ்ரேஷ்டர்கள் மிக்கமனக்களிப்புடன் சுபமானமங்களங்களைக் கூறினார்கள். பிறகு, நியமம் தவறாதவர்களும் சுத்தமான விரதமுள்ளவர்களும் வீரர்களும் பாண்டுவைக் களிக்கச்செய்பவர்களுமான பாண்டவர்கள், அக்னியுடன் கூடின பிராம்மணர்களைப் பிரதக்ஷிணம்செய்து முடியால் வணங்கி, புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவனும் மனைவியுடன் கூடினவனுமான திருதராஷ்டிரராஜனிடமும் விசாலமான கண்களுள்ள குந்தியினிடமும் அனுமதிபெற்று, குருகுலத்தில் தோன்றியவனும் திருதராஷ்டிர புத்திரனுமான யுயுத்ஸுவை (அவர்களுக்கு) அருகில் வைத்து, பட்டணத்துஜனங்களாலும் வித்வான்களான பிராம்மணர்களாலும் நன்குபூஜிக்கப்பெற்றுச் சென்றார்கள்.

---

1 'நக்ஷத்ரே ஹநி அயுஜே,' என்பது மூலம். 'உத்தரமும் ஞாயிறும் கூடிய அம்ருதஸித்த யோகத்தில்' என்பது பழைய உரை.

## அறுபத்துநான்காவது [redacted]யாயம்.

## அநுகீதா பர்வம். [redacted]டர்ச்சி.)

(யுதிஷ்டிரர் இமயமலை ய அடைந்து [redacted]ாஸமுதலியவற்றைச் செய்து இரவைக்கழி

பிறகு, மிக்க களிப்புற்ற மனிதர்களும் வாகனங்களுமுள்ள அவர்கள், பெரிய தேரொலியால் பூமியை நிரப்பிக்கொண்டு ஸூதர்களாலும் மாகதர்களாலும் வந்திகளாலும் துதிவசனங்களால் நன்கு ஸ்தோத்திரம் செய்யப்பட்டு ஆதித்தியர்கள் தம்கிரணங்களால் சூழப்படுவதுபோலத் தம்ஸேனையால் சூழப்பட்டு ஸந்தோஷத்துடன் சென்றார்கள். அப்பொழுது, யுதிஷ்டிரர் தலைமேல் பிடிக்கப்படும் வெண்குடையால் பூர்ணிமையில் நக்ஷத்ரராஜனான சந்திரன் விளங்குவதுபோல விளங்கினார். புருஷஶ்ரேஷ்டரான பாண்டவர் மார்க்கத்தில் மனிதர்கள் மிக்க ஸந்தோஷத்துடன் கூறும் உண்மையான ஜயாசீர்வாதங்களை முறைப்படி அங்கீகரித்தார். அரசரே! அவ்வாறே, அரசனை அநுஸரித்துச் சொல்லும் ஸைனிகர்களுடைய கலகலவென்னும் ஒலியானது, ஆகாயத்தில் அசைவற்றிருந்தது. யுதிஷ்டிர மஹாராஜர் தடாகங்களையும் நதிகளையும் வனங்களையும் உத்யானங்களையும் கடந்து (அந்த) மலைக்குச் சென்றார். ராஜேந்திரரே! பரதஶ்ரேஷ்டரே! அப்பொழுது, யுதிஷ்டிரராஜர், எங்கே உத்தமமான திரவியம் இருக்கிறதோ அங்கே சுபமாகவும் ஸமமாகவுமுள்ள இடத்தில் ஸேனாவீரர்களுடன் வாஸஸ்தானத்தை ஏற்படுத்திக்கொண்டார். குருகுலத்தில் பிறந்தவரே! அரசர்களும் பிராம்மணர்களும் புரோஹிதர்களும் தவமும் வித்தையும் இந்திரியஜயமுமுள்ள பிராம்மணர்களையும் வேதவேதாங்கங்களுடைய கரையைக் கண்டவரும் புரோஹிதருமான தௌம்யரையும் முன்னிட்டுக்கொண்டு முறைப்படி சாந்தியைச் செய்து நாற்புறமும் சூழ்ந்துகொண்டார்கள். ஜனங்கள் முறைப்படி அரசரையும் மந்திரிகளையும் நடுவில் வைத்து ஆறுராஜமார்க்கங்களுள்ளதும் ஒன்பது கண்டங்களுள்ளதுமான வாஸஸ்தானத்தை அமைத்தார்கள். அந்த ராஜஶ்ரேஷ்டர் மதங்கொண்ட சிறந்தயானைகளுக்கும் விதிப்படி இருப்பிடத்தைச் செய்வித்துப் பிராம்மணர்களை நோக்கிப் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானார்.

'பிராம்மணஶ்ரேஷ்டர்களே! சுபமான நக்ஷத்திரத்துடன்கூடின தினத்தில் இந்தக் கார்யத்திற்காக நீங்கள் எப்படி எண்ணுகிறீர்களோ

அப்படி அதை செய்யுங்[redacted]பராமமணப்[redacted]ரேஷ்டர்களே! நாம் இவ்விடத்திலேயே வஸித்து[redacted]கொண்டு கால[redacted]ாமதம் செய்யக்கூடாது. இவ்விதம் நிச்சயித்து மேலே செய்யவே[redacted]ண்டியதைச் செய்யுங்கள்' என்று சொன்னார். அரச[redacted]டைய இந்த வ[redacted]னத்தைக்கேட்டுப்பிராம்மணர்களும் புரோஹிதர்[redacted]ம் அவருக்குப்[redacted]ிரியத்தைச்செய்யவிரும்பி ஸந்தோஷத்துடன் பி[redacted]வரும் வார்த்தை[redacted]யைச் சொல்லலானார்கள். 'மிகச் சிறந்தவரே! அற[redacted]ரே! இப்பொழு[redacted]த நக்ஷத்திரமும் தினமும் புண்யமாக இருக்கி[redacted]ன. கார்யங்களு[redacted]க்கு முயல்வோம். இங்கு, இப்பொழுது தவமு[redacted]ளவர்களாக வஸிப்போம். நீங்கள் இன்று உபவாஸமிருங்கள்' என்று கூறினார்கள். ராஜஸ்ரேஷ்டர்கள் அந்தப் பிராம்மணஸ்ரேஷ்டர்களுடைய (வார்த்தையைக் கேட்டு) நம் பிக்கையுடன் உபவாஸமிருந்து இரவில் குசசயனங்களில் யாகத்தில் ஜ்வலிக்கும் அக்கினிகள்போல வஸித்தார்கள். பிறகு, பிராம்மணர்கள் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருக்கும் மஹாத்மாக்களான அவர்களுக்கு அந்த இரவு சென்றது. பிறகு, நன்கு பொழுதுவிடிந்தவுடன், பிராம்மணஸ்ரேஷ்டர்கள் யுதிஷ்டிரராஜரை நோக்கிப் பின்வரும் வார்த்தையைச் சொன்னார்கள்.

---

## அறுபத்தைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் பரிவாரங்களுடன்கூடின மஹேஸ்வரனைப்பலிகளால் மகிழ்வித்துப் பொற்பாத்திரங்களை எடுத்துக்கொண்டு ஹஸ்தினபுரம் வந்தது.)

பிராம்மணர்கள், 'அரசரே! மஹாத்மாவான முக்கண்ணருக்கு இப்பொழுது பலியைச்செய்யும். பலியைக் கொடுத்துவிட்டுப் பிறகு நம்முடைய காரியத்தைப்பற்றி முயல்வோம்' என்று சொன்னார்கள். யுதிஷ்டிரர், அந்தப் பிராம்மணர்களுடைய வசனத்தைக் கேட்டுப் பரமசிவனுக்கு விதிப்படி பலியை வித்தஞ்செய்தார். அப்பொழுது, அந்தப் புரோஹிதர் விதிப்படி ஸம்ஸ்கரிக்கப்பட்ட ஆஜ்யத்தால் அக்னியைத் திருப்தியடைவித்து மந்திரத்தால் சருவை வித்தம்செய்து கொண்டு சென்றார். அரசரே! பிறகு, வேதங்களின் கரையைக்கண்டவரான அந்தப் புரோஹிதர் மந்திரத்தால் பரிசுத்தமான புஷ்பங்களை எடுத்துக்கொண்டு மோதகங்களாலும் பாயஸத்தாலும் மாம்ஸங்

களாலும் விசித்ரமான ...ராலும ... தமான பொரிகளாலும் பலியைக்கொடுத்து ஸ்வி...டகிருத் ... ம் ஹோமத்தை முழுதும் விதிப்படிசெய்து, அ...ற்குப் பிறகு ...கிங்கரர்களுக்கு உத்தமமான பலியைச் செய்தா... (அந்தப்) பு...ரோஹிதர் யக்ஷேந்திரனை குபேரனுக்கும் மாணிபத்...ரனுக்கும் மற்...ள்ள யக்ஷர்களுக்கும் பூதபதிகளுக்கும் [1]க்ருஸ...த்தையும் மாம...த்தையும் எள்ளுடன் கூடின தர்ப்பணஜலங்களை...யும் பல குடங்...ற் செய்த அன்னத்தையும் அர்ப்பணம் செய்...ர். அரசர், அப்...பொழுது பிராம்மணர்களுக்கு ஆயிரம் பசுக்களைத் தானம்செய்து இரவில் ஸஞ்சரிக்கும் பூதங்களுக்குப் பலியைக் கொடுத்தார். வேந்தரே! தூபத்தினுடைய கந்தத்தால் வியாபிக்கப்பட்டதும் புஷ்பங்களால் மூடப்பட்டதுமான தேவதேவரான சங்கரருடைய ஸ்தானமானது மிகவும் விளங்கிற்று. அரசர், (இவ்விதம்) ருத்திரருக்கும் (அவருடைய) எல்லாக் கணங்களுக்கும் பூஜையைச்செய்து வியாஸரை முன்னிட்டுக் கொண்டு ரத்னமிருக்குமிடத்திற்குச் சென்றார். வீர்யமுள்ளவரும் கௌரவஸ்ரேஷ்டருமான அந்த யுதிஷ்டிரர் விசித்திரமான புஷ்பங்களாலும் அபூபங்களாலும் க்ருஸரத்தாலும் குபேரனைப் பூஜித்து நமஸ்கரித்து அபிவாதனம்செய்து சங்கம்முதலான எல்லா நிதிகளையும் எல்லாநிதிபாலகர்களையும் பூஜித்துப் பிராம்மணர்களை ஸ்வஸ்திவாசனம் செய்யும்படி செய்து அவர்களுடைய புண்யாஹகோஷத்தால் மிக்க காந்தியை அடைந்து ஸந்தோஷத்துடன் அந்த நிதியை வெட்டும்படி செய்தார். அப்பொழுது, தர்மராஜரான யுதிஷ்டிரர் அதிலிருந்து பலவகையானவைகளும் அழகாக இருப்பவைகளுமான அன்னமெடுக்கக்கூடிய பெரிய பாத்திரங்களையும் சின்னக் குடங்களையும் கரண்டிகளையும் அண்டாக்களையும் குடங்களையும் மடக்குக்களையும் அநேக விசித்ரமான பாத்திரங்களையும் ஆயிரக் கணக்காக எடுத்தார். மன்னரே! மனிதரைக் காப்பவரே! அவற்றை ரக்ஷிப்பதற்காகப் பெரிதும் ஸம்புடம்போன்ற வடிவமுள்ளதும் மூடிபோட்டதும் அரைத்துலாம்நிறையுள்ளதுமான ஓர் பாத்திரமும் இருந்தது. வேந்தரே! யுதிஷ்டிரருக்கு அவ்விடத்தில் அறுபது லக்ஷம் ஒட்டகங்களும் நூற்றிருபதுலக்ஷம் குதிரைகளும் லக்ஷம் யானைகளும் லக்ஷம் வண்டிகளும் லக்ஷம் ரதங்களும் லக்ஷம் பெண் யானைகளும் எண்ணிக்கையற்ற கோவேறுகழுதைகளும் மனிதர்

---

1 இக்காலத்தில், ஸ்ராத்தாரம்பத்தில் எள்ளும் வெல்லமும் கொடுப்பது க்ருஸரம் என்று வழங்குகிறது.

களும் வாகனங்களாக [redacted]ருந்தன. யு[redacted]ஷ்டிரர் எடுத்த இந்தத் தனம், 1 பதினாறு எட்டு[redacted]ருபத்துநான்[redacted] ஆயிரம் பாரமாக இருந்தன. புருஷஸ்ரேஷ்டர[redacted] பாண்டவர், [redacted]ந்தத் திரவியத்தை இவற்றின்மீது எடுத்துக்கொ[redacted]டு மறுபடியும் மஹாதேவரைப் பூஜித்து வியாஸரால் அனுமதி[redacted]கொடுக்கப்பட்[redacted] புரோஹிதரைமுன்னிட்டுக்கொண்டு ஹஸ்தி[redacted]புரத்தைக்குறி[redacted]து 2இரண்டு குரோச தூரத்திற்கொருமுறை தங்கியிருந்து [redacted]ன்றார். அரசரே! அந்தப் பெரிய ஸேனையானது[redacted] கௌரவஸ்ரேஷ்[redacted]டர்களை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு திரவிய[redacted]த்தின் பாரத்தால் பீடிக்கப்பட்டுக் கஷ்டத்துடன் சுமந்துகொண்டு பட்டணத்தை நோக்கிச் சென்றது.

---

## அறுபத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி)



**(கோவிந்தர் யாகத்துக்காக ஸுபத்ரை பலராமர் முதலியவருடன் ஹஸ்தினபுரம் வந்ததும், பரீக்ஷித்து மரித்துப் பிறந்ததும், அவனைப் பிழைப்பிக்கும்படி குந்தி முதலியோர் கோவிந்தரை வேண்டியதும்.)**

இந்த ஸமயத்திலேயே, வீர்யமுள்ளவரும் புருஷோத்தமருமான வாஸுதேவரும் அஸ்வமேதத்தின் ஸமயத்தை அறிந்து தமது பட்டணத்தைக் குறித்துச் செல்லும்போது, தர்மபுத்திரர் சொல்லியபடி விருஷ்ணிகளுடனும் ருக்மிணியின் புத்திரனான பிரத்யும்னன், யுயுதானன், சாருதேஷ்ணன், ஸாம்பன், கதன், கிருதவர்மா வீரனான ஸாரணன், நிசடன், உன்முகன் ஆகிய இவர்களுடனும் பலதேவரை முன்னிட்டு ஸுபத்ரையை அழைத்துக்கொண்டு திரௌபதியையும் உத்தரையையும் குந்தியையும் பார்ப்பதற்காகவும் கணவனை இழந்த க்ஷத்திரிய ஸ்திரீகளைத் தேறுதல் செய்வதற்காகவும் அப்பொழுது ஹஸ்தினபுரம் சென்றார். வந்தவர்களான அவர்களைக் கண்டவுடன், பூபதியான திருதராஷ்டிரனும் சிறந்த மன

---

1 ஓர் ஒட்டகத்திற்கு 8000-பொன்னும் ஒரு வண்டிக்கு 16,000-பொன்னும், ஒரு யானைக்கு 24,000-பொன்னும் பார அளவென்றும், இப்படியே குதிரை கழுதை மனிதர்களுக்கு ஏற்றபடி பாரம் என்றும் பழையவுரை கூறுகிறது.

2 வேறுபாடம், ஒரு நாளுக்கு இரண்டு குரோசம் வீதம் சென்றாரென்பது.

மூள்ள விதுரரும் மு ... றப்படி வேர ... றனர். புருஷோத்தமரும் சிறந்த தேஜஸுள்ளவரு ... ான வாஸுதே ... ர், விதுரராலும் யுயுத்ஸு வினாலும் நன்கு பூஜிக்கப் பட்டு அந்த ... ரத்திலேயே வஸித்தார். ஜனமேஜயரே! அரசரே! விருஷ்ணிவீர ... கள் அங்கு வஸித்துக் கொண்டிருக்கும்பொழுது ... மது தந்தை ... ரும் சத்துருவீரர்களைக் கொல்பவருமான பரிக்ஷித்து ... பிறந்தார். ம ... ாராஜரே! அந்தப் பரி க்ஷித்துராஜரோ, (அஸ்வத்தாமாவினுடைய) பிரம்மாஸ்திரத்தால் பீடிக்கப்பட்டு ஸந்தோஷத்தையும் துக்கத்தையும் வளரச்செய்து கொண்டு அசைவற்றுப் பிணமாயிருந்தார். அப்பொழுது, மனமகிழ் ந்து ஸிம்மநாதம் செய்யும் ஜனங்களின் சப்தமானது எல்லாத் திசை களிலும் சென்று மீண்டும் எதிர்த்துவந்தது. பிறகு, வாஸுதேவர், துன்பமுற்ற இந்திரியங்களும் மனமுமுள்ளவராகி, அப்பொழுது அதிகவேகமாக யுயுதானனுடன் அந்தப்புரத்தில் பிரவேசித்தார். மன்னரே! பிறகு, அவர், '(கிருஷ்ண!) ஓடிவா' என்று வாஸுதேவ ரான தம்மை அடிக்கடி அழைத்துக்கொண்டு வேகமாக வருகின்ற தம் அத்தையையும் (அவளுக்குப்) பின்புறத்தில் திரௌபதியையும் புகழ்பெற்ற ஸுபத்திரையையும் தீனமாக அழுகின்ற (மற்றப்) பாண்டவஸ்திரீகளையும் கண்டார். ராஜஸ்ரேஷ்டரே! பிறகு, போஜ குமாரியான குந்தியானவள் அப்பொழுது கிருஷ்ணருக்கு அருகில் சென்று கண்ணீரால் தழுதழுத்த வார்த்தையுடன் (பின்வருமாறு) சொல்லலானாள்.

'வாஸுதேவ! சிறந்தகைகளுள்ளவனே! தேவகி உன்னால் நல்ல புத்திரனுள்ளவள். நீ எங்களுக்குக் கதியும் க்ஷேமத்தை உண்டு பண்ணுகிறவனுமாக இருக்கிறாய். இந்தக் குலமானது உன்னுடைய வசத்திலிருக்கிறது. யதுக்களுள் சிறந்த வீரனே! பிரபுவே! உன் மருகனுடைய புத்திரன் அஸ்வத்தாமாவினால் கொல்லப்பட்டுப் பிறந்திருக்கிறான். கேசவ! அவனை ஜீவிக்கும்படி செய். யதுநந்தன! பிரபுவே! ஐஷீகாஸ்திரம் பிரயோகித்த காலத்தில், 'மரித்துப் பிறக் கும் குழந்தையை நான் நன்கு ஜீவிக்கச் செய்கிறேன்' என்று நீ பிர திஜ்ஞை செய்திருக்கிறாய். ஐயனே! அந்தக் குழந்தை மரித்துப் பிறந்திருக்கிறது. புருஷோத்தம! அதைப்பார். மாதவ! உத்தரை, ஸுபத்ரை, திரௌபதி, நான், தர்மபுத்திரன், பீமன், அர்ஜுனன், நகுலன், (பிறரால்) ஜயிக்கமுடியாத ஸஹதேவன் ஆகிய எங்களெல் லாரையும் காப்பாற்றத்தக்கவனாக இருக்கிறாய். தாசார்ஹ! பாண்ட வர்களுடைய உயிரும் என்னுடைய உயிரும் பாண்டுவுக்கும் என்மாம

ளுருக்கும் அபிமன்யுவுக் [redacted] (ம[redacted]டுக்க [redacted]ண்டிய) பிண்டமும் இக் குழந்தைக்கு அதீனமாயி[redacted]கின்றன. ஜ[redacted]ர்த்தன! உனக்கு க்ஷேம முண்டாகுக. இறந்தவனு[redacted]னும் (உனக்கு[redacted] பிரியனும் ஒப்பானவனு மான அபிமன்யுவுக்கு இ[redacted]பொழுது நீ [redacted]ரியத்தை உண்டுபண்ணு. பகைவரைக்கொல்பவனே! [redacted]கிருஷ்ண! உ[redacted]தரையானவள், அபிமன்யு முன்சொன்ன வார்த்தை[redacted]ப (இப்பொழு[redacted]ம்) பிரியத்தால் சொல்லு கிறாள். இதில் ஸம்சயம[redacted]லே. தாசார்ஹ[redacted]அக்காலத்தில் அபிமன்யு வானவன் உத்தரையை [redacted] நோக்கி, 'கல்ய[redacted]ணி! உன்னுடைய புத் திரன் (என்னுடைய) [redacted]மாதுலருடைய வீட்டை அடையப்போகி ருன். விருஷ்ணிகள் அந்தகர்கள் இவர்களுடைய வீட்டை அடை ந்து, தனுர்வேதத்தையும் விசித்திரமான அஸ்திரங்களையும் சுத்த மான நீதிசாஸ்திரத்தையும் கற்கப்போகிருன்' என்று சொன்ன ளும். ஐயனே! சத்துருவீரர்களைக் கொல்பவனும் (பிறரால்) அவ மதிக்க முடியாதவனுமான அபிமன்யுவானவன் இவ்விதம் இந்த வார் த்தையைப் பிரீதியினல் சொன்னன். இது அவ்விதமே ஆகும். ஸந் தேஹமில்லை. மதுஸூதன! நாங்கள் இப்பொழுது உன்னை வணங்கி யாசிக்கிறேம். இந்தக் குலத்தின் நன்மைக்காக உத்தமமான மங்க ளத்தைச் செய்' என்று சொன்னள். விருஷ்ணிகுலத்தில் பிறந்தவ ரான கிருஷ்ணரைப் பார்த்து இவ்விதம் சொல்லிவிட்டு விசாலமான கண்களுள்ளவளான குந்தியும் துக்கத்தால் பீடிக்கப்பட்ட மற்று முள்ள அந்தஸ்திரீகளும் இருகைகளையும் தூக்கிக்கொண்டு பூமியில் விழுந்தார்கள். மஹாராஜரே! பிரபுவே! கண்ணீரால் கலங்கின கண் களுள்ள எல்லாஸ்திரீகளும், 'வாஸுதேவருடைய மருமானுடைய குமாரன் மரித்துப் பிறந்தான்' என்றும் சொன்னர்கள். பிறகு, ஜனு ர்த்தனர் இவ்விதம் நடந்திருக்கும்போது பூமியில் விழுந்திருக்கும் குந்தியை எடுத்து அவளை ஸமாதானம் செய்தார்.

---

அறுபத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



**(ஸுபத்ரை கோவிந்தரைத் துதித்துப் பரீக்ஷித்தைப் பிழைப்பிக்கும்படி வேண்டினது.)**

குந்தி எழுந்திருந்தவுடன், துக்கத்தால் பீடிக்கப்பட்ட ஸு பத்திரையானவள் ப்ராதாவைப் பார்த்து அழுதுகொண்டு பின் வரும் வார்த்தையைச் சொல்லலானள். 'தாமரைக்கண்ணரே! கௌரவர்

கள் ஜீவித்திருக்கும்பொழுது, இவ்வுத்தமமும் ஆயுள் முடிந்தவனும் அறிஞரான பார்த்தருடைய பேரனுமான குழந்தையைப் பாரும். துரோணபுத்திரரால் பீமஸேனருக்காக விடப்பட்ட இஷீகாஸ்திர மானது உத்தரையின்மீதும் பார்த்தர்மீதும் என்மீதும் விழுந்தது. கேசவரே! அது என்னுடைய ஹ்ருதயத்தில் ஜ்வலித்துக்கொண்டி ருக்கிறது. (ஒருவராலும்) அவமதிக்க முடியாதவரே! பிரபுவே! புத் திரனுடன்கூடின அதை நான் பார்க்கிறேனில்லை. தர்மாத்மாவும் தர்ம ராஜருமான யுதிஷ்டிரரும் பீமஸேனரும் அர்ஜுனரும் மாத்ரீபுத்தி ரர்களான அந்த நகுல ஸஹதேவர்களும் அபிமன்யுவின் புத்திரன் மரித்துப் பிறந்ததைக் கேட்டு என்ன சொல்லுவார்கள்? விருஷ்ணி குலத்தில் பிறந்தவரே! துரோணபுத்திரரால் பாண்டவர்கள் கவரப் பட்டவர்கள்போலஆயினர். கிருஷ்ணரே! அபிமன்யுவானவன் தந் தைமார்களுக்குப் பிரியன்; இதில் ஸம்சயமில்லை. துரோணபுத்திர ருடைய அஸ்திரத்தால் ஜயிக்கப்பட்ட அவர்கள் இதைக் கேட்டு என்ன சொல்லுவார்கள்? ஜனார்த்தனரே! கிருஷ்ணரே! பகைவரை அடக்குபவரே! அபிமன்யுவின் புத்திரன் மரித்துஜனித்ததை (க் கண்டு) நமக்கு (இதை விடப்) பெரிய துக்கம் என்னவரப்போகிற தென்று நினைக்கிறேன். கிருஷ்ணரே! நான் உம்மைத் தலைவணங் கிக் கிருபைசெய்யும்படி பிரார்த்திக்கின்றேன். இந்தக் குந்தியும் திரௌபதியும் பிரார்த்திக்கிறார்கள். புருஷோத்தமரே! இவர்களைப் பாரும். மாதவரே! பகைவரை அழிப்பவரே! அச்வத்தாமா பாண்ட வர்களின் குழந்தைகளைக் கொன்றபொழுது நீர் கோபங்கொண்டு அச்வத்தாமாவை நோக்கி, 'பிராம்மணாதம! நராதம! உன்னுடைய எண்ணம் நிறைவேறாமல் செய்கிறேன். நான் அபிமன்யுவின் புத் திரனை ஜீவிக்கும்படி செய்கிறேன்' என்று சொன்னீரன்றோ? (ஒருவராலும்) அவமதிக்க முடியாதவரே! இவ்விதமான இந்த வார்த்தையைக் கேட்டு உம்முடைய பலத்தை அறிந்த நான் உம்மைக் கிருபைசெய்யும்படி பிரார்த்திக்கிறேன். அபிமன்யு வின் புத்திரன் ஜீவிக்கட்டும். விருஷ்ணிகளுள் சிறந்தவரே! நீர் பிரதிஜ்ஞை செய்துவிட்டுச் சுபமான இந்த வார்த்தையை முழு தும் (அப்படியே) செய்யாமற்போனால் என்னை இறந்துபோனவ ளாக நிச்சயம்செய்துகொள்ளும். வீரரே! (பிறரால்) அவமதிக்க முடியாதவரே! நீர் ஜீவித்திருக்கும்போது அபிமன்யுவின் புத்திரனான இவன் ஜீவிக்காமற்போனால் நான் உம்மைக்கொண்டு என்ன செய்து கொள்ளப் போகிறேன்? ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரே! வீரரே!

அபிமன்யுவினிடமிருந்து ... மாததவனும் கண்போன்றவனுமான இந்தக் குழந் ... தயை மழை ... மழியும் மேகமானது பயிரைப் பிழைப்பிப்பதுபோல் நீர் பிழைக்கச் செய்யும். கேசவரே! நீரோ தர்மாத்மா; ஸத்யவாதி; உண்மையான பராக்ரமமுள்ளவர். பகைவரை அடக்குபவரே! நீர் அந்த வ ... த்தையை உண்மையாகச் செய்யும். நீர் விரும்பினால், மரித்தவர்களான இம்மூவுலகத்தாரையும் பிழைக்கச் செய்வீர். ... ரியனும் மருமா ... வுடைய புத்திரனும் மரித்தவனுமான குழந்தையைப்பற்றிச் சொல்லவேண்டுமா? கிருஷ்ணரே! நான் உம்முடைய ப ... றிமையை அறிந்திருக்கிறேன். ஆகையால், உம்மைப் பிரார்த்திக்கிறேன். பாண்டவர்களுக்கு இப்பெரிய அனுக்கிரஹத்தைச் செய்யும். சிறந்த கைவன்மையுள்ளவரே! நீர், 'இவள் ஸஹோதரி' என்றாவது, 'புத்திரனை இழந்தவள்' என்றாவது, 'என்னைச் சரணமடைந்தவள்' என்றாவது (என்னிடத்தில்) இப்பொழுது கிருபை செய்யவேண்டும்' என்று சொன்னாள்.

## அறுபத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் உத்தரையின் பிரஸவ அறையில் நுழைந்ததும், உத்தரை புலம்பிக் குழந்தையைப் பிழைப்பிக்கும்படி அவரை வேண்டியதும்.)**

ராஜஸ்ரேஷ்டரே! இவ்வாறு சொல்லப்பட்டவரும் கேசியைக் கொன்றவருமான கிருஷ்ணர், துக்கம் மேலிட்டு, அந்த ஜனங்களை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு, 'அப்படியே ஆகட்டும்' என்று உரக்கச் சொன்னார். புருஷஸ்ரேஷ்டரும் பிரபுவுமான அந்தக் கிருஷ்ணர் அப்பொழுது அந்த ஜனங்களை இந்த வாக்கியத்தால், கோடையால் பீடிக்கப்பட்டவனை ஜலத்தால் மகிழ்விப்பதுபோல மகிழ்வித்தார். புருஷஸ்ரேஷ்டரே! சிறந்தகைகளுள்ளவரே! தைரியமுள்ளவரே! பிறகு, அந்தக் கிருஷ்ணர் வெண்மையான மாலைகளால் விதிப்படி பூஜிக்கப்பட்டதும் ஜலம் நிரம்பின கலசங்கள் எல்லாத் திசைகளிலும் வைக்கப்பட்டதும் நெய்யால் (நனைக்கப்பட்ட) திந்துகமென்னும் செடிகளால் செய்யப்பட்ட பந்தங்களும் கடுகுகளுமுள்ளதும் நிர்மலமான அஸ்திரங்களும் அக்னிகளும் நாற்புறமும் வைக்கப்பட்டதும் வேலைசெய்வதற்காகப் பிராயமுதிர்ந்தஸ்திரீகளாலும் ஸமர்த்

தர்களும் தேர்ச்சி பெற்[illegible]வர்களுமான [illegible]வததுயாகளாலும் நாற்புற மும் சூழப்பட்டதுமான உமது தந்[illegible]யினுடைய ப்ரஸவஅறை யில் சீக்கிரமாகப் பிரவே[illegible]ந்தார். தேஜஸ்[illegible]யான அந்தக் கிருஷ்ணர் ஸமர்த்தர்களான ஜனங்க[illegible]ால் விதிப்படி [illegible]மைக்கப்பட்டவைகளும் ராக்ஷஸர்களைக் கொல்லு[illegible]ன்றவைகளுமா[illegible] எல்லாத் திரவியங்களை யும் பார்த்தார். ஹ்ருஷீகே[illegible]ர் அவ்விதமிரு[illegible]கும் உமது தந்தையின் அந்த ஜன்மகிருஹத்தைக் கண்டு உள்ளம் மகிழ்ந்து, 'நல்லது, நல் லது' என்று சொன்னார். அவர் அப்பொழு[illegible] சிரித்த முகத்துடன் அவ்விதம் சொல்லுகையில் திரௌபதியானவள் வேகமாகச் சென்று விராடனுடைய பெண்ணான உத்தரையை நோக்கி, 'உன் கணவனு டைய மாதுலரும் புராதனரான ரிஷியும் சிந்திக்கமுடியாத ஸ்வரூப முள்ளவரும் (ஒருவராலும்) ஜயிக்கப்படாதவருமான மதுஸூதனர் இதோ அருகில் வருகிறார்' என்று சொன்னாள். அந்தத் தேவியும் கண்ணீரால் விளங்காத வார்த்தையையும் கண்ணீர்களையும் அடக்கிக் கொண்டு, தேவனை அடைவதுபோலக் கோவிந்தரைச் சரணமடை வதற்கு (உடைகளை) [1]நன்கு உடுத்துக்கொண்டாள். (பார்ப்பவர்கள்) துக்கிக்கத்தக்கவளான அந்த உத்தரை, வருத்தமடைந்திருக்கும் மனத்துடன், வருகின்ற கோவிந்தரைக் கண்டு எளிமையுற்றுப் புலம் பலானாள்.

'தாமரைக் கண்ணரே! ஜநார்த்தனரே! வேற்றுமையின்றி ஹட மாகக் குழந்தையைவிட்டுப் பிரிக்கப்பட்ட நானும் அபிமன்யுவுமான எங்களிருவரையும் பாரும். விருஷ்ணி குலத்தில் பிறந்தவரே! மது வைக் கொன்றவரே! வீரரே! உம்மைத் தலை (வணங்கி) கிருபை செய் யும்படி பிரார்த்திக்கிறேன். அச்வத்தாமாவின் அஸ்திரத்தால் எரிக் கப்பட்ட என்னுடைய இந்தப் புத்திரனைப் பிழைக்கும்படி செய் யும். தாமரைக் கண்ணரே! பிரபுவே! தர்ம புத்திரராவது பீமஸேன ராவது நீராவது 'இந்த இஷீகாஸ்திரமானது அறிவில்லாதவளான தாயைக் கொல்லட்டும்' என்று இந்த வாக்யத்தைச் சொல்லியிருந் தால் நானே மரித்திருப்பேன். இவன் இவ்விதம் போகமாட்டான். கெட்ட புத்தியுள்ள அச்வத்தாமாவானவன் கர்ப்பத்திலிருக்கும் இப்பாலனைப் பிரம்மாஸ்திரத்தினால் கொன்றதென்னும் கொடிய காரியத்தைச் செய்து என்ன பயனை அனுபவிக்கிறான்? பகைவரை அழிப்பவரே! நான் உம்மைத் தலையால் (வணங்கி) கிருபை செய்யும் படி வேண்டுகிறேன். கோவிந்தரே! இவன் ஜீவிக்காவிடின் நான்

1 வேறுபாடம்.

உயிரை விடுவேன். நல்[redacted]ர: இந்தக் [redacted]ழந்தையின்மீது எனக்குள்ள அனேக எண்ணங்[redacted]ளையும் துரோ[redacted]னபுத்திரன் கெடுத்துவிட்டான். கேசவரே! நான் [redacted]ற்காக ஜீவித்தி[redacted]க்க வேண்டும்? ஜநார்த்தனரே! குழந்தையை [redacted]மடியில் வை[redacted]துக்கொண்டு ஸந்தோஷமாக (உம்மை) நமஸ்க[redacted]ப்போகிறே[redacted]ன்று எண்ணியிருந்தேன். அந்த எண்ணம் வீ[redacted]ச் செய்யப்பட்[redacted]து. புருஷோத்தமரே! கிருஷ்ணரே! சஞ்சலமா[redacted] கண்களுள்ள [redacted]மென்யுவின் புத்திரனை இந்தக் குழந்தை இற[redacted]ததால் என்னுள்[redacted]த்திலிருந்த எல்லா எண்ணங்களும் பயனற்றன[redacted]வாகச் செய்யப்பட்டன. மதுஸூதனரே! சஞ்சலமான கண்களுள்ள அபிமன்யுவானவர் உமக்கு மிக்க பிரியமானவர். பிரம்மாஸ்திரத்தினால் கொல்லப்பட்டிருக்கும் அவருடைய இந்தப் புத்திரனை நீர் பாரும். இந்தக் குழந்தையானவன் இப்பொழுது பாண்டவர்களுடையசெல்வத்தை இழந்து யமனுடைய வீட்டுக்குச் சென்றானதலால் இவன் இவனுடைய தகப்பனார்போல நன்றி கொன்றவன்; கொடியவன். கேசவரே! போர்முனையில் அபிமன்யு கொல்லப்பட்டபொழுது, 'வீரரே! சீக்கிரத்தில் நான் உம்மை அடையப்போகிறேன்.' என்று நான் பிரதிஜ்ஞைசெய்தேன். கிருஷ்ணரே! கொடியவளான நான் ஜீவித்திருக்கப் பிரியமுள்ளவளாகி அதைச் செய்யவில்லை. இப்பொழுது, நான் அவ்விடம் போனால் அபிமன்யுவானவர் என்ன சொல்லுவார்?' என்று புலம்பினாள்.

---

அறுபத்தொன்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(கேசவர் சபதம் செய்து பரிக்ஷித்தைப் பாதத்தால் தடவிப் பிழைப்பித்தது.)

(எல்லாரும்) துக்கிக்கத்தக்கவளும் மனத்தளர்ச்சி அடைந்தவளும் புத்திரனிடத்தில் ஆசையுள்ளவளுமான அந்த உத்தரையானவள் இவ்விதம் தீனமாகப் புலம்பிப் பயித்தியம்பிடித்தவள்போலப் பூமியில் விழுந்தாள். புத்திரனையும் பந்துக்களையும் இழந்தவளும் (பூமியில்,) விழுந்திருப்பவளுமான அந்த உத்தரையை(ப் பார்த்து)த் துக்கத்தால் பிடிக்கப்பட்ட குந்தியும் எல்லாப் பரதஸ்திரீகளும் அழுதார்கள். ராஜஸ்ரேஷ்டரே! அழுகைச் சத்தத்தால் ஒலியுள்ளதாகச் செய்யப்பட்ட பாண்டவர்களின் வீடானது ஒரு முகூர்த்த

காலம் பார்க்கக் கூடாத [illegible] க இருந்த [illegible] ராமஜந்திரரே! வீரரே! புத்திர சோகத்தால் மிக [illegible] பீடிக்கப்ப [illegible] வளும் விராடனுடைய பெண்ணுமான அந்த உத் [illegible] ரையானவள், [illegible] ப்பொழுது, ஒரு முகூர்த்தம் மூர்ச்சையால் கவரப் [illegible] ட்டவளாயிரு [illegible] ள். பரதஸ்ரேஷ்டரே! அந்த உத்தரையானவள் [illegible] ஜனையை அ [illegible] ந்து அந்தப் புத்திரனை மடியில் வைத்துக்கொண் [illegible] பின்வரும் வச [illegible] த்தைச் சொல்லலானாள்.

('குழந்தாய்!) நீ தர் [illegible] த்தை அறிந்தவ [illegible] டைய புத்திரனாக இருந்தும் தர்மத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. நீ விருஷ்ணிகளுள் சிறந்த வீரரான கிருஷ்ணருக்கு நமஸ்காரம் செய்ய வில்லையே? புத்திர! நீ உனது தந்தையாரிடம் சென்று என்னுடைய இந்தவார்த்தையைச் சொல். 'வீரரே! பிராணிகளால் காலம்வராமல் இருக்கும் பொழுது எவ்விதத்திலும் மரிக்க முடியாது. (ஆகையினால்தான்), நான் கணவரான உம்மையும் புத்திரனையும் விட்டுப் பிரிந்து க்ஷேமமும் எதுவுமில்லாதவளாகி இப்பொழுது இங்கு மரணத்தை அடையாமலிருக்கிறேன்' என்று கூறு. சிறந்தகைகளுள்ளவனே! அல்லது, நான் தர்மபுத்திரரிடம் அனுமதிபெற்றுக்கொண்டு கோரமான விஷத்தைச் சாப்பிடுகிறேன்; அல்லது, அக்னியில் பிரவேசிக்கிறேன். ஐயனே! அல்லது, கணவனையும் புத்திரனையும் இழந்தவளான என்னுடைய ஹ்ருதயமானது ஆயிரம் துண்டாக வெடிக்காமலிருப்பதால் மரிக்க முடியாது. புத்திர! எழுந்திரு. துக்கமடைந்தவளும் மனவருத்தமுள்ளவளும் துன்பமுற்றவளும் தைன்யமுற்றவளும் சோகக் கடலில் முழுகினவளும் பிரபிதாமஹியுமான இந்தக் குந்தியைப் பார். பூஜிக்கத்தக்கவளான திரௌபதியையும் (பார்ப்பவர்) துக்கிக்கத் தக்க ஸுபத்திரையையும் வேடனால் அடிக்கப்பட்ட பெண்மான்போல மிக்க துக்கத்தால் பீடிக்கப்பட்ட என்னையும் பார்; எழுந்திரு. புத்தியுள்ளவரும் உலகங்களுக்குப் பிரபுவுமான வாஸுதேவருடைய தாமரைமலரின் இதழ்போன்ற கண்களுள்ள முகத்தை முன்பு அபிமன்யுபார்ப்பதுபோல நீ பார்' என்று புலம்பினாள்.

இவ்விதம் புலம்பிக்கொண்டு மறுபடியும் (கீழே) விழுந்தவளான அந்த உத்தரையைக் கண்டு எல்லாஸ்திரீகளும் மறுபடியும் தூக்கினார்கள். மத்ஸ்யராஜனுடைய பெண்ணான உத்தரையானவள், அப்பொழுது, எழுந்திருந்து தைரியத்துடன் மறுபடியும் அஞ்சலிசெய்துகொண்டு தாமரைக் கண்ணரான கிருஷ்ணரைப் பூமியில் (விழுந்து) நமஸ்கரித்தாள். புருஷோத்தமரான அந்தக் கிருஷ்ணர் அவளுடைய

விஸ்தாரமான பிரலாபங்களைக் ...ண்டு ... ஆசமனம்செய்து பிரம் மாஸ்திரத்தை உபஸம்ஹாரம் செய்தார். பரிசுத்தமான ஸ்வபாவ முள்ளவரும் அச்சுதருமான வாஸுதேவர் அந்தக் குழந்தை ஜீவிப் பதைப்பற்றி எல்லா உலகத்திற்கும் கேட்கும்படி பிரதிஜ்ஞைசெய்து சொல்லலானார். 'உத்தரையே! நான் பொய் சொல்லவில்லை. இது உண்மையேயாகப்போகிறது. நான் எல்லா ஜனங்களும் பார்த்துக் கொண்டிருக்கும்போது இந்தக் குழந்தையை ஜீவிக்கச் செய்கிறேன். நான் ஒருபொழுதும் விளையாட்டுக்களிலும் முன் பொய் சொன்ன துமில்லை; யுத்தத்தினின்றும் புறங்காட்டினதுமில்லையென்பது உண் மையானால் இந்தக் குழந்தை ஜீவிக்கட்டும். எனக்குத் தர்மத்திலும் பிராம்மணரிடத்திலும் அதிகமான பிரியம் இருக்குமானால், மரித் துப் பிறந்த அபிமன்யுவின் இந்தப் புத்திரன் ஜீவிக்கட்டும். நான் ஒரு பொழுதும் அர்ஜுனனிடத்தில் விரோதத்தை எண்ணாமலிருப்பது உண்மையானால் மரித்த இந்தக் குழந்தை ஜீவிக்கட்டும். உண்மையும் தர்மமும் என்னிடத்தில் எப்பொழுதும் நிலைபெற்றிருக்குமானால் அபி மன்யுவின் புத்திரனும் மரித்தவனுமான இந்தக் குழந்தை ஜீவிக்கட் டும். நான் கம்ஸனையும் கேசியையும் தர்மமாகக் கொன்றது உண்மை யானால் இப்பொழுது இந்தக்குழந்தை மறுபடியும் பிழைக்கட்டும்'என் றார். பரதர்களுள் சிறந்தவரே! தாமரைக் கண்ணரான வாஸுதேவர் இவ்விதம் சொல்லிவிட்டு, பிறகு, தாமரை மலர்போலப் பிரகாசிக்கின் றதும் பிரம்மாவினாலும் ருத்திரராலும் பூஜிக்கப்பட்டதுமான பாதத் தால் அக்குழந்தையைக் கால்முதல் தலைவரையில் தடவினார். பரத ஸ்ரேஷ்டரே! மஹாராஜரே! கிருஷ்ணர் தொட்டவுடன், அந்தக் குழந்தை மெள்ள மெள்ளப் பிரஜ்ஞையை அடைந்தது. மஹாராஜ ரே! பிரஜ்ஞையை அடைந்து மெள்ள மெள்ள அசைந்தது.

---

## எழுபதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் குழந்தைக்குக் காரணத்துடன் பெயரிட்டதும், யுதிஷ்டிரர்முதலியோர் பொறுமையுடன் வருதல் கேட்டுக் கோவிந்தர்முதலியோர் வரவேற்றதும்.)**

அரசரே! வாஸுதேவர் பிரம்மாஸ்திரத்தை உபஸம்ஹாரம் செய்தவுடன், அந்த வீடானது உமது தந்தையின் தேஜஸால் நன்கு விளங்கும்படி செய்யப்பட்டது. பிறகு, எல்லா ராக்ஷஸர்

களும் அந்த வீட்டை [illegible] ரா[illegible]ல், 'கேசவரே! நல்லது, நல்லது' என்று [illegible]க்கு உண்டா[illegible] பொழுது, அந்த அஸ்திரமும் ஜ்வலித்துக்[illegible]ாண்டு பிரம்ம[illegible]ம் சென்றது. மன்னரே! பிறகு, உம்முடைய[illegible] தந்தை மறுபடி[illegible] உயிரை அடைந்தான். அந்தக் குழந்தை உத்ஸா[illegible]த்திற்கும் ப[illegible]திற்கும் தக்கபடி அசைவுற்றான். வேந்தரே! பிறகு அந்தப் பாரதர்[illegible]கள் ஸந்தோஷமுள்ளவர்களானார்கள். பிராம்மண[illegible]கள் கேசவருடைய கட்டளையினால் ஸ்வஸ்திவாசனம் செய்தார்கள். பிறகு, குந்தியும் திரௌபதியும் ஸுபத்திரையும் உத்தரையும் (மற்றுமுள்ள) பரதஶ்ரேஷ்டர்களுடைய ஸந்தோஷமுள்ள அந்த எல்லாஸ்திரீகளும் மற்றுமுள்ளபுருஷஶ்ரேஷ்டர்களுடைய ஸ்திரீகளும் மனக்களிப்புற்றுக் கிருஷ்ணரைப் புகழ்ந்தார்கள். அப்பொழுது, மல்லர்களும் நடர்களும் சோதிடசாஸ்திரமறிந்தவர்களும் 'ஸுகமாக நித்திரை செய்தீர்களா' வென்று விசாரிப்பவர்களும் ஸூதமாகதர்களுடைய கூட்டங்களும் அந்தக் கிருஷ்ணரை ஸ்தோத்திரம் செய்தார்கள். பரதஶ்ரேஷ்டரே! மஹாராஜரே! மிக்க மகிழ்ச்சியுள்ள மஹாஜனங்கள் குருவம்சத்தின் ஸ்தோத்திரத்தைச் சொல்லும் ஆசீர்வாதங்களால் பூஜித்தார்கள். பாரதரே! உத்தரையானவள் ஸந்தோஷத்தை அடைந்து தகுந்தகாலத்தில் எழுந்திருந்து புத்திரனுடன்கூட வாஸுதேவரை நமஸ்கரித்தாள். மஹாராஜரே! பிறகு, வ்ருஷ்ணிகளுள் சிறந்தவரும் பிரபுவும் ஸத்யஸந்தருமான கிருஷ்ணர், ஸந்தோஷமடைந்து, அந்த உத்தரைக்கு மிகுதியானரத்தினங்களைக் கொடுத்து அப்பொழுது உம்முடைய தகப்பனுருக்கு, 'இந்த அபிமன்யுவின் புத்திரன், குலமானது பரிக்ஷீணமான பொழுது பிறந்ததால் இவனுக்குப் பெயர் 'பரிக்ஷித்' என்றுசொல்லிப் பெயரிட்டார். அரசரே! பாரதரே! உம்முடைய பிதாவான அந்தப் பரிக்ஷித் எல்லாஜனங்களின் மனத்திற்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணிக்கொண்டு நாளடைவில் வ்ருத்தியடைந்தார். வீரரே! பாரதரே! உம்முடைய தந்தை பிறந்து ஒருமாஸம் ஆனவுடன், பாண்டவர்கள் அதிகமான ரத்தினத்தை எடுத்துக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது, புருஷஶ்ரேஷ்டர்களும் உயர்ந்த பதவிபெற்றவர்களுமான பாண்டவர்கள், செய்யப்பட்டவையும் இயற்கையாக உள்ளவையும் பெரியவையும் பயங்கரமாகஉள்ளவையும் மேருவின் கொடுமுடிபோன்றவையுமான பாத்திரங்களையும் குடங்களையும் (மற்றப்) பாத்திரங்களையும் எடுத்துக் கொண்டு [1] பாரத்தால் பீடிக்கப்பட்ட வாகனங்

---

[1] 'பாரார்த்தை:' என்றபாடம் கொள்ளப்பட்டது.

களுடன் வழியில் இரண்டு குமாரசத்திரு ஓாடத்தில் வஸித்துக் கொண்டு தேவரான சங்கரை நினைத்துக் கொண்டே வந்தார்கள். அவர்களுள் யுதிஷ்டிரரைத்தவிர மற்ற) ஓர் அரசனாவது பாரத்தால் பிடிக்கப்படாதவனாக இல்லை. பீமன்முதலானவர்களும் யாகத்திற்காகப் பொருளைச் சுமந்தார்கள் (மற்ற) ஜனங்களைப்பற்றிச் சொல்லவும்வேண்டுமா? அவர்கள் ஊரில் வந்ததைக் கேள்விப் பட்டு விருஷ்ணிகளுள் சிறந்தவர்கள் ஹஸ்திநபுரத்தை மாலைகளின் ஸமூகங்களால் அலங்கரித்து வெளியே புறப்பட்டார்கள். அரசரே! பட்டணத்திலுள்ள ஜனங்களும் விசித்ரமான கொடியாடைகளாலும் பலவிதமான த்வஜங்களாலும் வீடுகளை அலங்கரித்தார்கள். பிறகு, விதுரர் பாண்டவர்களுக்குப் பிரியத்தைச் செய்யக்கருதி, தேவால யங்களில் பலவிதமான பூஜைகளைச் செய்யும்படி கட்டளையிட்டார். அந்தப்பட்டணத்தில் ராஜவீதிகளும் புஷ்பங்களால் அலங்கரிக்கப் பட்டன. அந்தப் பட்டணமானது நர்த்தகர்கள் நர்த்தனம் செய்வதாலும் கானம் செய்கிறவர்களின் ஒலிகளாலும் ஸமுத்திரப் பெருக்குக்கு ஒப்பான முழக்கமுள்ளதாக விளங்கிற்று. அப்பொழுது, அந்தப் பட்டணமானது குபேரனுடைய பட்டணம்போல இருந்தது. அரசரே! வந்திகளாலும் ஸ்திரீகளுடன்கூடின எல்லாப் புருஷர்களாலும் பரிசுத்தமான அந்த அந்த இடங்களில் நாற்புறமும் விளங்கும்படி செய்யப்பட்டன. அப்பொழுது, காற்றினால் நாற்புறமும் அலைக்கப்பட்ட பதாகைகள் தக்ஷிண குருதேசங்களையும் உத்தர குருதேசங்களையும் காட்டுகின்றனபோலிருந்தன. அப்பொழுது, [1]ராஜாங்க அதிகாரிகள், 'இப்பொழுது (பாண்டவர்கள்) ரத்தினங்களைக் கொண்டுவருவதால் (எல்லாரும்) தேசம் முழுவதும் (ஸந்தோஷமாக) விளையாட வேண்டும்' என்று பறையறைவித்தார்கள்.

---

1 வேறு பாடம்.

## எழுபத்தோராவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம் (தொடர்ச்சி.)



**(கண்ணபிரான்முதலியவர்கள் தருமபுத்ரராதியவரை எதிர்கொண்டழைத்ததும், வியாஸர் அச்வமேதத்தைப் புகழ்ந்து அதைச் செய்யச் சொல்லியதும், தர்மபுத்ரர் கோவிந்தரைச் செய்யச் சொல்ல அவர் மறுத்துத் தர்மபுத்ரரையே செய்யச்சொல்லியதும்).**

பகைவரை அழிப்பவரான வாஸுதேவர், அந்தப் பாண்டவர்கள் ஸமீபத்தில் வந்துவிட்டார்களென்பதைக் கேட்டு மந்திரிகளுடனும் ஸுஹ்ருத்துக்களுடைய கூட்டங்களுடனும் எதிர்கொண்டு சென்றார். அவர்கள் முறைப்படி ஒன்று சேர்ந்து (பாண்டவர்களைப்) பார்க்கவிரும்பி எதிர்கொள்ளச் சென்றார்கள். அரசரே! அந்தப் பாண்டவர்கள் முறைப்படி விருஷ்ணிகளுடன்சேர்ந்து கூட்டமாக ஹஸ்தினபுரத்தில் பிரவேசித்தார்கள். அச்சேனை பிரவேசிக்கும் பொழுது, குளம்புகள் உருளைகளின் கட்டுக்கள் இவைகளுடைய ஒலியினால் ஆகாயம் பூமி இவற்றின் இடைவெளியானது முழுதும் சூழப்பட்டதாயிற்று. ஸந்தோஷமடைந்த மனமுள்ளவர்களும் மந்திரிகளுடனும் நண்பர்கூட்டங்களுடனும் கூடினவர்களுமான அந்தப் பாண்டவர்கள் அப்பொழுது பொக்கசங்களை முன்னிட்டுக்கொண்டு தமது பட்டணம் சென்றனர். அவர்கள் முறைப்படி திருதராஷ்டிர ராஜனிடம்சென்று தம்பெயர்களைச் சொல்லிக்கொண்டு அவனுடைய பாதங்களில் நமஸ்கரித்தனர். ராஜச்ரேஷ்டரே! பரதச்ரேஷ்டரே! வேந்தரே! அந்தவீரர்கள் அப்பொழுது திருதராஷ்டிரரிடம் அனுமதி பெற்று, ஸுபலனுடைய பெண்ணான காந்தாரியையும் குந்தியையும் விதுரரையும் பூஜித்து, யுயுத்ஸுவினிடம்சென்று பூஜிக்கப் பெற்று மிகவும் விளங்கினார்கள். பாரதரே! பிறகு, அந்தவீரர்கள் அப்பொழுது மிக்க ஆச்சரியமும் விசித்ரமும் பெரிய அத்புதமுமான உமது தந்தையின் அந்தப் பிறப்பைக் கேட்டார்கள். அப்பொழுது, புத்திமானான வாஸுதேவருடைய அச்செய்கையைக் கேட்டுப் பூஜிக்கத்தக்கவரும் தேவகீபுத்திரருமான அவரைப் பூஜித்தார்கள். பிறகு, சில நாள்கள் சென்றவுடன், ஸத்யவதியின் புத்திரரும் சிறந்த தேஜஸுள்ளவருமான வியாஸர் ஹஸ்தினபுரத்திற்கு வந்தார். அப்பொழுது, அவருக்கு எல்லாக் கௌரவச்ரேஷ்டர்களும் பூஜை செய்து விருஷ்ணிச்ரேஷ்டர்களுடனும் அந்தகச்ரேஷ்டர்களுட

னும் (அவரைச்) சூழ்ந்து உட்கார்ந்தார்கள். அப்பொழுது, தர்ம புத்திரரான யுதிஷ்டிரர், பலவிதமான கதைகளைச் சொல்லி, பிறகு வியாஸரை நோக்கிக் கூறலானார்.

'பகவானே! உம்முடைய அனுக்ரஹத்தால் கொண்டுவந்த இந்த ரத்தினத்தை அஶ்வமேதமென்னும் பெரிய யாகத்தில் உபயோகிக்க விரும்புகிறேன். முனிஶ்ரேஷ்டரே! அந்த யாகத்தைப் பற்றி நீர் அனுமதிகொடுக்க வேண்டுகிறோம். நாங்களெல்லாரும் உமக்கும் மஹாத்மாவான கிருஷ்ணனுக்கும் வசப்பட்டவர்கள்' என்ற வசனத்தைச் சொன்னார். வியாஸர், 'அரசனே! உனக்கு அனுமதி கொடுக்கிறேன். மேலே செய்யவேண்டியதைச் செய். விதிப்படி தக்ஷிணையுள்ள அஶ்வமேதத்தால் தேவர்களைப் பூஜிப்பாயாக. ராஜேந்திர! அஶ்வமேதமோ எல்லாப் பாவங்களையும் நசிக்கச் செய்யக் கூடியது. நீ அந்த யாகத்தைச் செய்து பாவமற்றவனாவாய். இதில் ஐயமில்லை.' என்று சொன்னார். கௌரவரே! (வியாஸரால்) இவ்வாறு சொல்லப்பட்டவரும் தர்மாத்மாவும் கௌரவராஜருமான யுதிஷ்டிரரோ அஶ்வமேதத்தைச் செய்வதில் புத்தியைச் செலுத்தினார். பேசும் திறமையுள்ள யுதிஷ்டிரராஜர் வியாஸரிடம் இவையெல்லாவற்றையும் பற்றி அனுமதி பெற்றுக்கொண்ட பிறகு, கிருஷ்ணரிடம் வந்து, 'புருஷோத்தமரே! தேவகிதேவியானவள் உம்மால் நல்லபுத்திரருள்ளவளானாள். சிறந்தகைகளுள்ளவரே! நான் இப்பொழுது உம்மிடம் எதைச் சொல்லுவேனோ அதை நீர் செய்யவேண்டும். யதுநந்தனரே! உமது மஹிமையால் ஸம்பாதிக்கப்பட்ட போகங்களை நாங்கள் அனுபவிக்கிறோம். இந்தப்பூமியை நீர் (உமது) பராக்கிரமத்தாலும் புத்தியாலும் ஜயித்தீர். நீர் உம்மைத் தீக்ஷையுள்ளவராகச் செய்துகொள்ளும். நீர் எங்களுக்கு முக்யமான குரு. தாசார்ஹரே! நீர் யாகம் செய்தால் நான் பாவமற்றவனாவேன். நீரே யாகம்; நீரே குரு; நீரே தர்மங்களை அறிந்தவர்; பிரஜைகளுக்கும் பதி; நீரே எல்லாப் பிராணிகளுக்கும் கதி என்பது எனக்கு நிச்சயமான எண்ணம்' என்ற வசனத்தைச் சொன்னார். கோவிந்தர், 'சிறந்தகைகளுள்ளவரே! பகைவரை அடக்குபவரே! நீரே இந்த யாகத்தைச் செய்யத்தக்கவர். நீரே எல்லாப் பிராணிகளுக்கும் கதி என்பது என்னுடைய நிச்சயமான எண்ணம். நீரே இப்பொழுது கௌரவவீரர்களுள் தர்மத்தால் பிரகாசிக்கிறீர். அரசரே! நாங்கள் உமக்கு உட்பட்டவர்களாக இருக்கிறோம். வேந்தரே! நீர் எங்களுக்குக் குருவாக எண்ணப்பட்டிருக்கிறீர். நீர் என்னுடைய அனுமதியைப் பெற்று யாகம் செய்யும். இந்த யாகத்தை

நீரே செய்யத்தக்கவர். ப[illegible]தரே! நீர் எங்களை விரும்பிய காரியத்தில் ஏவும். பாவமற்றவரே! [illegible]ான் உமக்கு உண்மையாகப் பிரதிஜ்ஞை செய்கிறேன். நான் உமக்[illegible] எல்லாவற்றையும் செய்கிறேன். அரசரான நீர் யாகம் செய்தால் பீம[illegible]ம் அர்ஜுனனும் நகுலனும் ஸஹதேவனும் யாகம் செய்தவர்கள[illegible]ார்கள்' என்று [illegible]சான்னார்.

## எழுபத[illegible]ண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(வியாஸர் யாகக்குதிரையைச் சுற்றவிடும்படி யுதிஷ்டிரருக்குச் சொல்லியதும், யுதிஷ்டிரர் குதிரையைக்காக்க அர்ஜுனனை நியமித்ததும்.)**

மாதவரால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் மேதாவியும் தர்மபுத்திரருமான யுதிஷ்டிரர், பிறகு, வியாஸரை அழைத்து, 'அச்வமேதம் செய்யக் கூடியகாலம் உமக்கு உள்ளபடி தெரியும். என்னுடையயாகமானது உம்முடைய வசத்திலிருக்கிறது. ஆகையால், நீர் எனக்குத் தீக்ஷைசெய்விப்பீராக' என்னும் வசனத்தைச் சொன்னார். வியாஸர், 'குந்திபுத்திர! இந்தப்பைலரும் யாஜ்ஞவல்ஜ்ஞரும், காலம் தவறாமல், செய்யவேண்டியதைச் செய்வார்கள். ஸம்சயமில்லை. புருஷ ஶ்ரேஷ்டனே! சித்திராபூர்ணிமைத் தினத்தில் உனக்குத் தீக்ஷை நடக்கும். யாகத்திற்கு வேண்டிய ஸாமக்ரிகளைச் சேர். குதிரைகளைப் பற்றிய வித்தைதெரிந்த ஸூதர்களும் அதைஅறிந்த பிராம்மணர்களும் உன்னுடைய யாககாரியம் நிறைவேறுவதற்காகச் சிறந்ததான குதிரையைப் பரீக்ஷிக்கட்டும். அந்தக் குதிரையைச் சாஸ்திரப்படி விடு. வேந்தனே! அது உன்னுடைய பெயரினால் கீர்த்தியை வ்ருத்தி பண்ணிக்கொண்டு கடலை ஆடையாகக் கொண்ட பூமியைச் சுற்றிவரட்டும்' என்று சொன்னார், ராஜேந்திரரே! இவ்வாறு சொல்லப்பட்ட அந்த யுதிஷ்டிரராஜர் 'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லிப் பிரம்மவாதியான வியாஸர் சொன்னபடி எல்லாவற்றையும் செய்தார். ராஜேந்திரரே! அவ்வாறே, எல்லா ஸாமக்ரிகளையும் மனத்தில் நிச்சயித்துக் கொண்டார். அளவற்ற மஹிமையுள்ள அந்த யுதிஷ்டிரராஜர் அப்பொழுது ஸாமக்ரிகளைச் சேர்த்து வைத்துக்கொண்டு வியாஸரிடம் தெரிவித்தார். பிறகு, அதிக தேஜஸுள்ளவியாஸர் யுதிஷ்டிரராஜரை நோக்கி, 'தகுந்த காலத்திலும் தகுந்த யோகத்திலும் உனக்குத் தீக்ஷை செய்விக்க ஆயத்தர்களாக இருக்கிறோம். கௌரவ! கத்தியும் கூர்ச்ச

மும் மற்றுமுள்ளவையும் ஸுவர்ணத்தால் செய்யப்பட்டனவாக கட்டும். யாகத்திற்கு வேண்டிய வெல்லாம் ஸுவர்ணமயமாகச் செய்யப்படட்டும். இப்பொழுது குதிரை திரவிதிப்படி நன்கு ரக்ஷிக்கப்பட்டுக் க்ரமமாகப் பூமியில் ஸஞ்சரிக் கட்டும்' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'ப்ராம்மணரே! இந்தக்குதிரை விடப்பட்டு இப்புவியில் இஷ்டப்படி ஸஞ்சரிப்பதற்கு வேண்டிய காரியத்தைச் சொல்லும். முனிவரே! பூமியில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் குதிரையை எவன் காக்கக் கூடியவன். அதை நீர் சொல்லவேண்டும்' என்று சொன்னார். ராஜேந்திரரே! இவ்விதம் சொல்லப்பட்ட அந்த வியாஸர், பீமஸேனனுக்குத் தம்பியும் எல்லாவில்லாளிகளுள்ளும் சிறந்தவனும் ஜயசீலனும் ஸஹிக்கும் தன்மையும் தைரியமுமுள்ளவனுமான அர்ஜுனன் இந்தக்குதிரையைக் காப்பாற்றுவான். நிவாதகவசர்களைக் கொன்றவனை அவனே பூமியை ஜயிக்கவல்லமையுள்ளவன். அவனிடத்தில் திவ்யமான அஸ்த்ரங்களும் திவ்யமான கவசமும் திவ்யமானவில்லும் இரண்டு அம்புத்தூணிகளும் இருக்கின்றன. அவன் இக்குதிரையைப் பின்தொடர்வான். ராஜஶ்ரேஷ்டனே! அறம்பொருள்களில் திறமையுள்ளவனும் எல்லா வித்தைகளிலும் தேர்ச்சி பெற்றவனுமான அவன் சாஸ்திரப்படி உனது குதிரையை ஸஞ்சரிக்கச் செய்வான். ராஜகுமாரனும் நீண்ட கைகளுள்ளவனும் தருணனும் தாமரை மலர்போன்ற கண்களுள்ளவனும் அபிமன்யுவின் தந்தையுமான அந்தவீரன் இக்குதிரைக்குப் பின் செல்வான். மன்னனே! தேஜஸுள்ளவனும் குந்தியின் மைந்தனும் அளவற்ற பராக்கிரமமுள்ளவனுமான பீமஸேனனும் நகுலனும் ராஜ்யத்தை ரக்ஷிக்கத் திறமையுள்ளவர்கள். குருகுலத்தில் பிறந்தவனே! புத்தியுள்ளவனும் பெரும்புகழ் பெற்றவனுமான ஸஹதேவனே விதிப்படி குடும்பத்தின் யோகக்ஷேமத்தை முழுதும் நன்கு நடத்துவான்' என்று சொன்னார். (இவ்விதம்) சொல்லப்பட்டவரும் குருகுலஶ்ரேஷ்டருமான அந்த யுதிஷ்டிரர் எல்லாவற்றையும் முறைப்படிசெய்து அர்ஜுனனுக்குக் குதிரைவிஷயமாக உத்தரவுசெய்யலானார். 'அர்ஜுன! வா. வீர! இந்தக் குதிரையைப் பரிபாலனம்செய். நீதான் இந்தக்குதிரையை ரக்ஷிக்கத்தகுந்தவன். வேறு ஒருமனிதனாலும் முடியாது. நீண்ட கைகளுள்ளவனே! பாவமற்றவனே! உன்னை எதிர்த்துவரும் மன்னர்களுடன் யுத்தமுண்டாகாமலிருக்கும்படி நீ செய்யவேண்டும். சிறந்த கைகளுள்ளவனே! நீ என்னுடைய இந்த யாகத்தை எல்லா மன்னர்களுக்கும் தெரிவித்து 'காலத்தில் வரவேண்டும்' என்றும் சொல்'

என்று சொன்னார். தர்ம[redacted]புத்திரரான அந்த யுதிஷ்டிரர், ஸஹோதரனும் ஸவ்யஸாசியுமான அர்ஜு[redacted]னனை நோக்கி இவ்வாறு சொல்லிவிட்டு, அப்பொழுது பூபாலனான தி[redacted]தராஷ்டிரனுடைய ஸம்மதத்தின்மேல் பீமஸேனனையும் நகுலனையு[redacted] பட்டணத்தை ரக்ஷிக்கும்படியும் போர்வீரர்களுக்குத் தலைவனா[redacted] ஸஹதேவனைக் குடும்பவேலையைப் பார்க்கும்படியும் உத்தரவு செ தார்.

## எழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(அர்ஜுனன் தர்ம புத்திரரால் யாகக் குதிரையை ரக்ஷிக்கும்படி ஏவப்பட்டதும், அவன் அக்குதிரையைத் தொடர்ந்து முதலில் வட திசையில் சென்றதும், அங்கே எதிர்த்த அரசர்களை வென்றதும்.)**

பிறகு, தீக்ஷைக்கேற்ற காலம் வந்தவுடன், மிக்க மஹான்களான அந்த ரித்விக்குக்கள் யுதிஷ்டிரராஜருக்கு அஸ்வமேதத்திற்காக விதிப்படி தீக்ஷை செய்வித்தார்கள். தீக்ஷை பெற்றவரும் பாண்டுவின் புத்திரரும் அதிகதேஜஸுள்ளவருமான அந்தத்தர்மராஜர் பசுமேதங்களைச் செய்து ரித்விக்குக்களுடன்கூட விளங்கினார். பிரம்மவாதியும் அளவற்ற தேஜஸுள்ளவருமான வியாஸர் தாமே அஸ்வமேதத்திற்காகக் குதிரையைச் சாஸ்திரவிதிப்படி விட்டார். ராஜதர்மப்படி தீக்ஷைபெற்றவரும் ஸுவர்ணமாலையும் கழுத்தில் ஸுவர்ணாபரணமும் பூண்டவருமான அந்த அரசர் அப்பொழுது ஜ்வலிக்கும் அக்னி போல விளங்கினார். கிருஷ்ணாஜினம் தரித்தவரும் தண்டத்தைக் கையில் கொண்டவரும் வெண்பட்டு உடுத்தவருமான அந்தத்தர்மபுத்திரர் யாகத்தில் பிரஜாதிபதிபோல மிக்க காந்தியுள்ளவராக விளங்கினார். வேந்தரே! அவ்வாறே, எல்லா ரித்விக்குக்களும் சமமான வேஷமுள்ளவர்களாக இருந்தார்கள். பூபாலரே! வெண்மையான குதிரைகளுள்ளவனும் வானரக் கொடியுள்ளவனும் ஜ்வலிக்கின்ற அக்னிபோன்றவனும் தனஞ்சயனுமான அர்ஜுனனும் தர்மராஜருடைய கட்டளையினால் குதிரையைப் பின் தொடர்ந்தான். மன்னரே! பூபாலரே! அர்ஜுனன் உடும்புத் தோலால் செய்த விரலுறை பூண்டு காண்டீவத்தை நாணொலியிடும்படி செய்துகொண்டு ஸந்தோஷத்துடன் அக்குதிரையைத் தொடர்ந்து சென்றான். அரசரே! பிரபுவே! அப்பொழுது, அந்தப் பட்டணத்திலுள்ளவர்கள் கௌரவ

ஸ்ரேஷ்டனுன தனஞ்சயனைப் போகும்போது பார்க்க விரும்பி மார்க்கங்களில் வந்தார்கள். அந்தக் குதிரையையும் குதிரையின் பின் செல்லும் அந்த அர்ஜுனனையும் பார்க்க விருப்பமுள்ள அவர்களுக்கு ஒருவரோடொருவர் உரைதலால் உஷ்ணம் உண்டானதுபோலிருந்தது. மஹாராஜரே! பிறகு, குந்தீபுத்திரனை தனஞ்சயனைப்பார்க்கும் மனிதர்களுடைய சப்தமானது திசைகளையும் ஆகாயத்தையும் நிரப்பிக்கொண்டு தோன்றிற்று. (அவர்கள்,) 'குந்தீ புத்திரனை அர்ஜுனன் இதோ போகிருன். காந்தியுள்ள குதிரையும் செல்லுகிறது. சிறந்த கைகளுள்ள அர்ஜுனன் உத்தமமான வில்லையேந்திப் பின் செல்லுகின்றுன்.' என்று சொன்னுர்கள். இவ்விதம் சொல்லுகின்ற அவர்களுடையவார்த்தைகளைக் கம்பீரமான புத்தியுள்ள அர்ஜுனன் கேட்டான். (சிலர்), 'பாரத! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். க்ஷேமமாகப் போய்த்திரும்பிவா' என்றுசொன்னுர்கள். ராஜனே! பிறகு, மற்ற மனிதர்கள், 'கூட்டத்தில் அர்ஜுனன் கண்ணுக்குப் புலப்படவில்லை. இந்தவில் காணப்படுகிறது. பயங்கரமான சப்தமுள்ள இந்த வில்லானது காண்டீவமென்று பிரஸித்திபெற்றது. இவன் ஒருவிதபயமுமில்லாத வழியில் துன்பமின்றி க்ஷேமமாகச் செல்லட்டும். இவனைத் திரும்பிவரும்போது பார்க்கப்போகிறேம். நிச்சயமாகத் திரும்பிவருவான்' என்ற வாக்கியத்தைச் சொல்லிக்கொண்டார்கள். பரதஶ்ரேஷ்டரே! ஆடவர்களும் பெண்டிர்களும் அடிக்கடி சொல்லும் இது முதலான இனிமையான வார்த்தைகளைக் கம்பீரமான புத்தியுள்ள அர்ஜுனன் கேட்டான். யாஜ்ஞவல்க்யருடைய சிஷ்யரும் யாககர்மாவில் ஸமர்த்தரும் வேதத்தின்கரையை அடைந்தவருமான ஸோமஶ்ரவஸானவர் சாந்தியைச்செய்வதற்காகப் பார்த்தனுடன் சேர்ந்து சென்றுர். பூபாலரே! அரசரே! பூமியைப்பரிபாலிப்பவரே! வேதத்தின் கரையை அடைந்த அநேகம்பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் தர்மராஜருடைய ஆஜ்ஞையினுல் விதிப்படி மஹாத்மாவான அர்ஜுனனைப் பின் தொடர்ந்து சென்றுர்கள். மஹாராஜரே! ஸாதுக்களுள் சிறந்தவரே! அந்தக் குதிரையானது பாண்டவர்களால் அஸ்திரதேஜஸால் ஜயிக்கப்பட்ட பூமியில் விதிப்படி ஸஞ்சரித்தது. வீரரே! அப்பொழுது, பாண்டுகுமாரனை அர்ஜுனனுக்கு (மற்றவர்களுடன்) நடந்த விசித்ரமான பெரிய யுத்தங்களை உமக்குச் சொல்லுகிறேன். அரசரே! அந்தக் குதிரை பூமியைப் பிரதக்ஷிணமாக வந்தது. பூபதியே! முதலில் வடக்குப் பக்கமாகச் சென்றது. அதனைத் தெரிந்துகொள்ளும். அப்பொழுது, அந்த உத்தமமான குதிரையானது அரசர்களு

டைய தேசங்களைத் துகைத்துக்கொண்டு மெள்ளச் சென்றது. வெண்மையான குதிரைகளுள்ளவனும் மஹாரதனுமான அர்ஜுனனும் (அதைப் பின் தொடர்ந்து) சென்றான். மஹாராஜரே! அப்பொழுது பந்துக்கள் கொல்லப்பட்டவர்களும் க்ஷத்திரியர்களுமான பதினாயிரக்கணக்கான அரசர்கள் அர்ஜுனனோடு போர் புரிந்தார்கள். அவர்கள் கணக்கற்றிருந்தனர். வேந்தரே! முன் யுத்தத்தில் (அர்ஜுனனால்) துன்புறுத்தப்பட்டவர்களும் கத்தியையும் வில்லையும் தரித்தவர்களுமான அநேகம் கிராதர்களும் யவனர்களும் பலவிதமான மற்றுமுள்ள மிலேச்சர்களும் யுத்தத்தில் அடங்காத மதமுள்ளவர்களும் அதிக ஸந்தோஷமுள்ள காலாட்களும் வாகனங்களுமுள்ளவர்களும் சிறந்தவர்களுமான அநேக அரசர்களும் பாண்டுபுத்திரனான அர்ஜுனனுடன் (போர்புரிய) வந்தார்கள். பூபதியே! அர்ஜுனனுக்கு ஆங்காங்கு பற்பல தேசங்களிலிருந்து வந்த மன்னர்களுடன் இவ்விதம் யுத்தங்கள் நடந்தன. அரசரே! பாவமற்றவரே! அப்பொழுது, அர்ஜுனனுக்குக் குதிரையின் நிமித்தம் நடந்த பெரிய யுத்தங்களை உமக்குச் சொல்லுகிறேன்.

## எழுபத்துநான்காவது அத்யாயம்.

## அநுகீதா பர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் த்ரிகர்த்தர்களை வென்றது.)

மஹாரதர்களென்று நன்கு அறியப்பட்ட பாண்டவவீரர்களால் கொல்லப்பட்டவர்களின் புத்திரர்களும் பேரர்களுமாயிருப்பவர்களும் விரோதத்தைச் செய்துகொண்டவர்களுமான த்ரிகர்த்தர்களுடன் அர்ஜுனனுக்கு யுத்தம் நேர்ந்தது. அந்த வீரர்கள் யாகத்தைச் சேர்ந்த உத்தமமான குதிரை (தமது) தேசத்தினருகில் வந்ததை அறிந்து, பிறகு, கவசம்பூண்டு (அதைச்) சூழ்ந்துகொண்டார்கள். அரசரே! (அந்த) ரதிகர்கள் அம்புப்பெட்டிகளைத் தரித்துக்கொண்டு நன்கு அலங்கரிக்கப்பட்ட உத்தமமான குதிரைகளுடன் (அந்தக்) குதிரையைச் சூழ்ந்துகொண்டு பிடிப்பதற்கு ஆரம்பித்தார்கள். பிறகு, பகைவரை அடக்குபவனான அர்ஜுனன் அப்பொழுது அவர்கள் செய்ய எண்ணியதை ஆலோசித்து அந்த வீரர்களை நல்வார்த்தை சொல்லித் தடுத்தான். அவர்களெல்லாரும் அந்த வார்த்தையை அலக்ஷியம் செய்து அப்பொழுது (அவனைப்) பாணங்

களால் அடித்தார்கள் அர்ஜுனன், தமோகுணத்தினாலும் ரஜோகுணத்தினாலும் மூடப்பட்ட அவர்களைத் தடுத்தான். பாரதரே! பிறகு, அர்ஜுனன் நகைத்துக்கொண்டு அவர்களை நோக்கி, 'தர்மத்தை அறியாதவர்களே! திரும்புங்கள். க்ஷேமத்தையும் உயிர்வாழ்வையும் அடைவீர்கள்' என்று சொன்னான். அந்த வீரன் போகும்போது தர்மராஜர் (அவனை நோக்கி), 'பார்த்த! பந்துக்களை இழந்த அரசர்களை நீ கொல்லாதே' என்று தடுத்தாரல்லவா? புத்திமானான தர்மராஜருடைய அந்தவார்த்தையைக் கேட்ட அந்த அர்ஜுனன் அப்பொழுது அவர்களை, 'திரும்புங்கள்' என்று சொன்னான். ஆனாலும், அவர்கள் திரும்பவில்லை. பிறகு, தனஞ்சயன் திரிகர்த்தராஜாவான ஸூர்யவர்மாவை யுத்தத்தில் பாண ஸமூகத்தால் (அடித்துக்) கர்ஜித்து அட்டஹாஸம் செய்தான். பிறகு, அவர்கள் ரதங்களின் ஒலியினாலும் தேருருளைகளுடைய கட்டுக்களின் சப்தத்தாலும் எல்லாத்திசைகளையும் நிரப்பிக்கொண்டு தனஞ்சயனை எதிர்த்து வந்தார்கள். ராஜேந்திரரே! பிறகு, ஸூர்யவர்மாவானவன் அஸ்திரப்பயிற்சியைக் காண்பித்துக்கொண்டு பார்த்தன்மீது கணுக்கள்படிந்துள்ள நூறுபாணங்களைப் பிரயோகித்தான். அவ்வாறே, அவனைப் பின்தொடர்ந்து வந்த மற்றச் சிறந்த வில்லாளிகளும் தனஞ்சயனைக் கொல்லவிரும்பிச் சரமாரிகளைப் பொழிந்தார்கள். அரசரே! அந்தப் பாண்டவன் அப்பொழுது அதிகமான அந்தப்பாணங்களை நாண் கயிற்றினின்று விடப்பட்ட அநேகபாணங்களால் வெட்டினான். அவைகள் பூமியில் விழுந்தன. அந்தச் சூரியவர்மாவின் தம்பியும் யௌவனவயதுள்ளவனும் தேஜஸ்வியுமான கேதுவர்மாவோ ஸஹோதரனுக்காகப் புகழ்பெற்ற பாண்டவனுடன் போர்புரிந்தான். சத்துருவீரர்களைக் கொல்பவனான அர்ஜுனன் யுத்தத்திற்கு வருகின்ற கேதுவர்மாவைக்கண்டு அவனைக் கூர்மையுள்ளபாணங்களால் அடித்தான். கேதுவர்மா அடிக்கப்பட்டவுடன், மஹாரதனான த்ருதவர்மாவானவன் ரதத்துடன் வேகமாகவந்து அர்ஜுனன்மீது பாணங்களை இறைத்தான். வீர்யமுள்ளவனும் சிறந்த தேஜஸுள்ளவனுமான அர்ஜுனன் பாலனான அந்தத்ருதவர்மாவின் அந்தச் சுறுசுறுப்பைக் கண்டு மிக்க மனக்களிப்புற்றான். இந்திரகுமாரனான அந்த அர்ஜுனன் அப்பொழுது அந்த த்ருதவர்மா கணைகளை எடுப்பதையும் தொடுப்பதையும் காணவில்லை; விடுப்பதையே கண்டான். அந்த அர்ஜுனனோ போர்க்களத்தில் அந்தத்ருதவர்மாவை யுத்தத்தில் உத்ஸாஹமுள்ளவனாகச் செய்துகொண்டு மனத்தால் ஒரு

முகூர்த்தம் பாராட்டினான்; யுத்தத்தில் கோபங்கொண்டவனும் குந்தீ புத்திரனுமான அர்ஜுனன் அபிமன்யுவினுடையது போன்ற பால னான க்ருதவர்மாவின் அச்செய்கையைக் கண்டு வியப்புற்றுச் சிரித் துக் கொண்டு (அவனை) அடிக்காமலிருந்தான். சிறந்த கைவன்மை யுள்ளவனும் கௌரவவீரனுமான அர்ஜுனன் நகைத்துக்கொண்டு, ஸர்ப்பம்போலக் கோபங்கொண்ட அந்த க்ருதவர்மாவைப் பிரீதியை முன்னிட்டு உயிர் துறக்கும்படி செய்யவில்லை. அளவற்ற பராக்ரம முள்ள அர்ஜுனனால் அவ்வாறு ரக்ஷிக்கப்படும் அந்தக்ருதவர்மா, அப்பொழுது, அர்ஜுனன்மீது ஜ்வலிக்கின்ற பாணத்தைப் பிரயோ கித்தான். அந்த அர்ஜுனன் அந்தப் பாணத்தால் விரைந்து கையில் திடமாக அடிக்கப்பட்டு மதிமயங்கிக் காண்டீவத்தை நழுவவிட்டான். பிறகு, அந்தக் காண்டீவம் பூமியில் விழுந்தது. பிரபுவே! பாரதரே! ஸவ்யஸாசியின் கையிலிருந்து விழுகின்ற அந்தவில்லினுடைய வடிவ மானது இந்திரவில்லின் வடிவத்துக்கு ஒப்பாக இருந்தது. பெரிய யுத்தத்தில் சிறந்த அந்தப் பெரிய வில்லானது விழுந்தவுடன், அரச னான க்ருதவர்மா இரைந்து நகைத்தான். பிறகு, அர்ஜுனன் கோபத் தால் பீடிக்கப்பட்டுக்கையினின்று உதிரத்தைத் துடைத்துக்கொண்டு அந்தத் திவ்யமான வில்லை எடுத்துச் சரமாரிகளைப் பொழிந்தான். பிறகு, அச்செய்கைகளைப் புகழும் பலவிதப் பிராணிகளுடைய கல கலவென்னும் ஒலியானது அப்பொழுது ஆகாயத்தை அளாவிற்று. பிறகு, மிக்க கோபங்கொண்டவனும் காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பானவனுமான அர்ஜுனனைக்கண்டு த்ரிகர்த்தவீரர் கள் நாற்புறமும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, அவர்கள் க்ருதவர் மாவை ரக்ஷிப்பதற்காக அர்ஜுனனை எதிர்த்து வந்து அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது, அர்ஜுனன் கோபங்கொண் டான். பிறகு, அந்த அர்ஜுனன் அவர்களுள் பதினெட்டுப் போர் வீரர்களை மகேந்திரனுடைய வஜ்ரத்துக்கொப்பானவைகளும் இரும் பினால் செய்யப்பட்டவைகளுமான அநேக பாணங்களால் விரைவில் கொன்றான். தனஞ்சயன் அவர்கள் நன்குமுறியடிக்கப்பட்டதைக் கண்டு உரக்க நகைத்து ஸர்ப்பம் போன்ற வடிவமுள்ள பாணங் களால் விரைந்து (அவர்களை) அடித்தான். அரசரே! அர்ஜுனனு டைய பாணங்களால் பீடிக்கப்பட்ட அந்த த்ருகர்த்த தேசத்து மஹாரதர்களெல்லாரும் மனநிலைமை குலைந்து திசைகளை நோக்கி ஓடினார்கள். கொல்லப்பட்டவர்கள் போக மீதியுள்ளவர்களும் அர் ஜுனனுடைய பராக்கிரமத்தைக் கண்டவர்களுமான பகைவர்கள்

புருஷஶ்ரேஷ்டனும் ஸம்சப்தகர்களைக் கொன்றவனுமான அந்த அர்ஜுனனை நோக்கி, 'அர்ஜுன! நாங்களெல்லாரும் உமக்கு வேலைக்காரர்களாகவும் எல்லாரும் உமக்கு வசப்பட்டவர்களாகவும் இருக்கிறோம். வணக்கத்துடன் வந்திருக்கும் எங்களைக் கட்டளையிடும். கௌரவநந்தனரே! உமக்குப் பிரியமான எல்லாவற்றையும் செய்கிறோம்' என்று சொன்னார்கள். அர்ஜுனன், இந்தவசனத்தைக் கேட்டு, அப்பொழுது அவர்களெல்லாரையும் நோக்கி, 'மன்னர்களே! உயிரை ரக்ஷித்துக் கொள்ளுங்கள்; (என்னுடைய) கட்டளையை ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று சொன்னான்.

---

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.
## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் ப்ராக்ஜோதிஷ நகர்சென்று யஜ்ஞதத்தனுடன் போர் புரிந்தது.)**

பரதர்களுள் சிறந்தவரே! பிறகு, உத்தமமான அந்தக் குதிரையானது பிராக்ஜ்யோதிஷ தேசம் சென்று ஸஞ்சரித்தது. அங்கு யுத்தத்தில் கொடியவனும் பகதத்தனுடைய புத்திரனுமான 1 யஜ்ஞதத்தன்என்னும் அரசன் வெளிக்கிளம்பித் தன் தேசத்தினருகில் குதிரையுடன் வந்திருக்கும் பாண்டுபுத்திரனை அர்ஜுனனுடன் போர் புரிந்தான். பகதத்தனுடைய குமாரனை அவ்வரசன் பட்டணத்தினின்றும் வெளியில் வந்து, வருகின்ற குதிரையைப் பிடித்துக் கொண்டு பட்டணத்தை நோக்கிச் சென்றான். அப்பொழுது, சிறந்த கைகளுள்ளவனும் கௌரவஶ்ரேஷ்டனுமான அர்ஜுனன் அவனைக் கண்டு காண்டீவத்தை விரைவாக நாணேறியிடும்படி செய்து கொண்டு உடனே எதிர்த்துச் சென்றான். பிறகு, வீரனை (அந்த) அரசன் காண்டீவத்தினின்று விடப்பட்ட பாணங்களால் புத்தி கலங்கி அந்தக் குதிரையை விட்டுவிட்டு அர்ஜுனனை எதிர்த்து வந்தான். மஹாரதனை அந்த ராஜஶ்ரேஷ்டன் மறுபடியும் பட்டணத்தில் பிரவேசித்துக் கவசமணிந்து மிகச்சிறந்த யானையின் மீதேறித் தலையில் பிடிக்கப்படும் வெள்ளைக்குடையுடனும் மிகவும் அசைகின்றவெண்சாமரத்துடனும் யுத்தத்தை விரும்பி வெளியில் வந்தான். பிறகு, பாண்டவர்களுள் மஹாரதனும் குந்தியின் புத்திரனுமான அர்ஜுனனை அணுகிச் சிறுபிள்ளைத்தனத்தாலும் அறியாமை

1 'வஜ்ரதத்தன்' என்பது வேறு பாடம்.

யினுலும் யுத்தத்திற்கழைத்தான். அவ்வரசன் மிகவும் கோபங்கொண்டு, மலைபோன்றதும் மதப்பெருக்குள்ள கன்னங்களும் முகமுமுள்ளதும் மழைபொழிகின்ற பெரிய மேகம் போன்றதும் பகைவரின் யானைகளைத்தடுப்பதும் சாஸ்திரப்படி பழக்கப்பட்டதும் யுத்தத்தில் பரவசமாக இருப்பதும் போரில் அடங்காத மதமுள்ளதுமான யானையை வெண்மையான குதிரைகளுள்ள அர்ஜுனன்மீது ஏவினுன். அந்த அரசனுல் அங்குசத்தால் (குத்தித்) தூண்டப்பட்டதும் அதிக பலமுள்ளதுமான அந்தயானையானது அப்பொழுது ஆகாயத்தில் கிளம்புவதுபோல விளங்கிற்று. அரசரே! பாரதரே! அர்ஜுனன், வருகின்ற அந்தயானையைக் கண்டு சினங்கொண்டு பூமியிலிருந்தபடியே யானையின்மீது இருக்கும் யஜ்ஞதத்தனோடு போர் புரிந்தான். பிறகு, யஜ்ஞதத்தன் கோபங்கொண்டு தனஞ்சயன்மீது அக்னிக்கொப்பானவைகளும் விட்டில்கள்போல வேகமுள்ளவைகளுமான தோமரங்களைப் பிரயோகித்தான். அர்ஜுனன், அப்பொழுது ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் அவைகளைத் தன்னிடம் வருவதற்குள்ளாகவே காண்டீவத்தினின்று விடப்பட்டவைகளும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவைகளுமான பாணங்களால் இரண்டாகவும் மூன்றாகவும் வெட்டினுன். பகதத்தகுமாரனுன அந்த யஜ்ஞதத்தன், அந்தத் தோமரங்கள் அவ்விதம் வெட்டப்பட்டதைக் கண்டு சீக்கிரமாகப் பாண்டவன்மீது தடையற்ற பாணங்களைப் பிரயோகித்தான். பிறகு, அர்ஜுனன் கடுஞ்சினங்கொண்டு தங்கக்கட்டுள்ளனவும் நேராகப் போகின்றனவுமான பாணங்களைப் பகதத்தகுமாரன்மீது மிக்கவேகமாகப் பிரயோகித்தான். மிக்க தேஜஸுள்ள அந்தயஜ்ஞதத்தன் பெரிய யுத்தத்தில் அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்டு மிக்க துன்பமுற்றுப் பூமியில் விழுந்தான். ஆனுல், அவனுக்குப் பிரஜ்ஞை தவறவில்லை. பிறகு, அவன் போரில் மிகச்சிறந்த யானையின் மீதேறிப் பரபரப்பின்றி ஜயத்தைவிரும்பி (அந்தயானையை) அர்ஜுனனைக் குறித்து ஏவினுன். பிறகு, அர்ஜுனன் மிக்க கோபங்கொண்டு சட்டை உரித்தபாம்புக்கு ஒப்பானவைகளும் ஜ்வலிக்கும் அக்னிக்கு ஒப்பானவைகளுமான பாணங்களை அந்த யானையைக் குறித்துப் பிரயோகித்தான். அந்தப் பெரிய யானையானது அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்டு உதிரத்தைப் பெருக்கிக்கொண்டு அப்பொழுது அநேகமான அருவிகளுள்ளதும் மலைகளுள் சிறந்ததுமான இமயமலைபோல விளங்கிற்று.

## எழுபத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் பகதத்ததுமாரனை வென்றது.)

பரதஸ்ரேஷ்டரே! இவ்விதம், அர்ஜுனனுக்கு (யஜ்ஞதத்தனென்னும்) அரசனுடன் இந்திரனுக்கு வ்ருத்ரனுடன் யுத்தம் நடந்ததுபோல மூன்றுநாள்கள் யுத்தம் நடந்தது. பிறகு, நான்காவது தினத்தில் மிக்கபலமுள்ள யஜ்ஞதத்தன் உரக்கநகைத்துப் பிறகு பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான். 'அர்ஜுன! அர்ஜுன! நில். நீ என்னிடமிருந்து உயிருடன் விடப்படமாட்டாய். உன்னைக் கொன்று என் தந்தைக்கு விதிப்படி ஜலதர்ப்பணத்தைச் செய்யப்போகிறேன். நீ வயதுசென்றவரும் என்னுடைய தந்தையுமான பகதத்தராஜரையும் என் பிதாவினுடைய பிராயமுதிர்ந்தவரான நண்பரையும் துன்பப்படுத்திக் கொன்றாய். இப்பொழுது, பாலனான என்னுடன் போர் புரி' என்று சொன்னான். குருகுலத்தில் பிறந்தவரே! மிக்க கோபங்கொண்டவனும் அரசனுமான யஜ்ஞதத்தன் இவ்விதம் சொல்லி யானையை அர்ஜுனனைக் குறித்து ஏவினான். புத்திமானான யஜ்ஞதத்தனால் அனுப்பப்பட்ட சிறந்த யானை ஆகாயத்தில் கிளம்புவதுபோல அர்ஜுனனை எதிர்த்துச் சென்றது. அந்தக் கஜராஜன் தும்பிக்கையின் நுனியால் விடப்பட்ட ஜலத்திவலையால் அர்ஜுனனைக் கறுத்த மேகமானது மலையை நனைப்பதுபோல நனைத்தது. அந்த அரசனால் அனுப்பப்பட்ட அந்த யானையானது மேகம்போல அடிக்கடி கர்ஜித்துக்கொண்டு முகத்தினின்று கர்வத்தாலுண்டான சப்தங்களுடன் அர்ஜுனனை எதிர்த்துச் சென்றது. அரசரே! யஜ்ஞதத்தனால் தூண்டப்பட்டு அந்தயானையரசு நர்த்தனம் செய்வதுபோல வேகமாக கௌரவர்களுள் மஹாரதனான அர்ஜுனனுக்கருகில் சென்றது. பலமுள்ளவனும் பகைவரைக் கொல்பவனுமான அர்ஜுனன் யஜ்ஞதத்தனுடைய அந்தயானை வருவதைக் கண்டு காண்டீவத்தைக் (கையில்) ஏந்தி அசையாமலிருந்தான். பாரதரே! அர்ஜுனன், அந்த அரசன் கார்யத்திற்கு இடையூறு செய்வதையும் முந்திய விரோதத்தையும் நினைத்து மிக்க சீற்றங் கொண்டான். பிறகு, கோபங்கொண்ட பாண்டவன் அப்பொழுது அந்த யானையைக் கரை ஸமுத்திரத்தைத் தடுப்பதுபோலப் பாண ஸமூகத்தால் தடுத்தான். அர்ஜுனனால் தடுக்கப்பட்டதும் அழகுள்ளதும் மிகச் சிறந்ததுமான அந்த யானை சரீரத்தில் பாணங்கள் தைக்கப்பட்டு முட்களை விரித்

துக்கொண்ட முள்ளம்பன்றிபோல நின்றது. பகதத்தகுமாரனை அரசன் யானை தடுக்கப்பட்டதைக் கண்டு கோபம் மூண்டு அர்ஜு-னன்மீது கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்தான். மஹாபாகுவான அர்ஜுனனோ பகைவரைக் கொல்லுகின்ற பாணங்களால் அக்கணைகளைத் தடுத்தான். அது ஆச்சரியமாக இருந்தது. பிறகு, பிராக்ஜ்யோதிஷதேசத்திற்கு அதிபனும் அரசனுமான யஜ்ஞதத்தன் மிக்க கோபங்கொண்டு மறுபடியும் மலைக்கொப்பான கஜராஜனைக் கடுமையாகத் தூண்டினான். பலமுள்ளவனும் இந்திரகுமாரனுமான அர்ஜுனன் அந்த யானை வருவதைக் கண்டு அக்னிக்கொப்பான நாராசத்தை அதன்மீது பிரயோகித்தான். மன்னரே! அந்த யானையானது அந்த நாராசத்தால் மர்மங்களில் திடமாக அடிக்கப்பட்டு வஜ்ரத்தால் பிளக்கப்பட்டமலைபோல விரைவாகப் பூமியில் விழுந்தது. அர்ஜுனனுடைய பாணத்தால் அடிக்கப்பட்டுவிழுகின்ற அந்த யானையானது வஜ்ரத்தால் தாக்கப்பட்டுப் பூமியில் விழும் பெரிய மலைபோல விளங்கிற்று. யஜ்ஞதத்தனுடைய அந்த யானை விழுந்தவுடன், பாண்டவன் பிறகு பூமியிலிருக்கும் அந்த அரசனை நோக்கி, 'நீ பயப்படவேண்டாம். சிறந்த தேஜஸுள்ள யுதிஷ்டிரர், பயணம் புறப்பட்ட என்னை நோக்கி, 'தனஞ்சய! நீ எவ்விதத்திலும் அரசர்களைக் கொல்லாதே. புருஷப்புலியே! நீ இவ்விதம் செய்தால் எல்லாம் செய்யப்பட்டதாகும். தனஞ்சய! நீ யுத்தத்தில் போர் வீரர்களையும் கொல்லக்கூடாது. எல்லா மன்னர்களையும், 'நீங்கள் ஸுஹ்ருத்துக்களுடன்கூட (வந்து) யுதிஷ்டிரருடைய அஶ்வமேதத்தை அனுபவியுங்கள்' என்று சொல்லவேண்டும்' என்று சொன்னர். அரசனே! பிராதாவின் இவ்விதமான வார்த்தையைக்கேட்ட நான் உன்னைக் கொல்லமாட்டேன். வேந்தே! எழுந்திரு. உனக்குப் பயம் வேண்டாம். க்ஷேமமுள்ளவனாகச் செல். மஹாராஜனே! அடுத்து வரப்போகிற சித்ராபூர்ணிமையில் அறிஞரான தர்மராஜருடைய அஶ்வமேதம் நடக்கப்போகிறது. அப்பொழுது, நீ வரவேண்டும்' என்று சொன்னன். இவ்விதம் சொல்லப்பட்டவனும் பாண்டவனால் ஜயிக்கப்பட்டவனும் பகதத்தனுடைய குமாரனுமான அந்த அரசன் அப்பொழுது, 'அப்படியே ஆகட்டும்' என்ற வாக்கியத்தைச் சொன்னன்.

## எழுபத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் ஸைந்தவர்களுடன் போர் புரிகையில் காண்டீவம் நழுவியதும், தேவரிஷிகளின் ஜபத்தால் அர்ஜுனன் மறுபடியும் புதிய பலம்பெற்றுப் போர் புரிந்ததும்.)**

பாரதரே! அப்பொழுது பகதத்தகுமாரனை அரசனை ஜயித்து ஸமாதானம் செய்தபின், குதிரை விடுபட்டு ஸிந்துதேசம் சென்றது. மஹாராஜரே! பிறகு, அந்தக் கிரீடிக்கு, கொல்லப்பட்டவர்கள் போக மிச்சமுள்ளவர்களும் கொல்லப்பட்டவர்களின் புத்திரர்களுமான ஸைந்தவர்களுடன் யுத்தம் நேர்ந்தது. அந்த அரசர்கள் பாண்டவஸ்ரேஷ்டனை அர்ஜுனன் தம்முடைய தேசத்தில் வந்திருப்பதைக் கேட்டுப் பொறுமை கொண்டு எதிர்த்துச் சென்றார்கள். அவர்கள் தம் தேசத்தின் எல்லையில் (வந்த) அந்தக் குதிரையையும் பிடித்துக் கொண்டு பீமஸேனனுக்குத் தம்பியும் விஷத்துக்கொப்பானவனுமான அர்ஜுனனிடத்தில் பயப்படவில்லை. அவர்கள் யாகக்குதிரைக்குச் சமீபத்தில் வில்லைக்கையிலேந்திப் பதாதியாக நிற்கும் அர்ஜுனனை எதிர்த்தார்கள். பிறகு, மிக்க வீர்யமுள்ளவர்களும் முன் யுத்தத்தில் அவமதிக்கப்பட்டவர்களுமான அந்த அரசர்கள் புருஷப்புலியான அந்த அர்ஜுனனை ஜயிக்கவிரும்பிச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள், அப்பொழுது, (தங்களுடைய) பெயர்களையும் கோத்ரங்களையும் பலவிதமான செய்கைகளையும் சொல்லிக்கொண்டு அர்ஜுனன்மீது சரமாரிகளைப் பொழிந்தார்கள். அவர்கள், தடுப்பவற்றை எதிர்த்துத் தடுக்கும் பாணக்கூட்டங்களை இறைத்துக் கொண்டு யுத்தத்தில் ஜயத்தை விரும்பி அர்ஜுனனைச் சூழ்ந்து கொண்டார்கள். அந்த வீரர்களெல்லோரும் யுத்தத்தில் உக்ரமான செய்கையுள்ள அந்த அர்ஜுனனைக் கண்டு தேரிலிருந்துகொண்டு பதாதியான அவனுடன் போர் புரிந்தார்கள். அவர்கள், நிவாதகவசர்களையும் ஸம்சப்தகர்களையும் ஸைந்தவனையும் கொன்றவனும் வீரனுமான அந்த அர்ஜுனனை அடித்தார்கள். பிறகு, அவர்கள் ஆயிரம் தேர்களாலும் பதினாயிரம் யானைகளாலும் அர்ஜுனனைச் சூழ்ந்து கொண்டு மிக்க மனக்களிப்புள்ளவர்களானார்கள். குருகுலத்தில் பிறந்தவரே! பிறகு, (அந்த) வீரர்களெல்லாரும், அர்ஜுனன் யுத்தத்தில் ஸிந்து ராஜனான ஜயத்ரதனைக் கொன்றதை நினைத்து மேகம்போல யுத்தத்தில் சரமாரிகளைப் பொழிந்தார்கள். அவற்றால் வியாபிக்கப்

பட்ட அர்ஜுனன் மேகங்களுடைய மத்தியில் ஸூர்யன்போல விளங்கினான். பாரதரே! பாணங்களால் நன்கு மூடப்பட்டவனும் பாண்டவஶ்ரேஷ்டனுமான அந்த அர்ஜுனன் கூட்டின் மத்தியில் ஸஞ்சரிக்கும் பறவைபோல விளங்கினான். வேந்தரே! பிறகு, அர்ஜுனன் பாணங்களால் பீடிக்கப்பட்டிருக்கும்போது மூவுலகங்களிலுமுள்ள எல்லாரும் 'ஆ! ஆ!' என்று கதறினர். ஸூர்யன் புழுதியினால் சிவந்தவனானான். மஹாராஜரே! பிறகு, மயிர்க்கூச்சமெடுக்கத்தக்க காற்று வீசிற்று. அரசரே! ராகுவானவன் பர்வத்தில் பிடிப்பதுபோல ஸூர்யனைப் பிடித்தான். குறைக்கொள்ளிகள் நாற்புறமும் பரவி ஸூர்யனை அடித்தன. வேந்தரே! கைலாஸமென்னும் பெரிய மலையும் அசைவுற்றது. ஸப்தரிஷிகளும் தேவரிஷிகளும் பயந்து துக்கமும் சோகமுமுள்ளவர்களாகி மிக்க உஷ்ணமாக மூச்சுவிட்டார்கள். (குறைக்கொள்ளிகள்) வேகமாக முயலைப் பிளந்துகொண்டு சந்திரமண்டலத்தில் விழுந்தன. திசைகளெல்லாம் புகை சூழ்ந்து மாறிவிட்டன. கழுதையின் நிறம்போலச் சிவந்த நிறமுள்ளனவும் வில்லும் மின்னலுமுள்ளனவுமான மேகங்கள் ஆகாயத்தை வியாபித்துக் கொண்டு மாம்ஸத்தையும் உதிரத்தையும் பொழிந்தன. பரதஶ்ரேஷ்டரே! அப்பொழுது, வீரனான அர்ஜுனன் சரமாரியால் மூடப்பட்டவுடன் இவ்விதமிருந்தது. அது ஆச்சர்யமாக இருந்தது. அந்தப் பாண ஸமூகத்தால் நாற்புறமும் சூழப்பட்ட அந்த அர்ஜுனனுடைய கையிலிருந்து மதிமயக்கத்தால் காண்டீவமும் கையுறையும் கீழே விழுந்தன. அப்பொழுது, ஸைந்தவர்கள், பிரஜ்ஞையையிழந்து மூர்ச்சையை அடைந்திருக்கும் மஹாரதனான அந்த அர்ஜுனன்மீது அதிகமான பாணக் கூட்டத்தைப் பிரயோகித்தார்கள். பிறகு, தேவர்களெல்லோரும் அர்ஜுனன் மூர்ச்சையடைந்திருப்பதை அறிந்து பயந்த மனமுள்ளவர்களாகி அவனுக்குச் சாந்தியைச் செய்பவர்களானார்கள். பிறகு, எல்லாத் தேவரிஷிகளும் ஸப்தரிஷிகளும் பிரம்மரிஷிகளும் அறிஞனான அர்ஜுனனுக்கு ஜயத்தைக் கொடுக்கும் மந்திரத்தை ஜபித்தார்கள். அரசரே! பிறகு, தேவர்களால் அர்ஜுனனுடைய தேஜஸானது நன்கு ஜ்வலிக்கும்படி செய்யப்பட்டிருக்கும்போது, சிறந்த அஸ்திரங்களை அறிந்தவனும் புத்தியுள்ளவனுமான அர்ஜுனன் யுத்தத்தில் மலைபோல (உறுதியாக) நின்றான். பிறகு, கௌரவகுமாரனான அர்ஜுனன் திவ்யமான வில்லை நாணொலியிடும்படி செய்தான். அதனுடைய பெரிய ஒலியானது இவ்வுலகில் யந்திரத்தினுடைய ஒலிபோல அடிக்கடி

உண்டாயிற்று. பிறகு, பிரபுவான அந்த அர்ஜுனன் எல்லாப்பகைவர்களின்மீதும் வில்லினின்று பாணவர்ஷங்களை இந்திரன் மழையைப் பொழிவதுபோலப் பொழிந்தான். பிறகு, அந்த ஸிந்துதேசத்துப் போர்வீரர்களனைவரும் அரசர்களும் பாணங்களால் சூழப்பட்டுச் சலபங்களால் சூழப்பட்ட மரங்கள்போலக் கண்ணுக்குப் புலப்படவில்லை. ஸைந்தவர்கள் அந்தவில்லினுடைய சப்தத்தால் நடுங்கினார்கள். பயத்தால் பீடிக்கப்பட்டு ஓடினார்கள்; சோகத்தால் பீடிக்கப்பட்டுக் கண்ணீரைச் சொரிந்தார்கள்; துக்கித்தார்கள். அரசரே! புருஷப்புலியும் பலசாலியுமான அர்ஜுனன் குறைக்கொள்ளி சுழல்வதுபோல ஸஞ்சரித்துக்கொண்டு அந்த எல்லா ஸைந்தவர்களையும் பாணக்கூட்டங்களால் அடித்தான். பகைவரைக் கொல்பவனும் கௌரவஶ்ரேஷ்டனுமான அர்ஜுனன் வஜ்ரத்தை ஏந்தின மஹேந்திரன்போல இந்திர ஜாலத்திற்கொப்பான அந்தப் பாணஜாலத்தை எல்லாத் திசைகளிலும் பிரயோகித்து மேகக்கூட்டத்திற்கு ஒப்பான (பகைவருடைய) படையைச் சரமாரிகளால் பிளந்து சரத்காலத்தில் ஸூர்யன் விளங்குவதுபோல விளங்கினான்.

---

## எழுபத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(அர்ஜுனன் வந்தது கேட்டு ஜயத்ரதன்மகன்இறந்ததும், துச்சலை அவன்மகனை அழைத்துக்கொண்டு அர்ஜுனனைச் சரணமடைய அவன் போரை நிறுத்தியதும்.)**

பிறகு, காண்டீவத்தைத் தரித்தவனும் சூரனும் யுத்தத்திற்குச் சித்தமாக நிற்பவனும் யுத்தத்தில் (ஒருவராலும்) அவமதிக்க முடியாதவனுமான அர்ஜுனன் இமயமலைபோல விளங்கினான். பாரதரே! பிறகு, அந்தஸிந்துதேசத்துப் போர்வீரர்கள் மிக்க கோபங்கொண்டு மறுபடியும் முயன்று. பாணவர்ஷங்களைப் பொழிந்தார்கள். பிறகு, சிறந்தகைகளுள்ளவனும் குந்தியின் குமாரனுமான அர்ஜுனன், மறுபடியும் (யுத்தத்திற்குச்) சித்தமாக நிற்கின்றவர்களும் மரிக்கும் தசையில் இருப்பவர்களுமான அந்தஸைந்தவர்களைப் பார்த்து நகைத்து மிருதுவான வார்த்தையால் சொல்லலானான். 'பூர்ணமானசக்தியுடன் யுத்தம் செய்யுங்கள். என்னை ஜயிப்பதற்கு முயற்சி செய்யுங்கள். எல்லாக்காரியங்களையும் செய்யுங்கள். உங்களுக்குப் பெரிய பயம் வந்துவிட்டது. நான் (உங்களுடைய) பாணவலையைத் தடுத்து எல்

லாரோடும் போர் புரிகிறேன். யுத்தத்தில் மனமுள்ளவர்களாக நில்லுங்கள். உங்களுடைய கர்வத்தை அடக்குகிறேன்' என்று சொன்ஞன். பாரதரே! அப்பொழுது, குருகுலத்தில் பிறந்தவனும் காண்டீவத்தைத் தரித்தவனும் புருஷஶ்ரேஷ்டனுமான அந்த அர்ஜுனன், இவ்வளவு சொல்லிவிட்டு, பிறகு, மஹாத்மாவான தர்மராஜர், 'ஐயனே! யுத்தத்தில் ஜயிக்க விருப்பமுள்ள க்ஷத்திரியர்களைக் கொல்ல வேண்டாம். ஜயிக்கவேண்டும்' என்று சொன்ன அந்த மூத்தஸஹோதரருடைய வசனத்தை நினைத்து[1] 'அரசர்களைக் கொல்ல வேண்டாம்' என்று யுதிஷ்டிரராஜர் என்னிடம் சொல்லியிருக்கிறார். தர்மராஜர் சொன்ன சுபமான இந்த வார்த்தை பொய்யாகக் கூடாது. அரசர்களையும் கொல்லக்கூடாது. எமது அரசருடைய கட்டளையையும் செய்யவேண்டும்' என்று ஆலோசித்தான். புருஷஶ்ரேஷ்டனும் தர்மத்தை அறிந்தவனுமான அந்த அர்ஜுனன் அப்பொழுது இவ்விதம் ஆலோசித்து யுத்தத்தில் அடங்காத மதங்கொண்டவர்களும் (யுத்தத்திற்கு) ஆயத்தர்களாக இருப்பவர்களுமான ஸைந்தவர்களை நோக்கி, 'உங்களுடைய பாலர்களையும், ஸ்திரீகளையும், 'யுத்தத்தில் (உம்மால்)ஜயிக்கப்பட்டேன்.உம்முடையவனாக இருக்கிறேன்' என்று சொல்பவனையும் கொல்ல மாட்டேன். என்னுடைய இந்த வார்த்தையைக் கேட்டு உங்களுக்கு நன்மையைச் செய்துகொள்ளுங்கள். இதற்குமாறுதலாகச் செய்தால் என்னால் பீடிக்கப்பட்டுக் கஷ்டத்தை அடைந்தவர்களாவீர்கள்' என்ற வாக்கியத்தைச் சொன்ஞன். கௌரவஶ்ரேஷ்டனான அர்ஜுனன் அந்த வீரர்களைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு, மிக்க கோபம்கொண்டவர்களும் ஜயிக்க விருப்பமுள்ளவர்களுமான அவர்களுடன் வேகமும் பரபரப்புமில்லாமல் போர் புரிந்தான். அரசரே! அப்பொழுது ஸைந்தவர்கள் படிந்த கணுக்களுள்ள நூறு லக்ஷம் பாணங்களைக் காண்டீவமென்னும் வில்லுள்ள அர்ஜுனன்மீது பிரயோகித்தார்கள். அந்தத்தனஞ்சயன் ஸர்ப்பத்தின் விஷத்திற்கு ஒப்பானவைகளும் குரூரமானவைகளும் வருகின்றவைகளுமான (அந்தப்) பாணங்களைக் கூர்மையுள்ள பாணங்களால் மத்தியில் வெட்டினன். கழுகிறகு பூண்டனவும் சாணையில் தீட்டப்பட்டனவுமான அந்தப் பாணங்களைச் சீக்கிரத்தில் துண்டாடி யுத்தத்தில் அவர்களுள் ஒவ்வொருவரையும் கூர்மையுள்ள பாணங்களால் பிளந்தான். பிறகு, ஸிந்து தேசத்தரசர்கள் ஜயத்ரதனைக் கொன்றதை நினைத்துத் தனஞ்சயன்மீது மறுபடியும் பிராஸங்

---

1 பொருந்தாமையால் இரண்டு சொற்கள் விடப்பட்டன.

களையும் சக்திகளையும் பிரயோகித்தார்கள். மிக்க பலமுள்ளவனும் பாண்டுகுமாரனுமான அர்ஜுனன் அப்பொழுது அவற்றையெல்லாம் மத்தியில் வெட்டி அவர்களுடைய எண்ணத்தை வீணாக்கிக் கர்ஜித்தான். அவ்வாறே, ஜயத்தை விரும்பி வருகின்ற அந்தப் போர் வீரர்களுடைய தலைகளைக் கணுக்கள் படிந்துள்ள பல்லங்களால் வீழ்த்தினான். ஓடுகின்றவர்களும் மறுபடியும் எதிர்த்து வருகின்றவர்களும் செல்லுகின்றவர்களுமான அவர்களுடைய ஒலியானது நிரம்பியுள்ள பெருங்கடலின் ஒலிபோலிருந்தது. அப்பொழுது, அளவற்ற தேஜஸுள்ள அர்ஜுனனால் கொல்லப்படுகின்ற அவர்களோ பலத்திற்கும் உத்ஸாகத்திற்கும் தக்கபடி அர்ஜுனனோடு போர் புரிந்தார்கள். பிறகு, அவர்கள் அர்ஜுனனால் யுத்தத்தில் படிந்த கணுக்களுள்ள பாணங்களால் பெரும்பாலும் பிரஜ்ஞையற்றவர்களும் வாடினவாகனங்களும் படைவீரர்களுமுள்ளவர்களுமாகச் செய்யப்பட்டார்கள். அப்பொழுது, திருதராஷ்டிரனுடைய பெண்ணான துச்சலையானவள் அவர்களெல்லாரும் மிக்கவாட்டமுற்றிருப்பதை அறிந்து (தனக்குப்) பேரனும் ஸுரதனுடைய புத்திரனும் வீரனுமான பாலனை ரதத்தில் வைத்துக் கொண்டு அப்பொழுது எல்லாப்போர்வீரர்களின் க்ஷேமத்திற்காகவும் பாண்டவனிடம் வந்தாள். அவள், அப்பொழுது, தனஞ்சயனிடம் வந்து தீனஸ்வரத்துடன் அழுதாள். பிரபுவான தனஞ்சனும் அவளைக் கண்டு வில்லைக் கீழே போட்டுவிட்டான். அர்ஜுனன் வில்லைப் போட்டுவிட்டு அப்பொழுது முறைப்படி ஸஹோதரியை நோக்கி, 'நான் என்ன செய்யவேண்டும்?' என்று வினவ, அவளும் அவனை நோக்கி 'பரதர்களுள் சிறந்தவனே! பார்த்த! உனது மருமானுடைய புத்திரனான இந்தக் குழந்தை உன்னை நமஸ்கரிக்கிறான். புருஷஶ்ரேஷ்டனே! இவனைப் பார்' என்று மறுமொழி கூறினாள்.

அரசரே! இவ்வாறு சொல்லப்பட்ட அந்த அர்ஜுனன், அக்குழந்தையின் தந்தையைப்பற்றி, 'அவன் எங்கே' என்று வினவ, பிறகு, துச்சலையானவள், 'பித்ருசோகத்தால் மிக்க ஸந்தாபமடைந்து துக்கத்தால் பீடிக்கப்பட்டவனும் வீரனுமான இவனுடைய பிதாவானவன் எவ்வாறு மரணமடைந்தானென்பதை என்னிடமிருந்து கேள். பாவமற்றவனே! தனஞ்சய! முன் யுத்தத்தில் தகப்பன் உன்னால் கொல்லப்பட்டதைக் கேட்டுத் தகப்பனுடைய மரணத்தாலுண்டான துக்கத்தால் பீடிக்கப்பட்ட அவன், (இப்பொழுதும்) குதிரையைத் தொடர்ந்து யுத்தத்திற்காக நீ வந்திருப்பதைக்' கேட்டு, உயிர்

துறந்தான். குற்றமற்றவனே! என்னுடைய குமாரன், 'அர்ஜுனன் வந்திருக்கிறான்' என்று உன்னுடைய பெயரைக் கேட்டவளவிலேயே துக்கத்தால் பிடிக்கப்பட்டுப் பூமியில் விழுந்து மரித்தான். பிரபுவே! நான் அங்கே அவன் விழுந்ததைக் கண்டு அவனுடைய குமாரனை எடுத்துக்கொண்டு ரக்ஷிப்பவனை விரும்பி இப்பொழுது உன்னிடம் வந்தேன்' என்ற வாக்கியத்தைச் சொன்னாள். திருதராஷ்டிரனுடைய பெண்ணும் எளிமையுற்றவளுமான அந்தத் துச்சலையானவள் இவ்விதம் சொல்லி, தீனஸ்வரத்தை வெளியிட்டுத் தலைகுனிந்து தீனனாகிநிற்கும் அர்ஜுனனைப் பார்த்து, 'தர்மங்களை அறிந்தவனே! குருகுலத்தைப் பொறுப்பவனே! உன் தங்கையாகிய என்னையும் தங்கையின் பேரனாகிய இச்சிறுவனையும் உற்றுப்பார். கௌரவராஜனான துர்யோதனனையும் மந்தனான அந்த ஜயத்ரதனையும் மறந்து நீ கிருபை செய்யவேண்டும். நீண்ட கைகளுள்ளவனே! அபிமன்யுவுக்குச் சத்துருவீரர்களைக் கொல்லும் பரிக்ஷித்து பிறந்ததுபோல என்னுடைய பேரனான இவன் ஸுரதனுக்குப் பிறந்தான். புருஷச்ரேஷ்டனே! அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டு எல்லா யுத்தவீரர்களையும் ஸமாதானம்செய்வதற்காக உன்னண்டையில் வந்தேன். என்னுடைய இந்தவார்த்தையையும் கேள். சிறந்தகைகளுள்ளவனே! அந்த மூடனுடைய அருமைப்புதல்வனான இவன் வந்திருக்கிறான். ஆகையால், நீ இந்தச்சிறுவன்மீது கிருபை செய்யவேண்டும். பகைவரை அடக்குபவனே! நீண்டகைகளுள்ளவனே! இவன் உன்னை ஸமாதானத்திற்காகத் தலைவணங்கிப் பிரார்த்திக்கிறான். தனஞ்சய! ஸமாதானம் அடைவாயாக. குந்தியின் மைந்தனே! தர்மங்களை அறிந்தவனே! பாலனும் பந்துக்களை இழந்தவனும் ஒன்றும் அறியாதவனுமான இவன்மீது அருள்புரி. கோபத்திற்குடன்படாதே. நீ, துஷ்டனும் கொடியவனும் மிக்கதீங்கிழைத்தவனும் இவனுடைய பிதாமஹனுமான அந்த ஜயத்ரதனை மறந்து, அனுக்கிரஹம் செய்யவேண்டும்' என்று சொன்னாள். துச்சலையானவள் இவ்விதம் தீனமாகச் சொல்லும்போது, தனஞ்சயன் காந்தாரிதேவியையும் திருதராஷ்டிரராஜனையும் நினைத்துத் துக்கத்தாலும் சோகத்தாலும் பிடிக்கப்பட்டு க்ஷத்திரியதர்மத்தை இகழ்ந்து, 'அற்பனும் ராஜ்யத்தில் ஆசை கொண்டவனும் அகங்காரியுமான அந்தத் துரியோதனனை நிந்திக்கவேண்டும். நான் அவனிமித்தம் எல்லாப்பந்துக்களையும் யமனுடைய வீட்டுக்கு அனுப்பினேன்' என்று சொன்னான். அர்ஜுனன் இவ்விதம் பலஸமாதான வார்த்தைகளைச் சொல்லிக் கருணைகொண்டு மகிழ்ச்சி

யுடன் அவளைத் தழுவி வீட்டுக்கு அனுப்பினான். தெளிவடைந்த முகமுள்ள துச்சலையும் அந்தப் போர்வீரர்களைப் பெரிய யுத்தத்தினின்றும் தடுத்து அர்ஜுனனைப் பூஜித்து வீட்டுக்கே சென்றாள். அந்தத்தனஞ்சயன் இவ்விதம் அந்த ஸைந்தவவீரர்களை வென்று இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் தன்மையுள்ளதும் செல்லுகின்றதுமான குதிரையைப் பின்தொடர்ந்து சென்றான். பிறகு, வீரனான அர்ஜுனன், பினாகபாணியும் தேவருமான சிவபெருமான் ஆகாயத்தில் மானைத் தொடர்ந்ததுபோல அந்த யாகக்குதிரையை விதிப்படி தொடர்ந்து சென்றான். அந்தக்குதிரையும் அர்ஜுனனுக்கு இஷ்டப்படி காரியத்தை விருத்திசெய்துகொண்டு அந்த அந்தத் தேசங்களில் இஷ்டப்படி ஸஞ்சரித்தது. புருஷஶ்ரேஷ்டரே! அந்தக் குதிரை இவ்விதம் கிரமமாக ஸஞ்சரித்துக்கொண்டு பாண்டவனுடன் [1]மணலூரபதியின் தேசத்திற்கு வந்தது.

---

## எழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் மணலூரபுரம் வந்ததும், பப்ருவாஹனன் மரியாதையோடு காண அர்ஜுனன் கோபித்ததும், உலூபியின் தூண்டுதலால் பப்ருவாகனன் பாணம் தொடுக்க அர்ஜுனன் விழுந்ததும், பப்ருவாகனன் துக்கத்தால் மயக்கமடைந்ததும், சித்ராங்கதை போர்க்களம் வந்து புலம்பியதும்.)**

(மணலூரபுரத்திற்கு) அரசனான பப்ருவாஹனன், தகப்பன் வந்திருப்பதைக் கேட்டுப் பிறகு பிராம்மணர்களையும் (மற்றப்) பெரியோர்களையும் முன்னிட்டுக்கொண்டு வணக்கத்துடன் (பட்டணத்தினின்றும்) வெளியில் வந்தான். மேதாவியான தனஞ்சயன் மணலூரபுரத்தரசன் இவ்விதம் வந்ததை க்ஷத்திரிய தர்மத்தை நினைத்துப் புகழவில்லை. அப்பொழுது, தர்மாத்மாவான அந்த அர்ஜுனன், 'இந்தக் காரியம் உனக்குத் தகுந்ததன்று. நீ க்ஷத்திரிய தர்மத்திற்கு வெளியில் இருக்கிறாய். புத்திர! யுதிஷ்டிரருடைய யாகக்குதிரையை ரக்ஷித்துக்கொண்டு (உன்னுடைய) தேசத்தின் எல்லையில் வந்திருக்கும் என்னுடன் ஏன் நீ யுத்தம் செய்யவில்லை. மிகவும் புத்திகெட்டவனும் க்ஷத்ரிய தர்மத்தை நன்கு அறியாதவனுமான உன்னை

---

1 'மணிபூரபதியின்' என்பது வேறுபாடம்.

நிந்திக்கவேண்டும். யுத்தத்திற்கு வந்திருக்கும் என்னை நல்வார்த்தை யுடன் வரவேற்றாயல்லவா? நீ யுத்தத்திற்கு வந்திருக்கும் என்னைப் பெண்பால்போல நல்வார்த்தையுடன் வரவேற்றாயாதலால், நீ ஜீவித் திருப்பதால் இப்பொழுது ஒரு புருஷார்த்தமுமில்லை. மிகவும் புத்தி கெட்டவனே! மனிதர்களுள் இழிவானவனே! நான் ஆயுதமில்லா மல் உன்னிடம் வந்திருந்தால் அப்பொழுது இந்தக்காரியம் உனக்கு ஏற்றதாகும்' என்று சொன்னான். நாககன்னிகையான உலூபியான வள், பார்த்தா அவனை இவ்விதம் சொன்னதை அறிந்து பொறாமல் பூமியைப் பிளந்து கொண்டுவந்தாள். பிரபுவே! பிறகு, அவள் யுத் தத்தை விரும்புகின்ற பிதாவினால் அடிக்கடி அதட்டப்படுகின்ற வனும் தலைகுனிந்து ஆலோசித்துக்கொண்டிருப்பவனுமான புத்திர னைக் கண்டாள். பிறகு, அழகான எல்லா அங்கங்களுமுள்ளவளும் நாககன்னிகையுமான அந்த உலூபியானவள் (பப்ருவாஹனனை நோக்கி), 'க்ஷத்திரிய தர்மத்தை அறிந்தவனே! நீ என்னை (உன்னு டைய) அன்னையும் பன்னகனுடைய புத்திரியுமான உலூபியென்று தெரிந்துகொள். புத்திர! நான் சொல்வதைச் செய். (அது) உனக்கு மேலான தர்மமாகும். கௌரவஸ்ரேஷ்டரும் பகைவரை அடக்கு பவருமான இந்தத் தனஞ்சயருடன் போர்புரி. இவ்விதம் செய்தால், இவர் உன்னிடம் பிரியமுள்ளவராவார்; ஸம்சயமில்லை' என்றாள்.

பரதர்களில் சிறந்தவரே! தாயினால் இவ்விதம் ஊக்கப்பட்ட வனும் அதிக பலமுள்ளவனுமான பப்ருவாஹனனென்னும் அந்த அரசன் யுத்தத்திற்காக மனத்தைச் செலுத்தினான். அழகு பொருந் தின பப்ருவாஹனனென்னும் அந்த அரசன் பொற்கவசத்தை யும் ஒளியுள்ள தலைப்பாகையையும் அணிந்து அநேக பாணப் பெட் டிகள் நிறைந்ததும் எல்லாஸாமக்கிரிகளுமுள்ளதும் மனம்போன்ற வேகமுள்ள குதிரைகள் பூட்டியதும் சக்ரமுதலான அங்கங்களுள் ளதும் பொன்னாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான ரதத்தி லேறி மிகவும் பூஜிக்கப்பட்டதும் ஸுவர்ணமயமுமான [1]அன்னக்கொ டியை உயர்த்தி நிறுத்தி அர்ஜுனனை நோக்கிச் சென்றான். பிறகு, வீரனான பப்ருவாஹனன் வந்து, பார்த்தனால் ரக்ஷிக்கப்படும் யாகக் குதிரையைக் குதிரைபழக்குவதில் தேர்ச்சி பெற்ற மனிதர்களால் பிடிக்கப்படச் செய்தான். அந்தத் தனஞ்சயன் குதிரை பிடிக்கப் பட்டதைக் கண்டு மனம் மகிழ்ந்து ரதத்திலிருக்கும் புத்திரனைத் (தான்) பூமியிலிருந்துகொண்டு யுத்தத்தில் தடுத்தான். அப்பொ

1 'சிங்கக்கொடி' என்பது வேறுபாடம்.

மூது, அந்த அரசன் அந்த வீரனைக் கூர்மையுள்ளனவும் ஸர்ப்பத்தின் விஷம்போன்றனவுமான அநேகமான பாணக்கூட்டங்களால் பிடித்தான். பிரியமுள்ளவர்களும் தந்தையும் மைந்தனுமான அவ்விருவருக்கும் ஒப்பற்றதும் தேவாஸுரர்களுடைய யுத்தத்திற்கொப்பானதுமான யுத்தம் நேர்ந்தது. பப்ருவாஹனன் நகைத்துக்கொண்டு பதிவான கணுக்களுள்ள பாணத்தால் புருஷஶ்ரேஷ்டனான அர்ஜுனனைத் தோள்பூட்டில் அடித்தான். அந்தப் பாணமானது அர்ஜுனனைப் பிளந்துகொண்டு ஸர்ப்பம் புற்றில் (நுழைவது) போலப் புங்கத்துடன் பூமியில் பிரவேசித்தது. மிக்கவேதனையுள்ளவனும் புத்திசாலியுமான அந்த அர்ஜுனன் உத்தமமான வில்லைப் பிடித்துக்கொண்டு 1 திவ்யமான தேஜஸில் பிரவேசித்து மரித்தவன்போலிருந்தான். பிறகு, புருஷஶ்ரேஷ்டனும் இந்திரனுடைய குமாரனும் மிக்க காந்தியுள்ளவனுமான அந்த அர்ஜுனன் பிரஜ்ஞையை அடைந்து புத்திரனை நோக்கிப் பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானான். 'சிறந்தகைகளுள்ளவனே! குழந்தாய்! சித்ராங்கதையின் புத்திர! நல்லது; நல்லது. புத்திர! உனக்குத் தகுந்ததான செய்கையைக் கண்டு பிரீதியுள்ளவனானேன். புத்திர! நான் உன்மீது பாணங்களைப் பிரயோகிக்கிறேன். யுத்தத்தில் அசையாமலிரு' என்று சொன்னான். பகைவரைக் கொல்பவனான அர்ஜுனன் இவ்வாறு சொல்லி நாராசங்களைப் பொழிந்தான். அந்தப் பப்ருவாஹனராஜன் காண்டீவத்தினின்று விடப்பட்டவைகளும் வஜ்ரத்துக்கும் இடிக்கும் ஒப்பான காந்தியுள்ளவைகளுமான அந்த நாராசங்களையெல்லாம் பல்லங்களால் இரண்டாகவும் மூன்றாகவும் துண்டாடினான். அர்ஜுனன் ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதும் ஸுவர்ணமயமான பனைமரத்திற்கு ஒப்பானதுமான அவனுடைய கொடியைச் சிறந்த பாணங்களாலும் க்ஷுரத்தாலும் ரதத்தினின்று அறுத்துச் சாய்த்தான். பகைவரை அடக்குபவரே! மன்னரே! பாண்டவன் நகைத்துக்கொண்டு பெரிய சரீரமுள்ளவைகளும் மிக்க வேகமுள்ளவைகளுமான அவனுடைய குதிரைகளையும் உயிரற்றவைகளாகச் செய்தான். பிறகு, அந்த அரசன் மிக்ககோபங்கொண்டு ரதத்தினின்றும் இறங்கிப் பதாதியாயிருந்துகொண்டு பிதாவான அர்ஜுனனை எதிர்த்துக் கோபத்தோடு போர்புரிந்தான். பார்த்தர்களுள் சிறந்தவனும் இந்திரனுடைய குமாரனுமான அர்ஜுனன் புத்திரனுடைய பாரக்கிரமத்தால் மிகமகிழ்ந்து புத்திரனை அதிக

1 ஆத்மா உள்ளே அடங்கியிருந்த தென்பது.

மாகத் துன்பப்படுத்தவில்லை. அடிக்கப்படுகின்றவனும் பலமுள்ளவனுமான அந்தப் பப்ருவாஹனன் மறுபடியும் ஸர்ப்பம் போன்றவடிவமுள்ள பாணங்களால் பிதாவான அர்ஜுனனை எதிர்முகமாக அடித்தான். பிறகு, அந்தப் பப்ருவாஹனன் கூர்மையுள்ளதும் அழகியகட்டுள்ளதுமான பாணத்தால் சிறுபிள்ளைத்தனத்தால் பிதாவை மார்பில் திடமாக அடித்தான். வேந்தரே! தேஜஸால் ஜ்வலிக்கின்றதும் ஜ்வலிக்கின்ற அக்னிபோன்றதுமான அந்தப் பாணமானது பாண்டவன்மீது பிரவேசித்து உயிர் நிலையைப் பிளந்து அதிகமான துன்பத்தை உண்டுபண்ணிற்று. அரசரே! பிறகு, அந்தப் புத்திரனால் மிக்க திடத்துடன் அடிக்கப்பட்டவனும் குருநந்தனனுமான அந்தத் தனஞ்சயன் மூர்ச்சைமேலிட்டுப் பூமியில் விழுந்தான். கௌரவர்களுள் சிறந்தவனான அந்தவீரன் விழுந்தவுடன், சித்ராங்கதையின் புத்திரனான அந்தப் பப்ருவாஹனனும் மூர்ச்சையடைந்தான். முந்தியே அர்ஜுனனால் பாணக் கூட்டங்களால் திடமாக அடிக்கப்பட்ட அந்த அரசன், யுத்தத்தில் ஸ்ரமப்பட்டும் தந்தை கொல்லப்பட்டதைக் கண்டும், பூமியைத் தழுவிக்கொண்டு விழுந்தான். சித்ராங்கதையானவள் கணவன் கொல்லப்பட்டதையும் புத்திரன் பூமியில் விழுந்திருப்பதையும் அறிந்து மிக்க நடுக்கமுற்றுப் போர்க்களம் வந்தாள். சோகத்தால் மிகத்தவிக்கும் மனமுள்ளவளும் அழுகின்றவளும் மிக்கநடுக்கமுள்ளவளுமான மணலூரபுரத்தரசனுடைய தாயானவள், கொல்லப்பட்டிருக்கும் பர்த்தாவைப் பார்த்தாள்.

## எண்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(சித்ராங்கதை கணவனையும் தனயனையும் கண்டு புலம்பி மயங்கி விழுந்து பின்பு தெளிந்து உலூபியை நிந்தித்ததும், பப்ருவாஹனன் நினைவு வந்து தன்னை நொந்து பிராயோபவேசம் செய்ததும்.)**

பிறகு, தாமரை மலர் போன்ற கண்களுள்ளவளும் பயந்தவளுமான சித்ராங்கதையானவள் மிக அதிகமாகப் புலம்பித் துக்கத்தால் மிக்க தாபமுற்று மூர்ச்சை அடைந்து பூமியில் விழுந்தாள். திவ்யமான சரீரத்தைத் தரிப்பவளான அந்தத் தேவியானவள் பிரஜ்ஞையை அடைந்து நாககன்னிகையான 'உலூபியைப் பார்த்துப் பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானாள். 'உலூபி! உன் நிமித்தம் என்

புத்திரனால் யுத்தத்தில் பாணத்தால் அடிக்கப்பட்டு படுத்திருப்பவரும் யுத்தத்தில் ஜயிப்பவருமான பர்த்தாவைப் பார். நீ பெரியோர்களின் தர்மத்தை அறிந்தவளல்லவா ? பதிவ்ரதையல்லவா ? உன்னிமித்தம் உன்னுடைய பர்த்தாவான இவர் போரில் கொல்லப்பட்டு விழுந்திருக்கிறார். அறிவுகெட்டவளே ! இந்த அர்ஜுனர் உனக்கு இப்பொழுது என்ன தீங்கு செய்தார் ? அப்படி இருந்தால் (என்னால்) பிரார்த்திக்கப்பட்டுப் பொறுத்துக்கொள். தனஞ்சயரை ஜீவிக்கும்படிசெய். பூஜிக்கத்தக்கவளே ! தர்மத்தை அறிந்தவளே ! நீ மூவுலகங்களிலும் பிரஸித்தி பெற்றவளல்லவா ? நல்லவளே ! புத்திரனால் பர்த்தாவைக் கொல்லுவித்துத் துக்கப்படாமலிருக்கிறாயே ? பன்னகருமாரி! நான் புத்திரன் கொல்லப்பட்டதைப்பற்றித் துக்கப்படவில்லை. இவ்விதமான அதிதிபூஜை செய்யப்பட்ட பர்த்தாவைப்பற்றியே துக்கப்படுகிறேன்' என்று சொன்னாள். புகழ்பெற்ற அந்தச் சித்ராங்கதையானவள் அப்பொழுது பன்னகருமாரியும் தேவியுமான உலூபியைப் பார்த்து இவ்விதம் சொல்லிவிட்டுப் பர்த்தாவினிடம் வந்து இதைப்பற்றிப் பின்வருமாறு சொல்லலானாள். 'கௌரவர்களுக்குத் தலைவரான யுதிஷ்டிரருக்கு மிக்க பிரியமானவரே ! எனக்குப் பிரியரே ! எழுந்திரும். நீண்டகைகளுள்ளவரே! இந்தக் குதிரையை நான் உமக்கு விட்டுவிட்டேன். பிரபுவே! நீர் தர்மராஜருடைய இந்த யாகக்குதிரையைப் பின் தொடர்ந்து செல்லவேண்டுமே. அப்படிப்பட்ட நீர் ஏன் பூமியில் படுத்திருக்கிறீர்? குருநந்தனரே ! என்னுடைய உயிரும் கௌரவர்களுடைய உயிரும் உம்மை அடுத்திருக்கின்றன. மற்றவர்களுக்கு உயிரைக் கொடுப்பவரான அப்படிப்பட்ட நீர் யாதுகாரணத்தால் உயிரைவிட்டீர்? உலூபி! பூமியில் விழுந்திருக்கும் இந்தப்பர்த்தாவையும் இந்தப்புத்திரனையும் நன்றாகப்பார். (இவர்களைக்) கொன்றுவிட்டும் கொல்வித்துவிட்டும் நீ துயரப்படாமலிருக்கிறாய். இந்தக்குழந்தை மிருத்யுவுக்கு வசப்பட்டுப் பூமியில் படுத்திருக்கட்டும். சிவந்த கண்களுள்ளவரும் குடாகேசருமான விஜயர் நன்கு ஜீவிக்கட்டும். நல்ல பாக்கியமுள்ளவளே ! புருஷர்களுக்கு அநேக மனைவிகளிருப்பதால் தோஷமில்லை. இது பெண்களுக்குக் குற்றமாகும். உனக்கு இவ்விதமான புத்தி உண்டாக வேண்டாம். (ஸ்த்ரீ புருஷர்களுக்கு) இந்த ஸ்நேஹமானது பிரம்மாவினால் இடைவிடாததும் அழிவற்றதுமாகவே செய்யப்பட்டது. (இந்த) ஸ்நேஹத்தை நன்றாகத் தெரிந்துகொள். உன்னுடைய ஸ்நேஹம் உண்மையாக இருக்கட்டும். நீ புத்திரனால் இந்தப் பர்த்தாவைக்

கொல்வித்துவிட்டு இப்பொழுது இவரைப் பிழைக்கச்செய்து எனக்குக்காட்டாமலிருப்பாயானால் நான் இப்பொழுது உயிரை இழப்பேன். தேவி! பர்த்தாவையும் புத்திரனையும் இழந்து துக்கத்தை அடைந்திருக்கும் நான், நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, இங்கேயே [1]பிராயோபவேசம் செய்யப்போகிறேன். ஸந்தேகமில்லை' என்று சொன்னாள்.

அரசரே! ஸபத்னியும் சித்ரவாஹனனுடைய பெண்ணுமான சித்ராங்கதையானவள், நாககன்னிகையைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டுப் பிறகு பிராயோபவேசம்செய்து மௌனமாயிருந்தாள். அவள் புலம்பி ஓய்ந்தபின், பர்த்தாவினுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டும் புத்திரனைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டும் தைன்யத்துடன் உட்கார்ந்திருந்தாள். பிறகு, பப்ருவாஹனனென்னும் அந்த அரசன் மறுபடியும் பிரஜ்ஞையை அடைந்து பிறகு யுத்தபூமியில் அந்தத் தாயார் (வந்திருப்பதைப்) பார்த்துச் சொல்லலானான். 'ஸுகமாக வளர்ந்தவளான என்னுடைய தாயார், பூமியில் விழுந்து மரித்திருக்கும் வீரரான பர்த்தாவுடன் படுத்திருக்கிறாளென்னும் இதைவிடப் பெரியதுக்கம் என்ன இருக்கிறது? ஆ! போரில் பகைவரைக் கொல்பவரும் எல்லாச் சஸ்திரதாரிகளுள்ளும் சிறந்தவரும் யுத்தத்தில் என்னால் கொல்லப்பட்டவரும் மரிக்கத்தகாதவருமான பர்த்தாவைப் பார்க்கிறாள். அந்தோ! அகன்ற மார்பும் நீண்ட கைகளுமுள்ளவரும் கொல்லப்பட்டிருப்பவருமான பர்த்தாவைப்பார்க்கும் இந்தத் தேவியினுடைய நெஞ்சம் பிளக்கவில்லையாகையால் இது கெட்டியானது. இவ்வுலகில் மனிதனால் காலம் வராமல் மரித்தல் முடியாது என்று நினைக்கிறேன். (ஆகையினால்தான்,) நானும் என் தாயும் இப்பொழுது எங்களுடைய ஜீவனை இழக்கவில்லை. ஆ! ஆ! (எங்களை) நிந்திக்கவேண்டும். புத்திரனான என்னால் இப்பொழுது கொல்லப்பட்டிருக்கும் கௌரவவீரரான அர்ஜுனருடைய ஸுவர்ணகிரீடமானது பூமியில் புரண்டு கிடப்பதைப் பாருங்கள். ஓ! ஓ! பிராம்மணர்களே! புத்திரனான என்னால் பூமியில் வீழ்த்தப்பட்டவரும் வீரசயனத்தில் படுத்திருப்பவரும் வீரருமான என் தகப்பனாரைப் பாருங்கள். கௌரவஶ்ரேஷ்டரான யுதிஷ்டிரரால் அனுப்பப்பட்டுக் குதிரையுடன்வரும் பிராம்மணர்கள், யுத்தத்தில் என்னால் கொல்லப்பட்ட இவருக்கு என்னசாந்தியைச் செய்வார்கள்? கொடியவனும் பாபியும் போர்க்களத்தில்பிதா

---

1 சாந்தி பர்வம், 377-பக்கம் குறிப்பிற்காண்க.

வைக்கொன்றவனுமான எனக்கு இப்பொழுது இது விஷயத்தில் பிராம்மணர்கள் என்ன பிராயச்சித்தத்தை விதிப்பார்கள்? இப்பொழுது பிதாவைக்கொன்றவனும் மிகக் கொடியவனுமான எனக்கு, என் பிதாவான இவருடைய தோலை உடுத்து இவருடைய மண்டையோட்டிலேயே போஜனம் செய்துகொண்டு பன்னிரண்டு வருஷம் கஷ்டப்பட்டு ஸஞ்சரிப்பது, இது விஷயத்தில், இப்பொழுது பிராயச்சித்தமாகும். தகப்பனைக் கொன்ற எனக்கு இப்பொழுது வேறு பிராயச்சித்தம் இல்லை. நாகராஜன் பெண்ணே! என்னால் கொல்லப்பட்ட பர்த்தாவைப்பார். நான் இப்பொழுது யுத்தத்தில் அர்ஜுனரைக் கொன்று உனக்குப் பிரியத்தைச் செய்தேன். கல்யாணி! நான் இப்பொழுது என் தகப்பனார் அடைந்த கதியை அடையப்போகிறேன். தைர்யத்தோடு ஜீவனைத் தரிக்க என்னால் முடியாது. அன்னையே! தேவி! உண்மையாக என்மீது ஆணையிடுகிறேன். நானும் காண்டீவமென்னும் வில்லையுடைய அர்ஜுனரும் மரித்தபின் நீ ஸந்தோஷமுள்ளவளாக இரு' என்று சொன்னான்.

மஹாராஜரே! துக்கத்தாலும் சோகத்தாலும் பிடிக்கப்பட்ட அந்த அரசன் இவ்விதம் சொல்லிவிட்டுப் பிறகு ஆசமனம் செய்து துக்கத்தால் (பின்வருமாறு) சொல்லலானான். 'தாயே! ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான எல்லாப் பிராணிகளும் நீயும் கேளுங்கள். சிறந்த நாககன்னிகையே! உண்மையாகச் சொல்லுகிறேன். என்னுடைய பிதாவும் புருஷஶ்ரேஷ்டருமான அர்ஜுனர் எழுந்திராவிடில் இந்தப் போர்க்களத்திலேயே சரீரத்தை உலர்த்தப் போகிறேன். பிதாவைக்கொன்ற எனக்கு ஓரிடத்திலும் பிராயச்சித்தம் இல்லை. குருவின் வதத்தால் பிடிக்கப்பட்ட நான் நிச்சயமாக நரகத்தை அடையப்போகிறேன். வீரனான க்ஷத்திரியனைக் கொன்றவன் நூறு [1] கோஸவ யாகம்செய்தால் (அந்தப் பாவத்தினின்று) விடப்படுவான். இவ்விதம் பிதாவைக்கொன்ற எனக்குப் பிராயச்சித்தம் கிடைப்பது அரிது. பாண்டுபுத்திரரான இந்தத்தனஞ்சயர் நிகரற்றவர்; சிறந்த தேஜஸுள்ளவர்; என்னுடைய பிதா; தர்மபுத்தியுள்ளவர். (இவரைக்கொன்ற) எனக்குப் பிராயச்சித்தம் ஏது?' என்று சொன்னான். பூபாலரே! தனஞ்சயனுடைய குமாரனும் சிறந்த புத்தியுள்ளவனுமான (அந்த) அரசன் இவ்விதம் சொல்லிவிட்டு ஆசமனம்செய்து பிராயோபவேசம்செய்து மௌனமாக இருந்தான்.

1 'கோசதம்' என்பது மூலம். 'நூறு கோதானம்' என்றும் கொள்ளலாம்.

## எண்பத்தோராவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(உலூபி ஸஞ்சீவனமணியால் அர்ஜுனனை எழுப்பியதும், அர்ஜுனன் சித்ராங்கதை களத்துக்குவரக் காரணங்கேட்டதும், பப்ருவாகனன் உலூபியைக் கேட்கச்சொல்லியதும்.)**

பகைவரை வாட்டுபவரே! அப்பொழுது, மணலூரபுரத்திற்குத் தலைவனும் பித்ருசோகம் மேலிட்டவனுமான அரசனும் (அவனுடைய) தாயும் பிராயோபவேசம் செய்தவுடன், உலூபியானவள் அப்பொழுது ஸஞ்சீவனமென்னும் மணியை நினைத்தாள். அப்பொழுது, பன்னகர்களுக்கு முக்ய கதியான அந்த மணியும் அருகில் வந்தது. கௌரவரே! பிறகு, நாகராஜபதியின் பெண்ணான உலூபியானவள் அதை எடுத்துக்கொண்டு ஸைனிகர்களுக்கு மனமகிழ்ச்சியை விளைவிக்கக் கூடிய வார்த்தையைச் சொல்லலானாள். 'மைந்த! எழுந்திரு. துயரப்படாதே. அர்ஜுனர் உன்னால் கொல்லப்படவில்லை. இவர் மனிதர்களாலும் இந்திரனுடன்கூடின தேவர்களாலும் ஜயிக்க முடியாதவர். புருஷஸ்ரேஷ்டரும் புகழ்பெற்றவருமான உன் பிதாவுக்குப் பிரியத்தைச் செய்வதற்காக நான்தான் மோஹினியென்னும் இந்த மாயையை இப்பொழுது காண்பித்தேன். கௌரவ! அரசனே! சத்துருவீரர்களைக் கொல்பவரான இவர் யுத்தத்தில் போர் புரியும் புத்திரனான உன்னுடைய பலத்தை அறிய விரும்பி வந்தார். புத்திர! அதனால், நான் உன்னை யுத்தத்திற்காகத் தூண்டினேன். புத்திர! பிரபுவே! உன்மீது அணுவளவும் பாவமிருப்பதாக எண்ணாதே. இவர் மஹாத்மாவும் புராணரும் சாஸ்வதரும் அழிவற்றவருமான ரிஷி. புத்திர! இவரை இந்திரனால்கூட யுத்தத்தில் ஜயிக்க முடியாது. வேந்தே! நான் திவ்யமான ஒரு மணி வரவழைத்திருக்கிறேன். இது எப்பொழுதும் பன்னகேந்திரர்களை மரிக்க மரிக்கப் பிழைக்கச் செய்கிறது. பிரபுவே! நீ இதைப் பிதாவான இவருடைய மார்பில் வை. அப்பொழுது, குந்தியின் புத்திரரான பாண்டவரை உயிர்பெற்றவராக நீ பார்ப்பாய்' என்று சொன்னாள். இவ்விதம் சொல்லக்கேட்டவனும் அளவற்ற பராக்ரமமுள்ளவனும் பாவத்தைச் செய்யாதவனுமான அவன் அப்பொழுது ஸ்நேஹத்தால் மணியை அந்த அர்ஜுனனுடைய மார்பில் வைத்தான். அந்த மணியை வைத்தவுடன், வீரனும் பிரபுவுமான அர்ஜுனன் ஜீவனை அடைந்து நெடுநேரம் நித்திரைசெய்தவன்போலச் சிவந்த கண்களைத்

துடைத்துக்கொண்டு எழுந்திருந்தான். பிரஜ்ஞையை அடைந்து எழுந்திருந்தவனும் மஹாத்மாவும் நல்ல மனமுள்ளவனும் தன்னிலைமையிலிருப்பவனும் பிதாவுமான அந்த அர்ஜுனனைக் கண்டு பப்ருவாஹனன் நமஸ்காரம் செய்தான். பிரபுவே! புருஷஸ்ரேஷ்டனும் ஸௌந்தர்யமுள்ளவனுமான அர்ஜுனன் மீண்டும் எழுந்திருந்தவுடன், இந்திரன் தேவலோகத்திலுண்டான புண்ணியமான மலர்களைப் பொழிந்தான். துந்துபிகள் அடிக்கப்படாமல் மேகங்கள் போன்ற சப்தமுள்ளனவாக ஒலித்தன. ஆகாயத்தில், 'நல்லது! நல்லது!' என்ற மிகப்பெரிய சப்தம் உண்டாயிற்று. சிறந்தகைகளுள்ள அர்ஜுனன் எழுந்திருந்து களைப்பாறிப் பப்ருவாஹனனைத் தழுவி உச்சிமோந்தான். பிறகு, தனஞ்சயன், சோகத்தால் இளைத்தவளும் உலூபியுடன் தூரத்தில் நிற்பவளுமான அவனுடைய தாயையும் கண்டு (பப்ருவாஹனனை நோக்கி,) 'பகைவரைக் கொல்பவனே! போர்க்களம் முழுவதும் சோகமும் ஆச்சர்யமும் ஸந்தோஷமுமுள்ளதாகக் காணப்படுகிறதே. இது என்ன? உனக்குத் தெரியுமானால் எனக்குச் சொல். உன்னுடைய தாயான சித்ராங்கதையானவள் எதற்காக யுத்தபூமிக்கு வந்தாள்? நாகராஜகுமாரியான இந்த உலூபியும் இங்கு ஏன் வந்தாள்? என்னுடைய உத்தரவால் நீ இந்த யுத்தத்தைச் செய்தது எனக்குத் தெரியும். ஸ்திரீகள் வந்ததற்குக் காரணத்தை நான் அறியவிரும்புகிறேன்' என்று வினவினான். அவ்வாறு வினவப்பட்டவனும் அறிஞனுமான மணலூரபுரத்தரசன், அப்பொழுது, அந்த அர்ஜுனனைத் தலையால் (வணங்கிக்) கிருபை வரும்படி செய்து, 'உலூபியைக் கேளும்' என்று சொன்னான்.

---

## எண்பத்திரண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(உலூபி, சித்ராங்கதை முதலியோர் போர்க்களம் வந்ததற்கும்
அர்ஜுனன் புத்திரனால் தோற்றதற்கும்
காரணங் கூறியது.)

அர்ஜுனன், (உலூபியை நோக்கிக்) கௌரவ்யநாகனது குலத்தை ஆநந்தப்படுத்துகிறவளே! நீயும் மணலூரபுரத்தரசனுடைய தாயும் யுத்தகளத்திற்கு வந்தகாரியம் என்ன? நாகன் பெண்ணே! இந்த அரசனுக்கு க்ஷேமத்தை விரும்பிவந்தாயா? சஞ்சலமானகடைக்கண்களுள்ளவளே! அல்லது, நீ எனக்கு க்ஷேமத்தை விரும்புகின்

ருயா! பருத்த பின்தட்டுள்ளவளே! இன்பமான காட்சியுள்ளவளே! நானாவது இந்தப் பப்ருவாஹனனாவது உனக்கு அறியாமையால் அப்ரியத்தைச் செய்யாமலிருக்கிறோமா? ராஜகுமாரியும் சித்ரவாஹனனுடைய பெண்ணும் உத்தமியும் உன்னுடைய ஸபத்நியுமான சித்ராங்கதையானவள் உனக்குச் சிறிதும் தீங்கு செய்யாமலிருக்கிறாளா?' என்று வினவினான்.

பிறகு, உரகராஜனது பெண்ணான உலூபியானவள் அவனை நோக்கி நகைத்துக்கொண்டு, 'நீரும் எனக்குத் தீங்கு செய்யவில்லை. பப்ருவாஹனனும் எனக்குத் தீங்கு செய்யவில்லை. எனக்கு வேலைக்காரிபோலிருக்கும் இவனுடைய தாயான இந்தச் சித்ராங்கதையும் தீமை செய்யவில்லை. நான் செய்ததையெல்லாம் உள்ளபடி (சொல்லுகிறேன்;) கேளும். நீர் என்னிடத்தில் கோபித்துக் கொள்ளக் கூடாது. உம்மைத் தலையால் (வணங்கிப்) பிரார்த்திக்கிறேன். பிரபுவே! கௌரவ்யரே! நீண்ட கைகளுள்ளவரே! தனஞ்சயரே! உம்முடையபிரியத்திற்காகவே இதனை நான்செய்தேன். இதனை முழுமையும் கேளும். பார்த்தரே! நீர் மஹாபாரதயுத்தத்தில் சந்தனுவின்புத்திரரும் மன்னருமான பீஷ்மரை அதர்மமாகக் கொன்றீரென்பதற்கு இது பிராயச்சித்தமாகச் செய்யப்பட்டது. வீரரே! பீஷ்மர் யுத்தம் செய்யும்பொழுது நீர் அவரைக் கொல்லவில்லை. நீர் சிகண்டியுடன் சேர்ந்து அவனை ஆச்ரயித்து அவரைக் கொன்றீர். நீர் அதற்குப் பிராயச்சித்தத்தைச் செய்யாமல் உயிரை விடுவீரானால், அந்தப்பாவச் செய்கையால் நிச்சயமாக நரகத்தில் விழுவீர். நீர் புத்திரனிடமிருந்து அடைந்த இந்த அபஜயமானது (அதற்குப்) பிராயச்சித்தமாக ஏற்படுத்தப்பட்டது. பூபாலரே! சிறந்த புத்தியுள்ளவரே! வஸுக்களையும் கங்கையையும் சந்தித்த நான் உம்மைப்பற்றிய இந்த விஷயத்தை வஸுக்கள் சொல்லக்கேட்டிருக்கிறேன். அரசரே! பீஷ்மர் கொல்லப்பட்டவுடன், வஸுக்களென்னும் தேவர்கள் ஒன்று சேர்ந்து கங்கையில் ஸ்நானம் செய்து கரைசென்று மஹாநதியான கங்கையை நோக்கிக் கங்கையின் ஸம்மதத்தின்மேல் அப்பொழுது பின்வருமாறு கோரமான வார்த்தையைச் சொல்லலானார்கள். 'பெண்ணே! அர்ஜுனன் சந்தனுவின் குமாரரான இந்தப் பீஷ்மரை (த்தன்னுடன்) யுத்தம் செய்யாமல் வேறொருவனுடன் யுத்தம் செய்யும்போது கொன்றான். ஆகையால்,இந்த ஸம்பந்தத்தால், நாங்கள் இப்பொழுது அர்ஜுனனைச் சபிக்கிறோம்' என்று சொன்னார்கள். அந்தக்கங்கையும் 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னாள்.

நான் பிதாவிடம் சென்று அதை அறிவித்துத் துன்பமுற்ற இந்திரியங்களுள்ளவளாக இருந்தேன். அவரும் அதனைக்கேட்டு மிக்க வருத்தமடைந்தார். என்னுடைய பிதாவோ உமக்காக வஸுக்களிடம் சென்று அடிக்கடி அவர்களை அருள்புரியும்படி வேண்ட, அவர்கள் அவரைநோக்கி, 'பெரிய பாக்கியமுள்ளவனே! அவனுக்கு மணலூரபுரத்தரசனும் யௌவனமுள்ளவனுமான ஒரு புத்திரனிருக்கிறான். அவன் போர்க்களத்தின்நடுவில் நின்றுகொண்டு இவனைப் பாணங்களால் (அடித்துப்) பூமியில் தள்ளுவான். நாகராஜனே! இவ்விதம் செய்யப்பட்டபொழுது, அந்த அர்ஜுனன் சாபம் விலகியவனுவான். நீ போ' என்று இந்த வசனத்தைச் சொன்னார்கள். வஸுக்களால் இவ்விதம் சொல்லப்பட்ட அவர் அதை எனக்கும் சொன்னார். அதைக்கேட்ட நான் உம்மை அந்தச் சாபத்தினின்று விடுவித்தேன். உம்மைத் தேவராஜனும் யுத்தங்களில் ஜயிக்கமுடியாது. 'தானே புத்திரனாகிறான்' என்று கருதப்பட்டிருக்கிறது. ஆகையால், நீர் இப்பொழுது அப்படிப்பட்ட புத்திரனால் ஜயிக்கப்பட்டீர். இதில் தோஷமிருப்பதாக நான் எண்ணவில்லை. பிரபுவே! நீர் எப்படி நினைக்கிறீரோ?' என்று சொன்னாள். இவ்விதம் சொல்லப்பட்டவனும் தெளிந்த சித்தமுள்ளவனுமான அர்ஜுனன், 'தேவீ! நீ செய்த இந்தக் காரியங்கள் யாவும் எனக்கு மிக்க பிரியமாக இருக்கின்றன' என்ற இந்த வசனத்தைச் சொன்னான். அந்த அர்ஜுனன் இவ்வாறு சொல்லிவிட்டு அப்பொழுது கௌரவ்யனுடைய பெண்ணும் சித்ராங்கதையும் கேட்டுக்கொண்டிருக்கும்போது மணலூரபுரத்தரசனான புத்திரனை நோக்கி, 'அரசனே! வருகிற சித்ராபூர்ணிமையில் யுதிஷ்டிரருடைய அஸ்வமேதம் நடக்கப்போகிறது. அதற்கு, நீ மந்திரிகளுடனும் இரண்டு தாயார்களுடனும் வரவேண்டும்' என்று சொன்னான். பார்த்தனால் இவ்விதம் சொல்லப்பட்டவனும் அரசனும் புத்தியுள்ளவனுமான அந்தப் பப்ருவாஹனன் கண்ணீரால் கலங்கின கண்களுடன் பிதாவை நோக்கி, 'தர்மத்தை அறிந்தவரே! உம்முடைய உத்தரவின்படி நான் வருகிறேன். அஸ்வமேதமென்னும் மஹாயாகத்தில் பிராம்மணர்களுக்குப் பரிமாறும் வேலையைச் செய்கிறேன். தர்மத்தை அறிந்தவரே! என்னை அனுக்கிரஹிப்பதற்காக இரண்டு மனைவிகளுடனும் தம்முடைய இந்தப் பட்டணத்துக்கு வாரும். நீர் இவ்விஷயத்தில் ஆலோசிக்கவேண்டாம். பிரபுவே! ஜயிப்பவர்களுள் சிறந்தவரே! இங்கு ஓரிரவு தமது கிருஹத்தில் ஸுகமாக வாஸம் செய்து, திரும்பவும் குதிரையின்பின்

தொடர்ந்து செல்லும்' என்ற இந்த வசனத்தைச் சொன்னான். அப்பொழுது, புத்திரனால் இவ்விதம் சொல்லப்பட்டவனும் வானரக் கொடியுள்ளவனும் குந்தியின் புத்திரனுமான அந்த அர்ஜுனனோ அப்பொழுது சித்ராங்கதையின் புத்திரனை நோக்கிச் சிரித்துக் கொண்டு, 'மிக்க புஜபலமுள்ளவனே! நான் தீக்ஷையை அனுஷ்டிக்கிறேன் என்பது உனக்குத் தெரிந்தவிஷயம். அகன்ற கண்களுள்ளவனே! இப்பொழுது உன்னுடைய பட்டணத்திற்கு நான் வரக்கூடாது. புருஷஶ்ரேஷ்டனே! இந்த யாகக்குதிரை இஷ்டப்படி செல்லுகிறது. உனக்கு க்ஷேமமுண்டாகுக. நான் போகிறேன். எனக்கு இருக்க முடியாது' என்று சொன்னான். பரதஶ்ரேஷ்டனும் இந்திரகுமாரனுமான அந்த அர்ஜுனன் அப்பொழுது அந்தப் பப்ருவாஹனனால் விதிப்படி பூஜிக்கப்பட்டும் இரண்டு மனைவிகளாலும் அனுமதி கொடுக்கப்பெற்றும் சென்றான்.

---

## எண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் மேகஸந்தியையும் மிலேச்சர்களையும் வென்றது.)

அரசரே! அந்தக் குதிரையோ ஸமுத்திரம்வரையிலுள்ள இப்பூமியைச் சுற்றிக்கொண்டு ஹஸ்தினபுரத்தை நோக்கித் திரும்பிற்று. பிறகு, அர்ஜுனனும் திரும்பிக் குதிரையைப் பின்தொடர்ந்து சென்று அப்பொழுது தற்செயலாக ஒரு பட்டணத்தையும் அரண்மனையையும் அடைந்தான். பிரபுவே! ஸமீபத்தில் வந்திருக்கும் அவனைக் கண்டு க்ஷத்திரிய தர்மத்தில் நிலைபெற்றவனும் வீரனுமான[1] ஸஹதேவனது குமாரன் யுத்தத்திற்கழைத்தான். பிறகு, அந்த மேகஸந்தியானவன் கையுறை பூண்டு வில்லையும் பாணத்தையும் ஏந்தித் தேரிலேறிப் பட்டணத்திலிருந்து வெளிப்பட்டுப் [2] பதாதியான அர்ஜுனனை எதிர்த்தான். மஹாராஜரே! மிக்க தேஜஸுள்ள மேகஸந்தியானவன் தனஞ்சயனிடம் வந்து (அவனை நோக்கி,) 'பாரத! இந்தக் குதிரையை ஸ்திரீகளின்மத்தியில் நடத்துவதுபோல ஏன் நடத்துகிறாய்? நான் இந்தக் குதிரையை அபஹரிக்கிறேன். இதைவிடுவிப்பதற்கு முயற்சிசெய். நீ என்னுடைய முன்னோர்களால் யுத்தத்தில் சிக்ஷிக்கப்படாமலிருந்தால் உனக்கு அதிதிபூஜை செய்கிறேன். நீ (என்னை) அடி. நானும் (உன்னை) அடிக்கிறேன்' என்ற இந்தவார்த்தை

---

1 இவன் ஜராஸந்தன் மகன். 2 வாகனமின்றிக் காலால் நடப்பவன்.

யைச் சிறுபிள்ளைத்தனத்தால்சொன்னான்; திறமையால்சொன்னவனல்லன். இவ்வாறுசொல்லக்கேட்ட பாண்டவன், அந்தமேகஸந்தியை நோக்கிச் சிரித்துக்கொண்டு, 'அரசனே! இடையூறு செய்பவனை நான் தடுக்க வேண்டுமென்று(என்னுடைய)மூத்த ஸஹோதரர் எனக்கு விரதத்தைஏற்படுத்திஇருக்கிறார்.(அது)உனக்கும் நிச்சயமாகத் தெரியும். நீ முடிந்தவரையில் அடி. எனக்குக்கோபமில்லை' என்று மறுமொழி கூறினான். இவ்வாறு சொல்லியதைக் கேட்ட மகதராஜன் ஆயிரம் கண்களுள்ள இந்திரன் மழைகளைப்பொழிவதுபோல ஆயிரக்கணக்கான பாணங்களைப் பொழிந்துகொண்டு பாண்டவனை முதலில் அடித்தான். பரதர்களில் சிறந்தவரே! பிறகு, காண்டீவத்தைத் தரித்தவனும் சூரனுமான அர்ஜுனன் காண்டீவத்தினின்று விடப்பட்ட பாணங்களால் முயற்சியுடன் கூடின அந்தப் பாணங்களைப் பயனற்றனவாகச் செய்தான். வானரக்கொடியுள்ள அந்த அர்ஜுனன் அந்த மேகஸந்தியின் பாணக்கூட்டத்தை வீணாகச் செய்துவிட்டு ஜ்வலிக்கின்றனவும் ஜ்வலிக்கும் முகமுள்ள ஸர்ப்பங்கள்போன்றனவுமான பாணங்களை த்வஜத்திலும் கொடிமரங்களிலும் ரதத்திலும் யந்திரங்களிலும் குதிரைகளின்மீதும் மற்றுமுள்ள ரதத்தின் அவயவங்களிலும் பிரயோகித்தான். (அவனுடைய) சரீரத்திலும் ஸாரதியின்மீதும் பிரயோகிக்கவில்லை.ஸவ்யஸாசியான அர்ஜுனனால் சரீரத்தில்(அடிக்காமல்) ரக்ஷிக்கப்படும் மகதராஜன் அதைத் தன் பராக்ரமமாக எண்ணி (அர்ஜுனன்மீது) பாணங்களைப் பிரயோகித்தான். பிறகு, மகதராஜனால் மிகவும் அடிக்கப்பட்ட அர்ஜுனனே வஸந்தகாலத்தில் புஷ்பித்த பலாசமரம்போல விளங்கினான்.கௌரவ்யரே! அந்த மகதராஜன் (அர்ஜுனனால்) அடிக்கப்படாமல் பாண்டவப்ச்ரேஷ்டனான அவனை அடித்தான். அதனால், அவன் உலகங்களுள் வீரனான அர்ஜுனனுடைய பார்வையில் நின்றான். ஸவ்யஸாசியோ, மிக்க கோபங்கொண்டு வில்லைப் பலத்துடனிழுத்து (மேகஸந்தியினுடைய) குதிரைகளைக் கொன்று ஸாரதியினுடைய தலையையும் அறுத்தான். அவனுடைய பெரியதும் ஆச்சரியமுமான வில்லையும் கையுறையையும் பதாகையையும் த்வஜத்தையும் க்ஷுரத்தால் அறுத்துத் தள்ளினான். குதிரைகளையும் வில்லையும் ஸாரதியையும் இழந்தவனும் துன்பமுற்றவனுமான அவ்வரசன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு வேகமாக அர்ஜுனனை எதிர்த்துச் சென்றான். வந்துகொண்டிருக்கும்பொழுதே அவனுடைய ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட கதாயுதத்தை அர்ஜுனன் கழுகிறகுபூண்ட பாணங்களால் விரைவில் பல துண்டுகளாக

வெட்டினான். துண்டுகளாகவானதும் மணிகளாலாகிய கட்டுச் சிதறியதுமான அந்தக் கதாயுதமானது விடப்படும் ஸர்ப்பம்போலப் பூமியில் விழுந்தது. புத்தியுள்ளவனும் யுத்தத்தில் முந்திச் செல்பவனுமான அர்ஜுனன் ரதமும் வில்லும் கதாயுதமுமில்லாத மேகஸந்தியை அடிக்கவிரும்பவில்லை. பிறகு, வானரக் கொடியையுடைய அர்ஜுனன், மனவருத்தமுள்ளவனும் க்ஷத்ரியதர்மத்தில் நிலைபெற்றவனுமான அவனை ஸமாதானம் செய்துகொண்டு பின்வரும் வாக்யத்தைச் சொல்லலானான். 'குழந்தாய்! நீ க்ஷத்திரியதர்மத்தை முழுமையும் காட்டினாய். நீ போகலாம். நீ பாலனாக இருந்தும் யுத்தத்தில் அதிகமான இவ்விதகாரியத்தைச் செய்தாய். அரசர்களைக் கொல்லவேண்டாமென்று யுதிஷ்டிரர் உத்தரவுசெய்திருக்கிறார். வேந்தனே! நீ யுத்தத்தில் எனக்குக் குற்றம் செய்தவனானாலும் அதனால் ஜீவிக்கிறாய்' என்று சொன்னான். மாகதன் அப்பொழுது தன்னை இவ்விதம் ஜயிக்கப்பட்டவனாகவும் (அது) உண்மையாகவும் எண்ணி எதிரில் வந்து அஞ்சலிசெய்து அர்ஜுனனைப் பூஜித்து, '(நான் உம்மால்) ஜயிக்கப்பட்டேன். உமக்கு க்ஷேமமுண்டாகட்டும். எனக்கு இப்பொழுது யுத்தம் செய்ய உத்ஸாகமில்லை. நான் இப்பொழுது உமக்குச் செய்யவேண்டிய காரியத்தையெல்லாம் சொல்லும். அவை செய்யப்பட்டவையேயாகும்' என்று சொன்னான். அர்ஜுனன் மறுபடியும் அவனைத் தேறுதல்செய்து, 'அடுத்த சித்ராபூர்ணிமையில் நடக்கும் யுதிஷ்டிராருடைய அஶ்வமேதத்திற்கு நீ வரவேண்டும்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லப்பட்டவனும் ஸஹதேவனுடைய புத்திரனுமான அந்தமேகஸந்தியானவன், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி அந்தக் குதிரையையும் யுத்தத்தில் சிறந்தவனான அர்ஜுனனையும் விதிப்படி பூஜித்தான். வேந்தரே! பிறகு, குருகுலத்தில் பிறந்தவனான தனஞ்சயன் இஷ்டப்படி கடற்கரையின் வழியாக வங்கம், புண்ட்ரம், கேரளம் என்னும் தேசங்கள் சென்று ஆங்காங்கு மிகுதியான மிலேச்சஸைன்யங்களைப் பெரும்பாலும் காண்டீவமென்னும் வில்லால் ஜயித்தான்.

---

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(அர்ஜுனன் சேதிராஜனிடம் மரியாதை பெற்றுக் காசிகோஸல மன்னர்களை வென்று காந்தாரநாடு சென்றது.)**

அரசரே! மகதராஜனால் பூஜிக்கப்பட்டவனும் பாண்டுவின் புத்திரனும் வெள்ளைக் குதிரைகளுள்ளவனுமான அர்ஜுனன் தென்திசையை அடைந்து அந்தக் குதிரையை ஸஞ்சரிக்கும்படி செய்தான். பிறகு, இஷ்டப்படி ஸஞ்சரிப்பதும் பலமுள்ளதுமான அந்தக் குதிரையானது, மறுபடியும் திரும்பி, சேதிதேசத்தைச் சேர்ந்ததும் சுக்தியென்று பெயருள்ளதுமான அழகான பட்டணம் சென்றது. அவ்விடத்தில், சிசுபாலனுடைய புத்திரனான சரபன் அந்தக் குதிரையைப் பூஜித்தான். அவன் அப்பொழுது முதலில் யுத்தத்தாலும் (பிறகு) பூஜையினாலும் மிக்க பலமுள்ள அக்குதிரையைப் பூஜித்தான். ராஜரே! பிறகு, பூஜிக்கப்பட்ட அந்தச் சிறந்த குதிரையானது அப்பொழுது காசி, அங்கம், கோஸலம், கிராதம், தங்கணம் என்னும் தேசங்களுக்குச் சென்றது. குந்தியின் புத்திரனான தனஞ்சயன் அவ்விடங்களில் நியாயம் தவறாமல் பூஜையைப்பெற்று அப்பொழுது மறுபடியும் திரும்பித் தசார்ண தேசம் சென்றான். அந்தத் தேசத்தில் பலமுள்ளவனும் பகைவரை அழிப்பவனுமான சித்ராங்கதனென்னும் அரசன் இருந்தான். அந்த அர்ஜுனனுக்கு அவனுடன் அதிகபயங்கரமான யுத்தம் நேர்ந்தது. புருஷஶ்ரேஷ்டனான அர்ஜுனன் அவனையும் வசப்படுத்திக்கொண்டு, வேடர்களுக்கரசனான ஏகலவ்யனுடைய தேசத்திற்குச் சென்றான். அப்பொழுது, ஏகலவ்யனுடைய புத்திரனும் அந்த அர்ஜுனனோடு யுத்தம்செய்தான். அந்த அர்ஜுனன் அவ்விடத்தில் வேடர்களுடன் மயிர் சிலிர்க்கத்தக்க யுத்தத்தைச் செய்தான். பிறகு, யுத்தங்களில் ஜயிக்கப்படாதவனும் (பிறரால்) அவமதிக்க முடியாதவனும் குந்தியின் புத்திரனுமான அர்ஜுனன், யாகத்துக்கு இடையூற்றைச் செய்வதற்காக வந்திருக்கும் அவனையும் யுத்தத்தில் ஜயித்தான். மஹாராஜரே! இந்திர குமாரனான அந்த அர்ஜுனன் அந்த வேடன் மகனை ஜயித்து (அவனால்) பூஜிக்கப்பட்டு மறுபடியும் தெற்கு ஸமுத்திரம் சென்றான். அவ்விடத்திலும் அர்ஜுனனுக்குத் திராவிடர்களுடனும் ஆந்த்ரர்களுடனும் ரௌத்ரர்களுடனும் மாஹிஷர்களுடனும் கோல்லகிரியில் வஸிப்பவர்களுடனும் யுத்தம் நேர்ந்

தது: "அர்ஜுனன் அதிகக் கடுமையான கார்யத்தைச் செய்யாமல் அவர்களையும் ஜயித்துக் குதிரையுடன்கூட ஸுராஷ்ட்ரதேசங்களின் பக்கமாகச் சென்றான். பிறகு, கோகர்ணக்ஷேத்ரம் சென்று (அங்கிருந்து) பிரபாஸத்திற்கும் சென்றான். பிறகு, கௌரவராஜனுடைய அழகுள்ள யாகக்குதிரையானது விருஷ்ணிவீரர்களால் ரக்ஷிக்கப் பட்டதும் அழகு பொருந்தியதுமான துவாரகைக்குச் சென்றது. அரசரே! யாதவர்களுடைய குமாரர்கள் அந்தச்சிறந்தகுதிரையைப் பிடித்துக்கொண்டு சென்றார்கள். அப்பொழுது, உக்ரஸேனர் அவர்களைத் தடுத்தார். பிறகு, விருஷ்ணிகளுக்கும் அந்தகர்களுக்கும் அதிபதியான அவர் அர்ஜுனனுக்கு அம்மானாகிய [1]வஸுதேவருடன் சேர்ந்து அவ்விருவர்களும் கௌரவஸ்ரேஷ்டனும் பரதஸ்ரேஷ்டனுமான அர்ஜுனனிடம் வந்து(அவனுக்குப்)பிரியத்துடன் விதிப்படி சிறந்த பூஜையைச் செய்துநின்றார்கள். பிறகு, அர்ஜுனன், அவர்களிடம் அனுமதிபெற்றுக்கொண்டு குதிரை செல்லும் வழியே சென்றான். பிறகு, அந்தக் குதிரையானது, அப்பொழுது, மேற்கு ஸமுத்திரத்தினருகிலுள்ள தேசம் சென்று கிரமமாக ஸஞ்சரித்துக் கொண்டு, பிறகு, செழிப்புள்ள பஞ்சநதம் சென்றது. குருகுலத்தில் பிறந்தவரே! அப்பொழுது, அர்ஜுனனால் பின் தொடரப்பட்ட அக்குதிரையானது அவ்விடமிருந்து காந்தாரதேசம் சென்று இஷ்டப்படி ஸஞ்சரித்தது. பிறகு, அர்ஜுனனுக்கு, காந்தாரராஜனும் முந்திய விரோதத்தை விடாதவனுமான சகுனியின் புத்திரனோடு கோரமான யுத்தம் நேர்ந்தது.

---

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் சகுனியின் புத்ரனை வென்று சேனையை அழித்ததும், சகுனியின் மனைவி வேண்ட, காந்தாரிக்காக அவனை விட்டுவிட்டதும்.)

காந்தாரர்களுள் மஹாரதனும் வீரனுமான சகுனியின் குமாரன் ரதங்களும் யானைகளும் குதிரைகளுமுள்ளதும் பதாகைகள் த்வஜங்கள் இவற்றின் வரிசைகளுள்ளதுமான பெரிய ஸேனையால் சூழப்பட்டு அர்ஜுனனை எதிர்த்துச் சென்றான். அரசனான சகுனியின் வதத்தைப் பொறாதவர்களான அந்த யுத்தவீரர்கள் வில்லையெடுத்துக்கொண்டு ஒன்றுசேர்ந்து அர்ஜுனனை எதிர்த்துச் சென்

1. 'வாஸுதேவோ' என்பது மூலம்.

ஞர்கள். தர்மாத்மாவும் (பகைவரால்) ஜயிக்கப்படாதவனுமான அந்த அர்ஜுனன் அவர்களிடம் யுதிஷ்டிரருடைய வார்த்தையைச் சொன்னுன். அவர்கள் ஹிதமான அந்த வார்த்தையை அங்கீகரிக்கவில்லை. அர்ஜுனன் நன்மொழி கூறித் தடுத்தும் கோபங்கொண்டவர்களான அவர்கள் குதிரையைச் சூழ்ந்துகொண்டு சென்ருர்கள். பிறகு, அர்ஜுனன் சினங்கொண்டான். பிறகு, பாண்டவனுன அர்ஜுனன் காண்டீவத்தினின்று விடப்பட்டனவும் ஜ்வலிக்கின்ற முனையுள்ளனவுமான க்ஷுரங்களால் அதிக முயற்சியின்றி அவர்களுடைய தலைகளை அறுத்தான். மஹாராஜரே! அர்ஜுனனுல் கொல்லப்படுகின்றவர்களும் பாணவர்ஷங்களால் மிகத் துன்பப்படுத்தப்பட்டவர்களுமான அவர்கள் குதிரையை விட்டுவிட்டுப் பயத்துடன் திரும்பினுர்கள். அந்தக் காந்தாரர்களால் துன்பப்படுத்தப்பட்டவனும் தேஜஸ்வியுமான பாண்டவனும் அந்தச் சத்துருக்களைச் சொல்லிச் சொல்லித் தடுத்தான். யுத்தத்தில் நான்கு பக்கங்களிலும் அந்தக் காந்தாரர்கள் கொல்லப்படும்போது, சகுனியின் புத்திரனுன அவ்வரசன் அர்ஜுனனை எதிர்த்துத் தடுத்தான். அர்ஜுனன், யுத்தம் செய்கின்றவனும் க்ஷத்திரிய தர்மத்தில் நிலை பெற்றவனுமான அந்த அரசனை நோக்கி, 'யுதிஷ்டிரராஜருடைய கட்டளையினுல் நான் அரசர்களைக் கொல்லுகிறதில்லை. வீரனே! நீ யுத்தம் செய்வதில் பயனில்லை. உனக்கு இப்பொழுது தோல்வி உண்டாக வேண்டாம்' என்று சொன்னுன். இவ்வாறு சொல்லப்பட்ட அவன் அறியாமையால் மதிமயங்கி அந்த வாக்கியத்தை அலக்ஷியஞ்செய்து இந்திரனுக்குச் சமமான செய்கையுள்ள அர்ஜுனன்மீது பாணங்களை இறைத்தான். அளவிடமுடியாத தைரியமுள்ளவனுன அர்ஜுனன் அர்த்த சந்திர பாணத்தால் அவனுடைய தலைப்பாகையை ஜயத்ரதனுடைய தலையைப்போல அபஹரித்தான். அந்தக் காந்தாரர்களெல்லாரும் அதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். அவர்கள் அந்த அர்ஜுனன் கருணையால் ராஜாவைக் கொல்லவில்லை என்றும் எண்ணினுர்கள். காந்தாரராஜ குமாரனே ஓடுவதில் நோக்கங்கொண்டு பயந்தவர்களும் அற்பமிருகங்கள் போன்றவர்களுமான அவர்களுடன் கூடவே சென்ருன். அர்ஜுனன் அவ்விடத்திலேயே ஓடுகின்ற அவர்களுடைய முடிகளைப் படிந்த கணுக்களுள்ள பல்லங்களால் சீக்கிரமாகக் கவர்ந்தான். சிலர் உயரத் தூக்கப்பட்ட கைகள் (அர்ஜுனனுடைய) பாணங்களால் அறுக்கப்பட்டதை அறியவில்லை. காண்டீவத்தினின்று விடப்பட்டவைகளும் அர்ஜுனனுல் பிரயோகிக்கப்பட்டவைகளும் பெரியவைகளுமான

பாணங்களால் (அடிக்கப்பட்டு) கலங்கிய மனிதர்களும் யானைகளும் குதிரைகளுமுள்ள (பகைவரின்) படையானது விழுந்து ஓடிற்று. பெரும்பான்மையாகக் கொல்லப்பட்டதும் ஓடினதுமான அந்தப் படையானது அடிக்கடி திரும்பியது. வீழ்த்தப்படும் பகைவர்கள் எவரும் சிறந்த செய்கையுள்ளவனும் வீரனுமான அர்ஜுனனுடைய முன்னிலையில் சிறந்த பாணங்களை ஸஹிக்கக்கூடியவர்களாகக் காணப் படவில்லை. பிறகு, காந்தாரராஜனுடைய தாயானவள் பயந்து மந்திரி களையும் வயது சென்றவர்களையும் முன்னிட்டுக்கொண்டு உத்தம மான பூஜாத்திரவியத்தை எடுத்துக்கொண்டு வெளியில் வந்தாள். அவள், தடுமாற்றமின்றி, யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட அந்தப் புத்திரனைத் தடுத்தாள். ஶ்ரமமின்றி யுத்தம் செய்யும் அந்த அர்ஜு னனையும் கோபம் தணிந்தவனாகச் செய்தாள். பிரபுவான அர்ஜுனன் அவளைப் பூஜித்துக் கிருபைசெய்து சகுனியின் புத்திரனைத் தேற்றிப் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான். 'சிறந்தகைகளுள்ளவனே! பகைவரைக்கொல்பவனே! நீ எதிர்த்துப் போர்புரிய எண்ணியது எனக் குப் பிரியமாக இல்லை. குற்றமற்றவனே! நீ எனக்கு ஸஹோதரனே. தாயாரானகாந்தாரியைநினைத்தும் திருதராஷ்டிரருக்காகவும் (உன்னைக் கொல்லவில்லை.) அரசனே! அதனால் நீ ஜீவித்திருக்கிறாய். உன்னுடைய படைவீரர்கள் கொல்லப்பட்டனர். நீ இவ்விதம் இராதே. விரோதம் தணியட்டும். உனக்கு இவ்விதமான புத்தி உண்டாகவேண்டாம். அடுத்த சித்ரா பூர்ணிமையில் (நடக்கப்போகிற) நமது அரசருடைய அஶ்வமேதத்திற்கு நீ வரவேண்டும்' என்று சொன்னான். அர்ஜுனன் இவ்வாறு சொல்லிவிட்டு இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் அந்தக் குதிரை யைப் பின்தொடர்ந்து சென்றான். மாண்டவர்போக மிச்சமுள்ள அந்தக் காந்தாரர்கள் தம் நகரத்தைக்குறித்துத் திரும்பினார்கள்.

---

## எண்பத்தாறுவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(அர்ஜுனன்வருகையைச் சாரர்களாலறிந்த யுதிஷ்டிரர் பீமனை யாகசாலை அமைக்கச்சொல்லிப் பல தேசங்களினின்றும் பிராம்மணர்களை வருவித்து அவர்களுக்கும் போஜன முதலியவற்றை அமைப்பித்தது.)**

பிறகு, குதிரையானது ஹஸ்திநாபுரம் செல்லும் வழியாகத் திரும்பிற்று. யுதிஷ்டிரர், அது திரும்பியதைச் சாரன் சொல்லக்கேட்

டார். அவர், அர்ஜுனன் க்ஷேமமாக இருப்பதைச் செவியுற்று மனக் களிப்புள்ளவரானார். அவர், அப்பொழுது காந்தாரதேசத்திலும் மற்றதேசங்களிலும் அர்ஜுனனுடைய அந்தச் செய்கையைக் கேட்டு அப்பொழுது மிக்க ஸந்தோஷமுள்ளவரானார். கௌரவரே! இந்த ஸமயத்தில் மாகமாஸத்திய த்வாதசியும் புஷ்ய நக்ஷத்திரமும் கூடிய தினம் வந்தவுடன், தர்மராஜரும் மிக்க தேஜஸுள்ளவரும் தார்மிகர்களுள் சிறந்தவருமான யுதிஷ்டிரராஜர் பீமஸேனன், நகுலன், ஸஹதேவன் என்னும் எல்லாப் பிராதாக்களையும் வரவழைத்து அக்காலத்தில் பின்வரும்வார்த்தையைச் சொல்லலானார். பேசுகிறவர்களுள் சிறந்தவரானயுதிஷ்டிரர் அடிப்பவர்களுள் சிறந்த பீமனை அழைத்து, 'பீமஸேன! உன்னுடையதம்பியான அர்ஜுனன் குதிரையுடன் வருகிறான். அர்ஜுனனுடன்சென்ற மனிதர்கள் அவ்விதம்சொல்லுகிறார்கள். காலமும் நெருங்கிவிட்டது. குதிரையும் பக்கத்தில் வருகிறது. இது மாகமாஸத்திய பூர்ணிமை. விருகோதர! (யாககாலத்திற்கு) ஒருமாஸம் தான் மிச்சமிருக்கிறது. ஆகையால், வித்வான்களும் வேதங்களின் கரையை அடைந்தவர்களுமான பிராம்மணர்கள் அஶ்வமேதமென்னும் காரியம் நிறைவேறுவதற்காகப் புறப்படட்டும். யாகத்திற்குரிய இடத்தைப் பார்க்கட்டும்' என்று சொன்னார். இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப் பீமஸேனன், புருஷஶ்ரேஷ்டனான அர்ஜுனன் வருவதைக் கேட்டு ஸந்தோஷமடைந்து அரசருடைய உத்தரவை அப்படியே செய்தான். பிறகு, பீமஸேனன், யாககாரியத்தில் ஸமர்த்தர்களான பிராம்மணர்களை முன்னிட்டுப் புத்திமான்களான ஸ்தபதிகளுடன் சென்றான். குருகுலத்தில் பிறந்தவனான பீமஸேனன், பிராகாரங்களுடைய கூட்டமுள்ளதும் காந்தியுள்ளதும் நன்கு அமைக்கப்பட்ட வீதிகளுள்ளதும் அநேக உப்பரிகைகளால் நெருங்கியதும் மிகச்சிறந்த மணிகளால் தளவரிசை செய்யப்பட்டதுமான அந்த யாகசாலையையும், பத்னிசாலையும் ஆக்னீத்ரஸ்தானமுமுள்ளதும் மேலானதும் ஸுவர்ணத்தாலும் ரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான ஸதஸையும் விதிப்படி அளந்து அமைக்கச் செய்தான். தர்மபுத்தியுள்ளவனும் குந்தியின் குமாரனுமான பீமஸேனன் சுத்தமான ஸுவர்ணத்தைக் கொடுத்து யாகசாலையின் பிரதேசங்களில் தூண்களை ஸுவர்ணத்தால் விசித்ரமானவைகளாகவும் வெளிவாயில்களை விசாலமானவைகளாகவும் விதிப்படி செய்வித்துப் பலதேசங்களிலிருந்துவரும் அரசர்களுக்கும் அரசிகளுக்கும் பலதேசங்களிலிருந்து வரும் பிராம்மணர்களுக்கும் அவ்விதமான அனேக வீடுகளையும் ஆங்

காங்கு விதிப்படி செய்வித்தான். சிறந்த கைகளுள்ளவரே! பீமஸே னன் அவ்வாறே யுதிஷ்டிரராஜருடைய உத்தரவினால் தீய செய்கை யற்ற அரசர்களுக்குத் தூதர்களை அனுப்பினான். ராஜஶ்ரேஷ்டரே! அந்த அரசர்கள் குருபதியான யுதிஷ்டிரருக்குப் பிரியத்தைச் செய்வ தற்காக அநேகம் ரத்தினங்களையும் மகளிர்களையும் குதிரைகளையும் ஆயுதங்களையும் கொண்டுவந்தார்கள். அந்தக் கூடாரங்களில் பிரவே சிக்கின்ற மஹாத்மாக்களான அந்த அரசர்களுடைய சப்தமானது ஒலிக்கின்ற ஸமுத்திரத்தினுடைய(சப்தம்)போல ஆகாயத்தை அளா வியது.(பீமஸேனன்)பிராம்மணர்களை எதிர்சென்று நமஸ்கரித்து(வீடு களை) அறிவித்தான். கௌரவர்களை விருத்திசெய்பவரான அந்த யுதிஷ்டிரராஜர்,வந்தவர்களான அவர்களுக்கு அன்னங்களையும்பானங் களையும் அவரவர்களின் தகுதிக்கு மேற்பட்டவையான படுக்கை களையும் (கொடுக்கும்படி) ஆஜ்ஞாபித்தார். பாரதஶ்ரேஷ்டரான அந்தத் தர்மராஜர் வாகனங்களுக்குச் செம்பாநெல் தேன்பாகு நெய் (முதலானவை) களுள்ள பலவிதமான வீடுகளை (க் கொடுக்கும்படி) உத்தரவுசெய்தார். (பிராம்மணர்முதலான) வர்ணத்தினர்கள் மேன் மேலும் பூஜிக்கப்பட்டுத் தனித்தனியாக வஸித்தார்கள். அரசரே! அவ்வாறே, புத்தியுள்ளவரான தர்மராஜருடைய அந்தப் பெரியயாகத் திற்காகப் பிரம்மவாதிகளான அநேகம் முனிகணங்களும் மற்று முள்ள பிராம்மணஶ்ரேஷ்டர்களும் அங்கு வந்தார்கள். கௌரவ ரான யுதிஷ்டிரர், சிஷ்யர்களுடன்கூடின அவர்களை வரவேற்றார். மிக்க தேஜஸுள்ள அவர் கர்வமின்றித் தாமே அவர்களெல்லாரையும் விடுதிகளுக்குச் செல்லும்வரையில் பின் சென்றார். அரசரே! பிறகு, ஸ்தபதிகளும் மற்றுமுள்ள சிற்பிகளும் அப்பொழுது யாகத்திற்கு வேண்டிய காரியத்தை முழுதும் செய்துவிட்டுத் தர்மராஜரிடம் தெரிவித்தனர். மன்னரே! சோம்பலில்லாதவரான தர்மராஜரோ, செய் யப்பட்ட அவற்றையெல்லாம் கேட்டு ஆதரித்துத் தம்பிமார்களுடன் மிக்க ஸந்தோஷமுள்ளவரானார். அந்த யாகம் தொடங்கினவுடன், நன்கு பேசும் திறமையுள்ளவர்களும் யுக்தி வாதம் செய்பவர்களு மான வித்வான்கள் ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பிப் பலயுக்தி வாதங்களைச் சொன்னார்கள். பாரதரே! அரசர்கள், பீமஸேனனால் செய்யப்பட்ட தேவேந்திரனுடையதுபோன்ற (யுதிஷ்டிரருடைய) யாகத்தின் அந்த உத்தமமான ஏற்பாட்டைப் பார்த்தார்கள். அந்த அரசர்கள் அவ்விடத்தில் ஸுவர்ணமயமான வெளிவாயில்களையும் படுக்கைகளையும் ஆஸனங்களையும் விளையாடுமிடங்களையும் மிகுதி

யான ரத்தினக்குவியல்களையும் [1]குடங்களையும் [2]பாத்திரிகளையும் [3]கடாஹங்களையும் [4]கலசங்களையும் [5] வர்த்தமானகங்களையும் பார்த்தார்கள்; ஒன்றையாவது ஸுவர்ணத்தால் செய்யப்படாததாகக் காணவில்லை. பிரபுவே! அந்த அரசர்கள் அவ்விடத்தில் சாஸ்திரத்தில் சொல்லிய வண்ணம் மரங்களாற்செய்து ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டுக் காலந்தவறாமல் விதிப்படி அமைக்கப்பட்ட மிக்ககாந்தியுள்ள யூபங்களையும் கொண்டுவரப்பட்டிருக்கும் நீரிலும் நிலத்திலுமுள்ள எல்லாப் [6]பசுக்களையும் பார்த்தார்கள். அவர்கள் பசுக்களையும் எருமைகளையும் வயதுசென்ற ஸ்திரீகளையும் ஜலஜந்துக்களையும் துஷ்டமிருகங்களையும் பக்ஷிகளையும் ஜராயுஜங்களையும் அண்டஜங்களையும் ஸ்வேதஜங்களையும் உத்பிஜ்ஜங்களையும் மலையிலும் ஜலக்கரையிலுமுண்டான பிராணிகளையும் பார்த்தார்கள். அரசர்கள் இவ்விதம் பசுக்களாலும் கோக்களாலும் தனங்களாலும்தான்யங்களாலும் மிக்க ஸந்தோஷமுள்ள யாகசாலையை முழுமையும் பார்த்து மிக்க ஆச்சரியமடைந்தார்கள். அவ்விடத்தில் பிராம்மணர்களுக்கும் வைசியர்களுக்கும் பலவிதமான போஜ்யத்தையும் எல்லாம் நிறைந்ததும் ருசியுள்ளதுமான அன்னத்தையும் அதிகமாக எப்பொழுதும் கொடுத்தார்கள். அந்த யாகத்தில் லக்ஷம் பிராம்மணர்கள் போஜனம் செய்தவுடன், மேகம்போல ஒலிக்கும் துந்துபியானது அடிக்கடிமுழக்கப்பட்டது. ஒவ்வொருநாளும் சென்றதும், (அந்தத்துந்துபியானது) இடைவிடாமல் சப்தித்தது. புத்தியுள்ளவரான தர்மராஜருடைய அந்த யாகமானது இவ்விதம் நடந்தது. அரசரே! ஜனங்கள் மலைபோன்ற அழகான அநேகம் அன்னக்குவியல்களையும் தயிர்வாய்க்கால்களையும் நெய்ம்மடுக்களையும் பார்த்தார்கள். வேந்தரே! பலதேசங்களடங்கின ஜம்பூத்வீபமானது முழுவதும் அந்த அரசருடைய மஹாயாகத்தில் ஒரே இடத்திலிருப்பதாகக் காணப்பட்டது. பாதர்களுள் சிறந்தவரே! அந்த யாகத்திற்குப் பல்லாயிரம் ஜாதி மனிதர்கள் தனத்தை எடுத்துக்கொண்டு அந்த அந்தத் தேசங்களிலிருந்தும் வந்தார்கள். பிறகு, புஷ்பமாலையணிந்தவர்களும் மிக்க சுத்தமான ரத்தின குண்டலங்களுள்ளவர்களுமான அவர்களெல்லாரும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவுமுள்ள பிராம்மணர்களுக்குப் பரிமாறினார்கள். வேலைக்காரர்களான மனிதர்கள் அரசர்கள் புஜிக்கக்கூடிய பலவிதமான அன்னங்களையும் பானங்களையும் பிராம்மணர்களுக்குக் கொடுத்தார்கள்.

---

1, 2, 3, 4, 5 பாத்திரங்களின் வகைகள்.

6 ஹோமத்துக்காகக் கொண்டுவரப்பட்ட பிராணிகள்.

## எண்பத்தேழாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(கோவிந்தர், பலராமர்முதலியவர்களுடன் ஹஸ்தினபுரம் வந்ததும், அர்ஜுனன் யாகத்துக்குவரும் பல அரசர்களுக்கும் பப்ரு வாகனனுக்கும் மரியாதை செய்வதைப்பற்றி யுதிஷ்டிரருக்குச் சொல்லியனுப்பியதும்.)**

யுதிஷ்டிரராஜர், வேதத்தை அறிந்தவர்களும் பூமிக்கு அதிபதிகளுமான அரசர்கள் வந்ததைக்கண்டு பீமஸேனனை நோக்கி, 'புருஷ ஶ்ரேஷ்டர்களான மன்னர்கள் வந்திருக்கிறார்கள். இவர்களுக்குப் பூஜையைச்செய். அரசர்கள் பூஜிக்கத்தக்கவர்களல்லரோ ?' என்று சொன்னார். புகழ்பெற்ற யுதிஷ்டிரராஜரால் இவ்வாறு சொல்லப்பட்டவனும் மிக்க தேஜஸுள்ளவனும் பாண்டுகுமாரனுமான அந்தப் பீமஸேனன், நகுல ஸஹதேவர்களுடன் அவ்விதமே செய்தான். பிறகு, எல்லாப்பிராணிகளுள்ளும் சிறந்தவரான கோவிந்தர்பலராமரை முன்னிட்டுக்கொண்டு விருஷ்ணிகளுடனும் யுயுதானனுடனும் பிரத்யும்னனுடனும் கதனுடனும் நிசடனுடனும் ஸாம்பனுடனும் கிருதவர்மாவுடனும் யுதிஷ்டிரரிடம் வந்தார். மஹாரதனான பீமஸேனன் அவர்களுக்கும் சிறந்த பூஜையைச் செய்தான். அவர்களும் முழுதும் ரத்தினங்களிழைத்த வீடுகளில் பிரவேசித்தார்கள். மதுஸூதனர் யுதிஷ்டிரரிடத்தில் பேசிக்கொண்டிருந்து, முடிவில் அர்ஜுனன் அனேக யுத்தங்களைச் செய்து சிரமமடைந்திருப்பதாகச் சொன்னார். குந்தியின் புத்திரரான அந்தத்தர்மபுத்திரர் பகைவரை அடக்குபவரான அந்தக் கோவிந்தரைப் பார்த்து இந்திர குமாரனான அர்ஜுனனைப் பற்றி அடிக்கடி வினவ, உலகங்களுக்குப் பதியான ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லலானார். 'அரசரே! அநேகம் யுத்தங்களால் வாட்டமுற்றவனும் பாண்டவஶ்ரேஷ்டனுமான அர்ஜுனனைப் பார்த்தவனும் துவாரகையில் வஸிப்பவனும் மிக்க ஆப்தனுமான ஒருமனிதன் வந்தான். பிரபுவே! அவன் என்னிடத்தில் சிறந்தகைகளுள்ள அர்ஜுனன் அருகில் வருவதாகச் சொன்னான். குந்தியின் புத்திரரே! அஶ்வமேதகாரியம் நிறைவேறவேண்டிய காரியங்களைச் செய்யும், என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லக்கேட்ட தர்மராஜரான யுதிஷ்டிரர் அந்தக் கோவிந்தரை நோக்கி, 'மாதவரே! அர்ஜுனன் பாக்கியத்தால் க்ஷேமமாக வருகிறான். யதுநந்தனரே! பாண்டவரின் படைமுனையில் செல்

பவனான அவன் அந்த மனிதனிடத்தில் சொல்லியனுப்பியதை இப்பொழுது நீர் சொல்லவேண்டுமென்று விரும்புகிறேன்' என்று மறுமொழிகூறினர். தர்மராஜரால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் விருஷ்ணிகளுக்கும் அந்தகர்களுக்கும்பிரபுவும்பேசுந்திறமையுள்ளவருமான மாதவர் அப்பொழுது தர்மாத்மாவான அந்த யுதிஷ்டிரரை நோக்கிப் பின்வரும் வார்த்தையை மறுமொழியாகக்கூறலானார். 'மஹாராஜரே! அந்தமனிதன் என்னை நோக்கிப் பின்வரும் பார்த்தனுடைய வாக்கியத்தைச் சொன்னான். 'கோவிந்தரே! கௌரவத்தை கொடுப்பவரே! யுதிஷ்டிரராஜரிடம் ஸமயத்தில் என்னுடைய இந்த வாக்கியத்தைச்சொல்லவேண்டும். அதாவது, 'கௌரவஶ்ரேஷ்டரே! எல்லா அரசர்களும்வருவார்கள். வந்த பெரியோர்களுக்குப் பூஜைசெய்ய வேண்டும். இதுவே நமக்குத்தகுந்தது' என்னும் இவ்விதமான இந்த வார்த்தையைநான்சொன்னதாக அரசரிடம் தெரிவிக்கவேண்டும். இவ்விதம் செய்தால், (முன்ராஜஸூயத்தில்) பூஜைசெய்யுங்காலத்தில் நேர்ந்ததுபோன்றகெடுதிநேராது. இவ்விதம் அரசர் செய்யவேண்டும். நீரும் அனுமதிகொடுக்கவேவண்டும். அரசரே! இந்த ஜனங்கள்மறுபடியும் அரசர்களுடைய விரோதத்தால் அழிய வேண்டாம்' என்றும் சொல்ல வேண்டும்' என்பது. வேந்தரே! குந்தியின் மைந்தரே! அந்த மனிதன் அர்ஜுனனுடைய இந்தவார்த்தையை (ச்சொல்லி) வேறொரு வார்த்தையும் சொன்னான். அதனையும் நான்சொல்லுகிறேன். கேளும். அதாவது, 'பிரபுவே! [1]மணலூரபுரத்திற்குத் தலைவனும் என்னுடைய பிரியனான புத்திரனும் மிக்க தேஜஸுள்ளவனுமான பப்ருவாஹனனென்னும் அரசன் நம்முடைய யாகத்திற்குவருவான். அவனே என்னிடத்தில் எப்பொழுதும் பக்தியும் பிரீதியுமுள்ளவனாக இருக்கிறான். ஆகையால், அவனுக்கு நீர் எனக்காக விதிப்படி மரியாதை செய்ய வேண்டும் என்பது' என்று சொன்னார். தர்மராஜரான யுதிஷ்டிரர் இவ்வாறான இந்த வார்த்தையைக் கேட்டு அந்த அர்ஜுனனுடைய அந்த வாக்கியத்தைப் புகழ்ந்து பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்.

---

1 வடதேசத்துப்பதிப்பிலும் மணலூரபுரம் என்றே இருக்கிறது.

## எண்பத்தெட்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(யுதிஷ்டிரர் மற்றநால்வரைவிட அர்ஜுனனுக்கு மிக்க அலைச்சல் முதலியன வரும்படி அவனுடம்பில் என்ன லக்ஷணக்குறையிருக்கிறதென்று கேட்க, கோவிந்தர் அதனைக் கூறியதும், அர்ஜுனன் குதிரை யுடன் திரும்பி வந்ததும்.)**

யுதிஷ்டிரர் 'க்ருஷ்ண! பிரியமான இந்த வார்த்தையைக் கேட்டேன். இதனைச் சொல்வதற்கு நீரே தகுந்தவர். பிரபுவே! அமிருதம் போலச் சுவையுள்ளதும் புண்ணியமுமான அது என் மனத்தைக் களிக்கச் செய்கிறது. ஹ்ருஷீகேசரே! அர்ஜுனனுக்கு ஆங்காங்கு மன்னர்களுடன் மறுபடியும் அனேகம் யுத்தங்கள் நடந்தனவென்று நான் கேள்வியுற்றேன். மிக்க புத்தியுள்ளவனும் குந்தியின் புத்திரனுமான அந்த அர்ஜுனன் என்ன காரணத்தால் எப்பொழுதும் ஸுகமில்லாமலிருக்கிறான் என்று என்னுடைய மனம் வருந்துகிறது. ஜனார்த்தனரே! குந்தியின் புத்திரனான அர்ஜுனனைப்பற்றி ஏகாந்தத்தில் ஆலோசிக்கிறேன். பாண்டுவின் குமாரனான அவன் எப்பொழுதும் மிக்க துக்கத்தை அடைகிறான். க்ருஷ்ண! எல்லா லக்ஷணங்களாலும் கொண்டாடப்பட்ட அவனுடைய சரீரத்தில் (இவ்விதம்) துக்கங்களை அனுபவிக்கும்படி என்ன கெட்ட லக்ஷணமிருக்கிறது? குந்தியின் புத்திரனான அந்த அர்ஜுனன் எப்பொழுதும் மிக்க துக்கங்களை அனுபவிக்கிறான். அர்ஜுனனுடைய சரீரத்தில் (அப்படிப்பட்ட) கெட்ட லக்ஷணத்தைச் சிறிதும் நான் காணவில்லை. நான் கேட்கக்கூடுமானால், எனக்கு நீர் இதனை விரித்துரைக்கவேண்டும்' என்று வினவினார்.

இவ்விதம் வினவப்பட்டவரும் ஹ்ருஷீகேசரும் போஜராஜ குமாரர்களை வ்ருத்தி செய்கின்றவரும் விஷ்ணுவுமான அந்த வாஸுதேவர் நெடுநேரம் தியானித்து யுதிஷ்டிரராஜரை நோக்கி, 'அரசரே! புருஷஶ்ரேஷ்டனான இந்த அர்ஜுனனுக்குப் [1]பிண்டிகைகள் அதிகமாக இருக்கின்றன. இதைத் தவிர இவனிடத்தில் வேறு ஒரு கெட்ட லக்ஷணத்தையும் நான் காணவில்லை. புருஷஶ்ரேஷ்டனான அவன் எப்பொழுதும் மார்க்கங்களில் இருக்கிறான். அவன் துக்கத்தை அனுபவிக்கக்கூடிய வேறு லக்ஷணத்தை நான் காணவில்லை' என்று சொன்

---

1 முழங்காலுக்குக்கீழ் பின்புறமாக உள்ள சதை.

ஞர். புத்தியுள்ள வாஸுதேவரால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் புருஷஸ்ரேஷ்டருமான யுதிஷ்டிரர் அப்பொழுது விருஷ்ணிகளுள் சிற ந்தவரான கேசவரை நோக்கி, 'பிரபுவே! இது இவ்விதமே' என்று சொன்ஞர். துருபதன் மகளான கிருஷ்ணையோ அஸூயையுடன் கிருஷ் ணனைக் குறுக்காகப்பார்த்தாள். கேசியைக் கொன்றவரும் நண்பரும் தனஞ்சயனைபோன்றவருமான ஹ்ருஷீகேசரும் தோழனை அர்ஜுன னிடத்தில் அவளுக்குள்ள அந்தப் பிரீதியை ஏற்றுக்கொண்டார். அப்பொழுது, பீமன்முதலான அந்தக் கௌரவர்களும் ரித்விக்குக் களும் விசித்திரமாகவும் சுபமாகவுமுள்ள தனஞ்சயனுடைய அந்தக் கதையைக் கேட்டு ஸந்தோஷித்தார்கள். அவர்கள் அர்ஜுனனுடைய நல்ல கதைகளைச்சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே, மஹாத்மா வான அர்ஜுனனுடைய உத்தரவினுல் தூதனை ஆள் வந்தான். புத்தி யுள்ளவனை அவன் எதிரில் வந்து கௌரவஸ்ரேஷ்டரான யுதிஷ்டிர ரைநமஸ்கரித்துப் புருஷஸ்ரேஷ்டனை அர்ஜுனன்வந்துவிட்டதாகத் தெரிவித்தான். அரசர் அவனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு ஸந்தோஷத்தாலுண்டான கண்ணீர் நிறைந்த கண்களுள்ளவராகி அப்பொழுது பிரியத்தைச் சொன்னதற்காக அவனுக்கு மிகுதியான தனத்தைக் கொடுத்தார். பிறகு, இரண்டாவது தினத்தில் புருஷ ஸ்ரேஷ்டனும் கௌரவர்களுள் தலைவனுமான அர்ஜுனன் வரும் பொழுது பெரிய ஒலியானது மிகுதியடைந்தது. பிறகு, அருகில் வரு கின்றதும் உச்சைஸ்ரவத்துக்கு ஒப்பானதுமான அந்தக் குதிரை யின் உயரக்கிளம்பினதூளியானது விளங்கிற்று. அப்பொழுது, அர் ஜுனன் ஸந்தோஷத்தை உண்டுபண்ணக் கூடிய மனிதர்களின் வார்த் தைகளைக் கேட்டான். அவையாவன: 'பார்த்த! நீ தெய்வச் செயலால் க்ஷேமமுள்ளவனாக இருக்கிருய். யுதிஷ்டிரராஜர் தன்யர். அர்ஜுன னைத்தவிர வேறு எவன்தான் யுத்தத்தில் மன்னர்களை வென்று பூமிமுழுவதும் உத்தமமான குதிரையை ஸஞ்சரிக்கும்படி செய்து திரும்பிவருவான்? முன்னிருந்த ஸகரர்முதலான மஹாத்மாக்களான மன்னர்களும் இவ்விதமான காரியத்தைச் செய்ததாக நாம் ஒரு பொழுதும கேள்வியுற்றதில்லை. குருகுலஸ்ரேஷ்டனே! நீ (பிறரால்) செய்வதற்கரிய எந்தக்காரியத்தைச் செய்தாயோ அந்தக் காரியத்தை இனி ஜனிக்கும் மற்றமன்னர்களும் செய்யப்போகிறதில்லை' என்பன. தர்மாத்மாவான தனஞ்சயன், இவ்விதம் சொல்லுகின்ற அந்த மனி தர்களுடைய செவிக்கினிமையான வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு யாகசாலையில் பிரவேசித்தான். பிறகு, மந்திரிகளுடன்கூடின யுதிஷ்

டிரராஜரும் யதுநந்தனரான மாதவரும் அப்பொழுது திருதராஷ்டிரனை முன்னிட்டுக்கொண்டு அந்த அர்ஜுனனை எதிர்கொண்டு சென்றனர். அந்த அர்ஜுனன் பிதாவான திருதராஷ்டிரன் புத்திமானான தர்மராஜர் இவர்களுடைய பாதங்களில் நமஸ்கரித்துப் பீமன் முதலானவர்களை நன்கு பூஜித்துக் கேசவரைத் தழுவினன். பிறகு, சிறந்த கைவன்மையுள்ள அர்ஜுனன், அவர்களுடன் சேர்ந்து (அவர்களால்) பூஜிக்கப்பட்டு அவர்களையும் விதிப்படி பூஜித்து, அக்கரைக்குச் செல்லுகிறவன் அக்கரையை அடைந்தாற் போல, களைப்பாறினன்.

## எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(பப்ருவாஹனன் தாய்மாருடன் யாகத்துக்கு வந்ததும், வியாஸர் கட்டளைப்படி தர்மபுத்திரர் அச்வமேதம் தொடங்கியதும்.)**

இந்த ஸமயத்திலேயே, புத்திமானன பப்ருவாஹனனென்னும் அந்த அரசன், இரண்டு தாயார்களுடனும் குருதேசம் வந்தான். சிறந்த புஜபலமுள்ளவனை அவன் அவ்விடத்தில் பிராயம்முதிர்ந்தவர்களான கௌரவர்களையும் மற்றமன்னர்களையும் விதிப்படி நமஸ்கரித்து அவர்களாலும் கொண்டாடப்பட்டுப் பிதாமஹியான குந்தியினுடைய உத்தமமானவீட்டுக்குச் சென்றான். நீண்ட கைகளுள்ள அவன் பாண்டவர்களுடையவீட்டிற்குள் சென்று மிக்க அழகான நன்மொழியுடன் தன் பாட்டியை நமஸ்கரித்தான். அவ்வாறே, தேவியான சித்ராங்கதையும் கௌரவ்யனென்னும் ஸர்ப்பராஜனுடைய பெண்ணான உலூபியும் சேர்ந்து குந்தியையும் திரௌபதியையும் வணக்கத்துடன் நெருங்கினார்கள். ஸுபத்திரையையும் மற்றுமுள்ள கௌரவஸ்திரீகளையும் முறைப்படி சந்தித்தார்கள். பிறகு, குந்தியும் திரௌபதியும் ஸுபத்திரையும் மற்றயாதவஸ்திரீகளும் அவ்விருவர்களுக்கும் பலவிதமான ரத்தினங்களைக் கொடுத்தார்கள். அவ்விரண்டு தேவிகளும் அவ்விடத்தில் அர்ஜுனனுக்கு நன்மையை விரும்பிக் குந்தியினல் நேரில் நன்கு பூஜிக்கப்பட்டு, மிகச் சிறந்த சயனமும் ஆஸனமுமுள்ளவர்களாக வாஸம் செய்தார்கள். மிக்க தேஜஸுள்ளவனும் பூஜிக்கப்பட்டவனுமான அந்தப் பப்ருவாஹனனென்னும் அரசனும் விதிப்படி திருதராஷ்டிரராஜனை அருகிற் சென்று வணங்கினன். மிக்க தேஜஸுள்ள

அவன் யுதிஷ்டிரராஜரையும்(மற்றப்)பீமன் முதலான பாண்டவர்களை யும் வணக்கத்துடன் அருகில் சென்று நமஸ்கரித்தான். மஹாரதர் களான அவர்களும் அவனைப் பிரியத்துடன் தழுவி விதிப்படி பூஜி த்து அவனுக்கு ஸந்தோஷத்துடன் அதிகமான தனத்தையும் கொடு த்தார்கள். அவ்வாறே, அந்த அரசன், சக்கரத்தையும் கதாயுதத்தை யும் தரிப்பவரும் கருமை நிறமுள்ளவருமான கோவிந்தரிடம் பிரத் யும்னன்போல வணக்கத்துடன் சென்றான். வாஸுதேவர் அந்த அர சனுக்கு மஹான்களுக்கேற்றதும் மிகவும் கொண்டாடப்பட்டதும் ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதும் சிறந்த குதிரைகள் பூட்டிய தும் உத்தமமுமான ரதத்தைக் கொடுத்தார். அவ்வாறே,அந்தத் தர்ம ராஜரும் பீமனும் அர்ஜுனனும் நகுல ஸஹதேவர்களும் தனித்தனி யாக அந்தப் பப்ருவாஹனனைக் கௌரவித்துப்பொருளையும் கொடுத் தார்கள். பிறகு, மூன்றாவது தினத்தில் ஸத்யவதியின் புத்திரரும் பேசும் திறமையுள்ளவருமான வ்யாஸமுனிவர் யுதிஷ்டிரரிடம் வந்து பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்.

'குந்தியின் குமாரனே! இன்று முதல் உனக்கு யாகத்திற்குக் காலமல்லவா? யாகத்திற்குரிய முகூர்த்தம் வந்து விட்டது. யாகம் செய்விப்பவர்கள் இப்பொழுது தூண்டுகிறார்கள். ராஜச்ரேஷ் டனே! [1]விகல்பமுள்ளதான உன்னுடைய இந்த யாகமானது [2]அஹீ னமென்னப் படுகிறது. இதற்குப் பஹுவான ஸுவர்ணம் வேண்டி யிருப்பதால் பஹுஸுவர்ணகமென்று பிரஸித்தி பெற்றது. மஹா ராஜனே! (இப்பொழுது இந்த யாகத்தை) இவ்விதம்தக்ஷிணைகளால் மேலானதாகச் செய். லக்ஷ்மி உன்னை அடையட்டும். வேந்தே! உன க்கு இது விஷயத்தில் பிராம்மணர்களன்றோ காரணம்? அரசனே! நீ இப்பொழுது மிகுதியான தக்ஷிணையுள்ள மூன்று அஸ்வமேதங்களை முடிவு பெறச்செய்து ஞாதிகளுடைய வதத்தாலுண்டான பாபத் தை விடுவாய். குருநந்தன! அஸ்வமேதம் செய்து அவபிருதத்தை அடையப்போகிறாய் என்னும் அது மிக்க பரிசுத்தமானது; பாவனங் களுக்கும் பாவனமானது' என்று சொன்னார். அளவற்ற புத்தியுள்ள வியாஸரால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் காந்தியுள்ளவரும் தர் மாத்மாவுமான அந்த யுதிஷ்டிரரோ, பிறகு அஸ்வமேதத்தைச் செய் வதற்காகத் தீக்ஷை செய்துகொண்டார். பிறகு, மிக்க புஜபலமுள்ள

---

1 பலவிதமாயுள்ள

2 அநேகம் ஸோமயாகங்கள் சேர்ந்தது; அல்லது, திரவியமுதலியவற்றால் குறைவற்றது' என்பது பழைய உரை.

யுதிஷ்டிரராஜர், மிகுதியான அன்னமும் தக்ஷிணையுமுள்ளதும் விரும்பின எல்லாப் பதார்த்தங்களும் நிறைந்ததும் மஹாக்ரதுவுமான அச்வமேதமென்னும் யாகத்தைச் செய்தார். அரசரே! அந்த யாகத்தில் வேதத்தை அறிந்தவர்களான ரித்விக்குக்கள் கர்மங்களைச் செய்தார்கள். உள்ளபடி, சாஸ்திரங்களை அறிந்த பிராம்மணஶ்ரேஷ்டர்கள் ஸஞ்சரித்தார்கள். அவர்களுக்குத் தவறுதலும் ஹோமத்தின்மாறுதலும் சிறிதும் உண்டாகவில்லை. அதில் பிராம்மணஶ்ரேஷ்டர்கள் முறைப்படியுள்ளதும் தகுந்ததுமான கர்மாவைச் செய்தார்கள். மன்னரே! தர்மத்தை அறிந்த பிராம்மணஶ்ரேஷ்டர்கள் [1]ப்ரவர்க்யம் என்னும் கர்மத்தை விதிப்படி செய்தார்கள். அந்தப் பிராம்மணர்கள் அவ்வாறே [2]அபிஷவம் என்னும் கர்மாவையும் விதிப்படி செய்தார்கள். அரசரே! பிறகு, ஸோமபானம் செய்தவர்களுள் மிகச் சிறந்தவர்களும் சாஸ்திரத்தை அனுஸரித்தவர்களுமான அவர்கள் ஸோமரஸத்தைப் பிழிந்து வரிசையாக [3]ஸவனங்களைச் செய்தார்கள். அந்த யாகத்தில் கிருபணனும் ஏழையும் பசியுள்ளவனும் துக்கமுள்ளவனும் மூடனுமான மனிதன் ஒருவனுமில்லை. பகைவரைக் கொல்பவனும் மிக்க தேஜஸுள்ளவனுமான பீமஸேனன் யுதிஷ்டிரராஜருடைய கட்டளையினால் எப்பொழுதும் போஜனத்தை விரும்பினவர்களுக்குப் போஜனத்தைக் கொடுக்கும்படி செய்தான். செங்கற்களால் [4]சயனத்தைச் செய்வதில் தேர்ச்சி பெற்ற ரித்விக்குக்கள் ஒவ்வொரு நாளும் சாஸ்திரத்தில் கண்டபடி எல்லாக்காரியங்களையும் செய்தார்கள். புத்திமானான அந்தத் தர்மபுத்திரருடைய அந்த யாகத்தில் ஆறு அங்கங்களையும் அறியாதவனும் விரதமற்றவனும் உபாத்யாயனாக இராதவனும் வாதம் செய்வதில் பாண்டித்யமில்லாதவனும் ஸதஸ்யனாக இருக்கவில்லை. பரதஶ்ரேஷ்டரே! பிறகு, கௌரவராஜரான யுதிஷ்டிரருடைய யாகத்தில் யூபங்கள் நாட்ட வேண்டிய ஸமயம் வந்தபோது, ரித்விக்குக்கள் ஆறு பில்வயூபங்களையும் பில்வயூபத்திற்கொப்பான ஆறுகருங்காலி யூபங்களையும் ஆறு பலாசயூபங்களையும் இரண்டு தேவதாருயூபங்களையும் ஒரு ஶ்லேஷ்மாதகயூபத்தையும் நன்கு அமைத்தார்கள். இவைகளையெல்லாம், ரித்விக்குக்கள் சாஸ்திரப்படி செய்வித்தார்கள். பரதஶ்ரேஷ்டரே! அந்தப் பீமஸேனன் தர்மராஜருடைய உத்தரவினால் அழகுக்காக

---

1 ஸோம யாகத்தில் முதலில் செய்யப்படும் ஹோமம்.

2 'ஸோமலதையை இடிப்பது' என்பது பழைய உரை.

3 ஹோமங்களின் வகைகள். 4 கட்டுதல்.

ஸுவர்ணமயமான மற்றயூபங்களேயும் செய்வித்தான். ராஜரிஷியே! வஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த யூபங்கள் ஆகாயத்தில் ஸப்தரிஷிகளுடன் மஹேந்திரனைப் பின்தொடர்ந்த தேவர்கள்போல விளங்கின. பிரபுவே! அந்த யாகத்தில் சயனத்திற்காகக் கற்கள் ஸுவர்ணமயமாகச் செய்யப்பட்டன. அந்தச் சயனமும், ஸ்ருஷ்டி கர்த்தாவான தக்ஷனுடைய (சயனம்) போல விளங்கிற்று. அந்த யாகத்திற்கு பதினெட்டு முழம் நீளமுள்ளவைகளும் ஸுவர்ணமய மான இறகுகளுள்ளவைகளும் மூன்று கோணங்களுள்ளவைகளும் கருடன் போன்ற வடிவமுள்ளவைகளுமான நான்கு சயனங்கள் அமைக்கப்பட்டிருந்தன. பிறகு, வித்வான்கள் சாஸ்திரப்படி அந்த அந்தத் தேவதையை உத்தேசித்துப் பறவைகளும் மிருகங்களுமான பசுக்களேக் கட்டினார்கள். அவர்கள் அந்த அக்னிசயமென்னும் கர்மாவில் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட காளேகளும் ஜலத்தில் ஸஞ்சரிப்பவைகளுமான பிராணிகளே யெல்லாம் கட்டினார்கள். மஹாத்மாவும் குந்தியின் புத்திரருமான யுதிஷ்டிரருடைய யாகத்தில் முந்நூறு பசுக்களும் வேறு ஒரு சிறந்த குதிரையும் யூபங்களில் கட்டப்பட்டன. அந்த யுதிஷ்டிரருடைய அந்தயாகமானது, பிரத்யக்ஷமாக வந்திருக்கும் தேவரிஷிகளால் நிறைந்ததும் கந்தர்வர்களுடைய கூட்டங்களால் நிறைந்ததும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களால் விளங்கும்படி செய்யப்பட்டதும் கிம்புருஷர்களால் வியாபிக்கப்பட்டதும் கின்னரர்களால் பிரகாசிக்கும்படி செய்யப்பட்டதும் ஸித்தர்கள் பிராம்மணர்கள் இவர்களுடைய வாஸஸ்தானங்களால் நாற்புறமும் சூழப்பட்டதுமாக விளங்கிற்று. அந்தஸதஸில் பிராம்மணஶ்ரேஷ்டர்களும் எல்லாச் சாஸ்திரங்களேயும் செய்தவர்களும் யாககர்மங்களில் தேர்ச்சி பெற்றவர்களுமான வியாஸருடைய சிஷ்யர்கள் எப்பொழுதும் இருந்தார்கள். அதில், நாரதரும் மிக்க காந்தியுள்ள தும்புருவும் விஶ்வாவஸுவும் சித்ரஸேனனும் கானத்தில் பண்டிதர்களான மற்றவர்களும் இருந்தனர். கானத்தில் ஸமர்த்தர்களும் நர்த்தனங்களில் தேர்ந்தவர்களுமான கந்தர்வர்கள் யாககர்மங்களின் ஒழிவுஸமயங்களில் அந்தப் பிராம்மணர்களே ஸந்தோஷப்படுத்தினார்கள்.

---

## தொண்ணூறாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் யாகம் முடிந்தபின் அரசர்களுக்கு மரியாதைசெய்து ஊருக்கனுப்பியது.)

பிராம்மணஸ்ரேஷ்டர்கள் விதிப்படி மற்றப்பசுக்களைப் பசனம்செய்து பின்பு அவர்கள் சாஸ்திரப்படி அந்தக் குதிரையைக் கொன்றார்கள். அரசரே! சிறந்தரித்விக்குக்கள் விதிப்படி குதிரையைக்கொன்றுவிட்டுப் பிறகு (மந்த்ரம் திரவ்யம் சிரத்தை என்னும்) மூன்று கலைகளுடன் கூடினவளும் நல்லசித்தமுள்ளவளுமான அந்தத் திரௌபதியை விதிப்படி அதனருகில் உட்காரச்செய்தார்கள். பரதர்களுள் சிறந்தவரே! பிராம்மணஸ்ரேஷ்டர்கள் சாஸ்திரப்படி அக்குதிரையின் வபையையெடுத்து வேறிடத்து மனம்செல்லாதவர்களாக விதிப்படி பக்குவம் செய்தார்கள். அப்பொழுது, தர்மராஜர் தம்பிகளுடன் எல்லாப் பாபங்களையும் போக்கக்கூடிய அந்த வபையினுடைய புகையின் வாஸனையைச் சாஸ்திரப்படி மோந்தார். வேந்தரே! அந்தக் குதிரையின் மிச்சமுள்ள அவயவங்களைப் பண்டிதர்களான பதினாறு ரித்விக்குக்களும் ஒன்றுசேர்ந்து அக்னியில் ஹோமம் செய்தார்கள். சிஷ்யர்களுடன்கூடின வியாஸபகவான் இந்திரனுடைய காந்திபோன்ற காந்தியுள்ளவரான அந்த யுதிஷ்டிரராஜருடைய அந்தயாகத்தை இவ்விதம் நிறைவேற்றி அந்த அரசரை மேன்மைப்படுத்தினார். பிறகு, யுதிஷ்டிரர் விதிப்படி ஸதஸ்யர்களுக்கு ஆயிரம் கோடி நிஷ்கங்களையும் [1]வியாஸருக்கும் மற்ற ரித்விக்குக்களுக்கும் பூமியையும் கொடுத்தார். அரசரே! ஸத்யவதியின் புத்திரரான வியாஸர் பூமியைப் பெற்றுக்கொண்டு பரதஸ்ரேஷ்டரும் தர்மராஜருமான யுதிஷ்டிரரை நோக்கி, 'ராஜஸ்ரேஷ்டனே! இந்தப் பூமியை உனக்குக் கொடுத்தேன். இதற்குள்ள விலையை எனக்குக் கொடு. பிராம்மணர்கள் தனத்தில் விருப்பமுள்ளவர்களல்லரோ?' என்று சொன்னார். சிறந்தமனமுள்ளவரும் புத்தியுள்ளவருமான யுதிஷ்டிரரோ ஸஹோதரர்களுடன் சேர்ந்து மஹாத்மாக்களான மன்னர்களுடைய நடுவில் அந்தப் பிராம்மணர்களை நோக்கி, 'பிராம்மணஸ்ரேஷ்டர்களே! அஸ்வமேதமென்னும் பெரியயாகத்திற்குப் பூமியானது தக்ஷிணையாகக் கருதப்பட்டிருக்கிறது. அர்ஜுனனால் ஜயிக்

1 "வ்யாஸாயது"என்பதுமூலம்; 'து என்றமையால் மற்றரித்விக்குக்களுக்கும்' 'என்று சேர்த்துக் கொள்ளுக வென்பது' பழையவுரை.

கப்பட்ட இந்தப் பூமியை நான் ரித்விக்குக்களுக்குக் கொடுத்தேன். நான் காட்டுக்குப் போகிறேன். நீங்கள் இந்தப் பூமியைப் பிரித்துக்கொள்ளுங்கள். ஹோதாக்கள் நால்வரென்னும் கணக்கை அனுஸரித்துப் பூமியை நாலுபாகமாகச் செய்துகொள்ளுங்கள். பிராம்மணஶ்ரேஷ்டர்களே! பிராம்மணர்களுடைய பொருளைப் பெற்றுக் கொள்ள எனக்கு இஷ்டமில்லை. பிராம்மணர்களே! எனக்கும் என் ஸஹோதரர்களுக்கும் இது எப்பொழுதுமுள்ள அபிப்ராயம் என்று மறுமொழி கூறினார். அந்தயுதிஷ்டிரர் இவ்விதம் சொன்னவுடன், (அவருடைய ஸஹோதரர்களும் அந்தத் திரௌபதியும் 'இது இவ்விதமே' என்று சொன்னார்கள். அது மயிர்க்கூச்சத்தை உண்டு பண்ணுவதாயிற்று. பாரதரே! பிறகு, ஆகாயத்தில், 'நல்லது, நல்லது' என்கிற வாக்கு உண்டாயிற்று. அவ்வாறே, புகழ்கின்ற பிராம்மணக் கூட்டங்களுடைய சப்தமானது மிகவிளங்கிற்று. கிருஷ்ணரென்னும் வியாஸமுனிவர் மறுபடியும் பிராம்மணர்களின் நடுவில் யுதிஷ்டிரரை நன்கு கொண்டாடிப் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானார். 'நீ இந்தப் பூமியை எனக்குக் கொடுத்தாய். இதனை நான் உனக்குத் திருப்பிக் கொடுக்கிறேன். இந்தப் பிராம்மணர்களுக்கு ஸுவர்ணத்தைக் கொடு. பூமி உனக்கு இருக்கட்டும்' என்று சொன்னார். பிறகு, வாஸுதேவர் தர்மராஜரான யுதிஷ்டிரரை நோக்கி, 'வியாஸபகவான் சொல்லுகிறபடி நீர் செய்யவேண்டும்' என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லப்பட்டவரும் கௌரவஶ்ரேஷ்டருமான அந்த யுதிஷ்டிரர், ஸஹோதரர்களுடன் மனமகிழ்ச்சியுள்ளவராகி மூன்று மடங்குள்ளதாகச் செய்யப்பட்ட கோடிக் கணக்கான பசுக்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தார். மருத்தனுக்கு ஒப்பானவரும் கௌரவராஜருமான யுதிஷ்டிரர் எந்தக்காரியத்தைச் செய்தாரோ அதை உலகத்தில் வேறோரரசனும் செய்யப்போகிறதில்லை. வித்வானான வியாஸமுனிவரோ அந்தத்தனத்தைப் பெற்றுக்கொண்டு ரித்விக்குக்களுக்குக் கொடுத்தார். அவர்கள் அதனை நான்கு பாகமாகப் பிரித்துக்கொண்டார்கள். யுதிஷ்டிரர் அந்த ஸுவர்ணத்தைப் பூமிக்கு விலையாகக் கொடுத்துப் பாவம் விலகியவரும் ஸுவர்க்கத்தை ஜயித்தவருமாகி ஸஹோதரர்களுடன் ஸந்தோஷித்தார். ரித்விக்குக்கள் அளவற்ற அந்தப்பொற்குவியலை அவ்வாறே மனக்களிப்புடன் ஸுகமாகப் பிராம்மணர்களுக்குப் பிரித்துக்கொடுத்தனர். பிராம்மணர்கள் யுதிஷ்டிரரால் அனுமதி கொடுக்கப்பட்டு யாகசாலையிலுள்ள ஸுவர்ணம் ஆபரணங்கள் தோரணங்கள் யூபங்கள் குடங்கள் கற்கள் ஆகிய எல்லா

வற்றையும் பிரித்துக்கொண்டார்கள். பிராம்மணர்களுக்குப் பிறகு (மிச்சமுள்ள) தனத்தை க்ஷத்திரியர்களும் வைசியர்களுடைய கூட்டங்களும் சூத்திரர்களுடைய கூட்டங்களும் மற்றுமுள்ள மிலேச்ச ஜாதிகளும் எடுத்துக்கொண்டார்கள். அந்த அந்த இடத்திலிருந்து அந்த ஸுவர்ணத்தை (எல்லாரும்) வெகுநாள் எடுத்துக்கொண்டிருந்தார்கள். பிறகு, புத்திமானான தர்மராஜரால் அந்தத் தனத்தால் திருப்தியுள்ளவர்களாகச் செய்யப்பட்ட அந்தப் பிராம்மணர்களெல்லாரும் ஸந்தோஷத்துடன் (தம்முடைய) வீடுகளுக்குச் சென்றார்கள். மிக்க காந்தியுள்ள வியாஸபகவான், அதிகமான அந்த ஸுவர்ணத்தில் தமக்குக் கிடைத்த பாகத்தை(த் தம்) பாதங்களில் நமஸ்காரம் செய்த குந்திக்குக் கொடுத்தார். அந்தக் குந்தியானவள், மாமனார் பிரியத்துடன் கொடுத்த அந்தப்பொருளைப் பெற்று மனமகிழ்ச்சியுற்று அந்தத் தனத்தால் மிகப் பெரிய புண்ணிய காரியத்தை அதிகமாகச் செய்தாள். ராஜாவான யுதிஷ்டிரர், அவபிருதம் செய்து பாபமற்றவராகி (எல்லாராலும்) பூஜிக்கப்பெற்று, தேவர்களுடன் மஹேந்திரன் விளங்குவதுபோல ஸஹோதரர்களுடன் விளங்கினார். மஹாராஜரே! ஒன்று சேர்ந்த மன்னர்களால் சூழப்பட்ட பாண்டவர்கள் நக்ஷத்ரகணங்களால் சூழப்பட்ட க்ரஹங்கள் போல விளங்கினார்கள். பிறகு, யுதிஷ்டிரர் அரசர்களுக்கும் பலவிதமான ரத்தினங்களையும் யானைகளையும் குதிரைகளையும் அலங்காரங்களையும் ஸ்திரீகளையும் வஸ்திரங்களையும் ஸுவர்ணத்தையும் கொடுத்தார். அரசரே! அளவற்ற அந்தத் தனக்குவியலை மன்னர்களுடைய ஸமூகத்திற்குக் கொடுக்கும் குந்திகுமாரரான யுதிஷ்டிரர் குபேரன்போல விளங்கினார். அப்பொழுது, யுதிஷ்டிரர் வீரனான பப்ருவாஹனனென்னும் அரசனை வரவழைத்து மிகுதியான தனத்தைக் கொடுத்து (அவனுடைய) வீட்டுக்கு அனுப்பினார். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, புத்தியுள்ளவரான யுதிஷ்டிரர், துச்சலையின் பேரனான அந்தக் குழந்தையை ஸஹோதரியினிடத்திலுள்ள ப்ரீதியினால் அவனுடைய தந்தையின் ராஜ்யத்தில் ஸ்தாபனஞ் செய்தார். இந்திரியங்களை ஜயித்தவரும் குருராஜருமான யுதிஷ்டிரர் அந்த எல்லா அரசர்களையும் தனித்தனியாக நன்கு பூஜித்து அனுப்பினார். மஹாராஜரே! மிக்க காந்தியுள்ளவரும் பகைவரை அடக்குபவருமான யுதிஷ்டிரராஜர் ஸஹோதரர்களுடன் சேர்ந்து மஹாத்மாவான கோவிந்தரையும் மிக்க பலமுள்ள பலதேவரையும் ப்ரத்யும்னனை முதன்மையாகக்கொண்ட ஆயிரக்கணக்கான மற்றுமுள்ள

விருஷ்ணிவீரர்களையும் விதிப்படி பூஜித்து அனுப்பினார். மிகுதியான அன்னம் தனம் ரத்தினம் இவற்றின் குவியலுள்ளதும் [1] ஸுரையும் [2] மைரேயமுமாகிற கடலுள்ளதுமான புத்தியுள்ள தர்மராஜருடைய அந்த யாகமானது இவ்விதம் நடந்தது.

பரதர்களில் சிறந்தவரே! அந்த யாகத்தில் நெய்யாகிறசேறுள்ள மடுக்களும் அன்னமலைகளும் [3]ரஸாலையாகியசேறுள்ளவைகளான நதிகளும் இருந்தன. செய்யப்படுகின்றவைகளும் புஜிக்கப்படுகின்றவைகளுமானபக்ஷ்யம் [4]காண்டவம், [5]ராகம், கொல்லப்படுகின்றபசுக்கள். இவைகளுடைய அளவை ஜனங்கள் காணவில்லை. அப்பொழுது, (அந்த யாகசாலையானது) மதம் கொண்டவர்களும் மெய்ம்மறந்தவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களுமான ஜனங்களுள்ளதும் மிக்க பிரீதியுள்ள யுவதிஜனங்களுள்ளதும் மிருதங்கங்கள் சங்கங்கள் இவற்றின் ஒலிகளால் மனத்திற்கு இன்பமானதுமாக இருந்தது. அந்த யாகத்தில் 'கொடுங்கள்; புஜியுங்கள்; கொடுங்கள்; கொடுங்கள்' என்று பெரிய சப்தமானது இரவும் பகலும் தடையின்றி உண்டாயிற்று. பெரிய உத்ஸவத்திற்கொப்பானதும் மனக்களிப்புற்றுப் பருத்த ஜனங்கள் நிறைந்ததுமான அந்த யாகத்தைப்பற்றிப் பல தேசங்களில் வஸிக்கும் மனிதர்கள் பேசிக்கொண்டார்கள். பரதஸ்ரேஷ்டரான யுதிஷ்டிரர், தனதாரைகளையும் ரத்தினங்களையும் ரஸங்களையும் வேண்டியவரையில் பொழிந்து பாவமற்றவரும் கிருதார்த்தருமாகி, (தம்முடைய) நகரம் சென்றார்' என்று கூறினார்.

---

## தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(விலாப்போன்னிறமாயுள்ள ஒரு கீரி வந்து யாகத்தை நிந்தித்து ஒருபடிமாவின் தானத்தைப் புகழ்ந்தது.)

ஜனமேஜயர், "என்னுடைய பிதாமஹரும் புத்திமானுமாகிய தர்மராஜருடைய யாகத்தில் ஏதாவது ஓர் ஆச்சரியம் நடந்திருந்தால் அதனை நீர் (எனக்குச்) சொல்லவேண்டும்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

---

1 கள். 2. 'விருக்ஷத்திலுண்டான மத்யம்' என்பது பழைய உரை.

3 அநுசாஸன பர்வம் 343-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

4 'திப்பிலியும் சுக்கும் சேர்ந்த பருப்பு ரஸம்' என்பது பழைய உரை.

5 'சர்க்கரை சேர்ந்தபருப்பு ரஸம்' என்பது பழைய உரை.

"ராஜஶ்ரேஷ்டரே ! பிரபுவே ! அஶ்வமேதமென்னும் மஹாயாகமானது முடிவு பெற்றவுடன் நடந்த உத்தமமான பெரிய ஆச்சரியத்தைக் கேளும். பரதர்களிற் சிறந்தவரே! பாரதரே! அக்காலத்தில் பிராம்மணஶ்ரேஷ்டர்களையும் ஞாதிகளையும் ஸம்பந்திகளையும் பந்துக்களையும் தீனர்களையும் குருடர்களையும் திக்கற்றவர்களையும் திருப்தியடையும்படி செய்து பெரியதானம் செய்வதாக எல்லாத்திசைகளிலும்பறையறையச் செய்தபொழுது, தர்மராஜருடைய தலையில் பூமாரிகள் பொழிந்தன. குற்றமற்றவரே! அரசரே! அப்பொழுது, ஸுவர்ணமயமான விலாப்புறமுள்ள ஒரு கீரியானது வளையினின்று வெளியில் வந்து வஜ்ரத்துக்கும் இடிக்கும் ஒப்பான சப்தத்தை வெளியிட்டது. புஷ்பத்தின்மீது படுப்பதும் பெரிதுமான அந்தக் கீரியானது, ஒரு தரம் அவ்வித சப்தத்தை வெளியிட்டு விலங்குகளையும் பறவைகளையும் பயப்படும்படிசெய்து, 'மன்னர்களே ! உங்களுடைய இந்த யாகமானது குருக்ஷேத்திரத்தில் வஸிப்பவரும் [1] உஞ்சவ்ருத்தி செய்பவரும் கொடையாளியுமான ஒரு பிராம்மணர் தானம்செய்த ஒருபடிமாவுக்குச் சமமன்று' என்று மனிதன் பேசுவதுபோலச் சொல்லிற்று. மன்னரே! அந்தக் கீரியின் அந்த வசனத்தைக் கேட்டு அந்த எல்லாப் பிராம்மணஶ்ரேஷ்டர்களும் மிக்க ஆச்சரியமடைந்தார்கள். பிறகு, அந்தப் பிராம்மணர்கள் அருகில் வந்து கீரியை நோக்கி, 'ஸாதுக்கள் சேர்ந்திருக்கும் (இந்த) யாகத்திற்கு நீ எங்கிருந்து வந்தாய்? உனக்கு அதிகமான பலமானது ஏது? நீ என்ன படித்திருக்கிறாய்? எதை ஆதாரமாகக்கொண்டிருக்கிறாய்? எங்களுடைய யாகத்தை நிந்திக்கும் உன்னை நாங்கள் எவ்விதம் தெரிந்துகொள்வோம்? சாஸ்திரம் தவறாமல் யாகத்திற்கு வேண்டிய பலவிதமான பொருள்களைக்கொண்டு எல்லாம் செய்யப்பட்டது. சாஸ்திரத்தையும் நியாயத்தையும் அனுஸரித்துச் செய்யவேண்டியது அவ்வாறே செய்யப்பட்டிருக்கிறது. இந்த யாகத்தில் பூஜிக்கப்படத்தக்கவர்களும் சாஸ்திரத்தை ஆராய்ந்து விதிப்படி பூஜிக்கப்பட்டார்கள். அக்னியில் மந்திரத்துடன் ஆஹுதிகளும் ஹோமமும் செய்யப்பட்டன. கொடுக்கத்தகுந்தனவும் வெறுப்பின்றிக் கொடுக்கப்பட்டன. இந்த யாகத்தில், பலவிதமான தானங்களால் பிராம்மணர்களும், நல்ல யுத்தத்தால் க்ஷத்திரியர்களும், சிராத்தங்களால் பிதாமஹர்களும், காப்பாற்றுதலால் வைஶ்யர்களும், இஷ்டமான வஸ்துக்களால் உத்தம ஸ்திரீகளும், பலவித கருணையால் சூத்திரர்களும், தானம் செய்து

[1] உஞ்சம் = உதிர்ந்த தானியத்தை ஒவ்வொன்றாகப் பொறுக்குவது.

மிச்சமான பொருள்களால் ஸாமான்ய ஜனங்களும், எங்கள் அரச ருடைய சக்தியால் ஞாதிகளும் ஸம்பந்திகளும், புண்ணியமான ஹவி ஸுக்களால் தேவர்களும், ரக்ஷணைகளால் சரணமடைந்தவர்களும் ஸந் தோஷமடைந்தார்கள். பிராமம்மணர்களின்மீது ஸத்யம்; ஸத்யம். இந்த யாகத்தில் எது உண்மையோ அதைச்சொல். (எங்களால்) வின வப்பட்டநீ பிராம்மணர்களிடத்தில் அன்பினுல்,கேட்கப்பட்டதையும் பார்க்கப்பட்டதையும் உள்ளபடி சொல். நீ நம்பத்தகுந்த சொல்லுள் ளவனும் சிறந்த அறிவுள்ளவனும் திவ்யமான ரூபமுள்ளவனும் பிராம் மணர்களுடன் சேர்ந்தவனுமாகவிருக்கிருய். ஆகையால், நீ சொல்லத் தகுந்தவனுக இருக்கிருய்' என்று வினவினுர்கள். அந்தப் பிராம்மணர் களால் இவ்விதம் வினவப்பட்ட அந்தக்கீரியானது சிரித்துக்கொண்டு சொல்லத்தொடங்கிற்று. 'பிராம்மணர்களே! நான் சொன்ன இந்த வார்த்தை பொய்யன்று; கர்வத்தால் சொன்னதுமன்று. பிராம்மண ஸ்ரேஷ்டர்களே! உங்களுடைய இந்த யாகமானது (பிராம்மணன் கொடுத்த) ஒருபடி மாவுக்குச் சமமாகாது' என்று நான் சொன்ன இந்த வாக்கியத்தை நீங்களும் கேட்டிருப்பீர்கள். பிராம்மணஸ்ரேஷ் டர்களே! இது நான் உங்களுக்கு அவஸ்யம் சொல்லவேண்டிய தாக இருக்கிறது. பிராம்மணர்களே! குரு க்ஷேத்திரத்தில் வஸிப் பவனும் கொடையாளியும் உஞ்சவ்ருத்தி செய்பவனுமான பிராம் மணன் பத்தினியுடனும் மகனுடனும்மருமகளுடனும் ஸுவர்க்கத்தை அடைந்ததும் நான் பார்த்து அனுபவித்ததும் ஆச்சரியமும் உத்தமமு மான சரித்திரத்தையும் என்னுடைய இந்தப் பாதிச் சரீரமானது ஸுவர்ண மயமாகச் செய்யப்பட்ட விதத்தையும் நான் உள்ளபடி சொல்லுகிறேன். ஸாவதானமான மனத்துடன் கேளுங்கள்.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

**(கீரி, உஞ்சவ்ருத்திப் பிராம்மணன் தர்மதேவதைக்கு ஒரு படிமாவைக் கொடுத்ததன் மகிமையைச் சொல்லி மறைந்தது.)**

பிராம்மணர்களே! ஆ! நியாயமாக அடையபட்டதும் ஸூக்ஷ்ம மாயிருப்பதும் பிராம்மணரால் கொடுக்கப்பட்டதுமான தானத்தின் உத்தமமான பயனை உங்களுக்குச் சொல்லுகிறேன். தர்மத்திற்குரிய க்ஷேத்திரமும் தர்மத்தையறிந்த அநேகர்களால் சூழப்பட்டதுமான

குருக்ஷேத்திரத்தில் முற்காலத்தில் ஒரு பிராம்மணர் 1கபோதவ்ருத்தியை அனுஸரித்து உஞ்சவ்ருத்தி செய்துகொண்டிருந்தார். சுத்தமான நடையுள்ளவரும் தர்மபுத்தியுள்ளவரும் இந்திரியங்களை அடக்கினவருமான அவர், மனைவி மைந்தன் மருமகள் இவர்களுடன் தவம் செய்துகொண்டிருந்தார். (அந்தப்) பிராம்மணர், எப்பொழுதும் அவர்களால் சூழப்பட்டு 2ஆறாவதுகாலத்தில் புஜிப்பார். சிலநாள் அவருக்கு ஆறாவது காலத்திலும் ஆஹாரம் கிடைக்காது. அந்தப் பிராம்மணஶ்ரேஷ்டர் ஒரு ஸமயம் மறுநாள் ஆறாவது காலத்தில் புஜிப்பார். பிராம்மணர்களே! கபோத தர்மத்தை அனுஸரித்த அவருக்கு அக்காலத்தில் பயங்கரமான துர்ப்பிக்ஷம் நேர்ந்தபொழுது, சேர்த்து வைக்கப்பட்ட தான்யம் இல்லை. அதைப்பற்றித் தெரிந்துகொள்ளுங்கள். அப்பொழுது, ஓஷதியும் விதைவிதைப்பதும் குறைந்தமையால் அவருக்கு (ஜீவனத்திற்குரிய) பொருள் கிடைக்கவில்லை. காலம் செல்லச்செல்ல அவருக்குப் போஜனமே கிடைக்கவில்லை. அப்பொழுது, அவர்களெல்லாரும் பசிமேலிட்டுச் சுக்லபக்ஷத்தில் மத்தியான்னகாலத்தில் ஸூர்யன் தபிக்கும்போது உஞ்சவ்ருத்திக்காகப் புறப்பட்டார்கள். தவம் புரிந்தவரும் வெயிலினாலும் பசியினாலும் பீடிக்கப்பட்டவரும் பசியினால் களைத்தவருமான பிராம்மணருக்கு உஞ்சம் கிடைக்கவே இல்லை. அந்தப் பிராம்மணஶ்ரேஷ்டர் பரிஜனங்களுடன் அவ்வாறே பசியினால் பீடிக்கப்பட்டுப் பிராணகஷ்டத்தோடு அக்காலத்தைக்கழித்தார். தபஸ்விகளானஅவர்கள் (மறுநாள்) ஆறாவது காலம் சென்றபிறகு, ஒருபடி யவதான்யத்தை ஸம்பாதித்தார்கள். அந்த ஒருபடி யவதான்யத்தையும் மாவாகச் செய்தார்கள். தபஸ்விகளான அவர்களெல்லாரும் ஜபம்முதலான ஆன்னிகத்தையும் அக்னியில் செய்யத்தக்க ஹோமத்தையும் விதிப்படி செய்துவிட்டு (அதை) காற்காற் படியாகப் பிரித்துக்கொண்டார்கள். பிறகு, அவர்கள் புஜிக்கும் தருணத்தில் ஓர் அதிதிப் பிராம்மணர் வந்தார். அவர்கள், வந்த அந்த அதிதியைக் கண்டு மிக்க மனமகிழ்ச்சியுள்ளவர்களானார்கள். அப்பொழுது, பரிசுத்தமான மனமுள்ளவர்களும் ஐம்பொறி

1 ஒன்றொன்றாய் விழுந்து கிடக்கும் தான்யங்களைப் பொறுக்கி ஜீவிப்பது. உஞ்சவிருத்தியும் இதுவே; ஆனால், கபோதவ்ருத்தி மறுநாளைக்கென்று வைத்துக்கொள்ளாதது.

2. ஒரு பகலை எட்டுக்காலங்களாகப் பிரித்து அவற்றில் சு-வது காலம், அதாவது, பதினெட்டேமுக்கால் நாழிகைக்கு மேல் இருபத்திரண்டரை நாழிகை வரையிலுள்ளகாலம் என்பது. சாந்திபர்வம் 900-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

களை அடக்கினவர்களும் ஶ்ரத்தையும் மனத்தின் அடக்கமுமுள்ள வர்களும் அஸூயையையும் கோபமுமற்றவர்களும் ஸாதுக்களும் மாத்ஸர்ய மற்றவர்களும் கர்வத்தையும் மதத்தையும் கோபத்தையும் விட்ட வர்களும் தர்மத்தை அறிந்தவர்களுமான அந்தப் பிராம்மணஶ்ரேஷ் டர்கள் அந்த அதிதியை நமஸ்கரித்து க்ஷேமம் விசாரித்து ஒருவருக் கொருவர் அவருடைய (ஸமமான) பிரம்மசரியத்தையும் கோத்திரத் தையும் சொல்லி, பசியினால் பீடிக்கப்பட்ட (அந்த) அதிதியை அப்பொழுது ஆஶ்ரமத்துக்கு அழைத்து வந்து, 'குற்றமற்றவரே! பிரபுவே! உமக்கு இது அர்க்கியம்; பாத்யம்; இது ஆஸனம். இவை நியமத்துடன் ஸம்பாதிக்கப்பட்ட சுத்தமான மாக்கள். பிராம்மண ஶ்ரேஷ்டரே! எங்களால் கொடுக்கப்பட்ட இவற்றைப் பெற்றுக்கொள் ளும். உமக்கு மங்களம் உண்டாகும்' என்று சொன்னார்கள். இவ் வாறு சொல்லப்பட்ட அந்த அந்தணர் காற்படி மாவை வாங்கிப் புஜித்துத் திருப்தியை அடையவில்லை. உஞ்சவ்ருத்தி செய்யும் அந் தப் பிராம்மணர், பசி மேலிட்டிருக்கும் அந்தப் பிராம்மணரைப் பார்த்து, 'இவர் எவ்விதம் ஸந்தோஷமுள்ளவராவர்?' என்று ஆஹா ரத்தைப்பற்றி ஆலோசித்தார். அவருடைய மனைவியானவள், 'என் னுடைய பாகத்தையும் கொடும். இந்தப் பிராம்மணஶ்ரேஷ்டர் இஷ் டப்படி ஸந்தோஷமடைந்து செல்லட்டும்' என்று சொன்னாள். இவ் விதம் சொல்லுகின்றவளும் பதிவ்ரதையுமான அந்த மனைவியைப் பசி மேலிட்டவளாக அறிந்து அந்தப் பிராம்மணஶ்ரேஷ்டர் அந்த மாவை (வாங்கிக்கொள்ளப்) பிரியப்படவில்லை. கற்றறிந்தவரும் பிராம்மணஶ்ரேஷ்டருமான அவர் அப்பொழுது வயதுசென்றவளும் பசியால் பீடிக்கப்பட்டவளும் களைத்து வாடினவளும் (பிறரால்) துக் கிக்கத்தக்கவளும் தோலும் எலும்புமாக இருப்பவளும் நடுக்கமுற்ற வளுமான மனைவியைத் தன்னைப்போலிருப்பாளென்றறிந்து, பிறகு அவளை நோக்கி, 'அழகியவளே! புழுக்களுக்கும் பறவைகளுக்கும் விலங்குகளுக்குங்கூடப் பெண்டிர்கள் ரக்ஷிக்கப்படவும் போஷிக்கப் படவும் தக்கவர்களாக இருக்கின்றனர். நீ இவ்விதம் சொல்வது தகுதியன்று. மனைவியினால் கருணை புரியப்பட்டவனும் போஷிக்கப் பட்டவனும் ரக்ஷிக்கப்பட்டவனுமான மனிதன் பிரகாசிக்கும் கீர்த் தியை இழந்தவனாவான். அவன் நல்ல உலகங்களையும் அடையமாட் டான். அறம்பொருள் இன்பங்களைப்பற்றிய காரியங்களும் பணி விடைகளும் குலவிருத்தியும் பித்ருக்களுக்கும் தனக்குமுள்ள தரும மும் மனைவியை அடுத்திருக்கின்றன. மனைவியை ரக்ஷிக்கத் திறமை யற்று (அதற்கு வேண்டிய) காரியத்தைத் தெரிந்துகொள்ளாத புரு

ஷன் பெரிய அபகீர்த்தியையும் நரகங்களையும் அடைவான்' என்று சொன்னார். இவ்விதம் சொல்லப்பட்ட அவள், பிறகு, 'பிராம்மணரே! தர்மமும் அர்த்தமும் நம்மிருவருக்கும் பொதுவானவை. (ஆகையால்,) ஒரு படியில் நான்கிலொரு பாகமான என்னுடைய இந்தமாவைப் பெற்றுக்கொள்ளும். கிருபை செய்யும். பிராம்மண ஶ்ரேஷ்டரே! ஸ்திரீகளுக்கு ஸத்தியமும் ரதியும் தர்மமும் குணங்களால் ஜயிக்கப்பட்ட ஸுவர்க்கமும் (மற்ற) விருப்பமும் பர்த்தாவை அடுத்திருக்கின்றன. [1]தாய்தந்தைகளுடைய சுக்லசோணிதங்களாலாகிய பர்த்தாவானவன் (ஸ்திரீகளுக்கு) மேலான தெய்வம். ஸ்திரீகளுக்கு ரதி புத்திரன் முதலான பயன்கள் பர்த்தாவினுடைய அனுக்ரஹத்தால் உண்டாகின்றன. நீர் என்னைப் பரிபாலிப்பதால் பதியாகவும் என்னைப் போஷிப்பதால் பர்த்தாவாகவும் புத்திரனைக் கொடுத்ததால் வரத்தைக் கொடுப்பவராகவும் இருக்கிறீர். ஆகையால், என்னுடைய மாவை (இவருக்குக்) கொடும். நீரும் ஜரையால் சூழப்பட்டவரும் வயது சென்றவரும் பசியால் பீடிக்கப்பட்டவரும் பலம் மிகக்குறைந்தவரும் உபவாஸத்தால்களைத்தவரும் இளைத்தவருமாக இருக்கிறீர்' என்றுசொன்னாள். அவளால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தப் பிராம்மணர் மாவை வாங்கிக்கொண்டு, 'பிராம்மணரே! ஸாதுக்களில் சிறந்தவரே! மறுபடியும் இந்த மாவையும் பெற்றுக்கொள்ளும்' என்று இந்தவசனத்தைச் சொன்னார். அந்தப் பிராம்மணர் அந்த மாவை வாங்கிப் புஜித்தும் ஸந்தோஷமடையவில்லை. உஞ்சவ்ருத்தி பிராம்மணர் அவரைப் பார்த்து மனக்கவலையுள்ளவரானார். புத்திரன், 'ஸாதுக்களில் சிறந்தவரே! நீர் இந்த மாவையும் வாங்கிப் பிராம்மணருக்குக்கொடும். இப்படிச் செய்வதே புண்ணியமென்று எண்ணுகிறேன். ஆகையால், நான் இதைச் செய்கிறேன். முதுமைப்பிராயமுள்ள பிதாவைக் காப்பாற்றுவது ஸாதுக்களுக்கு ஸம்மதமான காரியம். ஆகையால், எப்பொழுதும் முயற்சிசெய்து என்னால் நீர் காப்பாற்றப்படத் தக்கவராக இருக்கிறீர். பிராயம் முதிர்ந்த காலத்தில் (பிதாவைப்) பரிபாலிப்பது புத்திரர்களுடைய காரியமாக விதிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மரிஷியே! இந்தஶ்ருதியானது மூவுலகங்களிலும் சாஶ்வதமாக இருக்கிறது. பிராணனை மட்டும் தரித்துக்கொண்டு உம்மால் தவம் செய்ய முடியும். பிராணிகளுடைய சரீரங்களில் பிராணனிருப்பது

1. 'தாய் தந்தைகளுடைய சுக்ல சோணிதங்களாலுண்டான இச்சரீரத்திற்குப் பர்த்தாவே மேலான தெய்வம்' என்று சிலரும், 'தாயின் ருதுகாலமும் தந்தையின் பீஜமும் தெய்வமும் புத்ரோத்பத்திக்குக் காரணங்களாம்; ஆயினும், இவற்றுள் முக்கிய காரணம் பதியேயாம்' என்று சிலரும் கூறுவர்.

மேலான தர்மமல்லவா?' என்று சொன்னான். பிதா, 'நீ ஆயிரம் பிராயம் சென்றவனானாலும் பாலனென்பதே என்னுடைய எண்ணம். பிதாவானவன் புத்திரனை உண்டுபண்ணி (அந்தப்) புத்திரனால்தான் கிருதகிருத்யனாக வேண்டும். குழந்தைகளுக்குப் பசி அதிகம். பிரபுவே! இதை நான் அறிவேன். பிராயம்முதிர்ந்த நான் (பிராணனைத்) தரிப்பேன். குழந்தாய்! நீ பலமுள்ளவனாக இருக்கவேண்டும். புத்திர! மேலும், வயது அதிகமாகச் சென்றிருப்பதால் பசி என்னை வருத்தவில்லை. நான் நீண்டகாலம் தவம் செய்திருக்கிறேன். எனக்கு மரணத்தில் பயமில்லை.' என்று சொன்னார். புத்திரன், 'நான் உம்முடைய குழந்தையாக இருக்கிறேன். (பிதாவாகிய) புருஷனைக் காப்பாற்றுவதால் புத்திரனென்று கருதப்பட்டிருக்கிறான்; தானே புத்திரனாக (ஜனிப்பதாகக்) கருதப்படுகிறான். ஆகையால், இப்பொழுது நீர் உம்மைக்கொண்டே ரக்ஷித்துக்கொள்ளும்' என்று சொன்னான். பிதா, 'புத்திர! நீ ரூபத்தாலும் சீலத்தாலும் இந்திரிய அடக்கத்தாலும் எனக்குச் சமமாக இருக்கிறாய். (நான் உன்னைப்) பலவிதமாகப் பரீக்ஷித்தேன். உன்னுடையமாவைப் பெற்றுக்கொள்ளுகிறேன்' என்று சொன்னார். அப்பொழுது, அந்தப் பிராம்மணஸ்ரேஷ்டர் இவ்விதம் சொல்லிவிட்டு, ஸந்தோஷமுள்ள மனத்துடன் அந்த மாவை வாங்கிச் சிரித்துக்கொண்டு அந்த அதிதிப் பிராம்மணருக்குக் கொடுத்தார். அவர் அந்தமாவையும் புஜித்து ஸந்தோஷமடையவில்லை. தர்மாத்மாவான உஞ்சவிருத்திப் பிராம்மணரோ லஜ்ஜையை அடைந்தார். (அருகில்) இருந்த பதிவ்ரதையான மருமகள் அதிதிப் பிராம்மணருக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி, ஸந்தோஷத்துடன் மாவை எடுத்துக்கொண்டு அந்த மாமனாரை நோக்கி, 'பிராம்மணரே! உம்முடைய புத்திரரிடமிருந்து எனக்குப் புத்திரன் உண்டாவான். என்னுடைய இந்தமாவையும் வாங்கிப் பிராம்மணருக்குக் கொடும். உம்முடைய அனுக்கிரஹத்தால் எனக்கு அக்ஷயமான உலகங்கள் கிடைத்தன. பிதா எந்த உலகங்களில் சென்று துயரப்படமாட்டானோ அந்த உலகங்களைப் புத்திரனால் அடைகிறான். தர்மம் முதலான மூன்றும் மூன்று அக்னிகளும் மூன்று புத்திர பௌத்திரர் [1]ப்ரபௌத்ரர்களும் அழிவற்ற ஸுவர்க்கத்திற்குக் காரணமானவர்கள். புத்திரன் பித்ருக்களைக் கடன்களிலிருந்து கரையேற்றுகிறான் என்று கேள்விப்படுகிறோம். புத்திர பௌத்திரர்களாலும் நிச்சயமாக நல்ல உலகங்களை அடைகிறான்' என்ற வாக்யத்தைச்

1 ஒரு சொல் வருவிக்கப்பட்டது.

சொன்னாள். மாமனார், 'நல்ல விரதமும் ஆசாரமுமுள்ளவளே! நான் காற்றினாலும் வெயிலினாலும் தளர்ந்த அவயவங்களுள்ளவளும் நிறம் மாறியவளும் இளைத்தவளுமான உன்னைப் பசியால் கலங்கின மன முள்ளவளாகக் கண்டும் தர்மத்தை அழிப்பவனாகி மாவை எவ்விதம் வாங்கிக் கொள்வேன். நல்ல நடையுள்ளவளே! கல்யாணி! நீ இவ் விதம் சொல்லத் தகுந்தவளல்லை. சுபமானவளே! விரதமும் சுத்தியும் சீலமும் தவமுமுள்ளவளும் கஷ்டப்பட்டு ஜீவிப்பவளும் ஆறாவது காலத்திலும் ஆஹாரமில்லாதவளுமான உன்னை எப்படிப் பார்ப் பேன். சிறுமியும் பசியால் வருந்தியவளும் ஸ்திரீயுமான நீ எப் பொழுதும் என்னால் ரக்ஷிக்கப்படத் தக்கவள். பந்துக்களை ஸந்தோ ஷிக்கச் செய்கின்ற நீ உபவாஸத்தால் மிக்க ஶ்ரமத்தை அடைந்திருக் கிறாயே' என்று சொன்னார். மருமகள், 'பிரபுவே! நீர் என்னு டைய குருவுக்குக்குருவும் தெய்வத்திற்குத் தெய்வமுமாயிருப்பத னால், தேவருக்கும் மேலான தேவராக இருக்கிறீர். ஆகையால், நீர் என் னுடைய மாவைப் பெற்றுக்கொள்ளும். பிராம்மணரே! இந்தச் சரீர மும் பிராணனும் தர்மமும் குருவின் பணிவிடைக்காக இருக்கின் றன. உம்முடைய அருளால் நல்ல உலகங்களை அடையப்போகி றோம். பிராம்மணரே! நான் ரக்ஷிக்கப்படத் தக்கவளென்றாவது திடமான பக்தியுள்ளவளென்றாவது இவள் என்னால் காப்பாற்றப் படத்தக்கவளென்றாவது எண்ணி மாவை வாங்கிக்கொள்ளும்' என்று சொன்னாள். மாமனார், '(பெண்ணே!) பதிவ்ரதையானநீ எப்பொழு தும் இந்தச் சீலத்தாலும் ஒழுக்கத்தாலும் விளங்குகிறாய். நீ தர்மத் துடனும் விரதத்துடனும்கூடினவளாகிக் குருவின் பணிவிடையைக் கவனிக்கிறாய். மருமகளே! சிறந்த பாக்கியமுள்ளவளே! சிறந்தவளே! ஆகையால், உன்னைத் தர்மத்தைச் செய்பவருள் (ஒருத்தியாகக்) கணக்கிட்டு மாவைப் பெற்றுக்கொள்ளுகிறேன். உன்னை வஞ்சிக்கக் கூடாது' என்று சொன்னார். (அவர்,) இவ்விதம் சொல்லி அந்த மாவை வாங்கி (அதிதிப்) பிராம்மணருக்குக் கொடுத்தார். பிறகு, (அந்தப்) பிராம்மணர் மஹாத்மாவான அந்த ஸாதுவினிடத்தில் ஸந்தோஷமுள்ளவரானார். பிரியமான மனமுள்ளவரும் பேசும் திற மையுள்ளவரும் பிராம்மணஶ்ரேஷ்டரும் மனித வடிவமுள்ள தர்மமு மான அந்த அதிதியோ அப்பொழுது அந்தப் பிராம்மணஶ்ரேஷ்டரை நோக்கிப் பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானார்.

'பிராம்மணஶ்ரேஷ்டரே! பரிசுத்தமானதும் தர்மமாகவும் நியாய மாகவும் ஸம்பாதிக்கப்பட்டதும் சக்திக்குத்தக்கவாறு கொடுக்கப்பட்

டதுமான உம்முடைய தானத்தால் ஸந்தோஷமடைகிறேன். ஆ! ஆ! உம்முடைய தானத்தை ஸ்வர்க்கத்தில் தேவர்கள் உரக்கச் சொல்லிப் புகழ்கின்றனர். ஆகாயத்தினின்றும் பூமியில் விழுந்த இந்தப் பூமாரியையும் பாரும். பிராம்மணஸ்ரேஷ்டரே! தேவரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் தேவர்களுடைய பரிஜனங்களும் தேவ தூதர்களும் பிரம்மரிஷிகளும் பிரம்மலோக வாஸிகளும் விமானத்திலிருந்துகொண்டு (உம்முடைய) தானத்தால் வியப்புற்று ஸ்தோத்திரம் செய்துகொண்டு உம்முடைய தரிசனத்தை விரும்புகிறார்கள். ஸ்வர்க்கத்திற்குப் போம், பிராம்மணரே! உம்மால் பிரம்மசரியத்தாலும் தானத்தாலும் யஜ்ஞத்தாலும் தவத்தாலும் சுத்தமான தர்மத்தாலும் பித்ருலோகத்திலிருந்த எல்லாப்பித்ருக்களும் கரையேற்றப்பட்டார்கள். அநேக யுகங்களில் வரப்போகின்ற அநேகரும் [1] கரையேற்றப்பட்டார்கள். ஆகையால், ஸ்வர்க்கம் செல்லும். நல்லவிரதங்களுள்ளவரே! நீர் மிக்க சிரத்தையுடன் தவம் புரிகிறீர். பிராம்மணருள் மிகச்சிறந்தவரே! ஆகையால், உம்முடைய இந்தச்செய்கையால் தேவர்கள் பிரீதி அடைந்தார்கள். நீர் கஷ்டமான காலத்தில் சுத்தமான சித்தத்துடன் இந்த மாவை முழுவதும் கொடுத்ததென்னும் (இந்தச்) செய்கையால் உம்மால் ஸ்வர்க்கம் ஜயிக்கப்பட்டது. பசியானது அறிவைப் போக்கும்; தர்மபுத்தியைக் கெடுக்கும்; பசியினால் பற்றப்பட்ட ஞானமுள்ளவன் தைரியத்தை இழப்பான். எவன் பசியை ஜயிக்கப்போகிறானோ அவன் நிச்சயமாக ஸ்வர்க்கத்தை ஜயிப்பான். எப்பொழுது தானத்தில் ஆசையுள்ளவனாக இருக்கிறானோ அப்பொழுது தர்மம் கெட்டுப் போகிறதில்லை. நீர் புத்திரனிடத்திலுள்ள ஸ்நேஹத்தையும் மனைவியினிடத்திலுள்ள ஸ்நேஹத்தையும் பாராமல் தர்மத்தையே பெரிதாக எண்ணி ஆசையை லக்ஷியம் செய்யவில்லை. மனிதர்களுக்குத் திரவ்யம் கிடைப்பது அரிது. அதினும் பாத்திரத்தில் தானம் செய்வது மிக அரிது. தானத்திலும் காலம் (நேர்வது) மிக அரிது. அதினும் சிரத்தை (இருப்பது) மிக அரிது. பற்றுதலாகிறதாளுள்ளதும் ஆசையாகிற முளையுள்ளதும் விஷய விருப்பத்தால் மூடப்பட்டதும் மிக்க ஸூக்ஷ்மமுமான ஸ்வர்க்கத்தின் வாயில் மனிதர்களால் அஜ்ஞானத்தினால் பார்க்கப்படுகிறதில்லை. அதையோ, கோபத்தையும் இந்திரியங்களையும் ஜயித்தவர்களும் தவத்தையுடையவர்களும் சக்திக்குத் தக்கபடி கொடுப்பவர்களும் பிராம்மணர்களுமான மனிதர்கள் பார்க்

---

1 'தாரிதா:' என்பது மூலம். நிச்சயத்தினால் இறந்தகாலமாகக் கூறப்பட்டது.

கின்றனர். ஆயிரம் கொடுக்கச் சக்தியிருக்க நூறுகொடுப்பவனும் நூறு கொடுக்கச் சக்தியிருக்கப் பத்துக் கொடுப்பவனும் சக்திக்குத் தக்கபடி ஜலத்தைக் கொடுப்பவனும் ஆகிய எல்லோரும் ஸமமான பயனுள்ளவர்களாகக் கருதப்படுகின்றனர். பிராம்மணரே! ரந்திதேவனென்னும் அரசன் ஒன்றுமில்லாதவனுகிச் சுத்தமான சித்தத்துடன் ஜலத்தைக் கொடுத்தான். அதனுல், அவன் ஸுவர்க்கத்தின் மேற்பாகத்தை அடைந்தான். ஐயா! தர்மமானது, நியாயமாக அடையப்பட்டவைகளும் சிரத்தையால் பரிசுத்தமானவைகளுமான சிறிய தானங்களால் ஸந்தோஷப்படுவதுபோலப் பெரியபயன் (மதிப்பு) உள்ள தானங்களைக் கொடுப்பதால் ஸந்தோஷப்படுகிறதில்லை. நிருகன் என்னும் அரசன் ஆயிரம் கோக்களைப் பிராம்மணர்களுக்குத் தானம் செய்தான். அவன் பிறனுடையதான ஒரு கோவைக் கொடுத்து நரகத்தை அடைந்தான். உசீநரதேசத்தரசனும் நல்ல விரதமுள்ளவனுமான சிபியானவன் தன் மாம்ஸத்தைக் கொடுத்ததால் புண்யம் செய்தவர்களுக்குரிய உலகங்களை அடைந்து ஸுவர்க்கத்தில் மகிழ்கிறுன். பிராம்மணரே! மனிதர்களுக்குச் செல்வத்தினுலுண்டாகும் புண்ணியமும் பலவிதயாகங்களால்வரும் புண்ணியமும் நியாயமாக ஸம்பாதித்த பொருள்களால் தம் சக்திக்குத்தக்கபடி தாம்ஸம்பாதித்த புண்ணியத்துக்கு ஈடாகா. மனிதன் கோபத்தால் தானத்தின்பயனை அழிக்கிறுன்; லோபத்தால் ஸுவர்க்கத்தை அடைகிறதில்லை. நியாயமாக ஜீவிப்பவனும் தானத்தை அறிந்தவனுமானவன் தவத்தால் ஸுவர்க்கத்தைஅடைகிறுன். ஒருவன் மிகுதியான தக்ஷிணையுள்ள அநேகம் ராஜஸூயயாகங்களைச் செய்தாலும் அநேகம் அஸ்வமேதங்களைச் செய்தாலும் உமது இந்தப்பயனுக்குச் சமமானபயனை அடையமாட்டான். நீர், ஒரு படிமாவினுல் அழிவற்றதான பிரம்மலோகத்தை ஜயித்தீர். பிராம்மணரே! ரஜோகுணமற்ற பிரம்மலோகத்திற்கு ஸுகமாகச்செல்லும். பிராம்மணஸ்ரேஷ்டரே! உங்களெல்லோருக்கும் திவ்யமான விமானம் வந்திருக்கிறது. இஷ்டப்படி ஏறுங்கள். பிராம்மணரே! நான் தர்மம். என்னைப் பாரும். நீர் உம்முடைய சரீரத்தைத் துன்பப்படுத்தி உலகத்தில் கீர்த்தியை நாட்டினீர். மனைவியுடனும் மைந்தனுடனும் மருமகளுடனும் ஸுவர்க்கம் செல்லும்' என்று கூறினுர். தர்மமானது இவ்வித வாக்கியத்தைச் சொன்னவுடன், அந்தப் பிராம்மணர் மனைவியுடனும் மகனுடனும் மருமகளுடனும் விமானமேறி ஸுவர்க்கம் சென்றுர்.

---

1 ஒரு சொல் வருவிக்கப்பட்டது.

அப்பொழுது, தர்மத்தை அறிந்த அந்தப் பிராம்மணர் மகன் மருமகள் மனைவி இவர்களோடு ஸ்வர்க்கம் சென்றவுடன், நான் வளையிலிருந்து வெளிப்பட்டேன். பிறகு, மாவின் மணத்தாலும் ஜலத்தின் ஈரத்தாலும் திவ்யமான புஷ்பங்களின் உரைதலாலும் ஸாதுவான பிராம்மணர் செய்த தானத்தின் புண்ணிய லேசத்தாலும் அந்தப்பிராம்மணருடைய தவத்தாலும் என்னுடைய தலையானது ஸ்வர்ணமயமாகச் செய்யப்பட்டது. பிராம்மணர்களே! ஸத்யஸந்தரான அவருடைய மாவின் தானத்தாலும் சிறந்த புத்தியுள்ள அவருடைய தவத்தாலும் என்னுடைய பாதிச் சரீரமும் ஸ்வர்ணமயமாகச் செய்யப்பட்டது. மிக்க விசாலமான இதைப் பாருங்கள். பிராம்மணர்களே! மற்றொரு பார்ஸ்வமும் இவ்விதமாக எப்படியாகும் என்று நான் அடிக்கடி ஸந்தோஷத்துடன் தபோவனங்களிலும் யாகங்களிலும் ஸஞ்சரிக்கிறேன். நான் புத்தியுள்ளவரும் கௌரவராஜருமான யுதிஷ்டிரருடைய இந்த யாகத்தைக் கேள்விப்பட்டுப் பெரிய ஆசையுடன் வந்தேன். நான் ஸ்வர்ணமயமாகச் செய்யப்படவில்லை. பிராம்மணஸ்ரேஷ்டர்களே! ஆகையினாலேதான், நான் நகைத்து, 'இந்த யாகமானது ஒரு படிமாவுக்கு எவ்விதத்திலும் சமமாகாது' என்ற இந்த வாக்கியத்தைச்சொன்னேன். நான் அப்பொழுது ஒருபடி மாவின் துளிகளால் ஸ்வர்ணமயமாகச் செய்யப்பட்டேன். ஆகையால், பெரிதான இந்த யாகமானது அந்தத் துளிகளுக்கு ஒப்பாகாது என்று என்னால் கருதப்பட்டது' என்று சொல்லிற்று. கீரியானது, அப்பொழுது யாகத்திலிருக்கும் எல்லாப்பிராம்மணஸ்ரேஷ்டர்களையும் நோக்கி இவ்வாறு சொல்லிவிட்டு அவர்களின் கண்ணுக்குப் புலப்படாமல் சென்றது. அந்தப் பிராம்மணர்களும் வீட்டுக்குச் சென்றார்கள். பகைவரின் பட்டணத்தை ஜயிப்பவரே! அஸ்வமேதமென்னும் அந்த மஹாயாகத்தில் நடந்த ஆச்சர்யமான இதையெல்லாம் நான் உமக்குச் சொன்னேன். அரசரே! நீர் எவ்விதத்திலும் உம்முடைய யாகத்தைப்பற்றிக் கர்வமடையாதீர். ஆயிரம் கோடி ரிஷிகள் தவங்களால் ஸ்வர்க்கம் சென்றனர். எல்லாப் பிராணிகளுக்கும் துரோகம் செய்யாமையும் ஸந்தோஷமும் சீலமும் நேர்மையும் தவமும் மனவடக்கமும் உண்மையும் தானமும் ஸமமானவை" என்று சொன்னார்.

---

## தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)



**(வைசம்பாயனர், மெய்யோடைதவங்களாலேயே ஸ்வர்க்கமுதலியன கிடைத்தலால் ஜீவஹிம்ஸைக்குக் காரணமான யாகம் சிறந்ததன்றென்னும் கீரியினபிப்பிராயத்தை ஜனமேஜயருக்குச் சொல்லியது.)**

ஜனமேஜயர், 'பிரபுவே! அரசர்கள் யாகத்தில் பற்றுதலுள்ளவர்களும் மஹரிஷிகள் தவத்தில் பற்றுதலுள்ளவர்களும் பிராம்மணர்கள் சமத்திலும் தமத்திலும் சாந்தியிலும் நிலைபெற்றவர்களுமாக இருக்கின்றனர். ஆகையால், யஜ்ஞத்தின் பயன்களுக்குச் சமமானது இவ்வுலகில் ஒன்றும்காணப்படவில்லை. இவ்விதம் எனக்கு எண்ணமிருக்கிறது. இது அவ்விதமேதான்; ஸம்சயமில்லை. த்விஜஶ்ரேஷ்டர்களான அநேகம் அரசர்கள் யாகங்களால் தேவரைப் பூஜித்து இவ்வுலகில் பெரிய கீர்த்தியை அடைந்து இறந்தபின் இவ்வுலகத்திலிருந்து ஸுவர்க்கம் சென்றிருக்கிறார்கள். ஆயிரம் கண்களுள்ளவனும் மிக்க தேஜஸுள்ளவனும் பிரபுவுமான தேவராஜன் மிகுதியான தக்ஷிணையுள்ள யாகங்களால் எல்லாத் தேவராஜ்யத்தையும் அடைந்தான். ஆகையால், பீமஸேனனையும் அர்ஜுனனையும் முதன்மையாகக்கொண்ட யுதிஷ்டிரராஜர், செல்வத்தாலும் பராக்ரமத்தாலும் தேவராஜனுக்கொப்பானவர். அப்படியிருக்க, அந்தக் கீரியானது மஹாத்மாவான அந்த அரசருடைய அஶ்வமேதமென்னும் [1]அந்த மஹாயாகத்தை எந்தக் காரணத்தால் நிந்தித்தது ?'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

"மனிதர்களுக்கு அதிபரே! அரசரே! பாரதரே! சிறந்ததான யாகத்தின் விதியையும் பயனையும் உள்ளபடி நான் இப்பொழுது சொல்லுகிறேன்; கேளும். முற்காலத்தில் யாகம் செய்யும் இந்திரனுக்கு எல்லா மஹரிஷிகளும்(ஒரு விஷயத்தைச்) சொன்னார்கள். மனிதரைப் பரிபாலிப்பவரே! மஹாராஜரே! விஸ்தாரமான யாககர்மாவில் ரித்விக்குக்கள் கர்மங்களில் விரைவுள்ளவர்களாகவும் குணத்துடன் கூடின அக்னியானது ஹோதாவினால் ஹோமம் செய்யப்படுகின்றதாகவும் தேவர்கள் அழைக்கப்படுகின்றவர்களாகவும் சிறந்தரிஷிகள் வந்திருப்பவர்களாகவும் மிக்க சிரத்தையுள்ளவர்களும் வேதத்தை நன்கு அறிந்தவர்களும் நல்ல ஸ்வரமுள்ளவர்களும் சிரமமில்லாதவர்களும் சுறுசுறுப்புள்ளவர்களும் அத்வர்யுக்களுள் சிறந்தவர்களுமான

1 ஒருசொல் விடப்பட்டது.

பிராம்மணர்களால் கொல்லப்படவேண்டிய அந்தஸமயத்தில் பசுக்கள் பிடிக்கப்பட்டவைகளாகவும் இருக்கும்போது, மஹரிஷிகள் கருணையுள்ளவர்களானார்கள். பிறகு, தபோதனர்களான அந்த ரிஷிகள், எளிமையுற்ற பசுக்களைப் பார்த்து, இந்திரனிடம் வந்து, 'இந்தயாகவிதி நல்லதன்று. பெரியதர்மத்தை விரும்புகின்ற உனக்கு இது அறியாமையாகும். புரந்தர! யாகத்தில் 1 பசுக்கூட்டங்கள் உபயோகிக்கப்படவேண்டுமென்று சாஸ்திரத்தில் காணப்படவில்லை. பிரபுவே! உன்னுடைய இந்த ஆரம்பமானது தர்மத்தைக் கெடுக்கக்கூடியது. இந்த யாகம் தர்மமாகச் செய்யப்பட்டதன்று. ஹிம்ஸையானது தர்மமாகச் சொல்லப்படுகிறதில்லை. உனக்கு விருப்பமிருந்தால் அந்த ரித்விக்குக்கள் சாஸ்திரப்படியே யாகத்தைச் செய்யட்டும். (சாஸ்திர) விதியில் காணப்பட்ட யாகத்தால் உனக்கு மிகப் பெரிய தர்மமுண்டாகும். ஆயிரம் கண்களுள்ளவனே! மூன்று வருஷம் முழுவதும் சென்ற விதைகளால் யாகத்தைச் செய். இந்திர! ஆலோசிக்கும்போது இது 2தான் பெரிய தர்மமாகத் தோன்றுகிறது' என்று சொன்னார்கள். அகங்காரத்திற்கும் மோகத்திற்கும் வசப்பட்டவனான இந்திரனோ தத்வத்தைக்கண்டவர்களான ரிஷிகளால் சொல்லப்பட்ட அந்த வாக்கியத்தை அங்கீகரிக்கவில்லை. பாரதரே! இந்திரனுடைய யாகத்தில் அந்தத்தபஸ்விகளுக்கு 'ஜங்கமங்களால் யாகம் செய்யவேண்டியதா, ஸ்தாவரங்களால் யாகம் செய்யவேண்டியதா' என்று மிக்க பெரிய விவாதம் உண்டாயிற்று.

தத்வத்தையறிந்தவர்களும் விவாதத்தால் ப்ரமத்தை அடைந்தவர்களுமான அந்த ரிஷிகளோ இந்திரனுடைய ஸம்மதத்தின்மேல் வஸு என்னும் அரசனை நோக்கி, 'அறிவிற் சிறந்தவனே! தர்மத்தில் ஸம்சயமடைந்த எங்களுக்கு உண்மையைச் சொல். சிறந்தபாக்கியமுள்ளவனே! ராஜஶ்ரேஷ்டனே! யாகங்களைப்பற்றிச் சாஸ்திரம் எவ்விதம் இருக்கிறது? சிறந்த பசுக்களால் யாகம் செய்யவேண்டியதா? அல்லது, முளைக்காதவிதைகளால் யாகம் செய்ய வேண்டியதா?' என்று வினவினார்கள். வஸு என்னும் அரசன் அவர்களுடைய அந்த வார்த்தையைக் கேட்டுப் பலாபலத்தை ஆலோசியாமல், கிடைத்தவைகளைக்கொண்டு யாகம் செய்ய வேண்டும்' என்று சொன்னான். மன்னரே! சேதிதேசத்தார்களுக்குத் தலைவனும் பிரபுவுமான அவ்வரசன் இந்த விஷயத்தில் இவ்விதம் பொய்யைச் சொல்லிப் பாதா

1 வேறு பாடம்.

1 'ஹி' என்று மாற்றப்பட்டது.

ள்ஞ் சென்றுன். ஆகையால், பிரம்மதேவரையும் பிரபுவான ஸ்வயம்பு வையும் தவிர மற்றவன் அநேக விஷயங்களை அறிந்தவனாலும் ஸம் சயவிஷயத்தில் ஒருவனாக (ஒன்றும்) சொல்லக் கூடாது. பாவியும் கெட்ட புத்தியுள்ளவனுமான அவனால் கொடுக்கப்பட்ட எல்லாத் தானங்களும் அதிகமாக இருந்தாலும் (அவனை) ஆதரிக்காமல் நசிக் கின்றன. அதர்மத்தில் பிரவிர்த்தித்தவனும் ஹிம்ஸிப்பவனும் கெட்ட சித்தமுள்ளவனும் துர்ப்புத்தியுள்ளவனுமான அவனுக்குத் தானத்தால் இவ்வுலகிலும் இறந்தபின்னும் கீர்த்தி உண்டாகிறதில்லை. அறியாதவனான எவன் தர்மத்தை அடையவிரும்பி அநியாயமாகக் கிடைத்த திரவ்யத்தை அடிக்கடி கொடுக்கிறனே அவன் தர்மத்தின் பயனை அடையமாட்டான். கபடமாகத் தர்மத்தைச் செய்பவனும் பாப புத்தியுள்ளவனும் மனிதரில் இழிந்தவனுமான எவன் ஜனங்களுக்குத் தன்னிடம் நம்பிக்கை உண்டாகவேண்டியதற்காகப் பிராம்மணர்களுக் குத் தானத்தைக் கொடுக்கிறனோ பாபகர்மத்தால் தனத்தை அடை ந்து தடையற்றவனும் ராகமும் மோகமும் உள்ளவனுமான அந்தப் பிராம்மணன் முடிவில் கெட்ட கதியை அடைவான். சேர்த்துவைப் பதில் புத்தியுள்ளவனும் லோபத்திற்கும் மோஹத்திற்கும் வசப்பட்ட வனுமான மனிதனும் பாபத்தாலும் கெட்ட எண்ணத்தாலும் பிராணிகளை (ஹிம்ஸித்து) யாகம் செய்கிறுன். எவன் இவ்விதம் தனத்தை அடைந்து அஜ்ஞானத்தால் கொடுக்கிறனோ யாகம் செய் கிறனோ அவன் பாபமாகப் பொருளை ஸம்பாதித்ததால் இறந்தபின் அந்த யாகதானங்களின் பயனை அடையமாட்டான். தபோதனர் களும் தார்மிகர்களுமான மனிதர்கள், செல்வத்திற்குத் தக்கவாறு, உஞ்சத்தையும் மூலத்தையும் கனியையும் சாகத்தையும் தீர்த்தபாத் திரத்தையும் கொடுத்து ஸ்வர்க்கத்தை அடைகிறுர்கள். தானமும் பிராணிகளிடத்தில் கருணையும் பிரம்மசரியமும் உண்மையும் பச்சாத் தாபமும் தைரியமும் பொறுமையுமான இவை தர்மமும் சிறந்த யோகமுமாகின்றன. ஸநாதனமான இது ஸநாதனமான தர்மத்தின் பயன். முன்னிருந்தவர்களான விஸ்வாமித்ரர்முதலான அரசர்களைக் கேள்விப்படுகிறேமல்லவா? விஸ்வாமித்ரர், அஸிதர், ஜநகராஜர், கக்ஷ ஸேநர், 1 ஆர்ஷ்டிஷேணர், ஸிந்துத்வீபரென்னும் அரசர் இவர்களும் மற்றுமுள்ள தபோதனர்களான அநேகம் அரசர்களும் உண்மை வசனங்களாலும் நியாயமாகக் கிடைத்தவற்றின் தானங்களாலும் மேலான ஸித்தியை அடைந்தார்கள். பாரதரே! "பிராம்மணர்களும்

---

1 வேறு பாடம்.

க்ஷத்திரியர்களும் வைசியர்களும் சூத்திரர்களும் தவத்தைச் செய்து தானதர்மமென்னும் அக்னியால் சுத்தர்களாகி ஸ்வர்க்கத்தை அடைகின்றார்கள்" என்று கூறினர்.

---

## தொண்ணூற்று நான்காவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

(கொல்லாமலே தியானம் தான முதலியவற்றல் யாகபலன் கிடைக்குமென்பதற்கு உதாரணமான அகஸ்தியர் யாகம் செய்த கதை.)

ஜனமேஜயர். "பகவானே! தர்மமாகக் கிடைத்ததைத் தானம் செய்வதால் எல்லாம் கிடைக்குமாகில் இது அனைத்தையும் எனக்குச் சொல்லும். நீர் சொல்வதில் ஸமர்த்தராக இருக்கிறீரல்லவா? பிராம்மணரே! உஞ்சவிருத்தி செய்யும் அந்தப் பிராம்மணனுக்கு மாவைத் தானம்செய்ததால் பெரும் பயன் உண்டானதாக நீர் எனக்குச் சொன்னது உண்மையே. ஸந்தேக மில்லை. பிராம்மணஶ்ரேஷ்டரே! எல்லாயாகங்களிலும் மேலான நிச்சயமானது எது? இதனை நீர் எனக்கு முழுதும் சொல்லவேண்டும்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"பகைவரை அடக்குபவரே! இந்த விஷயத்திலும் முற்காலத்தில் அகஸ்தியருடைய மஹாயாகத்தில் நடந்ததும் புராதனமுமான இந்த இதிஹாஸத்தை உதாஹரிக்கின்றனர். மஹாராஜரே! மிக்க தேஜஸுள்ளவரும் எல்லாப் பிராணிகளுக்கும் நன்மையைச் செய்வதில் பற்றுதலுள்ளவருமான அகஸ்தியர் முற்காலத்தில் பன்னிரண்டு வருஷங்களில் முடியக் கூடிய தீக்ஷையை அடைந்தார். மஹாத்மாவான அவருடைய அந்தயாகத்தில் ஹோதாக்கள் அக்னிக்குச் ஸமமானவர்களாக இருந்தார்கள். அந்த யாகத்தில் மூலத்தை ஆகாரமாகக் கொண்டவர்களும் கனியை ஆகாரமாகக் கொண்டவர்களும் [1]அச்மகுட்டர்களும் [2]மரீசிபர்களும் [3]பரிப்ருஷ்டிகர்களும் [4]வைகஸி

---

1 கல்லால் தான்யத்தைக் குத்தி அரிசி யெடுப்பவர்கள்; அநுசாஸனபர்வம் 709-பக்கம் குறிப்பிற்காண்க.

2 சந்திரகிரணத்தைப் பானம் செய்து திருப்திஅடைபவர்கள் என்பது பழைய உரை. ஸூர்யகிரணத்தைப் பானம் செய்பவர்கள் என்பதும் உண்டு.

3 வாங்கிக் கொள்ளும்படி நாம் கொடுப்பதையே பெற்றுக்கொள்பவர் என்பது பழைய உரை.

4 பெரியோருக்கிட்டு மிச்சத்தையுண்பவர்கள்.

கர்களும் [1] ப்ரஸங்கியானர்களும் யதிகளும் பிக்ஷுக்களும் வந்திருந்தார்கள். தர்மத்தை நேரில் பார்த்தவர்களும் கோபத்தையும் இந்திரியங்களையும் ஜயித்தவர்களும் மனத்தை அடக்கினவர்களும் ஹிம்ஸையும் கர்வமும் அற்றவர்களும் எப்பொழுதும் சுத்தமான ஒழுக்கத்தில் நிலைபெற்றவர்களும் இந்திரியங்களாலும் ஹிம்ஸிக்கப்படாதவர்களும் மஹரிஷிகளுமான அவர்களெல்லாரும் தேவ பூஜை செய்பவர்களாகி அந்த யாகத்தை நடத்தினார்கள். பகவானான அகஸ்தியர் சக்திக்குத் தக்கபடி அந்த யாகத்திற்கு வேண்டிய அன்னத்தை நன்கு ஸம்பாதித்தார். அக்காலத்தில் அந்த யாகத்தில் எது நடக்க வேண்டியதோ, எது தகுதியோ அது நடந்தது. அவ்வாறு, அநேகம் ரிஷிகளால் பெரிய க்ரதுக்கள் செய்யப்பட்டன. பரதஸ்ரேஷ்டரே! இவ்விதமான அகஸ்தியருடைய யாகம் நடக்கும்போது இந்திரன் அக்காலத்தில் மழை பெய்விக்க வில்லை. அரசரே! பிறகு, மஹாத்மாவான அகஸ்தியருடைய காரியங்களின் இடையில், சுத்த சித்தமுள்ள முனிவர்களுள் பின்வரும் வார்த்தை நடந்தது. 'யாகம் செய்கிறவரான இந்த அகஸ்தியர் மாத்ஸர்யமின்றி அன்னத்தைக்கொடுக்கிறார். பர்ஜன்யன் மழைபெய்யவில்லை. அன்னம் எப்படி உண்டாகும்? பிராம்மணர்களே! அகஸ்திய முனிவரின் இந்த மஹாஸத்ரமும் பன்னிரண்டு வருஷங்கள் நடக்கக் கூடியதாக இருக்கிறது. தேவனான இந்திரனும் இந்தப் பன்னிரண்டு வர்ஷங்களிலும் மழைபெய்விக்கப்போகிறதில்லை. நீங்கள் இதைப்பற்றி ஆலோசித்துப் புத்தியுள்ளவரும் மிக்க தவமுள்ளவருமான இந்த அகஸ்திய மஹரிஷிக்கு அநுக்கிரஹத்தைச் செய்யுங்கள்' என்று சொன்னார்கள்.

இவ்விதமான வசனம் சொல்லப்பட்டவுடன், பிரதாபமுள்ளவரான அந்த அகஸ்தியர், அப்பொழுது, முனிவர்களைச் சிரத்தால் (வணங்கி) நன்மொழி கூறிப் (பின்வரும்) வாக்கியத்தைச் சொல்லலானார். 'இந்திரன் பன்னிரண்டு வருஷங்கள் மழைபெய்வியாவிட்டால் நான் மானஸிகமானயஜ்ஞத்தைச் செய்கிறேன். இது ஸநாதனமானவிதி. இந்திரன் பன்னிரண்டு வருஷங்கள் மழைபெய்யாமல்போனால் நான் [2]ஸ்பர்சயஜ்ஞத்தைச் செய்கிறேன். இது ஸநாதனமான விதி. இந்திரன்பன்னிரண்டுவருஷங்கள் மழைபெய்வியாமற்போனால் நான்விரதங்

---

[1] அக்காலத்திற்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொள்பவர்கள்' என்பது பழைய உரை.

[2] 'ஸம்பாதித்த பொருளைச் செலவு செய்யாமல் அதைத் தொடுவதினாலேயே த்ருப்தி செய்விப்பது' என்பது பழைய உரை.

களை அநுஷ்டிப்பவனாகிச் சரீரக்கிலேசத்தால் இந்த யாகங்களைச் செய்கிறேன். என்னால் இந்தப் பீஜயஜ்ஞமானது அநேக வர்ஷங்களாக அநுஷ்டிக்கப்பட்டது. விதைகளால் இதைச் செய்கிறேன். இதில் இடையூறு உண்டாகாது. இப்பொழுது, தேவனான இந்திரன் மழைபெய்வித்தாலும் பெய்வியாவிட்டாலும் என்னுடைய இந்த ஸத்ரம் எவ்விதத்திலும் வீணாகச் செய்யத் தக்கதன்று. அல்லது, இந்திரன் (தன்னுடைய) இஷ்டத்தை அநுஸரித்து (நம்முடைய) பிரார்த்தனையைச் செய்யாவிடில், நானே இந்திரனாகிறேன். பிரஜைகளையும் ஜீவிக்கச் செய்கிறேன். எவன் எந்த ஆஹாரத்தால் உண்டானானோ அவன் [1] அவ்விதமே ஆவான். அடிக்கடி மிக்க விசேஷத்தையும் செய்வேன். இப்பொழுது இங்கே மூவுலகங்களிலுமுள்ள ஸுவர்ணமும் கிடைக்க அரிதான மற்றத் தனமும் தாமாக வரட்டும். தேவலோகத்திலுள்ள அப்ஸரஸுக்கூட்டங்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் விச்வாவாஸுவும் மற்றுமுள்ளவர்களும் என்னுடைய யாகத்துக்கு வரட்டும். உத்தர குருதேசங்களிலுள்ள தனமும் முழுமையும் தானாக இந்த யாகங்களுக்கு வரட்டும். ஸுவர்க்கமும் ஸுவர்க்கவாஸிகளும் தர்மமும் தாமே வரட்டும்' என்று சொன்னார். இவ்விதம் சொன்னவுடன், ஜ்வலிக்கின்ற அக்னிக்கொப்பான தேஜஸுள்ளவரும் மிக்க பராக்ரமமுள்ளவருமான அந்த அகஸ்தியமுனிவரின் தவத்தால் இவையெல்லாம் (அவ்விதமே) ஆயின. பிறகு, அந்த முனிவர்களெல்லாரும் தவத்தின் வன்மையைக் கண்டு ஸந்தோஷமடைந்து ஆச்சரியத்துடன் சிறந்த பொருளுள்ள பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்கள். 'உம்முடைய வாக்யத்தால் நாங்கள் ஸந்தோஷமடைந்தோம். நாங்கள் தபோவனத்தை விரும்பவில்லை. இந்த யாகங்களாலேயே ஸந்தோஷமடைந்தோம். நாங்கள் நியாயமாகக் கிடைத்ததைக்கொண்டு (யாகத்தையும் தீக்ஷையையும் விரும்புகிறோம். அவ்வாறே, ஹோமங்களையும் மற்றுமுள்ள கர்மத்தையும் தேடுகிறோம். [2] நாங்கள் நியாயமாக ஸம்பாதிக்கப்பட்ட ஆகாரமுள்ளவர்களும் எங்கள் கர்மங்களில் ஆசையுள்ளவர்களுமாகி வேதங்களையும் பிரம்மசர்யத்துடன் நியாயமாக விரும்புகிறோம். நாங்கள் இனிமேல் வீட்டினின்று நியாயமாக வெளிப்பட்டுத் தர்மத்தால் காணப்பட்ட (சாஸ்திர) விதியின் மார்க்கங்களைக்கொண்டு தவம் புரியப்போகிறோம். பிரபுவே! உம்மால் ஹிம்ஸையில்லாத புத்தியா

1. 'அந்த ஆகாரத்தாலேயே தேவபூஜை செய்பவனாக'

2 பொருந்தாமையால், அரைஶ்லோகம் விடப்பட்டது.

னது நன்கு விரும்பப்பட்டது. யாகங்களில் இந்த அஹிம்ஸையை நீர் எப்பொழுதும் சொல்லும். பிராம்மணஶ்ரேஷ்டரே! அதனால், நாங்கள் ஸந்தோஷமுள்ளவர்களாவோம். (யாகம்) முடிந்தவுடன், விடைபெற்றுக்கொண்டு இந்த ஸத்ரத்திலிருந்து செல்வோம்' என்று சொன்னார்கள். அவர்கள் அவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும் போது மிகப் பெரிய தேஜஸுள்ளவனும் பகைவரின் பட்டணங்களை அழிப்பவனுமான தேவராஜன் அந்த அகஸ்தியருடைய தபோபலத்தைக்கண்டு மழை பெய்வித்தான். ஜனமேஜயரே! அவருடைய யாகம் முடிகிறவரையில் அளவற்ற பராக்கிரமமுள்ள பர்ஜன்யன் மிக்க மழை பெய்துகொண்டிருந்தான். ராஜரிஷியே! தேவராஜன் ப்ருஹஸ்பதியை முன்னிட்டுக்கொண்டு நேரில் வந்து அந்த அகஸ்தியரை அருள் புரியும்படி செய்தான். பிறகு, அகஸ்தியர் மிக்க ஸந்தோஷமடைந்து யாகம் முடிந்ததும் அந்த மஹா முனிவர்களை விதிப்படி பூஜித்து அனுப்பினார்' என்று கூறினார்.

---

## தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## அநுகீதாபர்வம். (தொடர்ச்சி.)

### (கீரியின் வரலாறு.)

ஜனமேஜயர், "ஸுவர்ணமயமான தலையுள்ள கீரியின் வேஷத்துடன் மனிதன்போல வார்த்தை சொன்னது யார்? இதை, வினவப்பட்ட நீர் எனக்குச் சொல்லும்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

'இதைப்பற்றி முந்தி நீரும் என்னைக் கேட்கவில்லை. நானும் சொல்லவில்லை. கீரி யாரென்பதையும் அது மனிதன் போலப் பேசும் காரணத்தையும் கேளும். முற்காலத்தில் ஜமதக்னியானவர் சிராத்தம் செய்ய நினைத்தார். ஹோமதேனுவும் வந்தது. அதைத் தாமே கறந்தார். அந்தப்பாலைப் புதிதாயும் உறுதியாயும் சுத்தமாயுமுள்ள ஒரு பாத்திரத்தில் வைத்தார். (அப்பொழுது,) கோபமானது கீரியின் வடிவமெடுத்து அந்தப் பாத்திரத்தை இழுத்தது. கெட்ட புத்தியுள்ள கோபமானது 'நாம் அப்பிரியத்தைச் செய்தால் (இவர்) என்ன செய்வார்?' என்று ஆலோசித்து அந்த ரிஷிஶ்ரேஷ்டரைப் பரீக்ஷிக்கவிரும்பி அந்தப்பாலைக் குடித்தது. முனிவர் அதைக்கோபமென்று தெரிந்துகொண்டு அதன்மீது கோபிக்கவேஇல்லை. அரசரே! பிறகு, அந்தக் கோபமோ பிராம்மண வடிவமெடுத்து (அவரைநோக்கி,) 'ப்ருகு

ஸ்ரேஷ்டரே! நான் ஜயிக்கப்பட்டேன். உம்மால் நான் ஜயிக்கப்பட்டபடியால் பிருகுகுலத்தில் பிறந்தவர்கள் மிக்க கோபமுள்ளவர்கள் என்னும் லோகத்தின் இந்த வார்த்தையானது பொய். இப்பொழுது, பொறுமையுள்ளவரும் மஹாத்மாவுமான உம்மிடத்தில் நான் வசப்பட்டிருக்கிறேன். ஸாதுவே! (உம்முடைய) தவத்திலிருந்து பயப்படுகிறேன், பிரபுவே! என்னிடம் கிருபை செய்யவேண்டும்' என்று சொல்லிற்று. ஜமதக்நி, 'கோபமே! நான் உன்னை நன்ருகப் பார்த்தேன். நீ தாபமற்றவனுகப்போ. நீ இப்பொழுது எனக்கு அபகாரம் செய்யவில்லை. எனக்கும் கோபமில்லை. எவர்களை உத்தேசித்து இந்தப் பாலை நான் அபேக்ஷித்தேனே அந்தப் பித்ருக்கள பெரிய பாக்கியமுள்ளவர்கள். அவர்களிடமிருந்து (பயத்தைத்) தெரிந்துகொள். போகலாம்' என்று சொன்னர். இவ்வாறு சொல்லப்பட்ட (கோபமானது) நடுங்கி அவ்விடத்திலேயே மறைந்தது. பித்ருக்களுடைய சாபத்தால் கீரியாயிற்று. அந்தக் கோபமானது சாபத்திற்கு முடிவு வேண்டுமென்று அவர்களைப் பிரார்த்திக்க, அவர்களும் 'நீ தர்மத்தை நிந்தித்துச் சாபத்தின் முடிவை அடைவாய்' என்று சொன்னர்கள். அவர்களால் சொல்லப்பட்ட அந்தக் கோபமும் யாகம் செய்யும் இடங்களிலும் தர்மாரண்யத்திலும் (தர்மத்தை) நிந்தித்து ஸஞ்சரித்துக்கொண்டு அந்த யாகத்திற்கு வந்தது. பிறகு, அந்தக் கோபமானது (பிராம்மணன் செய்த) அந்த ஒருபடி மாவின் தானத்தினல் தர்மபுத்திரரைத் தூஷித்து அந்தச் சாபத்தினின்று விடப்பட்டது. தர்மமானது யுதிஷ்டிரராக இருந்ததன்றே? மஹாத்மாவான அந்த யுதிஷ்டிரருடைய யாகத்தில் அப்பொழுது இவ்விதம் நடந்தது. அப்பொழுது, நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அவ்விடத்தில் கீரியானது மறைந்தது." என்று கூறினர்.

அநுகீதாபர்வம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றாறுவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்ம பர்வம்.



(யுதிஷ்டிரர் வைஷ்ணவ தர்மத்தைப் புகழ்ந்து அதைச் சொல்லும்படி வாஸுதேவரைக் கேட்டதும், வஸிஷ்டர் முதலியவர்கள் வந்ததும், வாஸுதேவர் சொல்லத் தொடங்கியதும்.)

ஜனமேஜயர், "முன் அஸ்வமேதம் நடந்தபிறகு, பிதாமஹரானயுதிஷ்டிரர், கேசியைக் கொன்றவரான கேசவரிடத்தில் தர்மத்தின் ஸந்தேஹத்தைக் குறித்து என்ன வினவினார்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அரசரான யுதிஷ்டிரர் கடைசியான அஸ்வமேதம் செய்து ஸ்நானம் செய்தபொழுது மறுபடியும் கேசவரை நமஸ்கரித்து, 'பகவானே! வைஷ்ணவதர்மங்கள் என்ன பயனுள்ளவை? எதை முக்கிய ஆதாரமாகக்கொண்டவை? எந்தத் தர்மத்தை உத்தேசித்து முன்பு உம்மால் உண்டுபண்ணப்பட்டன? மதுஸூதனரே? நல்ல விரதங்களுள்ளவரே! உமக்கு நான் அநுக்ரஹிக்கத்தக்கவனும் பிரியனுமாயிருந்து அவைகளும் என்னால் கேட்கக்கூடியவைகளாயிருந்தால், அவற்றை எனக்குச் சொல்லும். பகவானே! உம்முடைய முகத்திலிருந்து தோன்றிய அந்தத் தர்மங்கள் பவித்ரமானவையும் எல்லாப் பாவங்களையும் அழிக்கின்றவையும் எல்லாத்தர்மங்களிலும் உத்தமமானவையும் புண்யமானவையுமாக இருக்கின்றனவல்லவா? தேவஸ்ரேஷ்டரே! அச்சுதரே! பிராம்மணனைக் கொன்றவனும் கோவைக்கொன்றவனும் தாயைக்கொன்றவனும் குருவின் மனைவியைப் புணர்ந்தவனும் சிசுவைக்கொன்றவனும் நன்றி மறந்தவனும் கட்குடிப்பவனும் வேதத்தை விற்பவனும் மித்திரர்களுடைய விஸ்வாஸத்தைக் கெடுத்தவனும் வீரனைக் கொன்றவனும் கர்ப்பத்தை அழித்தவனும் தவத்தை விற்பவர்களும் தானத்தை விற்பவர்களும் தம்மை விற்பவர்களான மூடர்களும் இழிந்த தொழில்களால் ஜீவிப்பவனும் பாவிகளும் ரஹஸ்யமாக அப்பிரியத்தைச் செய்பவர்களும் வஞ்சகர்களும் டம்பமுள்ளவர்களும் தூஷிப்பவர்களும் (தயிர்பால் முதலான) ரஸத்தில் மாறுதலைச் செய்பவர்களும் பிரம்மஹத்தி செய்தவர்களும் சூத்திரனிடத்தில் வேலைக்காரர்களாக இருப்பவர்களும் திருடர்களும் புரோஹிதர்களான பிராம்மணர்களும் அடைக்கலமாக வைத்ததை அபஹரிப்பவர்களும் ஸ்திரீயைக் கொன்றவர்களும் பிறருடைய மனைவியைப் புணர்பவர்களும் ஆகிய இவர்களும் மற்றுமுள்ள பாவிகளும்

கூட எவைகளைக் கேட்டு பாவத்திலிருந்து விடப்படுகிறார்களோ அவைகளை உம்முடைய பக்தனான எனக்குச் சொல்லும்' என்று வினவினார். தர்மபுத்திரரால் தேவரான வாஸுதேவர் ஸபையில் இவ்விதம் வினவப்பட்டவுடன், தத்வத்தைக் கண்டவர்களும் தபஸ்விகளுமான வஸிஷ்டர்முதலான முனிவர்களும் அவ்வாறே பாகவதர்களும், மிக்க ரஹஸ்யமும் உத்தமமுமான வைஷ்ணவ தர்மத்தைக் கேட்க விரும்பி அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். யுதிஷ்டிரர், 'பக்தர்களிடத்தில் பிரீதியுள்ளவரே! தேவரே! நீர் என்னை உண்மையாக அந்தரங்கத்துடன் உம்முடைய திருவடியை ஆஸ்ரயித்த பக்தனாகவும் ஸ்நேஹிதனாகவும் எண்ணுகிறீரானால் நானும் அனுக்கிரஹிக்கத் தக்கவனாக இருந்தால், தர்மத்தின் ரஹஸ்யங்களையெல்லாம் உண்மையாக அறிய விரும்புகின்ற எனக்கு அவைகளைச் சொல்லும். மனு, வஸிஷ்டர், கஸ்யபர், கார்க்கர், கௌதமர், கோபாலகர், பராசரர், புத்திமானான மைத்ரேயர், உமை, மஹேஸ்வரர் இவர்கள் சொன்ன தர்மங்களையும் நந்திசொல்லிய பரிசுத்தமான தர்மங்களையும் பிரம்மா ஸுப்ரமண்யர், தூமாயனர் இவர்களால் சொல்லப்பட்ட தர்மங்களையும் காண்ட வைஸ்வானர தர்மங்களையும் பார்க்கவதர்மங்களையும் யாஜ்ஞவல்கியர், மார்க்கண்டேயர், பாரத்வாஜர், பிருஹஸ்பதி, குணி, குணிபாகு, விஸ்வாமித்திரர், ஸுமந்து, ஜைமினி, [1]சகுனி, புலஸ்தியர், புலஹர், பாவகர், அகஸ்தியர், மௌத்கல்யர், சாண்டில்யர், சலபாயனர், வாலகில்யர், ஸப்த ரிஷிகள், ஆபஸ்தம்பர், சங்கர், லிகிதர், பிரஜாபதி, யமன், மஹேந்திரன், வியாக்கிரபாதர், வியாஸர், விபண்டகர், நாரதர் இவர்களால் சொல்லப்பட்டதர்மங்களையும் காபோத தர்மங்களையும் விதுரருடைய வாக்கியங்களையும் பிருகு, அங்கிரஸ் இவர்கள் சொன்ன தர்மங்களையும் கிரௌஞ்ச தர்மங்களையும் மிருதங்கர், ஸூர்யன், ஹரீதர், பிசங்கர், கதபர், ஸுவாலகர், உத்தாலகர், சுக்கிரன், வைசம்பாயனர், இவர்களால் சொல்லப்பட்ட தர்மங்களையும் இவை முதலான மற்றுமுள்ள தர்மங்களையும் நான் கேட்டிருக்கிறேன். தேவரே! இந்த எல்லாத் தர்மங்களையும்விட உம்முடைய முகத்திலிருந்து வெளிப்பட்ட தர்மங்கள் பரிசுத்தஞ்செய்பவைகளாகவும் பரிசுத்தமானவைகளாவும் இருப்பதால் மேலானவைகளென்பது என்னுடைய எண்ணம். கேசவரே! அச்சுதரே! ஆகையால், உம்மைச் சரணமடைந்தவனும் உம்முடைய பக்தனுமான எனக்குச் சிறந்தவைகளும் புண்ணியமானவைகளுமான உம்முடைய தர்மங்களைச்

1 இவர் ஒரு முனிவர்.

சொல்லும், என்று வினவினர். தர்மபுத்திரரால் இவ்விதம் வினவப் பட்டவரும் தர்மங்களை அறிந்தவருமான கேசவரோ, மனமகிழ்ந்து தர்மபுத்திரருக்கு அருமையான பொருளுள்ள தர்மங்களைச்சொல்ல லானர்.

'குந்தியின் மைந்தரே! நல்ல விரதங்களுள்ளவரே! தர்மங்களில் இவ்விதம் முயற்சியுள்ள உமக்கு உலகத்தில் கிடைக்க அரிதானது ஒன்றுமில்லை. ராஜேந்திரரே! தர்மத்தைக் கேட்டாலும் பார்த்தாலும் சொன்னாலும் சிலாகித்தாலும் அது மனிதனை இந்திரபதத்தை அடையும்படி செய்கிறது. பகைவரை வாட்டுகிறவரே! தர்மமானது தாயும் தந்தையுமாக இருக்கிறது. தர்மமானது நாதனும் ஸுஹ்ருத் துமாக இருக்கிறது. தர்மமானது ஸஹோதரனும் நண்பனுமாக இருக்கிறது. தர்மமானது ஸ்வாமியாக இருக்கிறது. தர்மத்தால் பொருளும் இன்பமும் உண்டாகின்றன. தர்மத்தால் போகங்களும் ஸுகங்களும் உண்டாகின்றன. தர்மத்தால் மேலான ஐஶ்வர்யம் உண் டாகிறது. தர்மத்தால் சிறந்ததான ஸுவர்க்ககதி கிடைக்கிறது. சுத்த மான தர்மத்தை அனுஷ்டித்தால் அது பெரிய பயத்தினின்று காப் பாற்றுகிறது. தர்மத்தால் பிராம்மண்யமும் தேவத்தன்மையும் லபித் திக்கின்றன. தர்மமானது மனிதனைப் பரிசுத்தப்படுத்துகிறது. யுதிஷ் டிரரே! புருஷனுக்கு எப்பொழுது பாவமானது காலத்தால் குறை கிறதோ அப்பொழுது தர்மத்தைச் செய்வதற்குப் புத்தி உண்டா கிறது. ஆயிரம் ஜன்மங்களாலும் மனுஷ்ய ஜன்மம் கிடைப்பதரி தன்றோ? அதை அடைந்தும் இவ்வுலகில் எவன் தர்மத்தைச்செய்ய வில்லையோ அவன் தன்னால் வஞ்சிக்கப்பட்டவன். எவர்கள் நிந்திக்கப் பட்டவர்களும் தரித்திரர்களும் வியாதியுள்ளவர்களும் பிறரால் வெறுக்கப்படத்தக்கவர்களும் மூர்க்கர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் முன் ஜன்மத்தில் தர்மத்தைச் செய்யாதவர்கள். எவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்களும் சூரர்களும் பண்டிதர்களும் போகமுள்ள வர்களும் ரோகமற்றவர்களும் சிறந்த ரூபமுள்ளவர்களுமாக இருக்கி றார்களோ அவர்கள் முன்ஜன்மத்தில் நன்கு தர்மத்தைச் செய்தவர் கள். சுத்தமான தர்மத்தைச் செய்தால்(அது அவனை) இவ்விதம் உத் தமமான கதியை அடையச்செய்கிறது. எவன் அதர்மத்தைச் செய்கி றானோ அவன் திர்யக் ஜாதியில் விழுகிறான். குந்தியின் புத்திரரே! ரஹஸ்யமும் மிக்க உத்தமமுமான இந்தத் தர்மத்தைக்கேளும். பாண் டவரே! பக்தரான உமக்குச் சிறந்ததான தர்மத்தைச்சொல்லுகிறேன். நீர் எனக்கு மிக்க பிரியராகவும் எப்பொழுதும் என்னைச் சரணமடைந்

த்வாரகவும் இருக்கிறீர். (ஆகையால், உமக்குப்) பரமார்த்தத்தையும் சொல்வேன். (இந்தத்) [1]தர்மஸம்ஹிதையைப்பற்றி என்ன ஸந்தேஹம்? தர்மத்தை நிலை நிறுத்துவதற்காகவும் துஷ்டர்களை நாசம் செய்வதற்காகவும் நான் எனக்கு இந்த மானிட ஜன்மத்தை என்னிடத்தில் மாயையினால் செய்துகொண்டேன். மானிடப்பிறவியை அடைந்த என்னை எவர்கள் அவமதிப்பாக நினைக்கிறார்களோ அந்த மூடர்கள் பிறப்பிறப்புவட்டத்தினுள் திர்யக்ஜாதிகளில் அநேகமுறை பிறக்கின்றனர். எவர்கள் என்னை எல்லாப் பிராணிகளிடத்திலும் இருப்பவனாக ஞானக்கண்ணால் பார்க்கின்றார்களோ என்னுடைய பக்தர்களும் எப்பொழுதும் தியானம் செய்பவர்களுமான அவர்களை நான் என்னுடைய ஸமீபத்தில் வரவழைத்துக்கொள்ளுகிறேன். பாண்டவரே! என்னுடைய பக்தர்கள் நாசமடையமாட்டார்கள். என்னுடைய பக்தர்கள் பாபமற்றவர்கள். மானிடப்பிறவியில் என்னுடைய பக்தர்களது பிறவியானது பயனுள்ளது. பாண்டு நந்தனரே! என்னுடைய பக்தர்கள் பாபங்களில் நோக்கமுள்ளவர்களாக இருந்தாலும் தாமரை இலையானது ஜலத்தினால்(பற்றாமல்)விடப்படுவதுபோல எல்லாப் பாதகங்களாலும் விடப்படுகிறார்கள். ஐயா! ஆயிரம் ஜன்மங்களில் தவத்தால் ஆத்மாவை ஆராதித்தமனிதர்களுக்குத்தான் பக்தியானது உண்டாகிறது; ஸம்சயமில்லை. மேலானதும் ரஹஸ்யமும் கூடஸ்தமும் அசைவற்றதும் அழிவற்றதுமான ரூபத்தை என்னுடைய பக்தர்கள் பார்ப்பதுபோலத் தேவர்கள் பார்க்கமாட்டார்கள். பாண்டவரே! அவதாரங்களில் காணப்படும் என்னுடைய மற்ற ரூபத்தை எல்லாப்பிராணிகளும் எல்லாப் பிரயோஜனங்களுக்காகவும் பூஜிக்கிறார்கள். தேவர்களால் பார்க்கப்படும் என்னுடைய ரூபத்தை இவ்வுலகில் சென்றனவும் வருவனவுமான ஆயிரங்கோடி கற்பங்களில் காண்பிக்கிறேன். எவன் என்னை ஸிருஷ்டியையும் பரிபாலனத்தையும் பிரளயத்தையும் செய்பவனாக அறிந்து சரணமடைகிறானோ அவனை நான் அநுக்ரஹித்து ஸம்ஸாரத்தினின்றும் விடுவிக்கிறேன். நான் (எல்லாத்) தேவர்களுக்கும் ஆதியல்லவா? பிரம்மா முதலானவர்கள் என்னால் படைக்கப்பட்டார்கள். நான் என்னுடைய மாயையை ஆஶ்ரயித்து எல்லா உலகத்தையும் படைக்கிறேன். நான் தபஸை மூலமாகக்கொண்ட அவ்யக்தமாகவும் ரஜஸின் மத்தியில் நிலை பெற்ற பிரம்மன்முதல் ஸ்தம்பபரியந்தமாகவும் லோபமற்ற மேலான ஸத்வமாகவும் இருக்கிறேன். ஸ்வர்க்கத்தை என்னுடைய தலையாக

---

1 தொகுத்துச் சொல்வது.

வும் சந்திர ஸூர்யர்களைக் கண்களாகவும் கோக்களையும் அக்னியை யும் பிராம்மணனையும் முகமாகவும் காற்றை என்னுடைய சுவாஸமாக வும் எட்டுத்திசைகளையும் என்னுடைய கைகளாகவும் நக்ஷத்திரங் களை ஆபரணமாகவும் எல்லாப் பிராணிகளுக்கும் அவகாசத்தைக் கொடுக்கும் ஆகாயத்தை மார்பாகவும் தெரிந்துகொள்ளும். மேகம் வாயு இவற்றின் மார்க்கமானது அழிவற்றதான என்னுடைய வயிறு. யுதிஷ்டிரரே! த்வீபங்களும் கடலும் மலைகளுமுள்ளதும் எல்லாவற் றையும் தரிப்பதுமான பூமண்டலமானது என்னுடைய பாதங்கள். நான் ஆகாயத்தில் ஒருகுணமுள்ளவனுகவும் காற்றில் இரண்டுகுண முள்ளவனுகவும் அக்னியில் மூன்றுகுணமுள்ளவனுகவும் ஜலத்தில் நான்கு குணமுள்ளவனுகவும் இருக்கிறேன். ஐந்து மஹா பூதங்களி லும் சப்தம்முதலான எந்த ஐந்து குணங்களிருக்கின்றனவோ தன் மாத்திரைகளாக இருக்கும் அந்த நான் பூமியில் அந்த ஐந்து வித குணங்களாக இருக்கிறேன். நான், ஆயிரம் தலைகளுள்ளவனும் ஆயி ரம் முகங்களும் கண்களுமுள்ளவனும் ஆயிரம் கைகளும் வயிறுகளு முள்ளவனும் ஆயிரம்தொடைகளுள்ளவனும் ஆயிரம்பாதங்களுள்ள வனுமாக இருக்கிறேன். நான் பூமியை நாற்புறங்களிலும் நன்கு தரித் துக்கொண்டு பத்து அங்குலஸ்வரூபமுள்ளவனுக, (எல்லாவற்றையும்) கடந்திருக்கிறேன். நான் எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாகஇருந் துகொண்டு எல்லாவற்றையும் வியாபித்திருக்கிறேன். நான் சிந்திக்க முடியாதவன். நான் முடிவற்றவன். நான் மூப்பற்றவன். நான் பிறப் பற்றவன். நான் முந்தினவனற்றவன். நான் கொல்லப்பட முடியாதவன். நான் அளவிடக் கூடாதவன்; அழிவற்றவன்; அரசரே! நான் குணங்க ளற்றவன்; மறைந்த ஸ்வரூபமுள்ளவன்; துவந்துவமற்றவன்; மமதை யற்றவன். நான் அம்சமற்றவன்; விகாரமற்றவன்; மோக்ஷத்திற்குக் காரணன். வேந்தரே! ஸ்வதையும் நான்; ஸ்வதையும் நான்; ஸ்வாஹா காரமும் நான். நான் தேஜஸாலும் தவத்தாலும் நான்குவிதமான பிராணி ஸமூகத்தையும் ஸ்நேஹபாசங்களாகிற கயிறுகளால் கட்டி என்னுடைய மாயையால் தரிக்கிறேன். நான் நான்கு ஆச்ரமங்களின் தர்மமும் [1]சாதுர்ஹோத்ரத்தின் பயனைப் புஜிப்பவனும் நான்கு மூர்த்திகளுள்ளவனும் நான்கு யஜ்ஞங்களுள்ளவனும் நான்கு ஆச்ர மங்களையும் படைப்பவனுமாக இருக்கிறேன். யுதிஷ்டிரரே! நான் பிரளயங்களில் எல்லா உலகத்தையும் ஸம்ஹாரம்செய்து என்னு டைய வயிற்றில் வைத்துக்கொண்டு திவ்யமான யோகத்தோடு சய

1 நான்கு ரித்விக்குக்களால் செய்யப்படும் யாகம்.

னம் செய்கிறேன். ஆயிரம் யுகம் வரையிலுள்ள பிரம்மாவினுடைய இரவில் பெருங்கடலிலிருந்து (பிறகு) ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பிராணிகளைப் படைக்கிறேன். நான் ஒவ்வொரு கற்பத்திலும் பிராணிகளை ஸம்ஹரிக்கிறேன்; படைக்கிறேன். என்னுடைய மாயையால் மோஹத்தை அடைந்த அவைகள் என்னை அறிகிறதில்லை. எப்பொழுதும் தேடத் தகுந்தவனும் குருடனைச் செய்பவனுமான என்னுடைய கதியானது அவிந்தவிளக்கின் கதிபோல அறியப்படுகிறதே இல்லை. மன்னரே! ஓரிடத்திலும் நானில்லாத பிராணியுமில்லை; என்னிடத்திலில்லாத ப்ராணியுமில்லை. ஸ்தூலமும் ஸூக்ஷ்மமுமான இந்த ஜகத்தானது எவ்வளவு [1]வரையில் உள்ளதாக இருக்கிறதோ அவ்வளவு வரையில் நான் இந்தஜகத்தில் ஜீவனாக இருக்கிறேன். இதுவிஷயத்தில் பலவாறாகச் சொல்லுவதால் என்ன பயன்? இதை உமக்கு உண்மையாகச் சொல்லுகிறேன். சென்றதும் வருவதுமாகவுள்ளவெல்லாம் நானே. பாரதரே! என்னால் ஸிருஷ்டிக்கப்பட்டவைகளும் என் ஸ்வரூபங்களுமான பிராணிகள் மாயையால் மோஹமடைவிக்கப்பட்டு என்னையே தெரிந்துகொள்ளவில்லை. அரசரே! இவ்விதம் தேவர்களுடனும் அஸுரர்களுடனும் மனிதர்களுடனும்கூடின இந்த ஜகத்தெல்லாம் என்னிடத்திலிருந்து உண்டாகிறது; என்னிடத்திலேயே லயிக்கிறது' என்று சொன்னார்.

---

## தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(கோவிந்தர் நான்கு ஜாதி தர்மங்களையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

பிரபுவான கேசவர் இவ்விதம் எல்லா ஜகத்தையும் தம்மிடத்திலிருந்து உண்டானதாகச் சொல்லி, பிறகு, தர்மபுத்திரருக்குப் புண்ணியமான தர்மங்களைச் சொல்லலானார். 'பாண்டவரே! பவித்திரமும் பாபத்தை நசிக்கச்செய்வதும் என்னால் சொல்லப்படுவதும் புண்யமும் சிறந்ததுமான தர்மசாஸ்திரத்தின் பயனை உள்ளபடி கேளும். யுதிஷ்டிரரே! எவன் சுத்தனாகவும் ஒரே சித்தமுள்ளவனாகவும் தவத்தோடுகூடியவனாகவும் இருந்துகொண்டு ஸுவர்க்கத்தையும் புகழையும் ஆயுளையும் கொடுப்பதும் அறியத்தக்கதுமான தர்மத்தைக் கேட்கிறானோ ச்ரத்தையுள்ள அவனுக்கு இவ்வுலகில் முன்

---

1 'மாத்ரம்' என்று மாற்றப்பட்டது

சேர்த்துவைக்கப்பட்ட பாபமானது முழுமையும் சீக்கிரத்தில் நசிக்கிறது. என்பக்தனுக்கு விசேஷமாக நசிக்கிறது ' என்று சொன்னார். இவ்விதம் கேசவரால் சொல்லப்பட்டதும் புண்ணியமும் உண்மையுமான வார்த்தையைக் கேட்டு, மிக்க ஸந்தோஷமுள்ள மனத்தையுடையவர்களாகிப் பெரிய ஆச்சரியத்தைப்பற்றி ஆலோசிக்கின்றவர்களான எல்லாத் தேவரிஷிகளும் பிரம்மரிஷிகளும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் பூதங்களும் யக்ஷர்களும் கிரஹங்களும் குஹ்யகர்களும் புஜகர்களும் மஹாத்மாக்களான வாலகில்யர்களும் தத்வதர்சிகளான யோகிகளும் [1]ஐந்துகாலங்களில் உபாஸிக்கும் பாகவதர்களும் குதூஹலம் மேலிட்டவர்களும் மிக்க ஸந்தோஷமுள்ள இந்திரியங்களையும் மனத்தையுமுடையவர்களுமாகிச் சிறந்ததான வைஷ்ணவ தர்மத்தைப்பற்றிய தர்மசாஸ்திரத்தைக் கேட்கவும் அந்த வாக்யத்தை உள்ளத்தில்வைத்துக்கொள்ளவும் விரும்பித் தலைவணங்கி நமஸ்கரித்தார்கள். பிறகு, பிரதாபமுள்ளவரான தர்மபுத்திரர் வாஸுதேவரால் திவ்யமான கண்ணால் பார்க்கப்பட்டவர்களும் பாபமற்றவர்களுமான அவர்களைப் பார்த்து, (பாபங்களை) அபஹரிப்பவரான கேசவரை முடியால் வணங்கித் தர்மத்தைக் கேட்கலானார். அவர், 'தேவரே! பிராம்மணனுடைய கதி எப்படிப்பட்டது? க்ஷத்திரியனுடைய கதி எப்படிப்பட்டது? வைஸ்யனுடையகதி எப்படிப்பட்டது? சூத்திரனுடைய கதி எப்படிப்பட்டது? பிராம்மணனும் க்ஷத்திரியனும் வைஸ்யனும் சூத்திரனும் யமனுடைய வீட்டில் எவ்விதம் பாசத்தால் கட்டப்படுகிறார்கள்? இந்தக் கர்மங்களின் பயனைச் சொல்லும். உலகங்களுக்கு நாதரே! உமக்கு நமஸ்காரம்' என்று வினவினார். புத்திமானான தர்மபுத்திரரால் இவ்விதம்வினவப்பட்ட கேசவர், பிறகு, நான்குவர்ணத்தார்களுக்கும் கர்மங்களால் உண்டான ஸம்ஸார கதியைச் சொல்லலானார்.

பகவான், 'தர்மத்தை அநுஷ்டிப்பவருள் சிறந்தவரே! வர்ணக்கிரமமாகத் தர்மத்தைக் கேளும். புருஷஸ்ரேஷ்டரே! பிராம்மணனுக்குச் சிறிதும் பாபமில்லை. சிகையும் யஜ்ஞோபவீதமுமுள்ளவர்களும் ஸந்த்யையை உபாஸிப்பவர்களும் பூர்ணாஹுதியைச்செய்தவர்களும் விதிப்படி ஹோமம் செய்கின்றவர்களும் வைஸ்வதேவம் செய்கின்றவர்களும் அதிதிகளைப் பூஜிப்பவர்களும் எப்பொழுதும் வேதாத்யயனம் செய்யும் தன்மையுள்ளவர்களும் ஜபமென்னும் யஜ்ஞத்தைப் பிரதானமாகக் கொண்டவர்களும் காலையிலும்மாலையிலும் ஹோமம்

1 சாந்திபர்வம் 1247-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

செய்து புஜிப்பவர்களும் சூத்திர போஜனத்தை விலக்கினவர்களும் டம்பத்தையும் பொய்யையும் விட்டவர்களும் தம் மனைவிகளிடத்தி லேயே ஆசையுள்ளவர்களும் பஞ்சயஜ்ஞங்களைப் பிரதானமாகக் கொண்டவர்களும் அக்னிஹோத்திரத்தை உபாஸிப்பவர்களும் ஹோமம் செய்யப்படும் மூன்று அக்னிகளாலும் பாபம் எரிக்கப்பட் டவர்களும் பாவச் செய்கையற்றவர்களுமான அவர்கள் பிரம்மலோ கத்தை அடைகின்றனர். பிரம்மலோகத்திலோ, பரிசுத்தர்களும்பிரம் மாவின் காயகர்களுமான கந்தர்வர்களால் மிகவும் கானம் செய்யப் படுகின்றவர்களும் பிரம்மதேவரால் பூஜிக்கப்படுகின்றவர்களுமாகப் பூதங்களின் பிரளயம் வரையில் பிரம்மலோகத்தில் மகிழ்கின்றனர். க்ஷத்திரியனும் ராஜ்யத்திலிருந்து தன் தர்மத்தைப் பரிபாலிப்பவனும் பிரஜைகளை நன்கு காப்பவனும் எப்பொழுதும் ஆறிலொரு பாகத்தில் ஆசையுள்ளவனும் யாகத்திலும் தானத்திலும் ஆசையுள்ளவனும் தீர னும் எப்பொழுதும் தன் மனைவியினிடத்திலேயே பற்றுதலுள்ளவ னும் சாஸ்திரத்தை அநுஸரிப்பவனும் தத்வத்தை உணர்ந்தவனும் பிர ஜைகளின் காரியத்தை முக்கியமாகக் கொண்டவனும் எப்பொழுதும் அந்தணர்களுக்கு விருப்பமானபொருளைக் கொடுப்பவனும் வேலைக் காரர்களைப் போஷிப்பதில் ஆசையுள்ளவனும் ஸத்யஸந்தனும் எப் பொழுதும் சுத்தனும் ஆசையும் டம்பமுமற்றவனுமாக இருக்க வேண்டும். (இவ்விதமிருக்கும்) க்ஷத்திரியனும் தேவர்களால் ஸேவிக் கப்பட்ட உத்தமமான கதியை அடைகிறான். அங்கு அவன் சிறந்த தேஜஸுள்ளவனாகி தேவலோகத்தவர்களான அப்ஸரஸுகளாலும் கந்தர்வர்களாலும் விசேஷமாக ஸேவிக்கப்பட்டு இந்திரனால் பூஜிக்கப் பெற்று மகிழ்கிறான். அங்கு முப்பது சதுர்யுகம் தேவன்போல விளையாடி இந்த மானிடலோகத்தில் நான்கு வேதங்களையுமறிந்த பிராம்மணனாகப் பிறக்கிறான். கிருஷியிலும் மாடுமேய்ப்பதிலும் பற்றுதலுள்ளவனும் தர்மத்தைத் தேடுவதில் நோக்கமுள்ளவனும் தான தர்மத்திலும் ஆசையுள்ளவனும் பிராம்மணர்களுக்குப் பணி விடை செய்பவனும் ஸத்யஸந்தனும் எப்பொழுதும் சுத்தனும் லோபமும் டம்பமும் அற்றவனும் நேர்மையுள்ளவனும் தன் மனைவி யினிடத்திலேயே ஆசையுள்ளவனும் ஹிம்ஸையும் துரோஹமும் செய்யாதவனும் வர்த்தகத்தொழில்களைவிடாதவனும் தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிப்பவனுமான வைஸ்யன் ஸுவர்க்கத்தை அடைகிறான். (அவ்விடத்தில்)அப்ஸரஸுகளின் கூட்டங்களால்பூஜிக் கப்பட்டு நாற்பத்தைந்து சதுர்யுகம் விளையாடி இந்த மானிடலோகத் தில் வீர்யமுள்ள அரசனாகப் பிறக்கிறான். ஐம்பதுகோடி ஸுவர்ணங்

களும் மிகுதியான ரத்தினங்களும் யானைகளும் குதிரைகளும் ரதங்களுமுள்ளவனாகிச் சிறந்த போகங்களையும் அனுபவிக்கிறான். எப்பொழுதும் மூன்று வர்ணத்தார்களுக்கும் பணிவிடை செய்வதில் ஆசையுள்ளவனும், விசேஷமாகப் பிராம்மணர்களுக்குத் தாஸன்போல் விருப்பவனும், யாசிக்கப்படாமல் கொடுப்பவனும், உண்மையும் சுத்தியுமுள்ளவனும், குருவையும் தேவர்களையும் பூஜிப்பதில் ஆசையுள்ளவனும், பிறருடைய மனைவியினிடம் ஆசையற்றவனும், பிறருக்கு ஹிம்ஸையைச் செய்யாமல், காக்கவேண்டியவர்களைக் காப்பவனும் பிராணிகளுக்கு அபயமளிப்பவனுமான சூத்திரனும் ஸ்வர்க்கத்தை அடைகிறான். மிக்க தவமுள்ளவனான அவன் ஸ்வர்க்க லோகத்தில் கோடி வருஷம் விளையாடி இம்மானிட லோகத்தில் தனபதியான வைசியனாகப் பிறக்கிறான். இவ்விதம் ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கக்கூடியதும் தர்மத்தைக்காட்டிலும் மேலானது வேறொன்றுமில்லை; பாபகர்மங்களைப் போக்கக் கூடியதும் தர்மத்தைக் காட்டிலும் மேலானது வேறு ஒன்றுமில்லை. ஆகையால், கிடைக்க அரிதான மானிட ஜன்மத்தை அடைந்து எப்பொழுதும் தர்மத்தைச் செய்ய வேண்டும். தர்மத்தில் ஆசையுள்ளவர்களுக்கு உலகத்தில் கிடைக்க அரிதானது ஒன்றுமில்லை. அரசரே! இவ்வுலகில் பிரம்மதேவரால் எவனுக்கு எந்தத் தர்மம் விதிக்கப்பட்டிருக்கிறதோ அவன் அதை நன்கு அனுஷ்டித்துப் பாபத்தைப் போக்கிக்கொள்ள வேண்டும். எந்தக் கர்மமானது இயற்கையாக உள்ளதோ அதை ஒருவனும் விடக் கூடாது. அதுவே அவனுக்குத் தர்மம். அதனால் அவன் ஸித்தியை அடைகிறான். தன் தர்மமானது இழிவானதானாலும் பாபகர்மாவைப் போக்குகிறது. இவ்விதமே, பாபம் வளர்ந்தால் தர்மமும் குறைகிறது' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! தேவரே! தேவர்களுக்கு ஈசரே! புண்ய பாபங்களின் குறைவையும் வ்ருத்தியையும் கிரமமாகக் கேட்க எனக்கு மிக்க விருப்பம் இருக்கிறது' என்று சொன்னார். பகவான் சொல்லத் தொடங்கினார். 'வேந்தரே! ஸநாதனமும் அறிய மிக அரியதும் நித்யமுமான அந்தத்தர்மஸூக்ஷ்மத்தை முழுமையும் கேளும். மஹாஜனங்களும் அதில் முழுகுகின்றனர். குளிர்ந்த ஜலமானது உஷ்ணமான அதிக ஜலத்தால் வியாபிக்கப்பட்டால் அந்த க்ஷணத்திலேயே குளிர்ச்சி நசித்து உஷ்ணமாகிறது. உஷ்ணமான சிறிது ஜலமானது அதிகமான குளிர்ந்த ஜலத்தால் வியாபிக்கப்பட்டால் உஷ்ணம் நசித்துக் குளிர்ந்ததாகிறது, அதுபோல, புண்ணியமோ பாபமோ

அதிகமாக இருப்பது குறைவாகஇருப்பதைச் சீக்கிரத்தில் நசிக்கச் செய்யும். இதில் ஆலோசனை செய்யவேண்டாம். ராஜேந்திரரே! அந்தப் புண்ணிய பாபங்கள் ஸமமாக இருந்தால் மறைக்கப்பட்டது விருத்தியாகும். சொல்லப்பட்டது குறையும். ராஜேந்திரரே! கௌரவத்தைக் கொடுப்பவரே! பாவமானது சொல்லுவதாலும் பச்சாத்தாபப்படுவதாலும் பெரும்பாலும் நசிக்கிறது. அவ்விதம் செய்யப்பட்ட தருமமும் நசிக்கிறது. அவ்விரண்டும் மறைக்கப்பட்டால் நன்கு விருத்தியை அடைகின்றன. ஆகையால், வித்வானானவன் எல்லா முயற்சியாலும் பாவத்தை மறைக்கக்கூடாது. ஆகையால், இந்தப் பாபத்தைக் குறைக்கவேண்டிய காரணத்திற்காக, முயற்சியுடன் சொல்லவேண்டும். ஆகையால், எப்பொழுதும் பாபத்தைச் சொல்ல வேண்டும். தர்மத்தை மறைக்கவேண்டும்' என்று சொன்னார்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்ம பர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர், அதர்மம், கொடைவகை, பயன்வகை, தானபாத்ர லக்ஷணம், அந்தணர்பெருமை இவற்றை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

தர்மபுத்திரரான யுதிஷ்டிரர், அந்த அச்சுதருடைய இவ்விதமான வார்த்தையைக் கேட்டு, மறுபடியும் ஹரியை நோக்கி வேறொரு தர்மத்தைப் பற்றி வினவலானார். 'புருஷோத்தமரே! எந்த ஜன்மங்கள் வீணானவை? எந்தத்தானங்கள் வீணானவை? எந்த மனிதர்களுடைய ஜீவனம் வீணானது? ஜநார்த்தனரே! புருஷோத்தமரே! மனிதன் கொடுக்கப்பட்ட தானத்தை இவ்வுலகில் எவ்வித நிலைமைகளில் அனுபவிக்கிறான்? கேசவரே! கர்ப்பத்திலிருக்கும்போது எதை அனுபவிக்கிறான்? பால்யத்தில் எதை அனுபவிக்கிறான்? யௌவனத்தில் எதை அனுபவிக்கிறான்? முதுமையில் எதை அனுபவிக்கிறான்? தேவரே! பிரபுவே! ஸாத்விகமான தானம் எப்படிப்பட்டது? ராஜஸமான தானம் எப்படிப்பட்டது? தாமஸமான தானம் எப்படிப்பட்டது? (அவற்றுள்) எது திருப்தி செய்விக்கும்? உத்தமமான தானம் எப்படிப்பட்டது? அவைகளுக்கு என்னபயன் உண்டாகும்? எந்தத்தானம் மேலானகதியை அடையச்செய்கிறது? எந்தத்தானம் மத்யமமானகதியை அடையச்

செய்கிறது? எது இழிவானகதியை அடையச்செய்கிறது? தேவர்களுக்கும் தேவரே! (இவற்றை) எனக்குச் சொல்லும். மதுஸூதனரே! இவற்றை நான் அறிய விரும்புகிறேன். எனக்கு மிக்க குதூஹலமிருக்கிறது. உம்முடைய வசனமானது உண்மையும் புண்யமுமாக இருக்கிறது' என்று வினவினர். இவ்விதம் பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரரால் தர்மத்தைப்பற்றி முயற்சியுடன் வினவப்பட்ட வாஸுதேவர், பிறகு, தர்மபுத்திரருக்குத் தர்மங்களைச் சொல்லத் தொடங்கினர்.

"அரசரே! நியாயம் தவருததும் உண்மையும் உத்தமமும் என்ருல் சொல்லப்படுவதும் புண்யமானதும் எல்லாப்பாவங்களையும் போக்குவதுமான வசனத்தைக் கேளும். வேந்தரே! பதினன்கு ஜன்மங்கள் வீணனவை. ஐம்பத்தைந்து தானங்கள் முறையாக வீணனவை. எவர்களுடைய வாழ்நாள்கள் வீணனவையோ அவர்கள் அறுவராகச்சொல்லப்பட்டிருக்கிருர்கள். வேந்தரே! அவைகளையெல்லாம் கிரமமாகச்சொல்லுகிறேன். யுதிஷ்டிரரே! பாண்டவரே! தர்மத்தை அழிப்பவர்கள், பேராசையுள்ளவர்கள், பாபிகள், (தேவர்களுக்கல்லாமல்)வீணுகப்பாகம்செய்ததைப் புஜிப்பவர்கள், பிறர்மனைவிகளிடத்தில் ஆசையுள்ளவர்கள், சமையலில் வேற்றுமை செய்பவர்கள், உண்மையற்றவர்கள், சுற்றத்தார்கள் கஷ்டப்படும்போது ஒருவனுகச் சுவையுள்ள அன்னத்தைப் புஜிப்பவன், தகப்பனுரையும் தாயாரையும் உபாத்தியாயரையும் குருவையும் அம்மானையும் அவனுடையமனைவியையும் அடித்து வைபவர்கள், பிராம்மணனுக இருந்தும் ஸந்தியோபாஸ்தி செய்யாதவன், ஸ்வாஹையற்றவன், ஸ்வதையற்றவன், சூத்திரர்களுடைய அன்னத்தைப் புஜிக்கும்த்விஜன், என்னிடத்திலாவது சங்கரரிடத்திலாவது பிரம்மாவினிடத்திலாவது பிராம்மணர்களிடத்திலாவது பக்தியற்றஇழிவான மனிதர்கள் ஆகியஇந்தப் பாவிகளுடைய ஜன்மங்கள் வீணனவையென்று தெரிந்துகொள்ளும். அரசரே! ராஜஸ்ரேஷ்டரே! 1அசிரத்தையுடன்கொடுத்ததும்அவமதித்துக்கொடுத்ததும் டம்பத்திற்காகக்கொடுத்ததும் பாஷண்டிகளுக்குக் கொடுத்ததும் சூத்திரனுடையஆசாரமுள்ளவனுக்குக் கொடுத்ததும் கொடுத்

1 " இங்கு, 57-தானங்கள் காணப்படுகின்றன. 'அசிரத்தையுடன் அவமதித்து டம்பத்திற்காகக் கொடுத்ததும்' என முதல் மூன்றையும் ஒன்ருகக் கொள்ளலும்; 'ஸேவகன், சம்பளம்வாங்குகிறவன்' என்னும் இரண்டையும் ஒன்ருகவும், 'அதமப்ராம்மணன், இழிவானவன்' என்னும் இரண்டையும் ஒன்ருகவும் கொள்ளலுமாம்.

து சொல்லப்பட்டதும் கோபத்தோடுகொடுத்ததும், கொடுத்தபின் துக்கிக்கப்பட்டதும் டம்பமாக ஸம்பாதித்துக்கொடுத்ததும், பொய் சொல்லிஸம்பாதித்துக்கொடுத்ததும்,பிராம்மணனுடையஸொத்தைக் கொடுத்ததும், திருட்டுத்தனத்தால் ஸம்பாதித்துக்கொடுத்ததும், நிந்திக்கப்பட்டவனுக்குக் கொடுத்ததும், பதிதனான பிராம்மண னுக்குக் கொடுத்ததும், வேதமோதாதவனுக்குக் கொடுத்ததும், [1] எல் லாரிடத்திலும் யாசிப்பவர்களுக்குக் கொடுத்ததும், விராத் யர்களுக்குக் கொடுத்ததும், [2]ஆரூடபதிதர்களுக்குக் கொடுத்ததும், வியபிசாரியின் பர்த்தாவுக்குக் கொடுத்ததும், மாமனார் மாமியாரை அனுஸரிக்காதவனுக்குக் கொடுத்ததும்,[3]கிராமயாசகனுக்குக்கொடுத் ததும், நன்றிகொன்றவனுக்குக் கொடுத்ததும், உபபாதகிக்குக் கொடுத்ததும், வேதத்தை விற்பவனுக்குக் கொடுத்ததும், ஸ்திரீ யினால் ஜயிக்கப்பட்டவனுக்குக் கொடுத்ததும், அரசனைஸேவிப்ப வனுக்குக் கொடுத்ததும், கணக்கனுக்குக்கொடுத்ததும், தானம் முதலியவற்றைப் பரீக்ஷைசெய்பவனுக்குக்கொடுத்ததும், [4] விருஷலி யின்பதிக்குக் கொடுத்ததும், ஆயுதத்தால் ஜீவிப்பவனுக்குக்கொடுத் ததும், சம்பளம் வாங்குகிறவனுக்குக் கொடுத்ததும், பாம்பு பிடிப்பவனுக்குக்கொடுத்ததும், புரோஹிதனுக்குக் கொடுத்ததும், வைத்தியனுக்குக் கொடுத்ததும்,வியாபாரம்செய்பவனுக்குக் கொடுத் ததும், துர்மந்திரத்தால் ஜீவிப்பவனுக்குக் கொடுத்ததும், சூத்திர னிடத்தில் ஜீவிப்பவனுக்குக் கொடுத்ததும், கூலிக்குத் தேவபூஜை செய்கிறவனுக்குக்கொடுத்ததும், தேவத்திரவியத்தைப் புஜிப்பவனு க்குக்கொடுத்ததும், சித்ரவேலை செய்பவனுக்குக் கொடுத்ததும், கூத் தாடி ஜீவிப்பவனுக்குக் கொடுத்ததும், மாம்ஸம் விற்றுஜீவிப்பவனுக் குக் கொடுத்ததும், ஸேவகனுக்குக் கொடுத்ததும், தாழ்ந்த பிராம் மணனுக்குக் கொடுத்ததும், இழிவான தேசத்தில் வஸிப்பவனுக்குக் கொடுத்ததும், வட்டியால் ஜீவிப்பவனுக்குக் கொடுத்ததும், அநாசார முள்ளவனுக்குக் கொடுத்ததும், அக்னியில்லாதவனுக்குக் கொடுத்த தும், ஸந்தியோபாஸ்தி செய்யாதவனுக்குக் கொடுத்ததும், சூத்திரக் கிராமத்தில் வஸிப்பவனுக்குக் கொடுத்ததும், பொய்வேஷம்பூண்டவ

1 எல்லாவற்றையும் என்றும் கொள்ளலாம்.

2 மேற்குலத்தில் பிறந்து அதற்குரிய கர்மாவைச் செய்யாதவர்.

3 'க்ராமயாஜக' என்று பாடம்கொண்டு, கிராமத்தார்களுக்காக யாகம் செய்பவனுக்கு என்று கொள்ளுதலுமாம்.

4 ருதுவானபிறகும் கல்யாணமாகாமல் தகப்பன்வீட்டிலிருப்பவள் அல் லது சூத்திரஸ்திரீ.

னுக்குக் கொடுத்ததும், எங்கும் புஜிப்பவனுக்குக் கொடுத்ததும், நாஸ்திகனுக்குக் கொடுத்ததும், தர்மத்தை விற்பவனுக்குக் கொடுத்ததும், இழிவானவனுக்குக் கொடுத்ததும், பொய்ச்சாக்ஷிக்காரனுக்குக் கொடுத்ததும், கிராமத்தாரை வஞ்சிப்பவனுக்குக் கொடுத்ததும் ஆகிய இந்தத் தானங்களெல்லாம் வீணானவைகளாகின்றன. இவ் விஷயத்தில் ஆலோசனை செய்யவேண்டாம். யுதிஷ்டிரரே! இவர்கள் பிராம்மணருள் இழிவானவர்கள். ஆசையுள்ளவர்களும் பிராம்மணா தமர்களுமான இவர்கள் தம்மையும் கொடுப்பவனையும் கரையேற்ற மாட்டார்கள். ராஜேந்திரரே! மிகுதியான தானங்களும் இவர்களுக்குக் கொடுத்தமாத்திரத்தில் சாம்பலில் செய்த நெய்யாஹுதிபோல வீணாகின்றன. இவைகளில், ஏதாவது சிறிதுபயன் எவ்விதத்திலாவது உண்டாகுமானால், அதை ராக்ஷஸர்களும் பிசாசங்களும் ஸந்தோஷத்துடன் நாசம் செய்கிறார்கள். யுதிஷ்டிரரே! வீணான இந்தத்தானங்களைச் சுருக்கமாகச் சொன்னேன். வீணாக ஜீவித்திருப்பவர்களைச் சொல்லுகிறேன்; கேளும். நராதமர்களான எவர்கள் என்னையாவது சங்கரரையாவது பூஸுரர்களான பிராம்மணர்களையாவது ஆச்ரயிக்கவில்லையோ அந்த மனிதர்கள் வீணாக ஜீவித்திருக்கின்றனர். எவர்கள் யுக்திசாஸ்திரங்களில் பற்றுதலுள்ளவர்களும் கெட்ட புத்தியுள்ளவர்களின் மார்க்கத்தைப் பற்றினவர்களும் ஆசாரமற்றவர்களுமாக இருந்துகொண்டு தேவர்களை நிந்திக்கிறார்களோ அந்த மனிதர்கள் வீணாக ஜீவித்திருக்கின்றனர். எந்த நராதமர்கள் ஸமர்த்தர்களால் செய்யப்பட்ட சாஸ்திரங்களைப் படித்துப் பிராம்மணர்களையும் யாகங்களையும் நிந்திக்கிறார்களோ அந்த மனிதர்கள் வீணாக ஜீவிக்கின்றனர். ஆசாரமில்லாத எந்த மூடர்கள் தர்க்கையையும் ஸுப்ரம்மண்யரையும் வாயுவையும் அக்னியையும் ஜலத்தையும் ஸூர்யனையும் தகப்பனையும் தாயையும் குருவையும் இந்திரனையும் சந்திரனையும் நிந்திக்கிறார்களோ அந்த மனிதர்கள் வீணாக ஜீவித்திருக்கின்றனர். எவன் தனமிருந்தும் தானமும் தர்மமும் செய்யவில்லையோ அவனும், எவன் ஒருவனாக மிருஷ்டான்னத்தைப் புஜிக்கிறானோ அவனும் வீணாக ஜீவித்திருக்கின்றனர். வீணான ஜீவிதத்தைச் சொன்னேன். தானகாலத்தை உமக்குச் சொல்லுகிறேன். அரசரே! மனிதன் தமோகுணமுள்ள சித்தத்துடன் கொடுத்த தானத்தின்பயனைக் கர்ப்பத்திலிருக்கும்போது அனுபவிக்கிறான். எந்த மனிதன் ஈர்ஷையும் மாத்ஸரியமுமுள்ளவனாகி டம்பத்திற்காகவும் பொருளுக்காகவும் தானம் செய்

கிறானோ அவன் அதைப் பால்யத்தில் அனுபவிக்கிறான். எந்த மனிதன் வியாதிகளால் மிகவும் பீடிக்கப்பட்டுப் போகத்தை அனுபவிக்க முடியாமல் தானம் செய்கிறானோ அவன் அதை மூப்பில் அனுபவிக்கிறான். எந்த மனிதன் ஸ்நானம்செய்து சுத்தனும் ஸ்ரத்தையுள்ளவனும் தெளிந்த இந்திரியங்களும் மனமுமுள்ளவனுமாயிருந்து கொண்டு தானம்செய்கிறானோ அவன் அதை யௌவனத்தில் அனுபவிக்கிறான். எந்தத்தானமானது வலியக்கொண்டுபோய்ப் பக்தியுடன் பாத்திரத்தில் கொடுக்கப்படுகிறதோ அந்தத்தானமானது மரணம் வரையில் எல்லாக்காலங்களிலும் பயனைத்தருமென்று தெரிந்துகொள்ளும். யுதிஷ்டிரரே! ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்று மூன்றுவிதமாகவுள்ள தானத்தையும் தானத்தின்பயனையும் கதியையும் கேளும். அவசியம் கொடுக்கவேண்டுமென்றெண்ணி, முன் உபகாரம்செய்யாத பிராம்மணனுக்கு எந்தத்தானம் கொடுக்கப்படுகிறதோ அதை ஸாத்விகமென்று தெரிந்துகொள்ளும். பாண்டவரே! வேதாத்தியயனம் செய்தவனும் அநேகம்[1]பிருத்யர்களுள்ளவனுமான பிராம்மணனுக்கு மிக்க ஸந்தோஷத்துடன் கொடுக்கப்படும்தானம் ஸாத்விகமென்று சொல்லப்படுகிறது. வேதாக்ஷரத்தை ஓதாதவனுக்கும் முன் உபகாரம் செய்தவனுக்கும் செல்வம் நிறைந்தவனுக்கும் கொடுக்கப்பட்ட தானமானது ராஜஸமென்று கருதப்பட்டது. பாண்டவரே! பயனில் விருப்பமுள்ளவர்களால் உறவினனுக்கும் [2]ப்ரமத்தனுக்கும் பாத்ரமல்லாதவனுக்கும் கொடுக்கப்பட்டதானமானது ராஜஸமென்று கருதப்பட்டது. வைஸ்வதேவம் செய்யாதவனுக்கும் வேதாத்தியயனம் செய்யாதவனுக்கும் திருடனுக்கும் கொடுக்கப்படும் தானமானது தாமஸமென்று கருதப்பட்டது. கோபத்துடன் கொடுக்கப்பட்டதும் எறியப்பட்டதும் மனவருத்தத்துடன் கொடுக்கப்பட்டதும் அவமதிப்புடன் கொடுக்கப்பட்டதும் ஸேவகனுக்குக் கொடுக்கப்பட்டதுமான தானமானது தாமஸமென்று உதாஹரிக்கப்பட்டது. அரசரே! தேவர்களும் பித்ருகணங்களும் முனிவர்களும் அக்னிகளும் ஸாத்விகமான தானத்தைப் புஜித்து ஸந்தோஷிக்கின்றனர். தானவர்களும் தைத்யக்கூட்டங்களும் கிரஹங்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பித்ருக்களாலும் தேவர்களாலும் விலக்கப்பட்ட ராஜஸமானதானத்தைப் புஜிக்கின்றனர். அழுக்குள்ள பாபிகளான பிசாசங்களும் பிரேதக்கூட்டங்களும் தாமஸமானதானத்தைப் புஜிக்கின்றன. மூன்றுவிதமான

1 தன்னால் பாதுகாக்கப்படத்தக்கவர்கள்.

2 குடியன்; பித்தன்; தன் கர்மத்திலிருந்து தவறியவன்.

கதியையும் கேளும். ஸாத்விகதானங்களுக்கு உத்தமமான பயனையும் ராஜஸதானங்களுக்கு மத்யமமானபயனையும் தாமஸ தானங்களுக்கு அதமமான பயனையும் ஒருவன் அடைகிறான். தானே கொண்டுபோய்க் கொடுத்த தானங்களுக்கு உத்தமமான பயன்; கூப்பிட்டுக் கொடுத்த தற்கு மத்தியமமானபயன் ; யாசிப்பவனுக்குக் கொடுத்ததற்குத்தாழ் ந்ததான பயன். யாசிக்கப்படாமல் (தான்போய்க்) கொடுப்பவன் உத் தமமான கதியையும் கூப்பிட்டுக் கொடுப்பவன் மத்யமகதியையும் யாசிக்கப்பட்டுக் கொடுப்பவன் தாழ்ந்த கதியையும் அடைவார்கள்.

தேவனாக இருப்பது உத்தமகதியென்றும் மானிடத்தன்மை மத்யமகதியென்றும் திர்யக்ஜாதிகளில் பிறப்பது தாழ்ந்தகதியென் றும் அறியவேண்டும். இவ்விதம் கதியானது மூன்றுவிதமாகக் கருதப் பட்டது. பாத்ரமாக இருப்பவர்களும் நல்ல வழியிலிருப்பவர்களும் அக்நிஹோத்ரம் செய்பவர்களுமான பிராம்மணர்களுக்குக் கொடுக்கப் படும் தானமானது அக்ஷயமென்று நன்கு சொல்லப்பட்டது. அர சரே! ஏழைகளான ஸ்ரோத்திரியர்களை அன்னவஸ்திரங்கொடுத்துப் போஷிப்பீராக. செல்வவான்களான பிராம்மணர்களையோ திருடர்முத லியவர்களால்அவர்களுக்குத்தீங்குநேராமல்காப்பாற்றும். பணமில்லாத ஏழைகளுக்கு மிக்க தானங்களால் நன்கு பூஜையைச் செய்யக்கடவீர். வியாதியுள்ளவனுக்கு ஔஷதங்களால் பிரயோஜனமுண்டு. வியாதி யில்லாதவனுக்கு ஔஷதங்களால் என்ன பிரயோஜனம்? கொடுப் பவனுடைய பாபமானது பெற்றுக்கொள்பவனை அடைகிறது. பெற்றுக்கொள்ளுகிறவனுடைய புண்ணியமானது கொடுப்பவனை அடைகிறது. ஆகையால், பரலோகத்தில் நன்மையை விரும்புகிற வன் எப்பொழுதும் தானம் செய்யவேண்டும். வேதவித்தையால் சுத்தர்களும் எப்பொழுதும் சூத்திரான்னத்தை விலக்கியவர்களுமா யிருப்பவர்களிடத்தில் சிறந்த தானமயமாகிய நிதியை முயற்சி யுடன் வைக்கவேண்டும். பாண்டவரே! எவர்களின் மனைவிகள் (கண வர்) புஜித்து மிச்சமான அன்னத்தை ஆயிரம் கிடைத்தாற்போல எதிர்பார்க்கிறார்களோ அவர்களைக் கூப்பிடும். பாரதரே! மிக்க ஏழை களான குலீனர்களை அழைத்து ஆசை நிறைவேறாதவர்களாகச் செய் யக் கூடாது. அவர்களுடைய ஆசை கெடுக்கப்பட்டதாகும். நர ஸ்ரேஷ்டரே! என்னை அடுத்தவர்களும் என்னை முக்கிய கதியாகக் கொண்டவர்களும் என்னைப் பூஜிப்பவர்களும் என்னுடைய நியம முள்ளவர்களுமான என்னுடைய பக்தர்களை முயற்சியுடன் பூஜிக்க வேண்டும். யுதிஷ்டிரரே! நான் அவர்களைப் பரிசுத்தப் படுத்துவதற்

காக ஒவ்வொருநாளும் இரண்டு ஸந்தியாகாலங்களிலும் ஸாங்கித்தியம் செய்கிறேன். அது எனக்குத் தவறாத விரதம். ஆகையால், பாவமற்ற வர்களான என்னுடைய பக்தர்கள் ஆத்ம சுத்தியின் பொருட்டு எப் பொழுதும் ஸந்தியாகாலத்தில் அஷ்டாக்ஷரமந்திரத்தை ஜபிக்கவேண் டும். மற்றப்பிராம்மணர்களுக்கும் (இந்த அஷ்டாக்ஷர ஜபத்தினால்) பாபம் நசிக்கும். ஆகையால், பிராம்மணன் பரிசுத்தியின்பொருட்டு இரண்டு ஸந்தியாகாலங்களிலும் உபாஸிக்கவேண்டும். தேவகாரி யத்திலும் ஶ்ராத்தத்திலும் அந்தப் பிராம்மணனை வெறுக்காமல் உபயோகப்படுத்தவேண்டும். அவன் வெறுக்கப்பட்டால், அக்னி விறகை எரிப்பதுபோல ஶ்ராத்தத்தை எரித்துவிடுவான். பாரதம், மனு தர்மம், அங்கங்களுடன்கூடின வேதங்கள், வைத்யம் இந்நான்கும் (என்னுடைய) ஆஜ்ஞையினால் ஸித்தித்தவை. (அவற்றை) யுக்திக ளால் கெடுக்கக்கூடாது. தர்மத்தை அறிந்தவன் தேவகர்மத்தில் பிராம்மணர்களைப் பரீக்ஷிக்கக் கூடாது. பிராம்மணர்களைப் பரீக்ஷித் தால் பெரிய அவமானம் உண்டாகும். பிராம்மணர்களை அவமதிக் கும் நராதமனும் தூஷிக்கும்மனிதனும் கழுதைகளுடைய ஜாதியி லும் நாய்களுடைய ஜாதியிலும் பிறப்பார்கள். நிந்திப்பதால் நாயும் அவமதிப்பதால் கழுதையும் ஆகிறான். அவமதிப்பதால் புழுவும் த்வேஷிப்பதால் பூச்சியும் ஆகிறான். கெட்ட நடையுள்ளவர்களானா லும் நல்ல நடையுள்ளவர்களானாலும் (உபநயன முதலிய ஸம்ஸ்கா ரங்களைப் பெறாத) பிராகிருதர்களானாலும் (உபநயன முதலிய) ஸம்ஸ்காரங்களை நன்கு பெற்றவர்களானாலும் பிராம்மணர்களைச் சாம்பலால் மூடப்பட்ட அக்னிகளைப்போல அவமதிக்கக்கூடாது. மேதாவியானவன், க்ஷத்திரியனையும் ஸர்ப்பத்தையும் மிகவும்கற்றவ னான பிராம்மணனையும் மெலிந்தவர்களாயிருந்தாலும் ஒருபொழுதும் அவமதிக்கக்கூடாது. இம் மூவரும் அவமதிக்கப்பட்டால் மனிதனை எரித்து விடுவார்கள். ஆகையால், புத்தியுள்ளவன் இவர்களை அவ மதிக்காமலிருக்க முயலவேண்டும். எல்லா நிலைமைகளிலும் அக்னி தெய்வமாக இருப்பதுபோலப் பிராம்மணன் எல்லா நிலைமைகளிலும் பெரிய தெய்வம். அங்கஹீனர்களும் குருடர்களும் கூனர்களும் குள் ளமான சரீரமுள்ளவர்களுமான எல்லாரையும் வேதத்தின் கரையை அடைந்தவர்களுடன் சேர்த்துத் தேவகாரியத்தில் உபயோகித்துக் கொள்ளலாம். பிராம்மணர்கள் கோபத்தை ஆயுதமாகக்கொண்டவர் கள். பிராம்மணர்கள் ஆயுதத்தைக் கையில் கொண்டவர்களல்லர். (ஆகை யால்,) அவர்களுக்குக் கோபத்தை உண்டுபண்ணக்கூடாது; கெடுதி

யையும் செய்யக்கூடாது. அவர்கள் இந்திரன் வஜ்ரத்தால் அஸுரர்க ளைக்கொல்வதுபோலக் கோபத்தால் பகைவர்களைக்கொல்லுகின்றனர். பிராம்மணன் ஜாதியினாலேயே பெருந்தெய்வமாகப் பிறக்கிறானல்ல னோ? பிராம்மணன் எல்லாப் பிராணிகளுள்ளும் தர்மமாகிறபொக்கசத் தைக் காப்பாற்றுவதின்பொருட்டு ஏற்படுத்தப்பட்டவன். குந்தி யின் மைந்தரே! நித்தியம் ஸந்தியோபாஸ்தி செய்பவர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமா? எவனுடைய முகத்தால் தேவர்கள் ஹவ்யங்களை யும் பித்ருக்கள் கவ்யங்களையும் புஜிக்கிறார்களோ அவனிலும் மேலான பிராணி ஏது? பிராம்மணனுடைய உத்பத்தியே தர்மத்தின் சாசு வதமான சரீரம். தர்மத்திற்காக உண்டான அவனே பிரம்ம பாவத் தை அடையத் தகுந்தவன். பிராம்மணன் தன்னுடையதையே புஜிக் கிறான்; தன்னுடையதை உடுத்துக்கொள்ளுகிறான்; தன்னுடையதைக் கொடுக்கிறான். குரூரத்தன்மையில்லாதவனாக இருப்பதால் பிராம் மணனுடைய பொருளை மற்ற ஜனங்கள் புஜிக்கிறார்கள். ஆகையால், அவர்களை அவமதிக்கக்கூடாது. பிராம்மணர்கள் எப்பொழுதும் என் னுடைய பக்தர்களல்லரோ? எந்தப் பிராம்மணர்கள் மறைந்திருப்ப வனும் பேதமில்லாமையற்றவனுமான என்னை ஆரண்யகமென்னும் உப நிஷத்தில் பார்க்கிறார்களோ அவர்களை முயற்சியுடன் பூஜை செய்யக் கடவீர். பாண்டவரே! என்னுடைய பக்தர்களான பிராம்மணர்களை (மனிதன்) தன் வீட்டிலும் தேசாந்தரம் சென்றவிடத்திலும் இரவி லும் பகலிலும் ப்ரத்தையுடன் பூஜிக்கவேண்டும். பிராம்மணனுக்கு ஸமமான தெய்வமில்லை. பிராம்மணனுக்கு ஸமமான குரு இல்லை. பிராம்மணனுக்கு மேலான பந்து இல்லை. பிராம்மணனுக்கு மேலான நிதி இல்லை. பிராம்மணனைக் காட்டிலும் மேலான தீர்த்தமில்லை. பிராம்மணனைக் காட்டிலும் மேலான புண்ணியமில்லை பிராம் மணனைக் காட்டிலும் மேலான [1]பவித்ரமில்லை. பிராம்மணனைக் காட்டிலும் மேலான [2]பாவனமில்லை. பிராம்மணனைக் காட்டிலும் மேலான தர்மமில்லை. பிராம்மணனைக் காட்டிலும் மேலான கதி யில்லை. தானத்திற்குரிய அந்தப் பிராம்மணன் கிடைத்தால், அந்தப் பாத்ரம் ஒன்றே, பாபகர்மத்தால் சூழப்பட்டு நரகத்தில்விழும் மனித னைக் காப்பாற்றுகிறது. எவர்கள் பால்யமுதல் அக்நிஹோத்ரம் செய் பவர்களும் சாந்தர்களும் சூத்திரான்னத்தை விலக்கினவர்களும் என் னிடத்தில்பக்தியுள்ளவர்களுமாக இருந்துகொண்டு என்னைப்பூஜிக்கின் றார்களோ இவ்வுலகில் அவர்களுக்குக்கொடுத்தது அக்ஷயமாகும். என்

1 சுத்தமானது. 2 சுத்தம் செய்வது.

னுடையபக்தனான பிரம்மணன் (சந்தனம் மாலை ஆபரணம் இவைகளால்) அலங்கரிக்கப்பட்டாலும் மிக்க தானங்களால் பூஜிக்கப்பட்டாலும் நமஸ்கரிக்கப்பட்டாலும் ஸம்பாஷணை செய்யப்பட்டாலும் பார்க்கப்பட்டாலும் ஸ்வர்க்கத்தை அடையச்செய்வான். என்னைக் கீர்த்தனம் செய்பவர்களும் நமஸ்கரிப்பவர்களும் தியானம் செய்பவர்களுமான மனிதர்களைத் தொட்டாலும் பார்த்தாலும் மனிதன் பாவங்களிலிருந்து விடப்படுகிறான். எவர்கள் என்னிடத்தில் பக்தியுள்ளவர்களும் என்னிடத்தில் பிராணனைவைத்தவர்களும் என்னைக் கானம்செய்பவர்களும் என்னை முக்யகதியாகக் கொண்டவர்களும் 1 தந்தைதாய்வழியாகப் பரிசுத்தர்களும் வேதாத்யயனம்செய்தவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் எப்பொழுதும் சூத்திரான்னத்தை விலக்கினவர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் இவ்வுலகில் தரிசனத்தால் பரிசுத்தம் செய்கிறார்கள். தானே அவர்களுடைய வீட்டுக்குக் கொண்டுபோய் விசேஷமான பக்தியுடன் கொடுக்கப்படும் தானமானது கோடிக்குஸமமானது. ராஜேந்திரரே! விழித்துக்கொண்டிருக்கும்பொழுதும் தூங்கும்பொழுதும் தேசாந்தரத்தில் வஸிக்கும்பொழுதும் வீட்டிலும் எந்தப் பிராம்மணனுடைய ஹிருதயத்தில் தியானத்தினால் நான் விலகாமலிருக்கிறேனோ அந்தப் பிராம்மணஶ்ரேஷ்டன் பூஜிக்கப்பட்டாலும் பார்க்கப்பட்டாலும் தொடப்பட்டாலும் பேசப்பட்டாலும் எப்பொழுதும் மனிதனைப் பரிசுத்தமாகவே செய்கிறான். பாண்டவரே! இவ்விதம் எல்லா நிலைமைகளிலும் என் பக்தர்களுக்குக் கொடுக்கப்பட்ட எல்லாத் தானங்களும் ஸ்வர்க்கத்தின் வழியைக் கொடுக்கின்றன" என்று சொன்னார்.

---

## தொண்ணூற்றொன்பதாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(கிருஷ்ணபகவான், பீஜக்ஷேத்ரங்களின் சுத்தாசுத்தங்களையும், காயத்ரீ மகிமையையும், பிராம்மணமஹிமையையும், பிராம்மண நிந்தையின் பயனையும் யுதிஷ்டிரருக்குக் கூறியது.)**

இவ்விதம் ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்னும் தானத்தையும் தனித்தனியான கதியையும் தனித்தனியான பயனையும் கேட்டுத் திருப்தி அடையாதவரும் மிக்கமனமகிழ்ச்சியுள்ள

1 மூலத்தில் வேறுவிதமாக இருக்கிறது.

வரும் தர்மத்தில் ஆசையுள்ளவருமான யுதிஷ்டிரர் மறுபடியும் வாஸுதேவரை நோக்கிப் புண்ணியமான தர்மமாகிற அமிருதத்தைப்பற்றி வினவலானார். 'உலகங்களுக்கு ஈசரே! பீஜத்தாலும் க்ஷேத்ரத்தினாலும் பரிசுத்தமாக இருப்பவர்களுடைய லக்ஷணங்களை எனக்குச் சொல்லும். பீஜதோஷத்தால் மனிதர்கள் எப்படிப் பிறக்கின்றனர்? தேவர்களுக்கீசரே! கேசவரே! எல்லா ஆசார தோஷத்தையும் பிராம்மணர்களுடைய விசேஷத்தையும் குணதோஷங்களையும் நீர் சொல்லவேண்டும். நான்கு வர்ணத்தார்களில் எல்லாரிடத்திலும் வாங்கும் தன்மையுள்ள அந்தணர்கள் எந்த விசேஷத்தால் (ஸம்ஸாரத்தைத்) தாண்டவும் (கொடுப்பவரைத்) தாண்டுவிக்கவும் செய்கின்றனர்? தேவர்களுக்கீசரே! உமது பக்தனான எனக்கு இவற்றைச்சொல்லும். உமக்கு நமஸ்காரம்'என்று வினவினார்.

பகவான் சொல்லத் தொடங்கினார். 'அரசரே! பாண்டவரே! இவ்வுலகம் இருக்கவும் அழியவும் காரணமும் சுத்தமும் அசுத்தமுமான பீஜத்தையும் க்ஷேத்ரத்தையும் உள்ளபடி கேளும். எந்தப் பிராம்மணன் பிரம்மசரியம் கெடாமல் விதிப்படி இருக்கிறானோ அவன் பீஜமென்று அறியவேண்டும். அவனுடைய பீஜமானது சுத்தமாகும். தாய்தந்தைகளுடைய குலத்தால் பரிசுத்தையும் ருதுவாதற்கு முன் பிராம்மம் முதலான விவாஹங்களுள் (ஒன்றால்) விதிப்படி விவாஹம் செய்யப்பட்டவளுமான கன்னிகையானவள் புகழ்பெற்ற உத்தமியாவாள். அவளுடைய க்ஷேத்ரமானது புகழப்படுகிறது. புருஷச்ரேஷ்டரே! எவள் மனத்தாலும் வாக்காலும் செய்கையாலும் அன்ய புருஷனை அடைகிறாளோ [1]அவள் கர்ப்பாதானத்திற்குத் தகுந்தவளல்லள். இவ்வுலகில் பாபபுத்தியுள்ள எவன் புத்திரனை உண்டுபண்ணுவதற்காக வியபிசாரியை விரும்புகிறானோ அவன் சீக்கிரமாக(த் தன்)குலத்தில் முன்உண்டான பத்துப்பேர்களையும் பின்உண்டாகும் பத்துப்பேர்களையும் (நரகத்தில்)தள்ளுகிறான். வேந்தரே! மூடபுத்தியுள்ள எவன் அவிவேகத்தால் தோஷமுள்ள க்ஷேத்திரத்தில் வீரியத்தை விடுகிறானோ அவனுடைய வீர்யத்தால் உண்டான பிராம்மணன் ஆறு அங்கங்களையும் அறிந்தவனானாலும் சண்டாளன்போல ஸாதுக்களால் விலக்கத்தக்கவனாகிறான். எவள் மனத்தினாலாவது வாக்கினாலாவது செய்கையினாலாவது வியபிசாரியாகிறாளோ அவள் குலத்தைக் கெடுப்பவளென்று அறியத்தக்கவள். அவளிடத்தில் பிறந்தவன் புலையனே. தோஷமுள்ள க்ஷேத்திரத்தில் பிறந்தவர்கள் தேவ

1 மூலத்தில் வேறு விதமாகஇருக்கிறது.

காரியத்திற்கும் பித்ருகாரியத்திற்கும் தானத்திற்கும் கூடப்புஜிப்பதற்கும் பேசுவதற்கும் படுப்பதற்கும் ஸம்பந்தம் செய்வதற்கும் தகுந்தவர்களல்லர். ஆகையால், வித்வானாக இருப்பவன் தோஷமுள்ள க்ஷேத்ரத்தில் கர்ப்பத்தை உண்டுபண்ணக் கூடாது அறியாமையால் செய்பவன் மூன்று தலைமுறை குலத்தைக் கெடுக்கிறான். [1] கானீனன் [2] ஸஹோடன், [3] குண்டன், [4] கோளகன், [5] ஆரூடபதிதனுக்குப் பிறந்தவன், பதிதனுடைய புத்திரன் இந்த அறுவரும் பிராம்மண சண்டாளர்கள்; [6]ச்வபசனைக்காட்டிலும் இழிவானவர்கள். எவன் சூத்திரஸ்திரீகளிடத்திலாவது (வேறு) எந்த இடத்திலாவது ரேதஸைவிட்டுக்கொண்டு இஷ்டப்படி திரிகிறானோ அவன் பாபபுத்தியுள்ளவன். அவனுடைய பீஜமானது அசுபமாகும். அசுத்தமான அந்தப் பீஜமானது சுத்தமான க்ஷேத்திரத்தை அடையத் தகுந்ததன்று. நாயால் நக்கப்பட்ட ஹவிஸைப்போல அந்த க்ஷேத்திரத்தையும் தோஷமுள்ளதாகச் செய்யும். சூத்திரக்ஷேத்ரத்தில் விழும் பிராம்மணனுடைய பீஜமானது, 'மலக்குழிகளில் விழுந்தேன்' என்று துக்கித்து, 'ஆ! ஆ!' என்னும் சப்தத்தைச் செய்யும். அது, 'காமத்தால் மோகித்து என்னைத் தாழ்ந்த க்ஷேத்திரத்தில் தள்ளும் பாபபுத்தியுள்ள இவன் சீக்கிரத்தில் தாழ்ந்த கதியை அடையட்டும்' என்று சபித்துவிட்டு விழும். ரேதஸானது ஆத்மாவாகவும் மிகச் சிறந்த தெய்வமாகவும் சொல்லப்பட்டிருக்கிறதன்றோ? ஆகையால், எல்லா முயற்சியினாலும் தன்னுடைய ரேத்ஸை அடக்கவேண்டும். பிரம்மசரியத்தால் ஆயுளையும் தேஜஸையும் பலத்தையும் வீர்யத்தையும் அறிவையும் செல்வத்தையும் பெரும்புகழையும் புண்ணியத்தையும் எனக்குப் பிரியனாக இருப்பதையும் அடைகிறான். பிரம்மசர்யம் கெடாதவர்களும் ஐந்துயஜ்ஞங்களையும் பிரதானமாகக் கொண்டவர்களுமான கிருஹஸ்தர்களால் பூமியில் தர்மமானது நிலைநிறுத்தப்படுகிறது. எவர்கள் காலையிலும் மாலையிலும் நன்கு ஸந்தியோபாஸ்தியைச் செய்கிறார்களோ அவர்கள் வேதமயமான ஓடத்தைச் செய்துகொண்டு (ஸம்ஸாரத்தைத்) தாண்டுகின்றனர்; (பிறரையும்) தாண்டச் செய்கின்றனர். எவன் பரிசுத்தியைச் செய்வதும் தேவியும் வேதமாதாவுமான காயத்ரியை ஜபிக்கிறானோ அவன் ஸமுத்திரத்துடன் கூடிய

---

1, 2 ஆதிபர்வம், 461-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

3 கணவனிருக்கும்போது பரபுருஷனுக்குப் பிறந்தவன்.

4 கணவன் இறந்தபின் பரபுருஷனுக்குப் பிறந்தவன்.

5 உயர்குலத்திற் பிறந்தும் செய்கையினால் தாழ்ந்தவன்.

6 நாயின் இறைச்சியைப்பக்குவம் செய்பவன்.

பூமியைத் தானமாக வாங்கினாலும் குற்றமுள்ளவனாக்மாட்டான் அவனுக்கு ஆகாயத்தில் கெட்ட ஸ்தானங்களிலிருக்கும் ஸூரியன் முதலான கிரஹங்களும் சாந்தமாகவும் சுபமாகவும் சுபகரமாகவும் ஆகின்றன. ஆங்காங்குள்ளவர்களும் கொடியவர்களும் கோரமான ரூபமுள்ளவர்களும் பருத்தசரீரமுள்ளவர்களுமான ராக்ஷஸர்களும் அந்தப் பிராம்மணனை அவமதிக்கமாட்டார்கள். இப்புவியில் வேத விரதத்தை அநுஷ்டித்த மனிதர்கள் (எல்லாவற்றையும்) பரிசுத்தப் படுத்துகின்றனர். அரசரே! அந்தக் காயத்ரியானது நான்கு வேதங் களுக்கும் மிகச் சிறந்ததன்றோ? யுதிஷ்டிரரே! எவர்கள் விரதங்களை அநுஷ்டிக்காதவர்களும் வேதமோதாதவர்களும் விரோதமான கர்மா வின் பயனை ஆச்ரயித்தவர்களும் பெயரினால்மட்டும் பிராம்மணர் களுமாக இருக்கிறார்களோ அவர்களும் பூஜிக்கத்தக்கவர்கள்; எவன் தினந்தோறும் இரண்டு ஸந்தியைகளையும் உபாஸிக்கிறானோ அவனைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? நல்லொழுக்கமும் அத்தியயனமும் தானமும் சுத்தியும் மிருதுவாகஇருப்பதும் நேர்மையும் அந்த வேதத் தைக் காட்டிலும் மேலானவைகளென்று பிரஜைகளுக்குப் பதியான மனு சொல்லியிருக்கிறார். எந்தப் பிராம்மணன் வேதமோதுகிறவனும் தன் மனைவியிடத்தில் ஆசையுள்ளவனும் மனவடக்கமுள்ளவனுமா யிருந்துகொண்டு 'பூர்ப்புவஸ்ஸுவ:' என்னும் மந்திரத்தை ஜபிக்கிறா னோ அவனே வித்வான்; அவனே பூஸுரன். நரச்ரேஷ்டரே! எந்தப் பிராம்மணச்ரேஷ்டர்கள் தினந்தோறும் ஸந்தியோபாஸ்தி செய்கி றார்களோ அவர்கள் பிரம்மலோகத்தை அடைகின்றனர்; ஸந்தேஹ மில்லை. காயத்ரியைமட்டும் மேலானதாகக் கொண்டவனாலும் நன்கு (இந்திரிய) அடக்கமுள்ள பிராம்மணனே மேலானவன். நான்கு வேதங்களையும் கற்றவனாலும் எங்கும்புஜிப்பவனும் எல்லாவற்றை யும் விற்பவனுமான பிராம்மணன் மேலானவனல்லன். மன்னவரே! முற்காலத்தில் எல்லாத் தேவக்கூட்டத்தார்களும் ரிஷிக்கூட்டத்தார் களும் பிரம்மாவை முன்னிட்டுக்கொண்டு காயத்ரியையும் வேதங் களையும் தராசினால் நிறுத்தார்கள். நான்கு வேதங்களையும்காட்டிலும் அந்தக் காயத்ரியே மிக்க கௌரவமுள்ளதாக இருந்தது. பாண்ட வரே! மலர்ந்த புஷ்பத்திலிருந்து வண்டுகள் தேனை எடுப்பதுபோல எல்லா வேதங்களிலிருந்தும் காயத்ரியானது எடுக்கப்பட்டது. அர சரே! ஆகையால், அந்த ஸாவித்ரியானது எல்லா வேதங்களுக்கும் பிராணனாகச் சொல்லப்படுகிறது. ஸாவித்ரியில்லாத மற்றவேதங்கள் ஜீவனற்றவைகளே. நான்குவேதங்களையும் கற்றவனாயினும் அடக்க மற்றவனும் நல்லொழுக்கமற்றவனுமாயிருப்பவன் இழிவானவன்.

நல்லஸ்வபாவமும் ஒழுக்கமுமுள்ளவனாக இருந்துகொண்டு ஸாவித்ரியை ஜபிப்பவன் மேலானவன். குந்தியின் மைந்தரே! ஆயிரம் தடவை ஜபிப்பதை உத்தமமாகக் கொண்டதும் நூறு தடவை ஜபிப்பதை மத்தியமமாகக் கொண்டதும் பத்துத் தடவை ஜபிப்பதைத் தாழ்ந்ததாகக் கொண்டதும் எல்லாப் பாபங்களையும் நாசம்செய்வதுமான ஸாவித்ரீ தேவியை ஜபிப்பீராக' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'மூவுலகங்களுக்கும் நாதரே! கோவிந்தரே! நீர் எல்லாப் பிராணிகளின் ஸ்வரூபமுமாக இருக்கிறீரல்லவா? பலவகையான யோகங்களைப் பிரதானமாகக் கொண்டவரே! சிறந்தவரே! நீர் எந்தக் கர்மாவினால் ஸந்தோஷிக்கிறீர்?' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாரதரே! எனக்கு ஆயிரம் பாரம் குங்குலிய முதலியவற்றால் தூபத்தைச் செய்தாலும் நமஸ்காரம் செய்தாலும் காணிக்கையைக் கொடுத்தாலும் எப்பொழுதும் ஸ்தோத்திரங்களாலும் ரிக்யஜுஸ்ஸாமங்களாலும் ஸ்தோத்திரம்செய்தாலும், பிராம்மணர்களை ஸந்தோஷிக்கச் செய்யாவிடில் நான் ஸந்தோஷமடைகிறதில்லை. பரதர்களில் சிறந்தவரே! தினந்தோறும் பிராம்மணனைப் பூஜித்தால் நான் பூஜிக்கப்பட்டவனாவேன்; வைதால் நான் வையப்பட்டவனாவேன்; ஸம்சயமில்லை. நான் பூமியில் பிராம்மண ஸ்வரூபமாக வஸிக்கிறேன். ஆகையால், பிராம்மணனைப் பூஜிப்பவர்கள் உத்தமகதியான என்னை அடைகிறார்கள். புருஷஶ்ரேஷ்டரே! அறிஞனான எவன் என்னிடத்தில் சித்தத்தை வைத்து அந்தப் பிராம்மணர்களைப் பூஜிக்கிறானோ அவனை நான் என்னுடைய ஸ்வரூபமாகப் பார்க்கிறேன். பிராம்மணர்கள், கூனர்களும் குருடர்களும் குள்ளர்களும் தரித்திரர்களும் வியாதியுள்ளவர்களுமாக இருந்தாலும் அவர்களை அறிஞர்கள் அவமதிக்கக்கூடாது. அந்தப் பிராம்மணர்கள் என்னுடைய ஸ்வரூபர்களல்லரோ? ஸமுத்திரம்வரையிலுள்ள பூமியிலிருக்கும் பிராம்மணஶ்ரேஷ்டர்களெல்லோரும் என்னுடைய ஸ்வரூபங்களே. ஆகையால், அவர்களைப் பூஜித்தால் நான் பூஜிக்கப்பட்டவனாகிறேன். நான் பூமியில் பிராம்மணஸ்வரூபமாக வஸிக்கிறேனென்பதை ஞானமில்லாத அநேக மனிதர்கள் அறியவில்லை. பிராம்மணர்களை அவமதிப்பவர்களும் ஏவல் தொழில்களில் ஏவுகின்றவர்களும் பணிவிடை செய்யும்படி செய்கின்றவர்களும் தம் தர்மங்களை இழந்தவர்களாகின்றனர். மரித்தபின் அவர்களைப் பரலோகத்தில் மிக்கபலமுள்ள யமதூதர்கள், சிற்பிகள் நூலொழுங்காக வெட்டுவது போல, இஷ்டப்படி வெட்டுகின்றனர். எவர்கள் பிராம்மணர்களை வைதும் நிந்தித்தும் ஸந்தோஷிக்கிறார்களோ அவர்கள் இறந்து யமலோகத்திலிருக்கும்

போது அவர்களைக் குரூரனும் மிகச் சிவந்த கண்களுள்ளவனுமான யமன் கீழே தள்ளி மார்பில் காலால் மிதித்துக்கொண்டு அக்னி போன்ற நிறமுள்ள குறடுகளால் நாவைப் பிடுங்குகிறான். பிராம்மணர்களுக்கு நன்மையைச் செய்யாதவர்களும் வேதத்திற்கு வெளிப் பட்டவர்களும் எப்பொழுதும் பிராம்மணத் துவேஷிகளும் பாபிகளுமான எந்த மனிதர்கள் பிராம்மணர்களைக் கொடிய நேத்திரத் தால் பார்க்கிறார்களோ அவர்களுடைய கண்ணை, கோரமானவை களும் பருத்தசரீரமுள்ளவைகளும் வளைந்த மூக்குள்ளவைகளும் மிக்க பலமுள்ளவைகளுமான பறவைகள், யமனுடைய கட்டளை யினால் ஒரு முகூர்த்தத்திற்குள் பிடுங்குகின்றன. பிராம்மணச்ரேஷ் டனை அடிப்பவனும் ரக்தத்தை வெளிப்படுத்துகிறவனும் எலும்பை முறிப்பவனும் உயிர் துறக்கும்படி செய்பவனும் இந்த *இருபத் தொரு நரகங்களையும் வரிசையாக அடைகின்றனர்;சூலத்தில் ஏற்றப் படுகின்றனர்;பிறகு, அக்னியில் வேவிக்கப்படுகின்றனர்.பல்லாயிரவருஷங்களாகத் தலைகீழாக வேவிக்கப்படுகிறவனும் கெட்ட புத்தியுள்ள வனுமான அவன் விடப்படுகிறதில்லை. அவனுக்கு (இந்தக்)கதி குறை கிறதில்லை. பிராம்மணர்களென்று தெரிந்து அவர்களைக் கொல்ல விருப்பத்துடன் சென்றவன் லக்ஷம் வருஷம் தாமிஸ்ரமென்னும் நரகத்தில் துன்புறுத்தப்படுகிறான். (பிராம்மணனுடைய) சரீரத்தில் கோபமுள்ள புத்தியை முன்னிட்டு ரக்தத்தை வெளிப்படுத்தின வன் வரிசையாக இந்த இருபத்தொரு நரகங்களையும் அடைகி றான். ஆகையால், (பிராம்மணர்கள் விஷயத்தில்) அசுபமான வார்த் தையைச் சொல்லக் கூடாது; பிரயோஜனமற்ற கதையைச் சொல்லக் கூடாது. கடுமையான வார்த்தையைச் சொல்லக் கூடாது; அவர்களை மீறக் கூடாது. மனிதச்ரேஷ்டர்களான எவர்கள் பிராம்மணர்களை மிருதுவான வார்த்தையுடன் பூஜிக்கிறார்களோ அவர்களால் நான் பூஜிக்கப்பட்டவனும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவனுமாகிறேன்; ஸம்சயமில்லை. பாரதரே! எவர்கள் பிராம்மணர்களை அதட்டுகிறார் களோ, வைகிறார்களோ அவர்களால் நான் அதட்டப்பட்டவனும் வையப்பட்டவனுமாகிறேன்; ஸம்சயமில்லை. எவன் சந்தனங்களா

---

*1தாமிஸ்ரம் 2அந்ததாமிஸ்ரம் 3ரௌரவம் 4மஹாரௌரவம் 5கும்பீபாகம் 6காலஸூத்ரம் 7அஸிபத்ரவனம் 8ஸூகரமுகம் 9அந்தகூபம் 10க்ரிமிபோஜனம் 11ஸந்தம்சம் 12தப்தபூமி 13வஜ்ரகண்டக சால்மலீ 14வைதரணீ 15பூயோதம் 16ப்ராணரோதம் 17விசஸனம் 18லாலாபக்ஷம் 19ஸாரமேயாதனம் 20அவீசி 21அயப்பானம். இது, ஸ்ரீபாகவதம் 5-வது ஸ்கந்தம் 26-வது அத்தியாயத்தில் கண்டது.

லும் அகில் தூபங்களாலும் தீபங்களாலும் மரத்தால் செய்யப்பட்ட என்னுடைய அர்ச்சாவிக்ரஹத்தைப் பூஜிக்கிறானோ அவனால் நான் நன்கு பூஜிக்கப்பட்டவனாக ஆகிறதே இல்லை. பிராம்மணனைப் பூஜித்தால் நான் நன்கு பூஜிக்கப்பட்டவனாகிறேன். நான் பிராம்மணர்களுடைய அநுக்கிரஹத்தால் பூமியைத் தரிக்கிறேன்; பிராம்மணர்களுடைய அனுக்கிரஹத்தால் அஸுரர்களை ஜயிக்கிறேன். நான் பிராம்மணர்களுடைய அநுக்கிரஹத்தால் திறமையுள்ளவனாக இருக்கிறேன். நான் பிராம்மணர்களுடைய அனுக்கிரஹத்தால் ஜயிக்கப்படாதவனாக இருக்கிறேன்' என்றுசொன்னார்.

---

## நூறுவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம் (தொடர்ச்சி.)



(கோவிந்தர் புண்ணியவான்களும் பாவிகளும் யமபுரம் செல்லும்வழி முறைமுதலியவற்றை யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், 'தேவதேவர்களுக்கும் ஈசரே! அஸுரர்களைக்கொல்பவரே! எனக்கு மிக்க விருப்பமிருக்கிறது. எல்லாவற்றையும்அறிந்தவரே! கேசவரே! உம்முடைய பக்தனான எனக்கு இதனைச் சொல்லும். மானிடலோகத்திற்கும் தர்மராஜனுடைய லோகத்திற்குமுள்ள வழியானது எப்படிப்பட்டது? என்ன அளவுள்ளது? எதை ஆதாரமாகக் கொண்டது? தேவரே! மாதவரே! (அதனை) மனிதர்கள் எந்த உபாயத்தால் தாண்டுகிறார்கள்? மஹாதேவரே! தோலும் எலும்பும் மாம்ஸமுமில்லாததும் ஐந்து பூதங்களாலும் விடப்பட்டதுமான சரீரத்தில் ஸுகமும் துக்கமும் உண்டாகும் விதத்தை முழுவதும் சொல்லும். அவமதிக்க முடியாதவர்களும் பயங்கரர்களும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவர்களுமான யமதூதர்கள் யமனுடைய கட்டளையினால் கர்மலோகங்களில் புண்ணிய பாபகர்மங்களுடன்கூடின ஜீவனை அந்தக் கர்மங்களாகிற கொடிய பாசங்களால் கட்டி அடித்துத் துரத்தி இழுத்துக்கொண்டு போகும்போது புண்ணியத்தையும் பாவத்தையும் செய்த அவன் ஸுகத்தையும் துக்கத்தையும் முழுதும் எவ்விதம் அடைகிறான்? அவமதிக்க முடியாதவர்களான யமதூதர்களால் எவ்விதம் கொண்டுபோகப்படுகிறான்? தேவரே! அங்குசென்ற மனிதர்கள் என்ன வேலையைச் செய்கிறார்கள்? தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிக்கும் தார்மிஷ்டர்கள் எப்படிப்

போகிறார்கள்? பாபகர்மத்தைச் செய்த மனிதர்கள் எப்படி யமலோகத்திற்குப் போகிறார்கள்? கேசவரே! நித்யமான யமலோகத்திற்குப் போகும் அந்த ஜீவனுடைய ஸ்வரூபமும் பிரமாணமும் வர்ணமும் எப்படிப்பட்டவை? எனக்குச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லத் தொடங்கினார்.

'அரசரே! நரேச்வரரே! நீர் என்னை எதைப்பற்றிக் கேட்கிறீரோ அதை நான் என்னுடைய பக்தரான உமக்கு உள்ளபடி சொல்லுகிறேன்; கேளும். யுதிஷ்டிரரே! மானிடலோகத்திற்கும் யமலோகத்திற்கும் எண்பத்தாறாயிரம் யோஜனை தூரம் இருக்கிறது. யுதிஷ்டிரரே! அந்தவழியில் மரத்தின்நிழலாவது தடாகமாவது ஸரஸாவது வாவிகளாவது துரவுகளாவது கிணறாவது மண்டபமாவது ஸபையாவது தண்ணீர்ச்சாலையாவது வீடாவது மலையாவது நதியாவது நிலவறையாவது கிராமமாவது ஆச்ரமமாவது தோட்டமாவது வனங்களாவது தங்குமிடமாவது ஓரிடத்திலும் ஒன்றும் இல்லை. பிராணியானது காலம்வந்து மிக்க வேதனையால் பீடிக்கப்பட்டும் காரணங்கள் சரீரத்தைவிட்டும் பிராணன்கள் கண்டத்தை அடைந்தும் இருக்கும் போது, ஸ்வாதீனமற்ற ஜீவன் காற்றினால் சரீரத்தினின்றும் அசைக்கப்படுகிறான். அவன் ஆறு உறைகளுள்ள சரீரத்திலிருந்து காற்றாக வெளிக்கிளம்பி அந்த ரூபமும் அந்த வர்ணமும் அந்த அளவுமுள்ளதும் கண்ணுக்குப் புலப்படாததுமான வேறு சரீரத்தில் ஒருவனாலும் காணப்படாமல் பிரவேசிக்கிறான். எட்டு அங்கங்களுள்ளவனாக ஸஞ்சரிக்கும் பிராணிகளுடைய அந்த அந்தராத்மாவானவன் வெட்டினாலும் பிளந்தாலும் எரித்தாலும் அடித்தாலும் நாசமடைகிறதில்லை. அவன் பலவித ரூபங்களைத் தரிப்பவர்களும் பயங்கரர்களும் மிகக்கொடியவர்களும் குரூரமான ஸாதனமுள்ளவர்களும் ஜயிக்கப்பட முடியாதவர்களுமான யமதூதர்களால் யமனுடையகட்டளையினால் கொண்டுபோகப்படுகின்றவனும் ஸ்வாதீனமற்றவனும் மனைவி மக்களென்னும் பாசங்களால் பலாத்காரமாகக் கட்டப்பட்டவனும் தான்செய்த புண்யபாபரூபமான கர்மங்களால் அனுசரிக்கப்பட்டவனும் துக்கத்தால் பீடிக்கப்பட்ட பந்துக்களால் இரக்கமாகப் புலம்பப்பட்டவனுமாகிப் பந்து ஜனங்களையெல்லாம் விட்டு (ஒன்றிலும்) ஆசையில்லாமல் செல்லுகிறான். அவனைத் தாயார்களும் தந்தையர்களும் ஸஹோதரர்களும் மாதுலர்களும் மனைவிகளும் புத்திரர்களும் ஸ்நேஹிதர்களும் ரோதனம் செய்துகொண்டு விட்டுவிடுகிறார்கள். தீனர்களும் கண்ணீர் நிறைந்த முகமும் கண்களுமுள்ளவர்களுமான

அவர்களால் பார்க்கப்படாமல் தன் சரீரத்தை இழந்து காற்றாகச் செல்லுகிறான். நரோத்தமரே! அரசரே! யுதிஷ்டிரரே! ஜராயுஜங்களும் அண்டஜங்களும் ஸ்வேதஜங்களும் உத்பிஜ்ஜங்களுமான ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் காலம் வந்தவுடன், பந்துக்களையும் போகங்களையும் தனங்களையும் இழந்து, இருளுள்ளதும் முடிவற்றதும் மிக்கபயங்கரமும் இருளால் சூழப்பட்டதும் துக்கத்தை முடிவாகக் கொண்டதும் தாண்டமுடியாததும் பாபகர்மம் செய்தவர்களால் போகமுடியாததும் கெட்டதுணையுள்ளதும் கெட்ட முடிவுள்ளதும் பார்க்கமுடியாததும் நெருங்க முடியாததும் அடைய முடியாததும் பாபிஷ்டர்களுக்கு மிக்க துக்ககரமும் ரிஷிகளால் பரம்பரையாகச் சொல்லப்படுவதும் கதைகளில் கேட்டாலும் பெரும்பாலும் பயத்தை உண்டுபண்ணுவதும் அவசியம் செல்ல வேண்டியதுமான அந்த வழியால் யமலோகம் போகவேண்டும். தேவர்களும் அஸுரர்களும் மனிதர்முதலானவர்களும் ஸ்திரீகளும் புருஷர்களும் நபும்ஸகர்களும் (மற்றும்) பூமியிலிருக்கும் ஜீவனென்று பெயருள்ளவர்களும் நடுவயதுள்ளவர்களும் தருணர்களும் பாலர்களும் முதியவர்களும் பிறந்த சிசுக்களும் கர்ப்பத்திலிருப்பவர்களும் அந்தப் பெரிய மார்க்கத்தை அடையவேண்டும். புருஷச்ரேஷ்டரே! முற்பகலிலோ பிற்பகலிலோ ஸந்தியாகாலத்திலோ பிரதோஷத்திலோ நடு இரவிலோ விடியற்காலத்திலோ தேசாந்தரத்திலிருப்பவர்களும் வனத்திலிருப்பவர்களும் மலையிலிருப்பவர்களும் ஜலத்திலிருப்பவர்களும் பூமியிலிருப்பவர்களும் ஆகாயத்திலிருப்பவர்களும் வீட்டின் மத்தியில் இருப்பவர்களும் புஜிப்பவர்களும் குடிப்பவர்களும் (பக்ஷ்யங்களை) கடிப்பவர்களும் இருப்பவர்களும் நிற்பவர்களும் படுக்கையிலிருப்பவர்களும் விழித்துக்கொண்டிருப்பவர்களும் தூங்குகிறவர்களும் அந்தப் பெரிய மார்க்கத்தை அடையவேண்டும். அவமதிக்கமுடியாதவர்களும் மிகக் கொடியவர்களும் குரூரமான கட்டளையுள்ளவர்களுமான யமதூதர்களால் இழுக்கப்பட்டுத் தம் வசமின்றி யமலோகம் செல்லுகிறார்கள். ஜீவர்கள் ஓரிடத்தில் பயந்தவர்களும் ஓரிடத்தில் மதித்தவர்களும் மற்றோரிடத்தில் தடுக்கப்பட்டவர்களும் அழுகின்றவர்களும் வேதனையால் பீடிக்கப்பட்டவர்களுமாக இருந்துகொண்டு யமலோகத்திற்குப் போக வேண்டும். பயமுறுத்தப்படுகின்றவர்களும் பயந்தவர்களும் அசைக்கப்பட்டவர்களும் பயத்தால் மனம் தளர்ந்தவர்களும் துன்பப்படுத்தப்படுகின்ற சரீரமுள்ளவர்களும் அதட்டப்பட்டவர்களுமாகப்

போகவேண்டும். தானம் செய்யாத மனிதர்கள் முட்கள் நிறைந்ததும் சூடான மணலும் புழுதியுமுள்ளதுமான வழியில் தபிக்கப்படுகிறவர்களாகச் செல்லவேண்டும். தர்மம் செய்யாதவர்கள் கட்டைகளாலும் கற்களாலும் பாறைகளாலும் தண்டங்களாலும் குறைக்கொள்ளிகளாலும் கொறடாக்களாலும் மாவெட்டிகளாலும் அடிக்கப்படுகிறவர்களாக யமலோகம் செல்லவேண்டும். பிராணிகளைக் கொன்றவர்கள் கொழுப்பு, உதிரம், சீழ் முதலியவைகளுள்ள முகங்களுடனும் புண்களுடன் கூடியவைகளும் எரிக்கப்பட்டவைகளும் உதிரத்தால் வியாபிக்கப்பட்டவைகளுமான சரீரங்களுடனும் செல்லவேண்டும். பிராணிகளைக் கொன்றவர்கள் வேதனையால் பீடிக்கப்பட்டுக் கத்துகின்றவர்களும் அபஸ்வரமாக அலறுகின்றவர்களும் வேதனையால் பீடிக்கப்பட்டு விழுகின்றவர்களுமாகப் போகவேண்டும். ஜீவன்களைக்கொன்றவர்கள் பாதம், தொடை, கை, கணுக்கால், கழுத்து முதலான அவயவங்கள் இவைகள் முறிக்கப்பட்டவர்களும் காதும் உதடும் மூக்கும் அறுக்கப்பட்டவர்களுமாகப்போகவேண்டும். பிராணிகளைக் கொன்றவர்கள் சக்திகளாலும் பிண்டிபாலங்களாலும் கூரிய முனைகளாலும் தோமரங்களாலும் பாணங்களாலும் சூலங்களின் முனைகளாலும் துன்பப்படுகின்றவர்களாகச் செல்ல வேண்டும். மாம்ஸத்திற்காக(ப் பிராணிகளைக்) கொல்பவர்கள் நாய்களாலும் புலிகளாலும் செந்நாய்களாலும் காக்கைகளாலும்நாற்புறங்களிலும் பக்ஷிக்கப்படுகின்றவர்களும் ராக்ஷஸர்களால் துன்பப்படுத்தப்படுகின்றவர்களுமாகச் செல்லுகின்றனர். மாம்ஸத்தைத் தின்பவர்கள் எருமைக்கடாக்களாலும் மான்களாலும் கலைமான்களாலும் பன்றிகளாலும் பக்ஷிக்கப்படுகின்றவர்களாக அந்த வழியில் போகவேண்டும். பாலர்களைக்கொல்லும் பெரும்பாவிகள் ஊசிபோல மிக்க கூர்மையான மூக்குள்ள ஈக்களால் நான்கு பக்கங்களிலும் துன்பப்படுகின்றவர்களாகப் போகவேண்டும். எந்த மனிதர்கள் நம்பினவனையும் யஜமானனையும் மித்ரனையும் ஸ்திரீயையும் கொல்லுகிறார்களோ அவர்கள் சஸ்திரங்களால் பிளக்கப்படுகிறவர்களாக யமனுடைய வீட்டுக்குச் செல்லவேண்டும். பிராணிகளைத் தின்பவர்களும் (அவற்றிற்குத்) துக்கத்தை உண்டு பண்ணுகின்றவர்களும் ராக்ஷஸர்களாலும் நாய்களாலும் பக்ஷிக்கப்படுகின்றவர்களாகச் செல்லுகின்றனர். வஸ்திரங்களையும் படுக்கையையும் போர்வைகளையும் அபஹரிப்பவர்கள் அந்த மார்க்கத்தில் பிசாசங்கள்போல வஸ்திரமின்றி ஓடிச் செல்லுகின்றனர். கெட்ட புத்தியுள்ளவர்களும் பாவத்தைச் செய்பவர்களுமான எவர்கள் பிற

ருடைய பொருளான கோக்களையும் தான்யத்தையும் ஸுவர்ணத்தையும் பூமியையும் வீட்டையும் பலாத்காரமாக அபஹரிக்கிறார்களோ அவர்கள் கற்களாலும் பந்தங்களாலும் தடிகளாலும் பழைய கட்டைத்துண்டுகளாலும் அடிக்கப்பட்டுக் காயங்கள் நிறைந்தவர்களாக யமனுடைய வீட்டுக்குப்போகவேண்டும். இவ்வுலகில் நரகத்தினிடம் பயமின்றிப் பிராம்மணர்களுடைய பொருளை அபஹரிப்பவர்களும் எப்பொழுதும் பிராம்மணர்களை வைபவர்களும் அடிப்பவர்களுமான மனிதர்கள் தொண்டை வறண்டவர்களும் கட்டப்பட்டவர்களும் நாவும் நேத்திரமும் மூக்கும் அறுக்கப்பட்டவர்களும் சீழினாலும் ரக்தத்தினாலும் துர்நாற்றமுள்ளவர்களும் நரிகளால் பக்ஷிக்கப்படுகின்றவர்களும் பயங்கரர்களான கொடிய புலையர்களால் நாற்புறங்களிலும் துன்பப்படுத்தப்படுகின்றவர்களும் தீனமாகவும் கோரமாகவும் அழுகின்றவர்களுமாக யமனுடைய வீட்டுக்குப் போகிறார்கள். அரசரே! பாபிகள் அங்கு சென்றும் அநேகம் மலக்கிணறுகளில் கோடிவருஷங்கள் உயிருடன் அவற்றிலுள்ள வேதனையால் துன்பப்படுகிறார்கள். மன்னரே! (அந்த) நராதமர்கள் காலக்ரமமாக அவற்றிலிருந்து விடுபட்டு இவ்வுலகிலும் நூறு கோடி ஜன்மம் அமேத்தியப்புழுவாக ஜனிக்கின்றனர். கௌரவஸ்ரேஷ்டரே! தனிகர்களான எவர்கள் ஆசையும் டம்பமும் பொய்யுமுள்ளவர்களாக இருந்துகொண்டு ஸ்ரோத்திரியர்களுக்குத் தானங்களைக் கொடுக்கவில்லையோ அந்த மனிதர்கள் கழுத்தில் கயிற்றால் கட்டப்பட்டவர்களும் ராக்ஷஸர்களால் கொல்லப்படுகின்றவர்களும் பசியினாலும் தாகத்தாலும் பீடிக்கப்பட்டவர்களுமாகப் பிரேதபுரம் செல்லுகின்றனர். தானம் செய்யாதவர்கள், தொண்டையும் வாயும் தாளும் வறண்டவர்களும் அடிக்கடி அன்னத்தையும் தீர்த்தத்தையும் வேண்டுகின்றவர்களுமாகச் செல்லுகின்றனர். 'ஸ்வாமி! பசியினாலும் தாகத்தாலும் வருந்துகின்றோம். இப்பொழுது எங்களுக்கு நடக்கச் சக்தியே இல்லை. எனக்கு அன்னம் கொடுக்கவேண்டும். எனக்குத் தீர்த்தம் கொடுக்க வேண்டும்' என்று சொல்லும் அவர்களை அந்தத் தூதர்கள் யமனுடைய வீட்டுக்குக் கொண்டுபோகின்றனர்' என்று சொன்னார்.

பகவானுடைய அந்த வசனத்தைக் கேட்டுப் பாண்டவர் பயத்தால் நடுக்கமுற்று மூர்ச்சையால் கவரப்பட்டுப் பிரஜ்ஞையற்றுப் பூமியில் விழுந்தார். பிறகு, அவர் அச்சுதரால் தேற்றுதல் செய்யப்பட்டு மெள்ளப் பிரஜ்ஞையை அடைந்து கண்களை ஜலத்தால் அலம்பிக்கொண்டு மறுபடியும் கேசவரைப் பார்த்து, 'மஹாதேவரே! நான்

மார்க்கத்தின் விஸ்தாரத்தைக் கேட்டுப் பயப்படுகிறேன். மனிதர்கள் அந்த மார்க்கத்தை எந்த உபாயத்தால் ஸுகமாகத் தாண்டுகிறார்கள்?' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'இவ்வுலகில் எவர்கள் தார்மிகர்களும் ஜீவஹிம்ஸையற்றவர்களும் குருசுச்ரூஷை செய்கின்றவர்களும் தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிப்பவர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் இந்த மனுஷ்யலோகத்திலிருந்து மனைவிகளுடனும் பந்துக்களுடனும் எந்த மார்க்கத்தை அடையமாட்டார்களோ அதை உள்ளபடி என்னிடமிருந்து தெரிந்து கொள்ளும். பாண்டவரே! எவர்கள் வேதாத்தியயனம் செய்த பிராம்மணர்களுக்குப் பலவிதமான தானங்களைக் கொடுக்கிறார்களோ அவர்கள் அதன் பயனாக ஸுகமாகச் செல்லுகின்றனர். எவர்கள் ச்ரோத்திரியர்களான பிராம்மணர்களுக்கு நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்ட அன்னத்தை மிக்க பிரியத்துடன் அதிகமாகக் கொடுக்கிறார்களோ அந்த மஹாத்மாக்கள் விசித்ரமான விமானங்களால் அப்ஸரஸுகளென்னும் சிறந்த ஸ்திரீகளால் ஸேவிக்கப்பட்டு நீண்டமார்க்கமுள்ள யமனுடைய இருப்பிடம் செல்லுகின்றனர். எவர்கள் எப்பொழுதும் கல்மஷமற்றதும் உண்மையுள்ளதுமான வார்த்தையைச் சொல்லுகிறார்களோ அவர்களும் நிர்மலமான மேகம்போல விளங்குகின்றனவும் காளைகள் கட்டப்பட்டனவுமான விமானங்களால் செல்லுகின்றனர். எந்த மனிதர்கள் கபிலை முதலான கோக்களின் புண்ணியகரமான தானங்களைச் சுரோத்தியர்களான பிராம்மணர்களுக்கு விசேஷமாகக் கொடுக்கின்றனரோ அவர்கள் நிர்மலமான வர்ணத்தால் விளங்குகின்றவைகளும் காளைகள் பூட்டப்பட்டவைகளுமான விமானங்களால் சென்று யமனுடைய நகரம் அடைந்து அப்ஸரஸுகளால் ஸேவிக்கப்படுகின்றனர். எவர்கள் பாதரக்ஷைகளையும் குடையையும் சயனங்களையும் ஆஸனங்களையும் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கின்றனரோ அவர்கள் அலங்கரிக்கப்பட்டவர்களும் ஸுவர்ணமயமான குடையால் சோபிக்கும்படி செய்யப்பட்டவர்களுமாக அழகான தர்மராஜனுடைய பட்டணத்திற்குக் குதிரைகளாலும் விருஷபங்களாலும் யானைகளாலும் செல்லுகின்றனர். எவர்கள் பக்ஷ்யங்களையும் போஜ்யத்தையும் பேயத்தையும் எண்ணெய் நெய்முதலியன சேர்ந்த அன்னங்களையும் மிக்க ச்ரத்தையுடன் பிராம்மணர்களுக்குக் கொடுக்கிறார்களோ அவர்கள் ஆயிரக்கணக்கான உத்தம ஸ்திரீகளால் இஷ்டப்படி ஸேவிக்கப்பட்டு ஸுவர்ணமயமான விமானங்களால் ஸுகமாக யமனுடைய வீட்டுக்

குச் செல்லுகின்றனர். எவர்கள் நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்டவர்களும் ஶ்ரத்தையுள்ளவர்களுமாகப் பிராம்மணர்களுக்கு முயற்சியுடன் பாலையும் நெய்யையும் தயிரையும் வெல்லத்தையும் தேனையும் கொடுக்கிறார்களோ அவர்கள் சக்ரவாகங்கள் கட்டப்பட்டவைகளும் ஸுவர்ணமயமானவைகளும் சுபமானவைகளுமான விமானங்களால் கந்தர்வர்களுடைய வாத்தியங்களால் ஸேவிக்கப்பட்டு யமனுடைய வீட்டுக்குச் செல்லுகின்றனர். எவர்கள் கனிகளையும் வாஸனையுள்ள மலர்களையும் கொடுக்கிறார்களோ அந்த மனிதர்கள் ஹம்ஸங்கள் கட்டப்பட்ட விமானங்களால் தர்மராஜனுடைய பட்டணம் செல்லுகின்றனர். எவர்கள் நெய்யால் நனைக்கப்பட்ட விசித்ரமான அன்னத்தை பிராம்மணர்களுக்குக் கொடுக்கிறார்களோ அவர்கள் நிர்மலமான மேகம்போல விளங்குகின்றவைகளும் வாயுவைப்போன்ற வேகமுள்ளவைகளுமான விமானங்களால் பலவித ஜனங்கள் நிறைந்ததான யமனுடைய அந்தப் பட்டணம் செல்லுகின்றனர். எவர்கள் எல்லாப் பிராணிகளுக்கும் ஜீவனஹேதுவான தீர்த்தத்தைக் கொடுக்கிறார்களோ அவர்கள் ஹம்ஸங்களால் இழுக்கப்பட்ட விமானங்களால் மிக்க திருப்தியுடன் ஸுகமாகச் செல்லுகின்றனர். அரசரே! எவர்கள் திலத்தையாவது [1]திலதேநுவையாவது நெய்யைக் கொடுக்கும்தேநுவையாவது நல்ல எண்ணத்துடன் ஶ்ரோத்திரியர்களுக்குக் கொடுக்கிறார்களோ அவர்கள் ஸூர்யமண்டலத்திற்கு ஒப்பானவைகளும் மாசற்றவைகளும் கந்தர்வர்களால் கானம் பண்ணப்படுகின்றவைகளுமான விமானங்களால் யமனுடைய பட்டணம் செல்லுகின்றனர். எவர்கள் குளங்களையும் கிணறுகளையும் தடாகங்களையும் ஸரஸுகளையும் தீர்க்கிகைகளையும் புஷ்கரிணிகளையும் (மற்றுமுள்ள) ஜலத்தையுடைய நீர்நிலைகளையும் ஏற்படுத்தினார்களோ மஹாத்மாக்களான அவர்கள் சந்திரன்போன்ற ஒளியுள்ளவைகளும் திவ்யமான கண்டைகளால் ஒலிக்கும்படி செய்யப்பட்டவைகளுமான விமானங்களால் சென்று சாமரங்களாலும் விசிறிகளாலும் வீசப்பட்டவர்களும் மிக்க காந்தியுள்ளவர்களும் எப்பொழுதும் திருப்தியுள்ளவர்களுமாக யமனுடைய வீட்டை அடைகின்றனர். இவ்வுலகில் எவர்களுடைய தேவாலயங்களும் வீடுகளும் விசித்திரமானவைகளும் மனத்தைக்கவர்கின்றவைகளும் அழகுள்ளவைகளும் பார்க்கத் தக்கவைகளுமாக விளங்குகின்றனவோ அவர்கள் நிர்மலமான மேகம்போல விளங்குகின்றவைகளும் காற்றுப் போன்ற வேகமுள்ளவைகளுமான விமானங்களால் பலவிததேசங்கள் சூழ்ந்த யமனுடைய

[1] எள்ளை அடைத்துப் பசுப்போலச் செய்யப்பட்ட வஸ்திரப்பை.

அந்தப் பட்டணம் செல்லுகின்றனர்; ஸுகமான சித்தமுள்ளவனும் ஸுகமாக வீற்றிருப்பவனுமான யமனையும் பார்க்கின்றனர்; பிறகு, யமனால் பூஜிக்கப்பட்டுத் தேவர்களுடைய ஸாலோக்யத்தை அடைகின்றனர். உலகங்களில் எவர்கள் தண்ணீர்ச் சாலைகளில் கலசங்களால் எடுக்கப்பட்டதும் குளிர்ந்ததும் மனத்திற்கினியதுமான ஜலத்தைத் தாகமுள்ளவர்களுக்குத் தேவர்களை உத்தேசித்துக் கொடுக்கின்றார்களோ அவர்கள் ஸௌக்கியமான பெரியமார்க்கத்தை அடைந்து மிக்கதிருப்தியை அடைகின்றனர். கட்டையால்செய்த பாதுகைகளைக் கொடுக்கும் மனிதர்கள் சிறந்ததான ரதத்தில் ஸுவர்ணத்தாலும் மணிகளாலும் செய்யப்பட்ட பீடத்தில் காலை வைத்துக்கொண்டு அந்த மார்க்கத்தில் ஸுகமாகச் செல்லுகின்றனர். எந்தமனிதர்கள் தோட்டங்களையும் விருக்ஷ ஸமூஹங்களையும் பயிராக்கிக் கனிகளாலும் மலர்களாலும் பிரகாசிக்கும்படியாகவும் குறையின்றி வளர்க்கிறார்களோ அவர்கள் அழகுள்ளவைகளும் குளிர்ச்சியுள்ளவைகளுமான விருக்ஷ நிழல்களில் திவ்யமான வாகனங்களால் அழகான ஸ்வரூபமுள்ளவர்களும் சிறந்தவர்களும் ஸுவர்ணம்போன்ற நிறமுள்ளவர்களுமான ஸ்திரீகளால் இஷ்டப்படி ஸுகமாக முயற்சியுடன் அடிக்கடி பூஜிக்கப்படுகின்றவர்களும் ஸேவிக்கப்படுகின்றவர்களுமாகச் செல்லுகின்றனர். எவர்கள் பிராம்மணர்களுக்கு குதிரைவண்டியையும் மாட்டுவண்டியையும் யானை கட்டின தேரையும் கொடுக்கிறார்களோ அவர்கள் ஸுவர்ணம்போலப் பிரகாசிக்கும் விமானங்களால் செல்லுகின்றனர். எவர்கள் ஸுவர்ணத்தையும் வெள்ளியையும் பவழத்தையும் முத்தையும் கொடுக்கிறார்களோ அவர்கள் உத்தமஸ்திரீகளால் ஸேவிக்கப்பட்டு ஸுவர்ணத்தால் ஜ்வலிக்கின்ற விமானங்களால் ஸுகமாகச் செல்லுகின்றனர். பூமிதானம் செய்பவர்கள் எல்லா இஷ்டங்களாலும் நன்கு த்ருப்தியடையும்படி செய்யப்பட்டு உதித்த ஸூர்யனுக்கொப்பானவைகளும் விருஷபங்கள் கட்டப்பட்டவைகளுமான விமானங்களால் அந்த உலகத்தை அடைகின்றனர். எவர்கள் வேதமோதின பிராம்மணனுக்குக் கன்னிகையைக் கொடுக்கிறார்களோ அவர்கள் தேவகன்னிகைகளால் சூழப்பட்டு விமானங்களால் யமனுடைய வீட்டுக்குச் செல்லுகிறார்கள். எவர்கள் வாஸனைத்திரவியங்கள் கலந்தவைகளும் நல்ல மணமுள்ளவைகளுமான சந்தனங்களையும் வாஸனையுள்ள மலர்களையும் பிராம்மணச்ரேஷ்டர்களுக்கு மிக்க பக்தியுடன் கொடுக்கிறார்களோ அவர்கள், நல்ல வாஸனையுள்ளவர்களும் அழகான வேஷமுள்ளவர்களும் நல்ல ஒளியுள்ளவர்களும் மாலைகளும் ஆபரணங்களு

முள்ளவர்களும் அலங்கரிக்கப்பட்டவர்களுமாக, விசித்ரமான வாகனங்களால் யமபுரம் செல்லுகின்றனர். தீபதானம் செய்பவர்கள் ஸூர்யன்போன்ற சரீரங்களால் ஜ்வலிக்கின்ற அக்னிகள்போலப் பத்துத் திசைகளையும் பிரகாசிக்கும்படி செய்துகொண்டு வாகனங்களால் செல்லுகின்றனர். வீடுகளையும் மண்டபங்களையும் கொடுக்கும் மனிதர்கள் ஸுவர்ணத்தாலாகிய மேடைகளுள்ளவைகளும் பாலஸூரியன்போல விளங்குகின்றவைகளுமான வீடுகளுடன் தர்மராஜனுடைய பட்டணம் செல்லுகின்றனர். தீர்த்த பாத்திரத்தைக் கொடுப்பவர்களும் குடங்களையும் கமண்டலுக்களையும் கொடுப்பவர்களும், உத்தமஸ்திரீகளால் பூஜிக்கப்படுகின்றவர்களாகவும் த்ருப்தியுள்ளவர்களாகவும் பெரிய யானைகளின்மேலேறிச் செல்லுகின்றனர். எவர்கள் பிராம்மணர்களுக்கு, தலைக்கும் பாதத்திற்கும் தடவிக்கொள்ள எண்ணெயையும் குடிக்கத் தண்ணீரையும் கால்கழுவத் தண்ணீரையும் கொடுக்கிறார்களோ அவர்கள் குதிரைகளின்மேலேறி யமனுடைய வீட்டுக்குச் செல்லுகின்றனர். எவர்கள் வழிநடந்து களைத்து இளைத்தவர்களான பிராம்மணர்களை ச்ரமத்தைப் போக்கிக்கொள்ளும்படி செய்கின்றனரோ அவர்களும் சக்ரவாகங்களால் இழுக்கப்பட்ட வாகனத்தால் செல்லுகின்றனர். எவன் பிராம்மணர்களை நல்வரவு கேட்டு ஆஸனம் கொடுத்துப் பூஜிக்கிறானோ அவன் மிக்க ஸுகம் பெற்று அந்த மார்க்கத்தில் ஸுகமாகச் செல்லுகிறான். எவன் விரதங்களை அனுஷ்டிப்பவன்போலப் பரிசுத்தனாக இருந்துகொண்டு தினந்தோறும் என்னைப் பார்த்து, [1] 'நமோபிரம்மண்யதேவ' என்று சொல்லி நமஸ்கரிப்பனோ அவன் அந்த மார்க்கத்தில் ஸுகமாகச் செல்லுவான். எவன் தினந்தோறும் கோவை, [2] 'நமஸ்ஸர்வஸஹாய:' என்று சொல்லி எப்பொழுதும் நமஸ்கரிக்கிறானோ அவன் ஸுகமாக அந்த மார்க்கத்தில் செல்லுகிறான். எவன் தினந்தோறும் விடியற்காலத்தில் படுக்கையிலிருந்தெழுந்திருந்து, [3] 'நமோஸ்துப்ரியதத்தாய' என்று சொல்லிக்கொண்டு பூமியில் பாதத்தை வைக்கிறானோ அவன் எல்லா இஷ்டங்களாலும் திருப்தியடைந்த சித்தமுள்ளவனும் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவனுமாகத் திவ்யமான விமானத்தால் ஸுகமாக யமனுடைய வீட்டுக்குப் போகிறான். எவர்கள்

---

1 'பிராம்மணர்களுக்கு நன்மையைச் செய்யும் தேவரே! (உமக்கு) நமஸ்காரம்' என்பது பொருள்.

2 'எல்லாவற்றையும் ஸஹிப்பவர்களின்பொருட்டு நமஸ்காரம்' என்பது பொருள்.

3 'பிரியத்தைக் கொடுப்பவனுக்கு நமஸ்காரம்' என்பது பொருள்.

(பகலிரவு இரண்டு வேளை தவிர) 1இடையில் புசிக்காதவர்களும் கர்வ மும் பொய்யும் அற்றவர்களுமாக இருக்கிறார்களோ அவர்களும் ஸாரஸபக்ஷிகள் கட்டின வாகனத்தால் ஸுகமாகச் செல்லுகின்ற னர். எவர்கள் ஒருவேளை புஜிப்பவர்களும் டம்பமும் பொய்யுமற்றவர் களுமாக இருக்கிறார்களோ அவர்களும் ஹம்ஸங்கள் கட்டின விமா னங்களால் ஸுகமாக யமனுடைய வீட்டுக்குச்செல்லுகின்றனர். எவர் கள் இந்திரியங்களைஜயித்தவர்களும் நான்காவதுவேளையில் புஜிப்பவர் களுமாக இருக்கிறார்களோ அவர்கள் மயில்கள் பூட்டின விமானங் களால் யமபுரம் செல்லுகின்றனர். இவ்வுலகில் எவர்கள் இந் திரியங்களை ஜயித்தவர்களும் மூன்றாவது தினத்தில் புஜிப் பவர்களுமாக இருக்கிறார்களோ அவர்களும் ஸுவர்ணத்தால் ஜ்வலிக்கின்ற யானை கட்டின 2தேர்களால் அந்த மார்க்கத் தில் செல்லுகின்றனர். எவன் காமமும் கோபமும் அற்றவனும் எப் பொழுதும் சுத்தனும் இந்திரியங்களை ஜயித்தவனுமாக இருந்து கொண்டு ஒருவருஷம் ஆறாவது வேளையில் அன்னத்தைப் புஜித்துக் கொண்டிருக்கிறானோ அவன் யானைகளின்மீதிருப்பவர்களும் ஜய சப்தத்தைச் சொல்பவர்களுமான பரிவாரங்களுடன் செல்லுகிறான். பக்ஷோபவாஸம் இருப்பவர்கள் புலிகள் பூட்டப்பட்ட வாகனங்க ளால் அழகானதும் திவ்ய ஸ்திரீகளின் கூட்டங்களால் ஸேவிக்கப் பட்டதுமான தர்மராஜனுடைய பட்டணம் செல்லுகின்றனர். எவர் கள் இந்திரியங்களை அடக்கினவர்களாக மாஸோபவாஸம் செய்கிறார் களோ அவர்களும் ஸூரியோதயத்திற்குச் சமமான வாகனங்களால் யமனுடைய வீட்டுக்குப் போகின்றனர். எவன் சித்தத்தை என்னி டம் வைத்து அக்னிப் பிரவேசம் செய்கிறானோ அவன் அக்னி போலப் பிரகாசிக்கின்ற விமானத்தால் யமனுடைய வீட்டிற்குப் போகிறான். கோவினிமித்தமாவது ஸ்திரீயினிமித்தமாவது பிராம்மண னிமித்தமாவது உயிர் துறந்தவர்கள் தேவப்பெண்களால் ஸேவிக்கப் பட்டு ஸூர்யன்போலக் காந்தியுள்ளவர்களாகிச் செல்லுகின்றனர். எவர்கள் என்னிடத்தில் பக்தியுள்ளவர்களும் இந்திரியங்களை ஜயித் தவர்களுமாக இருந்துகொண்டு தீர்த்தயாத்திரை செய்கிறார்களோ

---

1 ஒருதினம் பகலில் சாப்பிடுகிறவனுக்கு அன்றிரவு போஜனம் இரண்டா வது வேளையும், இரண்டாவது நாள் பகல் மூன்றாவது வேளையும், அன்றிரவு நான்காவது வேளையும், மூன்றாவது நாள் பகல் ஐந்தாவது வேளையும் அன்றிரவு ஆறாவது வேளையுமாகும். ஆகவே, தினம் ஒருவேளை என்றது மூன்றாவது வேளையும் மூன்றாவதுதினம் என்றது ஐந்தாவது வேளையுமாதல் காண்க.

2 'ரதை:' என்று மாற்றப்பட்டது.

அந்த மஹாத்மாக்கள் மிக்க ஸுகமுள்ளவர்களாக விமானங்களால் (அந்த) மார்க்கத்தில் செல்லுகிறார்கள். எந்தப் பிராம்மணோத்தமர்கள் மிகுதியான தக்ஷிணையுள்ள யாகங்களால் தேவர்களைப் பூஜிக்கிறார்களோ அவர்கள் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் பூட்டின தேர்களால் அந்த மார்க்கத்தில் செல்லுகின்றனர். எந்த மனிதர்கள் பிறருக்குப் பீடையைச் செய்யாமலே வேலைக்காரர்களைப் போஷிக்கிறார்களோ அவர்கள் அந்த மார்க்கத்தில் ஸுவர்ணத்தால் ஜ்வலிக்கின்ற விமானங்களால் ஸுகமாகச் செல்லுகின்றனர். எவர்கள் எல்லாப் பிராணிகளிடங்களிலும் ஸமமாக இருப்பவர்களும் பிராணிகளுக்கு அபயமளிப்பவர்களும் கோபமும் ஆசையுமற்றவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் மிக்கவொளியுள்ளவர்களாகித் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் ஸேவிக்கப்பட்டு நிறைமதிக்கொப்பான விமானங்களால் யமனுடைய பட்டணத்திற்குப் போகிறார்கள். எவர்கள் என்னையாவது தேவரான முக்கண்ணரையாவது உறுதியான பக்தியுடன் ஒவ்வொரு நாளும் பூஜித்து நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்கிறார்களோ அவர்கள் ஸூரியனுக்கொப்பானவொளியுள்ளவாகனங்களால் தர்மராஜனுடைய பட்டணம் செல்லுகின்றனர். அவ்விடத்தில் தர்மராஜரால் நேரில் சுபமான மாலை முதலானவைகளால் பூஜிக்கப்பட்டுத் தர்மலோகத்திற்காவது ருத்திரலோகத்திற்காவது நிச்சயமாகச் செல்லுகின்றனர்' என்று சொன்னார்.

---

## நூற்றோராவது அத்யாயம்.
## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் தண்ணீர் கொடுப்பது அன்னமிடுவது இவற்றின் பயனையும், அதிதிகளின் லக்ஷணத்தையும், அவர்களை உபசரிக்கும் முறையையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

தர்மபுத்திரர் யமபுரத்தின் மார்க்கத்தையும் ஜீவர்கள் போகும் விதத்தையும் கேட்டு மனமகிழ்ந்து மறுபடியும் கேசவரை நோக்கி, 'தேவ தேவர்களுக்கும் ஈசரே! அஸுரர்களைக் கொல்பவரே! ரிஷிக்கூட்டங்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவரே! பகவானே! ஸம்ஸார துக்கத்தை அழிப்பவரே! ஸ்ரீமானே! ஆயிரம் ஸூர்யர்களுக்கொப்பானவரே! எல்லாவற்றிற்கும் உற்பத்தி ஸ்தானமாயிருப்பவரே! தர்மங்களை அறிந்தவரே! எல்லாத் தர்மங்களையும் நடைபெறச் செய்பவரே! நல்லவரே! அச்சுதரே! எல்லாத் தானங்களினுடைய பயனையும் எனக்குச் சொல்லும். கோவிந்தரே! எவ்விதமான தவத்தைச் செய்து எவ்

விதமான பிராம்மணனுக்குத் தானத்தை எவ்விதம் கொடுக்கவேண்டும்? அதன் பயனானது எங்கு அநுபவிக்கப்படுகிறது?' என்று வினவினர். புத்திமானான தர்மபுத்திரரால் இவ்விதம் வினவப்பட்ட ஹ்ருஷீகேசரான வாஸுதேவர் தர்மபுத்திரருக்குப் புண்யமானவைகளும் சிறந்த க்ஷேமத்தைச் செய்பவைகளுமான தர்மங்களைச் சொல்லலானர்.

'அரசரே! நற்குணமுள்ளவரே! பரிசுத்தமும் பாவங்களை அழிப்பதும் உத்தமமும் பாபகர்மத்தைச் செய்தவர்கள் கேட்கத்தகாததுமான எல்லாத் தானங்களின் பயனையும் ஸாவதானமாகக் கேளும். இதனை, புருஷனாலும் ஸ்திரீயாலும் பாவச் செய்கையில் பற்றுடனிருந்தாலும், ஸாவதானமாகக் கேட்டால் அந்த க்ஷணத்தில் பாவங்கள் நசித்துப் பரிசுத்தர்களாகின்றனர். குந்தியின்மைந்தரே! எவனால் பூமியில் உண்டுபண்ணப்பட்ட ஜலத்தை ஒருநாளாவது ஒரு பசு குடித்துத் தாகம் தணிந்ததாகுமோ அவன் முன்னோர்கள் எழுவரைக் கரையேற்றுகிறான். பாண்டவரே! உலகத்தில் ஜலமானது பிராணிகளுக்கு மேலான ஜீவனமாகக் கருதப்பட்டது. ஜலத்தைக் கொடுத்தால் திருப்தி உண்டாகிறது. ஜலத்தின் குணங்கள் தெய்விகமானவைகளும் பரலோகத்தில் நன்மையைக் கொடுக்கின்றவைகளுமாக இருக்கின்றன. ராஜேந்திரரே! அந்த யமலோகத்தில் புஷ்போதகியென்னும் மிக்க பரிசுத்தகரமான ஒரு நதி இருக்கிறது. அது தீர்த்தத்தைக் கொடுத்தவர்களுக்கு இஷ்டமானவற்றைக் கொடுக்கிறது. அதில் குளிர்ந்ததும் குறைவற்றதும் அமிருதம்போன்றதுமான ஜலம் இருக்கிறது. அது குளிர்ந்தஜலத்தைக் கொடுத்தவர்களுக்கு எப்பொழுதும் ஸுகத்தை உண்டுபண்ணுகிறது. ஜலதானம் செய்யாதவர்களுக்குச் சீழ் கொடுக்கப்படுகிறது. யுதிஷ்டிரரே! ஜலத்தைக் குடித்தால் பசியும் தீருகிறது. தாகமுள்ளவனுக்கு அன்னத்தைப் புஜித்தால் தாகம் தீருகிறதில்லை. ஆகையால், தெரிந்தவன் எப்பொழுதும் தாகமுள்ளவர்களுக்கு ஜலத்தைக் கொடுக்க வேண்டும். ஜலமானது அக்நியின்வடிவமும் பூமிக்குக்காரணமும் அமிருதத்திற்கு உத்பத்திஸ்தானமுமாக இருக்கிறது. ஆகையால், ஜலமானது எல்லாப்பிராணிகளுக்கும் ஆதாரமென்று வித்வான்கள் சொல்லுகிறார்கள். எல்லாப் பிராணிகளும் ஜலத்தால் உண்டாகின்றன; ஜீவிக்கின்றன. ஆகையால், எல்லாத்தானங்களிலும் ஜலதானம் மேலானது. எல்லாத் தானங்களாலும் தவங்களாலும் யஜ்ஞங்களாலும் உத்தமமான எந்தப் பயனை அடையலாமோ அவ்வனைத்தையும் ஜலதானத்தால் அடையலாம்;

இதில் ஸம்சயமில்லை. பரதர்களில் சிறந்தவரே! எவர்கள் பிராம்மணர்களுக்கு நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்ட அன்னதானத்தைக் கொடுக்கின்றனரோ அவர்களால் பிராணன்களே கொடுக்கப்பட்டனவாகின்றன. ரக்தமும் சுக்லமும் அன்னத்தால் உண்டாகின்றன. ஜீவனும் அன்னத்தில் நிலைபெற்றிருக்கிறது. இந்திரியங்களும்புத்தியும் எப்பொழுதும் அன்னத்தால் போஷிக்கப்படுகின்றன. பாண்டவரே! எல்லாப் பிராணிகளும் அன்னமில்லாவிடில் கஷ்டப்படுகின்றன. தேஜஸ், பலம், ரூபம், மனோபலம், வீர்யம், தைரியம், காந்தி, ஞானம், மேதை, ஆயுள் இவை எல்லாம் அன்னத்தில் நிலைநிறுத்தப்பட்டிருக்கின்றன. எப்பொழுதும் எல்லா உலகங்களிலும் தேவர்கள் மனிதர்கள் விலங்குகள் என்னும் எல்லாருடைய எக்காலங்களிலுமுள்ள எல்லாக்காரியமும் அன்னத்தில் நிலைபெற்றிருக்கின்றன. அன்னமானது ஸ்ருஷ்டிகர்த்தரின் ஸ்வரூபமாகவும் உத்பத்தி காரணமாகவும் எல்லாப் பிராணிகளின் ஸ்வரூபமாகவும் கருதப்பட்டிருக்கிறது. ஜீவனும் அன்னமயமாகக் கருதப்பட்டிருக்கிறான். பிராணனும் அபானனும் வியானனும் உதானனும் ஸமானனும் அன்னத்தை ஆஶ்ரயித்து ஜீவனைத் தரிக்கின்றன. படுப்பது, எழுந்திருப்பது, செல்வது, பிடிப்பது, இழுப்பது என்னும் எல்லாப் பிராணிகளாலும் செய்யப்படும் செய்கைகளும் அன்னத்தினாலேயே உண்டாகின்றன. ராஜேந்திரரே! ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான நான்கு வகைப் பிராணிகளும் அன்னத்தாலுண்டாகின்றன. இது பிரம்மதேவரின் ஸிருஷ்டி. ஞானத்தை உண்டுபண்ணக் கூடிய எல்லா ஸாதனங்களும் பாவனங்களான எல்லா யஜ்ஞங்களும் அன்னத்தால் நடைபெறுகின்றன. ஆகையால், அன்னமானது மேலானதாகக் கருதப்பட்டிருக்கிறது. ருத்திரர்முதலான எல்லாத் தேவர்களும் பித்ருக்களும் அக்னிகளும் அன்னத்தால் ஸந்தோஷமடைகின்றனர். ஆகையால், அன்னம் மேலானது. பிரபுவானவர் ஒவ்வொரு கல்பத்திலும் எல்லாப் பிரஜைகளையும் அன்னத்தால் படைத்தார். ஆகையால், அன்னதானத்தைவிட மேலான தானம் உண்டானதும் இல்லை; உண்டாகப்போகிறதும் இல்லை. பாண்டவரே! தர்மமும் அர்த்தமும் காமமும் அன்னத்தால் உண்டாகின்றன. ஆகையால், அன்னதானத்தைக்காட்டிலும் மேலான தானம் இவ்வுலகிலும் மேலுலகிலும் இல்லை. யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கிரஹங்களும் நாகர்களும் பூதங்களும் மற்றுமுள்ள தானவர்களும் அன்னத்தால் ஸந்தோஷமடைகின்றனர். ஆகையால், அன்னம் மேலானதாகும். பாரதரே! புருஷர்களில் சிறந்தவரே! பிறருடைய அன்னத்தைப் புஜித்துக்கொண்டு ஒருவன் சுபமான எந்தக்

காரியத்தைச் செய்கிறானோ அந்தச் சுபகாரிய (பல)த்தின் ஒருபாகம், செய்தவனுக்கும் மூன்றுபாகங்கள் அன்னம் கொடுத்தவனுக்கும் சேர்கின்றன. ஆகையால், பிராம்மணர்களுக்கு விசேஷமாக அன்னம் கொடுக்கவேண்டும். அரசரே! எவன், வேதமோதியவனும் தரித்திரனுமான பிராம்மணனுக்குப் பாகத்தில் வேற்றுமையின்றி டம்பமும் பொய்யுமில்லாமல் மிக்க பக்தியுடன் ஒருவருஷம் அன்னமளிப்பனோ அவனுடைய தன் தர்மத்தால் ஸம்பாதிக்கப்பட்ட பயனான புண்ணிய பலனைக் கேளும். லக்ஷம் வருஷங்கள் தேவலோகத்திலிருந்துகொண்டு இஷ்டங்களை அடைந்தவனும் இஷ்டமான ரூபங்களைத் தரிப்பவனுமாக அப்ஸரஸுகளின் கூட்டங்களால் பூஜிக்கப்பட்டு மகிழ்வான்; காலம் வந்தவுடன், அவ்விடத்திலிருந்து நழுவி மானிடலோகத்தில் மனிதனாகப் பிறப்பான். எவன், ஒரு வர்ஷமாவது ஆறு மாஸமாவது, தரித்திரனான பிராம்மணனுக்கு ச்ரத்தையுடன் [1]அக்ர பிக்ஷையைக் கொடுப்பனோ அவனுக்கு வரும் புண்ணிய பலனைக் கேளும். ஆயிரம் பசுக்களைத் தானம்செய்தால் எந்தப் புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தின் பயனை அந்த மனிதன் அடைகிறான்; இதில் ஸம்சயமில்லை. மேலும், எவன் யாசிக்காதவனுக்கு ஒருவருஷகாலம் அக்ரபிக்ஷையைத் தானே மறைத்துக்கொண்டுபோய்க் கொடுக்கிறானோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். ஆயிரம் கபிலைப் பசுக்களைத் தானம்செய்தால் எந்தப் புண்ணியம் சொல்லப்படுகிறதோ அதை யெல்லாம் முழுதும் அடைந்து அவன் இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். மன்னரே! அவன் மிக்க தேஜஸுள்ளவனாகி அழகான இந்திரனுடைய வீட்டில் நூறுகோடி வருஷம் அப்ஸரஸுகளின் கூட்டங்களுடன் இஷ்டப்படி விளையாடுகிறான். ராஜேந்திரரே! எவன் தவறாத விரதங்களுள்ளவனாக இருந்துகொண்டு பத்துவருஷம் பிராம்மணனுக்கு அன்னத்தைக் கொடுக்கிறானோ அவனுடைய புண்ணிய பலனைக் கேளும். அவன் லக்ஷம் கபிலைப்பசுக்களை விதிப்படி தானம் செய்த புண்ணியத்தால் எந்தப் பயனுண்டோ அந்தப் பயனை அடைந்து இந்திரனுடைய பட்டணம் செல்லுவான். அரசரே! அவன் அழகான இந்திரனுடைய வீட்டில் இஷ்டமான ரூபத்தை அடைந்து தேவர்களால் பூஜிக்கப்பட்டு நூறுகோடிவருஷம் ஸுகமாக விளையாடுகிறான். இந்திரலோகத்திலிருந்து இறங்கி, இவ்வுலகில் மிக்க காந்தியுள்ளவனும் நான்கு வேதங்களையும் ஓதியவனும் செல்வமுள்ளவனும் அரசரால் பூஜிக்கப்பட்டவனுமான பிராம்மணனாகப் பிறக்கிறான். பாண்டுநந்தனரே! வழிநடந்து

[1] முதலில் இடுவது.

களைத்தவனும் பசியுள்ளவனும் தகுந்ததேசத்திலும் காலத்திலும் வந்தவனும் அன்னத்தை விரும்புகிறவனுமான பிராம்மணனுக்கு(அன்னத்தை)க் கொடுக்கவேண்டும். எவன் பொருள்வரும்படி இருந்தும் யாசிப்பவனுக்கு அன்னம் கொடுக்கவில்லையோ அந்த லோபி புழுக்கள் நிறைந்த காலஸூத்ரகமென்னும் நரகத்தை அடைகிறான். லோபத்தாலும் மோகத்தாலும் அறிவற்ற அவன் அந்தக் கோரமான நரகத்தில் வேதனைகளால் பீடிக்கப்பட்டுப் பதினாயிரம் வருஷம் கஷ்டப்படுகிறான். அவன் நீண்டகாலம் சென்று அந்த நரகத்திலிருந்து விடப்பட்டு மானிட லோகத்தில் சண்டாள ஜாதியில் ஏழையாகப் பிறக்கிறான். எந்தப் பிராம்மணன் புழுதிபடிந்த பாதங்களுள்ளவனும் தூரமானவழிநடந்து ஸ்ரமத்தால் இளைத்தவனும் பசியினாலும் தாகத்தாலும் உண்டான சிரமத்தால் களைத்தவனும் துன்பமுற்றவனும் தடுமாற்றமுற்ற நடையுள்ளவனுமாகி அன்னம் கொடுப்பவனை விசாரித்துக்கொண்டு வீட்டுக்கு வந்து யாசிப்பனோ அவனை முயற்சியுடன் பூஜிக்கவேண்டும். அவன் ஸ்வர்க்கத்தை அடையச்செய்யும் அதிதி. புருஷஸ்ரேஷ்டரே! அவன் ஸந்தோஷமடைந்தால் எல்லாத் தேவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களாவார்கள். பார்த்தரே! அக்னிகள் அதிதியைப் பூஜிப்பதால் ஸந்தோஷமடைவதுபோல ஹவிஸினாலும் ஹோமங்களாலும் புஷ்பங்களாலும் சந்தனங்களாலும் ஸந்தோஷப்படுகிறதில்லை. பிராம்மண போஜனம் செய்விப்பதால் எந்தப் பயனை அடைகிறானோ அந்தப் பயனை ஆனிமாஸத்தில் புஷ்கர க்ஷேத்திரத்தில் விதிப்படி கபிலைப் பசுவைத்தானம் செய்தாலும் அடையமாட்டான். பூமியானது எவ்வளவு வரையில் பிராம்மணனுடைய பாத தீர்த்தத்தால் நனைந்ததாக இருக்கிறதோ அவ்வளவு வரையில் (அவனைப் பூஜித்தவனுடைய) பித்ருக்கள் தாமரையிலையினால் ஜலத்தை அருந்துகின்றனர். பாண்டவ ஸ்ரேஷ்டரே! தேவர்களுடைய (பழைய) மாலையைக் களைவதும் பிராம்மணனுடைய எச்சிலைச் சுத்தி செய்வதும் களைத்தவனுக்கு(க்கால்) பிடிப்பதும் கால்களை அலம்புவதும் இருக்க இடங்கொடுப்பதும் படுக்கையையும் ஆஸனத்தையும் கொடுப்பதும் ஒவ்வொன்றும் கோதானத்தைக் காட்டிலும் மேலானவை. எவர்கள் பிராம்மணர்களுக்குக் கால்கழுவ ஜலத்தையும் பாதங்களுக்கு(த்தடவ) நெய்யையும் தீபத்தையும் அன்னத்தையும் இருப்பிடத்தையும் கொடுக்கிறார்களோ அவர்கள் யமனிடம் செல்லமாட்டார்கள். அரசரே! பகைவரை அடக்குபவரே! பிராம்மணர்களுக்குப் பக்தியுடன் ஆதித்யம்செய்து பணிவிடையும் செய்தால் முப்பத்துமூன்று தேவர்களும் எல்லோரும் சுஸ்ரூஷை செய்யப்பட்டவர்க

ளாவார்கள். (விருந்து வந்தவர்களுள்) முன் அறியப்பட்டவன் அப்யா கதனென்றும், அறியப்படாதவன் அதிதியென்றும் சொல்லப்படுகின் றனர். பிராம்மணன் அவ்விருவர்களுக்கும் பூஜையைச் செய்யவேண் டும் என்பது புராதனமான வார்த்தை. ராஜேந்திரரே! எந்த மனிதன் அதிதியை பாதங்களுக்கு எண்ணெய், அன்னம், பானம் இவற்றால் பூஜிக்கிறானோ அவனால் நான் பூஜிக்கப்பட்டவனாகிறேன்; இதில் ஸம் சயமில்லை. அவன் சீக்கிரத்தில் பாவத்திலிருந்து விடப்பட்டவனும் என்னாலும் அனுக்கிரஹிக்கப்பட்டவனுமாகி, சந்திரனுக்கொப்பான விமானத்தால் என்னுடைய உலகத்தை அடைகிறான். சிரமமடைந்த அப்யாகதனைத் தேவர்களும் எல்லாப் பித்ருக்களும் அக்னிகளும் அனுஸரித்து வருகின்றனர். அந்தப் பிராம்மணனைப் பூஜித்தால் அவர் கள் பூஜிக்கப்பட்டவர்களாவார்கள். (பூஜிக்கப்படாமல்) சென்றால், பித்ருக்கள் ஆசையற்றவர்களாகிச் செல்லுகின்றனர். அதிதியானவன் எவனுடைய வீட்டிலிருந்து எண்ணம் நிறைவேறாமல் திரும்பிச் செல்லுகிறானோ அவனுடைய பித்ருக்கள் பதினைந்து வருஷம் புஜிக் கிறதில்லை. அந்த உலோபி பித்ருக்களாலும் தேவர்களாலும் அக்னி களாலும் விடப்பட்டுப் பதினைந்து வருஷம் ரௌரவமென்னும் நர கத்தை அடைந்து சிலகாலத்தில் அதிலிருந்தும் நழுவி இவ்வுலகில் எச்சிலைப் புஜிப்பவனாகப் பிறப்பான். எவன் வைஶ்வதேவத்தின் முடி வில் வந்த அதிதியைப் பூஜிக்கவில்லையோ அவன் உடனேயே சண் டாளத் தன்மையை அடைகிறான்; ஸம்சயமில்லை. எவன் தகுந்த இடத்திலும் காலத்திலும் வந்த பிராம்மணனை வீட்டிலிருந்து வெளிப் படுத்துகிறானோ அவன் அந்த க்ஷணத்திலேயே பதிதனாகிறான்; இதில் ஸம்சயமில்லை. அவன் கோரமான ரௌரவமென்னும் நரகத் தில் கோடிவருஷம் கஷ்டப்படுகிறான். நராதமனான அவன், காலமா னதும், அதிலிருந்தும் நழுவி இவ்வுலகில் பன்னிரண்டு ஜன்மம் பசி யும் தாகமுமுள்ள நாயாகப் பிறக்கிறான். அதிதியானவன் சண்டாள னாக இருந்தாலும், தகுந்த இடத்திலும் காலத்திலும் அன் னத்தை விரும்பிவந்த அவனைக் கிருஹஸ்தன் எப்பொழுதும் எதிர்கொண்டு சென்று பூஜிக்கவேண்டும். பாண்டவரே! எவன் லோபத்தாலும் மோகத்தாலும் மதியற்று (அதிதியை)ப் பூஜியாமல் உண்கிறானோ அவன் பத்து ஜன்மங்கள் சண்டாளனாகப் பிறக்கிறான். எவன் அதிதியின் எண்ணத்தை நிறைவேற்றாமல் ஸந்தோஷமாகப் புஜிக்கிறானோ அவன் மலக்கிணற்றில் தள்ளப்பட்டிருக்கும் தன்னை அறியவில்லை. எவன் அதிதியைப் பூஜிக்கவில்லையோ அவன் வீணாக ஆடை உடுத்துக்கொள்ளுகிறான். அவனுக்கு வீணாகச் சமைக்கப்படு

கிறது. அவன் எப்பொழுதும் வீணுக அன்னத்தைப் புஜிக்கிருன்; இது நிச்சயம். இவ்வுலகில் எந்தப் பிராம்மணன் அதிதிபூஜை செய்யாமல் அங்கங்களுடனும் உபாங்கங்களுடனும்கூடின வேதங்களைப்படிக்கிருனே அவன் வீணுகிருன். எவர்கள் வீட்டுக்குவந்த அதிதியைப் பூஜியாமல் பாக யஜ்ஞங்களாலும் மஹா யஜ்ஞங்களாலும் ஸோம யாகங்களாலும் தேவர்களைப் பூஜிக்கிருர்களோ கீர்த்தியில் விருப்பமுள்ள அவர்களுடைய தானமும் யாகமும் வீணுனவைகளாகின்றன. அவையெல்லாம் அந்த ஆசையால் கெடுக்கப்பட்டனவல்லவா? நல்ல சித்தமுள்ளவன் தேசத்தையும் காலத்தையும் பாத்ரத்தையும் தன் சக்தியையும் கவனித்துப் பார்த்துச் சிறிதாகவாவது ஸமமாகவாவது அதிகமாகவாவது அதிதிபூஜை செய்யவேண்டும். புத்தியுள்ளவன் வந்த அதிதியை நல்லமுகமும் மிகத் தெளிந்த சித்தமுமுள்ளவனுக இருந்துகொண்டு நல்வரவு விசாரித்து ஆஸனத்தையும் ஜலத்தையும் அன்ன முதலானவற்றையும் கொடுத்துப் பூஜிக்கவேண்டும். வைஸ்வதேவத்தின்முடிவில் வந்த அதிதியானவன் ஹிதனுனுலும் பிரியனுனுலும்பகைவனுனுலும் மூர்க்கனுனுலும் பண்டிதனுனுலும் (பூஜிப்பவனை)ஸ்வர்க்கத்தை அடையும்படி செய்கிறவனுகிருன். யஜ்ஞத்தின் பயனை விரும்புகிறவன் பசியினுலும் தாகத்தாலும்களைத்துக் கஷ்டப்பட்டுத் (தகுந்த) தேசத்திலும் காலத்திலும் வந்தவனுக்கு உபசரித்து அன்னமளிக்கவேண்டும். ஹவ்யத்திலும் கவ்யத்திலும் தனக்கு மேலானவர்களுக்கு விதிப்படி போஜனம் செய்விக்கவேண்டும். மனிதர்களுக்கு அன்னம் பிராணனும் அன்னத்தைக் கொடுப்பவன் பிராணனைக் கொடுப்பவனுமாகின்றனர். ஆகையால், க்ஷேமத்தை விரும்புகிறவன் விசேஷமாக அன்னதானம் செய்யவேண்டும். அன்னம் கொடுப்பவன் எல்லா இஷ்டங்களாலும் மிக்க திருப்தி அடைந்தவனும் நன்கு அலங்கரிக்கப்பட்டவனுமாகி நிறைமதிபோல விளங்கும் விமானத்தால் பிரகாசித்துக்கொண்டு உத்தமஸ்திரீகளால் ஸேவிக்கப்பட்டு என்னுடைய உலகம் சென்று அங்கு தேவன் போலக் கோடிவருஷம் விளையாடிக்கொண்டிருந்து பிறகு, காலமானதும் அவ்விடத்திலிருந்தும் நழுவி இவ்வுலகில் மிக்க கீர்த்தியுள்ளவனும் வேதங்கள் சாஸ்திரங்கள் இவற்றின் அர்த்தத்தின் உண்மையை அறிந்தவனும் போகங்களுள்ளவனுமான பிராம்மணனுகப் பிறப்பான். எவன் ஸ்ரத்தையுடன் (அதிதிபூஜை) செய்கிருனே அவன் மனிதர்களுள் மிக்க தனிகனும் ஸௌந்தர்யமுள்ளவனும் வேதங்கள் வேதாங்கங்கள் இவற்றின் கரையை அடைந்தவனும் எல்லாச் சாஸ்திரங்களின் அர்த்தத்தினுடைய உண்மையையும் அறிந்தவனும் போகங்க

ருள்ளவனுமான பிராம்மணனுகப் பிறப்பான் எவன் தர்மமாகப்பணத்தை ஸம்பாதித்துச் [1]சுத்தமான சித்தத்துடன் ஒருவருஷம் எல்லோருக்கும் அதிதிபூஜை செய்பவனும் பிராம்மணர்களையும் பித்ருக்களையும் தேவர்களைப்போல நினைத்துத் தானே பூஜித்துப் பிராம்மணர்களுக்கு முதலில் போஜனம் செய்வித்துப் பின்பு புஜிப்பவனுமாக இருக்கிருனே அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். ராஜேந்திரரே! பிராம்மணர்கள் ஒருவருஷத்தில் எத்தனை கவளங்களைப் புஜிக்கிருர்களோ அத்தனை வருஷம் அவன் என்னுடைய உலகத்தில் பூஜிக்கப்படுகிருன். காலமானதும் அவ்விடத்திலிருந்தும் இவ்வுலகத்தில்வந்து மிக்க புகழுள்ளவனும் வேதசாஸ்திரங்களின் அர்த்தத்தின் உண்மையை அறிந்தவனும் போகங்களுள்ளவனுமான பிராம்மணனுகப் பிறப்பான். அரசரே! எவன் ஸத்யவாதியும் இந்திரியங்களை ஜயித்தவனுமாக இருந்துகொண்டு காலநியமமின்றி ஶ்ரத்தையுடன் (வந்தவர்) எல்லாருக்கும் ஆதித்யம் செய்கிருனே ஸத்யஸந்தனும் கோபத்தை ஜயித்தவனும் தன் வேதத்திற்குரிய தர்மத்தை விடாதவனும் அதர்மத்தில் பயந்தவனும் தர்மிஷ்டனும் கபடமும் த்வேஷமும் அற்றவனும் சிரத்தையுள்ளவனும் எப்பொழுதும் சுத்தனும் பாகத்தில் வேற்றுமை யற்றவனுமான அவன் திவ்யமான ஸ்வரூபமும் மிக்க கீர்த்தியுமுள்ளவனுகித் திவ்யமான விமானத்தால் அப்ஸரஸுகளின் கூட்டங்களால் கானம் செய்யப்பட்டு இந்திரனுடைய பட்டணத்திற்குச் செல்லுகிருன். அவ்விடத்திலேயே ஒரு மன்வந்தரம் வரையில் தேவர்களால் பூஜிக்கப்பட்டு விளையாடிக்கொண்டிருந்து, பிறகு, மானிடலோகத்திற்குவந்து போகங்களுள்ள பிராம்மணனுகப் பிறப்பான். பத்துஜன்மங்கள் அரசர்களால் பூஜிக்கப்பட்ட பிராம்மணனுகப் பிறப்பான். எதில் எதில் பிறக்கிருனே அதில் அதில் முன்பிறப்பின் நினைப்புள்ளவனுகவும் இருப்பான்.

---

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கோவிந்தர் பூமி, பசு, எள், கன்னிகை இவற்றைக் கொடுக்கும் பயனை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

பாண்டவரே! இனி, மிக்க உத்தமமான பூமிதானத்தைச் சொல்லுகிறேன். எவன் வேதாத்தியயனம் செய்தவனும் அக்னி

---

1 'பாகபேதவிவர்ஜிதா:' என்பது மூலம், 'பந்தியில் உணவில் வித்யாஸமில்லாமல்' என்பது கருத்து.

ஹோத்திரம் செய்பவனும் தரித்திரனுமான பிராம்மணனுக்கு அழகான பூமியைத் தக்ஷிணையுடன் கொடுக்கிறானோ அவன் எல்லா இஷ்டங்களாலும் திருப்தி அடைந்த சித்தமுள்ளவனும் எல்லாரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டவனும் எல்லாப்பாவங்களாலும் விடப்பட்டவனும் எப்பொழுதும் ஸூரியன்போலப் பிரகாசிப்பவனும் மிக்க புகழுள்ளவனுமாக இருந்துகொண்டு, பாலஸூரியன்போலப் பிரகாசிப்பதும் விசித்திரமான த்வஜத்தால் விளங்குவதும் திவ்யமுமான விமானத்தால் என்னுடைய உலகத்தை அடைகிறான். அவ்விடத்தில் தேவஸ்திரீகளால் ஸுகமாக ஸேவிக்கப்பட்டவனும் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவனும் இஷ்டமான ஸ்வரூபமுள்ளவனுமாக இருந்துகொண்டு அரம்பையர்களுடைய கூட்டங்களோடு விளையாடுகிறான். குருகுலத்தை வஹிப்பவரே! பூமிதானம் செய்தவன், பூமியானது எவ்வளவு காலம் வரையில் ஜனங்களைத் தரிக்கிறதோ அவ்வளவு காலம் வரையில் என்னுடைய லோகத்தில் பூஜிக்கப்படுகிறான். பூமிதானத்தைக்காட்டிலும் மேலானதானம் வேறில்லை. பூமியை அபஹரிப்பதைக்காட்டிலும் மேலான பாவமும் வேறில்லை. கௌரவஶ்ரேஷ்டரே! மற்றத் தானங்கள் சிலகாலத்தில் குறைகின்றன. பூமிதானத்தினுடைய புண்ணியத்திற்குக் குறைவு உண்டாவதே இல்லை. புருஷஶ்ரேஷ்டரே! எந்தமனிதன் ஏழையான பிராம்மணனுக்குக் கொடுக்கப்பட்ட பூமியை ஹிம்ஸிக்கிறதில்லையோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேட்கக் கடவீர். ஏழு தீவுகளாலும் ஸமுத்திரங்களாலும் அழகுள்ளதும் ரத்தினக்குவியல்களால் நிறைந்ததும் மலைகளாலும் வனங்களாலும் தூர்க்கங்களாலும் நிறைந்ததுமான பூமியானது அவனால் கொடுக்கப்பட்டதாகும். அக்னிஹோத்ரியான பிராம்மணனுக்குப் பூமிகொடுக்கப்படுவதைப் பார்த்து எல்லாப் பிராணிகளும், 'என்னைக் கொடுக்கிறான்' என்று ஸந்தோஷமாக நினைக்கின்றன. வேந்தரே! பூமிதானம் செய்தவன் ஸுவர்ணங்கள், [1]மணிகள், ரத்தினங்கள், தனங்கள், (மற்றுமுள்ள) பொருள்கள் ஆகிய எல்லாவற்றின் தானங்களையும் செய்தவனாகிறான். பூமியைக் கொடுப்பவன் ஸமுத்திரங்களையும் நதிகளையும் மலைகளையும் ஸமமான இடங்களையும் மேடுபள்ளமான இடங்களையும் எல்லாக்கந்தங்களையும் ரஸங்களையும் கொடுத்தவனாகிறான். பூமியைக் கொடுப்பவன் கனிகள் நிறைந்தவைகளும் பலவகையான மலர்களோடுகூடினவைகளுமான ஓஷதிகளையும் தாமரைமலர் உத்பலமலர் இவற்றின் குவியல்களையும்

1 மணிகள் = வஜ்ரவைடூர்யாதிகள்; ரத்நங்கள் = சிறந்த பொருள்கள்,

கொடுத்தவனாகிறான். பூமியைக் கொடுத்தவன் அறம் பொருள் இன்பங்களையும் வேதங்களையும் யஜ்ஞங்களையும் ஸ்வர்க்கமார்க்கத்தில் செல்லுவதையும் கொடுத்தவனாகிறான். தக்ஷிணைகளுள்ளவைகளான அக்னிஷ்டோம முதலான யாகங்களைச் செய்தவர்களும் பூமிதானத்தின் பயனை அடையமாட்டார்கள். பாண்டவரே! பாண்டுநந்தனரே! எவன் ஸ்ரோத்ரியனுக்குப் பூமியைக் கொடுத்துப் பிறகு ஹிம்ஸிக்கவில்லையோ அவனுடைய தானத்தை ஜனங்கள் சொல்லிக் கொண்டிருக்கும்வரையில் அவன் ஸ்வர்க்கத்திலுள்ள போகங்களை அனுபவிப்பான். எவன் பயிர்கள் நிறைந்த பூமியை ஸ்ரோத்திரியனுக்குக் கொடுக்கிறானோ அவனுடைய பித்ருக்கள் பிரளயம்வரையில் திருப்தியடைகின்றனர். ராஜேந்திரரே! பிராம்மணனுக்குக்கொடுக்கப்பட்ட பூமியானது எனக்கும் ருத்திரருக்கும் ஸூரியனுக்கும் தேவர்களுக்கும் பிரியத்தைக் கொடுக்கிறது. யுதிஷ்டிரரே! பூமிதானஞ் செய்பவன் அந்தப் புண்ணியத்தால் பரிசுத்தமான சித்தமுள்ளவனாகி என்னுடைய ஸாலோக்கியத்தை அடைகிறான். இதில் ஆலோசிக்கவேண்டாம். ஜீவனத்துக்குக் கஷ்டப்படுகிற மனிதன் (அதற்காக) ஏதாவது பாவத்தைச் செய்தால், கோகர்ண பிரமாணமுள்ள பூமியைத் தானம் செய்வதால் அவன் (அந்தப் பாவத்தினின்று) சுத்தனாகிறான். மாஸோபவாஸத்திலும் கிருச்சிரத்திலும் சாந்திராயணத்திலும் எந்தப் புண்ணியம் உண்டாகுமோ அந்தப்புண்ணியமானது கோகர்ண பிரமாணமுள்ள பூமிதானத்தினால் விதிக்கப்படுகிறது. எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தால் எந்தப் புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியமானது கோகர்ணப் பிரமாணமுள்ள பூமியினால் விதிக்கப்படுகிறது' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவர்களுக்கும் தேவரே! வாஸுதேவரே! தேவர்களுக்கும் ஈஸ்வரரே! நீர் கோகர்ணத்தின் பிரமாணத்தை உள்ளபடி சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாண்டுநந்தனரே! கோகர்ணமாத்திரம் என்பதன் பிரமாணத்தைக் கேளும். ராஜேந்திரரே! அரசரே! கிழக்கு மேற்கும் தெற்கு வடக்கும் ஆகிய எல்லாத்திசைகளிலும் முப்பதுகோலளவு அளக்கப்பட்டபூமியின் பிரமாணத்தைக் கோகர்ணமென்று அதை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். கௌரவ ஸ்ரேஷ்டரே! கன்றுகளுடனும் கன்றுகளுடனும் கூடின நூறுகோக்கள் எந்த இடத்தில் நெருக்கமின்றி ஸுகமாக நிற்கின்றனவோ அதுவும் கோகர்ணமென்று சொல்லப்படுகிறது. (யமனுடைய) கிங்கரர்களும் யமதண்டங்களும் கொடியவைகளான கும்பீ

பாகங்களும் கோரமான வருணபாசங்களும் பூமிதானம் செய்பவனை அணுகமாட்டா. ரௌரவ முதலான நரகங்களும் வைதரணி நதியும் கொடியவைகளும் கஷ்டமுள்ளவைகளுமான யாதனைகளும் பூமிதானம்செய்பவனை அணுகமாட்டா. சித்ரகுப்தனும் கலியும் [1]காலனும் அந்தகனும் மிருத்யுவும் ஸாக்ஷாத் பகவானான யமனும் பூமிதானம் செய்தவனைப் பூஜிக்கிறார்கள். மன்னரே! ருத்திரரும் பிரம்மாவும் இந்திரனும் தேவர்களும் ரிஷிகணங்களும் நானும் பிரீதியுள்ளவர்களாகிப் பூமிதானம் செய்தவனைப் பூஜிக்கிறோம். மனிதர்களில் சிறந்தவரே! இளைத்த வேலைக்காரர்களுள்ளவனுக்கும் இளைத்த பசுக்களுள்ளவனுக்கும் இளைத்த குதிரைகளுள்ளவனுக்கும் இளைத்த அதிதிக்கும் பூமியானது கொடுக்கத்தக்கது. அது பரலோகத்தில் நன்மையைத்தரும் நிதி. அரசரே! கஷ்டப்படும் குடும்பமுள்ளவனும் அக்னிஹோத்ரம் செய்பவனும் விரதங்களை அனுஷ்டிப்பவனும் தரித்திரனுமான ச்ரோத்ரியனுக்குப் பூமியைக் கொடுக்கவேண்டும். தாயானவள் தானே பாலால் புத்திரனை வளர்ப்பதுபோலக் கொடுக்கப்பட்ட பூமியானது கொடுத்தவனை அனுக்கிரஹிக்கிறது. பசுவானது பாலைக் கொடுத்துத் தன்னுடைய கன்றைப் போஷிப்பதுபோல எல்லாக் குணங்களுடனும்கூடின பூமியானது பூமிதானம்செய்தவனைக் காப்பாற்றுகிறது. வேந்தரே! ஜலத்தால் நனைக்கப்பட்ட விதைகள் முளைப்பதுபோலப் பூமிதானம் செய்தவனுடைய இஷ்டங்கள் தினந்தோறும் முளைக்கின்றன. ஸூர்யனுடைய தேஜஸானது இருளை முழுதும் போக்குவதுபோல இவ்வுலகில் மனிதனுடைய பாவத்தைப் பூமிதானம் போக்குகிறது. கௌரவச்ரேஷ்டரே! இவ்வுலகில் கொடுப்பவன் சென்ற பத்துத்தலைமுறைகளையும் வரும் பத்துத்தலைமுறைகளையும் மேன்மைப்படுத்துகிறான். (கொடுத்ததை) அபஹரிப்பவன் அவர்களைக் கெடுத்துவிடுகிறான். பூமியைக் கொடுப்பதாக உறுதிசொல்லிக் கொடாதவனும் கொடுத்துவிட்டுப் பிறகு அபஹரித்தவனுமான மனிதர்கள் வருணபாசங்களால் கட்டப்பட்டுச் சீழிலும் உதிரத்திலும் தள்ளப்படுகின்றனர். எவன் தன்னால் கொடுக்கப்பட்டதானாலும் பிறனால் கொடுக்கப்பட்டதானாலும் பூமியை அபஹரிக்கிறானோ அவனுக்குக் கோரமான நரகத்திலிருந்து (விடுதலை அடையக்கூடிய) பிராயச்சித்தம் ஒருபொழுதும் இல்லை. பிராம்மணனுடைய பூமியை அபஹரிப்பவன் பன்னிரண்டு

---

1 பீஷ்மபர்வம், 355-ம் பக்கம் குறிப்பிலும், சாந்திபர்வம், 664-ம் பக்கம் குறிப்பிலும் காண்க.

முன்னோர்களைக் கெடுத்துவிடுவான். அவன் புழுவாகப் பிறப்பான். அவன் (அதிலிருந்து) ஒருநாளும் விடுவிக்கப்படமாட்டான். எவன் பிராம்மணஶ்ரேஷ்டனுக்குப் பூமியைக் கொடுத்து அதையே ஆஶ்ரயித்து ஜீவிக்கிறானோ அவன் லக்ஷம் பசுக்களைக் கொன்றவனுக்குள்ள பயனை அடைகிறான். பாண்டவரே! பாபாத்மாவான அவன் (தலைகீழாகக் கும்பீபாகங்களில் சமைக்கப்படுகிறான். அவன்) ஆயிரம் தேவவருஷங்கள் சென்றதும், கும்பீபாகத்திலிருந்து விடப்பட்டு இந்த லோகத்தில் நூறு ஜன்மம் நாயாகப் பிறப்பான். எவன் பிராம்மணஶ்ரேஷ்டர்களுக்குப் பூமியைக் கொடுத்து அதையே அடுத்து ஜீவிக்கிறானோ துஷ்டஸ்வபாவமுள்ள அந்த மூடன் இருபத்தொரு நரகங்களையும் அடைகிறான். அவன் நரகங்களிலிருந்தும் விடப்பட்டு நாய்களுடைய ஜன்மத்தை அடைகிறான். கலப்பையால் உழப்பட்டதும் விதை விதைத்துப் பயிர்களின் வரிசையுள்ளதுமான பூமியையாவது ஜலத்துடன்கூடின பூமியையாவது ஏழையான பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும். அரசரே! மிக்க ஸந்தோஷமுள்ள சித்தத்துடன் இவ்விதமான பூமியைக் கொடுத்தால் எல்லா இஷ்டங்களையும் மனத்தால் எண்ணப்பட்டவைகளையும் அடைவான். அநேகம் அரசர்கள் பூமியைக் கொடுத்திருக்கிறார்கள்; (இப்பொழுதும்) கொடுக்கிறார்கள். பூமியானது எப்பொழுது எவனெவனுடையதாக இருக்கிறதோ அப்பொழுது அவனவனுக்குப் பயன் கிடைக்கிறது. ராஜேந்திரரே! எவன் நல்ல அழகுள்ள கன்னிகையை வேதாத்தியயனம் செய்தவனுக்குக் கொடுக்கிறானோ அவன் [1]பிரம்மதேயனாகிறான். அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேட்பீராக. மன்னரே! பாரத்தை வஹிக்கக்கூடிய ஆயிரம் காளைகளைக் கொடுத்தால் எந்தப்பயனை (அடைவானோ அந்தப் பயனைக்) கன்னிகாதானம் செய்வதால் அடைகிறான். கன்னிகாதானம் செய்தவன் லக்ஷம் பசுக்களை நன்கு தானம் செய்வதாலாகிய பயனை அடைகிறான். கௌரவஶ்ரேஷ்டரே! கன்னிகைக்குச் (சரீரத்தில்) எவ்வளவு மயிர்கள் இருக்கின்றனவோ அவ்வளவு ஆயிரம் வருஷம் என்னுடைய லோகத்தில் பூஜிக்கப்படுகிறான். காலக்கிரமத்தில் அவன் அவ்விடத்திலிருந்து நழுவி இவ்வுலகத்தில் ஆறு அங்கங்களையும் நான்கு வேதங்களையும் அறிந்தவனும் எல்லாஜனங்களாலும் பூஜிக்கப்பட்டவனுமான பிராம்மணனாகப் பிறக்கிறான். பாண்டவரே! எவன் வேதாத்தியயனம் செய்தவ

1 ப்ரம்மதேய: என்பது மூலம்; 'வேதத்தையே கொடுத்தவன்' அல்லது, 'பரப்ரம்மத்தையே கொடுத்தவன்' என்பது பொருள்.

னும் நல்லொழுக்கமுள்ளவனும் அநேகம் புத்திரர்களுள்ளவனும் ஏழையுமான பிராம்மணனுக்கு ஸுவர்ணத்தைக் கொடுக்கிறானோ அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடப்பட்டுப் பாலஸூரியனுக்குஒப்பான காந்தியுள்ளவனும் மிக்க தேஜஸுள்ளவனுமாகித் திவ்யமான விமானத்தில் ஏறிக்கொண்டு இஷ்டப்படி ஸஞ்சரிப்பவனும் இஷ்டமான போகங்களுள்ளவனுமாக என்னுடையலோகத்தில் கோடி வருஷம் பூஜிக்கப்படுகிறான். அவன் காலக்கிரமத்தில் அவ்விடத்திலிருந்து இறங்கி இவ்வுலகத்தில் வேதங்களையும் வேதாங்கங்களையும் அறிந்தவனும் கோடிதனங்களுக்குப் பதியுமான பிராம்மணனாகப் பிறப்பான். எவன் ஜீவனோபாயமற்றவனும் இளைத்த பசுக்களுள்ளவனும் ஏழையுமான பிராம்மணனுக்கு வெள்ளிநாணயத்தைக் கொடுப்பனோ அவன் எல்லாப் பாவங்களாலும் விடப்பட்டு இஷ்டமான ரூபத்தை அடைந்து நிறைமதிபோன்ற பிரகாசத்தோடு விளங்கும் விமானத்தால் (சென்று) ஸ்வர்க்கலோகத்தில் இஷ்டப்படி பூஜிக்கப்படுகிறான். காலக்கிரமமாக அவ்விடத்திலிருந்து இறங்கி இவ்வுலகிலும் மிக்க புகழ்பெற்றவனும் எல்லாஜனங்களாலும் பூஜிக்கப்பட்டவனும் செல்வமுள்ளவனும் பராக்கிரமமுள்ளவனுமான அரசனாகப் பிறக்கிறான். எவன் ஏழையான ஶ்ரோத்ரியனுக்குத் திலபர்வதத்தை விசேஷமாகக் கொடுக்கிறானோ அவனுடைய பயனையும் கேளும். பாண்டுநந்தனரே! பதினாயிரம் காளைகளைத் தானம்செய்தால் எந்தப் புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தை அடைந்து அந்தக்ஷணத்தில் பாவமற்றவனாவான். ஸர்ப்பமானது சட்டையுரித்துச் சுத்தமான சரீரமுள்ளதாவதுபோல எள்ளுத்தானம் செய்வதால் பாவத்தைவிட்டுச்சுத்தனாகிறான். ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட எள்ளுக்குவியலைத் தானம்செய்பவன் திவ்யமானவிமானத்திலேறிப் பித்ருலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். திலதானம் செய்தவன் மிக்க கீர்த்தியுள்ளவனும் இஷ்டமான ரூபமுள்ளவனுமாகிப் பித்ருலோகத்தில் அறுபதினாயிரம் வருஷம் ஸுகமாக மகிழ்கிறான். அரசரே! எவன் வேதாத்தியயனம் செய்தவனும் ஏழையுமான பிராம்மணனுக்குத் திலதேனுவைக் கொடுக்கிறானோ அவனுக்குள்ள பயனையும் கேட்பீராக. ஆயிரம் பசுக்களைத் தானம்செய்தால் எந்தப் புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தின் பயனைத் திலதேனுவைக்கொடுக்கும் மனிதன் அடைகிறான். மன்னரே! எவன் (எவ்வளவு) படிஎள்ளுகளாலாகிய திலதேனுவைக் கொடுக்கிறானோ அவ்வளவு கோடிவருஷம் அவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். வேந்தரே! எவன் எட்டு மரக்கால் எள்ளுகளால் திலதேனுவைச்

செய்து முப்பத்திரண்டு நிஷ்கங்களுடன் 1 விஷு (மென்னும் புண்ணியகால)த்தில் என்னிடத்தில்பக்தியுடன் சித்தத்தை என்னிடத்தில் வைத்துக் கொடுக்கிறனோ அவனுக்குள்ள புண்ணியத்தின் பயனைக் கேட்கக்கடவீர். விதிப்படி ஆயிரம் கன்னிகாதானம்செய்தால் எந்தப்பயன் உண்டோ அந்தப்புண்ணியத்தை (அவன்) அடைந்து என்னுடையலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். அவன் என்னுடைய உலகத்திலிருந்து இறங்கியும் இவ்வுலகில் ரிக், யஜுஸ், ஸாமம் என்னும் வேதங்களின் கரையை அடைந்த பிராம்மணஸ்ரேஷ்டனாகப் பிறக்கிறான். அரசரே! எவன் நல்ல ஸ்வபாவமுள்ளதும் பாலுள்ளதும் பரிசுத்தமானதும் கறக்கவெண்கலப்பாத்திரமுள்ளதுமான பசுவை ஏழையான ஸ்ரோத்திரியனுக்குக் கொடுக்கிறானோ அவனுடைய முன்செய்தபாவமெல்லாம் அந்தக்ஷணத்திலேயே நசிக்கிறது; ஸம்சயமில்லை. அவன் விருஷபங்கள்பூட்டப்பட்டதும் நன்கு அலங்கரிக்கப்பட்டுப் பிரகாசிக்கின்றதும் இஷ்டப்படி செல்வதும் திவ்யமுமானவாகனத்திலேறிக் கோலோகத்தை அடைகிறான். அரசரே! அந்தப்பசுவின்மீது எவ்வளவு ரோமங்களிருக்கின்றனவோ அவ்வளவு ஆயிரம்வருஷம் கோக்களின்லோகத்தில் பூஜிக்கப்படுகிறான். கோலோகத்திலிருந்து இறங்கி இவ்வுலகில் ஸத்ரயாகம் செய்பவனும் கொடையாளியும் எல்லாமன்னர்களாலும் அர்ச்சிக்கப்பட்டவனுமானபிராம்மணனாகப் பிறப்பான். நீண்டகைகளுள்ளவரே! இவ்வுலகில் எள்ளும் பசுக்களும் ஸுவர்ணமும் அன்னமும் கன்னிகையும் பூமியும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கப்பட்டால் (கொடுத்தவனைக்) கரையேற்றுகின்றன. வேந்தரே! நல்லொழுக்கமுள்ளவனும் 2ஆஹிதாக்னியும் ஆசையற்றவனுமானபிராம்மணனை விதிப்படி த்ருப்தியடைவிக்கவேண்டும். அப்படிச்செய்வது பரலோகத்தில் உதவுவதான நிதியாகும். ஆஹிதாக்னியும் வேதாத்தியயனம்செய்தவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் சூத்திரனுடைய அன்னத்தைவிலக்கினவனும் ஏழையுமான பிராம்மணனை முயற்சியுடன் பூஜிக்கவேண்டும். ஆஹிதாக்னியும் அக்னிஹோத்திரம்செய்பவனும் வேதத்தை அறிந்தவனுமான பிராம்மணன் எப்பொழுதும் (தானத்திற்குப்) பாத்திரமாவான். எவனுடையவயிற்றில் சூத்திரனுடைய அன்னம் இல்லையோ அவன் பாத்ரங்களுள்ளும் (உத்தம) பாத்ரமாவான். வேதமயமானபாத்திரமும் தபோமயமானபாத்திர

---

1 சித்திரை ஐப்பசி இம்மாதங்கள் பிறக்குங்காலம்.

2 அக்னிஹோத்திரத்தைச் செய்தவர்.

மும் 1 அஸங்கீர்ணமானபாத்திரமும் மனிதனைக்கரையேற்றும். எவர்கள் எப்பொழுதும் வேதாத்தியயனம்செய்யும் தன்மையுள்ளவர்களும் விஷயங்களிற்செல்லாத இந்திரியங்களுள்ளவர்களும் எப்பொழுதும் 2 பஞ்சயஜ்ஞங்களைப் பிரதானமாகக்கொண்டவர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் பூஜிக்கப்பட்டால் (பூஜித்தவர்களைக்) கரையேற்றுவார்கள். எந்தக் கிருஹஸ்தர்கள் பொறுமையும் மன அடக்கமுமுள்ளவர்களும் வேதத்தால் நிறைந்த காதுகளுள்ளவர்களும் இந்திரியங்களை வென்றவர்களும் பிராணிகளைக் கொல்லுவதினின்று ஒழிந்தவர்களும் தானம் வாங்குவதில் ஸங்கோசமுள்ளவர்களுமாக இருக்கிறார்களோ அந்தப் பிராம்மணர்கள் தாண்டுவிப்பதற்குத் திறமையுள்ளவர்கள். தினந்தோறும் (பித்ருக்களுக்கு ஜலதர்ப்பணம் செயபவனும் எப்பொழுதும் யஜ்ஞோபவீதமுள்ளவனும் எப்பொழுதும் வேதாத்தியயனம் செய்பவனும் சூத்ரான்னத்தைவிலக்கினவனும் ருதுகாலத்தில் (மனைவியைப்) புணர்பவனும் விதிப்படி ஹோமம்செய்பவனுமான பிராம்மணன் தாண்டுவிக்கத் திறமையுள்ளவன். எந்தப் பிராம்மணன் என்னிடத்தில் பக்தியுள்ளவனும் என்னிடத்தில் பிரியமுள்ளவனும் என்னை முக்கியகதியாகக்கொண்டவனும் என்னிடத்தில் கர்மங்களை ஸமர்ப்பித்தவனுமாக இருக்கிறானோ அந்தப் பிராம்மணன் நிச்சயமாகத் தாண்டுவிப்பான். துவாதசாக்ஷரத்தின் உண்மையை அறிந்தவனும் 3 நான்கு வியூஹங்களின் பிரிவையும் அறிந்தவனும் தவறுதலின்றி 4ஐந்து காலங்களையும் அறிந்தவனுமான பிராம்மணன் தாண்டுவிப்பான்' என்று சொன்னார்.

1 ஸங்கர(= கலப்பு) ஜாதியில் பிறவாதவன்; அல்லது, ஒழுக்கம்தவறாதவன்.

2 ப்ரம்மயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், தேவயஜ்ஞம், பூதயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம்;

3 வாஸுதேவன், ஸங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன்.

4 அபிகமன, உபாதான, இஜ்யா, ஸ்வாத்யாய, யோககாலங்கள் எனினும் உஷக்காலம், காலைஸந்தி, உச்சிகாலம், ஸாயங்காலம், அர்த்தயாமம் எனினுமாம்.

## நூற்றுமூன்றாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கோவிந்தர் காளை, வீடு, படுக்கை முதலியவற்றின் தானத்தைப் புகழ்ந்து பசுக்களையும் பிராம்மணர்களையும்காப்பது முதலிய தர்மங்களை யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

வாஸுதேவரால் தானங்கள் கிரமமாகச் சொல்லப்படும்போது, யுதிஷ்டிரர் தர்மங்களில் திருப்தியடையாமல் மறுபடியும் அவரை நோக்கி வினவலானார். 'தேவரே! சத்துருக்களைத் தபிக்கச்செய்பவரே! தேவஸ்ரேஷ்டரே! மாதவரே! இந்தத் தர்மமாகிற அமிருதத்தைக்கேட்டும் எனக்குத் திருப்தியுண்டாகவில்லை. அச்சுதரே! விருஷபதானத்திற்கு எந்தப்பயன் விதிக்கப்படுகிறதோ அந்தப்பயனை உம்முடைய பக்தனான எனக்கு இப்பொழுது சொல்லும். தேவஸ்ரேஷ்டரே! வேறு எந்தச் சில தானங்கள் உம்மால் சொல்லப்படவில்லையோ அவற்றையும் அவற்றின் பயனையும் வரிசையாகச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார்.

நமாகவும் மிக்கபுண்ணியமாகவும் பாவனமாகவும் இருப்பதால் விருஷபதானத்தின் பயனைப்பற்றியதும் சிறந்ததுமான தர்மமாகிற அமிருதத்தைக் கேளும்.கௌரவ ஸ்ரேஷ்டரே! பாண்டவரே! யுதிஷ்டிரரே! ஒன்றாக இருந்தாலும் பத்துப்பசுக்களுக்கு ஒப்பானதும் கொழுப்பினாலும் மாம்ஸத்தாலும் மிகவும் புஷ்டியுள்ள சரீரமுள்ளதும் ரோகமற்றதும் கோபமற்றதும் யௌவனமுள்ளதும் நல்ல ஸ்வபாவமுள்ளதும் மங்களகரமானதும் எல்லாத் தோஷங்களாலும் விடப்பட்டதுமான விருஷபமானது (எவனால்) பிராம்மணனுக்குக் கொடுக்கப்பட்டுச் சீக்கிரமாகப் பாரத்தைப் பொறுக்கிறதோ அவன் அந்தத்தானத்தின் புண்ணியத்தால் சிறந்த தேஜஸுள்ளவனாகிக் கோடிவருஷம் கோலோகத்தில் இஷ்டப்படி பூஜிக்கப்படுகிறான். யுதிஷ்டிரரே! எவன் சேர்ந்திருப்பவைகளும் பாரத்தைவஹிப்பவைகளுமான இரண்டுவிருஷபங்களை நல்லொழுக்கமுள்ளவனும் மிக ஏழையுமான ஸ்ரோத்திரியனுக்குக் கொடுப்பனோ அவனுக்குச் சொல்லப்பட்டிருக்கும் புண்ணியத்தைக் கேளும். ஆயிரம் பசுக்களைத்தானம்செய்தால் எந்த உத்தமமான்பயன் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப்புண்ணியத்தின்பயனை அவன் அடைகிறான்; என்னுடைய உலகங்களையும்

அடைகிறான். அரசரே! அவ்விரண்டுவிருஷபங்களுக்கும் எவ்வளவு ரோமங்களிருக்கின்றனவோ அவ்வளவு ஆயிரம்வருஷங்கள் என்னுடையஉலகத்தில் பூஜிக்கப்படுகிறான். பாண்டவரே! தரித்திரனுக்கே கொடுக்கவேண்டும். தனிகனுக்குக் கொடுக்கக்கூடாது. தடாகங்களில் மழைகளுக்குப் பயனுண்டு; ஸமுத்திரங்களில் இல்லையேயில்லை. கௌரவஶ்ரேஷ்டரே! எவன் வ்ருஷபத்தைத ஏழையான பிராம்மணனுக்குக் கொடுப்பனோ அவன் அந்தப்புண்ணியமான தானத்தால் பரிசுத்தமானசித்தமுள்ளவனாகித் திவ்யமான ஸ்வரூபத்தைஅடைந்து திவ்யமானவிமானமேறி என்னுடைய உலகங்களில் பிரளயம்வரையில் ஸுகமாக மகிழ்கிறான். யுதிஷ்டிரரே! எவன் தீபங்களுடையஒளியோடுகூடினதும் படுக்கைகளாலும் ஆஸனங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் பாத்திரங்களோடும் ஸாமக்ரிகளோடும்கூடினதும் தனங்களாலும் தான்யங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் வேலைக்காரிகளோடும் பசுக்களோடும் பூமியோடும்கூடினதும் எல்லா ஸாதனங்களாலும் நிறைந்ததுமானவீட்டைத் தக்ஷிணையுடன் வேதாத்தியயனம்செய்த ஏழைப்பிராம்மணனுக்குக் கொடுப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். அவனுக்குத் தேவர்களும் பித்ருகணங்களும் அக்னிகளும் ரிஷிகளும் மிக்கமனக்களிப்புற்று ஸூரியனுக்கொப்பானவாகனத்தைக் கொடுக்கிறார்கள். அவன் அந்த விமானத்தால் காந்தியோடுகூடினவனாகி மிகச்சிறந்ததான பிரம்மலோகம்சென்று அவ்விடத்தில் ஆயிரம்ஸ்திரீகளால் சூழப்பட்டதும் ஸுவர்ணமயமும் அழகாகஇருப்பதுமானவீட்டில் பூதப்பிரளயம்வரையில் பிரம்மலோகவாஸியாகி மகிழ்கிறான். பாண்டவரே! எவன் பிராம்மணனைப் பக்தியுடன் வஸ்திரத்தினாலும் மாலையினாலும் சந்தனத்தினாலும் பூஜித்து விசித்திரமான அன்னத்தைப் புஜிக்கும்படிசெய்து மேல்விரிப்புடன்கூடின படுக்கையைக் கொடுக்கிறானோ அவனுடையபுண்ணியத்தின்பயனைக் கேட்கக்கடவீர். பாண்டவரே! விதிப்படிகொடுக்கப்பட்ட கோதானத்திற்கு எந்தப்புண்ணியமுண்டோ அந்தப்புண்ணியத்தை அவன் அடைந்து பித்ருலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். எவன் பிராம்மணனுக்குச் சில்பசாஸ்திரத்தையும் வேதாத்தியயனத்தையும் வித்தையையும் மந்திரங்களையும் ஔஷதங்களையும் (சொல்லிக்)கொடுக்கிறானோ அவனுடைய புண்ணியத்தின்பயனைக் கேட்பீராக. ஆயிரம்ஆஹிதாக்னிகளைப்பூஜிப்பதாலுண்டாகும் புண்ணியத்தின்பயனைப் படுக்கையைத்தானம்செய்பவன் அடைகிறான்; வேதங்களால் நடத்தப்பட்டுவிளங்கும் விமானத்தால்

ஸப்தரிஷிகளின்உலகங்களை அடைந்து பிரம்மவாதிகளால் பூஜிக்கப் படுகிறான். அங்கு முப்பதுசதுர்யுகம்வரையில் தேவன்போல விளையாடிக்கொண்டிருந்து இந்தமானிடலோகத்தில் வேதத்தை அறிந்த பிராம்மணனாகப் பிறக்கிறான். வேந்தரே! எவன் வழிநடந்து களைத்து இளைத்த பிராம்மணனைக் களைதீர்ந்தவனாகச் செய்கிறானோ அவன் ஒருவருஷம் செய்தபாவம் அப்பொழுதே நாசமடைகிறது; மேலும், அந்தப்பிராம்மணனுடைய இரண்டுபாதங்களையும் பக்தியுடன் ஜலத்தால் அலம்பினால் அவன் பத்துவருஷங்களில்செய்த பாவம் போய்விடுகிறது; ஸம்சயமில்லை. நெய்யினாலாவது எண்ணெயினாலாவது அவனுடைய இரண்டுபாதங்களையும் பூஜித்தால் அது பன்னிரண்டு வருஷங்களிலுண்டான பாவத்தைப் போக்குகிறது. அந்தப்பிராம்மணனைப்பூஜிப்பவன் ஸுவர்ணத்தால்செய்த பசுவின் தானத்திற்குச் சொல்லப்பட்டிருக்கும் புண்ணியத்தின்பயனை அடைகிறான். பூபதியே! பிராம்மணனை எதிர்கொண்டு செல்வதனாலும் நல்வரவுவிசாரிப்பதனாலும் ஆஸனங்கொடுப்பதனாலும் பூஜிப்பவன் தேவர்களுக்குப் பிரியனாவான். அரசரே! நல்வரவுவிசாரிப்பதனால் அக்னிகளும் ஆஸனம்கொடுப்பதனால் இந்திரனும் எதிர்கொண்டு செல்வதால் அதிதியினிடம்பிரியமுள்ள பித்ருக்களும் ஸந்தோஷம் அடைகின்றனர். அரசரே! அக்னிகளும் இந்திரனும் பித்ருக்களும் ஸந்தோஷமடைவதால் ஒருவருஷம்செய்த அவனுடைய பாவமானது உடனே நாசமடைகிறது. எவன் பிராம்மணனுக்கு மாலையால் அலங்கரிக்கப்பட்டஆஸனத்தைக் கொடுக்கிறானோ அவன் மணிகளால் விசித்ரமான ரதத்தில் ஏறி இந்திரனுடைய வீட்டுக்குச் சென்று அவ்விடத்தில் இந்திரனுடையஆஸனத்தில் தேவஸ்திரீகளால் பணிவிடைசெய்யப்பட்டு அறுபதினாயிரம்வருஷம் அப்ஸரஸுகளின் கூட்டங்களுடன் விளையாடுகிறான். யுதிஷ்டிரராஜரே! பிராம்மணனுக்கு வாகனத்தைக்கொடுத்தவன் ரத்தினங்களால் விசித்திரமான வாகனத்தால் தேவலோகம்சென்று அவ்விடத்தில் அப்ஸரஸுகளின்கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டு இஷ்டப்படிவிளையாடி இவ்வுலகில் அரசனாகப்பிறப்பான். இதில் ஆலோசனைவேண்டாம். எவன் துளிர்கள்நிறைந்ததும் புஷ்பங்களும் கனிகளுமுள்ளதுமான விருக்ஷத்தைச் சந்தனத்தால்பூஜித்து வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரித்துத் தக்ஷிணையுடன் வேதாத்தியயனம் செய்த பிராம்மணனுக்கு இஷ்டப்படிபோஜனம்செய்வித்துக் கொடுக்கிறானோ அவனுடைய புண்ணியத்தின்பயனைக் கேட்கக்கடவீர். அவன் ஸுவர்

ணத்தால்விசித்ரமானதும் பிரகாசிக்கின்றதுமான விமானத்தால்,'ஜய' என்னும் சொல்லின் ஒலிகளுடன்கூடினவனாக இந்திரனுடையபட்டணத்திற்குச் செல்லுகிறான் ; பிறகு, அழகான இந்திரனுடைய பட்டணத்தில் கற்பகவிருக்ஷமானது அவனுக்கு மனத்தால் விரும்பினஇஷ்டத்தையெல்லாம் கொடுக்கிறது. (அவன் கொடுத்த) அந்தமரத்தில் எவ்வளவுஇலைகளும் மலர்களும் கனிகளும் இருக்கின்றனவோ அவ்வளவாயிரம்வருஷம் இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். இந்திரலோகத்திலிருந்து இறங்கி மானிடலோகத்திற்கு வந்து ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும்நிறைந்த பட்டணத்தையும் ராஜ்யத்தையும் ஆளுவான். எந்த மனிதன் என்னிடத்தில் பக்தியினால் விதிப்படி ஆலயம்கட்டி (அதில்) என்னுடைய அர்ச்சா விக்ரஹத்தை ஸ்தாபனம்செய்து (பிறனைக்கொண்டு) பூஜையை நடத்துகிறானோ அல்லது பக்தியினால் தானே பூஜிக்கிறானோ அவனுடையபுண்ணியத்தின்பயனைக் கேட்பீராக. ஆயிரம் அஸ்வமேதங்களுக்கு எந்தப்புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப்பயனை அடைகிறான்; என்னுடைய ஸாலோக்யத்தையும் அடைகிறான். யுதிஷ்டிரரே ! அவன் என்னுடைய உலகத்தினின்றும் வெளியில் செல்லுவதை நான் அறியேன். எவன் தேவாலயத்திலும் பிராம்மணனுடையவீட்டிலும் பசுக்களின் கொட்டிலிலும் [1] மண்டபத்திலும் தீபத்தைஜ்வலிக்கும்படி செய்கிறானோ அவனுடையபுண்ணியத்தின்பயனைக் கேட்கக்கடவீர். அவன் ஸுவர்ணமயமானவிமானத்திலேறி எல்லாத்திசைகளையும் பிரகாசிக்கும்படி செய்துகொண்டுதேவஶ்ரேஷ்டர்களால் ஸேவிக்கப்பட்டு ஆதித்யலோகத்தை அடைவான். மிக்கதவம்செய்த அவன் அவ்விடத்தில்கோடிவருஷம் இஷ்டப்படி விளையாடி இவ்வுலகில் வேதவேதாங்கங்களின் கரையை அடைந்த பிராம்மணனாகப் பிறப்பான். அரசரே ! புருஷஶ்ரேஷ்டரே ! எவன் தேவாலயங்களிலும் பிராம்மணர்களுடைய வீடுகளிலும்[2] மண்டபத்திலும் இரவிலோபகலிலோ பலவிதமான கந்தர்வ வாத்தியங்களையும் புண்ணியமானகதைகளையும் பக்தியுடனும் என்னை அடைந்திருக்கும் சித்தத்துடனும்கூடினவனாக நடத்துகிறானோ அவனுக்குத் தேவர்களும் பித்ருக்களும் ஸந்தோஷமும் மிக்க பிரியமுமுள்ளவர்களாகி இஷ்டப்படிசெல்வதும் ஸுககரமானதுமான விமானத்தைக்

---

1 'அக்ஷ்வரம்' என்பது மூலம்; நான்கு கோணங்களுள்ள இடம்; அல்லது முற்றம்; பலவழிகள் சேரும் இடம்.

2 'அத்வரே' என்பது மூலம்.

கொடுக்கின்றனர். அந்தமனிதனும் அந்தவிமானத்தால் தேவர்களு டையபட்டணம்சென்று அவ்விடத்தில் திவ்யமான அப்ஸரஸ்திரீ களால் ஸேவிக்கப்பட்டு மிக்கஸந்தோஷமடைகிறான். அரசரே! அவன் தேவலோகத்திலிருந்து இறங்கி இவ்வுலகில் வேத வேதாங்கங் களின் உண்மையை அறிந்தவனும் போகங்களுள்ளவனுமான பிராம் மணனாகப் பிறப்பான். யுதிஷ்டிரரே! 1 மண்டபத்திலாவது ஸபை யிலாவது விசாலமான ஸபையின்தாழ்வாரத்திலாவது விஸ்தாரமான அக்னிகுண்டத்தையாவது மேடையையாவதுசெய்து அதில் அக்னி யைப் பக்தியுடன் நான்குமாஸங்கள் ஜ்வலிக்கும்படிசெய்து புஷ்யம் முதலான மாஸங்கள் முடிவுபெற்றபின் அந்தராத்மாவைஎன்னிடத் தில்வைத்துச் சிறந்தபாயஸத்தைப் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்வித்துச் சக்திக்குத்தக்கபடி பிராம்மணர்களுக்குத் தக்ஷிணை கொடுக்கவேண்டும். யுதிஷ்டிரரே! எவன் இவ்விதம் அக்னியை ஸ்தாபித்து எப்பொழுதும் என்னைப் பூஜிப்பனோ அவனுடையபுண் ணியத்தின்பயனைத் தெரிந்துகொள்ளும். அதனால், நானும் சங்கரரும் பித்ருக்களும் அக்னிகளும் மிக்க பிரீதியை அடைவோம். இதில் ஆலோசனை வேண்டாம். எங்களுக்குப் பிரீதியைச்செய்தவனும் ஸ்ரீமானுமான அவன் அறுபத்தாறாயிரம்வருஷம் என்னுடைய லோகத்தில் பூஜிக்கப்படுகிறான்; என்னுடையஉலகத்திலிருந்து இறங் கியும் இவ்வுலகில் மிக்க கீர்த்தியுள்ளவனும் வேதங்களையும் வேதாங் கங்களையும் அறிந்தவனும் மன்னர்களால் பூஜிக்கப்பட்டவனுமான பிராம்மணனாகப் பிறக்கிறான். மனிதர்களில்சிறந்தவரே! யுதிஷ்டி ரரே! எவன் வேதாத்தியயனம்செய்தவனும் நற்குலத்தில் பிறந்த வனும் ஏழையுமான பிராம்மணனை விசேஷமாகப் போஷிக்கிறானோ அவனுடையபுண்ணியத்தின்பயனைத் தெரிந்துகொள்ளும். பாண்ட வரே! கோடிகோதானங்களைச்செய்தால் எந்தப்பயன் சொல்லப் பட்டிருக்கிறதோ அந்தப்பயனை முழுதும் அவன் ஒருவருஷத்தில் அடைகிறான். அவன் ஸுவர்ணமயமும் விசித்திரமும் ஸூர்யன் போலவிளங்குவதுமான விமானத்தால் தேவஸ்திரீகளுடைய கூட் டங்களால் ஸேவிக்கப்பட்டு என்னுடையலோகத்தைஅடைந்து என் னுடையதான அந்தஉலகத்தில் உத்தமஸ்திரீகளால் கானம்பண்ணப் பட்டவனும் எல்லாத்தேவர்களாலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட வனுமாக இருபதுகோடிவருஷம் விளையாடிக்கொண்டிருந்த பிறகு, மானிடலோகத்திற்குவந்து வேதங்களை அறிந்த பிராம்மணனாகப்

---

1 'அகூவரே' என்பது மூலம்.

பிறப்பான். எவன் கரகம்என்னும் பாத்திரத்தையாவது கர்ணிகை யென்னும் தீர்த்தபாத்திரத்தையாவது பிராம்மணனுக்குக்கொடுக்கிறு ஞே அவனுடைய புண்ணியத்தின்பயனைக் கேளும், ராஜரே! 1 பிரம்ம கூர்ச்சத்தைப் பானம்செய்தால் எந்தப்பயன் சொல்லப்பட்டிருக்கிற தோ அந்தப் புண்ணியத்தின்பயனைத் தீர்த்தபாத்திரத்தைக் கொடுத்த மனிதன் அடைகிறான். அவன் நன்கு திருப்திஅடைந்தவனும் எல்லா நல்லவாஸனைகளுமுள்ளவனும் மிக்ககளிப்புற்ற இந்திரியங்களும் மன முமுள்ளவனுமாக இருந்துகொண்டு ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் பூட்டப்பட்டுவிளங்கும் விமானத்தால் தேவகந்தர்வர்களால்ஸேவிக் கப்பட்ட வருணலோகத்தை அடைகிறான். எவன் பிராணிகளுக்கு முக்கியஜீவனமான ஜலத்தைக் கோடைக்காலத்தில் மூன்றுமாஸங்கள் கொடுப்பனே அவனுடைய புண்ணியத்தின்பயனைக் கேட்பீராக. கோடிகபிலைப்பசுக்களைத் தானம் செய்ததற்கு எந்தப்புண்ணியம் விதிக்கப்படுகிறதோ அந்தப்புண்ணியத்தின் பயனை ஜலத்தைக்கொடுப் பவன் அடைகிறான். அவன் நிறைமதிபோன்ற ஒளியால் விளங்கும் விமானத்தினால் அப்ஸரஸுகளின்கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டுச் சந்திரலோகத்தை அடைவான். அவ்விடத்தில் தேவகந்தர்வர்களால் ஸேவிக்கப்பட்டு முப்பதுகோடியுகம் விளையாடி மானிடலோகத்தில் நான்குவேதங்களையும்கற்ற பிராம்மணனாகப் பிறப்பான். தலைக்குத் தேய்த்துக்கொள்ள எண்ணெயைக்கொடுப்பதால் தேஜஸுள்ள வனும் இன்பமானகாட்சியுள்ளவனும் நல்ல அதிருஷ்டமுள்ளவனும் அழகுள்ளவனும் சூரனும் பண்டிதனுமான பிராம்மணனாவான். வஸ்திர தானம்செய்பவன் தேஜஸுள்ளவனும் எல்லாரும்பார்க்கப்பிரியமான வனும் நல்ல அதிருஷ்டமுள்ளவனும் செல்வமுள்ளவனும் எப்பொழு தும் ஸ்திரீகளுக்கு மனத்திற்கினியவனும் ஆகிறான். பாதரக்ஷை களையும் குடையையும்கொடுக்கும் நரோத்தமன் மிக்கதேஜஸுள்ள வனாக ஸுவர்ணத்தால் செய்யப்பட்டதும் பிரகாசிக்கின்றதுமான சிறந்தரதத்தால் அப்ஸரஸுகளின் கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டு இந்திரலோகம் செல்லுகிறான். மரப்பாதுகைகளைக் கொடுப்பவர்கள் மரங்களால் செய்யப்பட்ட விமானங்களால் தேவஶ்ரேஷ்டர்களால் ஸேவிக்கப்பட்டுத் தர்மராஜனுடைய அழகான பட்டணம் செல்லு கிறார்கள். பல்தேய்க்கக் குச்சியைக் கொடுத்த மனிதன் இனிமை யான வாக்கியமுள்ளவனும் நல்ல மணமுள்ள முகமுள்ளவனும்

1 பகலும் இரவும் பட்டினியிருந்து காலையில் பஞ்சகவ்யம் சாப்பிடுவது பிரம்மகூர்ச்சமெனப்படும்; இதைப் பூர்ணிமையில்செய்வது விசேஷமென்பர்.

செல்வமுள்ளவனும் சிறந்த புத்தியும் அதிருஷ்டமுமுள்ளவனுமாவான். எவர்கள் பாலையும் தயிரையும் நெய்யையும் வெல்லத்தையும் தேனையும் பிராம்மணர்களுக்கு மிக்க பக்தியுடன் கொடுக்கிறார்களோ அந்த மனிதர்கள் வெண்ணிறமுள்ள மாலைகளாலும் அணிகளாலும் அலங்கரிக்கப்பட்டவர்களும் கந்தர்வர்களால் கானம் பண்ணப்படுகின்றவர்களுமாக விருஷபங்களாலும் குதிரைவாகனங்களாலும் ஈசுவரருடைய பட்டணத்திற்குச் செல்லுகின்றனர். அவ்விடத்தில் அறுபதினாயிரம் வருஷம் தேவலோகத்திலுள்ள அப்ஸரஸ்திரீகளால் ஸுகமாக ஸேவிக்கப்பட்டுத் தேவர்களுக்கு ஒப்பானவர்களாகக் களிக்கின்றனர். காலம் சென்றவுடன், அவ்விடமிருந்து இறங்கி இவ்வுலகில் ஏராளமான தனமும் தான்யமுமுள்ளவர்களும் போகங்களுள்ளவர்களும் மனிதர்களுள் சிறந்தவர்களுமான மனிதர்களாகப் பிறக்கின்றனர். பாண்டுநந்தனரே! எவர்கள் வைசாகமாஸத்தில் விசாக நக்ஷத்திரங்கூடின தினத்தில் மிக்கபக்தியுள்ளவர்களாக யமனை உத்தேசித்துப் பிராம்மணர்களை விதிப்படி பூஜித்து வெல்லம் கலந்த எள்ளுகளைப் பிராம்மணர்களுக்குக் கொடுக்கிறார்களோ அவர்களுடைய புண்ணியத்தின் பயனைக் கேட்கக்கடவீர். (அப்படி கொடுப்பவன்) விதிப்படி கோதானம்செய்வதாலுண்டாகக்கூடிய புண்ணியத்தை அடைந்து யமனுடையலோகத்தில் பூஜிக்கப்படுகிறான்; சிலகாலத்தில் அவ்விடமிருந்தும்நழுவி இவ்வுலகில் அரசனாவான். அந்த(விசாக) தினத்திலேயே பிராம்மணர்களுக்கு நல்லதக்ஷிணை கொடுத்துப்போஜனம்செய்வித்து ஜலம் நிறைந்த திவ்யமானபாத்திரங்களைக்கொடுப்பவர்கள் ஸூரியனுடையகாந்திபோலவிளங்கும் விமானங்களால் வருணாலயம்சென்று அவ்விடத்தில் காமஸுகத்தை விரும்பித் தேவஸ்திரீகளுடன் ரமித்து காலமானவுடன், மறுபடியும் அவ்விடமிருந்து இந்த மானிடலோகத்திற்கு வந்து, போகங்களுள்ள பிராம்மணஶ்ரேஷ்டர்களாகப் பிறப்பார்கள்; ஸம்சயமில்லை. எந்தமனிதன் எப்பொழுதும் விரதம்போல(¹பகல் இரவு இரண்டு வேளை தவிர) இடையில் புஜிக்காதவனும் உண்மை உரைப்பவனும் கோபமற்றவனும் சுத்தனும் எப்பொழுதும் ஸ்நானம் செய்வதில் பிரியமுள்ளவனுமாக இருக்கிறானோ அவன் திவ்யமான விமானத்தால் இந்திரனுடைய பட்டணம் சென்று அங்கு திவ்யமான அப்ஸரஸ்திரீகளோடு கோடி வருஷம் விளையாடி மானிட லோகத்தில்

---

1 இந்த விஷயம் முன்னர் 296-ம் பக்கத்திலும் வந்திருத்தல் காண்க. இங்கே ஐந்தாவது வேளை சொல்லப்படவில்லை.

வேதங்களை அறிந்த பிராம்மணனாகப் பிறக்கிறான். எவன் பிரம்ம சாரியும் கோபத்தை வென்றவனும் உண்மையும் சுத்தியுமுள்ள வனுமாக ஒரு வருஷம் (தினந்தோறும்) ஒருவேளை புஜித்துக் கொண்டிருப்பனோ அந்த மனிதன் திவ்யமான விமானத்தால் இந்திர னுடைய பட்டணம் சென்று பதினாயிரம் கோடி வருஷம் அப்ஸர ஸுகளுடைய கூட்டங்களுடன் விளையாடி இந்த மானிடலோகத் தில் வேதங்களை அறிந்த பிராம்மணனாகப் பிறப்பான். எவன் பிரம்ம சாரியும் இந்திரியங்களை ஜயித்தவனுமாக ஒரு வருஷம் நான்காவது காலத்தில் புஜித்துக்கொண்டிருக்கிறானோ அவனுடைய புண்ணியத் தின் பயனைக் கேளும். அரசரே! அந்த மனிதன் விசித்ரமான மயில் கள் கட்டப்பட்டதும் விசித்திரமான கொடிகளால் பிரகாசிப்பதும் திவ்யமுமான விமானத்தால் மஹேந்திரனுடைய பட்டணம் சென்று மெலியாத உத்தமஸ்திரீகளால் ஸுகமாக ஸேவிக்கப்பட்டு, பன்னி ரண்டு கோடிவருஷம் நன்கு ஸந்தோஷமடைந்து பிறகு இந்திர லோகத்திலிருந்து இறங்கி இவ்வுலகில் வித்வானும் பொறுமையுள்ள வனும் வேதங்களின் கரையைக்கண்டவனுமான பிராம்மணனாகப் பிறப்பான். எவன் பிரம்மசரியத்துடனும் விரதங்களுடனும்கூடின வனும் சுத்தனும் கோபமற்றவனும் அழுக்கற்றவனுமாக ஒரு வரு ஷம் ஆறாவது காலத்தில் புஜிக்கிறானோ தபஸ்வியான அவனுடைய உத்தமமான பயனைக் கேளும். ஸூரியனுக்கொப்பான அவன் ஆதி த்யனைக் காட்டிலும் மேலான பிரகாசமுள்ள விமானத்தால் தேவ ஸ்திரீகளால் ஸேவிக்கப்பட்டு என்னுடைய உலகங்களை அடைந்து அவ்விடத்தில் ஸாத்தியர்களாலும் மருத்துக்களாலும் பூஜிக்கப்பட்டு எப்பொழுதும் என்னைத் தரிசித்துக்கொண்டு அப்ஸரஸு களுடைய கூட்டங்களுடன் விளையாடுகிறான். அரசரே! எவன் என் னிடத்தில் சித்தத்தைவைத்துப் பக்ஷோபவாஸமிருந்து அந்த விரதம் முடிந்தவுடன், வேதாத்தியயனம் செய்த பிராம்மணர்களைத் திருப்தியடைவிப்பானோ மிக்கதவமுள்ள அவனும் திவ்யமான விமானத்தால் ஒளியால் ஆகாயத்தை விளங்கும்படி செய்துகொண்டு என்னுடைய லோகத்தை அடைந்து அவ்விடத்தில் இஷ்டமான ரூபத்தை அடைந்து முப்பதுகோடி வருஷம் தேவன் போல ஸுக மாக இஷ்டப்படி விளையாடி ஸந்தோஷமடைந்த பிறகு, இந்த மானிட லோகத்தில் பூஜிக்கத்தகுந்தவனும் அங்கங்களுடன்கூடின மூன்று வேதங்களின் கரையையுமடைந்தவனுமான பிராம்மணனாகப் பிறப்பான். மன்னரே! எவன் இந்திரியங்களையும் கோபத்தையும்

புத்தியையும் ஜயித்தவனும் ஸ்நானம் செய்வதில் ஆசையுள்ளவனு மாக என்னைப்பற்றிய சித்தத்துடன் மாஸோபவாஸம் செய்து அந்த நியமம் முடிந்தவுடன் மிக்க ஸந்தோஷமுள்ள சித்தத்துடன் பிராம் மணோத்தமர்களுக்குப் போஜனம் செய்வித்துப் பிறகு தக்ஷிணையைக் கொடுப்பனோ சிறந்த தேஜஸுள்ள அவன் தேவஸ்திரீகளுடைய கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டு ஸிம்மம்கட்டின விமானத்தால் மிகச் சிறந்த பிரம்மலோகம் சென்று அந்தப் பிரம்மலோகத்தில் தேவரிஷி களுடைய கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டு நூறுகோடி வருஷம் இஷ்டப்படி மிக்க ஸந்தோஷமடைந்து காலம் சென்றவுடன் அவ் விடமிருந்து இறங்கி இவ்வுலகில் முப்பது ஜன்மங்கள் ஆறு அங்கங் களையும் அறிந்தவனும் நான்கு வேதங்களையும் ஓதியவனும் ரோகமற்ற வனுமான பிராம்மணனாகப் பிறப்பான். எவன் எல்லாக்கர்மங்களை யும் விட்டுச் சுத்தனும் கோபமற்றவனும் மனத்தை ஒருவழிப் படுத்தி என்னிடத்தில் வைத்தவனுமாக [1]மஹாப்பிரஸ்தானத்தை அடைகிறானோ சிறந்த தவமுள்ள அவன் சிறந்தரத்தினங்களால் விசித்ரமாக இருப்பதும் ஸுவர்ணத்தால் செய்யப்பட்டு விளங்கு கின்றதுமான விமானத்தால் இந்திரலோகம் சென்று அந்தத் தேவ லோகத்தில் நூறுகோடிவருஷம் தேவராஜனால் பூஜிக்கப்பட்டவனும் தேவ ஸ்திரீகளுடைய கூட்டங்களால் ஸேவிக்கப் பட்டவனுமாக வாஸம் செய்து இந்திரலோகத்திலிருந்து இறங்கி மனிதர்களுள் அரசர்களுக்கு அரசனும் மிக்க தேஜஸுள்ளவனும் எல்லாஜனங் களாலும் பூஜிக்கப்பட்டவனுமான பிரபுவாகப் பிறக்கிறான். எவன் அடக்கமுள்ளவனும் மனக்கவலையற்றவனும் கோபத்தை ஜயித்த வனுமாக என்னை அடைந்த சித்தத்துடன், 'நமோப்ரம்மண்ய தேவாய' என்னும் மந்திரத்தைச் சொல்லிப் [2]பிராயோபவேசம் செய் கிறானோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேட்பீராக. அவன் இஷ்டப்படி செல்பவனும் இஷ்டமானஸ்வரூபமுள்ளவனும் பால ஸூர்யனுக்கொப்பான காந்தியுள்ளவனுமாகித் திவ்யமான விமா னத்தால் அழிவற்ற உலகங்களை அடைகிறான். சிறந்த தேஜ ஸுள்ள அவன் ஸ்வர்க்கத்திலிருந்து ஸ்வர்க்கம் சென்று என் னுடைய உலகங்களில் பூதங்களின்பிரளயம்வரையில் மகிழ்கிறான். அரசரே! எவன் சித்தத்தை என்னிடத்தில்வைத்து அக்னிப்பிர வேசம் செய்கிறானோ அவனும் திவ்யமானவிமானத்தால் என்னுடைய

1 சாந்திபர்வம் 508-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

2 சாந்திபர்வம் 377-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

உலகத்தை அடைந்து அங்கு எல்லாநன்மைகளையும்பெற்று எப்பொழுதும் என்னையே தரிசித்து என்னுடையஸந்நிதியில் முப்பது கோடிவருஷம் ஸந்தோஷமடைந்து, காலமானவுடன், அவ்விடமிருந்துஇறங்கி வேதங்களைஅறிந்த பிராம்மணனுகப் பிறப்பான். எவன் (என்னை) ஆவிர்ப்பவிக்கும்படி செய்வதற்காகச் சுத்தமான விரதங்களுள்ளவனுக, 'நமோப்ரம்மண்யதேவாய' என்னும் இந்த மந்திரத்தைச்சொல்லி என்னைச் சரணமடைவனே அவன் பாலஸூர்யனுக்கொப்பான பிரகாசத்துடன்விளங்கும் விமானத்தால் என்னுடைய உலகத்தை அடைந்து கோடிவருஷம் ஸந்தோஷிக்கிறன்; என்னுடைய உலகத்திலிருந்துஇறங்கியும் இவ்வுலகில் அரசனுகப் பிறப்பான். எவன் என்னை ஆஸ்ரயித்துச் சுத்தனுக இருந்துகொண்டு என்னுடைய மூர்த்தியிலாவது விசேஷமாகச் சதுர்த்தசியில் ருத்திருடைய தக்ஷிணமூர்த்தியிலாவது ஆத்மாவைப் பிரவேசிக்கும்படி செய்கிறனே சிறந்த தவமுள்ளவனும் மிக்க தேஜஸுள்ளவனுமான அவன் ஸித்தர்களாலும் பிரம்மரிஷிகளாலும் தேவலோகத்தார்களாலும்பூஜிக்கப்பட்டவனும் கந்தர்வர்களாலும் பூதக்கூட்டங்களாலும் கானம்பண்ணப்பட்டவனுமாக என்னையாவது சங்கரரையாவது அடைவான். மன்னரே! அவனுக்குத் திரும்பவும் பிறப்பு உண்டாகாது. இதில் ஆலோசனை செய்யவேண்டாம். ராஜேந்திரரே! எவர்கள் பசுவின்நிமித்தமாகவும் ஸ்திரீயின் நிமித்தமாகவும் குருவின்நிமித்தமாகவும் பிராம்மணன்நிமித்தமாகவும் கொல்லப்படுகிறர்களோ அவர்கள் இந்திரலோகம்சென்று அவ்விடத்தில் ஸுவர்ணத்தால் செய்யப்பட்டதும் இஷ்டப்படி செல்வதுமான விமானத்தில் தேவஸ்திரீகளால் ஸேவிக்கப்பட்டு ஒரு மன்வந்தரம் மிக்கஸந்தோஷமடைகின்றனர். கொடுப்பதாக உறுதிசொன்னதைக் கொடாமலிருப்பதாலும் கொடுத்ததை அபகரிப்பதாலும் பிறந்ததுமுதல்செய்த தானமெல்லாம் நசித்துப்போகிறது. கோதானம்செய்யாதவர்கள் அவ்விடத்தில் (ஸ்வர்க்கத்தில்) பாலைக் குடிக்கமாட்டார்கள். பூமிதானம்செய்யாதவர்கள் பூமியை அடையமாட்டார்கள். எந்த எந்த இஷ்டங்களைப் பிராம்மணர்களுக்குக் கொடுக்கிறனே அந்த அந்த இஷ்டங்களை ஸ்வர்க்கலோகத்தில் அடைகிறன். மிக்கஇஷ்டமானதும் நியாயமாக ஸம்பாதிக்கப்பட்டதுமான திரவியத்தையெல்லாம் அது குறைவின்றியிருக்க விரும்புகிறவன் குணங்களுள்ளவனுக்குக் கொடுக்கவேண்டும். மூன்றிரவு உபவாஸமிராமலும் தீர்த்தங்களைக் குறித்து யாத்திரைசெய்யாமலும் ஸுவர்ணத்தையும் கோவையும்

தானம்செய்யாமலும் இருப்பவன் தரித்திரனாகப் பிறக்கிறான். எந்தத்தானம் வேதமோதியவனுக்குக் கொடுக்கப்படவில்லையோ அதற்குப் பயனே இல்லை. வேதமோதியவர்கள் எங்குப் பூஜிக்கப்படவில்லையோ அங்குத் தேவர்கள் பூஜிக்கிறதில்லை. ராஜேந்திரரே! வேதமோதியவர்களைக்காட்டிலும் வேறு மேலான சிறந்த தெய்வமில்லை. வேதமோதியவர்களுக்குப் போஜனம் செய்விப்பதைக்காட்டிலும் மேலான நிதியுமில்லை' என்றுசொன்னார்.

---

## நூற்றுநான்காவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்ம பர்வம். (தொடர்ச்சி.)

(வாஸுதேவர் பஞ்சயஜ்ஞங்கள், ஸ்நானவிதி, வைஷ்ணவ லக்ஷணம், பூஜைக்குத்தக்கவையும் தகாதவையுமான புஷ்பங்கள் இவற்றைச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், 'விசேஷமாக இந்திரியங்களுடன்கூடின சரீரத்தை விட்டுப்பிரியும்போது மத்தியிலுள்ள பிராணனுடைய கதியானது எப்படிப்பட்டது?' என்றுவினவ, பகவான் சொல்லலானார். 'அரசரே! மனிதன் புண்ணியபாவங்களால் செய்யப்பட்ட பயன்முழுதையும் இவ்வுலகத்தில் அடைகிறான். எல்லாப்பூதங்களுக்குமோ மரணம் இல்லை. பாண்டவஶ்ரேஷ்டரே! த்விஜோத்தமரே! எவர்கள் பஞ்சமஹாயஜ்ஞங்களைச் செய்கிறார்களோ அந்த மனிதர்களுக்கு மரணமானது மிக்கக்ஷேமத்தைச் செய்கிறது. ஐந்து பூதங்களை விட்டுப்பிரிதலை மரணமென்று சொல்லுகிறார்கள். எப்பொழுதும் சாஶ்வதனான [1]புருஷன் பிறக்கிறதுமில்லை; மரிக்கிறதுமில்லை. பாண்டவரே! மரணமென்பது பெரும்பாலும் பாபிகளுக்கே. எவர்களுக்குப் புண்ணியமான கதியில்லையோ அவர்களுக்கு மரணம் சொல்லப்படுகிறது. பெரும்பாலும் செய்யவேண்டியதைச் செய்யாத மனிதன் மிருத்யுவினிடமிருந்து பயப்படுகிறான். செய்யவேண்டியதைச்செய்தவர்கள் மிருத்யுவைப் பிரியனான அதிதியை எதிர்பார்ப்பதுபோல் எதிர்பார்க்கிறார்கள்' என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவரே! தேவர்களுக்கீசரே! இவ்வுலகில் பிராம்மணர்கள் பஞ்சயஜ்ஞங்களை எவ்விதம் செய்கிறார்கள்? நீர் அவற்றின் பெயரையும்முழுமையும் சொல்லவேண்டும்' என்றுவினவ,ஸ்ரீ பகவான் சொல்லலானார். 'யுதிஷ்டிரரே! கிருஹஸ்தன் எவைகளாலேயே பிரம்ம

---

1 ஜீவாத்மா.

ஸாலோக்கியத்தை அடைகிருனோ அந்தப்பஞ்சமஹாயஜ்ஞங்களைச் சொல்லுகிறேன்;கேளும்,பாண்டவரே! தேவயஜ்ஞம், பிரம்மயஜ்ஞம், பூதயஜ்ஞம், மனுஷ்யஜ்ஞம், பித்ருயஜ்ஞம் என்பவை பஞ்சயஜ்ஞங்களென்று சொல்லுகின்றனர். தர்ப்பணம் தேவயஜ்ஞமாகவும் வேதாத்தியயனம் பிரம்மயஜ்ஞமாகவும் பலியென்னும் யஜ்ஞம் பூதயஜ்ஞமாகவும் அதிதிகளைப் பூஜிப்பது மனுஷ்ய யஜ்ஞமாகவும்ஆகின்றன. பித்ருக்களைக்குறித்துச் செய்யப்படும்கர்மம் பித்ருயஜ்ஞமென்று சொல்லப்படுகிறது.ஹுதம், அஹுதம், ப்ரஹுதம், ப்ராசிதம், பலிதானம் என்பவைகளைப்பாகயஜ்ஞங்களென்று சொல்லுகிருர்கள்.வைஸ்வதேவமுதலான ஹோமங்களை வித்வான்கள் ஹுதமென்று சொல்லுகின்றனர். தானம்செய்யப்பட்டது அஹுதமாகவும் பிராம்மணர்களால் புஜிக்கப்பட்டது ப்ரஹுதமாகவும் ஆகின்றன. விதிப்படி [1]பிராணாக்னிஹோத்ரஹோமத்தை ப்ராசிதமென்று கருதுகின்றனர். ராஜேந்திரரே! பலிகர்மமும் பாகயஜ்ஞமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சிலர் பஞ்சமஹாயஜ்ஞங்களைப் பாகயஜ்ஞங்களாகச் சொல்லுகிருர்கள். மஹாயஜ்ஞங்களை அறிந்தமற்றவர்கள் பிரம்மயஜ்ஞ முதலானவைகளாகக் கருதுகின்றனர். எல்லாவிதத்திலும் இவைகளெல்லாம் மஹாயஜ்ஞங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன. பசியுள்ள பிராம்மணர்களை முடிந்தவரையில் விலக்கக்கூடாது. எந்தமனிதர்கள் ஒவ்வொருநாளும் இவற்றைச் செய்யாமல் தாம் புஜிக்கிருர்களோ அவர்கள் மலத்தையே புஜிக்கிருர்கள்; ஸம்சயமில்லை. ஆகையால், வித்வானான த்விஜன் ஒவ்வொருநாளும் ஸ்நானம் செய்து இவைகளைச் செய்ய வேண்டும். இப்படிச் செய்யாமல் புஜிக்கும் த்விஜன் பிராயச்சித்தம் செய்துகொள்ளத்தக்கவனுவான்' என்று சொன்னுர்.

யுதிஷ்டிரர், 'தேவர்களுக்கும் தேவரே! ஈசரே! தைத்யர்களைக் கொல்பவரே! ஜனார்த்தனரே! தேவர்களுக்கீசரே! நீர் உம்முடைய பக்தனான எனக்கு ஸ்நானத்தின் விதியையும் சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானுர். 'பாண்டவரே! எந்தவிதியினால் ஸ்நானம் செய்து பிராம்மணர்கள் பாவத்திலிருந்து விடப்படுவார்களோ பவித்ரமும் பாவத்தை அழிப்பதுமான அதனை முழுதும் கேளும். மண்ணையும் கோமயத்தையும் எள்ளையும் தர்ப்பங்களையும் புஷ்பங்களையும் நியாயமாக எடுத்துக்கொண்டு ஜலத்தை அடைய வேண்டும். த்விஜர்களில் மிகச்சிறந்தவரே!

1 போஜனம்.

நதியில் ஸ்நானம் செய்து வேறு ஜலத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது. அதிகமான ஜலமிருக்கும்போது கொஞ்சஜலத்தில் ஒரு பொழுதும் ஸ்நானம்செய்யக்கூடாது, பிராம்மணன் தீர்த்தத்தின் அருகில் சென்று சுத்தமாகவும் மனத்திற்கு இன்பமாகவுமிருக்கிற இடத்தில் மண் கோமய முதலானவைகளை வைக்கவேண்டும். (அந் தத் தீர்த்தத்திற்கு) வெளியில் இரண்டு பாதங்களையும் அலம்பி முயற்சியுடன் இரண்டு தரம் ஆசமனம் செய்து பிரதக்ஷிணமாகச் சுற்றி அந்தத் தீர்த்தத்தை நமஸ்கரிக்கவேண்டும். வித்வானானவன் ஒருபொழுதும் [1]தீர்த்தத்தை ஜலத்தால் அலம்பக் கூடாது. அந்த ஜலத்தைப் பாதத்தினாலாவது கையினாலாவது மற்றதினாலாவது அடிக்கக் கூடாது. பாண்டு நந்தனரே! ஜலமானது எல்லாத் தேவர்களின் ஸ்வரூபமாகவும் என் ஸ்வரூபமாகவும் இருக்கிறது. ஆகையால், அதை அடிக்கக் கூடாது. ஜலத்தைக்கொண்டு ஸ்தலத்தை அலம்பவேண்டும். வித்வானானவன் முதலில் சும்மா ஸ்நானம் செய்யவேண்டும்; அவயவங்களைத் தேய்த்துக்கொள்ளக்கூடாது. மறுபடியும் அந்தத்தீர்த்தத்தை அடைந்து ஆசமனம் செய்யவேண்டும். கையைப் பசுவின்காதுபோன்ற வடிவமுள்ளதாகச்செய்து மூன்றுதரம் ஜலத்தைக் குடிக்கவேண்டும். இரண்டுதரம் அந்தவாயைத் துடைக்கவேண்டும். தன்னுடைய இரண்டு பாதங்களையும் புரோக்ஷித்துக்கொண்டு பிறகு தலையிலுள்ள (வாய்முதலான) துவாரங்களை ஒரேதடவை துடைக்கவேண்டும். பிறகு, இருகைகளையும் மார்பையும் நாபியையும் அங்கத்திற்கொருதரம் ஜலத்தைத்தொட்டுக்கொண்டு தொட்டு மறுபடியும் தலையைத் தொடவேண்டும். 'ஆப: புனந்து' என்றுசொல்லி மறுபடியும் ஆசமனம்செய்யவேண்டும். ஓங்காரத்துடன்கூடின வ்யாஹ்ருதிகளையாவது, 'ஸதஸஸ்பதிம்' என்கிற ரிக்கையாவது (சொல்லி) ஆசமனம்செய்து, பிறகு, மண்ணை மூன்றாகச்செய்து பூசிக்கொள்ளவேண்டும். 'இதம்விஷ்ணு:' என்னும் ரிக்கினால் உத்தமம் மத்யமம் அதமமான அங்கங்களில் பூசிக்கொண்டு வருணஸூக்தங்களால் ஜலத்தை நமஸ்கரித்துப் பிறகு நதியாகஇருந்தால் பிரவாஹத்திற்கெதிராகவும் வேறு ஜலங்களில் ஸூரியனுக்கெதிராகவும், 'ஓம்' என்றுசொல்லி ஸ்நானம்செய்யவேண்டும். ஜலத்தைக் கலக்கக்கூடாது. கோமயத்தையும் மூன்றாகச்செய்து ஜலத்தில் (இருந்துகொண்டு) முதலில் பூசிக்கொள்ளவேண்டும். மறுபடியும் வியாஹ்ருதியுடனும் பிரணவத்துடனும்கூடின காயத்ரியை ஜபிக்க

---

1 துறையை.

வேண்டும். மறுபடியும் என்னை அடைந்தசித்தத்துடன் ஆசமனம் செய்து, 'ஆபோஹிஷ்டா' என்னும்மூன்றுரிக்குக்களால் பரிசுத்தமானஜலத்தால், அப்படியே, 'தரத்ஸமந்தீ' என்னும் நான்குமந்திரங்களைச்சொல்லிக் கிரமமாகப் புரோக்ஷித்துக்கொள்ளவேண்டும். கோஸூக்தத்திலும் அஸ்வஸூக்தத்திலும் ஆத்மாவினுடைய [1] சுத்தவர்க்கத்திலும் வைஷ்ணவஸூக்தங்களாலும் வாருணஸூக்தங்களாலும் ஸூர்யனைத் தேவதையாகக்கொண்ட ஸூக்தங்களாலும் இந்திரனைத் தேவதையாகக்கொண்டஸூக்தங்களாலும் வாமதேவரால்கண்டறியப்பட்ட ஸாமாவிலும் மற்றுமுள்ள என்ஸ்வரூபமானஸாமங்களாலும் தன்னைப்புரோக்ஷித்துக்கொண்டு ஜலத்திற்குள்ளிருந்து அகமர்ஷணமென்னும் ஸூக்தத்தை வாக்கினால் ஜபிக்கவேண்டும். பிறகு, மூச்சுத்தாங்குகிறவரையில் என்னை நினைத்துக்கொண்டு வ்யாஹ்ருதியுடனும் பிரணவத்துடனும்கூடின காயத்ரியையாவது ஜபிக்கவேண்டும்;பிரணவத்தையாவது ஜபிக்கவேண்டும். தீர்த்தத்திலிருந்துகரையேறி அழுக்கில்லாதவைகளும் வெண்மைநிறமுள்ளவைகளும் பரிசுத்தமுள்ளவைகளுமான இரண்டுவஸ்திரங்களை உடுத்துக்கொள்ள வேண்டும். கக்கத்தில் பாசம்போலச் சுற்றிக்கொள்ளக்கூடாது. கக்கத்தில் பாசமாகக்கட்டிக்கொண்டு எந்த வைதிககர்மாவைச் செய்கிறானோ அதை ராக்ஷஸர்களும் தானவர்களும் தைத்யர்களும் ஸந்தோஷத்துடன்கூடினவர்களாக நாசம் செய்கின்றனர். ஆகையால், எவ்விதத்திலும் (வஸ்திரத்தைக்) கக்கத்தில் பாசமாகத் தரிக்கக்கூடாது. பிறகு, பிராம்மணன் இரண்டு பாதங்களையும் இரண்டுகைகளையும் மண்ணினால் மெல்ல அலம்பி ஒருதரம் ஆசமனம் செய்து மறுபடியும் ஸாவித்ரி நிமித்தம் ஆசமனம் செய்யவேண்டும். ஜலத்திலிருந்து (ஆசமனம் செய்தால்) ஜலகாரியத்தில் மட்டும் சுத்தனாவான். கரையிலிருந்து (ஆசமனம் செய்தால்) ஸ்தலகாரியத்தில் மட்டும் சுத்தனாவான். ஆகையால், [2]இரண்டிலும் கிழக்குமுகமாகவாவது வடக்கு முகமாவாவது இருந்துகொண்டு சுத்தனும் அடக்கமுள்ளவனுமாகி வேதங்களைத் தியானம்செய்து பிறகு ஆத்மாவின் சுத்திக்காக ஆசமனம் செய்யவேண்டும். பிறகு, பவித்ரபாணியும் மிக்க அடக்கமுள்ளவனுமாகிக் கிழக்குமுகமாகத் தர்ப்பங்களில் உட்கார்ந்து சித்தத்தை என்னிடத்தில் வைத்துப்பிராணாயாமங்களைச் செய்யவேண்டும். ஸாவித்ரியை ஆயிரம்தரமாவது

1 சுத்தம்செய்யும் மற்றமந்திரங்கள்.

2 ஜலத்தில் ஒருகாலும் கரையில் ஒருகாலுமாக இருப்பது.

நூறுதரமாவது ஜாக்ரதையுடன், [1]ஜபிக்க வேண்டும். பிறகு, ஸாவித்ரியினால் ஜலத்தை அபிமந்திரித்து மந்தேஹர்களென்னும் அரக்கர்களுடைய விநாசத்தின்பொருட்டு விடவேண்டும். பிறகு, 'உத்வர்க்கோஹஸி' என்னும் மந்திரத்தால் [2]மத்தியில் பிராயச்சித்த ஜலத்தை விடவேண்டும். பிறகு, த்விஜன் நல்ல புஷ்பங்களையும் ஜலத்தையும் அஞ்சலியில் எடுத்து ஸூரியனுக்கு எதிரில்விட்டு வ்யோமமுத்திரையைச் செய்யவேண்டும். பிறகு, ஸூரியனுடைய ஏகாக்ஷரத்தைப் பன்னிரண்டுமுறை ஜபிக்கவேண்டும். பிறகு, ஷடக்ஷரம் முதலானவைகளை ஆறுதரம் ஜபிக்கவேண்டும். தன்னுடைய முகத்தின் மத்தியில் முத்திரையினால் பிரதக்ஷிணமாகத் தொட்டு, பிறகு கைகளை உயரத்தூக்கிக்கொண்டு ஸாவதானமாக ஸூரியனைப் பார்க்கவேண்டும். அந்த ஸூரியனுடைய மண்டலத்திலிருப்பவனும் தேஜோமூர்த்தியும் நான்கு கைகளுள்ளவனுமான என்னைத் தியானம்செய்துகொண்டு 'உதுத்யம்' 'சித்ரம்' 'தச்சக்ஷு:' என்னும் மந்திரங்களை ஜபிக்கவேண்டும். ஸாவித்ரியையும் என்னுடையதான ஸூக்தத்தையும் என் ஸ்வரூபமான ஸாமங்களையும் [3]புருஷவ்ரதத்தையும் சக்திக்குத் தக்கவாறு ஜபித்துப் பிறகு, 'ஹம்ஸ: சுசிஷத்' என்று சொல்லிக்கொண்டு ஸூரியனைப் பார்க்கவேண்டும். ஸூரியனை ப்ரதக்ஷிணம்செய்து நமஸ்கரித்துப் பிறகு பிரம்மாவையும் என்னையும்சங்கரரையும்பிரஜாதிபதியையும் தேவர்களையும் தேவரிஷிகளையும் அங்கங்களுடன்கூடின வேதங்களையும் இதிஹாஸங்களையும் க்ரதுக்களையும் எல்லாப்புராணங்களையும் அப்ஸரஸூகளுடைய குலங்களையும் ருதுக்கள் வருஷம் கலை காஷ்டை இவற்றை ஸ்வரூபமாகக் கொண்ட காலத்தையும் பூதஸமூகங்களையும் பூதங்களையும் நதிகளையும் ஸமுத்திரங்களையும் மலைகளையும் மலைகளிலிருக்கும் தேவர்களையும் ஓஷதிகளையும் விருக்ஷங்களையும்,[4] உபவீதியாக இருந்துகொண்டு ஒவ்வொன்றுக்கும், 'த்ருப்யதாம்' என்று சொல்லி இடக்கையோடு சேர்ந்தவலக்கையினால் ஜலத்தினால் தர்ப்பிக்கவேண்டும். வித்வானவன் [5] நிவீதியாகஇருந்துகொண்டு மந்திரத்தைச்செய்தரிஷி

1 இரண்டு சொல்விடப்பட்டன.

2 'சுதா அாந்தரே' என்பது மூலம்; 'பிறகு, ஆசமனம் செய்து' என்றும் கொள்ளலாம்.

3 ஸாமவேதத்தில் ஒரு பகுதி.

4 பூணூலை இடத்தோளிலிருந்து வலப்பக்கத்தில்தாழும்படிதரித்தல்,

5 பூணூலைத்தாழ்வடமாகத்தரித்தல்.

களையும் மரீசிமுதலானவர்களையும்நாரதர்முதலான ரிஷிகளையும் ஸாவதானமாக இருந்து தர்ப்பிக்கவேண்டும். பிறகு, [1] ப்ராசீனாவீதியாக இருந்துகொண்டு இந்தப்பித்ருதேவதைகளைத் தர்ப்பிக்கவேண்டும். பிறகு,கவ்யவாஹனனும் அக்னியும் ஸோமனும் வைவஸ்வதனும் பிறகு அர்யமாவும் அக்னிஷ்வாத்தர்களும் ஸோமபர்களுமான பித்ருக்களைத் தர்ப்பங்களில் (ஆவாஹனம் செய்து) 'த்ருப்யதாம்' என்று சொல்லி எள்ளுகளுடன்கூடின ஜலத்தால் தர்ப்பிக்கவேண்டும். இறந்துபோன பித்ருக்களையும் பிதாமஹர்களையும் ப்ரபிதாமஹர்களையும்பிதாமஹிகளையும் ப்ரபிதாமஹிகளையும் மாதாவையும் தன்னுடைய குருவையும் ஆசார்யனையும்தகப்பனுடையஸஹோதரியையும்தாயினுடையஸஹோதரியையும் மாதாமஹியையும் உபாத்தியாயர்களையும் ஸ்நேகிதர்களையும்பந்துக்களையும் சிஷ்யர்களையும் ரித்விக்குக்களையும் ஞாதிகளையும் (அவர்களுடைய)பாந்தவர்களையும்நன்றியறிவுக்காக மாத்ஸர்யமின்றித் தர்ப்பிக்கவேண்டும். இவ்விதம்தர்ப்பித்து ஆசமனம்செய்து ஸ்நானவஸ்திரத்தைப் பிழியவேண்டும். அந்த (ஸ்நானவிதியை) அறிந்தவர்கள் ஸ்நானத்தையும் பானத்தையும் [2] ப்ருத்யஜனத்தினுடைய விருத்தியாகச் சொல்லுகின்றனர். முதலில் அவர்களைத்தர்ப்பிக்காமல் ஸ்நானவஸ்திரத்தைப் பிழியக்கூடாது. அறியாமையால் முதலில் பிழிந்தால் தேவர்களும் ரிஷிகணங்களும் பித்ருக்களும் நிராசர்களாகிச் சபித்துவிட்டு வந்தவழியே செல்லுகின்றனர். மறுபடியும் பாதங்களை மிருத்திகையால்அலம்பி ஆசமனம்செய்து பரிசுத்தனாகிக் கையில் தர்ப்பங்களைத்தரித்துத் தர்ப்பங்களில் உட்கார்ந்து ஸ்வாத்யாயத்தை ஆரம்பிக்கவேண்டும். ஆதியில் வேதத்தை ஆரம்பித்துப் பிறகு மேன்மேலும் கிரமமாகத் தினந்தோறும் சக்திக்குத்தக்கவாறு அத்தியயனம் செய்தலை ஸ்வாத்தியாயமென்று சொல்லுகின்றனர். ரிக்வேதத்தையாவது யஜுர்வேதத்தையாவது ஸாமகானத்தையாவது இதிஹாஸ புராணங்களுடன் முடிந்தவரையில் ஜபிக்க வேண்டும். பிறகு, எழுந்திருந்து திசைகளையும் திசைகளின் தேவதைகளையும் பிரம்மாவையும் அக்னியையும் பூமியையும் ஒஷதிகளையும் வாக்கையும் வாக்பதியையும் என்னையும் நதிகளையும் நமஸ்கரித்து முன்போல ஜலத்தால் (ஆசமனம் செய்து) ப்ரணவ முதலியவற்றை ஜபிக்க வேண்டும். பிறகு, 'ஜலத்திற்கு நமஸ்காரம்' என்று சொல்லி அந்த

---

1 பூணூலை வலத்தோளிலிருந்து இடப்பக்கம் தாழும்படிதரித்தல்.

3 ப்ருத்தியர் = தம்மால்போஷிக்கப்படத்தக்கவர்; இறந்துபோன ப்ருத்தியர்களுக்குத் திருப்தியைத்தருமென்பது.

ஜலத்தை நமஸ்கரிக்க வேண்டும். கிரணமுள்ளவனும் அதிதியின் குமாரனுமான ஸூர்யனைத் தன்தலையால் வணங்கிப் பிறகு ஸாவதான னாகப் பிரணவத்துடன் ஸூர்யனைப் பார்க்க வேண்டும். பிறகு, தினந்தோறும் எனக்குப் பிரியமான புஷ்பங்களால் என்னைப் பூஜிக்க வேண்டும்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'மாதவரே! தேவர்களுக்கீசரே! அச்சுதரே! உமக்குப் பிரியமானவைகளும் உமக்கு இருப்பிடமாயுள்ளவைகளுமான புஷ்பங்களை யெல்லாம் உம்முடைய பக்தனான எனக்குச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'அரசரே! எனக்குப் பிரியத்தைச் செய்யும் மலர்களை ஸாவதானராகக் கேளும். ராஜேந்திரரே! ஆம்பல், அலரி, கடலை, சம்பகம், மல்லிகை, ஜாதி, நந்த்யாவர்த்தம், நந்திகம், பலாசபுஷ்பம், பலாசபத்திரம், அறுகு, லவங்கம், வனமாலை ஆகிய இவைகள் விசேஷமாக எனக்குப் பிரியமானவை. அரசரே! எல்லாப் புஷ்பங்களிலும் உத்பலம் ஆயிரம் மடங்கு மேலானது. அதைவிடச் செந்தாமரையும் செந்தாமரையைவிட நூறு இதழ்களுள்ள தாமரை மலரும் அதை விட ஆயிரம் இதழ்களுள்ள தாமரை மலரும், அதைவிட வெண் தாமரையும் மேலானவை. ஆயிரம் வெண்டாமரைகளைவிடத் துளஸி குணங்களால் மேலானது. அதை விடக் கொக்குமந்தாரையும் அதைவிட ஸௌவர்ணமும் மேலானவை. பாண்டவரே! ஸௌவர்ண புஷ்பத்தை விட எனக்குப் பிரியமானது வேறில்லை. பக்தியுள்ளவன் புஷ்பம் கிடைக்காவிட்டால் துளஸியின் இதழ்களாலும் இதழ்கிடைக்காவிட்டால் கிளைகளாலும் கிளைகள் கிடைக்காவிட்டால் வேர்களாலும் வேரும் கிடைக்காவிட்டால், அவ்விடத்திலுள்ள மண்ணாலும் என்னைப்பூஜிக்க வேண்டும். மன்னரே! விலக்கத்தக்க புஷ்பங்களை ஸாவதானமாகக் கேளும். கிங்கிணி, அகத்தி மலர், ஊமத்தம்பூ, பாதிரிப்பூ, அதிமுக்தகம், புன்னை, புன்கு, காட்டுமுல்லை, பாலைப் புஷ்பம், நொச்சில், லாங்கலீ, செவ்வரத்தம் பூ, கோங்குமரப்பூ, அசோகம், இலவம்பூ, மருதமரத்தின்புஷ்பம், மலையத்திப்பூ, தான்றிப்பூ, செம்மருதாணிப்பூ, கல்பகம், காலகம், அழிஞ்சில், விஷ்ணுக்கிராந்தம் இவைகளையும் நீலமான எல்லாப் புஷ்பங்களையும் ஓர்இதழுள்ள மற்ற எல்லாப் புஷ்பங்களையும் விலக்க வேண்டும். எருக்கம்புஷ்பங்களும் எருக்கிலையில் இருப்பவைகளும் விலக்கத்தக்கவைகள். [1] வ்யாகிருதங்களையும் வேப்பம் புஷ்பங்களையும் முழுதும் விலக்க வேண்டும். அரசரே! மற்றவைகளும்வெண்

1 ஒருவகை வாசனைப் பொருள்.

மையானநிறமுள்ள இதழ்களுள்ளவைகளும் வாஸனையுள்ளவைகளும் விலக்கப்படாதவைகளுமான புஷ்பங்களால் கிடைத்தவரையில் என்னுடைய பக்தன் என்னைப் பூஜிக்கவேண்டும்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'நீர் எப்படி பூஜிக்கத்தக்கவர்? உம்முடைய மூர்த்திகள் எப்படிப்பட்டவைகள்; வைகாநஸர்கள் எப்படிச் சொல்லுகிறார்கள்? பாஞ்சராத்ரிகர்கள் எப்படிச் சொல்லுகிறார்கள்?' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாண்டவரே! என்னுடைய அந்த பூஜாக்கிரமத்தை முழுதும் கேளும். வித்வானானவன் மேடையில் எட்டு இதழ்களுள்ளதும் காயோடுகூடினதுமான தாமரைமலரை எழுதி, பிறகு, அஷ்டாக்ஷரவிதியினாலாவது அல்லது துவாதசாக்ஷரங்களாலாவது வைதிக மந்திரங்களாலாவது என்னுடைய ஸூக்தத்தினாலாவது என்னை அதில் ஸ்தாபனம் செய்து பூஜிக்கவேண்டும். யுதிஷ்டிரரே! வைகானஸத்தை அறிந்த ஜனங்கள் என்னைப் புருஷனென்றும் ஸத்யனென்றும் அச்யுதனென்றும் அநிருத்தனென்றும் சொல்லுகின்றனர். வேந்தரே! ராஜேந்திரரே! மற்றவர்களான பாஞ்சராத்ரிகர்களோ என்னை வாஸுதேவன் ஸங்கர்ஷணன் பிரத்யும்னன் அநிருத்தன் என்று நான்கு மூர்த்திகளுள்ளவனாக இவ்விதம் அறிந்து சொல்லுகின்றனர். ராஜேந்திரரே! இவைகளும் மற்றவைகளுமான மூர்த்திகள் வெவ்வேறான பெயருள்ளவைகளும் ஒரே பொருளுள்ளவைகளுமாக இருக்கின்றன என்று தெரிந்து கொள்ளும். வித்வானானவன் இவ்விதம் என்னைப் பூஜிக்க வேண்டும்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவரே! தேவர்களுக்கு ஈசரே! அச்சுதரே! உம்முடைய பக்தர்கள் எப்படிப்பட்டவர்கள்? அவர்களுடைய விரதங்களெவை? இவற்றை உம்முடைய பக்தனான எனக்குச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'எவர்கள் (என்னைத் தவிர) வேறு தேவதையினிடத்தில் பக்தியில்லாதவர்களும் என்னுடைய பக்தர்களான ஜனங்களிடத்தில் பிரியமுள்ளவர்களும் என்னையே சரணமடைந்தவர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் என்னுடைய பக்தர்களென்று சொல்லப்பட்டிருக்கிறார்கள். பாண்டவஸ்ரேஷ்டரே! ஸ்வர்க்கத்தையும் புகழையும் கொடுக்கின்றவைகளும் விசேஷமாக எனக்குப் பிரியமானவைகளுமான இந்த விரதங்களை என்னுடைய பக்தன் தரிக்கவேண்டும். என்னுடைய பக்தன் ஜலத்தைத்தாண்டும்போது வேறுவஸ்திரத்தை உடுத்துக்கொள்ளக்கூடாது. ஸ்வஸ்தனாக

இருந்துகொண்டு பகலில் தூங்கக்கூடாது. கள்ளையும் மாம்ஸங்களையும் விலக்கவேண்டும். பிராம்மணர்களையும் பசுவையும் அரசமரத்தையும் அக்னியையும் பிரதக்ஷிணமாகப்போகவேண்டும். மழைபெய்யும்போது ஓடக்கூடாது. 1 அக்ரபிக்ஷையை நிறுத்தக்கூடாது. பிரத்யக்ஷமான லவணத்தையும், 2 ஸௌபாஞ்சனத்தையும் காஞ்சனத்தையும் புஜிக்கக்கூடாது. பசுவுக்கு ஒருபிடி புல்லாவது கொடுக்கவேண்டும். காடியையும், பழையதையும், பிறருடையவீட்டிலிருந்து கொண்டுவந்த பக்வமானபதார்த்தத்தையும், (எனக்கு) அர்ப்பணம் செய்யப்படாத பதார்த்தத்தையும் முயற்சியுடன் விலக்கவேண்டும். தான்றி புன்கு இவைகளினுடைய நிழலைத் தூரத்தில் விலக்கவேண்டும். தான் துன்பப்படுத்தப்பட்டாலும் பிராம்மணர்களையும் தேவர்களையும் நிந்திக்கக்கூடாது. பாண்டவரே! ஸாத்விகர்களும்ராஜஸர்களும் தாமஸர்களுமான என்னுடையபக்தர்கள் என்னைப் பூஜிக்கிறார்கள். அவர்களுடையகதி இப்படிப்பட்டது. தாமஸர்கள் தமஸை அடைகின்றனர். ராஜஸர்கள் ரஜஸை அடைகின்றனர். ஸத்வம்நிறைந்தஸாத்விகர்கள் ஸத்வத்தையே அடைகின்றனர். ஸாங்கியத்தாலும் யோகபலத்தாலும் ஸத்வபலத்தாலும் ஸித்திபெற்றவர்கள் ஆகாயத்தில் ஸூரியனாலும் சந்திரனாலும் விஸ்தாரமானபதத்தைப் பார்க்கின்றனர். ராஜஸனே ஒருஸ்தம்பமுள்ளதும் ஒன்பது துவாரங்களுள்ளதும் மூன்றுதூண்களுள்ளதும் ஐந்துஸாக்ஷிகளுள்ளதுமான இந்தச்சரீரமாகிற பட்டணத்தில் எப்பொழுதும் இருப்பான். பாண்டவஶ்ரேஷ்டரே! ஸூர்யோதயமுதல் ஸ்நானம்முதலான கிரியைகளைச் செய்பவனும் புத்தியுள்ளவனும் நான்கு வேதங்களையும் அறிந்தவனுமாக இருந்தாலும், புருஷனுடைய சரீரத்தில் ஆறு 3 வ்ருஷளர்களும் ஏழுக்ஷத்திரியர்களும் எட்டுவைப்யர்களும் இருபத்தொரு சூத்திரர்களும் நிச்சயமாக இருப்பவர்களாக அறியத்தக்கவர்களென்று சொல்லப்பட்டிருக்கின்றனர். காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மஹாமோஹம்என்னும் இவை சரீரத்தில் ஆறுவ்ருஷளர்களாகக் கருதப்பட்டிருக்கின்றன. கர்வம், அடங்காமை, அஹங்காரம், பொறாமை, துரோஹம், கடுஞ்சொல், குரூரத்தன்மை இவ்வேழும் க்ஷத்திரியர்

1 யாரும் புஜிக்குமுன், பிக்ஷுகர்களுக்காக அன்னத்தை எடுத்துவைப்பது.

2 ஒருவகை மரம். காஞ்சனம்=புன்கு.

3 சாந்திபர்வம் 304ம் பக்கம்குறிப்பிற் காண்க.

களாகக் கருதப்பட்டன. குரூரனுக இருத்தல், வஞ்சனே, மாயை, ரஹஸ்யமாகக் கெடுதலேச்செய்வது, டம்பம், ருஜுவாகஇல்லாமை, கோட்சொல்வது, பொய் என்னும் எட்டும் வைஶ்யர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. தாஹம், பசி, நித்திரை, சோம்பல், அருவருப்பின்மை, இரக்கமின்மை, மனேவியாதி, துக்கம், தவறுதல் ஸத்வம்குறைந்திருப்பது, பயம், மனத்தளர்ச்சி, அறியாமை, பாப எண்ணம், கோபம், ஆசை, ஶ்ரத்தையின்மை, உறுதியின்மை, ஆலோசனே செய்யாமை, அசுத்தனுக இருப்பது, மலினமாக இருப்பது இவை சூத்திரர்களென்று சொல்லப்பட்டன. எவனிடத்தில் இவைகள் காணப்படவில்லேயோ அவன் பிராம்பணனென்று சொல்லப்படுகிருன். பிராம்மணனுனவன் எந்தக்காலத்தில் எந்த எந்த எண்ணங்களில் இருக்கிருனே அந்தக்காலத்தில் (அவ்வவற்றிற்குத் தக்கபடி) தூர்ப்பலமான ஞானமுள்ள பிராம்மணன் என்று அறியத் தக்கவன். எந்தக்காலத்தில் பிராணன்களே அடக்கி என்னேத் தியானம்செய்கிருனே அந்தக்காலத்தில் பிராம்பணனுக அறியத்தக்கவன்; மற்றக்காலத்தில் வேருவான். ஆகையால், எனக்குப் பிரியனுக இருக்கவிரும்புவானுனுல் ஸாத்விகனும் சுத்தனும் கோபமற்றவனுமாக இருந்துகொண்டு எப்பொழுதும் என்னேப் பூஜிக்கவேண்டும் ஆசையற்ற நாவை உடையனும் தைரியத்தில் நன்கு நிலேபெற்றவனும் இரண்டுகண்களேமட்டும் (என்னிடத்தில்) வைத்துச் சஞ்சலமான மனத்தையும் வாக்கையும் அடக்கிப் பயத்திலிருந்து விலகினவனுமாக இருப்பவன் என்னுடைய பக்தனென்று சொல்லப்படுகிருன். இவ்விதமான ஆத்மதத்வத்தை அறிந்தவர்களும் இந்திரியங்களே அடக்கினவர்களுமான பிராம்மணர்கள் ஶ்ராத்தங்களில் த்ருப்தி அடைந்தால் அவர்களுடைய பிதாமஹர்கள் திருப்தியடைந்தவர்களாகின்றனர். தர்மம் ஜயிக்கிறது; அதர்மம் ஜயிக்கிறதில்லே. உண்மை ஜயிக்கிறது; பொய் ஜயிக்கிறதில்லே, பொறுமை ஜயிக்கிறது; கோபம் ஜயிக்கிறதில்லே. பொறுமையுள்ளவன் பிராம்மணனுவான்' என்று சொன்னுர்.

---

## நூற்றைந்தாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம் (தொடர்ச்சி.)



**(கிருஷ்ணர் கபிலைகளின் பத்து வகையையும் அவற்றின் தானத்தையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

தர்மபுத்திரர் தானங்களின் புண்ணியத்தின் பயனையும் தவத்தின் புண்ணியத்தின் பயன்களையும் கேட்டு மிக்க மனக்களிப்புற்று மறுபடியும் கிருஷ்ணரைநோக்கி, 'தேவரே! பிரபுவே! மாதவரே! பிரம்மதேவரால் முந்திப் படைக்கப்பட்டதும் ஹோமதேனுவும் எப்பொழுதும் புண்ணியமுள்ளதுமான இந்தக்கபிலையானது பிராம்மணர்களுக்கு என்றைத்தினம் எப்படி கொடுக்கத்தக்கது? புண்ணிய லக்ஷணமுள்ள அதனை எப்படிப்பட்ட பிராம்மணனுக்குக் கொடுக்க வேண்டும்? பிரம்மதேவர் தாமே கபிலையை எப்படிப்பட்டதென்று சொல்லியிருக்கிறார்? தேவரே! அவற்றை எவர்கள் கொடுக்க வேண்டும்? உண்மையாகக் கேட்க விரும்புகிறேன்' என்று வினவினார். தர்மபுத்திரரால் ஸபையில் இவ்விதம்வினவப்பட்ட ஹ்ருஷீகேசர் கபிலைகளின் ஸங்கியையையும் அவற்றின் மஹிமையையும் சொல்லலானார்.

'பாண்டவரே! பாவச்செய்கையுள்ள மனிதனும் எதைக்கேட்டுப் பாவத்திலிருந்து விடப்படுவானோ பவித்ரமும் பாவனமும் சிறந்ததுமானஅதை உண்மையாகக்கேளும். அக்னியின் மத்தியிலிருந்து உண்டானதும் திவ்யமானதும் அக்னிஜ்வாலைக்குச்சமமான ஒளியுள்ளதும் அக்னிஜ்வாலைபோல மிகவும் ஜ்வலிக்கும் கொம்புகளுள்ளதும் ஜ்வலிக்கும் தணல்போன்ற கண்களுள்ளதும் அக்னிபோன்றவாலுள்ளதும் அக்னிபோன்ற குளம்புகளுள்ளதும் அக்னிபோன்ற மயிர்களின் ஒளியுள்ளதும் அக்னியைச் சார்ந்ததும் அக்னிபோன்றநாவுள்ளதும் அக்னிபோன்ற கழுத்துள்ளதும் ஜ்வலிக்கின்ற காந்தியுள்ளதுமான அந்தக்கபிலையை எந்தச் சூத்திரர்கள் பேராசையால் மதிமயங்கி (அதன் பால் முதலியவற்றை) அனுபவிக்கிறார்களோ அவர்களைப் பதிதர்களாக அறியவேண்டும். அவர்கள் சண்டாளர்களுக்கு ஒப்பானவர்களல்லவா? அவர்களுடைய வீட்டில் ஒரு பிராம்மணனும் பிரதிக்ரஹம் செய்யக்கூடாது. மஹா பாதகிகளான அவர்களைத் தூரத்தில் விலக்கவும்வேண்டும். அவர்கள் எப்பொழுதும் எல்லாப்

பித்ருக்களாலும் தேவர்களாலும் விடப்பட்டவர்களே. அந்தப் பாவிகளிடம் எப்பொழுதும் பிரதிக்ரஹிக்கக்கூடாது; பேசவும் கூடாது. எவ்வளவுவரையில் கபிலையின் பால்முதலியவற்றைக் குடிக்கிறார்களோ அவ்வளவுவரையில் அவர்களுடைய பிதாமஹர்கள் பூமியில் நாய்நரிகள்போல் அமேத்யத்தைப் புஜிக்கின்றனர். கபிலையின் தயிரையும் பாலையும் நெய்யையும் மோரையும் எந்தச் சூத்திரர்கள் புஜிக்கிறார்களோ அவர்களுடைய இந்தக்கதியைக் கேளும். கபிலையைக்கொண்டு ஜீவிக்கும் சூத்திரன் இறந்தபின் ரௌரவநரகத்தை அடைகிறான்; கோரமான ரௌரவத்தில் நூறுகோடிவருஷம் வஸித்துக் கஷ்டப்படுகிறான். அவன் காலமானதும் அதிலிருந்தும்விலகி நாயாகப் பிறக்கிறான். நாய்ஜன்மத்திலிருந்து விடுபட்டு அமேத்யத்தில் புழுவாகஜனிக்கிறான். மிக்கபாவியான அவன் துர்நாற்றமுள்ள அமேத்யக்கிணறுகளில் ஆங்காங்கு ஆயிரம்தரம் ஜனிக்கிறான். அவற்றிலிருந்து கரையேறுதலை அடைகிறதில்லை. பிராம்மணனானஎவன் அவர்களுடையவீட்டில் பிரதிக்ரஹம்வாங்குவனோ அவனுடைய பித்ருக்களும் அதுமுதல் அமேத்யத்தைப் புஜிப்பவர்களாகிறார்கள். அவனுடன் பேசக்கூடாது. ஓர் ஆஸனத்தில் உட்காரக்கூடாது. அந்தப்பிராம்மணனைப் எப்பொழுதும் தூரத்தில் விலக்கவேண்டும். எவன் அவனுடன் பேசுகிறானோ, ஒருபடுக்கையில் படுக்கிறானோ அவன் 1 பிராஜாபத்யம் என்னும் க்ருச்ரத்தைச் செய்யவேண்டும். அதனால் அவன் சுத்தி அடைவான். எவன் கபிலையை அடுத்து ஜீவிக்கும் சூத்திரனிடமிருந்து பிரதிக்ரஹத்தைச் செய்கிறானோ அந்தப் பிராம்மணனுக்கு இது பிராயச்சித்தமாகும்; ஸம்சயமில்லை. பிரம்மகூர்ச்சத்தையாவது சாந்த்ராயணத்தையாவது செய்யவேண்டும். அந்தப் பிராம்மணன் இதனால் அந்தப் பாவத்திலிருந்து விடப்படுவான். ஸ்வயம்புவான பிரம்மதேவர் முற்காலத்தில் எல்லாத் தேஜஸையும் எடுத்து அக்னிஹோத்ரத்திற்காகவும் பிராம்மணனுக்காகவும் கபிலையைப் படைத்தார். பாண்டுநந்தனரே! கபிலையானது பவித்ரங்களுள் சிறந்த பவித்ரமும் மங்களங்களுள் சிறந்த மங்களமும் புண்யங்களுள் சிறந்த புண்யமுமாக இருக்கிறது. இது தவங்களுள் சிறந்த தவமும் விரதங்களுள் உத்தமமான விரதமும் தானங்களுள் சிறந்த தானமும் அழிவற்ற மூலகாரணமுமாக இருக்கிறது. உலகங்களைப் படைத்தவரான பிரம்மதேவர் தாம் பூமியிலுள்ள புண்ய தீர்த்தங்களிலிரு

---

1 சாந்திபர்வம் 114ம் பக்கம் குறிப்பிற்காண்க. அதுவே பிராஜாபத்ய க்ருச்ரம்.

ந்தும் புண்ய க்ஷேத்திரங்களிலிருந்தும் எல்லா உலகங்களிலுமுள்ள பரிசுத்தமானவைகளும் அழகுள்ளவைகளுமான பதார்த்தங்களிலிருந்தும் தேஜஸை எடுத்து ஜனங்களைத் தாண்டுவிப்பதற்காகவே கபிலைகளைப் படைத்தார். பாண்டுநந்தனரே! இந்தக் கபிலையானது எல்லாத் தேஜஸுகளாலும் செய்யப்பட்டதும் எப்பொழுதும் அமிருதமயமும் சிறந்ததும் சுத்தமும் பாவனமும் உத்தமமுமாக இருக்கிறது. பிராம்மணர்கள் காலையிலும் மாலையிலும் கபிலையின் பாலினாலாவது தயிரினாலாவது நெய்யினாலாவது அக்னிஹோத்ரங்களைச் செய்யவேண்டும். பிரபுவே! எந்தப் பிராம்மணர்கள் கபிலையின் நெய்யினாலாவது தயிரினாலாவது பாலினாலாவது விதிப்படி அக்னிஹோத்ரங்களைச் செய்பவர்களும் சிறந்த பக்தியுடன் அதிதிகளைப் பூஜிப்பவர்களும் எப்பொழுதும் சூத்திரான்னத்தை விலக்கினவர்களும் டம்பமும் பொய்யும் அற்றவர்களுமாக இருக்கிறார்களோ அந்தப் பிராம்மண ஸ்ரேஷ்டர்கள் ஸூரியனுக்கொப்பான விமானங்களோடு ஸூரியமண்டலத்தின் மத்தியால் மிகச் சிறந்ததான பிரம்ம லோகத்தை அடைகிறார்கள். திவ்யமான பிரம்மாவின் லோகத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவர்களும் இஷ்டமான ஸ்வரூபமுள்ளவர்களுமாகிப் பிரம்மாவினால் பூஜிக்கப்பட்டு ஒருகல்பம் முழுதும் மகிழ்கின்றனர். அரசரே! இவ்விதம் புண்ணியமும் மந்திரத்திற்கும் அமிருதத்திற்கும் அரணியாக இருப்பதும் [1]மைத்ரேயியுமான கபிலையானது ஆதியிலேயே பிரம்மாவினால் படைக்கப்பட்டது. பாண்டவரே! கபிலையினுடைய கொம்பின் நுனியில் எல்லாத்தீர்த்தங்களும் பிரம்மாவினுடைய ஆஜ்ஞையினால் ஒவ்வொருநாளும் வஸிக்கின்றன. எந்தமனிதன் காலையில்எழுந்திருந்து அடக்கமுள்ளவனும் சுத்தனுமாயிருந்துகொண்டு கபிலையினுடைய கொம்பின் நுனியிலிருந்துபெருகின ஜலதாரையை அடைவனோ அவன் அந்தப்புண்ணிய தீர்த்தத்தால் சீக்கிரமாகப் பாவமற்றவனாகி, அக்னியானது புல்லை எரிப்பதுபோல, மூன்று ஜன்மங்களில் செய்தபாவத்தை எரிக்கிறான். எவன் கபிலையின் மூத்திரத்தால் (கண்முதலிய) இந்திரியங்களைத் தொடுவனோ அந்தமனிதன் அந்த ஸ்நானபுண்ணியத்தால் பாவங்கள் நசித்தவனாகி முப்பதுவருஷம்செய்த பாவத்திலிருந்து விடப்படுகிறான்; இதில் ஸம்சயமில்லை. அரசரே! எவன் காலையில் எழுந்திருந்து பக்தியுடன் (கபிலைக்கு) ஒருபிடிபுல்லைக்

1 பசுக்களுக்குச் சூரியனிடமிருந்தும் உற்பத்தி சொல்லியிருப்பதால், இப்பெயர் வந்தது போலும். அநுசாஸன பர்வம் 432-ம் பக்கம் பார்க்க.

கொடுப்பனே அவனுடைய முப்பது இரவுகளில்செய்த அந்தப் பாவம் நசிக்கிறது. எவன் காலையில் எழுந்திருந்து பக்தியுடன் அந்தக்கபிலையைப் பிரதக்ஷிணம்செய்வனே அவனால் பூமிப் பிரதக்ஷிணம் செய்யப்பட்டதாகும். இதில் ஸம்சயமில்லை. பாண்டவரே! ஶ்ரத்தையுடன் ஒருபிரதக்ஷிணம் செய்தால் அவனுடைய பத்துநாட்களில் செய்தபாவம் நசிக்கிறது. இது நிச்சயம். பாண்டவரே! எந்த மனிதன் சுத்தனாக இருந்துகொண்டு கபிலையின் பஞ்சகவ்யத்தால் ஸ்நானம்செய்வனே அவன் கங்கைமுதலான தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தவனாகிறான். மன்னரே! ஶ்ரத்தையுடன்கூடின அவனுக்கும் அந்த ஸ்நானத்தால் பத்துநாட்களில் செய்தபாவம் அந்தக்ஷணத்திலேயே நசிக்கிறது. வேந்தரே! மனிதன் பக்தியுடன் கபிலையைப் பார்ப்பதாலும் (அதன்) ஹூங்காரசப்தத்தைக் கேட்பதாலும் ஒருநாளில் செய்தபாவத்தை விடுகிறான். பாண்டவரே! மனிதன் சுத்தனாக இருந்துகொண்டு கபிலையை எந்தஅங்கத்தில் தொட்டாலும் ஒருவருஷம் செய்தபாவத்தை நசிக்கச்செய்கிறான். மனிதன் ஆயிரம் பசுக்களைத் தானம்செய்தாலும் ஒரு கபிலையைத்தானம் செய்தாலும் அவனுக்குப் பயன் ஸமமென்று உலகத்திற்குப் பிதாமஹரான பிரம்மதேவர் சொல்லுகிறார். இப்படியே, யாராவதொரு மனிதன் தவறுதலாகக் கபிலையைக்கொன்றால் அவன் ஆயிரம்பசுக்களைக் கொன்றவனாவான். இதில் விசாரிக்க வேண்டியதில்லை. பாண்டவரே! எவன் ஒருகபிலையை ஆஹிதாக்னியான ஶ்ரோத்திரியனுக்குக் கொடுப்பனே அவன் லக்ஷம்பசுக்களைத் தானம் செய்தவனாகிறான். கபிலைகள் பத்துவகைகளென்று பிரம்மாதாமே சொல்லியிருக்கிறார். அவைகளை ஶ்ரோத்திரியனுக்குக் கொடுப்பவன் ஸ்வர்க்கத்தை அடைகிறான்; அதைக் கேளும். முதலாவது 1 ஸ்வர்ணகபிலை. இரண்டாவது 2 கௌரபிங்களை. மூன்றாவது 3 ரக்தபிங்காக்ஷி. நான்காவது 4 களபிங்களை. ஐந்தாவது 5 பப்ருவர்ணை. ஆறாவது 6 ஶ்வேதபிங்களை. ஏழாவது 7 ரங்கபிங்காக்ஷி. எட்டாவது 8 குரபிங்களை. ஒன்பதாவது 9 பாடலையாக அறியத்தக்கது. பத்தாவது 10 புச்சபிங்களை. 'சொல்லப்பட்ட இந்தப் பத்துக்

1 பொன்னிறமுள்ளது. 2 வெளுப்பும் மஞ்சளும் கலந்த நிறமுள்ளது. 3 சிவப்பும் பொன்னிறமுமுள்ள கண்களுள்ளது. 4 பொன்னிறமான கழுத்துள்ளது. 5 கீரியின் நிறம் போன்ற நிறமுள்ளது. 6 வெண்மையும் பொன்னிறமும் கலந்தது. 7 காந்தியுள்ளதும் பொன்னிறமுமான கண்களுள்ளது. 8 பொன்னிறமான குளம்புகளுள்ளது. 9 பாதிரிப்பூநிறமுள்ளது. 10 பொன்னிறமான வாலுள்ளது.

கபிலைகளும் எப்பொழுதும் மனிதர்களைக் கரையேற்றுகின்றன. மங்களத்தைக் கொடுக்கின்றவைகளும் பவித்ரமானவைகளும் எல்லாப் பாவங்களையும் போக்குகின்றவைகளுமாக இருக்கின்றன. அரசரே! இவ்விதமே விருஷபங்கள் பத்துவிதமென்று சொல்லப்பட்டிருக்கின்றன. பிராம்மணன் அவைகளை வாகனமாக வைத்துக்கொள்ளலாம்; மற்றவர்ணத்தான் எவ்விதத்திலும் வாகனமாக வைத்துக்கொள்ளக் கூடாது. பிராம்மணன் கபிலைப் பசுவை விளைநிலத்திலாவது மார்க்கத்திலாவது (கலப்பை அல்லது வண்டியை) பொறுக்கும்படி செய்யக் கூடாது. (காளைகளை) ஹூங்காரத்தினாலாவது இலைகளுள்ள கிளையினாலாவது (அதட்டிப் பாரத்தைத்) தாங்கும்படி செய்யவேண்டும். தடியினாலும் சிறு கோலினாலும் கயிற்றினாலும் (அடித்து)ஓட்டக்கூடாது. பசியினாலும் தாகத்தாலும் ஶ்ரமத்தாலும் களைத்தவைகளும் தளர்ச்சியடைந்த இந்திரியங்களுள்ளவைகளுமான காளைகளைச் சுமைசுமக்கும்படி செய்யக் கூடாது. அவை திருப்தியடையாமலிருக்கும்போது புஜிக்கக் கூடாது. அவைகள் தண்ணீர் குடித்தபின் பானம் செய்யவேண்டும். பணிவிடை (=போஷணை) செய்பவனுக்குக் கபிலைகள் தாய்களாகவும் விருஷபங்கள் தந்தைகளாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. பாரத்தைச் சுமக்க வேண்டியவைகளை முற்பகலில் சுமக்கச் செய்ய வேண்டுமென்பது கருதப்பட்டிருக்கிறது. பகலின் நடுவிலும் முடிவிலும் ஸுகமாகக் களைப்பாறும்படி செய்ய வேண்டும். வேகமாகக் காரியம் செய்ய வேண்டிய பொழுதும் (தனக்கு) வழி நடக்கமுடியுமோ முடியாதோ என்றிருக்கும் பொழுதும் காளைகளைச் சுமக்கச் செய்யலாம். அவன் பாவத்தால் பற்றப்படான். பாண்டு நந்தனரே! அரசரே! அப்படியின்றிச் சுமக்கச் செய்பவன் [1]ப்ரூணஹத்திக்குச் சமமான பாவத்தையும் ரௌரவமென்னும் நரகத்தையும் அடைவான். மன்னரே! எவன் அறியாமையால் அவைகளுடைய ரக்தத்தை விழச் செய்கிறானோ பாபாத்மாவான அவன் அந்தப் பாவத்தால் ஸம்சயமின்றி நரகத்தை அடைவான். அவன் எல்லா நரகங்களிலும் நூறுநூறு வருஷமிருந்து இந்தமானிடலோகத்தில் காளையாகப் பிறப்பான். அந்தப்பாபத்திலிருந்து விடுதலை விரும்பும் மனிதன் கபிலையைத் தானம் செய்ய வேண்டும். எந்த [2] விருஷலன் ஆசையால் மதிமயங்கிக் கபிலை

1 சாந்திபர்வம் 43—180-ம். பக்கம் குறிப்புக்களில் பார்க்க.

2 சாந்திபர்வம் 304-ம் பக்கம் குறிப்பில் காண்க.

யைச் சுமைசுமக்கச் செய்கிறானோ அவன் 1 முப்பத்துமூன்றுதேவர் களையும் பித்ருக்களையும் சுமைசுமக்கச்செய்தவனாகிறான். அரசரே! கெட்டபுத்தியுள்ள அவன் எப்பொழுதும் தேவர்களாலும் பித்ருக் களாலும் ஹிம்ஸிக்கப்பட்டுப் பிரளயம்வரையில் ஒரு நரகத் திலிருந்து கோரமான (வேறு) நரகத்தை அடைவான். பிரம்மா வும் ருத்திரரும் அக்னியும் கபிலைகளின் லோகத்தை அடைந்திருக் கின்றனர். ஆகையால், அவைகளை ஹிம்ஸிக்கக்கூடாது; பூஜிக்க வேண்டும்; ஸம்சயமில்லை. அவைகள், களைத்துப் பெருமூச்சுவிட்டால் (அப்படிச் செய்வித்த) அவனுடைய குலத்தை அழித்துவிடும். வேந் தரே! அப்பொழுது அவைகளைச் சுமைசுமக்கச்செய்யும் மனிதர் கள் அவைகளுக்கு எவ்வளவு மயிர்களிருக்கின்றனவோ அவ்வளவு நூறுவருஷம் நரகங்களில் சமைக்கப்படுகிறார்கள். கபிலையானது எல்லாயஜ்ஞங்களிலும் தக்ஷிணைக்காக விதிக்கப்படுகிறது. ஆகையால், ப்ராம்மணர்கள் அதை யஜ்ஞங்களிலேயே தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும். வேதாத்தியயனம் செய்தவனும் அளவற்றதேஜஸுள்ள வனும் ஏழையும் களைத்தவனுமாக இருப்பவனுக்கு அக்னிஹோத்ரத் தின்ஹோமத்திற்காகக் கபிலையை முயற்சியுடன் கொடுத்தால்; அந்தத் தானத்தால் பரிசுத்தமான சித்தமுள்ளவனாகி என்னுடைய உல கத்தில் பூஜிக்கப்படுகிறான். யுதிஷ்டிரரே! கபிலையின் சரீரத்தில் எத்தனை ரோமங்களிருக்கின்றனவோ அத்தனை ஆயிரம் வருஷம் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகிறான். எவன் ஸுவர்ணத்தால் (அலங் கரிக்கப்பட்ட) குளம்பும் கொம்புமுள்ள கபிலையை 2 விஷுவத்திலா வது 3அயனத்திலாவது கொடுக்கிறானோ அவன் அஸ்வமேதத்தின் பயனை அடைவான். அஸ்வமேதத்திற்குச் சமமான அந்தப்புண்ணி யத்தால் அவன் என்னுடைய உலகத்தை அடைகிறான். ஸுவர் ணத்தால் (அலங்கரிக்கப்பட்ட) கொம்புள்ளதும் வெள்ளியால் (அலங்கரிக்கப்பட்ட) குளம்புள்ளதும் கன்றுடன்கூடினதும் வெண் கலப்பானைநிறையக் கறப்பதும் வஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட தும் புஷ்டியுள்ளதும் சந்தனங்களாலும் மாலைகளாலும் பிரகாசிக் கும்படி செய்யப்பட்டதுமான கபிலையைத் தானம்செய்யவேண்டும். ஸுவர்ணமானது பரிசுத்தமானவைகளுள் பரிசுத்தமானதென்பது என்னுடைய எண்ணம். ஆகையால், அதை ஸுவர்ணத்தால் அலங்

---

1 ஆதிபர்வம் 242-ம் பக்கம் குறிப்பில் காண்க.

2 சித்திரை மாஸப்பிறப்பும் ஐப்பசிமாஸப்பிறப்பும்.

3 தைமாஸப்பிறப்பும் ஆடிமாஸப்பிறப்பும்.

கரித்து அக்னிஹோத்ரிக்குத் தானம்செய்யவேண்டும். ராஜேந்திரரே! ராஜஸ்ரேஷ்டரே! இவ்விதம் கோதானம் செய்பவன் முன்னோர்கள் எழுவரையும் பிந்தியவர்கள் எழுவரையும் தாண்டுவிப்பான். இதில் ஆலோசனை செய்யவேண்டாம். பாண்டவரே! ஆயிரம் [1]அக்னிஷ்டோமங்களுக்கு ஒரு வாஜபேயம் ஸமமானது. ஆயிரம் வாஜபேயங்களுக்கு ஓர் அஸ்வமேதம் ஸமமானது. ஆயிரம் அஸ்வமேதங்களுக்கு ஒருராஜஸூயம் ஸமமானது. ஆயிரம்கபிலைகளை விதிப்படி தானம்செய்பவன் (அந்த) ராஜஸூயத்தின்பயனை அடைந்து என்னுடைய உலகத்தில் பூஜிக்கப்படுகிறான். கௌரவஸ்ரேஷ்டரே! அவன் மறுபடியும் (இவ்வுலகத்திற்குத்) திரும்பமாட்டான். எவன் கன்றுடன்கூடினதும் வெண்கலப்பானை நிறையக்கறப்பதும் ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்பும் குளம்பும் சரீரமுமுள்ளதும் எல்லாஅலங்காரங்களாலும் பிரகாசிக்கின்றதுமான கபிலையைத் தானம்செய்கிறானோ கொடுப்பவனை அந்தமனிதனை அந்தப் பசுவானது அந்த அந்தக்குணங்களால் இஷ்டங்களைக்கொடுப்பதாகி அடைகிறது. தானஞ்செய்யப்பட்ட பசுவானது தன்கர்மங்களால் கட்டப்பட்டு மிக்க இருளுள்ள நரகத்தில் விழுகின்ற மனிதனைப் பெரியஸமுத்திரத்தில் வாயுவினால் கொண்டுவரப்பட்ட கப்பல்போலத் தாண்டுவிக்கிறது. புத்திரர்களையும் பௌத்திரர்களையும் ஏழுதலைமுறைவரையில் குலத்தையும் முழுதும் உள்ளபடி தாண்டுவிக்கிறது. பூமியானது எதுவரையில் மனிதர்களைத்தரிக்கிறதோ அதுவரையில் கொடுத்தவனைப் பரலோகத்தில் (அதன்) பயன் அடைகிறது. ஆலோசித்துச்செய்த மருந்தானது, கொடுத்தவுடன், மனிதனுடைய ரோகங்களை நாசம்செய்வதுபோல் நல்லபாத்திரத்தில் தானம்செய்யப்பட்ட கபிலையானது (கொடுத்த) மனிதனுடைய பாவத்தையெல்லாம் சீக்கிரத்தில் நாசஞ்செய்கிறது. ஸர்ப்பங்கள் கருடனைக்கண்டு தூரத்திலேயே பயத்தால் பிடிக்கப்பட்டுப் பரவசமாகி நசிப்பதுபோல மனிதனுடைய பாவங்கள் கபிலையைத்தானம் செய்தவர்களைக்கண்டு சீக்கிரத்தில் நசிக்கின்றன. ஸர்ப்பமானது (பழைய) தோலை விட்டுப் புதிதும் சுத்தமுமான உருவத்தை அடைவதுபோல மனிதன் கபிலையைத்தானம் செய்ததால் தன் பாவங்களால் விடப்பட்டுப் பிரகாசிக்கிறான். ஜ்வலிக்கின்ற தீபமானது வீட்டில் அடர்ந்திருக்கும் இருளைப் போக்குவதுபோல மனிதன் பதுங்கியிருக்கும் பாபத்தையும் கபிலையின்தானத்தால் வெளிப்படுத்

[1] யாகங்களின் வகை.

திப் போக்கிவிடுகிறான். கன்றுடன்கூடின அந்தக் கபிலையினுடைய சரீரத்தில் எத்தனை ரோமங்களிருக்கின்றனவோ இரட்டிப்பான அத்தனைகோடிவருஷங்கள் அதைத் தானம்செய்த மனிதன் பிரம்மலோகத்தில் மகிழ்கிறான். ஆஹிதாக்னியும் அதிதிகளிடம் பிரியமுள்ளவனும் சூத்திரனுடைய அன்னத்தைத் தூரத்தில் விலக்கியவனும் இந்திரியங்களை வென்றவனும் உண்மையான விரதமுள்ளவனும் அத்யயனம்செய்பவனுமான மனிதனுக்குக் கொடுக்கப்பட்டபசுவானது (கொடுத்தவனைப்) பரலோகத்தை அடையும்படி செய்கிறது' என்று சொன்னார்.

நூற்றுருவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(கிருஷ்ணர் கபிலாதானத்தின் பெருமை, பிரம்மதேவர் கபிலையைப் படைத்தது, தேவர்கள் கபிலைக்கு வரங்கொடுத்தது, தேவரும் முனிவரும் கபிலையின் அங்கங்களில் வஸிப்பது, ஹவ்யகவ்யங் கொடுத்தற்குரிய காலங்கள், ஶ்ராத்தத்துக்குத்தக்கவர்களும் தகாதவர்களுமான பிராம்மணர்கள், ஸ்வர்க்க நரகங்களைத்தரும் புண்யபாவங்கள் இவற்றையுதிஷ்டிரருக்குச்சொல்லியது.)**

இவ்விதம் மிக்கபுண்ணியமும் உத்தமமுமான கபிலையின் தானத்தைக்கேட்டு மிகவும் மனமகிழ்ச்சியுள்ள தர்மபுத்திரர் மறுபடியும் வாஸுதேவரை நோக்கி, 'தேவரே! தேவர்களுக்கும் ஈசரே! கபிலையை எப்பொழுது பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும்? அதினுடைய எல்லாஅங்கங்களிலும் தேவர்கள் எவ்விதம் இருக்கின்றனர்? தேவஶ்ரேஷ்டரே! நீர் எனக்குப் பத்து வகைக் கபிலைகளையும் சொன்னீர். அவைகளுள் எத்தனை கபிலைகள் புண்ணியமான லக்ஷணமுள்ளவை? தேவர்களும் பித்ருகணங்களும் எந்தவர்ணத்துடன்கூடின அவைகளை எவ்விதம் அனுக்கிரஹித்தார்கள்? எனக்குக்கேட்கக் குதூஹலமாக இருக்கிறது' என்று வினவினர். யுதிஷ்டிரரால் இவ்விதம் வினவப்பட்டவரும் உண்மையான வாக்குள்ளவருமான வாஸுதேவர் அப்பொழுது ரஹஸ்யங்களுள் உத்தமமான ரஹஸ்யத்தைச் சொல்லவே ஆரம்பித்தார். 'அரசரே! பரிசுத்தமும் ரஹஸ்யமும் உத்தமமும் தெரிந்துகொள்ள வேண்டியதும்

உண்மையுமானதர்மத்தைக் கேளும். இது யுக்திவாதம் சொல்பவர்களால் கேட்கத் தக்கதன்று. எப்பொழுது பிரஸவகாலத்தில் கன்றினுடைய இருகால்களும் தலையுடன்கூடக் காணப்படுகின்றனவோ அது தானத்திற்குரியகாலமென்று முனிஶ்ரேஷ்டர்கள் சொல்லுகின்றனர். அந்தரிக்ஷத்தில் இருக்கும் கன்றானது பூமியை அடையாமலிருக்கும் வரையில் பசுவைப் பூமியென்று அறியவேண்டும். ஆகையால், அப்படிப்பட்ட பசுவானது கொடுக்கத்தக்கது. யுதிஷ்டிரரே! கன்றுடன்கூடின பசுவுக்கு எவ்வளவு மயிர்கள் இருக்கின்றனவோ எவ்வளவு மணல்கள் கர்ப்பஜலத்தால் நனைக்கப்பட்டனவோ அவ்வளவு ஆயிரம் வருஷங்கள் கொடுத்தவன் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகிறான். [1] எள்ளுகளால் கன்றுடன்கூடின கபிலைப்பசுவைச்செய்துஸுவர்ணாபரணம் பூட்டி எல்லாரத்தினங்களாலும் அலங்கரித்து அதை [வஸ்திரங்களால்] மூடித் தானம் செய்யவேண்டும். அப்படிச்செய்தவன் ஸமுத்திரங்களுடனும் நதிகளுடனும் மலைகளுடனும் [2] வனங்களுடனும் [3] காடுகளுடனும்கூடினதும் நான்குஸமுத்திரங்களுக்குள்பட்டதுமான பூமியைக் கொடுத்தவனாவான். இதில் ஆலோசனை செய்யவேண்டாம். மனிதன் பூமிதானத்திற்குச் சமமான அந்தத் தானத்தால் ஸம்ஸார ஸமுத்திரத்தைக் கடந்து பிரம்மலோகத்தை அடைகிறான். பிரம்மஹத்தி செய்தவனாயிருந்தாலும் சிசுவைக் கொன்றவனாயிருந்தாலும் பசுவைக் கொன்றவனாயிருந்தாலும் குருவின்மனைவியைப் புணர்ந்தவனாயிருந்தாலும் மஹாபாதகங்களோடு கூடினவனாயிருந்தாலும் இந்தத்தானத்தால் சுத்தி அடைகிறான். எவன் விடியற்காலத்தில் எழுந்திருந்து புண்ணியமும் உத்தமமுமான இந்தக் கபிலாதானத்தை என்னிடம் பக்தியுடன் படிக்கிறானோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். யுதிஷ்டிரரே! இந்த அத்யாயத்தைப் படிப்பவன் மனமொழி மெய்களால் புத்தி பூர்வமாக இரவில் செய்தபாவத்தை நாசம் செய்வான். எவன் இதனை அடிக்கடி படித்துப் பிராம்மணர்களுக்கு ஶ்ராத்தத்தில் திருப்தி செய்விக்கிறானோ அவனுடைய பித்ருக்களும் மிக்க ஸந்தோஷத்துடன் அமிருதத்தை அருந்துகின்றனர். எவன் இதை என்னை அடைந்த சித்தமுள்ளவனாகிப் பக்தியுடன் கேட்பனோ அவனுடைய இரவில் செய்த எல்

---

1 பசுப்போலத் துணிப்பைதைத்து அதனுள் எள்ளை நிரப்புவது.

2 மரங்களடர்ந்தது.

3 கொடிய விலங்குகள் உறையும் இடம்.

லப் பாவமும் சீக்கிரத்தில் நசிக்கிறது. மன்னரே! இனிமேல், கபிலைகளின் விசேஷத்தை உமக்குச் சொல்லுகிறேன். நான் உமக்குச் சொன்ன பத்துக்கபிலைகளுள் நான்கு மிகச்சிறந்தவைகளும் புண்யமானவைகளும் பாவங்களை நசிக்கச் செய்கின்றவைகளுமாக இருக்கின்றன. ஸுவர்ணகபிலை, [1] ரக்தாக்ஷிபிங்கலை, பிங்கலாக்ஷி, பிங்கலபிங்கலை என்னும் இந்த நான்கு பசுக்களும் புண்யமானவைகளும் மிகச்சிறந்தவைகளும் பவித்ரமானவைகளும் பாவத்தை நசிக்கச் செய்கின்றவைகளுமாக இருப்பவை. இவை நமஸ்கரிக்கப்பட்டாலும் பார்க்கப்பட்டாலும் மனிதனுடைய பாவத்தைப் போக்குகின்றன. யுதிஷ்டிரரே! பாவத்தை அழிக்கின்றவைகளான இந்தக் கபிலைகள் எவனுடைய வீட்டிலிருக்கின்றனவோ அவனிடத்தில் செல்வமும் வெற்றியும் புகழும் எப்பொழுதும் விருத்தியடையும். இவற்றின் பாலால் பரமசிவனும் தயிரால் எல்லாத்தேவர்களும் நெய்யால் அக்னியும் பிரீதியை அடைகின்றனர். யுதிஷ்டிரரே! பித்ருக்களும், பிதாமஹர்களும், பிரபிதாமஹர்களும் (இவற்றை)ஒருதரம் கொடுப்பதால் கோடிவருஷம் ஸந்தோஷிக்கின்றனர். கபிலையின் நெய்யையாவது பாலையாவது தயிரையாவது பாயஸத்தையாவது ப்ரோத்திரியர்களுக்கு ஒருதரம் கொடுக்கும் மனிதன் பாவங்களால் விடப்படுகிறான். எவன் இந்திரியங்களை ஜயித்தவனும் கோபத்தையும் பொய்யையும் விட்டவனுமாக இருந்துகொண்டு என்னை அடைந்திருக்கும் அந்தராத்மாவுள்ளவனுகிப் பகலிலும் இரவிலும் உபவாஸமிருந்து (மறுநாள்) நல்ல முகூர்த்தத்தில் சாந்த்ராயணத்தைக் காட்டிலும் மேலான கபிலையின் பஞ்சகவ்யத்தை அருந்துகிறானோ அவன் சுத்தமான ஆத்மாவும் சித்தமுமுள்ளவனுகிறான். எவன் கபிலையின் பஞ்சகவ்யத்தால் நல்ல மந்திரத்துடன் என்னுடைய விக்ரஹத்தையாவது சங்கரருடைய விக்ரஹத்தையாவது தனித்தனியாக விஷுவத்தில் அபிஷேகம் செய்கிறானோ அவன் அஶ்வமேதத்தின் பயனை அடைவான். அவன் பாவங்களிலிருந்து விலகியவனும் சுத்தமான ஆத்மாவையுடையவனும் முக்தனுமாகி ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற விமானத்தால் என்னுடைய உலகத்தையாவது ருத்திரருடைய உலகத்தையாவது அடைவான். முற்காலத்தில் பிரம்மாவானவர் ஸுவர்ணம்போன்ற ஒளியுள்ளதும் மிக்ககாந்தியுள்ளதும் ஹோமதேனுவுமான கபிலையை அக்னிகுண்டத்திலிருந்து சிறந்த மந்திரங்களால் படைத்தார். படைக்கப்பட்டவுடன், அதைப் பார்

1 இம்மூன்று பெயர்களும் முன்வந்திருப்பவற்றிற்கு மாறுபடுகின்றன.

த்து ஆகாயத்தில் ருத்திரர் முதலான தேவர்களும் ஸித்தர்களும் பிரம்மரிஷிகளும் அங்கங்களுடன்கூடின வேதங்களும் யாகங்களும் [1] ஸமுத்திரங்களும் [2] நதிகளும் [3] மலைகளும் மேகங்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் யக்ஷர்களும் பன்னகர்களும் வந்து எல்லாரும் ஆச்சரியமடைந்து அக்னியின் மத்தியிலிருப்பதும் சிறந்த காந்தியுள்ளதுமான அந்தக்கபிலையைப் பலவிதமான மந்திரங்களால் பலவிதமாக ஸ்தோத்திரம் செய்தார்கள். எல்லாரும் கைகுவித்துக்கொண்டு நீண்ட கொம்பில்லாததும் [4]மூன்று கண்களுள்ளதும் கன்றுடன் கூடினதும் அமிருதத்தை உண்டுபண்ணுவதுமான அந்தக் கபிலையைத் தலையால் பூமியில் வணங்கி நின்றார்கள். எல்லாரும் அஞ்சலிசெய்துகொண்டு நான்கு முகங்களுள்ள பிதாமஹரைப்பார்த்து, 'மஹாதேவரே! பிரபுவே! உமக்கு நாங்கள் எதை எவ்விதம் செய்யவேண்டும்? உத்தரவு செய்யும்' என்று சொன்னார்கள். எல்லாத் தேவர்களாலும் இவ்விதம் சொல்லப்பட்ட பிரம்மாவானவர் (அவர்களை நோக்கி), 'மிகுதியானபாலுள்ள இந்தக்கறவைப் பசுவை நீங்களும் அனுக்ரஹம் செய்யுங்கள். இது ஹோமதேனு என்று அறியத்தக்கது. இது அக்னிகளைத் திருப்தியடையும்படி செய்யப்போகிறது. இதனால் திருப்தியடையும்படி செய்யப்பட்ட அக்னியானது உங்களெல்லாரையும் திருப்தியடையும்படி செய்யப் போகிறது. நீங்களெல்லாரும் இந்தப் பசுவின் பாலாகிற அமிருதத்தால் பிரீதியுள்ளவர்களும் வீர்யமும் பராக்கிரமமும் உண்டானவர்களுமாகி இஷ்டப்படி அஸுரர்களை ஜயிக்கப்போகிறீர்கள். நீங்களெல்லாரும் வீர்யம் உண்டாகப் பெற்ற சேனைகளுடன் கூடினவர்களும் புத்தியின் பலமுள்ளவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களும் அளவற்ற சரீரபலமுள்ளவர்களுமாக இருந்துகொண்டு பிரஜைகளைப் பரிபாலிக்கப் போகிறீர்கள். உங்களால் தர்மமாகப் பரிபாலிக்கப்பட்டவர்களான இவ்வுலகிலுள்ள எல்லாமனிதர்களும் பலவித தக்ஷிணைகளுள்ள யஜ்ஞங்களால் எப்பொழுதும் உங்களைப் பூஜிக்கப்போகின்றனர்' என்ற வசனத்தைச் சொன்னார்.

உயர்ந்த பதவியிலிருக்கும் பிரம்மாவினால் இவ்விதம் சொல்லப்பட்டவர்களான எல்லாத் தேவர்களும், பிறகு, ஸந்தோஷமுள்ள முகமுள்ளவர்களாக இருந்துகொண்டு கபிலைக்கு வரத்தைக் கொடுக்கலானார்கள். 'பிரம்மாவானவர், இப்பொழுது உன்னை உலக நன்மைக்

1 2 3 அவற்றின் தேவதைகள்.

4 ஆதிகபிலைக்கு மூன்றுகண்கள் இருந்தனபோலும்.

காகப் படைத்தார். ஆகையால், நீ பரிசுத்தையும் பரிசுத்தியைச் செய்கின்றவளும் பாவங்களைப் போக்குகின்றவளுமாகக் கடவாய். எந்த மனிதர்கள் உன்னைப்பார்த்து கைகளால் தொட்டு நமஸ்கரிப்பார்களோ உன்னுடைய பக்தர்களான அவர்களுக்கு ஒருவருஷத்தில் செய்த பாவம் நசிக்கட்டும். எந்த மனிதர்கள் உன்னைக்கண்டு, 'ஸர்வஸஹா' என்றுசொல்லி நமஸ்கரிப்பார்களோ அவர்களுடைய விருப்பமில்லாமல் செய்யப்பட்டதும் அறியாமையால் செய்யப்பட்டதும் பார்க்கப்படாததுமான பாதகமானது, ஸூரியன் உதித்தவுடன் இருள்போல, நாசமடையட்டும்' என்று சொன்னார்கள். அவர்கள் இவ்விதம் சொல்லி அந்தக் கபிலைக்கு வரத்தைக் கொடுத்து,வந்த வழியே சென்றனர். அப்பசுவும் உலகங்களை ரக்ஷிப்பதற்காக உலகங்களில் ஸஞ்சரித்தது. அந்தக் கபிலையினிடத்திலிருந்தே உண்டானவைகளான இந்த ஒன்பது கபிலைகளும் உலகத்தை அனுக்ரஹிப்பதற்காக இப்புவியில் ஸஞ்சரிக்கின்றன. ஆகையால், பரலோகத்தில் நன்மையை விரும்புகிறவன் கபிலையைத் தானம் செய்யவேண்டும். 'வேந்தரே! கபிலையை அக்னிஹோத்திரம் செய்பவனுக்குக் கொடுக்கும்பொழுது, அதினுடைய கொம்புகளில் விஷ்ணுவும் இந்திரனும் இருக்கின்றனர். கொம்புகளின் அடிப்பிரதேசங்களில் சந்திரனும் 1வஜ்ரதரனும்இருக்கின்றனர். கொம்புகளின் நடுவில் பிரம்மாவும் நெற்றியில் விருஷபத்வஜரும் காதுகளில் அஶ்வினிதேவர்களும் கண்களில் சந்திரஸூரியர்களும் பற்களில் மருத்என்னும்தேவர்களும் நாவில் வாக்தேவியானஸரஸ்வதியும் மயிர்க்கால்களில் முனிவர்களும் தோலில் பிரஜாதிபதியும் நிஶ்வாஸங்களில் ஆறு அங்கங்களுடனும் பதத்துடனும் க்ரமத்துடனும்கூடின வேதங்களும் இருக்கின்றனர். மூக்கின்துவாரத்தில் கந்தங்களும் வாஸனையுள்ள மலர்களும் உதட்டில் எல்லாவஸுக்களும் முகத்தில் அக்னியும் இருக்கின்றனர். கக்கத்தில் ஸாத்யர்களென்னும் தேவர்களும் கழுத்தில் பார்வதியும் இருக்கின்றனர்.முதுகில் நக்ஷத்திரகணங்களும் திமிலில் ஆகாயமும் அபானத்தில் எல்லாத்தீர்த்தங்களும் மூத்திரத்தில் ஸாக்ஷாத்கங்கையும் இருக்கின்றன.கோமயத்தில் விரும்பியவற்றைக் கொடுத்துக் களிக்கச்செய்யும் லக்ஷ்மியானவள் எப்பொழுதும் வஸிக்கிறாள். மூக்கில் எப்பொழுதும் ஜ்யேஷ்டாதேவியென்னும் பெண் வஸிக்கிறாள். பின்தட்டில் பித்ருக்களிருக்கின்றனர். வாலில் லக்ஷ்மி இருக்கிறாள். இருபக்கங்களிலும் விஶ்வேதேவர்களுமிருக்கின்றனர். அவைகளுடைய மார்பில் வேலாயுதம்

1 இந்திரனுடைய மூர்த்திவிசேஷம்.

பிடிப்பவரான ஸுப்ரம்மண்யர் பிரீதியுடன் வஸிக்கிறார். முழங்கால் கணுக்கால் தொடை என்னும் இடங்களில் ஐந்துவாயுக்களும் குளம்புகளின் மத்திகளில் கந்தர்வர்களும் குளம்புகளின் நுனிகளில் பன்னகர்களும் இருக்கின்றனர். பூர்ணமான நான்கு ஸமுத்திரங்களும் அந்தக்கபிலைக்கு ஸ்தனங்களாக இருக்கின்றன. ரதியும் மேதையும் பொறுமையும் ஸ்வாஹையும் ச்ரத்தையும் சாந்தியும் த்ருதியும் ஸ்மிருதியும் கீர்த்தியும் தீப்தியும் க்ரியையும் காந்தியும் துஷ்டியும் புஷ்டியும் ஸந்ததியும் திசைகளும் ப்ரதிசைகளும் எப்பொழுதும் கபிலையை ஸேவிக்கின்றன. தேவர்களும் பித்ருகணங்களும் கந்தர்வக்கூட்டங்களும் அப்ஸரஸுகளின் கூட்டங்களும் உலகங்களும் தீவுகளும் கடல்களும் கங்கைமுதலான நதிகளும் (ஸேவிக்கின்றனர்.) தேவர்களும் பித்ருகணங்களும் அங்கங்களுடன்கூடின வேதங்களும் யாகங்களும் ஸந்தோஷமுள்ளவர்களாக வேதத்தில் சொல்லியிருக்கும் பலவிதமந்திரங்களால் ஸ்தோத்திரம் செய்கிறார்கள். வித்யாதரர்களும் ஸித்தர்களும் பூதங்களும் நக்ஷத்திரக்கூட்டங்களும் புஷ்பவர்ஷத்தைப் பொழிகின்றனர்; ஸந்தோஷமுள்ளவர்களாக நர்த்தனமும் செய்கின்றனர். (இவ்விதம்) பிரம்மாவானவர் சிறந்த ஒளியுள்ள கபிலாதேவியை அக்னிகுண்டத்திலிருந்து உண்டுபண்ணினார். 'கபிலையே! புண்யமானவளே! எல்லாத்தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவளே! உனக்கு நமஸ்காரம். கபிலையே! சிறந்த பலமுள்ளவளே! எல்லாத்தீர்த்தஸ்வரூபியே! சுபமானவளே! கொடுப்பவனை அவனுடைய பந்துக்களுடன் பிரம்மலோகத்தை அடையும்படி நீயே செய். ஆ! இது புண்ணியமும் எல்லாத்துக்கங்களையும் போக்குகின்றதும் உத்தமமுமான ரத்தினம். ஆ! இது தர்மமாக ஸம்பாதிக்கப்பட்டதும் சுத்தமும் மேலானதுமான சிறந்ததனம்' என்று அந்த எல்லாத்தேவர்களும் ஆகாயத்திலிருந்துகொண்டு சொல்லுகின்றனர். அந்தக்கபிலையைப் பெற்றுக்கொண்ட பிராம்மண ச்ரேஷ்டன் (அதை) எவ்வளவு வரையில் அனுபவிக்கிறானோ அவ்வளவுவரையில் எல்லாத்தேவகணங்களும் 1 ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்புகளுள்ளதும் 2வெள்ளியினால் அலங்கரிக்கப்பட்ட குளம்புகளுள்ளதும் சந்தனங்களாலும் புஷ்பங்களாலும் நன்கு பூஜிக்கப்பட்டதுமான கபிலையைப் பூஜிக்கின்றனர். கபிலையானது எவ்வளவு வரையில் இரண்டு புதியவஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறதோ

1 2 'ஸுவர்ணம் போன்ற கொம்புகளுள்ளதும் வெள்ளிபோன்ற குளம்புகளுள்ளதும்' என்றும் கொள்ளலாம்.

அவ்வளவு வரையில் மந்திரங்களால் பரிசுத்தமானதும் நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்டதுமான அது விரும்பினுல் பூமியில் வஸிப்பவர்களையெல்லாம் தானே பிரம்மலோகத்தை அடையும்படி செய்யும். பூமியும் குதிரையும் ஸுவர்ணமும் பசுக்களும் வெள்ளியும் [1]அன்னமும் எள்ளும் யவமும் பிராம்மணனுக்குக் கொடுக்கப்பட்டால் நாள்தோறும் மிக்கஸந்தோஷமடைகின்றன. பாண்டவரே ! ஆனால், அவைகள் வேதமோதாதவர்களுக்குக் கொடுக்கப்பட்டால் 'நாம் என்ன பாவம் செய்தோம்' என்று தம்மை நிந்தித்துக்கொள்ளுகின்றன. அவைகள், 'அந்தோ! நாம் ராக்ஷஸர்களாலும் பிசாசங்களாலும் நாற்புறங்களிலும் துன்பப்படுத்தப்பட்டுச் சீக்கிரமாக நரகத்தை அடையப்போகின்றோம்' என்று துக்கப்படுகின்றன. விசேஷமாக வேதாத்தியயனம் செய்த பிராம்மணர்களுக்குக் கொடுத்தால் அவைகளும் விருத்தியடைகின்றன ; கொடுத்தவனையும் தாண்டுவிக்கின்றன.' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "தேவர்களுக்கும் ஈசரே ! அஸுரர்களைக் கொல்பவரே ! ஹவ்யமும் கவ்யமும் செய்யத்தக்ககாலம் எது ? அவைகளில் எந்தப்பிராம்மணர்கள் பூஜிக்கத்தக்கவர்கள் ? எந்தப்பிராம்மணர்கள் விலக்கத்தக்கவர்கள் ?" என்று வினவ, பகவான் சொல்லானார். 'தேவகாரியத்தை முற்பகலில் செய்யவேண்டுமென்றும் பித்ருகாரியத்தைப் பிற்பகலில் செய்யவேண்டுமென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். காலம்தவறின தானத்தை ராஜஸமென்று கருதுகின்றனர். பாரதரே ! உரக்கக்கோஷிக்கப்பட்டதும் பொய்சொல்லப்பட்டதும் நாயினுல் தொடப்பட்டதுமான போஜனத்தை ராக்ஷஸபாகமென்று கருதுகின்றனர். அரசரே ! பதிதர்களும் ஜடன் உன்மத்தன் முதலானவர்களுமான பிராம்மணர்கள் தேவகாரியத்திலும் பித்ருகாரியத்திலும் பூஜிக்கத்தக்கவர்களல்லர். நபும்ஸகனும் [2]வயிற்றுநோவுள்ளவனும் குஷ்டரோகமுள்ளவனும் க்ஷயரோகமுள்ளவனும் அபஸ்மார ரோகமுள்ளவனும் பித்ருகார்யத்தில் பூஜிக்கத்தக்கவர்களல்லர். வைத்தியர்களும் [3]தேவலகர்களும் பொய்யான நியமத்தைத்தரிப்பவர்களும் ஸோமவிக்ரயம் செய்பவர்களும் ஶ்ராத்தத்தில் பூஜிக்கத்தக்கவர்களல்லர். ஏகோத்திஷ்டத்தில் போஜனம் செய்த

1 அஶ்வம்' என்பது 'அன்னம்' என்று மாற்றப்பட்டது.
2 ஶூ௦மீ என்பது மூலம். 3 கூலிக்குப் பூஜைசெய்பவர்கள்.

பிராம்மணர்கள் விதிப்படி சாந்திராயணத்தைச் செய்யாவிடில் மறுபடியும் பூஜிக்கத்தக்கவர்களல்லர். பாடகர்களும் நர்த்தகர்களும் [1]ஓடம்தள்ளுகிறவர்களும் வாத்யம்வாசிப்பவர்களும் கதைசொல்பவர்களும் யுத்தம் செய்பவர்களும் ஶ்ராத்தத்தில் பூஜிக்கத்தக்கவர்களல்லர். மன்னரே! அக்னிகார்யமில்லாதவர்களும் பிணம்தூக்குகின்றவர்களும் திருடர்களும் நிஷித்த தர்மத்தைச் செய்பவர்களுமான பிராம்மணர்களும் பூஜிக்கத்தக்கவர்களல்லர். மூந்தி அறியப்படாதவர்களும் [2] கணபுத்திரர்களும் [3]புத்திரிகாபுத்திரர்களுமான பிராம்மணர்கள் ஶ்ராத்தத்தில் பூஜிக்கத்தக்கவர்களல்லர். சண்டைசெய்யும் பிராம்மணனும் வியாபாரம் செய்யும் பிராம்மணனும் பிராணிகளை விற்று ஜீவிப்பவனும் ஶ்ராத்தத்தில் பூஜிக்கத்தக்கவர்களல்லர். விரதங்களை அனுஷ்டிப்பவர்களும் நற்குணங்கள் பொருந்தியவர்களும் தினந்தோறும் வேதமோதுவதில்நோக்கமுள்ளவர்களும் ஸாவித்ரியை அறிந்தவர்களும் கர்மங்களைச்செய்பவர்களுமாகஇருப்பவர்கள் ஶ்ராத்தத்தில் பூஜிக்கப்படத்தக்கவர்கள். ஶ்ராத்தத்திற்குப் பிராம்மணனும் தயிரும் நெய்யும் தர்ப்பங்களும் புஷ்பங்களும் க்ஷேத்ரமும் கிடைப்பது காலம். அந்தக்காலத்தில் ஶ்ராத்தம் செய்யவேண்டும். வேந்தரே! நல்லொழுக்கத்தில் மனம் பற்றியவர்களும் ஜீவனோபாயம் குறைந்து இளைத்தவர்களுமாக இருந்து யாசகர்களாக வருபவர்களுக்குக் கொடுத்தது பெரும்பயனைத்தரும். தவசிகளும் பிக்ஷையெடுப்பவர்களுமான பிராம்மணர்கள் யாசகர்களாக இருந்து விரும்புவார்களானால் அவர்களுக்குக்கொடுத்தது பெரும் பயனைக் கொடுக்கும். தர்மிஷ்டர்களுள் சிறந்தவரே! இவ்விதம் அறிந்து வேதாத்தியயனம் செய்தவனும் ஏழையும் உபகாரம் செய்யாதவனுமாக இருப்பவனுக்கு முழுமனத்துடன் [4] எப்பொழுதும்கொடும். தர்மத்தை அறிந்தவரே! அக்ஷயமான தானத்தை விரும்புவீரானால் உமக்கும் ஶ்ரோத்திரியர்களுக்கும்பிரியமான தானத்தைக் கொடுக்கக் கடவீர். யுதிஷ்டிரரே! எவர்கள் நரகத்தை அடை

---

1 ப்லவகா: என்பதுமூலம். இது ஓடம் தள்ளுகிறவரென்னும் பொருளில்வந்ததற்கு இந்த ஶ்லோகத்தையே சப்தகல்பத்ருமம் மேற்கோள் காட்டுகிறது. இதற்கு, 'கத்தி கட்டிக்கொண்டு கூத்தாடுகிறவர்; கயிற்றின்மேல் கூத்தாடுபவர்' என்னும் பொருள்களும் உண்டு.

2 கணன் = யாரிடத்திலும் தானம் வாங்குபவன்.

3 ஆதிபர்வம் 837-ம் பக்கம் குறிப்பில் காண்க.

4 'ததா' என்பது, 'ஸதா' என்று மாற்றப்பட்டது.

கிறார்களோ அவர்களைக் கேளும். குருவின் நிமித்தமும் பயத்தின் நிமித்தமும் அன்றி வேறுவிஷயத்தில் பொய்சொல்லும் பிராம்மணர்கள் நரகத்தை அடைவார்கள். பிறருடைய மனைவியை அபஹரிப்பவர்களும் பிறருடைய மனைவியைத் தொடுபவர்களும் பிறருடைய மனைவியைப் புணர்பவர்களும் நரகத்தையடைவார்கள். கோள் சொல்பவர்களும் ஸ்நேஹத்தைக் கெடுப்பவர்களும் பிறருடைய தனத்தால் ஜீவிப்பவர்களும் மித்திரர்கள் செய்த நன்றியை மறந்தவர்களும் நரகத்தையடைவார்கள். வர்ணாஸ்ரமங்களை விட்டு விலகினவர்களும் 1 பாஷண்டர்களும் பாவிகளும் அவர்களை உபாஸிப்பவர்களுமான இவர்களெல்லாரும் நரகத்தை இருப்பிடமாகக் கொண்டவர்கள். வேதங்களை விற்பவர்களும் வேதங்களைத் தூஷிப்பவர்களும் வேதங்களை எழுதுகின்றவர்களும் நரகத்தை அடைவார்கள். அரசரே! (நெய்முதலான) ரஸத்தை விற்பவர்களும் விஷத்தை விற்பவர்களும் பாலை விற்பவர்களும் நரகத்தை அடைவார்கள். தனத்திற்காகவாவது ஸ்நேஹத்தினாலாவது சண்டாளர்களுக்குப் பாலைக்கொடுக்கும் இழிவான மனிதர்கள் நரகத்தை அடைவார்கள். காளைகளை அடக்குபவர்களும் மூக்குக் குத்துகிறவர்களும் காயடிப்பவர்களும் நரகத்தை அடைவார்கள். சக்தியிருந்தும் ஆசையால் திரவ்யங்களைக் கொடாதவர்களும் தீனர்களையும் குருடர்களையும் கவனியாதவர்களுமாக இருப்பவர்கள் நரகத்தை அடைவார்கள். பொறுமையுள்ளவர்களும் மனவடக்கமுள்ளவர்களும் இளைத்தவர்களும் பேரறிவுள்ளவர்களும் நெடுங்காலம் தம்முடன் வஸித்தவர்களுமானவர்களைத் தமது காரியமானவுடன் விடுபவர்கள் நரகத்தை அடைவார்கள். பாலர்களுக்கும் வ்ருத்தர்களுக்கும் களைத்தவர்களுக்கும் கொடாமல் மிருஷ்டான்னத்தைப் புஜிக்கும்மனிதர்கள் நரகத்தை அடைவார்கள். யுதிஷ்டிரரே! இந்தமனிதர்கள் நரகத்தை அடைவார்களென்று முன்னோர்களான ரிஷிகள் கூறியிருக்கின்றனர். எவர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்களோ அவர்களைக் கேளும். தானத்தாலும் தவத்தாலும் ஸத்யத்தாலும் மனவடக்கத்தாலும் தர்மத்தை அநுஸரிக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். பாண்டவரே! பணிவிடை செய்து உபாத்தியாயரிடமிருந்து சாஸ்திரத்தைக் கற்றறிந்து பிரதிக்ரஹத்தில் ஆசையற்றிருக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள்· கள்ளையும் மாம்ஸத்தையும் சாராயத்தையும் விலக்கினவர்களும் விரதங்களுள்ளவர்களும் பிறர் மனைவியினிடம

1 நாஸ்திகர்; ஆதிபர்வம் 578-ம் பக்கம் குறிப்பில் காண்க.

ஆசையற்றவர்களுமான மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். தாயாருக்கும் தகப்பனுருக்கும் பணிவிடைசெய்பவர்களும் ஸஹோதரர்களிடத்தில் ஸ்நேஹமுள்ளவர்களுமான மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். போஜனகாலத்தில் அதிதிகளிடம் பிரியத்துடன் வெளியில் வருகின்றவர்களும் வாயிற்கதவைச் சார்த்தாதவர்களுமான மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். ஏழைகளின் கன்னிகைகளுக்கு விவாஹகாரியத்தைச் செய்கின்றவர்களும் செய்விக்கின்றவர்களுமான மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். ரஸங்களையும் விதைகளையும் ஔஷதிகளையும் ஶ்ரத்தையுடன் கொடுக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். கேட்பவர்களுக்கு வழிகளிலுள்ள க்ஷேமத்தையும் கெடுதலையும் ஸமதரைகளையும் மேடுபள்ளங்களையும் சொல்லும் மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். இரண்டு பர்வங்களிலும் சதுர்த்தசியிலும் அஷ்டமியிலும் இரண்டு ஸந்தியாகாலங்களிலும் திருவாதிரை நக்ஷத்திரத்திலும் ஜன்ம நக்ஷத்திரத்திலும் விஷுவத்திலும் ஶ்ரவணத்திலும் [1] ஸ்திரீ ஸம்பந்தமில்லாத மனிதர்கள் ஸ்வர்க்கத்தை அடைவார்கள். ஹவ்ய கவ்யங்களின் விதியையும் நரகத்தை அடைபவனையும் ஸ்வர்க்கத்தை அடைபவனையும் தர்மத்தையும் அதர்மத்தையும் சொன்னேன். மறுபடியும் எதைக் கேட்க விரும்புகிறீர்?' என்று வினவினார்.

---

நூற்றேழாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்ம பர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர், பிரம்மஹத்தி செய்யாமலே அதையொத்த தீமைதரும் பாவத்தையும் புஜிக்கத்தகாத அன்னமுள்ள பாவிகளின் லக்ஷணத்தையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், 'தேவரே! மனிதன் ஹிம்ஸையைச் செய்யாமல் பிரம்மஹத்தி தோஷத்தை அடையும் விதத்தை நீர் எனக்கு முழுதும் உள்ளபடி சொல்ல வேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'எவன் ஜீவனத்திற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் பிராம்மணனைத் தானே பிக்ஷைக்காக அழைத்துப் பிறகு இல்லையென்று சொல்லுகிறானோ அவனைப் பிராம்

1 'க்ராம்யதர்மதா:' என்பது மூலம்.

மணனைக்கொன்றவனென்று சொல்லுகின்றனர். பாரதரே! இவ்வுலகில் துர்ப்புத்தியுள்ள எவன் (பகைவனும் நண்பனுமல்லாத) மத்யஸ்தனும் ஸாங்கமாக வேதாத்தியயனம் செய்தவனுமான பிராம்மணனுடைய ஜீவனோபாயத்தை அபஹரிப்பனோ அவனைப் பிராம்மணனைக் கொன்றவனென்று சொல்லுகின்றனர். எவன் கோபம்கொண்டு ஆஶ்ரமத்திலோ வீட்டிலோ கிராமத்திலோ பட்டணத்திலோநெருப்பை வைப்பனோ அவனைப் பிராம்மணனைக் கொன்றவனாகச் சொல்லுகின்றனர். அரசரே! எவன் தாஹத்தால் பீடிக்கப்பட்டு ஜலத்தின் ஸமீபத்தில் வரும் பசுக்கூட்டத்திற்கு இடையூற்றை உண்டு பண்ணுகிறானோ அவனைப் பிரம்மஹத்தி செய்தவனாகச் சொல்லுகின்றனர். எவன் நன்கு பிரவிருத்தித்த வேதத்தையும் முனிவர்களால் செய்யப்பட்ட சாஸ்திரத்தையும் கருத்தை உணராமல் தூஷிக்கிறானோ அவனைப் பிரம்மஹத்தி செய்தவனாகச் சொல்லுகின்றனர். எவன் குருடனுடையதும் நொண்டியினுடையதும் மூடனுடையதுமான ஸொத்துமுழுமையும் அபஹரிப்பனோ அவனைப் பிரம்மஹத்தி செய்தவனென்று சொல்லுகிறார்கள். மூடபுத்தியுள்ள எவன் குருவை, 'நீ' என்று சொல்லியும், 'ஹூம்' என்று அதட்டியும் (அவருடைய) கட்டளையை மீறி நடக்கிறானோ அவனைப் பிரம்மஹத்தி செய்தவனென்று சொல்லுகின்றனர். எவன் கோபத்தாலாவது த்வேஷத்தாலாவது வையப்பட்டவனாகவாவது அதட்டப்பட்டவனாகவாவது ருதுகாலத்தில் மனைவியைப் புணரவில்லையோ அவனைப் பிரம்மஹத்தி செய்தவனென்று சொல்லுகிறார்கள். தீனனாக இருப்பவன் எவ்வளவு பொருளால் நல்ல நிலைமையுள்ளவனாக இருப்பனோ, எதுநசித்தால் கெட்ட நிலைமையுள்ளவனாவனோ ஸர்வஸ்வமான அதை அபஹரிப்பவனைப் பிரம்மஹத்தி செய்தவனென்று சொல்லுகின்றனர்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவஶ்ரேஷ்டரே! எல்லாத் தானங்களுள்ளும் சிறந்ததானத்தையும் எந்தப்பிராம்மணர்களுடைய அன்னம் புஜிக்கத்தகாததோ அவர்களையும் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பிரம்மா முதலான தேவர்கள் அன்னத்தையே புகழ்கின்றனர். அன்னதானத்திற்கு ஒப்பானதானம் உண்டானது மில்லை; உண்டாகப் போகிறதுமில்லை. அன்னமானது உலகத்தில் பலத்தை உண்டுபண்ணுகிறது. அன்னத்தால் பிராணன்கள் நிலைபெறுகின்றன. அரசரே! எவர்களுடைய அன்னம் புஜிக்கத்தகாததோ அவர்களை நான் சொல்லுகிறேன். என்னிட

மிருந்து தெரிந்துகொள்ளும். தீக்ஷிதன், கிருபணன், கோபமுள்ளவன், அவமதிக்கப்பட்டவன், சபிக்கப்பட்டவன், நபும்ஸகன், உணவு மாறாட்டம் செய்பவன், சிகித்ஸை செய்பவன், தூதன், எச்சிலைப் புஜிப்பவன் இவர்களுடைய அன்னத்தையும் குரூரனுடைய அன்னத்தையும் ஸூதகான்னத்தையும் சூத்திரசேஷமான அன்னத்தையும் சத்ருவின் அன்னத்தையும் பதிதனுடையதென்று பிரஸித்தமான அன்னத்தையும் கோட்சொல்பவனுடைய அன்னத்தையும் யஜ்ஞத்தை விற்பவனுடைய அன்னத்தையும் புஜிக்கக்கூடாது. நடனுடைய அன்னத்தையும் சேணியனுடைய அன்னத்தையும் நன்றிகொன்றவனுடைய அன்னத்தையும் அம்பஷ்டர்கள், வேடர்கள், கூத்தாடுகிறவன் , தட்டான், வீணை வாசிப்பவன், ஆயுதம் விற்பவன், ஸூதர்கள், கள்விற்பவர்கள், வைத்யன், வண்ணான், [1] ஸ்திரீயினால் ஜயிக்கப்பட்டவன், கொடியவன், [2]மாஹிஷிகன், இறந்த (தீட்டுப்) பத்து நாளும் ஆகாதவர்கள், தாஸிகள், வந்தி, சூதாடுகிறவன், சூதாடத்தெரிந்தவர்கள், தமையன் விவாகம் செய்துகொள்ளாமலிருக்க விவாகம் செய்துகொண்ட தம்பி, இவனுடைய தமையன் இவர்களுடைய அன்னத்தையும் இரண்டுதாரம் விவாகம் செய்துகொண்டவளுடைய முதற்புருஷனான பிராம்மணன், இரண்டுதாரம் மணம்புரிந்தவளுடைய இரண்டாவது கணவன் இவ்விருவர்களுடைய அன்னத்தையும் அரசர்களுடைய அன்னத்தையும் விலக்கவேண்டும். அரசனுடைய அன்னமானது தேஜஸ்ஸையும் சூத்திரனுடைய அன்னம் பிரம்மதேஜஸ்ஸையும் தட்டானுடைய அன்னம் ஆயுளையும் சக்கிலியனுடைய அன்னம் கீர்த்தியையும் அபஹரிக்கின்றன. கூட்டத்தினுடைய அன்னமும் தாஸிகளுடைய அன்னமும் உலகங்களில் [3]இழிவானவை. வைத்யனுடைய அன்னம் சீழுக்குச்சமமானது. விருஷலீபதியின் அன்னம் சுக்லத்துக்குச்சமமானது. வட்டியால் ஜீவிப்பவனுடைய அன்னம் மலத்திற்குச் சமமானது. ஆகையால், அவற்றை விலக்கவேண்டும். அவர்களுடைய அன்னத்தைப் புஜிப்பவன் தோலையும் எலும்பையும் மயிரையும் புஜிப்பவனாகிறான். பிராம்மணன் இவர்களுடைய அன்னத்தை [4] அறியாமல் புஜித்தால் மூன்று

1 பெண்டிற்கடங்கி நடப்பவன். 2 ஸ்திரீயைக்கொண்டு பிழைப்பவன்.

3 'பரிகர்ஹிதம்' என்று மாற்றப்பட்டது. 'பரிகீர்த்திதம்' என்ற பாடத்துக்கு 'சமைத்திருப்பதாக எல்லாருமறிய உரக்கத் தெரிவிக்கப்பட்ட அன்னமும்' என்பது பொருள்.

4 'அமத்யா' என்று மாற்றப்பட்டது.

நாள் உபவாஸம் இருக்கவேண்டும். அறிந்து ஒருமுறை புஜித்தா லும் ப்ராஜாபத்யம் என்னும் விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். பாண்டவரே! தானங்களுடைய பயனையும் உள்ளபடி கேளும். ஜலத்தைக் கொடுப்பவன் திருப்தியையும் அன்னத்தைக்கொடுப்ப வன் குறைவற்ற ஸுகத்தையும் திலதானம் செய்பவன் இஷ்ட மான பிரஜையையும் தீபதானம் செய்பவன் உத்தமமான நேத் திரத்தையும் பூமியைக் கொடுப்பவன் பூமியையும் ஸுவர்ண த்தைக்கொடுப்பவன் நீண்ட ஆயுளையும் வீட்டைக்கொடுப்பவன் சிறந்த வீடுகளையும் வெள்ளியைக் கொடுப்பவன் உத்தமமான ரூபத்தையும் வஸ்திரத்தைக் கொடுப்பவன் சந்திரஸாலோக்ய த்தையும் குதிரையைக்கொடுப்பவன் அஸ்வினீதேவர்களுடைய ஸாலோக்யத்தையும் விருஷபத்தைக் கொடுப்பவன் இஷ்டமான செல்வத்தையும் கோவைக் கொடுப்பவன் கோலோகத்தையும் வாகனத்தையும் படுக்கையையும் கொடுப்பவன் மனைவியையும் அபய மளிப்பவன் ஐஸ்வர்யத்தையும் தான்யத்தைக் கொடுப்பவன் சாஸ்வத மான ஸௌக்யத்தையும் [1]பிரம்மத்தைக் கொடுப்பவன் பிரம்மத் திற்குச்சமமாக இருப்பதையும் அடைகின்றனர். எல்லாத்தானங் களிலும் பிரம்மதானம் மேலானது. பொன், பூமி, பசு, குதிரை, ஆடு, ஆடை, படுக்கை, ஆஸனம் முதலானவைகளைப் பூஜிக்கப்பட்டுப் பெற்றுக்கொள்பவனும் முறைப்படி கொடுப்பவனுமாகிய அவ்விருவர் களும் ஸுவர்க்கத்தை அடைகின்றனர்; மாறுதலாகஇருந்தால் நர கத்தை அடைகின்றனர். வித்வானானவன் பொய்சொல்லக்கூடாது. தவத்தைச்செய்து கர்வமடையக்கூடாது; துன்பப்படுத்தப்பட்டா லும் பிராம்மணர்களை அவமதிக்கக்கூடாது; கொடுத்துவிட்டு (அதை) ச்சொல்லக்கூடாது. பொய் சொல்வதால் யாகமும் கர்வத்தால் தவ மும் பிராம்மணனை அவமதிப்பதால் ஆயுளும் (வெளியிட்டுச்) சொல் லுவதால் தானமும் நசிக்கின்றன. பிராணியானது ஒன்றாகவே ஜனிக்கிறது; ஒன்றாகவே மரிக்கிறது; ஒன்றாகவே புண்ணியத்தை அனுபவிக்கிறது; ஒன்றாகவே பாவத்தை அனுபவிக்கிறது. உறவி னர்கள் உயிரற்ற சரீரத்தைக் கட்டைக்கும் மண்கட்டிக்கும் ஸமமா கப் பூமியில் போட்டுவிட்டுத் திரும்பிச்செல்லுகின்றனர். தர்மமா னது அவனை அனுஸரித்துச்செல்லுகிறது. மனமானது அற்ப மான சரீரத்தை உத்தேசித்து வருங்கார்யங்களைச்செய்ய எண்ணுகிற து. யமன் நிச்சயமாகக் கர்வமடைகிறான். ஆகையால், தர்மத்தைத்

1 வேதம் அல்லது பிரம்மத்தை உபதேசிப்பவன்.

துணையாகக்கொண்டபுருஷன் எப்பொழுதும் தர்மத்தைச் சேர்க்க வேண்டும். தர்மத்தை உதவியாகக்கொண்டு தாண்டமுடியாத இருளைத் தாண்டுகிறானன்றோ? அதிகமான ஜலமுள்ள தடாகங்களையும் ஸபைகளையும் கிணறுகளையும் அழகிய தண்ணீர்ச்சாலைகளையும் அமைத்தவர்களும் அன்னதானம் செய்தவர்களும் இனிமையான வார்த்தையைச் சொல்லுகின்றவர்களுமான மனிதர்கள் யமனுக்கு வசப்படமாட்டார்கள்' என்றுசொன்னார்.



## நூற்றெட்டாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்ம பர்வம். (தொடர்ச்சி.)

**(கிருஷ்ணர், யதி அக்னி இவர்களின் மகிமையையும் தானம் பெறுதற்குரியவரின் லக்ஷணத்தையும் அன்னதானத்தையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், "ஜனார்த்தனரே! வித்வான்கள் தர்மத்தை அநேகவிதமென்றும் பலவழிகளுள்ளதென்றும் சொல்லுகின்றனர். அதற்கு லக்ஷணம் என்ன? அதை எனக்குச் சொல்லும்" என்று வினவ, பகவான் சொல்லலானார். "ராஜரே! தர்மம் சௌசம் இவற்றின் விதியின் கிரமத்தைச் சுருக்கமாகக் கேளும். ராஜேந்திரரே! அஹிம்ஸையும் சத்தியும் கோபமின்மையும் அருளுடைமையும் மனவடக்கமும் இந்திரியங்களின் அடக்கமும் நேர்மையும் தர்மத்தின் நிச்சயமான லக்ஷணம். பிரம்மசர்யமும் தவமும் பொறுமையும் கள்ளையும் மாம்ஸத்தையும் விலக்குவதும் மர்யாதையில் நிலைபெற்றிருப்பதும் இந்திரியங்களின் அடக்கமும் சௌசத்தின் லக்ஷணம். பால்யத்தில் வித்தையைக்கற்கவேண்டும். யௌவனத்தில் விவாஹம்செய்துகொள்ளவேண்டும். முதுமையில் முனிவிருத்தியை அனுஷ்டிக்கவேண்டும். தர்மத்தை எப்பொழுதும் செய்யவேண்டும். பிராம்மணர்களை அவமதிக்கக்கூடாது. குருக்களை நிந்திக்கக்கூடாது. ஸந்யாஸிகளுக்கு அனுகூலனாக இருக்கவேண்டும். இது ஸநாதனமான தர்மம். பிராம்மணர்களுக்கு ஸந்யாஸி குரு. வர்ணங்களுக்குப் பிராம்மணன் குரு. ஸ்திரீகளுக்குக் கணவனே குரு. எல்லாருக்கும் அரசன் குரு. கிருஹஸ்தன் அறிந்தும் அறியாமலும் ஸம்பாதித்த பாவத்தையெல்லாம் (அவன் வீட்டில்) ஓரிரவு வஸித்தஸந்யாஸி எரித்துவிடுவான். ஸந்யாஸிகள் கெட்ட நடையுள்ளவர்களாக இருந்தாலும் நல்லநடை

புள்ளவர்களாக இருந்தாலும் ஞானிகளானாலும் அஜ்ஞானிகளானாலும் அவர்களைப் பரலோகத்தில் நன்மையை விரும்பும் கிருஹஸ்தர்கள் பூஜிக்கவேண்டும். ஒரு தண்டமுள்ளவரானாலும் மூன்று தண்டங்களுள்ளவரானாலும் சிகையுள்ளவரானாலும் சிகையற்றவரானாலும் காஷாயத்தையும் தண்டத்தையும் தரித்த ஸந்யாஸியானவர் பூஜிக்கத்தக்கவர்; ஸம்சயமில்லை. ஸந்யாஸியும் அதிதியும், தம்மைப் பூஜிக்காதவர்களும் அவமதித்தவர்களுமான கிருஹஸ்தர்களை நரகத்தில் தள்ளுவார்கள். ஆகையால், பரலோகத்தில் நன்மையைவிரும்புகிறவர்கள் என்னையே முக்யகதியாகக் கொண்டவர்களும் என்னிடத்தில் கர்மங்களை அர்ப்பணம் செய்தவர்களுமான என்னுடைய பக்தர்களை முயற்சியுடன் பூஜிக்கவேண்டும். பிராம்மணன் த்விஜர்களை அடிக்கக்கூடாது, பசுவை ஒருபொழுதும் ஹிம்ஸிக்கக்கூடாது. இரண்டையும் செய்பவனுக்கு ப்ரூணஹத்திக்குச் சமமான பாவமுண்டு. ஒருபொழுதும் அக்னியை வாயால் ஊதக்கூடாது. பாதங்களைக் காய்ச்சக் கூடாது. (அக்னியைக் கட்டில் முதலியவற்றின்) கீழே வைக்கக்கூடாது; முதுகைக் காய்ச்சக்கூடாது. (அக்னிகளுக்கு) நடுவில் போகக்கூடாது. (அதில்) அசுத்தமான பதார்த்தத்தைப் போடக்கூடாது. எச்சிலாக இருக்கும்போது அக்நியைத் தொடக்கூடாது. ஆசௌசமுள்ளவனாக இருக்கும்போது அக்னியை எந்தநிலைமையிலும் தொடக்கூடாது. நாய் சண்டாளன் முதலானவர்களால் தொடப்பட்டவன் சரீரத்தை அக்னியில் காய்ச்சக்கூடாது. அக்னியானது எல்லாத் தேவர்களுடைய ஸ்வரூபியுமானதால் எப்பொழுதும் சுத்தனாக இருந்துகொண்டு அதைத் தொடவேண்டும். புத்தியுள்ளவன் மல ஜலங்களை விடவேண்டியகாலம் வந்திருக்கும்போது அக்னியைத் தொடக்கூடாது. அவன் (அவற்றின்) வேகத்தை அடக்கிக்கொண்டிருக்கும் வரையில் அசுத்தனாகிறான். அரசனே! ஒரு நாளும் பிறனுடையவீட்டில் சமையலுக்காக அக்னியை வாங்கக்கூடாது. அந்த அக்னியில் சமைத்த அன்னத்தால் செய்யப்பட்ட சுபகர்மத்தின் பாதிப்பயன் அக்னியைக்கொடுத்தவனை அடையும். ஆகையால், வீட்டில் அக்னி அவியாமலிருக்கும்படி செய்யவேண்டும். தவறுதலினாலாவது அறியாமையினாலாவது அந்த அக்னி அவிந்துபோனால் (அரணியைக்) கடைந்து எடுக்கவேண்டும்; ஸ்ரோத்திரியனுடைய வீட்டிலிருந்தாவது எடுத்துக்கொள்ளவேண்டும்" என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், "ஜநார்த்தனரே! ஸாதுக்களான பிராம்மணர்கள் எப்படியிருப்பார்கள்? [1]எவர்களுக்குக்கொடுத்தது பெரும்பயனைக் கொடுக்கும்? எப்படிப்பட்டவர்களுக்குக் கொடுக்கவேண்டும்? அதை எனக்குச் சொல்லும்" என்று வினவ, பகவான் சொல்லலானார். "கோபமில்லாதவர்களும் ஸத்யத்தைப் பிரதானமாகக் கொண்டவர்களும் எப்பொழுதும் தர்மத்தைச் செய்பவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான பிராம்மணர்கள் அப்படிப்பட்ட ஸாதுக்கள். அவர்களுக்குக் கொடுத்தது பெரும்பயனுள்ளது. அஹம்பாவமற்றவர்களும் எல்லாவற்றையும் ஸஹிப்பவர்களும் வினைப்பயன்களை அறிந்தவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களும் எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையைச் செய்பவர்களும் மித்ரபாவமுள்ளவர்களுமான (பிராம்மணர்கள் ஸாதுக்கள்.) அவர்களுக்குக் கொடுத்தது சிறந்த பயனுள்ளது. ஆசையில்லாதவர்களும் சுத்தர்களும் வித்தைகற்றவர்களும் (கெட்டகாரியத்தில்) வெட்கமுள்ளவர்களும் ஸத்யவாதிகளும் தங்களுக்குரியதர்மங்களில் பற்றுதலுள்ளவர்களுமாக இருப்பவர்களுக்குக் கொடுத்தது பெரும்பயனுள்ளது. தினந்தோறும் அங்கங்களுடன் கூடின நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்பவனும் சரீரத்தில் சூத்திரனுடைய அன்னமில்லாதவனுமாக இருப்பவனை (த் தானத்திற்கு) ப் பாத்திரமென்று ரிஷிகள் கருதுகின்றனர். "யுதிஷ்டிரரே! இவ்வுலகில் பிரஜ்ஞையும் கல்வியும் நல்லொழுக்கமும் நல்லஸ்வபாவமுமுள்ளவன் ஒருவனாலும் அக்குலத்தை முழுமையும் தாண்டுவிப்பான். பசுவையும் குதிரையையும் அன்னத்தையும் தனத்தையும் அப்படிப்பட்டவனுக்குக் கொடுக்கவேண்டும். குணங்களுடன் கூடினவனும் ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவனுமான பிராம்மணனைக் கேள்விப்பட்டு முயற்சியுடன் தூரத்திலிருந்து அழைத்து வந்து அவனை உபசரித்துப் பூஜிக்கவேண்டும்" என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "தேவஸ்ரேஷ்டரே! தர்மாதர்மங்களின் விதியைப் பற்றி இவ்விதம் [2]முன்பு பீஷ்மர் சொல்லியிருக்கிறார். அவர் சொன்னதிலிருந்து ஸாரமான தர்மத்தைச் சொல்லும்" என்று வினவ, பகவான் சொல்லலானார். "சராசரஸ்வரூபமான இந்த ஜகத்தெல்லாம் அன்னத்தால் தரிக்கப்படுகிறது. பிராணனானது அன்னத்தாலுண்டாகிறது. (இது) பிரத்யக்ஷமானது; ஸந்தேஹமில்லை. தனக்கு க்ஷேமத்தை விரும்புகிறவன் மனைவியைஸ்ரமப்படுத்தி (யாவது

---

1 கேப்யூ என்று மாற்றப்பட்டது.

2 'பீமம்' என்பது 'பூர்வம்' என்று மாற்றப்பட்டது.

தருந்த) தேசத்திலும் காலத்திலும் முடிந்தவரையில் பிக்ஷுவுக்கு அன்னம் கொடுக்கவேண்டும். கிருஹஸ்தன் வீட்டுக்குவந்தவனும் வழிநடந்துகளைத்தவனுமான பிராம்மணனைப் பாலனாக இருந்தாலும் கிழவனாக இருந்தாலும் குருவைப்போலப் பூஜிக்கவேண்டும். உண்டாயிருக்கும் கோபத்தைவிட்டு நல்ல ஸ்வபாவமுள்ளவனும் மாத்ஸர்யமற்றவனும் ப்ரீதியுள்ளவனுமாக இருந்துகொண்டு பரலோகத்தில் நன்மைவளருவதற்காக அதிதியைப் பூஜிக்கவேண்டும். அதிதியை அவமதிக்கக்கூடாது. (அவனிடம்) பொய் வார்த்தையைச் சொல்லக்கூடாது. ஒருபொழுதும் கோத்திரத்தையும் சாகையையும் கல்வியையும் கேட்கக்கூடாது. சண்டாளனானாலும் நாயைச் சமைத்துத் தின்பவனானாலும் யாராவது ஒருவன் (போஜன) காலத்தில் வந்தால் அவனைப் பரலோகத்தில் நன்மையை விரும்புகிறவன் அன்னத்தால் பூஜிக்கவேண்டும். யுதிஷ்டிரரே! எவன் வீட்டின் வாயிலை மூடிவிட்டு மிக்க ஸந்தோஷத்துடன் அன்னத்தைப் புஜிக்கிறானோ அவன் ஸ்வர்க்கத்தின் வாயிலை மூடினவனாகிறான். எந்த மனிதன் பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் பிராம்மணர்களையும் அதிதிகளையும் கதியற்றவர்களையும் அன்னங்களால் த்ருப்தி அடையச்செய்கிறானோ அவனுடையபுண்ணியத்தின்பயன் பெரிது. எவன் மிகுதியான பாவத்தைச் செய்துவிட்டு யாசகனான பிராம்மணனுக்கு விசேஷமாக அன்னமளிக்கிறானோ அவன் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான். உலகத்தில் அன்னத்தைக் கொடுத்தவன் பிராணனைக் கொடுத்தவனாவான். பிராணனைக் கொடுத்தவன் எல்லாவற்றையும் கொடுத்தவனாவான். ஆகையால், க்ஷேமத்தைவிரும்புகிறவன் விசேஷமாக அன்னத்தைக் கொடுக்கவேண்டும். அன்னத்தை அமிருதமென்று சொல்லுகின்றனர். அன்னமானது பிரஜோத்பத்திக்குக் காரணமென்று கருதப்பட்டிருக்கிறது. அன்னமில்லாவிட்டால் சரீரத்திலுள்ள [1]ஐந்து தாதுக்களும் கஷ்டப்படுகின்றன. பலமுள்ள பிராணிக்கும் அன்னம் இல்லாவிட்டால் பலம் நசிக்கிறது. ஆகையால், சிரத்தையோடாவது சிரத்தையில்லாமலாவது விசேஷமாக அன்னத்தை (க் கொடுக்கவேண்டும்.) ஸூரியன் தன்கிரணங்களால் எல்லாஜலத்தையும் கிரஹிக்கிறான். வாயுவானவன் அவனிடமிருந்து அந்த ஜலத்தையெடுத்து மேகங்களில் வைக்கிறான். மேகத்திலிருக்கும் அப்படிப்பட்ட அந்த ஜலத்தை இந்திரன் பூமியில் வர்ஷிக்கிறான். பாரதரே! அந்த ஜலத்தினால்

---

1 சாந்திபர்வம் 629ம் பக்கம் குறிப்பில் காண்க.

பூமிதேவியானவள் நனைக்கப்பட்டு ஸந்தோஷமுள்ளவளாகிறாள். அந்தப் பூமியில் பயிர்கள் முளைக்கின்றன. அவற்றால் எல்லாப் பிரஜைகளும் ஜீவிக்கின்றன. அவைகளிலிருந்தே மாம்ஸமும் கொழுப்பும் எலும்பும் மஜ்ஜையும் உண்டாகின்றன. இவ்விதம் ஸூர்யனும்வாயுவும் மேகமும் இந்திரனும் ஒரேவகுப்பாக இருக்கின்றனர். அதிலிருந்தே பிராணிகள் உண்டாயின. அந்த மஹாத்மாக்களுக்கு ஆகாயத்தில் திவ்யமானவைகளும் பலவிதமான உருவமுள்ளவைகளும் பலவிதமான இடங்களிலுள்ளவைகளும் சந்திரமண்டலம்போல வெண்மைநிறமுள்ளவைகளும் கிங்கிணிகளுடைய கூட்டங்களுள்ளவைகளும் பாலஸூரியன்போன்ற நிறமுள்ளவைகளும் ஸ்தாவரங்களாகவும் ஜங்கமங்களாகவும் இருப்பவைகளும் உள்ளே ஜலமும் வனமுமுள்ளவைகளும் பல நூற்றுக்கணக்குள்ளவைகளுமான வீடுகள் இருக்கின்றன. அவைகளில் புஷ்பங்களுடனும் கனிகளுடனும் கூடினவைகளும இஷ்டத்தைக் கொடுப்பவைகளுமான தேவவிருக்ஷங்களும் கட்டப்பட்ட ஸபைகளும் ஆயிரக்கணக்கான தூரவுகளும் கிணறுகளும் ஓடைகளும் பக்ஷ்யபோஜ்யமயமான மலைகளும் ஆடைகளும் ஆபரணங்களும் பாலைப்பெருக்கும் நதிகளும் அன்னமலைகளும் ஒலித்துக்கொண்டு ஆயத்தமாகஇருக்கும் ஆயிரக்கணக்கான விமானங்களும் வெண்மைநிறமுள்ளவைகளும் மிகச்சிறந்தவைகளுமான உபரிகைகளும் ஸுவர்ணத்தால் ஜ்வலிக்கின்ற படுக்கைகளும் இருக்கின்றன. அன்னமளிப்பவர்கள் அவ்விடங்களிலிருக்கின்றனர். ஆகையால், அன்னதானம் செய்யவேண்டும்" என்றுசொன்னார்.

---

நூற்றுஎண்பதாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம். (தொடர்ச்சி.)

**(கிருஷ்ணர் போஜன விதியையும் பசுக்களுக்குப் புல் முதலியன கொடுக்கும்முறையையும் அந்தணன் எள்ளையும் கரும்பையும்பிழிய லாகாதென்பதையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், "மதுஸூதனரே! அன்னதானத்தின் பயனைக் கேட்டு ஸந்தோஷமடைந்தேன். தேவர்களுக்கும் தேவரே! நீர் போஜனத்தின் விதியைச் சொல்லவேண்டும்" என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாண்டவரே! த்விஜர்களின் போஜனத்தின் விதியைக் கேளும். ஸ்நானம்செய்து சுத்தனாக இருந்துகொண்டு அக்னிஹோமம் செய்துவிட்டுச் சுத்தமும் ஜனங்களில்லாததுமான

இடத்தில் பிராம்மணஸ்ரேஷ்டனால் நான்குமுனைகளுள்ள மண்டலத்தையும் க்ஷத்திரியனால் வட்டமான மண்டலத்தையும் வைஸ்யனால் அர்த்தசந்திரனுக்குச் சமமான வடிவமுள்ள மண்டலத்தையும் செய்வித்து ஈரமான கால்களுடன் கிழக்குமுகமாகச் சுத்தமான ஆஸனத்தில் (உட்கார்ந்து) இரண்டு கால்களினாலுமாவது ஒருகாலினாலாவது பூமியைத் தொட்டுக்கொண்டு புஜிக்கவேண்டும். த்விஜன் ஒருவஸ்திரத்துடனாவது போர்த்துக்கொண்டாவது புஜிக்கக்கூடாது; உடைந்த பாத்திரத்திலும் இலையின் பின்புறத்திலும் புஜிக்கக்கூடாது. ஸந்தோஷமுள்ள அந்தராத்மாவுடன் முதலில் அன்னத்தைநமஸ்கரித்து அன்னத்தைத்தவிர மற்றதைப் பாராமலும் அதை வெறுக்காமலும் அதில் ஆசையுள்ளவனாயிருக்கவேண்டும். வெறுக்கப்பட்ட அன்னத்தை ராக்ஷஸர்களே புஜிக்கின்றனர். கையில் ஜலத்தை யெடுத்து (அதனால்) அன்னத்தை வலமாகச் சுற்றவேண்டும். அந்தஜலம் பானம்பண்ணத் தக்கதன்று என்று அறியவேண்டும். குடித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். பரிஷேசு (=சுற்றுகிற) ஜலத்தைத்தவிர வேறு ஜலத்தையே மந்திரத்துடன்பானம்பண்ணவேண்டும். மந்திரத்துடன் தனித்தனியாக ஐந்து பிராணாஹுதிகளைச் செய்யவேண்டும். அரசரே! பிராணாஹுதி செய்யும்போது நாவானது ருசியை அறியாமலிருக்கும்படி ஜாக்ரதையுள்ளவனும் சோம்பலில்லாதவனுமாகப் பிராணாஹுதியைச் செய்யவேண்டும். பாண்டவரே ! எவன் அன்னத்தையும் அன்னத்தைப் புஜிப்பவனையும் ஐந்து பிராணன்களையும் அறிந்து ஐந்து ஆஹுதிகளைச்செய்கிறானோ அவனால் ஐந்துவாயுக்களும் பூஜிக்கப்பட்டனவாகின்றன. இதற்கு மாறுதலாகப் புஜிக்கும் அறிவிற்குறைந்தவனான பிராம்மணன் அந்த அன்னத்தால் அஸுரர்களையும் பிரேதர்களையும் ராக்ஷஸர்களையும் திருப்திசெய்விப்பான். வாய்கொள்ளக்கூடிய அளவுள்ள உருண்டைகளை ஒவ்வொன்றாகப் புஜிக்கவேண்டும். வாய்கொண்டதுபோக மிகுந்த உருண்டையானது தனது எச்சிலென்று சொல்லப்படுகிறது. உருண்டையில் மிச்சமாகவுள்ளதும் வாயிலிருந்து வெளியில் வந்ததும் புஜிக்கத்தகாதவையென்று அறியவேண்டும். புஜித்தால் [1] சாந்திராயணத்தைச் செய்யவேண்டும். தன் உச்சிஷ்டத்தைப் புஜிப்பவனும் (வேண்டாமென்று ஒதுக்கி) விடப்பட்ட போஜனத்தைப் புஜிப்பவனும் சாந்திராயணத்தையாவது பிராஜாபத்யமென்னும் கிருச்ரத்தையாவது அனுஷ்டிக்கவேண்டும். ஸ்திரீ

1 இந்தப் பர்வம் 112வது அத்யாயத்தில் காண்க.

களுடைய கலத்தில் புஜிப்பவனும் ஸ்திரீகளுடைய எச்சிலைப் புஜிப்பவனுமான மனிதன் பாவியாவான். அவளுடன் புஜிப்பவன் கள்ளையே புஜிப்பவனாகிறான். உண்மையைக்கண்ட முனிவர்கள் அவனுக்குப் பிராயச்சித்தத்தைக் காணவில்லை. பானம்பண்ணும்போது (வாயிலிருந்து) விழுந்தஜலத்தையும் வாயிலிருந்து வெளிப்பட்ட அன்னத்தையும் புஜிக்கக்கூடாதென்று அறியவேண்டும். புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். பாண்டுநந்தனரே! குடித்து மிச்சமான அந்த ஜலத்தைப் பானம்பண்ணக்கூடாது. த்விஜன் அறியாமையால் அதைக் குடித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். த்விஜப்ச்ரேஷ்டன் எந்தப் பாத்திரத்தால் நீரைப் பருகுகிறானோ அது பூமியில் வைக்கப்படாதவரையில் உச்சிஷ்டமன்று. பிராம்மணன் மௌனமாகப் பூமியில் (பார்வையுடன்) திசைகளைப் பாராமல் விதிப்படி புஜிக்கவேண்டும். உச்சிஷ்டத்தை (ப் பிறருக்கு) க் கொடுக்கும்படி செய்யக்கூடாது. எப்பொழுதும் அதிகமான ஆஹாரத்தைப் புஜிக்கக்கூடாது. ஒருபொழுதும் மிகக் குறைவாகவும் புஜிக்கக்கூடாது. ஒவ்வொருநாளும் அன்னத்தால் துன்பமுண்டாகாமலிருக்கும்படி புஜிக்கவேண்டும். புஜிக்கும்போது வீட்டுக்கு விலக்கானவளையாவது சண்டாளனையாவது நாயையாவது பன்றியையாவது பார்த்தால் அந்த அன்னத்தை விலக்கிவிடவேண்டும். இருபிறப்பாளன் அறியாமையால் அதை விலக்காமல் புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். மயிருள்ளதும் புழுவுள்ளதும் வாயால்ஊதப்பட்டதுமான அன்னம் புஜிக்கத்தகாததென்றுஅறியவேண்டும்; புஜித்தால்சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். எழுந்திருந்து மறுபடியும்(புசிப்பதற்காக) தொடப்பட்டதும் பாதத்தால் தொடப்பட்டதும் தாண்டப்பட்டதுமான அன்னத்தை ராக்ஷஸர்களுடையதென்று அறியவேண்டும். ஆகையால், அதை விலக்கவேண்டும். ராக்ஷஸர்களுடைய [1]உச்சிஷ்டத்தைப் புஜிக்கும் பிராம்மணன் முந்தின ஏழு பித்ருக்களையும் பிந்தின ஏழுபித்ருக்களையும் கோரமான ரௌரவமென்னும் நரகத்தில் தள்ளுவான். எந்தப்பாத்திரத்தில் புஜித்தானோ அந்தப்பாத்திரத்தில் ஆசமனம் (=உத்தராபோசனம்) செய்யவேண்டும். புஜித்தவன் ஆசமனம்செய்யாமல் அந்தஆஸனத்திலிருந்து எழுந்திருந்தால் உடனே ஸ்நானம் செய்யவேண்டும். இல்லாவிட்டால் அவன் அசுத்தனாவான்" என்று சொன்னார்.

---

1 மேற்சொன்ன தோஷங்களுள்ள அன்னம்.

யுதிஷ்டிரர், "கௌரவத்தைக் கொடுப்பவரே! த்ருணமுஷ்டியின் விதியையும் த்ருணத்தின் மஹிமையையும் கரும்பிலிருந்து சந்திரனுடைய உத்பத்தியையும் நீர் சொல்லவேண்டும்" என்று வினவ, பகவான் சொல்லலானார். "அரசரே! விருஷபங்களை உலகத்திற்குப் பிதாக்களென்றும் பசுக்களைத் தாய்களென்றும் அறியவேண்டும். அவைகளைப் பூஜித்தால் பித்ருதேவதைகள் பூஜிக்கப்பட்டவர்களாகின்றனர். ஸபையும் தண்ணீர்ச்சாலையும் வீடுகளும் தேவாலயங்களும் எவைகளின் சாணத்தால் சுத்தியாகின்றனவோ அவைகளைவிட மேலான பிராணி ஏது? எவன் ஒருவருஷம் பிறனுடைய பசுவுக்குத் தான் ஆஹாரம்செய்வதற்குமுன் எப்பொழுதும் அதனிடம் சென்று 'பசுக்களெல்லாம் என்னுடைய தாயார்கள். விருஷபங்கள் தகப்பனார்கள். தாயார்களே! என்னால் கொடுக்கப்பட்ட கிராஸமுஷ்டியைப் பெற்றுக்கொள்ளுங்கள்' என்று சொல்லி இந்தமந்திரத்தினாலாவது காயத்திரியினாலாவது ஜாக்கிரதையாக அபிமந்திரித்துக் கிராஸமுஷ்டியைக் கொடுப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். அவன் அறிந்தோ அறியாமலோ செய்த அவனுடைய எல்லாப்பாவமும் தீக்கனவும் நசிக்கின்றன. எள்ளுகள் பரிசுத்தமானவையும் பாவத்தைப்போக்குபவையும் நாராயணரிடமிருந்து உண்டானவையுமாக இருக்கின்றன. ஶ்ராத்தத்தில் எள்ளுகளைப் புகழ்கின்றனர். இந்தத்தானமானது மிக்க உத்தமமானது. எள்ளுகளைக் கொடுக்கவேண்டும். எள்ளுகளைப் புஜிக்கவேண்டும். காலையில் எள்ளுகளைத் தொடவேண்டும். 'திலம், திலம்' என்று சொல்லவேண்டும். அந்த எள்ளுகள் பாவத்தைப் போக்குகின்றவைகளல்லவா? பிராம்மணர்கள் எள்ளை விலைக்குவாங்கியாவது தானம்வாங்கியாவது விற்கக்கூடாது. எள்ளுகளால் போஜனம் அப்யஞ்சனம் தானம் இவைகளைத்தவிர வேறு காரியத்தைச் செய்பவன் நாயின் மலத்தில் புழுவாகஜனித்துப் பித்ருக்களுடன்கூட முழுகுகிறான். மன்னரே! பிராம்மணன் தான் எள்ளுகளைச் செக்கிலிட்டு ஆட்டக்கூடாது. அறியாமையால் ஆட்டும் பிராம்மணன் ரௌரவமென்னும் நரகத்தை அடைகிறான். சந்திரன் கரும்பின் வம்சத்தில் உண்டானவன். பிராம்மணர்கள் சந்திரனுடைய வம்சத்தில் உண்டானவர்கள். ஆகையால், கரும்பைப் பிடிக்கக்கூடாது. கரும்பைப்பிடிப்பவன் தன்னைக்கொல்பவனாகிறான். பிராம்மணன் (கரும்பை) ஆலையிலிட்டுப் பிழிந்தால் [1]ஆயிரம் கருப்

---

1 பல.

பங்கழிகளுக்கும் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு பிரம்மஹத்தியை அடைகிருன். ஆகையால், பிராம்மணஶ்ரேஷ்டன் கரும்பை ஆலையிலிட்டுப் பிடிக்கக்கூடாது ” என்று சொன்னுர்.

---

## நூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்ம பர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர் ஆபத்தர்மத்தையும், புகழத்தக்கவரும் புகழத்தகாதவருமான பிராம்மணர்களின் லக்ஷணத்தையும், பொதுவான தர்மங்களையும், பிராம்மணத்தன்மையைச் சித்திக்கும் முறையையும், குரு ஆசாரியன் உபாத்தியாயன் இவர்களின் லக்ஷணத்தையும் யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

யுதிஷ்டிரர், “ தர்மங்களுடைய ஸமூகத்தையும் புஜிக்கத்தக்கதையும் புஜிக்கத்தகாததையும் உம்முடைய அநுக்ரஹத்தால் நான் கேட்டேன். ஆபத்தர்மத்தை எனக்குச் சொல்லும் ” என்றுவினவ, பகவான் சொல்லலானுர்.

“துர்ப்பிக்ஷகாலத்திலும் தேசத்திற்குத் துன்பம் நேர்ந்திருக்கும்போதும் ஜனனத்தாலும் மரணத்தாலும் உண்டான அசுத்திஸமயத்திலும் தர்மகாலத்திலும் மார்க்கத்திலும் நியமத்தைக் குறைக்கலாம். தூரமானவழிநடந்து களைத்தவன் இருபிறப்பாளன் கிடையாவிடில் சூத்திரனிடமிருந்து அன்னமாகச் செய்யப்படாத ஏதாவது ஒன்றைத் தன்னுடைய உயிரைக்காத்தற்காகப் பெற்றுக்கொள்ளலாம். வியாதியுள்ளவனும் துக்கப்பட்டவனும் துன்பப்படுகிறவனும் பசியுள்ளவனுமான பிராம்மணன் விதியைமீறிப் புஜித்தால் பிராயச்சித்தமுள்ளவனுகான். பிராம்மணன் ஹவ்யகவ்யங்களில் விதிப்படி போஜனத்திற்காகப் பிரார்த்திக்கப்பட்டு மாம்ஸம்முதலானவற்றைப் புஜித்தாலும் பிராயச்சித்தமுள்ளவனுகான். ஜலம், கிழங்கு, நெய், பால், ஹவிஸ், பிராம்மணனுடைய விருப்பம், குருவின்வார்த்தை, மருந்து இவ்வெட்டும் விரதத்தைக் கெடுக்கமாட்டா. பிராயச்சித்தங்களை விதிப்படி செய்யச் சக்தியற்ற மனிதன் வித்வான்களுடைய வசனத்தாலும் தானத்தாலும் சுத்தியடைகிருன். தேசாந்தரம் போயிருந்தவன் ருதுகாலத்திலோ ருதுகாலம்அல்லாதகாலத்திலோ இரவிலோ பகலிலோ மனைவியை அடைந்தால் பிராயச்சித்தமுள்ளவனுகான் ” என்று சொன்னுர்.

யுதிஷ்டிரர், "தேவஸ்ரேஷ்டரே! எப்படிப்பட்ட பிராம்மணர்கள் புகழத்தக்கவர்கள்? எப்படிப்பட்ட பிராம்மணர்கள் நிந்திக்கத் தக்கவர்கள்? நல்ல விரதங்களுள்ளவரே! அஷ்டகைக்குக் காலம் எது? இவற்றை எனக்குச் சொல்லும்" என்றுவினவ, பகவான் சொல்லலானார். "ஸூர்யன் ஸத்யஸந்தனான பிராம்மணனைக் கண்டு, 'இவன் என்னுடைய மண்டலத்தைப் பிளந்துகொண்டு ஸனாதனமான பிரம்மத்தை அடைவான்' என்று தன்னிடத்திலிருந்து சலனமடைகிறான். நற்குலத்தில் பிறந்தவன், கர்மங்களைச் செய்பவன், வித்தையுள்ளவன், நல்லஸ்வபாவமுள்ளவன், [1] பிரம்ம தேஜஸ்உள்ளவன், கபடமற்றவன், உண்மை உரைப்பவன் ஆகிய இந்தப் பிராம்மணர்களெல்லாரும் பாத்திரமானவர்கள். அப்படிப்பட்ட இந்தப் பிராம்மணர்கள் அக்ராஸனத்திலிருந்துகொண்டு முந்திப் புஜித்தால் அந்தப் பந்தியிலுள்ள மற்றவர்களையும் பார்வையினாலேயே பரிசுத்தர்களாகச் செய்கின்றனர். என்னிடத்தில் பக்தியுள்ளவர்களும் என்னையே முக்கிய கதியாகக் கொண்டவர்களும் என்பக்தர்களுமான பிராம்மணஸ்ரேஷ்டர்களைப் பந்திபாவனர்களென்றும் விசேஷமாகப் பூஜிக்கப்படத்தக்கவர்களென்றும் தெரிந்துகொள்ளும். வேந்தரே! வேதத்தின்கரையை அடைந்தவர்களானாலும் பிராம்மணனென்கிற வியாஜத்தால் பாவத்தைச் செய்துகொண்டு உலகத்தில் ஸஞ்சரிக்கும் நிந்திக்கத்தக்க பிராம்மணர்களையும் கேளும். எவன் அக்னிகாரியமில்லாதவனும் அத்தியயனம் செய்யாதவனும் பிரதிக்ரஹத்தில் ஆசையுள்ளவனும் கண்டவிடத்தில் புஜிப்பவனுமாக இருக்கிறானோ அவனைப் பிரம்மதூஷகனென்று அறியவேண்டும். அரசரே! எந்தத்விஜன் மரணாசௌசமும் ஜனனாசௌசமுமுள்ளவர்களின் அன்னத்தால் புஷ்டியடைந்த சரீரமுள்ளவனும் சூத்திரான்னத்தைப் புஜிப்பவனுமாக இருக்கிறானோ அவனுடைய கதியை நானும் அறியேன். தினந்தோறும் அத்யயனம் செய்தாலும் ஜபம்செய்தாலும் ஹோமம்செய்தாலும் சூத்திரான்னத்தின் ரஸத்தால் புஷ்டியடைந்த சரீரமுள்ளவனுக்கு மேலானகதியில்லை. எந்தப் பிராம்மணன் ஆஹிதாக்னியாக இருந்தும் சூத்திரான்னத்தை விலக்கவில்லையோ அவனுக்கு ஆத்மாவும் வேதமும் மூன்று அக்னிகளுமாகிய ஐந்தும் நசிக்கின்றன. சூத்திரனிடத்தில் வேலைசெய்யும் பிராம்மணனுக்கு விசேஷமாகப் பூமியில் அன்னம் போடவேண்டும். அவன் நாய்க்கும் நரிக்கும் ஸமமானவனல்லவா? ஞானசூன்யனான எந்தப் பிராம்

[1] 'ஸ்ரீமான்' என்பது மூலம்.

மணன் இறந்துபோன சூத்திரனைக் கொண்டுபோகும்போது பின் செல்லுகிறானோ அவன் மூன்றிரவு அசுத்தனாவான். மூன்றிரவு பூர்த்தியானபின் ஸமுத்திரகாமியான நதியை அடைந்து (ஸ்நானம் செய்து) நூறு பிராணாயாமம் செய்து நெய்யைப் புஜித்தால் சுத்தியை அடைகிறான். எந்தப் பிராம்மணஶ்ரேஷ்டர்கள் நாதனற்ற பிராம்மணப் பிரேதத்தைத் தூக்குகிறார்களோ அவர்கள் ஒவ்வோர் அடிவைப்பிலும் அஶ்வமேதத்தின் பயனை அடைகின்றனர். நற்காரியத்தைச்செய்த அவர்களுக்குக் கெடுதலாவது பாவமாவது சிறிதும் இல்லை. ஜலத்தில் மூழ்கி ஸ்நானம் செய்வதினாலேயே உடனே சுத்தி விதிக்கப்படுகிறது. ஒழிவடைந்த பிராம்மணன் சூத்திரனுடைய வீட்டில் பாலையோ தயிரையோ அருந்தக்கூடாது. அவற்றையும் சூத்திரான்னமென்றே தெரிந்துகொள்ளும். புஜிக்கவிருப்பமுள்ளவர்களும் மிக்க அன்னத்தை விரும்புகின்றவர்களுமான பிராம்மணர்களுக்கு எந்த மனிதன் இடையூற்றைச் செய்கிறானோ அவனைவிடப் பாவம் செய்தவன் வேறில்லை. அரசரே! நல்லொழுக்கமில்லாத த்விஜனுக்கு ஆறு அங்கங்களுடனும் கூடின எல்லா வேதங்களும் ஸாங்க்யமும் புராணமும் நற்குலத்தில் பிறப்பும் ஆகிய இவையெல்லாம் கதியாகமாட்டா. பாண்டுவின் புத்திரரே! கிரஹணத்திலும் [1]விஷுவத்திலும் [2]அயனத்தின் முடிவிலும் பித்ருகாரியத்திலும் மகநக்ஷத்திரத்திலும் தனக்குப் புத்திரன் பிறந்த பொழுதும் கயையில் பிண்டம் போடும்போதும் கொடுக்கப்பட்டது (சிறிதாயினும்) ஆயிரம் நிஷ்கங்களுக்குச் சமமாகும். வைசாக மாஸத்திய மேன்மைபெற்ற த்ருதியையும், கார்த்திகைமாஸ சுக்லபக்ஷத்திருதியையும், புரட்டாசிமாஸ கிருஷ்ணபக்ஷ த்ரயோதசியும் மாகமாஸத்துப் பூர்ணிமையும் ஸூரிய சந்திரர்களுடைய கிரஹணமும் இரண்டு அயனங்களும் ஶ்ராத்தத்திற்குரிய காலங்கள். இந்தக்காலங்களில் மனிதன் சுத்தனாக இருந்துகொண்டு எள்ளுகளுடன் கலந்த ஜலத்தையாவது பித்ருக்களுக்குக் கொடுக்கவேண்டும். அவன் ஆயிரம் வருஷம் ஶ்ராத்தம் செய்தவனாகிறான். இந்தரஹஸ்யத்தைப் பித்ருக்கள் சொல்லுகின்றனர். எவன் ஸ்நேஹத்தினாலாவது பயத்தினாலாவது தனத்திற்காகவாவது ஒருபந்தியில் வித்தியாஸமாகப் பரிமாறுகிறானோ குரூரனும் கெட்ட நடையுள்ளவனும் புத்தியில்லாதவனுமான அவனைப் பிரம்மஹத்தி

[1], [2] இதன் 337-ம் பக்கம் குறிப்பில் காண்க.

செய்தவனென்று கவிகள் சொல்லுகின்றனர். சிறந்த பகைவரைக் கொல்பவரே! எவர்கள் மிகுதியான தனங்களிருந்தும் (பரலோகத்திற்கு வேண்டியதைச் செய்துகொள்ளாமல்) மூடர்களாயிருந்து கொண்டு எப்பொழுதும் ரமிக்கின்றனரோ, சரீர ஸுகத்தில் ஆசையுள்ள அவர்களுக்கு இந்த உலகமும் வேறுஸுகமுமில்லை. எவர்கள் முக்தர்களும் தவம்செய்கின்றவர்களும் வேதாத்தியயனம் செய்யும் ஸ்வபாவமுள்ளவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களும் பிராணிகளின் நன்மையில் முயற்சியுள்ளவர்களுமாக இருந்துகொண்டு சரீரத்தை ஜரையடையும்படி செய்கிறார்களோ அவர்களுக்கு இவ்வுலகமும் பரலோகமும் உண்டு. எந்த மூடர்கள் வித்தையைக் கற்காமலும் தவம் புரியாமலும் தானம் செய்யாமலும் புத்திரனை அடைய முயலாமலும் ஸுகங்களையும் போகங்களையும் அடையாமலும் இருக்கின்றனரோ அவர்களுக்கு இவ்வுலகமும் இல்லை; பரலோகமும் இல்லை" என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "நாராயணரே! புராணரான ஈசரே! உலகங்களுக்கு இருப்பிடமாக இருப்பவரே! உமக்கு நமஸ்காரம். சிறந்த தர்மங்களின் ஸமூகத்தை முழுதும் கேட்க விரும்புகிறேன்" என்று வினவ, பகவான் சொல்லலானார். "பேரறிவாளரே! ஆதியில் மனுவானவர் தர்மத்தின் ஸாரத்தைச் சொல்லியிருக்கிறார். மனுவினால் சொல்லப்பட்டதும் புராணங்களுக்கும் வேதங்களுக்கும் ஒத்ததுமான அதை நான் சொல்லுகிறேன். அக்னிசயனம் செய்தவன், கபிலைப் பசு, ஸத்ரயாகம் செய்தவன், அரசன், ஸந்யாஸி, மஹோததி இவர்கள் தரிசித்தமாத்திரத்தில் பரிசுத்தப்படுத்துகின்றனர். ஆகையால், இவர்களை எப்பொழுதும் பார்க்கவேண்டும். யுதிஷ்டிரரே! பசுவை ஒருவனுக்கே கொடுக்கவேண்டும். அநேகர்களுக்குக் கொடுக்கக் கூடாது. அந்தப்பசுவானது விற்கப்பட்டால் ஏழுதலைமுறைவரையில் குலத்தை எரிக்கிறது. பசுவையும் வஸ்திரத்தையும் படுக்கையையும் ஸ்திரீகளையும் அநேகர்களுக்குக் கொடுக்கக் கூடாது. அப்படிப்பட்ட அந்தத் தான (பல)மானது கொடுத்தவனை அடைகிறதில்லை. சிறியோர்களுடைய வீட்டில் பிராம்மணர்களும் பசுக்களும் வலியவந்து புஜித்தால் அவர்களுடைய அந்தப் புண்ணியமானது ராஜஸூயத்தைவிட மேலானதாகிறது. எவன் 'பிராம்மணர்களுக்கும் பசுக்களுக்கும் கொடுக்க வேண்டாம்' என்று சொல்லுகிறானோ அவன் விலங்குப்பிறவியில் நூறுதரம் பிறந்து பிறகு சண்டாள ஜாதியில் பிறக்கிறான். மன்னரே! பிராம்மணர்களுடைய பொருளை

யும் தேவர்களுடைய பொருளையும் தரித்திரனுடைய பொருளையும் குருவினுடைய பொருளையும் அபஹரித்தால் அவை ஸ்வர்க்கத்தி லிருப்பவர்களாயினும் (கீழே) தள்ளிவிடும். தர்மத்தை அறிய விருப்ப முள்ளவர்களுக்கு வேதமானது மேலான பிரமாணம்; தர்ம சாஸ் திரங்கள் இரண்டாவது பிரமாணம்; உலகத்தின் கொள்கை மூன்று வது பிரமாணம். கிழக்கு ஸமுத்திரம்முதல் மேற்குஸமுத்திரம் வரையில் இமயமலைக்கும் விந்திய பர்வதத்திற்கும் நடுவிலுள்ள பிர தேசத்தை ஆர்யாவர்த்தமென்று சொல்லுகின்றனர். [1] ஸரஸ்வதீ த்ருஷத்வதீ என்னும் தேவநதிகளுக்கு இடையிலுள்ள தேசத்தைத் தேவர்களால் படைக்கப்பட்ட பிரம்மாவர்த்தமென்று சொல்லு கின்றனர். எந்தத் தேசத்தில் எந்த ஆசாரமானது பரம்பரையின் கிரமமாக வந்திருக்கிறதோ அந்தத்தேசத்திலுள்ள (நான்கு) வர் ணங்களுக்கும் மத்தியிலுள்ள (கலப்பு) ஜாதிகளுக்கும் அது ஸதா சாரமென்று சொல்லப்படுகிறது. குருக்ஷேத்ரம் மத்ஸ்யம் பாஞ் சாலம் சூரஸேனம் என்னும் இவை பிரம்மாவர்த்தத்திற்கு அருகி லுள்ளவைகளான பிரம்மரிஷிதேசங்கள். இந்தத் தேசங்களில் பிறந்த பிராம்மணனிடமிருந்து பூமியிலுள்ள எல்லாமனிதர்களும் தம்முடைய ஆசாரத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். இமய மலைக்கும் விந்தியமலைக்கும் இடையில் [2]விநசனத்திற்குக் கிழக்கா கவும் பிரயாகைக்கு மேற்காகவுமுள்ள தேசத்தை மத்யதேச மென்று சொல்லுகின்றனர். எந்த இடத்தில் கிருஷ்ணஸாரமென் னும் மானனது இயற்கையாக ஸஞ்சரிக்கிறதோ அந்தத் தேசத்தை யாகம் செய்வதற்குரியதென்று அறியவேண்டும். இவைகளைவிட மற்றது மிலேச்ச தேசமாகும். இருபிறப்பினர்கள் இந்தத் தேசங் களை அறிந்து அடைய வேண்டும். ஜீவனத்திற்குக் கஷ்டப்படும் சூத்திரனோ எந்தத் தேசத்தில் வேண்டுமானாலும் வஸிக்கலாம். நல் லொழுக்கமும் கொல்லாமையும் ஸத்யமும் சக்திக்குத்தக்கபடி தானமும் [3] நியமங்களும் [4] யமங்களும் முதன்மையான தர்மம். த்வி ஜாதிகளுக்கு வேதத்தில் சொல்லப்பட்டவைகளும் புண்ணியமு மான கர்மங்களால் நிஷேகம்முதலான சரீரஸம்ஸ்காரங்களைச் செய்ய வேண்டும். அது இவ்வுலகிலும் இறந்தபின்னும் பரிசுத்தகரமானது.

---

1 'ஸரஸ்வதி' என்று மாற்றப்பட்டது.

2 விநசனம் என்று மாற்றப்பட்டது. ஸரஸ்வதி நதி மறைந்த இடம் என்பது மனுஸ்மிருதி; சல்ய பர்வம் 174-ம் பக்கம் பார்க்க.

3, 4 அநுசாஸன பர்வம் 790-ம் பக்கம் குறிப்பில் காண்க.

கர்ப்பஹோமங்கள், ஜாதகர்மம், நாமகரணம், சௌளம், உபநயனம், வேதாத்தியயனம், அதற்குரிய விரதங்கள், விவாஹம், ஸ்நாதகவிரதம், மஹாயஜ்ஞங்கள், யாகங்கள் இவைகளால் சரீரமானது பிராம்மண சரீரமாகச் செய்யப்படுகிறது. தர்மார்த்தங்கள் கிடைக்காவிட்டாலும் அப்படிப்பட்ட பணிவிடை கிடைக்காவிட்டாலும், களர் நிலத்தில் விதைவிதைக்கக் கூடாததுபோல, அவனிடத்தில் வித்தையை உபதேசிக்கக்கூடாது. லௌகிகமானஞானமோ வைதிகஞானமோ அத்யாத்மஞானமோ எவனிடமிருந்து அடையப்பட்டதோ அவனை முந்தி அபிவாதனம்செய்ய வேண்டும். தனது இடக்கையினால் குருவினுடைய இடக்காலையும் வலக்கையினால் வலக்காலையும் பிடித்துக்கொண்டு அபிவாதனம் செய்யவேண்டும். ஒரு கையினால் குருவுக்குப் பாத வந்தனம் செய்யக்கூடாது. எந்த ப்ராம்மணன் விதிப்படி (உத்பத்திக்குக்காரணமான) நிஷேக முதலான கர்மங்களைச் செய்து பிறந்தபின் இவனுக்கு அத்தியயனமும் செய்விக்கிறானோ அவன் குரு என்று சொல்லப்படுகிறான். எவன் உபநயனம் செய்து தினந்தோறும் வேதங்களையும் கல்பங்களையும் ரஹஸ்யங்களையும் அத்தியயனம் செய்விக்கிறானோ அவன் உபாத்தியாயன் என்று சொல்லப்படுகிறான். எவன் அங்கங்களுடன் கூடின வேதங்களை அத்தியயனம் செய்வித்து விரதங்களையும் கற்பித்து மந்திரார்த்தங்களையும் உபதேசிக்கிறானோ அவன் ஆசாரியனென்று சொல்லப்படுகிறான். ஆசார்யன் பத்து உபாத்தியாயர்களுக்குச் சமமானவன். பிதாவானவன் நூறு ஆசார்யர்களுக்குச் சமமானவன். மாதாவானவள் பிதாவைவிட நூறுமடங்கு கௌரவமுள்ளவள். இவர்களெல்லாரிலும் ஞானத்தைக்கொடுக்கும் குருவானவன் மிக்க மேலானவன். குருவைவிட மிக்கமேலான வஸ்து ஒன்றும் உண்டானதுமில்லை; உண்டாகப் போகிறதுமில்லை. ஆகையால், அவர்களுக்கு வசப்பட்டவனாக இருக்கவேண்டும். பணிவிடைசெய்வதில் நோக்கமுள்ளவனாக இருக்கவேண்டும். அவர்களை அவமதித்தால் நரகம் கிடைக்கும்; ஸந்தேகமில்லை. அவயவக்குறைவுள்ளவர்களையும் அதிகமான அவயவமுள்ளவர்களையும் வித்தையில்லாதவர்களையும் பிராயமுதிர்ந்தவர்களையும் அழகில்லாதவர்களையும் தனமற்றவர்களையும் ஜாதிக்குறைவுள்ளவர்களையும் நிந்திக்கக் கூடாது. நிந்திப்பவன் செய்தபுண்யம் நிந்திக்கப்படுகிறவனையும் நிந்திக்கப்படுகிறவனுடைய பாவம் நிந்திப்பவனையும் அடைகின்றன. நாஸ்திகத்தன்மையையும் வேதநிந்தையையும் தேவதைகளின் நிந்தை

யையும் த்வேஷத்தையும் டம்பத்தையும் மானத்தையும் கோபத்தையும் குரூரத்தன்மையையும் விடவேண்டும்" என்று சொன்னார்.

---

## நூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)

**(கிருஷ்ணர், அக்னியின் படைப்பையும் ஆஹவநீய முதலான பாதுபாடுகளையும் அக்னியின் பெயர்களையும் யாகாக்னி ஹோத்ரத்தையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், "ஹ்ருஷீகேசரே! தேவரே! உம்முடைய பக்தனும் தர்மத்தையும் அதர்மத்தையும் அறியாதவனும் வினவுகின்றவனுமான எனக்கு மிக்க புண்ணியமான தர்மத்தைச் சொல்லும்" என்று வினவினார். பகவான், "மூன்று வர்ணங்களுக்காகப் படைக்கப்பட்ட அக்னிஹோத்திரத்தை மந்திரத்துடன் ஹோமம் செய்து விதிப்படி நன்கு உபாஸித்தால் அது ஆஹிதாக்னியை மனைவியினுடனும் பந்துக்களுடனும் மேலானகதியை அடைவிக்கிறது" என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "தேவரே! தேவதேவர்களுக்கும் ஈசரே! அதைப் பிராம்மணர்கள் எப்படி ஹோமம் செய்யவேண்டும்? க்ஷத்ரியர்கள் எப்படி ஹோமம் செய்யவேண்டும்? வைஸ்யர்கள் எவ்விதம் ஹோமம்செய்யவேண்டும்? எவ்விதம் நன்குஹோமம்செய்யப்பட்டதாகும்? தேவஸ்ரேஷ்டரே! எவன் எந்தக்காலத்தில் எவ்விதம் அக்னியை ஆதானம்செய்யவேண்டும்? ஆதானம் செய்யப்பட்ட அக்னியை எவ்விதம் நன்கு வழிபடவேண்டும்? பிரபுவே! அக்னிகள் எத்தனை? எவ்விதஸ்வரூபமுள்ளவைகள்? எதற்கு எது ஸ்தானம்? அக்னிஹோத்ரம் செய்பவன் எந்தஸ்தானத்தில் ஹோமம்செய்தால் எதை அடைவான்? குற்றமற்றவரே! முன்பு அக்னிஹோத்ரத்திற்கு என்னகாரணம் உண்டாயிற்று. எவ்விதம் ஹோமங்கள் செய்யப்படுகின்றன? தேவர்கள் எவ்விதம் த்ருப்தி அடைகின்றனர்? பேசுகிறவர்களுள் சிறந்தவரே! விதிப்படி மந்திரமுள்ளதாகச்செய்து எவ்விதம் பூஜிக்கப்பட்ட அக்னிகள் அக்னிஹோத்ரம் செய்தவர்களை எந்தக்கதியை அடையச்செய்கின்றன? பகவானே! கேசவரே! மூன்று அக்னிகளையும் (மஹிமையைத்) தெரிந்துகொள்ளாமல் கெடுதலாக ஹோமம் செய்தாலும் கெடுதலாக

உபாஸித்தாலும் அவைகள் ஆஹிதாக்னிக்கு என்னசெய்கின்றன? தேவரே! அக்னிநசித்தவனான பாபாத்மாவானவன் எந்தப் பிறப்பை அடைகிறான்? எல்லாவற்றையும் அறிந்தவரே! பக்தியுடன் சரணமடைந்த எனக்கு இவற்றையெல்லாம் நீர் சுருக்கமாகச் சொல்ல வேண்டும். எல்லாரிலும் சிறந்தவரே! உமக்கு நமஸ்காரம்" என்று வினவ, பகவான் சொல்லலானார்.

'அரசரே! மிக்க புண்ணியமும் சிறந்ததுமான இந்தத் தர்மமாகிற அமிருதத்தைக் கேளும். இது முயற்சியுள்ளவர்களும் அக்னிஹோத்ரிகளுமான பிராம்மணர்களைத் தாண்டுவிக்கின்றது. சிறந்த காந்தியுள்ளவரே! நான் ஆதியில் பிரம்மாவாக இருந்து கொண்டு உலகங்களைப் படைத்தேன். உலகங்களுக்கு நன்மையைக்கருதி முதலில் முகத்திலிருந்து அக்னியைப் படைத்தேன். அவன் என்னால் எல்லாப்பூதங்களுக்கும் முந்திப் படைக்கப்பட்டபடியால் புராணத்தை அறிந்தவர்களான வித்வான்களால் அக்னியென்று சொல்லப்பட்டான். எல்லாக்கர்மங்களிலும் ஜ்வலிக்கின்ற இவனுக்கு முதலில் ஆஹுதி கொடுக்கப்படுகிறது. ஆகையால், அக்னியென்று சொல்லப்படுகிறான். மன்னரே! இவன் நன்கு பூஜிக்கப்பட்டவனாகிப் பிராம்மணர்களை [1] அக்ர கதியை அடையச் செய்கிறான். அப்படி அடையச்செய்வதாலும் தேவர்களில் அக்னியென்று சொல்லப்படுகிறான். நரஶ்ரேஷ்டரே! அந்த அக்னியானவன் கெடுதலாக ஹோமம் செய்யப்பட்டால் க்ஷணத்தில் யஜமானனைப் பக்ஷிக்கச் சக்தியுள்ளவன். அதனால், அக்னியானவன் [2]க்ரவ்யாதனென்று கருதப்பட்டான். அரசரே! எல்லாப் பூதஸ்வரூபியும் தேவர்களுக்கு முகமாகஇருப்பவனும் பசனம்செய்பவனும் பிரபுவுமான இவன் முதலில் என்முகத்திலிருந்து உலகங்களுக்காகப் படைக்கப்பட்டான். இவன் முற்காலத்தில் படைக்கப்பட்டவுடன் உலகத்தையெல்லாம் பக்ஷிக்கவிரும்பினான். பிறகு, நான் முற்காலத்தில் அந்த அக்னியை நெருங்கிப் பழகியே தணியச்செய்தேன். எப்பொழுதும் உபாஸித்தபடியால் இந்த அக்னி ஔபாஸனன் என்று கருதப்பட்டான். எல்லாவற்றையும் சொல்லுவதனால் ஆஹுதி என்று சொல்லப்படுகிறது. அந்த அக்னி அந்த ஆஹுதியில் வஸிக்கிறான். வஸிப்பதனால் அந்த அக்னி பிரம்மவாதிகளால் ஆவஸத்யனென்று சொல்லப்பட்டான். எவனுக்கு அந்த

1 அக்ரம் = சிறந்தது.

2 மாம்ஸத்தைப் புஜிப்பவன்.

அக்னியால் பஞ்சமஹாயஜ்ஞங்கள் முறைப்படி நடக்கின்றனவோ அந்த இருபிறப்பாளனுக்குச் சந்திரமண்டலத்தின் நடுவால் கதியானது ஏற்படுகிறது. அந்த ஸப்தரிஷிகளும் ஸித்தர்களும் இந்திரியங்களையும் புத்தியையும் அடக்கி அக்னியை அர்ச்சிப்பதிலேயே மனத்தைச் செலுத்தினவர்களாக இருந்து தேவஸாயுஜ்யத்தை அடைந்தார்கள். மற்றும் சிலர் ஆவஸத்யத்தையும் பசனாக்னியென்று சொல்லுகின்றனர். அந்த அக்னியில் பஞ்சமஹாயஜ்ஞங்களும் வைஸ்வதேவமும் நடக்கின்றன. ஸ்தாலீபாகமும் க்ருஹகார்யமும் எல்லாம் அதில் நிலைபெற்றிருக்கின்றன. க்ருஹத்தின் கார்யத்தை வஹிப்பதால் அவன் க்ருஹபதியாகிறான். சிலப்ரம்மவித்துக்கள் (அக்னியை) ஔபாஸனம் ஆவஸத்யம் ஸப்யம் பசனாக்னி என்று சொல்லுகின்றனர். இது எனக்கும் ஸம்மதமே. வேந்தரே! குணத்திற்குரிய பெயருள்ள மூன்று அக்னிகளின் அக்னிஹோத்ர முறையையும் நான் சொல்லுகிறேன். ஸாவதானமாகக் கேளும். க்ருஹங்களுக்குப் பதியாகஇருப்பது க்ருஹபத்யமென்று கருதப்பட்டது. எவனுக்குக் க்ருஹபத்யம் ஏற்பட்டதோ அதனால் அவனுக்குக் கார்ஹபத்யதை ஏற்படுகிறது. யஜமானனைத் தக்ஷிணகதியை அடைவிப்பதால் தக்ஷிணபாகத்தை இடமாகக் கொண்ட அதைப் பிராம்மணர்கள் தக்ஷிணாக்னியென்று சொல்லுகின்றனர். ஆஹூதியென்பது எல்லாம் என்பதைச் சொல்லுகிறது. ஹவ்யம் என்பது வஹிக்கை (= சுமத்தல்) என்று கருத்துள்ளது. எல்லாஹவ்யங்களையும் வஹிக்கும் அக்னியானவன் ஆஹவனீயனாக இருக்கையை அடைந்தான். த்விஜன்வீட்டிலுள்ள எந்த மூலாக்னியில் விதிப்படி ஹோமம் செய்கிறானோ அந்த ஆவஸத்யமென்னும் அக்னியைப் பசனாக்னியென்று சொல்லுகின்றனர். அவைகளுள் ஸபையை அடைந்த அக்னியானது ஸப்யமென்று சொல்லப்படுகிறது. ஆவஸத்யமென்னும் அக்னியானது முதன்மையான பிரஜாதிபதியாகிறது. கார்ஹபத்யமென்னும் அக்னியானது பிரம்மாவாகிறது. அது அவரிடத்திலே உண்டானதன்றோ? தக்ஷிணாக்னியானது ருத்திரர். அது கோபஸ்வபாவமுள்ளதும் க்ரூரமுமாக இருக்கிறது. நான் ஆஹவனீயமென்னும் அக்னி. ஹோமம், தொடங்கி முடியும் வரையிலும் இதன்முகத்தில் செய்யப்படுகிறது. அரசரே! ஐந்தாவதான ஸப்யமென்னும் அக்னியானது ஸுப்ரமணியனே. ப்ருதிவீ கார்ஹபத்யாக்னி. அந்தரிக்ஷம் தக்ஷிணாக்னி. ஸ்வர்க்கம் ஆஹவனீயாக்னி. இவ்விதம் மூன்று அக்னிகள் கருதப்பட்டிருக்

கின்றன. பூமியானது வட்டமாக இருப்பதால் கார்ஹபத்யாக்னி வட்டமாக இருக்கிறது. தக்ஷிணாக்னியானது அர்த்தசந்திரன் போன்ற வடிவமுள்ளதாக இருக்கும். மன்னனே! ஸ்வர்க்கமானது நான்கு கோணங்களுள்ளதும் நிர்மலமும் வியாதியற்றதுமாக இருப்பதால் ஆஹவனீயாக்னியானது நான்கு கோணங்களுள்ளதாகும். கார்ஹபத்யத்தில் ஹோமம் செய்யும் த்விஜன் பூமியை ஜயிக்கிறான். எவன் தக்ஷிணாக்கினியில் ஹோமஞ்செய்கிறானோ அவன் அந்தரிக்ஷத்தை ஜயிக்கிறான். எந்தமனிதன் பக்தியுள்ளவனாக ஆஹவனீயத்தில் ஹோமம் செய்கிறானோ அவன் ரிஷிகணங்களுடன் பூமியையும் அந்தரிக்ஷத்தையும் ஸ்வர்க்கத்தையும் ஜயிக்கிறான். யாகங்களில் ஹோமமானது (தன்னிடத்தில்) அபிமுகமாக நடப்பதாலும் மிக்க காந்தியுள்ள அக்னியானது ஆஹவனீயமாக இருக்கையை அடைகிறது. அக்னிஹோத்திரங்களிலும் யஜ்ஞங்களிலும் ஹோமம் தொடங்கியதுமுதல் முடிவுவரையில் எல்லாம் அதில் நடப்பதாலும் அது ஆஹவனீயமாகிறது. எந்தத்விஜன் விதிப்படி மூலாக்னியான ஆவஸத்யத்தில் ஹோமம் செய்கிறானோ அவன் மனைவியுடன் ஸப்த ரிஷிலோகங்களில் மகிழ்கின்றான். (யஜமானன்) எல்லாஅக்னிகளிலும் யாகம் செய்தவனாகிறான். ஆகையால், அது அக்னிஹோத்ரமாகிறது. யஜமானனைக் காப்பாற்றுவதாலும் அக்னிஹோத்ரம் என்று கருதப்படுகிறது. யாகங்களில், 'ஹோர' என்பதற்கு, 'விஷாதம்' என்றுபொருள். 'விஷாதம்' என்பதற்கு 'துக்கம்' என்று பொருள் கூறப்படுகிறது. துக்கமென்பது தாபத்ரயமென்று சொல்லப்பட்டிருக்கிறது. தாபமென்பதை நரகமென்று கருதுகின்றனர். ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும் இவை தாபத்ரயமென்று ஆத்மாவை அறிந்தவர்கள் சொல்லியிருக்கின்றனர். விதிப்படி ஹோமம் செய்யப்பட்ட அக்னியானது யஜமானனை (ஹோரஎன்னும்) துக்கத்திலிருந்து (த்ராயதே) காப்பாற்றுவதனால் அது அக்னிஹோத்ரமென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அக்னிஹோத்ரமானது லோககர்த்தாவான பிரம்மாவினால் படைக்கப்பட்டது. வேதங்கள் அக்னிஹோத்ரத்தைக் கருதியே தாமே (பிரம்மாவின் முயற்சியில்லாமலே) உண்டாயின. வேதங்கள் அக்னிஹோத்ரத்தைப் பயனாகக் கொண்டவை. சாஸ்திரமானது நல்லஸ்வபாவத்தையும் நல்லொழுக்கத்தையும் பயனாகக் கொண்டது. மனைவியானவள் ரதியையும் புத்திரனையும் பயனாகக்கொண்டவள். தனமானது கொடுப்பதையும் புஜிப்பதையும் பயனாகக் கொண்டது.

அக்னிஹோத்ரமானது மூன்று வேதங்களிலுமுள்ள மந்திரங்களின் சேர்க்கையால் நடைபெறுகிறது ; ஸூத்ரங்களுடன்கூடினவை களும் புண்யங்களுமான ருக், யஜுஸ், ஸாமம் என்னும் வேதங்க ளால் ஸ்தாபிக்கப்படுகிறது. அரசரே ! பிராம்மணன் வஸந்தகாலத் தில் அக்னியை ஆதானம் செய்துகொள்ளவேண்டும். வஸந்த ருதுவைப் பிராம்மணனென்று அறியவேண்டும். அது வேதத்திற் குக் காரணமென்று சொல்லப்படுகிறது. பாபமற்றவரே ! எவன் வஸந்த ருதுவில் அக்னியை ஆதானம் செய்கிறானோ அந்தப் பிராம் மணனுக்குத் தேஜஸும் வேதத்தின் வ்ருத்தியும் வளர்கின்றன. அரசரே ! க்ஷத்திரியன் க்ரீஷ்மருதுவில் அக்னி ஆதானம் செய்வது சிறந்ததாகும். எவன் க்ரீஷ்மருதுவில் அக்னி ஆதானம் செய்கிறானோ அவனுக்கு ஸ்ரீயும் பிரஜைகளும் பசுக்களும் தனமும் தேஜஸும் பலமும் புகழும் விருத்தியடைகின்றன. வைஸ்யன் சரத்ருது வில் அக்னியை ஆதானம் செய்யவேண்டும். சரத்காலத்து இரு வானது ஸ்வயம் வைஸ்யன். அது வைஸ்யனுக்குக் காரணமென்று சொல்லப்படுகிறது. பாண்டவரே! எவன் இவ்விதம் சரத்ருதுவில் அக்னியாதானம் செய்கிறானோ அவனுக்கும் காந்தியும் பிரஜையும் ஆயுளும் பசுக்களும் தனமும் வ்ருத்தியடைகின்றன. பசுக்களென் னும் இவையெல்லாம் மூன்று வகுப்பான எல்லாராலும் அலங்கரிக் கப்பட்டு அக்னிஹோத்ரங்களாயின. அவைகளாலேயே உலக மானது தரிக்கப்படுகிறது. கிராமங்களிலுண்டான பசுக்களும் அரண்யங்களிலுண்டான பசுக்களும் மரங்களும் புற்களும் கனி களும் ஓஷதிகளும் அக்னிஹோத்திரத்திற்கு ஹவிஸாக இருக் கின்றன. ரஸங்களும் (எண்ணெய் முதலிய ஸ்நேஹங்களும்) கந்தங் களும் [1] ரத்தினங்களும் [2] மணிகளும் ஸுவர்ணங்களும் (மற்ற) உலோஹங்களும் அக்னிஹோத்திரத்திற்காக உண்டாயின. ஆயுர் வேதமும் தனுர்வேதமும் மீமாம்ஸையும் நியாயசாஸ்திரமும் தர்ம சாஸ்திரமுமாகிய இவையெல்லாம் அக்னிஹோத்திரத்திற்காகப் படைக்கப்பட்டன. சந்தஸும் சிக்ஷையும் கல்பமும் வியாகரணங் களும் ஜ்யோதிஷ்ஸாஸ்திரமும் நிருக்தமும் அக்னிஹோத்திரத்திற் காகப் படைக்கப்பட்டன. இதிஹாஸங்களும் புராணங்களும் காதை களும் உபநிஷத்தும் அதர்வவேதத்தில் சொல்லிய கர்மங்களும் அக்னிஹோத்திரத்திற்காகப் படைக்கப்பட்டன. மற்றும் இப்புவியி லுள்ள ஸ்தாவரஜங்கமங்களான வஸ்துக்களெல்லாம் பிரம்மதேவ

1 கல்வகைகள், 2 முத்து முதலியன.

ரால் அக்னிஹோத்திரத்திற்காகப் படைக்கப்பட்டன. பாவமற்றவரே! அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், யூபேஷ்டி, பசுபந்தம், ஸோம பானமென்னும் கிரியையுள்ள யாகங்கள் ஆகிய இவைகளுக்குரிய திதி, நக்ஷத்திரம், யோகம், முகூர்த்தம், கரணம் என்னும் காலத்தை அறிவதற்காக முன்பு ஜ்யோதிஷஶாஸ்திரம் ஏற்பட்டது. ஒவ்வோ ரிடங்களிலும் வேற்றுமையுள்ள ருக் யஜுஸ் ஸாம மந்திரங்களின் ஶ்லோகங்களின் தத்வார்த்தத்தை அறிவதற்காக, சந்தஶ்ஶாஸ்திரம் ஏற்படுத்தப்பட்டது. உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள், பதம், அர்த்தம் இவைகளுக்குச் சொல்லப்பட்ட ஸந்திகளின் லக்ஷணத்திற்காகவும் நாமங்கள் தாதுக்கள் இவைகளின் பகுத்தறிவுக்காகவும் முன்பு வியாகரணம் கருதப்பட்டது. யூபம், வேதி, யாகம் இவைகளுக்காகவும் புரோக்ஷணம் [1] ப்ரபணம் இவைகளுக்காகவும் யாகதேவதைகளின் சேர்க்கைக்காகவும் சிக்ஷாசாஸ்திரம் ஏற்படுத்தப் பட்டது. யஜ்ஞபாத்திரங்களின் சுத்திக்காகவும் திரவ்யங்களைச் சேகரிப்பதற்காகவும் எல்லாயஜ்ஞங்களுடைய விகல்பத்திற்காகவும், முன்னர், கல்பம் ஏற்படுத்தப்பட்டது. எல்லா வேதங்களிலும் சொல்லப்பட்ட பெயர் வினைவிகல்பங்களின் உண்மையான அர்த்தத்தை நிச்சயிப்பதற்காகநிருக்தமானது ரிஷிகளால் செய்யப்பட்டது. வேதிக்காகவும் ஸாமக்ரிகளுக்காகவும் பூமி ஸ்ருஷ்டிக்கப்பட்டது. பிரம்மாவானவர் ஸமித்திற்காகவும் யூபத்திற்காகவும் விருக்ஷத்தைப் படைத்தார். க்ராம்யங்களும் ஆரண்யங்களுமான பசுக்களும் யஜ்ஞத்திற்காக உண்டாகின்றன. மந்திரங்களுடைய விநியோகம், [2]ப்ரோக்ஷணம், [3] ஶ்ரபணம். [4] அநுயாஜப்ரயாஜங்கள், மருத்துக்களுடைய [5] சம்ஸிநம், ஸாமங்களைச்சேர்ந்த ஔத்காத்ரம், ப்ரதிப்ரஸ்தானம், விஷ்ணுக்ரமங்களின் ஸஞ்சாரம், தக்ஷிணை, அவப்ருதம் [6] த்ரிகையின் பூஜை, ஸ்தானங்களில் கொண்டுவருவது, தேவதைகளின் ஆவாஹனம், உத்ஸர்ஜனம், ஹவிஸுகளைச் சமைப்பது இவைகளை எந்தப் பிராம்மணர்கள் அறியவில்லையோ, எவர்கள் யாகபசுவின் வதத்தை நிந்திக்கின்றனரோ அந்த நராதமர்கள் கோரமும் இருளால் சூழப்

1 ஶ்ரவணம் என்பது ஶ்ரபணம் என்றுமாற்றப்பட்டது. ஶ்ரபணம் = புரோடாசமுதலியவற்றைச்சமைத்தல்.

2 வதம். 3 சமைப்பது. 4 யாகத்தின் கிரியைகள். 5 ஸ்தோத்ரம்.

6 த்ரிகை = யாகவகை: இது பூர்ணிமைத்ரிகை தர்சத்ரிகை என்று இரண்டு வகைப்படும். அவை ஒவ்வொன்றும்மும் மூன்று வகைப்படும்.

பட்டதுமான ரௌரவமென்னும் நரகத்தை அடைந்து அதில் லக்ஷப் வருஷங்கள் இருந்து புழுக்களால் தின்னப்பட்டுச் சீழிலும் உதிரத்திலும் வஸிப்பார்கள். மரங்கள் யூபமாக இருப்பதற்கும் பசுக்கள் பசுவாக இருப்பதற்கும் த்ருணங்கள் தர்ப்பமாக இருப்பதற்கும் ஓஷதிகள் ஹவிஸாக இருப்பதற்கும் எல்லாக் கொடிகளும் ஸோமமாக இருப்பதற்கும் பூமியானது வேதியாக இருப்பதற்கும் விரும்புகின்றன. பாண்டவரே! பசுக்கள், ஸ்வர்க்கத்தை அடைய விரும்பி யாகத்தில் பசுவாக இருக்க விரும்புவதால் யாகங்களில் பசுக்களைக் கொல்வதில் ஹிம்ஸையில்லை. ராஜரே! யூபங்களும் தர்ப்பங்களும் பசுக்களும் அவற்றிற்குரிய மந்திரஸம்ஸ்காரங்களால் யஜமானனுடன் ஸ்வர்க்கம் செல்லுகின்றன. யாகத்தில் கொல்லப்பட்ட பசுக்கள், விதிப்படி யாகம் செய்தவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப் படுகிறவரையில், மிக்கஸந்தோஷமடைகின்றன. வேதத்தில் சொல்லப்பட்டகர்மம் ஹிம்ஸையன்று. அது பிராம்மணர்களுடைய கர்மமென்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எந்தத்விஜர்கள் வேதத்தில் சொல்லப்பட்டகர்மத்தை ஹிம்ஸையென்கிற எண்ணத்தால் செய்யவில்லையோ அவர்கள் உடனே சூத்திரத்தன்மையை அடைகின்றனர்; இறந்தபின் சண்டாளர்களாகவும் ஆகின்றனர். கோக்கள் யஜ்ஞத்திற்காகவும் தக்ஷிணைக்காகவும், ஸுவர்ணமும் வெள்ளியும் பாத்திரத்திற்காகவும் கும்பத்திற்காகவும் உண்டாயின. பிரம்மாவினால் தர்ப்பங்கள் ஸம்ஸ்தரணத்திற்காகவும் அரக்கர்களிடமிருந்து ரக்ஷிப்பதற்காகவும் பிராம்மணர்கள் யாகம் செய்வதற்காகவும் தேவதைகள் ஸ்வர்க்கத்தில் தாண்டுவிப்பதற்காகவும் க்ஷத்திரியர்கள் ரக்ஷிப்பதற்காகவும் வைஶ்யர்கள் வியாபாரத்திற்காகவும் சூத்திரர்கள் மூன்று வர்ணத்தார்களுக்கும் பணிவிடை செய்வதற்காகவும் படைக்கப்பட்டனர். இவ்விதம் இவ்வுலகமெல்லாம் அக்னிஹோத்திரத்திற்காகப் படைக்கப்பட்டது. எந்தமனிதர்கள் தமஸால் சூழப்பட்டு (இதைத்) தெரிந்துகொள்ளவில்லையோ அவர்கள் ரௌரவமென்று பிரஸித்தி பெற்ற கோரமான நரகத்தை அடைகின்றனர். அவர்கள் ரௌரவத்திலிருந்து விடப்பட்டுப் புழுவாக ஜனிக்கின்றனர். எந்தப் பிராம்மணர்கள் சொல்லப்பட்டபடி அக்னிஹோத்ரங்களுக்குச் சுப்ரூஷை செய்கிறார்களோ அவர்கள் தானம் செய்தவர்களும் நன்கு ஹோமம்செய்தவர்களும் யாகம் செய்தவர்களும் (தக்ஷிணைகளைக்) கொடுத்தவர்களும் ஓதுவித்தவர்களுமாகின்றனர். அரசரே!

இவ்விதம் பிராம்மணர்கள் எந்தயாகத்தையும் 1 பூர்த்தத்தையும் செய்கின்றனரோ அவற்றையெல்லாம் நான் நன்றாக எடுத்து ஸூரியனிடத்தில் வைக்கிறேன். என்னால் ஸூர்யனிடத்தில் ஸ்தாபிக்கப் பட்ட அது உலகத்திற்கு ஸுக்ருதமாக ஆகிறதன்றோ? ஆயிரம் கிரணங்களுள்ள ஸூர்யன் அக்னிஹோத்திரிகளுடைய ஸுக்ருதத்தைத் தரிக்கிறானல்லவா? அக்னிஹோத்ரம் செய்பவர்கள்எவ்வளவு காலம் வரையில் உலகத்திலிருக்கின்றனரோ அவ்வளவுவரையில் புண்யத்தால் ஆகாயத்தில் ஸூர்யன் பிரகாசிக்கிறான். 2 ஸுவர்க்கம் சென்றவர்களுடைய வீரியத்தினால் (=மேன்மையால்) ஸுவர்க்கம் மிகவும் மேன்மையை அடைகிறது. அவர்களோ அவ்விடத்தில் தேவர்களுக்கு ஸமமான ஸ்வரூபமுள்ளவர்களாகி அக்னிஹோத்ரத்தின் அந்தப்பயனை அனுபவித்துக்கொண்டு பூதப்பிரளயம்வரையில் வஸிக்கின்றனர். எந்தச் சிலஅக்னிஹோத்ரிகள் வெறு நெருப்பினால் சுடப்படுகின்றனரோ! அவர்கள் அக்னிஹோத்ரிகளுடைய உலகத்திற்கு மனத்தாலும் செல்லமாட்டார்கள். அவர்கள், வீரர்களைக் கொல்பவர்களும் கெட்டநடையுள்ளவர்களும் தரித்திரர்களும் நராதமர்களும் அங்கஹீனர்களும் வியாதியுள்ளவர்களுமாகச் சூத்திரஜன்மங்களில் பிறக்கின்றனர். அரசரே! ஆகையால், மேலானகதியை விரும்பும் த்விஜாதிகள் தேசாந்தரம் போகாமலிருக்கும்போது எப்பொழுதும் விதிப்படி அக்னிஹோத்திரம் செய்யவேண்டும். யுதிஷ்டிரரே! அக்னிஹோத்திரத்தை ஆத்மாவைப்போல (எண்ணி) அவமதிக்கக் கூடாது. யுதிஷ்டிரரே! இந்த அக்னிஹோத்திரத்தை க்ஷணமும் விடக்கூடாது. யுதிஷ்டிரரே! எந்த த்விஜர்கள் பிராயமுதிர்ந்தகாலத்திலும் விதிப்படி அக்னிஹோத்ரம் செய்துகொண்டு, சூத்திரனுடைய அன்னத்தை விலக்கினவர்களும் மனவடக்கமுள்ளவர்களும் இந்திரியங்களையும் புத்தியையும் நன்கு அடக்கினவர்களும் தினந்தோறும் பஞ்சயஜ்ஞங்களைப் பிரதானமாகக் கொண்டவர்களும் ஆசையும் கோபமும் அற்றவர்களும் இரண்டுகாலங்களிலும் அதிதிகளைப் பக்தியுடன் பூஜிக்கின்றவர்களுமாகஇருக்கின்றார்களோ அவர்களும் ஸூர்யோதயத்திற்கொப்பானவைகளும் வாயுவைப்போன்ற வேகமுள்ளவைகளுமான விமானங்களால் என்னுடைய உலகத்தில் என்னையும் பார்த்துக்கொண்டு ஸந்தோஷிக்கின்றனர். அந்தத்விஜ

1 குளம் முதலிய நீர் நிலைகளமைத்தல், கோயில்கட்டல், அன்னதானம், தோட்டம் வளர்த்தல்,

2 'ஸ்வர்க்கே' என்பது, 'ஸ்வர்க்க' என்று மாற்றப்பட்டது.

ஶ்ரேஷ்டர்கள் அவ்விடத்தில் ஒரு மன்வந்தரம்வரையில் ஸந்தோஷமடைந்து இந்தமானிடலோகத்தில் த்விஜஶ்ரேஷ்டர்களாக ஜனிக்கின்றனர். எவர்கள் பால்யத்திலேயே அக்னியாதானம் செய்து கொண்டு எப்பொழுதும் சூத்திரான்னத்தை விட்டவர்களும் கோபமும் ஆசையும் அற்றவர்களும் பிராதஸ்நானத்தை முக்கியகதியாகக் கொண்டவர்களும் விதிப்படி அக்னிஹோத்ரஹோமம் செய்கின்றவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களும் எப்பொழுதும் அதிதிபூஜைசெய்கின்றவர்களும் சந்திரன்போல இனிய காட்சியுள்ளவர்களும் இரண்டுகாலங்களிலும் என்னை ஆராதிப்பவர்களுமாக இருக்கிறார்களோ அவர்கள் மனைவிகளுடன்கூட ஸூர்யோதயம் போன்ற காந்தியுள்ள விமானங்களால் ஸூர்யமண்டலத்தைப் பிளந்துகொண்டு மீண்டும் திரும்பிவரக்கூடாததான என்னுடையலோகத்தை அடைந்து அங்கு பாலஸூர்யனுக்கொப்பானவர்களும் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவர்களும் இஷ்டமான ஸ்வரூபமுள்ளவர்களும் ஐஶ்வர்யகுணங்கள் நிறைந்தவர்களுமாக ஸுகமாக விளையாடுகின்றனர். பாண்டுநந்தனரே! இந்த ஆஹிதாக்னிகளின் மஹிமை இவ்விதமானது. வேதத்தை நிந்திப்பவர்களான சிலரும் வேதத்தைக் [1] கெடுக்கும்அறிவீனர்களும் அதைப்பிரமாணமாகக் கொள்ளாதவர்களும் இவ்வுலகிலும் கெட்டகதியை அடைகின்றனர். எந்தத்விஜர்கள் இதிஹாஸத்தையும் வேதங்களையும் பிரமாணமாகக் கொள்ளுகின்றனரோ எப்பொழுதும் ஆஸ்திக்ய புத்தியுள்ள அவர்கள் தேவர்களுடைய ஸாயுஜ்யத்தை அடைகின்றனர்' என்று சொன்னார்.

---

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணர் சாந்திராயண விதியையும் அதனை அனுஷ்டிப்பதின் பயனையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், 'சக்ரத்தை ஆயுதமாகக்கொண்டவரே! தேவர்களுக்கு ஈசரே! கருடத்வஜரே! பகவானே! உமக்கு நமஸ்காரம். புண்ணியமான சாந்திராயண விதியை எனக்குச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாண்டவரே! பாவிகள் எதனால் சுத்தியடைவார்களோ எல்லாப்பாவங்களையும் போக்கக்கூடிய அதனை

---

1 தவறாகப் பொருள் கூறுபவர்.

முழுதும் உண்மையாக உமக்குச் சொல்லுகிறேன்; கேளும். பிராம்மணனோ க்ஷத்ரியனோ வைஸ்யனோ விரதங்களை விதிப்படி அனுஷ்டிக்க விரும்பினால் அவன் முதலில் இவ்விதம் செய்யவேண்டும். அவன் அடக்கமுள்ளவனாக இருந்துகொண்டு தன் சரீரத்தைப் பஞ்சகவ்யத்தால் சுத்தம்செய்துகொள்ளவேண்டும். பிறகு, கிருஷ்ணபக்ஷத்தில் தலைக்ஷெளரம் செய்வித்துக்கொள்ளவேண்டும் சுத்தனாகி வெள்ளைவஸ்திரமுடுத்து முஞ்சத்தால் செய்த கயிற்றை அரைஞாணாக அணிந்து பலாசதண்டமெடுத்துக்கொண்டு பிரம்மசர்ய விரதத்தில் இருக்கவேண்டும். த்விஜனானவன் சுக்லபக்ஷம்பிரதமையில் முந்தி உபவாஸமிருந்து நதிகள்சேருகிற இடங்களிலாவது (வேறு) சுத்தமான இடத்திலாவது வீட்டில் கோமயத்தால் மெழுகப்பட்ட மேடையிலாவது அக்னியை வைக்கச் செய்து, ஆகாரம், ஆஜ்யபாகம், ப்ரணவம், வ்யாஹ்ருதி, வாருணம் என்னும் ஐந்து ஹோமங்களையும் எல்லாவற்றையும் கிரமமாகச் செய்து, ஸத்யத்துக்கு விஷ்ணுவுக்கு பிரம்மரிஷிகளுக்கு பிரம்மாவுக்கு விஸ்வேதேவர்களுக்கு பிரஜாபதிக்கு என்று சொல்லி, ஆறு (ஹோமம் செய்து), பிறகு, பிராயச்சித்த ஹோமத்தைச் செய்யவேண்டும். த்விஜன் பிறகு புஷ்டியைப் பிரயோஜனமாகக் கொண்ட சாந்தியைச் செய்து அக்னிகாரியத்தை முடித்து அக்னியையும் ஸோமனையும் நமஸ்கரித்து விதிப்படி பஸ்மத்தைப் பூசிக்கொண்டு நதிக்குச் சென்று பரிசுத்தமான மனத்துடன் ஸோமனுக்கும் வருணனுக்கும் ஆதித்யனுக்கும் நமஸ்காரம் செய்து, பிறகு, ஸாவதானனாக ஸ்நானம் செய்ய வேண்டும். கரையேறித் தீர்த்தத்தை ஆசமனம் செய்து கிழக்கு முகமாக இருந்து கொண்டு பிறகு பிராணாயாமம் செய்து பரிசுத்தமான மந்திரங்களால் அபிஷேகம் செய்துகொண்டு ஆசமனம் செய்து கைகளை உயரத் தூக்கிக்கொண்டு ஸூர்யனைப்பார்க்கவேண்டும். இருகைகளையும் குவித்து நின்றுகொண்டு பிரதக்ஷிணம் செய்யவேண்டும். பிறகு, நாராயண ஸூக்தத்தையாவது ருத்ர ஸூக்தத்தையாவது பிரம்மஸூக்தத்தையாவது வாருணமென்னும் மந்த்ரஸூக்தத்தையாவது போஜனத்திற்கு முந்திச்சொல்லும் ஸூக்தத்தையாவது [1] வீரக்னத்தையாவது ரிஷபத்தையாவது அகமர்ஷணத்தையாவது என்னுடைய காயத்ரிதேவியையாவது ஸாவித்திரியையாவது நூறுதரமாயினும் [2] எண்ணூறுதரமாயினும் ஆயிரம்தரமாயினும் ஜபிக்கவேண்டும். பிறகு, மத்யான்னகாலத்தில் பாயஸத்

1 மந்திரவகைகள். 2 நூற்றெட்டு என்றும் கொள்ளலாம்.

த்தையாவது 1 காராமணியையாவது முயற்சியுடன் சமைக்கும்படி செய்து பரிசுத்தனும் மிக்க ஸாவதானனுமாக இருந்துகொண்டு பொற்பாத்திரத்தையாவது வெள்ளிப்பாத்திரத்தையாவது தாம்ர பாத்திரத்தையாவது மண்பாத்திரத்தையாவது அத்திமரத்தால் செய்யப்பட்டபாத்திரத்தையாவது எடுத்துக்கொண்டாவது யஜ்ஞத்திற்குரிய விருக்ஷங்களின் பச்சையாகவும் நிந்திக்கப்படாதவைகளாகவும் இருக்கும் இலைகளால் செய்யப்பட்டதொன்னையாலாவது அடக்கத்துடன் பிக்ஷையெடுக்கவேண்டும். பிராம்மணர்களுடைய ஏழு வீடுகளுக்குச் செல்லவேண்டும்; அவற்றுக்குமேல் போகக்கூடாது. (ஒவ்வொருவீட்டிலும்) ஒரு பசுக்கறக்குங்காலம்வரையில் மௌனமாகவும் இந்திரியங்களை அடக்கினவனாகவும் நிற்கவேண்டும்; ஸ்திரீயைப் பார்க்கக்கூடாது; சிரிக்கக்கூடாது; பேசக்கூடாது; மூத்திரத்தையும் மலத்தையும் சண்டாளனையும் ரஜஸ்வலையையும் பதிதனையும் நாயையும் கண்டால் ஸூரியனைப் பார்க்கவேண்டும். எந்த த்விஜன் எப்பொழுதும் பாதுகையில் ஏறிக்கொண்டு ஸஞ்சரிப்பனோ பாவச்செய்கையுள்ள அவனைக்கண்டால் ஸூரியனைப் பார்க்கவேண்டும். பிறகு, வீட்டுக்குவந்து பிக்ஷையைப் பூமியில்வைத்துவிட்டு முழங்கால்வரையில் பாதங்களையும் முழங்கைவரையில் கைகளையும் அலம்பிச் 2 சுத்த ஜலத்தால் ஆசமனம்பண்ணி அக்னியையும் பிராம்மணர்களையும் பூஜிக்கவேண்டும். அந்தப்பிக்ஷான்னத்தை 3ஐந்து அல்லது ஏழுபாகங்களாகச்செய்து அவைகளுள் ஓர் உருண்டை அன்னத்தை ஸூரியனுக்கும் (ஒன்றை) பிரம்மாவுக்கும் (ஒன்றை) அக்னிக்கும் (ஒன்றை) ஸோமனுக்கும் (ஒன்றை) வருணனுக்கும் (ஒன்றை) விசவேதேவர்களுக்குமாகக் கிரமமாகக் கொடுக்கவேண்டும். மிச்சமான ஒன்றை வாய்கொள்ளுமளவுள்ள உருண்டையாகச் செய்து விரல்களின் நுனியில்வைத்துக் காயத்ரியால் அபிமந்திரித்துச் சுத்தனுகக் கிழக்குமுகமாகஇருந்துகொண்டு மூன்று விரல்களால் (அந்த) உருண்டையைப் புஜிக்கவேண்டும். சந்திரன் (தினந்தோறும்) வளர்வதும் குறைவதுமாக இருப்பதுபோல் உருண்டைகளும் தினந்தோறும் வளர்வனவும் குறைகின்றனவுமாக இருக்கவேண்டும். அவனுக்கு மூன்று காலங்களாவது இரண்டு காலங்களாவது ஒரு காலமாவது ஸ்நானம் சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மசாரியானவன் எப்பொழுதும் வஸ்திரத்தைப் பிழியக்கூடாது. பகலில்

1 'யாவகம்' என்பதுமூலம்; யவத்தாலாகியகஞ்சி என்றும் கொள்ளலாம்.

2 'தேந' என்பதுமூலம். 3 பின்னே ஏழுக்குச் செலவு சொல்லப்பட்டது.

நின்றுகொண்டிருக்கவேண்டும். இரவில் வீராஸனத்தில் இருக்க வேண்டும் ; அல்லது, மேடையில் சயனம்செய்துகொண்டாவது மரத்தினடியை ஆப்பரயித்தவனுகவாவது இருக்கவேண்டும். பாண்டுநந்தனரே! அவனுக்கு மரப்பட்டையாவது வெண்பட்டாவது சணலால் செய்யப்பட்டதாவது பருத்திபால் செய்யப்பட்டதாவது வஸ்திரத்திற்காக உடுத்துக்கொள்ளக்கூடியதாகும். இவ்விதம் சாந்திராயணமானது பூர்த்தியானவுடன், மாஸத்தின்முடிவில் முயற்சியுள்ளவனுகிப் பக்தியுடன் பிராம்மணர்களுக்குப் போஜனம்செய்வித்துத் தக்ஷிணையும் கொடுக்கவேண்டும். சாந்திராயணத்தை அனுஷ்டித்தால் அவன் செய்தபாவமெல்லாம் அந்தக்ஷணத்திலேயே (அக்னியால்) விறகு நீறுவதுபோல நீறுகிவிடுகிறது. பிரம்மஹத்தியும் கோஹத்தியும் ஸுவர்ணத்தைத்திருடுவதும் ப்ரூணஹத்தியும் கள் குடிப்பதும் குருவின்மனைவியைப் புணர்வதுமான பாவங்களும் இவ்விதம் மற்றுமுள்ள தீயசெயல்களாலாகியபாவங்களும் வாயுவினுல் புழுதிகள் நசிப்பதுபோலச் சாந்திராயணத்தால் நசிக்கின்றன. ஈன்று பத்துநாள்களாகாத பசுவின்பாலையும் ஒட்டகத்தின் பாலையும் செம்மறியாட்டின்பாலையும் [1]ஆசௌசான்னத்தையும் [2]ஸூதகான்னத்தையும் புஜித்தால் சாந்திராயணவ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். [3]உபபாதகியின் அன்னத்தையும் பதிதனுடைய அன்னத்தையும் சூத்திரனுடைய சேஷத்தையும் புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். திறந்தவெளியிலிருப்பதையும் கையிலிருப்பதையும் கீழே விழுந்ததையும் பிறனுடையகையிலிருப்பதையும் புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். இரண்டுதரம் விவாஹம் செய்யப்பட்டவளின்முதற்கணவனுடைய அன்னத்தையும் இரண்டுதரம் விவாஹம்செய்யப்பட்டவளின் இரண்டாங்கணவனுடைய அன்னத்தையும் [4]பரிவேத்தாவின் அன்னத்தையும் [5]பரிவித்தியின் அன்னத்தையும் [6]குண்டனுடைய அன்னத்தையும் [7]கோளகனுடைய அன்னத்தையும் [8]தேவலகனுடைய அன்னத்தையும் புரோஹிதனுடைய அன்னத்தையும் புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். கள்ளையும் மத்யத்தையும் விஷத்தையும் நெய்யையும் அரக்கையும் உப்

1 சாவுத்தீட்டு. 2 பிரஸவத்தீட்டு.

3 மஹாபாதகத்திலும் பாதகத்திலும் குறைந்தபாவத்தைச் செய்தவன்.

4 5, சாந்திபர்வம் 111-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

6 7, இதன் 283-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

8 கோயில்பூஜகன் ; அநுசாஸனபர்வம் 253-ம் பக்கம்பார்க்க.

பையும் எண்ணெயையும் விற்கும் பிராம்மணன் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். ஏகோத்திஷ்டம் புஜிப்பவனும் ஜனங்களுடைய நடுவிலிருந்து (தான்மட்டும்) புஜிப்பவனும் உடைந்தபாத்திரத்தில் புஜிப்பவனுமான த்விஜன் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். உபநயனம் செய்யாதவனுடன் புஜிப்பவனும் ஸ்திரீயுடன் புஜிப்பவனும் கன்னிகையுடன் புஜிப்பவனுமான த்விஜன் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். அறியாமையால் உச்சிஷ்டத்தை வேறு போஜனத்திற்காகவைப்பவனும் அறியாமையால் கொடுப்பவனுமான பிராம்மணன் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். சுரையையும் பீர்க்கங்காயையும் வெங்காயத்தையும் உள்ளிப்பூண்டையும் சதகுப்பையையும் வெள்ளைப்பூண்டையும் புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். த்விஜன் [1]பர்யுஷிதமான அன்னத்தையும் பக்வமாகிப் பிறனுடைய வீட்டிலிருந்துவந்ததையும் பக்வமாகாத மாம்ஸத்தையும் புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். த்விஜர்களுள் உத்தமனான த்விஜன் ரஜஸ்வலையினாலும் நாயினாலும் சண்டாளர்களாலும் பார்க்கப்பட்ட அன்னத்தைப்புஜித்தால் சாந்திராயணத்தை அனுஷ்டிக்கவேண்டும். பாண்டவரே! இந்தவிரதமானது முற்காலத்தில் ரிஷிகளால் பரிசுத்திக்காக அனுஷ்டிக்கப்பட்டதும் எல்லாப்பிராணிகளுக்கும் பரிசுத்தியைச் செய்வதும் புண்ணியமுமாகச் சொல்லப்பட்டது. இதனால், வஸுக்களும் ருத்திரர்களும் ஆதித்யர்களும் ஸ்வர்க்கத்தை அடைந்தனர். மிக்க ரஹஸ்யமும் பவித்ரமும் பாவத்தை அழிப்பதுமான இதை இப்பொழுது (உனக்குச் சொன்னேன்.) பாவத்தைப் போக்கடிக்கக்கூடியதான இதைச் சொன்னபடி எந்தத்விஜன் செய்வனோ அவன் பரிசுத்தமான ஆத்மாவுள்ளவனும் நிர்மலனான ஸூர்யனுக்கொப்பானவனுமாகி ஸ்வர்க்கத்தை அடைகிறான்' என்றுசொன்னார்.

---

1 பழைய சோறு.

## நூற்றுப்பதின்மூன்றாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணர், பன்னிரண்டு மாஸத்திலும் ஒருவேளை புஜிக்கும் முறையையும் அதன் பயனையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

அரசரே! இவ்விதம் கேசவர் சாந்திராயண விதியின் க்ரமத்தைச் சொன்னவுடன், தர்மபுத்திரர் மறுபடியும் மற்றத்தர்மங்களையும் வினவலானார். அவர், "எல்லாப்பிராணிகளுக்கும் பதியே! ஸ்ரீமானே! எல்லாப்பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! எல்லாவற்றையும் அறிந்தவரே! எல்லாப்பிராணிகளுக்கும் ஹிதமான தர்மத்தை எங்களுக்குச் சொல்லும்" என்று வினவ, பகவான் சொல்லலானார். 'யுதிஷ்டிரரே! தரித்திரர்களுக்கும் ஸ்வர்க்கத்தைக்கொடுக்கக்கூடியதும் ஸுகத்தைச் செய்வதும் எல்லாப்பாவங்களையும் போக்குகின்றதுமான தர்மத்தைக் கேளும். கார்த்திகைமுதலான எந்தப் பன்னிரண்டு மாஸங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவைகளில் எல்லாருக்கும் ஒருவேளை போஜனத்தின் நியமத்தை நான் சொல்லுகிறேன். எவன் இந்திரியங்களை அடக்கினவனும் என்னிடத்தில் பக்தியுள்ளவனும் மிக்கஸாவதானமாக ஆதித்யரூபியான என்னை எப்பொழுதும் பூஜிப்பவனும் கோபமும் ஆசையுமற்றவனுமாக இருந்துகொண்டு கார்த்திகைமாஸத்தில் பிரதமைமுதல் ஒருமாஸம் ஒருவேளை புஜிப்பவனும் போஜனம் செய்தபிறகு மத்தியில் ஜலத்தைக்கூட அருந்தாதவனுமாக இருந்து விரதத்தின் முடிவில் பிராம்மணர்களுக்குத் தக்ஷிணைகொடுத்துப் போஜனம் செய்விப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேட்பீராக. விதிப்படி கபிலைப்பசுவைத்தானம்செய்தால் எந்தப்புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப்புண்ணியத்தை அடைந்து ஸூரியலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். காலமானதும், அவ்விடமிருந்து நழுவிப் புருஷர்களுள் (உத்தமனாகப்) பிறக்கிறான். எவன் மார்கழிமாஸத்தில் ஒருவேளை புஜிப்பவனும் காமத்தையும் கோபத்தையும் லோபத்தையும் விலக்கி விதிப்படி ஸ்நானம்செய்து இந்திரியங்களை அடக்கி ஆதித்யஸ்வரூபியான என்னை அர்ச்சிப்பவனும் வாக்கையும் இந்திரியங்களையும் அடக்கி என்னுடையதான காயத்திரியை ஜபிப்பவனுமாக இருந்து மாஸம்முடிந்தவுடன் சுத்தனாகப் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்வித்து என்னிடம் பக்தியுடன் அவர்களைப் பூஜிப்பனோ அவனு

டையபுண்ணியத்தின் பயனைக் கேளும். அவன் அக்னிஹோத்ரம் செய்தஆஹிதாக்னிக்குக் கிடைக்கும் புண்ணியத்தின் பயனை அடைந்து ஆகாயத்தில் விளங்கும் விமானத்துடன் ஸப்தரிஷிகளின் உலகங்களில் இஷ்டப்படி ஸுகமாக (ஸஞ்சரித்து), காலமானதும், அதிலிருந்து நழுவி ஹரிவர்ஷத்தில் பிறந்து அங்கு மிகவும் விளையாடிப் பிறகு ராஜாவாகப் பிறப்பான். ராஜஸ்ரேஷ்டரே! இவ்விதம் எந்த மனிதன் பௌஷ(=தை)மாஸத்தை, ஒரு வேளை புஜிப்பவனும் எப்பொழுதும் என்னிடத்திலேயே மனத்தைச் செலுத்தி என்னையே பூஜிப்பவனும் அஹிம்ஸையும் உண்மையுமுள்ளவனும் கோபமும் ஸந்தோஷமுமற்றவனுமாகப் போக்குவனோ இவ்விதமிருக்கும் அவனுடைய [2] உத்தமமான பயனைக் கேட்கக்கடவீர். அவன் ஆயிரம் பிராம்மணர்களுக்கு ஆதித்யம் செய்தால் எந்தப் புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தை அடைந்து இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். காலமானதும், அதிலிருந்து இறங்கி இலாவர்ஷத்தில் பிறந்து அங்கு வெகுகாலமிருந்து இவ்வுலகில் பிராம்மணனாகப் பிறப்பான். எந்த வித்வான் மாகமாஸத்தில் எப்பொழுதும் ஒருவேளை புஜிப்பவனும் என்னை அர்ச்சிப்பதிலேயே நோக்கமுள்ளவனும் டம்பமும் கோபமுமற்றவனும் என்னுடையதான ஸாவித்திரியை ஸந்தியாகாலத்தில் ஜபிப்பவனும் மூன்றுகாலங்களிலும் ஸ்நானம் செய்பவனுமாக இருந்து முடிவில் பிராம்மணர்களுக்குத் தக்ஷிணைகொடுத்துப் போஜனம் செய்வித்து என்னிடத்தில் சித்தத்தைச்செலுத்திப் பக்தியுடன் அவர்களை நமஸ்கரிப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். அவன் மயில்கள் பூட்டப்பட்டு ஆகாயத்தில் விளங்கும் விமானத்துடன் காந்தியுள்ளவனும் அப்ஸரஸுகளின் கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டவனுமாகிச் சீக்கிரமாகப் பித்ருலோகம் செல்வான்; அங்கு மிகவும் விளையாடிப் பத்ராச்வங்களில் பிறக்கிறான். அவ்விடமிருந்து நழுவிப் பூமியில் நான்கு வேதங்களையும் அத்தியயனம் செய்த பிராம்மணனாகப் பிறக்கிறான். எவன் பால்குனமாஸத்தில் ஒரே வேளை புஜிப்பவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்னும் இந்த மந்திரத்தை எப்பொழுதும் ஜபிப்பவனும் இந்திரியங்களை அடக்கினவனும் என்னைப் பூஜிப்பதிலேயே மனத்தைச் செலுத்தினவனும் கோபமற்றவனுமாக இருந்து விரதத்தின் முடிவில் பிராம்மணர்களுக்குப் பாயஸத்தைப் போஜனம் செய்விக்கிறானோ அவனுடைய புண்ணி

யத்தின் பயனைக் கேட்பீராக. அவன் நக்ஷத்திரத்திற்கொப்பான வடிவமுள்ளவனாகி ஸாரஸபக்ஷிகள் கட்டப்பட்டதும் இஷ்டப்படி செல்வதுமான விமானத்திலேறி நக்ஷத்திரலோகத்தில் மகிழ்வான். காலமானதும், அதிலிருந்தும் நழுவிக் கேதுமாலத்தில் பிறந்து அங்கு இஷ்டப்படி விளையாடி மனிதர்களுள் முனிவராகப் பிறப்பான். அரசரே! எவன் சைத்ரமாஸத்தில் பிரம்மசாரியாக என்னிடம் பக்தியுடன் ஒருவேளை புஜித்துக்கொண்டிருப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக்கேளும். அவன் அக்னிஹோத்ரம் செய்தவனுக்கும் விரதங்களை அனுஷ்டிப்பவனுக்கும் எந்தப் புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தின்பயனை அடைந்து சந்திரலோகத்தில் பூஜிக்கப்பட்டு அங்கிருந்து மீண்டும்இறங்கி ரமணக வர்ஷத்தில்பிறந்து அங்கு இஷ்டங்களை அனுபவித்துப் பிறகு இவ்வுலகில் அரசனாகப் பிறப்பான். எவன் வைசாகமாஸத்தில், 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்றுசொல்லி ஸூர்யனைப்பூஜித்துப் பிராம்மணனைச் சிறந்த ஆஸனத்தில் வைத்துக்கொண்டும் தான் பூமியிலுட்கார்ந்துகொண்டும் மௌனத்துடன் ஒரேவேளை புஜிப்பவனாக இருந்து விரதத்தின் முடிவில் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்விப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேளும். அவன், விதிப்படி செய்யப்பட்ட அக்னிஷ்டோமத்திற்கும் அதிராத்ரத்திற்கும் எந்தப்பயன் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப்புண்ணியத்தின்பயனை அடைந்து தேவலோகத்தில் பூஜிக்கப்பட்டுக் காலக்ரமத்தில்அங்கிருந்து ஹைமவதவருஷத்தில்பிறந்து அங்கு இஷ்டப்படி விளையாடிப் பிறகு பிராம்மணனாகப் பிறப்பான். எந்தப்பிராம்மணன் ஜ்யேஷ்டமாஸத்தில் பிராம்மணனைச் சிறந்த ஆஸனத்தில் வைத்துக்கொண்டும் (தான்) பூமியிலுட்கார்ந்துகொண்டும் விதிப்படி ஒரேவேளை புஜிப்பவனும் ஸாவதானனாக என்னைக்குறித்து 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்று சொல்பவனும் டம்பமும் பொய்யுமற்றவனுமாக இருப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக்கேளும். அவன் சாந்திராயணத்தை நன்கு அனுஷ்டித்தால் எந்தப் புண்யம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்தப் புண்ணியத்தின் பயனை அடைந்து தேவலோகத்தில் பூஜிக்கப்படுவான். பிறகு, அங்கிருந்து வெளிப்பட்டு உத்தரகுருவர்ஷத்தில் பிறப்பான். நாளடைவில் அங்கிருந்தும் நழுவி இவ்வுலகில் பிராம்மணனாகப் பிறப்பான். யுதிஷ்டிரரே! ராஜேந்திரரே! எவன் ஆஷாடமாஸத்தில் ஒருவேளை புஜிப்பவனும் பிரம்மசாரியும் கோபத்தை ஜயித்தவனும்

என்னைப் பூஜிப்பதை முக்கியமாகக் கொண்டவனும் பிராம்மண னைச் சிறந்த ஆஸனத்தில் வைத்துக் கொண்டும் (தான்) தரை யிலிருந்துகொண்டும் பூஜிப்பவனும் இந்திரியங்களை வென்றவனும் அஷ்டாக்ஷரவிதிப்படி மூன்றுகாலம் ஸ்நானம்செய்பவனுமாக இருந்து விரதத்தின் முடிவில் பிராம்மணர்களுக்குப் பாயஸத்தினு லும் சர்க்கரான்னத்தினாலும் போஜனம்செய்விப்பனோ அவனுடைய புண்ணியத்தின்பயனைக் கேளும். பாண்டுநந்தனரே! அவன் நூறு கபிலைப்பசுக்களைத் தானம்செய்தால் எந்தப்புண்ணியமுண்டோ அந் தப்புண்யத்தின் பயனை அடைந்து தேவலோகத்தில் பூஜிக்கப்படு வான். சில காலத்தில் அவ்விடத்திலிருந்து இறங்கிச் சாகத்வீபத்தில் பிறப்பான். சிலகாலத்தில் அவ்விடமிருந்தும் நழுவி இவ்வுலகில் பிராம்மணனாகப் பிறப்பான். எவன், ஶ்ராவணமாஸத்தை, ஒருவே ளை பூஜிப்பவனும் 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்றுசொல்லி எப் பொழுதும் என்னை அர்ச்சிப்பவனும் பிராம்மணனைச் சிறந்த ஆஸ னத்தில் வைத்துக்கொண்டும் (தான்) பூமியிலுட்கார்ந்துகொண்டும் விதிப்படி பூஜிப்பவனும் பாயஸத்தால் பிராம்மணர்களைத் திருப்தி யடைவிப்பவனும் கோபத்தையும் இந்திரியங்களையும் ஜயித்தவனும் ஆசையும் மோஹமுமற்றவனுமாகஇருந்து போக்குவனோ அவ னுடைய புண்ணியத்தின்பயனைக் கேட்பீராக. பாண்டவரே! அவன், விதிப்படி கபிலையைத் தானம்செய்தால் எந்தப் புண்ணியமுண்டோ அந்தப்புண்ணியத்தை அடைந்து இந்திரலோகத்தில் பூஜிக்கப்படு கிறான். சிலகாலத்தில் அவ்விடத்திலிருந்தும்நழுவிக் குசத்வீபத்தில் பிறக்கிறான். அங்கு இஷ்டப்படி விளையாடி மானிடலோகத்தில் பிராம்மணனாகப் பிறக்கிறான். நரஶ்ரேஷ்டரே! எவன் பாத்ரபதமா ஸத்தில் ஒருவேளை பூஜிப்பவனும் பிரம்மசாரியும் கோபத்தை ஜயித்த வனும் ஸத்யஸந்தனும் இந்திரியங்களைஜயித்தவனும் பிராம்மணனைச் சிறந்த ஆஸனத்தில் வைத்து வேற்றுமையுள்ள சமையலின்றிப் போஜனம் செய்வித்து, 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்றுசொல்லி அவனுடையபாதங்களைத் தொடுபவனுமாக இருந்து விரதத்தின் முடிவில் எள்ளுகளையாவது நெய்யையாவது தக்ஷிணையாகக் கொடுப் பனோ என்னுடையபக்தனான அவனுடைய புண்ணியத்தின் பய னைக் கேளும். அவன் விதிப்படிசெய்யப்பட்ட ராஜஸூயத்திற்கும் அஶ்வமேதத்திற்கும் எந்தப்பயன் சொல்லப்பட்டிருக்கிறதோ அந் தப் புண்ணியத்தின்பயனை அடைந்து இந்திரலோகத்தில் பூஜிக்கப் படுகிறான். சிலகாலத்தில் அங்கிருந்துநழுவிக் குபேரனுடைய வீட்

டில் பிறக்கிறான். அங்கு இஷ்டப்படிவிளையாடி மானிடலோகத்தில் அரசனாகப் பிறக்கிறான். எவன் ஆஸ்வயுஜமாஸத்தில் ஒருவேளை புஜிப்பவனும் அந்தராத்மாவை என்னிடம்வைத்துப் பக்தியுடன் என்னுடைய காயத்திரியை இரண்டு ஸந்தியாகாலங்களிலுமாவது மூன்று ஸந்தியாகாலங்களிலுமாவது நூற்றெட்டுத்தரம் ஜபிப்பவனும் பிராம்மணனைச் சிறந்தஆஸனத்தில் இருக்கச்செய்து இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி (ப்போஜனம் செய்விப்பவனுமாக) இருந்து விரதத்தின்முடிவில் பிராம்மணர்களுக்குப் போஜனம்செய்விப்பனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக்கேட்கக்கடவீர். பாண்டுநந்தனரே! அவன், விதிப்படிசெய்த அஸ்வமேதத்திற்கு எந்தப்புண்ணியமுண்டோ அந்தப்புண்ணியத்தின்பயனை அடைந்து என்னுடையலோகத்தில் பூஜிக்கப்படுவான். சிலகாலத்தில் அவ்விடமிருந்து நழுவி ஸ்வேதத்வீபத்தில் பிறப்பான். அவ்விடத்திலும் போகங்களை அனுபவித்துப் பிறகு பிராம்மணஸ்ரேஷ்டனாகப் பிறப்பான்' என்று சொன்னார்.

---

நூற்றுப்பதினான்காவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(கிருஷ்ணர் பன்னிரண்டு மாதங்களின் துவாதசிகளிலும் பன்னிரண்டு மூர்த்திகளையும் பூஜித்து விரதம்செய்வதின்பயனை யுதிஷ்டிரருக்குச் சொல்லியதும், யுதிஷ்டிரர் கிருஷ்ணரைத் துதித்ததும், கிருஷ்ணர் மறுபடியும் ஏகாதசியில் பட்டினியிருந்து துவாதசியில் விஷ்ணுவைப் பூஜிப்பதன்பயனைச் சொல்லியதும்.)**

யுதிஷ்டிரர், 'கேசவரே! எவன் இவ்விதம் ஒருவருஷம்முழுமையையும் ஒருவேளை புஜித்துக்கொண்டிருந்து போக்குவனோ அவனுடைய புண்ணியத்தின் பயனை எனக்குச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாண்டவரே! உண்மையும் உத்தம புண்ணியமுமான என்னுடைய வசனத்தைக் கேளும். இதைச் செய்தாலும் செய்யாவிடினும் (கேட்டமாத்திரத்தில்) மனிதன் பாவங்களால் விடப்படுவான். அரசரே! எந்த மனிதன் ஒருவருஷம் ஒருவேளை புஜிப்பவனும் பிரம்மசாரியும் கோபத்தை ஜயித்தவனும் தரையில் படுப்பவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் ஸ்நானத்தால் சுத்தியுள்ளவனும் அமைதியுள்ளவனும் ஸத்யவாதியும் அஸூயையயற்றவனும் எப்பொழுதும் என்னிடத்தில்சித்தத்தைவைத்து என்னையே அர்

ச்சிப்பவனும் தினந்தோறும் இரண்டுஸந்தியாகாலங்களிலும் என்னு டைய காயத்திரியை ஸாவதானமாகஜபிப்பவனும் 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்றுசொல்லி அடிக்கடி என்னைநமஸ்கரிப்பவனும் பிராம்ம ணனைச் சிறந்தஆஸனத்திலிருக்கச்செய்து (அவனுக்குப்போஜனம் செய்வித்தபின்) [1]காராமணியையாவது பிக்ஷான்னத்தையாவதுமௌ னத்துடன் பூமியிலிருந்து புஜித்து,'நமோஸ்து வாஸுதேவாய'என்று சொல்லி, ஆசமனம்செய்த(அந்தப்) பிராம்மணனுடைய பாதங்களில் வந்தனம் செய்பவனும் ஒவ்வொருமாஸமும் பூர்த்தியானவுடன் சுத் தர்களான பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்விப்பவனுமாக இருந்து வருஷம்பூர்த்தியானவுடன் வெண்ணெயால் செய்யப்பட்ட பசுவையாவது எள்ளினால் செய்யப்பட்ட பசுவையாவது விரத தக்ஷிணையாகக் கொடுத்துப் பிராம்மணர்களுடைய கைகளிலிருந்து விழுந்தவைகளும் ஸுவர்ணத்துடன்கூடினவைகளுமான ஜலங்க ளால் நனைக்கப்படுவனோ அவனுடைய புண்ணியத்தின் பயனை நான் சொல்லுகிறேன்; கேளும். அறிந்தோ அறியாமலோ பத்துஜன் மங்களில்செய்த அவனுடையபாவமானது நசிக்கிறது. இதில் ஆலோ சனை செய்யவேண்டாம்' என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், 'உலகத்தில் எல்லாஉபவாஸங்களுள்ளும் க்ஷேமத் தைக் கொடுப்பதும் மிகச்சிறந்தபயனுள்ளதும் மோக்ஷத்தைக் கொடுப்பதுமான உபவாஸத்தை நீர் சொல்லவேண்டும்'என்றுவினவ, பகவான் சொல்லலானார். 'அரசரே! யுதிஷ்டிரரே! (நீர்) என்னு டன் இஷ்டப்படி நூதனமான ஸந்தோஷத்தை அடையும்வண் ணம் என்னுடைய பக்தரான உமக்குச் சொல்லுகிறேன்; கேளும். மன்னரே! எவன் என்னுடைய பஞ்சமியில் சுத்தனாக இருந்து கொண்டு பக்தியுடன் மூன்றுகாலங்களிலும் என்னைப்பூஜித்து உப வாஸவிரதத்தை அனுஷ்டிப்பனோ அவன் எல்லாயாகங்களின் பயனை யும் அடைந்து என்னுடையலோகத்தில் பூஜிக்கப்படுவான்,' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'பகவானே! தேவதேவர்களுக்குமீசரே! உம்முடைய பஞ்சமியென்பது எது? குற்றமற்றவரே! அதனை நான் கேட்கவிரும்புகிறேன். எனக்குச் சொல்லும்' என்றுவினவ, பக வான் சொல்லலானார். 'வேந்தரே! (மாஸந்தோறும்) இரண்டு பர்வங் களும் இரண்டு துவாதசிகளும் ஶ்ரவணமும் என்னுடைய பஞ்சமி யென்று பிரஸித்தமானவைகள்; விசேஷமாக எனக்குப் பிரியமான

---

[1] 'யாவகம்' என்பது மூலம்

வைகள். ஆகையால், பிராம்மணஶ்ரேஷ்டர்கள் என்னிடத்தில் புத்தியைவைத்து விசேஷமாக என்னுடைய பிரியத்திற்காக உபவாஸம் இருக்கவேண்டும். புருஷஶ்ரேஷ்டரே! சக்தியில்லாதவன் த்வாதசியில்மட்டுமாவது உபவாஸமிருக்கவேண்டும். அதனால், நான் மிக்கபிரீதியை அடைவேன். எவன் மார்கழிமாஸத்து த்வாதசியில் இரவும் பகலும் பட்டினியிருந்து கேசவனான என்னைப் பூஜிப்பனோ அவன் அஶ்வமேதத்தின்பயனை அடைவான். எவன் புஷ்யமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து நாராயணனென்று பெயருள்ள என்னைப் பூஜிப்பனோ அவன் அஶ்வமேதத்தின்பயனை அடைவான். அரசரே! எவன் மாகமாஸத்துத்துவாதசியில் உபவாஸமிருந்து மாதவனான என்னைப் பூஜிப்பனோ அவன் ராஜஸூயயாகத்தின் பயனை அடைவான். மன்னரே! எவன் பால்குனமாஸத்துத்வாதசியில் உபவாஸமிருந்து கோவிந்தனென்று பெயருள்ள என்னைப் பூஜிப்பனோ அவன் அதிராத்ரமென்னும் யாகத்தினுடைய பயனை அடைவான். சித்திரைமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து விஷ்ணுவான என்னைப் பூஜிப்பவன் பௌண்டரீகயாகத்தின்பயனை அடைவான். பாண்டவரே! வைசாகமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து மதுஸூதனனென்று பெயருள்ள என்னைப் பூஜிப்பவன் அக்னிஷ்டோமத்தின்பயனை அடைவான். அரசரே! ஆனிமாஸத்து த்வாதசியில் பட்டினியிருந்து த்ரிவிக்ரமனான என்னைப் பூஜிப்பவன் கோமேதத்தின்பயனை அடைவான். பரதர்களில் சிறந்தவரே! ஆடிமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து வாமனனென்று பெயருள்ள என்னைப் பூஜிப்பவன் நரமேதத்தின்பயனை அடைவான். அரசரே! ஆவணிமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து ஸ்ரீதரனென்றுபெயருள்ள என்னைப் பூஜிப்பவன் பஞ்சயஜ்ஞங்களின்பயனை அடைவான். ராஜரே! புரட்டாசிமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து ஹ்ருஷீகேசனென்றுபெயருள்ள என்னைப் பூஜிப்பவன் ஸௌத்ராமணியின்பயனை அடைவான். ராஜரே! ஐப்பசிமாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து பத்மநாபனென்னும்என்னைப் பூஜிப்பவன் ஆயிரம் கோமேதங்களின்பயனை அடைவான். மன்னவரே! கார்த்திகை மாஸத்து த்வாதசியில் உபவாஸமிருந்து தாமோதரனென்று பெயருள்ள என்னைப் பூஜிப்பவன் எல்லாயாகங்களின் பயனையும் அடைவான். பாண்டுநந்தனரே! வேந்தரே! துவாதசியில் உபவாஸமட்டும் இருந்தால் முன்கூறியபயனில்பாதியை அடைவான். ஶ்ரவணதினத்திலும் இவ்விதமே பக்தியுடன் என்னைப்பூஜிக்கும் மனிதன் என்

னுடைய ஸாலோக்யத்தை அடைவான். இதில் ஆலோசனை செய்ய வேண்டாம். கிரமமாகச் சோம்பலின்றி ஒவ்வொரு மாஸத்திலும் என்னைப்பூஜித்து வருஷம் பூர்த்தியானவுடன் அடுத்தவருஷமும் என்னைப் பூஜிக்கவேண்டும். இவ்விதம் பன்னிரண்டுவருஷம் என்னிடத்தில் பக்தியுள்ளவனும் என்னையே முக்யகதியாகக்கொண்டவனுமாக இடையூறின்றி (என்னை)ப் பூஜிப்பவன் என்னுடைய ஸாயுஜ்யத்தை அடைவான். அரசரே! வேதத்தில் சொல்லப்பட்ட என்னைத் துவாதசியில் பிரீதியுடன் பூஜிப்பவன் முன்கூறியபயனை அடைவான். இதில் ஸம்சயமில்லை. துவாதசியில் சந்தனத்தையாவது புஷ்பத்தையாவது கனியையாவது தீர்த்தத்தையாவது எனக்கு எவன் கொடுப்பனோ அவனுக்கு ஸமமாக எனக்குப்பிரியனானவன் (வேறு) இல்லை. நரஸ்ரேஷ்டரே! இந்திரனை முதன்மையாகக் கொண்டவர்களும் என்னுடைய பக்தர்களுமான எல்லாத்தேவர்களும் இந்தவிதியினால் ஸ்வர்க்கலோகத்தை அனுபவிக்கிறார்கள்' என்று சொன்னார்.

தேவர்களுக்கு ஈசரான கேசவர் இவ்விதம் சொல்லும்போது, பாண்டுநந்தனரான தர்மபுத்திரர் அஞ்சலிசெய்துகொண்டு பக்தியுடன் பின்வருமாறு ஸ்தோத்திரத்தைச் சொல்லலானார். 'எல்லா உலகங்களுக்கும் ஈசரே! தேவர்களுக்கு ஈசரே! ஹ்ருஷீகேசரே! உமக்கு நமஸ்காரம். ஆயிரம் கண்களுள்ளவரே! ஆயிரம்தலைகளுள்ளவரான உமக்கு எப்பொழுதும் நமஸ்காரம். மூன்று வேதஸ்வரூபியே! மூன்றுவேதங்களுக்கும் நாதரே! மூன்று வேதங்களாலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவரே! நமஸ்காரம்; நமஸ்காரம். யஜ்ஞஸ்வரூபியே! யஜ்ஞத்திலிருந்து உண்டானவரே! யஜ்ஞங்களுக்கு நாதரே! நமஸ்காரம்; நமஸ்காரம். நான்கு மூர்த்திகளுள்ளவரே! நான்கு கைகளுள்ளவரே! நான்கு வ்யூகங்களுள்ளவரே! நமஸ்காரம்; நமஸ்காரம். உலகஸ்வரூபியே! உலகங்களைப்படைப்பவரே! நாதரே! உலகங்களுக்கு வாஸஸ்தானமாக இருப்பவரே! நமஸ்காரம்; நமஸ்காரம். நரஸிம்மரே! ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் செய்பவரான உமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம். பக்தர்களிடம் பிரியமுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். கிருஷ்ணரே! நாதரே! நமஸ்காரம்; நமஸ்காரம். உலகங்களுக்குப் பிரியமானவரே! உமக்கு நமஸ்காரம். பக்தவத்ஸலரே! உமக்கு நமஸ்காரம். பிரம்மாவுக்கு வாஸஸ்தானமாக இருப்பவரே! உமக்கு நமஸ்காரம். பிரம்மாவுக்கும் நாதரே! நமஸ்காரம்; நமஸ்காரம். ருத்ரஸ்வரூபியே! உமக்கு நமஸ்காரம். ருத்திரருடைய கர்

மங்களில் ஆசையுள்ள உமக்கு நமஸ்காரம். பஞ்சயஜ்ஞஸ்வரூபியே ! உமக்கு நமஸ்காரம். ஸர்வயஜ்ஞஸ்வரூபியே ! நமஸ்காரம்; நமஸ்காரம். [1] கிருஷ்ணப்பிரியரே! உமக்கு நமஸ்காரம். கிருஷ்ணநாதரே!நமஸ்காரம்; நமஸ்காரம். யோகிகளிடத்தில் பிரியமுள்ளவரே ! உமக்கு நமஸ்காரம். யோகிகளுக்கு நாதரே ! நமஸ்காரம்; நமஸ்காரம். ஹயக்ரீவரே ! உமக்கு நமஸ்காரம். சக்ரத்தைக் கையில் ஏந்தியவரே! நமஸ்காரம் ; நமஸ்காரம். பஞ்சபூதஸ்வரூபியே ! உமக்கு நமஸ்காரம்' ஐந்து ஆயுதங்களைக் கொண்டவரே! நமஸ்காரம் ; நமஸ்காரம். என்று சொன்னார்.

யுதிஷ்டிரர் பக்தியால் தழுதழுத்த வார்த்தையுடன் இவ்விதம் ஸ்தோத்திரம் செய்யும்போது, கேசவர் பிரியமடைந்த மனமுள்ளவராகி அவரைக் கையில்பிடித்துக்கொண்டு தடுத்தார். அரசரே ! தடுத்துவிட்டு, பக்தியினால் வணங்கியவரும் தருமபுத்திரருமான யுதிஷ்டிரரைநோக்கி மறுபடியும் வார்த்தை சொல்லத் தொடங்கினார். 'வேந்தரே ! நரஶ்ரேஷ்டரே ! இது என்ன ? அன்னியனைப்போல என்னை ஸ்தோத்திரம் செய்கிறீரே ; நில்லும். தர்மபுத்ரரே ! முன்போல வினவும்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! உம்முடைய அனுக்ரஹத்தால் அடிக்கடி தர்மத்தை நினைத்து நினைத்து எனக்கு ஓய்வு உண்டாகவில்லை. தேவரே ! என்சித்தமானது நர்த்தனம் செய்கிறதுபோலிருக்கிறது. கிருஷ்ணபக்ஷ த்வாதசியில் நீர் எவ்விதம் பூஜிக்கக்கூடியவராவீர் ? மாதவரே ! தர்மத்துடன்கூடின இதையும் நீர் சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'அரசரே! முன்போல அதையெல்லாம் உமக்குச் சொல்லுகிறேன்; கேட்பீராக. கிருஷ்ணபக்ஷ த்வாதசியில் என்னைப்பூஜித்தால் சிறந்தபயனுண்டு. பக்தியுள்ள மனிதன் ஏகாதசியில் உபவாஸமிருந்து துவாதசியில் என்னைப்பூஜிக்க வேண்டும். கிடைத்தவரையில் பிராம்மணர்களையும் பூஜிக்கவேண்டும். அவன் தக்ஷிணாமூர்த்தியையாவது, என்னையாவது, க்ரஹங்களாலும் நக்ஷத்திரங்களாலும் பூஜிக்கப்பட்டு சந்திரனுடைய ஸாலோக்யத்தையாவது அடைவான்' என்று சொன்னார்.

---

[1] அர்ஜுனன்.

## நூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர் விஷுவபுண்யகாலம், அதில் தானம் செய்தல், காயத்ரீ ஜபம், அரசமரம், பொறுமை இவற்றின் மகிமையையும் சிம்சுமார வடிவத்தையும் பஞ்சகவ்யமுறையையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)



அரசரே! கேசவரால் இவ்விதம் சொல்லப்பட்டபொழுது, தர்மபுத்திரர் தானகாலத்தின் விசேஷத்தையும் விதியையும்பற்றி அடிக்கடி வினவலானார். யுதிஷ்டிரர், 'தேவரே! தேவர்களுக்கு ஈச்வரரே! விஷுவங்களிலும் ஸூர்யசந்திர கிரஹணங்களிலும் என்ன பயன் சொல்லப்பட்டிருக்கிறது? அந்தப் பயனை நீர் சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'வேந்தரே! கேட்பீராக. விஷுவத்திலும் ஸூர்யசந்திரகிரஹணங்களிலும் வியதீபாதத்திலும் அயனத்திலும் தானம்செய்தால் அக்ஷயமான பயன் கிடைக்கும். இரண்டு அயனங்களின்மத்தியில் விஷுவமென்று சொல்லுகிறார்கள். ராஜரே! இரவும்பகலும் ஸமமாகவுள்ள அந்த விஷுவமாகிற ஸந்தியாகாலத்தில் பிரம்மாவும் நானும் சங்கரரும் ஒருதரம் ஒன்று சேர்ந்திருக்கிறோம். மன்னரே! கிரியையும் காரணமும் காரியமும் ஒன்றாக ஆகும்காரணத்தால் ஒன்றுசேர்ந்திருக்கும்எங்களுடைய பிரிவற்ற பரமபதமாகஇருப்பதும் விஷுவமென்று பெயருள்ளதுமான அந்த முகூர்த்தமானது சிறந்தபுண்ணியமாகும். அதுவே ஆதியும் அக்ஷரமுமான பிரம்மம் என்றும் பரப்பிரம்மமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தமுகூர்த்தத்தில் எல்லாரும் பரமபதத்தைத் தியானம் செய்கின்றனர். ராஜேந்திரரே! தேவர்களும் வஸுக்களும் ருத்திரர்களும் பித்ருக்களும் அச்வினீதேவர்களும் ஸாத்யர்களும் விச்வேதேவர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் பிரம்மரிஷிகளும் சந்திரன் முதலானகிரஹங்களும் நதிகளும் ஸமுத்திரங்களும் மருத்துக்களும் அப்ஸரஸுகளும் நாகர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் குஹ்யர்களும் ஆகிய இவர்களும் மற்றவர்களும் விஷுவத்தில் பிரயத்தினத்துடன் இந்திரியங்களை அடக்கினவர்களும் உபவாஸமுள்ளவர்களும் தியானத்தையே பிரதானமாகக் கொண்டவர்களுமாக இருக்கிறார்கள். யுதிஷ்டிரரே! ஆகையால், அன்னத்தையும் பசுக்களையும் எள்ளையும் பூமியையும் கன்னிகையையும் வீட்டையும் இருப்பிடத்தையும் தான்யத்தையும் வாகனத்தையும் படுக்கையையும் மற்றும் என்னால்

சொல்லப்பட்டதையும் (விஷுவத்தில்) தானம்செய்யக்கடவீர். குந்தியின் புத்திரரே! இவ்விதம் விஷுவங்களில் விசேஷமாக ஶ்ரோத்திரியர்களுக்குத் தானம் செய்தால் அந்தத் தானத்திற்குக் குறைவே உண்டாகாது. தினந்தோறும் புண்ணியம் வ்ருத்தியடையும். அந்தத் தானம் கோடிக்குச்சமமானது. எவன் விஷுவத்தில் எனக்காவது சிவனுக்காவது அபிஷேகம்செய்து முறைப்படி பூஜைசெய்வனே அவனுடைய புண்ணியத்தின்பயனைக் கேளும். அவன் பத்து ஜன்மங்களில் செய்த பாவம் உடனே நசிக்கும். அவன் பத்து அஶ்வமேதங்கள் செய்தபயனை அடைவான். அவன் இஷ்டமான ஸ்வரூபத்தை அடைந்து திவ்யமான விமானமேறி ஸுகமாக என்னுடைய உலகத்தையாவது ருத்திரருடைய உலகத்தையாவது அடைந்து அங்குள்ள தேவர்களாலும் கந்தர்வர்களாலும் ஸுகமாகக் கானம் பண்ணப்பட்டு ஆயிரம்கோடி தேவவருஷம் மகிழ்ந்து சிலகாலத்தில் அவ்விடமிருந்தும்இறங்கி இவ்வுலகில் நான்கு வேதங்களின் கரையையும் அடைந்தவனும் பிரம்மஞானியுமான பிராம்மணோத்தமனாகப் பிறப்பான். எவன் சந்திரகிரஹணத்திலும் ஸூரியகிரஹணத்திலும் என்னுடைய ஆலயத்திலாவது சங்கரருடைய ஆலயத்திலாவது என்னுடைய காயத்ரியையாவது சங்கரருடைய காயத்ரியையாவது ஜபித்து, சங்கம் தூர்யம் வெண்கலமணி இவற்றின் ஒலிகளால் பக்தியுடன் ஒலிக்கச்செய்வனே அவனுடைய புண்ணியத்தின்பயனைக்கேட்பீராக. கந்தர்வஸம்பந்தம்பெற்ற கானங்களாலும் ஹோமங்களாலும் ஜபங்களாலும் ஜபிக்கப்பட்ட சிறந்தநாமங்களாலும் ராஹு துர்ப்பலனாகவும் சந்திரன் பலமுள்ளவனாகவும் ஆவார்கள். ஸூர்யகிரஹணத்திலும் சந்திரகிரஹணத்திலும் ஶ்ரோத்ரியர்களுக்குக் கொடுக்கப்படும் தானமானது, ஆயிரம் மடங்குள்ளதாகிக் கொடுத்தவனை அடைகிறது. நரோத்தமரே! ராஜேந்திரரே! யுதிஷ்டிரரே! அவன் மஹாபாதகங்களுடன்கூடினவனாக இருந்தாலும், அந்தக்ஷணத்திலேயே அந்தத் தானத்தால் பாவமற்றவனாகிச் சந்திரனுக்கும் ஸூரியனுக்கும் ஒப்பான பிரகாசத்துடன் விளங்கும் விமானத்தால் அழகான சந்திரனுடைய பட்டணம்சென்று அப்ஸரஸுக்கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டு ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் சந்திரனுடன்கூட எவ்வளவு காலம் இருக்கின்றனவோ அவ்வளவு காலம்வரையில் சந்திரலோகத்தில் பூஜிக்கப்பட்டுக் காலக்ரமத்தில் அவ்விடமிருந்து நழுவியும் இவ்வுலகில் வேதங்களையும் வேதாங்கங்களையும் அறிந்தவனும் கோடிதனத்திற்குப்பதியுமான பிராம்மணனாகப் பிறப்பான்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! பிரபுவே! உம்முடைய காயத்திரியை எப்பொழுது ஜபிக்கவேண்டும்? தேவரே! தேவர்களுக்கீசரே! அதற்கு என்னபயன்? (அதை) எனக்குச்சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'அரசரே! துவாதசியிலும் விஷுவத்திலும் சந்திரக்ரஹணத்திலும் ஸூரியக்ரஹணத்திலும் அயனத்திலும் ஶ்ரவணத்திலும் வ்யதீபாதத்திலும் அஶ்வத்த விருக்ஷத்தைத் தரிசிக்கும்போதும் என்னைத் தரிசிக்கும்போதும் என்னுடைய காயத்திரியையாவது அஷ்டாக்ஷரத்தையாவது ஜபிக்கவேண்டும். (அப்படிச்செய்வது) அவனால் செய்யப்பட்டபாவத்தை நசிக்கச் செய்யும். இதில் ஸம்சயமில்லை' என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவரே! அஶ்வத்த விருக்ஷத்தின் தரிசனமானது உம்முடைய தரிசனத்திற்குச் சமமானதா? இதை எனக்குச் சொல்லும். எனக்கு மிக்க குதூஹலமாக இருக்கிறது' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'ராஜரே! நான் அஶ்வத்தரூபமாக இருந்துகொண்டு மூவுலகங்களையும் காப்பாற்றுகிறேன். அரசரே! அரசமரமில்லாத இடத்தில் நான் இருக்கிறதில்லை. நான் இருக்குமிடத்திலெல்லாம் அரசமரமும் இருக்கிறது. அதைப் பக்தியுடன் பூஜிப்பவன் நேரில் என்னைப் பூஜிப்பவனாகிறான். அதைக் கோபத்துடன் அடிப்பவன் என்னையே அடித்தவனாகிறான். ஆகையால், அதைத் தினந்தோறும் பிரதக்ஷிணம் செய்யவேண்டும்; வெட்டக்கூடாது. விரதத்தை அனுஷ்டிப்பதும் நேர்மையும் தேவர்களுக்கும் குருவுக்கும் பிதாவுக்கும் மாதாவுக்கும் பணிவிடைசெய்வதும் மனைவியை ஸந்தோஷப்படுத்துவதும் க்ருஹஸ்தனாக இருப்பதும் அதிதிபூஜையும் ஸநாதனமானவேதமும் பிரம்மசர்யமும் த்ரேதாக்னியும் மேலானதீர்த்தங்களென்று சொல்லப்படுகின்றன. (எல்லாவற்றிற்கும்) தர்மத்தைப் பிரதானமாக அறிந்து மனத்தை அதில் செலுத்தவேண்டும். குந்தியின் மைந்தரே! தீர்த்தங்களை அடைவீராக. தர்மமானது தர்மத்தால் வளரும். ஸ்தாவரம் ஜங்கமம் என்று தீர்த்தம் இரண்டுவிதமென்று சொல்லுகின்றனர். ஸ்தாவரத்தைக்காட்டிலும் ஜங்கமதீர்த்தமும் அதைக்காட்டிலும் ஞானத்தை அடைவதும் மேலானவை. பாரதரே! இவ்வுலகில் கர்மத்தால் பரிசுத்தனான மனிதனுடைய ஹ்ருதயத்தில் எல்லாத்தீர்த்தங்களுமிருக்கின்றன. அவன் தீர்த்தஸ்வரூபியென்று சொல்லப்படுகிறான். சிறந்ததான ஞானமானது மேலான தீர்த்தமாகும். அதைக்காட்டிலும்(மேலான) தீர்த்தமில்லை. ஞானமென்னும் தீர்த்தம்

மேலானது.பிரம்மமென்னும்தீர்த்தம்ஸனாதனமானது. பாண்டவரே! பொறுமையோ எல்லாத்தீர்த்தங்களிலும் மேலானதீர்த்தம். இவ்வுலகமும் மேலுலகமும் பொறுமையுள்ளவர்களுக்கேகிடைக்கும். கௌரவிக்கப்பட்டாலும் கௌரவிக்கப்படாவிட்டாலும்பூஜிக்கப்பட்டாலும் பூஜிக்கப்படாவிட்டாலும் வையப்பட்டாலும் அதட்டப்பட்டாலும் பொறுமையுள்ளவனாக இருப்பவன் தீர்த்தமென்று சொல்லப்படுகிறான். பொறுமையே புகழ். பொறுமையே தானம். பொறுமையே யஜ்ஞம். பொறுமையே மனவடக்கம். பொறுமையே அஹிம்ஸை. பொறுமையே தர்மம். பொறுமையே இந்திரியங்களை அடக்குவது. பொறுமையே தயை. பொறுமையே யாகம். பொறுமையினாலேயே உலகம் தரிக்கப்படுகிறது. பொறுமையுள்ள பிராம்மணன் தேவனாவான். பொறுமையுள்ள பிராம்மணன் சிறந்தவனாவான். பொறுமையுள்ளவன் ஸ்வர்க்கத்தை அடைவான். பொறுமையுள்ளவன் புகழ்பெறுவான். பொறுமையுள்ளவன் மோக்ஷத்தை அடைவான். ஆகையால், அவன் ஸாது என்று சொல்லப்படுகிறான். பாரதரே! ஆத்மாவே நதி; புண்ணியமானதீர்த்தம். ஆத்மாவானது எல்லாத்தீர்த்தங்களிலும் பிரதானமான தீர்த்தம். ஆத்மாவானது யஜ்ஞமென்று எப்பொழுதும் எண்ணப்படுகிறது. ஸ்வர்க்கம் மோக்ஷம் எல்லாம் ஆத்மாவுக்கு அதீனமாக இருக்கின்றன. ஆசாரத்தால் நிர்மலமாக இருப்பதும் உண்மையினாலும் பொறுமையினாலும் ஒப்பற்ற குளிர்ச்சியுள்ளதுமான ஞானமாகிற ஜலத்தால் இவ்விதம் எப்பொழுதும் ஸ்நானம் செய்பவனுக்கு மறுபடியும் (வெறும்) ஜலத்தால் என்னபயன்? (அவனே) தீர்த்தமாகிறான்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பகவானே! தேவஸ்ரேஷ்டரே! எல்லாப் பாவங்களையும் போக்கக் கூடியதும் எளிதில் செய்யக்கூடியதுமான பிராயச்சித்தத்தை உம்முடைய பக்தனான எனக்கு நீர் சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'மிக்கரஹஸ்யமும் பாபிகளாலும் அதார்மிகர்களாலும் கேட்கக்கூடாததுமான இந்தப் பிராயச்சித்தத்தை உமக்குச் சொல்லுகிறேன். எவன் பரிசுத்தனான பிராம்மணனைக்கண்டு என்னைப்பற்றியிருக்கும் சித்தத்துடன் 'நமோ ப்ரம்மண்ய தேவாய' என்று சொல்லி நமஸ்கரித்து மறுபடியும் அஷ்டாக்ஷரத்தைச் சொல்லிப் பிரதக்ஷிணம்செய்வனோ அவனுடையபாவத்தை ஸந்தோஷமடைந்த அந்தப் பிராம்மணனைக்கொண்டு நான் நசிக்கச்செய்கிறேன். மனிதன் பன்றியின் முகத்தால் தோண்டப்பட்ட மண்ணைத் தலையில்

வைத்துக்கொண்டு நூறுபிராணுயாமம் செய்தால் பாவங்களால் விடப்படுவான். எவன் ஸூர்யக்ரஹணகாலத்தில் கிழக்குமுகமாக ஓடும் நதிக்குச்சென்று என்னுடைய ஆலயத்தினருகில் வலம்புரிச் சங்கத்தினுலாவது கபிலைப்பசுவின் கொம்பினுலாவது ஜலத்தை யெடுத்து ஒருதரம் ஸ்நானம்செய்வனே அவனுடைய ஸஞ்சிதமான பாவம் அந்தக்ஷணத்திலேயே நசிக்கும். யுதிஷ்டிரரே! எவன் கபிலையின் தலையிலிருந்துவிழும் ஜலத்தினுலாவது கோமூத்திரத்தினு லாவது பிராம்மணனுடைய திருவடியிலிருந்து விழுந்ததீர்த்தத்தினு லாவது ரோஹிணீநக்ஷத்திரத்திலாயினும் என்னுடையதினத்திலாயி னும் ஸ்நானம்செய்வனே அவனுடைய பாவம் நசிக்கிறது. எவன் பதினன்கு அங்கங்களோடுகூடின சிம்சுமாரப்பிரஜாதிபதியை என் னிடம் பக்தியுடன் நமஸ்கரிப்பனே அவனுடைய பாவம் நசிக்கிறது. யுதிஷ்டிரரே! ஆகையால், அவருடைய பதினன்கு அங்கங்களையும் கேளும். அரசரே! (அவருக்குத்) தர்மம் தலையாகவும் பிரம்மா [1] ஹனுவாகவும் விருஷரென்னும் தேவர்கள் இடப்பக்கமும் வலப் பக்கமுமாகவும் விஷ்ணு ஹ்ருதயமாகவும் அச்வினீதேவர்கள் இரண்டு தோள்களாகவும் அத்ரி இடையாகவும் ஸம்வத்ஸரம் ஆண் குறியாகவும் மித்ராவருணர்கள் இரண்டுபாதங்களாகவும் அக்னி இரண்டுதொடைகளாகவும் இருக்கின்றனர். [2] இந்திரன் அவற் றுக்குப்பின்புறமும் பிரஜாதிபதி அவனுக்குப்பிறகும் அபயன் அவனுக்குப்பிறகுமாக இருக்கின்றனர். அந்த அபயனே த்ருவ னென்று பெயருள்ளவன். இவைகளெல்லாம் சிம்சுமாரப்பிரஜாதி பதியின் அங்கங்கள். எவன் பூர்ணிமையில் உபவாஸமிருந்து பஞ்ச கவ்யத்தை அருந்துகிருனே அவனுடைய முன்ஸம்பாதிக்கப்பட்ட பாவமானது நசிக்கிறது. அவ்வாறே, எவன் ஒவ்வொரு மாஸத்தி லும் தனித்தனியாக மந்திரத்துடன்கூடின [3] பிரம்மகூர்ச்சத்தைப் பானம் பண்ணுகிருனே அவனுடைய பாவம் நசிக்கிறது. பாரதரே! அதற்குப் பாத்திரத்தையும் பிரம்மகூர்ச்சத்தையும் கேட்பீராக. பலாசஇலையினுலாவது தாமரையிலையினுலாவது தாம்ரத்தினுலா வது ஸுவர்ணத்தினுலாவது செய்த பாத்திரத்தில் கிரஹிக்கவேண் டும். இவை பாத்திரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. காயத்ரி

---

1 கன்னத்துக்குக்கீழிருக்குமிடம். 2 இம்மூவரும் முதுகுஎன்றபடி.

3 இதன் 317 - ம் பக்கம் குறிப்பில் காண்க.

யினால் மூத்திரத்தையும் 'கந்தத்வாராம்' என்னும் மந்திரத்தால் கோமயத்தையும் 'ஆப்யாயஸ்வ' என்னும் மந்திரத்தால் பாலையும் [1] 'ததிக்ராவ்ண' என்னும் மந்திரத்தால் தயிரையும் 'தேஜோஸி' 'சுக்ரம்' என்னும் மந்திரத்தால் நெய்யையும் 'தேவஸ்யத்வா' என்னும் மந்திரத்தால் குசோதகத்தையும் கிரஹிக்கவேண்டும். 'ஆபோ ஹிஷ்டா' என்னும் ரிக்கினால் விதிப்படி யவசூர்ணத்தைக்கிரஹித்து ஜ்வலிக்கின்ற அக்னியில் பிரம்மாவுக்கு ஹோமஞ்செய்து பிரணவத்தால் கலந்து பிரணவத்தினாலேயே கடைந்து பிரணவத்தினாலேயே எடுத்துப் பிரணவத்தினாலேயே பானஞ்செய்யவேண்டும். அவன், பாம்பானது தோலினால் விடப்படுவதுபோலப் பெரியபாவத்தினாலும் விடப்படுவான். எவன் ஜலத்திற்குள்ளாவது ஸூரியனுக்கெதிரிலாவது 'பத்ரம் ந:' என்னும் ருக்ஸம்ஹிதாபாதத்தை [2] அக்காலத்தில் படிப்பனோ அவனுடையபாவம் நாசமடையும். எவன் எப்பொழுதும் மனத்தை என்னிடத்தில் நிறுத்தி என்னுடைய ஸூக்தத்தை ஜபிப்பனோ அவன் தாமரையிலையானது ஜலத்தினால் பற்றப்படாததுபோலப் பாவத்தால் பற்றப்படமாட்டான்' என்று சொன்னார்.

---

நூற்றுப்பதினாறுவது அத்யாயம்.

## வைஷ்ணவ தர்மபர்வம். (தொடர்ச்சி.)

**(கிருஷ்ணர், பிராம்மணர் அக்னிஹோத்ரமுதலியன செய்தாலும் பகவத்பக்தியில்லாதவராயின் அவர்களுக்குப் பயனின்மையையும் சூத்திரர்கள் தமக்குரிய சிறு தர்மங்களைச் செய்தாலும் பகவத்பக்தி உள்ளவராயின் அவர்களுக்குப் பயனிருப்பதையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், 'தேவஸ்ரேஷ்டரே! பாவமற்றவரே! சுத்தமான எண்ணமுள்ள எப்படிப்பட்ட பிராம்மணர்கள் புண்யமுள்ளவர்கள்? எந்தக்கர்மம் பயனுள்ளது? எது பயனற்றது? எனக்குச்சொல்லும்.' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'பாண்டவரே! பிராம்மணர்களைச் சார்ந்த அவற்றையெல்லாம் முறைப்படிகேளும். பயனுள்ளதும் பயனற்றதுமான அவர்களுடைய கர்மாவை உமக்குச் சொல்லு

---

1 ததிக்ராவிண்ண என்றும் பாடம். 2 'ஸதா' என்று பாடங்கொண்டு 'எக்காலத்திலும்' என்று பொருள் கொள்ளுதல் நேர்.

கிறேன். சித்தம் பரிசுத்தமாயில்லாவிட்டால த்ரிதண்டத்தைத்தரிப்பதும் மௌனமும் ஜடைகளைத்தரிப்பதும் மொட்டையடித்துக் கொள்வதும் மரப்பட்டையையும் மான்தோலையும் உடுப்பதும் விரதங்களை அனுஷ்டிப்பதும் ஸ்நானமும் அக்னிஹோத்ரமும் வீட்டில் வஸிப்பதும் வேதாத்தியயனமும் [1]மனைவியை உபசரிப்பதுமாகிய இவையெல்லாம் வீணானவை. அரசரே! அக்னிஹோத்ரமும் வீணாகும். வேதங்களும் வீணாகும். தேவர்கள் நல்லொழுக்கத்தால் ஸந்தோஷமடைகின்றனர். அதில் வேதங்கள் காரணம். பொறுமையுள்ளவனும் மனத்தை அடக்கியவனும் கோபத்தையும் புத்தியையும் இந்திரியங்களையும் ஜயித்தவனுமாக இருப்பவனைச் சிறந்த பிராம்மணனென்று எண்ணுகிறேன். மிச்சமுள்ளவர்கள் சூத்திரர்களென்று கருதப்பட்டிருக்கின்றனர். தேவர்கள் அக்னிஹோத்ர விரதத்தை முக்கியமாகக் கொண்டவர்களும் வேதாத்தியயனத்தில் ஆசையுள்ளவர்களும் சுத்தர்களும் உபவாஸத்தில் ஆசையுள்ளவர்களும் மன அடக்கமுள்ளவர்களுமாக இருப்பவர்களைப் பிராம்மணர்களென்று கருதுகின்றனர். ராஜரே! ஜாதியினால் பூஜிக்கப்படுகிறதில்லை. குணங்கள் க்ஷேமத்திற்குக் காரணமானவை. சண்டாளனாக இருந்தாலும் நல்லொழுக்கத்திலிருப்பவனைத் தேவர்கள் பிராம்மணனென்று கருதுகின்றனர். பாரதரே! மனத்தின்சுத்தி கர்மாவின் சுத்தி குலத்தின்சுத்தி சரீரத்தின்சுத்தி வாக்கின்சுத்தி என்று சுத்தியானது ஐந்து விதமாகக் கருதப்பட்டிருக்கிறது. இந்த ஐந்து சுத்திகளிலும் மனத்தின்சுத்தி மேலானது. மனிதர்கள் மனத்தின் சுத்தியால் ஸ்வர்க்கத்தை அடைகின்றனர். அக்னிஹோத்ரம் செய்யாதவனும் வர்த்தகஞ் செய்பவனும் வர்ண ஸாங்கர்யத்தைச் செய்பவனுமான பிராம்மணன் வ்ருஷலர்களுக்கு ஒப்பானவன். குந்தியின் மைந்தரே! வேதாத்தியயனம் செய்து மறந்தவனும் கிருஷிவேலை செய்பவனும் நிஷித்தகர்மங்களைச் செய்பவனுமான த்விஜன் வ்ருஷலனென்று சொல்லப்படுகிறான். 'வ்ருஷ:' என்பதற்கு தர்மம் என்பது பொருளென்று அறியவேண்டும். அதற்கு எவன் லயத்தைச் செய்கிறானோ ச்வபசனிலும் இழிவான அவனைத் தேவர்கள் வ்ருஷலனென்று கருதுகின்றனர். எந்த மனிதன் [2]பிராம்மாவினால் கானம் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்களால் சூத்திரனை ஸ்தோத்திரம் செய்கிறானோ என்னை ஸ்தோத்திரம் செய்யவில்லை

1 மனைவியுடன் செய்யும் நல்ல காரியமும் என்றும் கொள்ளலாம்.
2 வேதத்தில் சொல்லப்பட்ட என்றும் கொள்ளலாம்.

யோ பாபாத்மாவாகிய, அவன் சண்டாளனுக்குச் சமமானவன். வ்ருஷலனிடத்திலுள்ள வேதம் நாய்த்தோற்பையிலுள்ள பால் போன்றது. அது முழுதும் நாயினால் நக்கப்பட்ட ஹவிஸ்போலத் தோஷமுள்ளதாகிறது. (ஆறு) அங்கங்கள், நான்கு வேதங்கள், மீமாம்ஸை, நியாயவிஸ்தாரம், தர்மசாஸ்திரம், புராணம் என்னும் இப்பதினான்கும் வித்தைகள். பாரதரே! வித்தைக்குஸ்தானங்களும் பவித்ரங்களுமான இவை உலகத்திற்காக என்னால் நன்கு சொல்லப்பட்டு உண்டாயின. யுதிஷ்டிரரே! ஆகையால், இவைகளைச் சூத்திரன் தொடக்கூடாது. சூத்திரன்தொட்டால் எல்லாம் அசுத்தமாகிவிடும். ஸம்சயமில்லை. பாரதரே! உலகத்தில் மூன்று அபவித்ரங்கள்; ஐந்து அமேத்யங்கள். பாண்டவரே! நாய், சூத்திரன், பாவபாகன் (மூவரும்) அபவித்ரர்கள். கானம்செய்பவன், கோழி, யூபம், ரஜஸ்வலை, வ்ருஷலீபதி இந்த ஐவரும் அமேத்யர்கள். இவர்களை ஒரு பொழுதும் தொடக்கூடாது. பிராம்மணன் இந்த எட்டுப் பேர்களையும் தொட்டால் (உடுத்த)ஆடையுடன் ஜலத்தில் முழுக வேண்டும். எந்த மனிதர்கள் என்னுடைய பக்தர்களைப் பொதுவாகச் சூத்திரனென்று அவமதிக்கிறார்களோ அந்த நராதமர்கள் கோடிவருஷம் நரகங்களிலேயே இருப்பார்கள். புத்தியுள்ளவன், என்பக்தன் சண்டாளனானாலும் அவனை அவமதிக்கக் கூடாது. அவமதித்த மனிதர்கள் ரௌரவமென்னும் நரகத்தில் நிச்சயமாக விழுவார்கள். என்னுடைய பக்தனுடைய பக்தர்களிடத்தில் எனக்குப் பிரீதியானது அதிகம். ஆகையால், என்பக்தனுடைய பக்தர்களையும் விசேஷமாகப் பூஜிக்கவேண்டும். என்னிடத்தில் சித்தத்தை வைத்த புழு பறவை மிருகம் இவைகளுக்கும் மேலானகதி உண்டென்று தெரிந்து கொள்ளும். ஞானமுள்ள மனிதர்களுக்கு உண்டென்பதில் என்ன ஸந்தேகம்? சூத்திரனாக இருந்தாலும் எனக்கு இலையையாவது மலரையாவது கனியையாவது ஜலத்தையாவது (பக்தியுடன்) கொடுத்தால் நான் அதைத் தலையால் தரிக்கிறேன். பாரதரே! சூத்திரர்கள்போலிருந்தாலும் என்னிடத்தில் பக்தியுள்ளவர்களாக இருக்கும் பிராம்மணர்களையே பூஜிக்க வேண்டும். அவர்களுக்குச் செய்யும் பூஜையை நான் அந்தஸ்வரூபமாயிருந்தே பெற்றுக் கொள்ளுகிறேன். எந்தப்பிராம்மணர்கள் எல்லாப் பிராணிகளின் ஹ்ருதயத்திலுமிருக்கும் என்னை வேதத்தில்சொல்லப்பட்டமார்க்கத்தினாலேயே பூஜிக்கிறார்களோ அவர்கள் என்னுடைய ஸாயுஜ்யத்தை அடைகிறார்கள். யுதிஷ்டிரரே! என்னுடைய பக்தர்களின் நன்மைக்

காகவே நான் அவதரித்தேன். அவதாரஞ்செய்த ஒரு மூர்த்தியை (அவஶ்யம்) அர்ச்சிக்க வேண்டும். இவைகளுள் ஒரு மூர்த்தியை எவன் என்னிடத்தில் பக்தியுடன் நன்கு அர்ச்சிக்கிறானோ (அவன் விஷயத்தில்) அதினாலேயே நான் ஸந்தோஷமுள்ளவனாகிறேன்; ஸம்சயமில்லை. மண்ணாலாவது மணிகளாலாவது ரத்தினங்களினாலாவது தாம்ரத்தினாலாவது வெள்ளியினாலாவது ஸுவர்ணத்தினாலாவது பிரதிமையைச்செய்து பூஜிக்க வேண்டும். இவைகளுள் முன் சொல்லப்பட்டதைவிடப் பின்சொல்லப்பட்டது பத்து மடங்கு புண்ணியமுள்ளதென்று அறியவேண்டும். [1] ஜயத்தில் விருப்பமுள்ள அரசனும் வித்தையில் விருப்பமுள்ள பிராம்மண ஶ்ரேஷ்டனும் தனத்தில் விருப்பமுள்ள வைஶ்யனும் ஸுகம்(முதலான) பயனில் விருப்பமுள்ள சூத்திரனும் எல்லாவற்றையும் விரும்பும் ஸ்திரீகளும் இங்ஙனம் பூஜிப்பதனால் எல்லா இஷ்டங்களையும் அடைவார்கள்' என்றுகூறினார்.

---

நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணர், அரசமரம், பசு, பிராம்மணன்இவர்களின்மகிமையையும் பிராம்மண்யத்தைப்போக்கும்கேட்டகாரியங்களையும் யுதிஷ்டிரருக்குச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், 'தேவர்களுக்கு ஈஶ்வரரே! நீர் எப்படிப்பட்ட சூத்திரர்களுடைய பூஜையைப் பெற்றுக்கொள்ளமாட்டீர்? [2] உமக்கு எவனிடமிருந்து பயம்? அதை எனக்குச் சொல்லும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'ராஜேந்திரரே! நான் விரதமில்லாதவனும் பக்தியில்லாதவனுமான சூத்திரனால் தொடப்பட்ட பூஜையை ஶ்வபாகனால் செய்யப்பட்டதைப்போல விலக்கிவிடுவேன். யுதிஷ்டிரரே! நானும் சங்கரரும் கோக்களாகவும் பிராம்மணர்களாகவும் அஶ்வத்தவிருக்ஷமாகவும் இருக்கிறோம். இம்மூவரும் தேவஸ்வரூபமாக இருக்கின்றனரல்லவா? ஆகையால், என்னுடைய பக்தன் இம்மூவரையும் ஒருபொழுதும் அவமதிக்கக்கூடாது. அவமதித்தால் இவர்கள் ஏழாவதுதலைமுறைவரையில் குலத்தை எரிப்பர். என்ஸ்வரூபமான அரசமரமும் பிராம்மணர்களும் பசுக்களும் தாண்டு

1 'ஜய' என்று மாற்றப்பட்டது. 2 இதற்கு விடை அடுத்த அத்தியாயத்திலுள்ளது.

விக்கின்றனர். பாண்டவரே! ஆகையால், இம்மூவரையும் முயற்சியுடன் பூஜிப்பீராக' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவரே! பிராம்மணசரீரத்துடனேயே சூத்திரத்தன்மையை எப்படி அடைகிறான்? பிராம்மண்யமானது எப்படி நசிக்கிறது? (இவற்றை) நீர் சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'எந்தப்பிராம்மணன் பன்னிரண்டுவருஷம் கிணற்றில் ஸ்நானம்செய்கிறானோ அவன் அந்தச்சரீரத்துடனேயே சூத்திரத்தன்மையை அடைகிறான்; ஸம்சயமில்லை. எந்தப்பிராம்மணன் அரசனை ஆஸ்ரயித்தே பன்னிரண்டு வருஷம் ஜீவிப்பனோ அவன் வேதங்களின்கரையை அடைந்தவனானாலும் சூத்திரத்தன்மையை அடைவான். எந்தப்ராம்மணன் [1] பட்டணத்திலாவது [2] நகரத்திலாவது பன்னிரண்டுவருஷம் வஸிப்பனோ அவன் சூத்திரத்தன்மையை அடைவான். இதில் ஆலோசனை செய்ய வேண்டாம். எவன் காமத்தால் மோஹித்து சூத்திரஸ்திரீயினிடத்தில் புத்திரனை உண்டுபண்ணுகிறானோ அவனுடையசரீரத்திலிருக்கும்பிராம்மண்யமானது உடனேயே நசிக்கிறது. எந்தப் பிராம்மணன் ஸோமலதையை வீணாகவே புஜிக்கிறானோ அவனுடைய சரீரத்திலிருக்கும் பிராம்மண்யமானது உடனே நசிக்கிறது. ராஜரே! எந்தப்ராம்மணன் [3] தவறான காரியத்தைச் செய்கிறானோ அவனுடைய சரீரத்திலுள்ள பிராம்மண்யமானது உடனேயே நசிக்கிறது. யுதிஷ்டிரரே! எவர்கள் கிடைக்க அரிதான பிராம்மண்யத்தை அடைந்து (அதை) இவை முதலான துர்மார்க்கங்களால் நாசம் செய்கின்றனரோ அவர்களைப்பற்றித் துக்கிக்கிறேன். யுதிஷ்டிரரே! ஆகையால், எனக்குப் பிரியனான பிராம்மணன் ஜாதிக்கேட்டைச் செய்யக்கூடிய இவ்வித காரியத்தை எவ்விதமுயற்சியினாலும் செய்யக்கூடாது' என்று சொன்னார்.

1 அரசன் தன் பரிவாரங்களோடு வஸிக்கும் இடம்.

2 800 கிராமங்களுக்குத் தலைமையாகவுள்ளது.

3 மூலத்தில் வேறுவிதமாயிருக்கிறது.

## நூற்றுப்பதினெட்டாவது அத்யாயம்.

## வைஷ்ணவதர்ம பர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணர் தேசாந்தரத்தில் மரித்த பிராம்மணனுடைய ஸம்ஸ்காரத்தையும் தீர்த்தயாத்திரை செய்யமுடியாதவர்களுக்கு அவற்றுக்குப் பிரதியான தீர்த்தங்களையும் பாகவத லக்ஷணத்தையும் தாம் சொன்ன தர்மத்தைக் கேட்டதன் பயனையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லி விடைபெற்றுத் துவாரகைசென்றது.)

யுதிஷ்டிரர், 'பிராம்மணன் தேசாந்தரம் சென்று மரணமடைந்து சரீரம் நசித்தால் பிரேதகாரியத்தை எவ்விதம் செய்யலாம்?' என்று வினவ, பகவான் சொல்லலானார், 'யுதிஷ்டிரரே! அவ்விதமாகி விட்ட ஆஹிதாக்னியின் ஸம்ஸ்காரத்தைக் கேளும். பலாசக் கூட்டங்களால் பிரதிமை செய்யவேண்டுமென்று கல்பம் சொல்லுகிறது. அவனுக்கு முந்நூற்றறுபது எலும்புகளுண்டென்று சொல்லுகின்றனர். அவற்றைச் சாஸ்திரப்படி நிச்சயித்து அமைக்கவேண்டும். தலையில் நாற்பதும் கழுத்தில் பத்தும் கைகளில் நூறும் விரல்களில் பத்தும் மார்பில் முப்பதும் வயிற்றில் இருபதும் வ்ருஷணத்தில் ஆறும் சிப்னத்தில்நான்கும் தொடைகளில்நூறும் முழங்கால்களிலும் கணுக்கால்களிலும் முப்பதும் பாதங்களில் பத்துமாக அமைக்கவேண்டும். இதுதான் பிரேதத்திற்குப் பிரதி' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'எல்லாப் பக்தர்களையும் அனுக்ரஹிப்பதற்காகவும் பக்தர்களைத்தாண்டுவிப்பதற்காகவும் தர்மமாக விசேஷமான தீர்த்தத்தைச்சொல்லவேண்டும்' என்று வினவ, பகவான் சொல்லலானார். 'ஸாமகர்கள் எல்லாத் தீர்த்தங்களிலும் பாவனமானது ஸத்ய மென்று சொல்லுகிறார்கள். உண்மையைச் சொல்வது தீர்த்தமாகும். அஹிம்ஸையானது தீர்த்தமென்று சொல்லப்படுகிறது. யுதிஷ்டிரரே! தவம் தீர்த்தம். தயை தீர்த்தம். சீலம்தீர்த்தம். சிறியதாலும்ஸந்தோஷிப்பது தீர்த்தம். பதிவ்ரதையானஸ்திரீ தீர்த்தம். ஸந்தோஷமுள்ள பிராம்மணன் தீர்த்தம். ஞானமும் தீர்த்தமென்று சொல்லப்படுகிறது. என்னுடைய பக்தன் எப்பொழுதும் தீர்த்தம். சங்கரருடைய (பக்தன்) விசேஷமான (தீர்த்தம்). ஸந்யாஸிகள் தீர்த்தம் என்றும் அவ்விதமே வித்வான்கள் தீர்த்தமென்றும் சொல்லப்படுகின்றனர். சரணமடைந்தவனைக் காக்கும் புருஷன் தீர்த்தம். அபயம் தீர்த்த

மென்று சொல்லப்படுகிறது. 1 இம்மூவுலகங்களிலும் எனக்குப் பய மில்லை. ஓரிடமிருந்தும் நான் பயப்படவில்லை. இரவிலும் பகலிலும் சூத்திரன் வரம்புகடப்பதைத்தவிர வேறுபயமில்லை. அரசரே! தேவர்களிடமிருந்தும் அஸுரர்களிடமிருந்தும் அரக்கர்களிட மிருந்தும் எனக்குப் பயமில்லை. ஆனால், சூத்திரனுடைய முகத்திலிருந்து வெளியில்வந்த வேதமானது எப்பொழு தும் எனக்குப் பயத்தைக்கொடுக்கிறது. ஆகையால், சூத்திரனான வன் என்னுடைய பெயரையும் பிரணவத்துடன் சொல்லக்கூடாது. உலகத்தில் பிரம்மத்தை அறிந்தவர்கள் பிரணவத்தைப் பிரம்மமாக அறிகின்றனர். என்னிடம் பக்தியுடன் த்விஜர்களுக்குப்பணிவிடை செய்வது சூத்திரர்களின் தர்மம். அவர்கள் அதனால் எப்பொழு தும் என்னைத் தியானம்செய்து ஸ்வர்க்கத்தை அடைகின்றனர். சூத் திரன் த்விஜர்களுக்குப் பணிவிடைசெய்வதால் மேலானக்ஷேமத்தை அடைவான். த்விஜர்களுக்குப் பணிவிடைசெய்வதைத் தவிர சூத்திரனுக்கு வேறுபிராயச்சித்தம் இல்லை. ஆசையும் த்வேஷமும் மோஹமும் கடுஞ்சொல்லும் கொடியஸ்வபாவமும் ரஹஸ்யமாகக் கெடுதலைச் செய்வதும் நீண்ட விரோதமும் அபிமானமும் ருஜுவாக இல்லாமலிருப்பதும் பொய்யும் அபவாதமும் கோள்சொல்லுவதும் பேராசையும் ஹிம்ஸையும் திருட்டும் பொய்வழக்கும் வஞ்சனையும் கோபத்தில் பிரியமும் அறிவின்மையும் நாஸ்திகத்தன்மையும் பய மும் சோம்பலும் அசுத்தியும் நன்றியறியாமையும் டம்பமும் கர்வ மும் கபடமும் மூடத்தன்மையும் சூத்திரனைப் பிறக்கும்பொழுதே அடைகின்றன. பிரம்மாவானவர் தாமஸகுணங்களால் ஆக்ரமிக்கப் பட்ட சூத்திரனைப் படைத்து த்விஜர்களுக்குப் பணிவிடைசெய்வது சூத்திரர்களின் தர்மமென்று ஏற்படுத்தினார். த்விஜர்களிடம் பக்தி யினால் சூத்திரனுடைய தாமஸகுணங்கள் நசிக்கின்றன. சூத்தி ரன் எனக்கு இலையையோ மலரையோ கனியையோ ஜலத்தையோ பக்தியுடன் கொடுத்தால் நான் பக்தியுடன் கொடுக்கப்பட்ட அதை அவனிடமிருந்து தலையால் பெற்றுக்கொள்ளுகிறேன். பிராம்மண னாக இருந்தாலும் எவனொருவன் எல்லாப்பாவங்களோடும்கூடின வனாக இருக்கிறானோ அவன் என்னை எப்பொழுதும் தியானம் செய் தால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுவான். கல்வியும் வணக்க மும் நிறைந்தவர்களும் வேதத்தின் கரையை அடைந்தவர்களு

---

1 இது முதல் சிலவாக்கியங்கள் முன் அத்யாயத்திலுள்ள வினாவுக்கு விடை.

மான பிராம்மணர்களும் என்னிடம் பக்தியைச்செய்யாவிடில் அவர்கள் சண்டாளர்களுக்கு ஒப்பானவர்களே. எந்த த்விஜனுக்கு என்னிடத்தில் பக்தியில்லையோ அவன்செய்த தானமும் தவமும் யாகமும் ஹோமமும் அதிதிபூஜையும் வீணாகும்; பக்தியில்லாதவர்கள் செய்த கர்மத்தையும் ஹோமத்தையும் யாகத்தையும் தானத்தையும் முழுதும் ராக்ஷஸர்களே அனுபவிக்கின்றனர். பாண்டவரே! என்னுடைய பக்தன் ஸ்தாவரத்தினிடத்திலும் ஜங்கமத்தினிடத்திலும் எல்லாப் பிராணிகளிடத்திலும் சத்ருக்களிடத்திலும் மித்திரர்களிடத்திலும் [1] எப்பொழுதும் ஸமமாக (க்காரியங்களை)ச்செய்வான். ராஜரே! கொடியவனாக இல்லாமையும் அஹிம்ஸையும் உண்மையும் நேர்மையும் பிராணிகளுக்குக் கெடுதல்செய்யாமையும் என் பக்தர்களுடைய விரதம். வேந்தரே! எவன் என்பக்தனை நோக்கி ஶ்ரத்தையுடன் 'நமஸ்காரம்' என்று சொல்லுவனோ ஶ்வபாகனாக இருந்தாலும் அவனுக்கு அழிவற்ற உலகங்கள் கிடைக்கும். என்னை அடைந்திருக்கும் பிராணனுள்ளவர்களும் என்னிடத்தில் பக்தியுள்ளவர்களுமான எவர்கள் எப்பொழுதும் என்னைச் சொல்லிக்கொண்டு லக்ஷ்மீஸமேதனான என்னை விதிப்படி பூஜிக்கிறார்களோ அவர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமா? பல்லாயிரம் வருஷம் தவம்புரியும் மனிதன் என்பக்தர்கள் அடையும் பதத்தை அடையமாட்டான். ராஜேந்திரரே! ஆகையால், சோம்பலின்றி எப்பொழுதும் என்னையே தியானம்செய்பவன் அதனால் ஸித்தியை அடைவான்; பரமபதத்தையும் பார்ப்பான். [2] சூத்திரர்கள் பாகவதர்கள் என்று வீணாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். சூத்திரர்கள் பகவானுடைய பக்தர்களல்லர், பிரம்மணர்களே பாகவதர்களென்று கருதப்பட்டிருக்கின்றனர். த்வாதசாக்ஷரத்தின் தத்வத்தை அறிந்தவனும் நான்குவ்யூகங்களின் பிரிவை அறிந்தவனும் இடையறாத ஐந்துகாலங்களையும் அறிந்தவனுமாக இருப்பவன் பாகவதனென்று கருதப்பட்டிருக்கிறான். என்னைப் புண்யமான ருக்வேதத்தினால் ஸ்தோத்திரம்செய்யும் ஹோதாவும் யஜுர்வேதத்தால் ஸ்தோத்திரம்செய்யும் அத்வர்யுவும் ஸாமவேதத்தால் ஸ்தோத்திரம் செய்யும் உத்காதாவும் எப்பொழுதும் என்னை அதர்வசிரஸால்

1 'ஸதா' என்று மாற்றப்பட்டது.

2 'சூத்திரர்களென்றும் பாகவதர்களென்றும் வீணாகச் சொல்லுகின்றனர். பகவானிடத்தில் பக்தியுள்ளவர்கள் சூத்திரர்கள் அல்லர். பாகவதர்கள் பிராம்மணர்களென்றே கருதப்பட்டிருக்கின்றனர்' என்றும் சொல்ளலாம்.

ஸ்தோத்திரம்செய்யும் ஆதர்வணர்களுமான பிராம்மணர்கள் யாக வதர்களென்று கருதப்பட்டிருக்கின்றனர். எப்பொழுதும் யாகங்கள் வேதங்களுக்கு அதீனங்களும் தேவதைகள் யாகங்களுக்கு அதீனர்களும் தேவதைகள் பிராம்மணர்களுக்கு அதீனர்களுமாயிருக்கின்றனர். ஆகையால், பிராம்மணர்களே தேவதைகள். (ஒன்றை) ஆஸ்ரயிக்காமல் மேன்மை கிடைக்கிறதில்லை. ஆகையால், முக்யமான ஆதாரத்தைப் பற்றவேண்டும். தேவர்கள் ருத்திரரை ஆஸ்ரயித்திருக்கின்றனர். ருத்திரர் பிரம்மாவை ஆஸ்ரயித்திருக்கிறார், அரசரே! பிரம்மா என்னை ஆஸ்ரயித்திருக்கிறார். நான் ஒருவனையும் ஆஸ்ரயித்தவனல்லன். எனக்கு ஒருவனும் ஆஸ்ரயமல்லன்; எல்லோருக்கும் நானே ஆஸ்ரயமாக இருக்கிறேன். மன்னரே! நான் இவ்விதம் ரஹஸ்யமும் உத்தமுமான இதை எப்பொழுதும் தர்மத்தில் பிரியமுள்ள உமக்குச் சொன்னேன். நீர் இவ்விதம் செய்வீராக. பாண்டவரே! பவித்ரமும் புண்யமும் வேதத்திற்கு ஒப்பானதும் என்னுடைய தர்மமுமான இந்த ஆக்யானத்தைத் தினந்தோறும் படிப்பவனுக்குத் தர்மம் வ்ருத்தியடையும்; புத்தியும் தெளியும்; பாவம் நசிக்க க்ஷேமம் வ்ருத்தியடையும். புண்யமும் பவித்திரமும் பாவத்தைநசிக்கச்செய்வதும் உத்தமமுமான இதை ஸ்ரத்தையுடன் கேட்கவேண்டும். ஸ்ரோத்திரியர்கள் அவஸ்யம் கேட்கவேண்டும். இதைப் பக்தியுடன் கேட்கும்படி செய்பவனும் பரிசுத்தனாகக் கேட்பவனும் என்னுடைய ஸாயுஜ்யத்தை அடைவார்கள். இதில் ஆலோசனை செய்யவேண்டாம். என்னுடைய பக்தனும் என்னையே முக்யகதியாகக் கொண்டவனுமான எவன் இதை ஸ்ராத்தத்தில் கேட்கச்செய்வனோ அவனுடைய பித்ருக்கள் பூதப் பிரளயம் வரையில் த்ருப்தியடைகின்றனர்' என்றுசொன்னார்.

ரிஷிகளும் பாண்டவர்களும் ஜகத்குருவான ஸாக்ஷாத் விஷ்ணுவினிடமிருந்து பாகவததர்மங்களைக் கேட்டு மிக்கமனக்களிப்புற்று ஆச்சரியமான கதைகளைச்சிந்தித்துக்கொண்டு அந்தஜனார்த்தனரைநமஸ்கரித்தனர். தர்மபுத்திரரானவர் அடிக்கடி கோவிந்தரைப் பூஜித்தார். தேவர்களும் பிரம்மரிஷிகளும் ஸித்தர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் மஹாத்மாக்களான ரிஷிகளும் குஹ்பர்களும் புஜகர்களும் மஹாத்மாக்களான வாலகில்யர்களும் தத்வதர்சிகளான யோகிகளும் ஐந்துகாலங்களிலும் உபாஸிக்கும் பாகவதர்களும் குதூஹலமும் பகவானிடத்தில் பக்தியுமுள்ளவர்களாகச் சிறந்ததும் புண்யமுமான வைஷ்ணவ தர்மோபதேசத்தைக் கேட்டு அந்தக்ஷணத்திலேயே

பாவம் விலகிப் பரிசுத்தர்களாகி விஷ்ணுவைத் தலைபால்வணங்கி அந்தக்கதைகளைக்'கொண்டாடி, 'நாமெல்லோரும் லோககுருவான கிருஷ்ணரைத் துவாரகையில் பார்ப்போம்' என்று மிகமனமகிழ்ந்து தேவகணங்களுடன் சென்றனர். அரசரே! எல்லாரிஷிகணங்களும் தம் தம் வீட்டுக்குச் சென்றனர். வேந்தரே! அவர்களெல்லாரும் சென்றவுடன் கேசியைக் கொன்றவரும் கேசவரும் ஹரியுமான கிருஷ்ணர் தாருகனை நினைத்தார். அந்தஸூதனும் ஸாத்யகியுடன் அருகில் வந்து 'தேவரே! புறப்படலாம்' என்றும் சொன்னான். பிறகு, பாண்டவர்கள் துக்கத்தை அடைந்த முகமுள்ளவர்களாகி சிரத்தில் அஞ்சலிசெய்துகொண்டு பாஷ்பம் ததும்பின கண்களால் புருஷோத்தமரான கிருஷ்ணரை இடைவிடாமல் ஆவலுடன் பார்த்துக்கொண்டு மிக்க வருத்தத்தால் அப்பொழுது (ஒன்றும்) சொல்லாமலிருந்தார்கள். அப்பொழுது, பகவானும் தேவருமான கிருஷ்ணரும் வருத்தத்துடன் குந்தி, திருதராஷ்டிரன், காந்தாரி, விதுரர், திரௌபதி, கிருஷ்ணத்வைபாயனரான வியாஸர், மற்றுமுள்ள ரிஷிகள், மந்திரிகள் இவர்களிடம் அனுமதிபெற்று ஸுபத்திரையையும் புத்திரனுடன்கூடின உத்தரையையும் கையினால் தடவிக்கொடுத்து (ப்பிறகு) அந்த வீட்டிலிருந்து வெளியில்வந்து சைப்யம், ஸுக்ரீவம், மேகபுஷ்பம், வலாஹகம் என்னும் குதிரைகள் பூட்டப்பட்டதும் புத்திமானான கருடனை த்வஜமாகக் கொண்டதுமான ரதத்தின்மீது ஏறினார். யுதிஷ்டிரராஜரும் பிரியத்தால் இவருடன்கூட ஏறினார். கௌரவர்களுக்குப்பதியான யுதிஷ்டிரர் அப்பொழுது ஸூதர்களுள் உத்தமனான தாருகனென்னும் ஸாரதியை விரைவில் விலக்கிவிட்டுத் தாமே கடிவாளங்களைப் பிடித்தார். அர்ஜுனனும் ஏறி மங்களகரமும் ஸுவர்ணதண்டமுள்ளதும் பெரிதுமான விசிறியை முடியில் பிரதக்ஷிணமாக வீசினான். அவ்வாறே, பராக்ரமமுள்ள பீமஸேனனும் ரதத்திலேறி நூறுகம்பிகளுள்ளதும் திவ்யமான மாலைகளால் விளங்கும்படி செய்யப்பட்டதும் வைடூர்யமணிகளிழைத்த தண்டமுள்ளதும் ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தக் குடையை, சார்ங்கமென்னும் வில்லைக்கொண்ட வாஸுதேவருக்குச் சீக்கிரமாகப் பிடித்தான். நகுலனும் ஸஹதேவனும் சீக்கிரமாக ரதத்திலேறி இரண்டு வெண்சாமரங்களை (எடுத்து) ஜனார்த்தனரான கிருஷ்ணருக்கு வீசினார்கள். பீமஸேனனும் அர்ஜுனனும் பகைவரைக் கொல்பவர்களான நகுலஸஹதேவர்களும் 'இரைச்சல்வேண்டாம்' என்று சொல்லிக்கொண்டு ஸந்தோஷத்துடன் கிருஷ்ண

ரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். மூன்றுயோஜனை தூரம் சென்ற வுடன், வாஸுதேவர் பாண்டவர்களைத் தழுவி, வணங்கினவர்களான அவர்களெல்லாரையும் (அனுமதிகொடுத்து) அனுப்பிவிட்டு, துவா ரகைக்குச் சென்றார். அவ்வாறே, பாண்டவர்கள் கோவிந்தரை நமஸ் கரித்துவிட்டு அதுமுதல் தர்மத்தை முக்கியகதிபாகக் கொண்ட வர்களாகிக் கபிலாதான முதலான தானங்களைச் செய்தார்கள். பாண்டவர்கள் ஹ்ருதயத்திலிருக்கும் மதுஸூதனருடைய வாக் கியங்களை அடிக்கடி நினைத்து நினைத்து மனத்தால் பூஜித்தார்கள். தர்மாத்மாவான யுதிஷ்டிரரோ ஜனார்த்தனரை ஹ்ருதயத்தில் தியானம் செய்துகொண்டு அவரிடத்தில் பக்தியுள்ளவரும் அவரி டத்தில் மனத்தைச் செலுத்தியவரும் யோகம்செய்பவரும் அவரையே ஆராதிப்பவரும் அவரையே பிரதானமாகக் கொண்ட வருமாக இருந்தார்.

அரசரே! இவ்விதம் சொல்லப்பட்டதும் முன்நடந்ததும் பவி த்ரமும் பாவங்களைப் போக்குவதுமான வைஷ்ணவதர்மோபதேச த்தை நான் உமக்குச் சொன்னேன். மஹாராஜரே! கௌரவர்களை வஹிப்பவரே! விஷ்ணுவினால் சொல்லப்பட்ட அந்தத் தர்மோப தேசத்தைக் கேளும். மற்றொன்றினால் விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதத்தை அடையமாட்டீர்; அதனாலேயே அடைவீர்" என்று கூறினார்.

---

*வைஷ்ணவதர்மபர்வம் முற்றிற்று.

ஆஶ்வமேதிகபர்வம் முற்றிற்று.

---

*இந்த வைஷ்ணவதர்மபர்வமுழுதும் நீலகண்டீய வியாக்யான பாடத்தில் இல்லை. இது அவஶ்யம் இருக்கத்தக்கதே. இந்த வைஷ்ணவதர்மபர்வத்திலுள்ள சில ஶ்லோகங்கள், 'அபரார்க்கம்' 'சதுர்வர்க்க சிந்தாமணி' முதலிய தர்மசாஸ் திர க்ரந்தங்களில் உதாரணமாகக் காட்டப்பட்டு, "இங்ஙனம் ஆஶ்வமேதிக பர்வத்தில் சொல்லப்பட்டுள்ளன" என்று இடமும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும், இந்தக் கதைகள் இல்லாவிட்டால் கதைத்தொடர்ச்சியும் பொருந்த வில்லை. அப்படியிருக்க இந்த வைஷ்ணவதர்மபர்வம் உத்தரதேசபாடத்தில் எடுபட்டிருப்பதற்குக் காரணம் விளங்கவில்லை.

ஶ்ரீ꞉

ஶ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம꞉.

ஶ்ரீக்ருஷ்ணத்வைபாயனாய நம꞉.

# ஸ்ரீ மஹாபாரதம்.

## ஆஶ்ரமவாஸிகபர்வம்.

### முதலாவது அத்யாயம்.

### ஆஶ்ரமவாஸபர்வம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் ।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ॥

(யுதிஷ்டிரரின் அரசாட்சியும், குந்திமுதலியோர் காந்தாரியிடம் மரியாதையா யிருத்தலும், பீமன்தவிர மற்றையோர் யுதிஷ்டிரர்கட்டளைப்படி திருதராஷ்டிரனை அனுஸரித்ததும்.)

ஜனமேஜயர், "(முனிவரே!) என்னுடைய முன்னோர்களுக்குப் பிதாமஹர்களான பாண்டவர்கள் தம்முடைய பாட்டன்மார்களின் ராஜ்யத்தை அடைந்து மஹாத்மாவான திருதராஷ்டிர மஹாராஜனிடத்தில் எவ்விதம் இருந்தார்கள்? மந்திரிகளும் புத்திரர்களும் கொல்லப்பட்டவனும் ஆதாரமற்றவனும் செல்வத்தைஇழந்தவனுமான அந்தத் திருதராஷ்டிர ராஜனும் துக்கிக்கத்தக்கவளான காந்தாரியும் எவ்விதம் இருந்தார்கள்? மஹாத்மாக்களும் என்னுடைய முன்னோர்களுமான அந்தப் பாண்டவர்கள் ராஜ்யத்தில் எவ்வளவுகாலம் இருந்தார்கள்? இவற்றை எனக்கு விவரித்து உரைக்கக்கடவீர்" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"மஹாத்மாக்களும் பகைவர்களைக்கொன்றவர்களுமான பாண்டவர்கள் ராஜ்யத்தை அடைந்து திருதராஷ்டிரனை முன்னிட்டுக்கொண்டு

---

1. இதன் உரைவிசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கம் குறிப்பிற்காண்க.

பூமியைப் பரிபாலித்தனர். கௌரவர்களுள் சிறந்தவரே! விதுரரும் ஸஞ்சயனும் தாஸீபுத்ரனும் மேதாவியுமான யுயுத்ஸுவும் திருதராஷ்டிரனை ஆராதித்தனர். பாண்டவர்கள் பதினைந்து வருஷங்கள் எல்லாக் காரியங்களையும் அந்த அரசனிடம் தெரிவித்து அவனால் அனுமதிசெய்யப்பட்டு நடத்திவந்தார்கள். அந்த வீரர்கள் தர்மராஜருடைய கருத்துக்கு உட்பட்டு எப்பொழுதும் அந்தத் திருதராஷ்டிரராஜனை அருகிற் சென்று பாதங்களில் நமஸ்கரித்து உபாஸித்து (அவரால்) சிரவஸில் மோக்கப்பட்டு எல்லாக்காரியங்களையும் செய்துவந்தனர். குந்திபோஜன்மகளான குந்தியும் காந்தாரியை அனுஸரித்திருந்தாள். த்ரௌபதியும் ஸுபத்ரையும் மற்றுமுள்ள பாண்டவஸ்திரீகளும் அவ்விரண்டு மாமிமார்களிடத்திலும் விதிப்படி பணிவிடையை ஸமமாகச் செய்துவந்தனர். மஹாராஜரே! யுதிஷ்டிரர் திருதராஷ்டிரனுக்கு அரசர்களுக்கே முழுதும் ஏற்றவைகளான மிகச்சிறந்த சயனங்களையும் ஆடைகளையும் ஆபரணங்களையும் பலவிதமான பக்ஷணங்களையும் ஆகாரங்களையும் கொடுத்துவந்தார். அவ்விதமே, குந்தியும் காந்தாரியினிடத்தில் குருவினிடத்தில் நடப்பதுபோல நடந்துவந்தாள். கௌரவரே! விதுரரும் ஸஞ்சயனும் யுயுத்ஸுவும், பிராயமுதிர்ந்தவனும் புத்ரர்களையிழந்தவனுமான அவ்வரசனுக்குப் பணிவிடை செய்தனர். துரோணருடைய மைத்துனரும் அன்பரும் ப்ராம்மணரும் மஹானும் சிறந்த வில்லாளியுமான க்ருபரும் அப்பொழுது அவனுடைய ஸமீபத்தில் வஸித்துவந்தார். பகவானும் புராணரிஷியுமான வியாஸரும் தேவர்கள் ரிஷிகள் பித்ருக்கள் ராக்ஷஸர்கள் இவர்களுடைய கதையைச் சொல்லிக்கொண்டு எப்பொழுதும் அரசனோடு இருந்தார். யுதிஷ்டிரர், திருதராஷ்டிரனால் அனுமதிகொடுக்கப்பட்டு, தர்மத்தோடுகூடினவைகளும் வ்யவஹாரத்தோடுகூடினவைகளுமான கார்யங்களைச் செய்வித்தார். அந்தத் திருதராஷ்டிரன், [1]ஸாமந்தர்களிடமிருந்து பிரியமானவைகளும் மிகப்பெரியவைகளுமான காரியங்களையும் விதுரருடைய நல்லநீதியினால் மிகச்சிறிய பொருள்களால் அடைந்தான். அவன், சிறையில் வைக்கப்பட்டவர்களையும் கொல்லத்தக்கவர்களையும் விடுவித்தான். அரசரான தர்மபுத்ரர் ஒருபொழுதும் ஒன்றும்சொல்லவில்லை. வேடிக்கையாக உலாவும் காலங்களிலோ, கௌரவராஜரான யுதிஷ்டிரர், எல்லாஇஷ்டமான வஸ்துக்களையும் கொண்டுவந்து திருதராஷ்டிரனுக்கு அளித்தார். [2]ஆரா

1. பக்கத்து நாட்டரசர்கள்.

2 'சாகவிசேஷங்களைச் சமைப்பவர்கள்' என்பது பழைய உரை.

விகர்களும் [1]ஸூபகாரர்களும் [2]ராகஷாடவிகர்களும் திருதராஷ்டிர ராஜனை முன்போல உபசரித்தனர். பாண்டவர்கள் மிகச்சிறந்த உடைகளையும் பலவிதமாலைகளையும் காலந்தவறாமல் திருதராஷ்டிரனுக்குக் கொடுத்தார்கள். [3]மைரேயத்தையும் [4]மதுவையும் மாம்ஸத்தையும் தெளிந்த பானகங்களையும் விசித்ரமான பலவிதத் தின்பண்டங்களையும் அவனுக்கு முன்போலச் செய்துகொடுத்தனர். ஆங்காங்கிருந்து வரும் எல்லா மன்னர்களும் கௌரவஸ்ரேஷ்டனான திருதராஷ்டிரனை முன்போல உபசரித்தனர். புருஷஸ்ரேஷ்டரே! குந்தியும் த்ரௌபதியும் ஸாத்வதகுமாரியும் புகழ்பெற்றவளுமான ஸுபத்ரையும் நாககன்னிகையான உலூபியும் சித்ராங்கதையென்னும் தேவியும் திருஷ்டகேதுவின் [5]ஸஹோதரியும் ஜராஸந்தனுடைய [6]பெண்ணும் ஆகிய இவர்களும் மற்றுமுள்ள அநேகம் ஸ்திரீகளெல்லாரும் வேலைக்காரிகளாயிருந்து கொண்டு ஸுபலனுடைய புத்ரியான காந்தாரிக்குப் பணிவிடை செய்தனர். யுதிஷ்டிரர், 'புத்ரர்களையிழந்த இவர் சிறிதும் துயரப்படாமலிருக்கவேண்டும்' என்று எப்பொழுதுமே தம் ஸஹோதரர்களுக்கு உத்தரவு செய்துவந்தார். அப்பொழுது, அந்தப்பாண்டவர்கள் சிறந்த பொருளுள்ளதான தர்மராஜருடைய இவ்வித வசனத்தைக்கேட்டு, பீமன் ஒருவனைத்தவிர, மற்றவர்கள் (அவ்விதமே) விசேஷமாக நடந்து வந்தனர். திருதராஷ்டிரனுடைய கெட்டபுத்தியினால் சூதாடும் ஸபையில் நடந்த அது வீரனான அந்தப் பீமனுடைய உள்ளத்தைவிட்டு விலகவே இல்லை.



1 பருப்பைச் சமைப்பவர்கள்.

2 'திப்பிலியும் சுக்கும் சர்க்கரையும் சேர்ந்த பருப்புரஸம்' என்பது பழையவுரை.

3 கருப்பஞ்சாற்றினால் செய்த கள். மிரை யென்னும் தேசத்திலுண்டானது. ஆதிபர்வம் 698 பக்கம் குறிப்பிலும் காண்க.

4 இலுப்பைப் பூவினால் செய்த கள்.

5 இவள் நகுலனுடைய மனைவி ரேணுமதி யென்பவள். ஆதிபர்வம் 215-ம் பக்கம் பார்க்க.

6 இவள் ஸஹதேவன் மனைவி. இந்தப்பர்வம் 27-ம் அத்யாயத்தில் காண்க.

## இரண்டாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

(யுதிஷ்டிரர் தம்பிமாரோடு கூடித் திருதராஷ்டிரனை மகிழ்வித்தது)

இவ்விதம் பாண்டவர்களால் நன்குபூஜிக்கப்பட்டவனும் அம்பிகா புத்திரனுமான திருதராஷ்டிரராஜன் ரிஷிகளால் சூழப்பட்டு முன்போல் ஸஞ்சரித்தான். கௌரவஸ்ரேஷ்டனான அவன் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்க அக்ரஹாரங்களையும் தானம்செய்தான். குந்திபுத்திரரான யுதிஷ்டிரராஜர் அவற்றையெல்லாம் ஸந்தோஷமாக ஒத்துக் கொண்டார். குரூரத்தன்மையற்ற ஸ்வபாவத்தைப் பிரதானமாகக் கொண்டவரும் பூபதியுமான அந்தயுதிஷ்டிரராஜர், அப்பொழுது, ஸந்தோஷத்துடன், ஸஹோதரர்களையும் மந்திரிகளையும்பார்த்து, ‘நானும் நீங்களும் இந்தஅரசரைக் கௌரவிக்கவேண்டும்; திருதராஷ்டிரருடைய கட்டளையை மீறுதவனே எனக்கு நண்பன். மீறும்மனிதன் எனக்குப் பகைவனும் தண்டிக்கப்படத்தக்கவனுமாவான்' என்றுசொன்னார். யுதிஷ்டிரராஜர், சிலநாட்கள்சென்றவுடன், (திருதராஷ்டிரனுடைய) புத்திரர்களின் ச்ராத்தத்தில் அவனுடைய இஷ்டம்வரையில் தனங்களைக்கொடுத்தார். பிறகு, குருகுலத்தில் பிறந்தவனும் சிறந்தசித்தமுள்ளவனுமான அந்தத்திருதராஷ்டிரராஜன் தகுந்தபிராம்மணர்களுக்கு மிகுதியான தனங்களைக் கொடுத்தான். தர்மராஜரும் பீஷ்மனும் அர்ஜுனனும் நகுலனும் ஸஹதேவனுமான அந்தப்பாண்டவர்கள், ‘பிராயம் முதிர்ந்தவரும் புத்திர பௌத்திரர்களுடைய வதத்தால் பீடிக்கப்பட்டவருமான அந்தத்திருதராஷ்டிரராஜர் நம்மால்செய்யப்பட்ட சோகத்தை அடைந்து எவ்விதம் மரிக்காமலிருப்பர்?' என்று ஆலோசித்து அவனிடத்தில், கருணையால் அவற்றை யெல்லாம் அனுஸரித்தனர். குருவீரனான திருதராஷ்டிரன் தன் புத்திரர்கள்ஜீவித்திருந்தால் எவ்வளவு ஸுகம்கிடைக்குமோ அவ்வளவுஸுகத்தையும் நிலைபெற்றபோகங்களையும் அடைந்தான். பிறகு, பாண்டுகுமாரர்களான அந்தஐந்துஸஹோதரர்களும் ஒன்றுசேர்ந்து அவ்விதஸ்வபாவமுள்ளவர்களாயிருந்து கொண்டு திருதராஷ்டிரனுடையஉத்தரவை நன்கு அனுஷ்டித்தார்கள். திருதராஷ்டிரனும் வணக்கமுள்ளவர்களும் நியமம்தவறுதவர்களும் சிஷ்யர்களுடையநடையை அடைந்தவர்களுமான அவர்களெல்லாரையும், குரு (சிஷ்யர்களை அங்கீகரிப்பது)போல, அங்கீகரித்தான். அந்தக்

காந்தாரியும் புத்திரர்களுக்குப் பலவிதமான ஸ்ராத்தகர்மங்களைச்செய்து பிராம்மணர்களுக்கு இஷ்டங்களைக்கொடுத்துக் கடன்தீர்ந்தவளானாள். இவ்விதம் தர்மத்தைச்செய்பவர்களுள் சிறந்தவரும் சிறந்தபுத்திமானும் தர்மராஜருமான யுதிஷ்டிரர் ஸஹோதரர்களுடன்சேர்ந்து அந்தஅரசனைப் பூஜித்தார். அரசனும் மிகப்பெரியதேஜஸுள்ளவனும் பிராயம் முதிர்ந்தவனும் குருகுலத்தைத்தாங்குபவனுமான அந்தத்திருதராஷ்டிரன் அப்பொழுது பாண்டவனிடத்தில் சிறிதும் அப்பிரியத்தைக் காணவில்லை. நல்லொழுக்கத்திலிருப்பவர்களும் மஹாத்மாக்களுமான பாண்டவர்களிடத்தில் அம்பிகாபுத்திரனும் அரசனுமான திருதராஷ்டிரன் பிரீதியுள்ளவனாக இருந்தான். ஸுபலனுடையபெண்ணான காந்தாரியும் அந்தப்புத்திரசோகத்தைவிலக்கிவிட்டு (அவர்களிடத்தில்) தன்புத்திரர்களிடத்திற்போல எப்பொழுதும் பிரீதியுள்ளவளாக இருந்தாள். குருகுலத்தில்பிறந்தவரும் கௌரவஸ்ரேஷ்டருமான யுதிஷ்டிரர், விசித்ரவீர்யனுடையகுமாரனும் அரசனுமான திருதராஷ்டிரனுக்கு எப்பொழுதும் பிரியமானகார்யங்களையே செய்தார்; அப்பிரியங்களைச்செய்யவில்லை. மஹாராஜரே! அந்தத்திருதராஷ்டிரராஜனும் புகழ்பெற்றவளானகாந்தாரியும் எந்தஎந்தவார்த்தையைச் சொல்லுவார்களோ, காரியம் பெரிதாயினும் சிறிதாயினும், அந்தஅந்த வார்த்தையைப் பாண்டவர்களுள்ஸ்ரேஷ்டரும் சத்துருவீரர்களைக்கொல்பவருமான அந்தயுதிஷ்டிரராஜர் அவர்களைப்பூஜித்துச் செய்துவந்தார். அவருடைய அந்தநடத்தையால் அந்தத்திருதராஷ்டிரராஜன் பிரீதியுள்ளவனாகி, மந்தபுத்தியுள்ளவனும் புத்திரனுமான அந்தத்துரியோதனனை நினைத்து மனவருத்தமடைந்தான். எப்பொழுதும் திருதராஷ்டிரராஜன் விடியற்காலத்தில் எழுந்திருந்து சுத்தனாகஇருந்துகொண்டு ஜபம்செய்துவிட்டுப் பாண்டவர்களுக்கு யுத்தங்களில் வெற்றியை அனுக்கிரஹிப்பான். பிறகு, அவன் பிராம்மணர்களை ஸ்வஸ்திவாசனம்செய்யச்செய்து அக்னியில் ஹோமம் செய்துவிட்டுப் பாண்டவர்களுக்கு (நீண்ட) ஆயுளைவேண்டுவான். அந்தத்திருதராஷ்டிரராஜன் பாண்டவர்களிடமிருந்து எப்பொழுதும் எவ்விதமானபிரீதியை அடைந்தானோ அவ்விதமான மேலானபிரீதியை முன்பு அக்காலத்தில் தன் புத்திரர்களிடமிருந்தும் அடையவில்லை. அந்தயுதிஷ்டிரர் அப்பொழுது பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் எவ்விதமிருந்தாரோ அவ்விதமே வைஸ்யர்களினுடையகூட்டங்களுக்கும் சூத்திரர்களினுடைய கூட்டங்களுக்கும் பிரியராகஇருந்தார். அவர் முற்காலத்தில் திருதராஷ்டிரபுத்திரர்கள் செய்த கெடுதியை மனத்தில்

நினையாமல் அவ்வரசனை அனுஸரித்தார். எவனாவது ஒருவன் தவறுதலால் திருதராஷ்டிரன்விஷயத்தில் ஏதாவது ஒருகுற்றத்தைச் செய்துவிட்டால் அவன் சிறந்தபுத்தியுள்ள யுதிஷ்டிரருக்குப் பகைவனுவான். ஒருமனிதனும் யுதிஷ்டிரரிடமுள்ளபயத்தால் திருதராஷ்டிரராஜன் மீதும் துர்யோதனன்மீதும் பாவத்தைச்சொல்லவில்லை. புருஷஶ்ரேஷ்டனை அந்தத்திருதராஷ்டிரராஜனும் காந்தாரியும் விதுரரும் நடையினுலும் (தம்மைப்)போஷிப்பதினுலும் பகைவரற்றயுதிஷ்டிரர்மீது ஸந்தோஷமடைந்தார்கள்; த்ருதராஷ்டிரராஜன் பீமன்மீது ஸந்தோஷப்படவில்லை. பீமனும் தர்மபுத்திரரான அரசரை உறுதியாக அனுஸரித்தான். (ஆனுலும்), திருதராஷ்டிரனைக்கண்டு எப்பொழுதும் மனவருத்தமுள்ளவனுக இருந்தான். பகைவரைக்கொல்பவனுனபீமன், திருதராஷ்டிரராஜனை அனுஸரித்திருக்கும் தர்மபுத்திரரை மிக்ககோபமுள்ளவனும் உள்ளத்தில் பிரியமில்லாதவனுமாயிருந்துகொண்டு அனுஸரித்தான்.

## மூன்றுவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம் (தொடர்ச்சி.)

———:O:———

**(பீமனது நிந்தையைக்கேட்ட திருதராஷ்டிரன் காந்தாரியுடன் காடு செல்லத் துணிந்ததும், நகரஜனங்களைவரவழைத்துத்தனது நிச்சயத்தை அவர்களுக்குத்தெரிவித்ததும்.)**

அப்பொழுது, ஜனங்கள் யுதிஷ்டிரராஜருக்கும் துர்யோதனனுடையபிதாவுக்கும் ராஜ்யத்திலுள்ள ஸ்நேஹத்தைப்பற்றி வேற்றுமையைக் காணவில்லை. அரசரே! கௌரவராஜன் எப்பொழுது மூர்க்கனுன புத்திரனை நினைப்பனே அப்பொழுது அவ்வரசன் பீமனைப் பற்றிச் சித்தத்தில் கேடுநினைப்பான். கௌரவனுன திருதராஷ்டிரனும் பீமஸேனனும் ஒருவருக்கொருவர் உள்ளத்தில் வேறுவேறு எண்ணமுள்ளவர்களும் ஆனுலும் ஒருவரோடொருவர் இனிமையாகப்பேசுகின்றவர்களுமாக இருந்தார்கள். பீமன் அரசனுடையகெட்டஆலோசனையையும் சிலநடைகளையும் நினைத்து, அவனுக்கு ரஹஸ்யமாக அப்பிரியங்களைச் செய்தான். கபடமான ஆட்களைக்கொண்டு எப்பொழுதும் அவனுடைய கட்டளையையும் மாற்றினுன். 'மந்தபுத்தியுள்ளவர்களான அவர்கள் கொல்லப்பட்டனர்' என்று இவ்வசனத்தையும் அடிக்கடி சொன்னுன். மேலும், பொறுமையுள்ளவனும் பயங்கரனுமான அந்தப் பீமன், பகை

வனை துர்யோதனனையும் கர்ணனையும் துச்சாஸனனையும் நினைத்து மிக்ககோபங்கொண்டு அன்புள்ளவர்களுடைய நடுவிலிருந்து திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் கேட்கும்படி கைகளைத்தட்டிக்கொண்டு பின்வருமாறு கடுமையானவார்த்தையைச் சொல்லலானான்: ‘பலவித சஸ்திரங்களாலும் அஸ்திரங்களாலும் போர்புரிபவர்களான குருடனான மன்னனுடைய புத்திரர்கள்எல்லாரையும் இருப்புத்தூண்போன்ற கைகளுள்ள நான் பரலோகத்தைஅடையும்படி செய்தேன். எந்தக்கைகளின் மத்தியைஅடைந்து திருதராஷ்டிரனுடைய புத்திரர்கள் நாசத்தை அடைந்தார்களோ இருப்புத்தடிக்கொப்பானவைகளும் (பகைவரால்) அணுகமுடியாதவைகளுமான என்னுடைய அவ்விரண்டு புஜங்களும் இதோ இருக்கின்றன. எந்தக்கைகளால் துர்யோதனன், புத்திரர்களுடனும் பந்துக்களுடனும், நாசத்தைஅடையும்படிசெய்யப்பட்டானோ சந்தனத்தால் பூசப்பட்டவைகளும் (பகைவர்களால்) நமஸ்கரிக்கத்தக்கவைகளுமான என்னுடைய அவ்விருகைகளும் இதோ இருக்கின்றன’ என்றுசொன்னான். திருதராஷ்டிரராஜன் இவைகளும் மற்றுமுள்ளவைகளுமான விருகோதரனுடைய சல்யம்போன்ற பலவிதமான அந்த வார்த்தைகளைக் கேட்டு மனவருத்தமடைந்தான். சிறந்தபுத்தியுள்ளவளும் காலத்தின் மாறுதலைஉணர்ந்தவளும் எல்லாத்தர்மங்களையும் அறிந்தவளுமான காந்தாரிதேவியும் அந்தஅப்பிரியமானவசனங்களைக் கேட்டு மேன்மைபெற்றவளான குந்தியை உற்றுப்பார்த்துப் பீமனைச் சபிக்கும் விஷயத்தில் புத்தியைச் செலுத்தவில்லை. பிறகு, நராதிபனை திருதராஷ்டிரராஜன் பதினைந்துவருஷங்கள்சென்றதும், பீமனுடைய வார்த்தைகளாகிற பாணங்களால் பீடிக்கப்பட்டு, (அங்குவஸிப்பதில்) ஒழிவைஅடைந்தான். சிறந்தபுத்தியுள்ளஅவன், யுதிஷ்டிரர் ஸுகத்தில் ஆசைகொண்டு (அதற்காக) மிக்ககஷ்டப்படுகிறாரென்று ஆலோசித்தறிந்து (தான்) தவம்புரிய எண்ணம்கொண்டான். அதனைக் குந்தியின் புத்திரரான யுதிஷ்டிரராஜராவது அர்ஜுனனாவது குந்தியாவது புகழ்பெற்ற திரௌபதியாவது அறியவில்லை. மாத்ரியின்புத்திரர்களான நகுலஸஹதேவர்கள் அரசனுடைய சித்தத்தை ரக்ஷிப்பவர்களாகிப் பீமனுடைய கருத்திற்கிணங்கித் தாம் அப்பிரியத்தைச்சொல்லவில்லை. பிறகு, திருதராஷ்டிரன் அன்புடையவர்களை வருவித்து, அவர்களைப்பார்த்து, கண்ணீரால் மிக்க தடுமாற்றமுற்றுப் பின்வரும் வசனத்தை நன்கு சொல்லலானான். ‘கௌரவர்களே! கௌரவர்களுக்கு நாசம் நேர்ந்தவிதம் உங்களுக்குத் தெரியும். அதெல்லாம் என்னுடைய குற்றத்தால்

நடந்ததென்று அறியவேண்டும். புத்தியில்லாதவனான நான் கெட்ட புத்தியுள்ளவனும் ஞாதிகளுக்குப் பயத்தைவிருத்திபண்ணுகிறவனு மான துர்யோதனனைக் கௌரவர்களுக்கு அதிபதியாக அபிஷேகம் செய்தேன். புத்திரனிடத்தில் சினேகத்திற்கு வசப்பட்டவனும் கெட்ட புத்தியுள்ளவனுமான நான், சிறந்தபொருளுள்ள கிருஷ்ணனுடைய வாக்கியத்தையும் 'பாபியான இந்தத்துர்யோதனனை நன்குகொன்றுவிடு' என்று வித்வான்களான விதுரன், பீஷ்மர், துரோணர், கிருபர், மகாத்மாவானவியாஸபகவான், ஸஞ்சயன் ஆகிய இவர்களும் காந்தாரியும் அடிக்கடிசொன்ன நன்மையையும் கேட்கவில்லை. ஆகையால், நான் இவ்விதம் தவிக்கிறேன். நான் நற்குணங்கள் பொருந்தியவர்களும் மகாத்மாக்களுமான பாண்டுபுத்திரர்களுக்குத் தகப்பன்பாட்டன்வழியாக வந்ததும் ஜ்வலிக்கின்றதுமான இந்தராஜ்யலக்ஷ்மியைக்கொடுக்கவில்லை. (அதனால் இவ்விதம் தபிக்கிறேன்.) எல்லாஅரசர்களின் விநாசத்தையும் பார்க்கின்றவனும்ஜனார்த்தனனுமான கிருஷ்ணன் இதை மேலானக்ஷேமமாக எண்ணினன். நான் அப்பிரியமான அக்காலத்திலுள்ள ஆயிரக்கணக்கான என்னுடைய கெட்டநடைகளை (இப்பொழுது) மனத்தில் சல்யங்களாகத் தரிக்கிறேன். இப்பொழுது பதினைந்தாவதுவருஷத்தில் மிக்க ஸந்தாபமடைகிறேன். ஆகையால், மிக்ககெட்டபுத்தியுள்ளநான் இந்தப் பாவத்தைவிலக்கிக்கொள்ள ஆயத்தனாகஇருக்கிறேன். வழக்கமாக [1]நான்காவது காலத்திலும் சிலநாள் [2]எட்டாவது காலத்திலும் தாகத்தைத் தணிக்கக்கூடிய கஞ்சிமுதலியவற்றைப் புஜிக்கிறேன். என்னுடைய இந்தக்காரியம் காந்தாரிக்குத் தெரியும். எல்லாவேலைக்காரர்களும் எப்பொழுதும் யுதிஷ்டிரனிடமுள்ள பயத்தால்,('இவர்)ஆகாரம்செய்கிறார்' என்று (சொல்லிக்கொண்டு)என்னிடம் வருகின்றனர். (இல்லாவிடில்)யுதிஷ்டிரன் மிக்கவருத்தமடைவான். நான் நியமமென்கிற வியாஜத்தால் ஜபத்தை முக்யமாகக்கொண்டவனும் கிருஷ்ணாஜினம் தரித்தவனுமாகப் பூமியில்(பரப்பின) தர்ப்பங்களின்மீது சயனம்செய்கிறேன். புகழ்பெற்றவளான காந்தாரியும் அவ்விதமே செய்கிறாள். நான் யுத்தங்களில் (பின்வாங்கி) ஓடாதவர்களும் வீரர்களுமான நூறுபுத்திரர்களும் கொல்லப்பட்டவிஷயத்தில் பச்சாத்தாபப்படவில்லை. (பெரியோர்கள்) அதை க்ஷத்திரியதர்மமாகக் கருதுகின்றனரல்லரோ?'' என்று சொன்னான்.

---

1. கக௨-நாழிகைக்குமேல், சரு-நாழிகைவரையிலுள்ள காலம்.

2. உகூ௨-நாழிகைக்குமேல் ௱௩௰-நாழிகைவரையிலுள்ள காலம். ஆச்ரம வாஸிகபர்வம் 248-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

திருதராஷ்டிரன், இவ்விதம் சொல்லிவிட்டுத் தர்மபுத்திரரைநோக்கி, 'யதுகுலத்தில்பிறந்த குந்தியைத் தாயாகவுடையவனே! உனக்கு க்ஷேமமுண்டாகுக. என்னுடைய இந்தவார்த்தையைத் தெரிந்துகொள். புத்ர! நான் உன்னால் நன்குபரிபாலிக்கப்பட்டு ஸுகமாக வஸித்தேன். நான் அடிக்கடி தானங்களையும் ஸ்ராத்தங்களையும் கொடுத்தேன். புத்திர! நானும் சக்திக்குத்தக்கவாறு பெரியபுண்ணியத்தைச் செய்திருக்கிறேன். (ஏனெனில்), புத்திரர்களை இழந்தவளான இந்தக் காந்தாரியும், தைரியத்துடன் என்னை நன்குபார்த்துவருகிறாள். திரௌபதிக்கு அபகாரம் செய்தவர்களும் உன்னுடையசெல்வத்தைக் கவர்ந்தவர்களும் கொடியவர்களுமான அவர்கள் யுத்தத்தில் தம்தர்மத்தினால் கொல்லப்பட்டுச் சென்றுவிட்டார்கள். குருநந்தன! அவர்களுக்காகச் செய்யவேண்டிய காரியத்தை நான் காணவில்லை. அவர்களெல்லாரும் எதிர்த்துநின்று கொல்லப்பட்டுச் சஸ்திரங்களால் ஜயிக்கப்பட்ட உலகங்களை அடைந்தார்கள். ஆனால், இப்பொழுது எனக்கும் உன்(அன்னையான) காந்தாரிக்கும் நன்மையும் புண்ணியமுமான காரியம் செய்துகொள்ளவேண்டும். ராஜேந்திர! ஆகையால், நீ அனுமதிகொடுக்கவேண்டும். நீயோ சஸ்திரதாரிகளுள் சிறந்தவனும் எப்பொழுதும் தர்மத்தில்பிரியமுள்ளவனும் பிராணிகளுக்கு அரசனும் குருவுமாக இருக்கிறாய். ஆகையால், நான் இதனைச் சொல்லுகிறேன். வீரனே! ராஜனே! நான் உன்னிடம் அனுமதிபெற்றுக்கொண்டு [1]சீரத்தையும் மரப்பட்டையையும் தரித்துக்கொண்டு இந்தக்காந்தாரியுடன் வனம்செல்லவேண்டும். நான் உனக்கு ஆசீர்வாதம்செய்துகொண்டு வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கப்போகிறேன். பரதர்களில்சிறந்தவனே! ராஜனே! ஆயுளின்முடிவில் புத்திரர்களிடத்தில் ஐஸ்வர்யத்தைவைத்துவிட்டுக் காடுசெல்வது நம்முடையகுலத்தில் எல்லாருக்கும் வழக்கம். வீர! நான் அந்தவனத்தில் இந்தப்பத்னியுடன் காற்றைப்புஜிப்பவனாகவாவது ஆகாரமேஇல்லாதவனாகவாவது வஸித்துக்கொண்டு சிறந்ததவத்தைச் செய்யப்போகிறேன். ஐயனே! நீ பூமிக்கு இறைவனாக இருப்பதால், நீயும் அத்தவத்தின்பயனில் பாகத்தை அடைவாய். அரசர்கள் புண்ணியத்திற்கும் பாவத்திற்குமுள்ளபயனில் பாகத்தை அடைபவர்களல்லரோ?' என்று சொன்னான்.

1 கிழிந்த பழையவஸ்திரம்.

## நான்காவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

———:o:———

(திருதராஷ்டிரன் வனஞ்செல்ல யுதிஷ்டிரரிடம் அனுமதி கேட்டதும், யுதிஷ்டிரர் வருத்தத்துடன் தடுத்ததும், வியாஸர் வந்ததும்.)

யுதிஷ்டிரர், " அரசரே! நீர் இவ்விதம் துக்கப்படுவதால் ராஜ்யமானது எனக்கு விருப்பத்தை உண்டுபண்ணவில்லை. மிக்க கெட்டபுத்தியுள்ளவனும் ராஜ்யத்தில் ஆசையுள்ளவனும் தவறுதலுள்ளவனுமான என்னை நிந்திக்கவேண்டும். துக்கத்தால் பீடிக்கப்பட்டவரும் உபவாஸத்தால் மிக இளைத்தவரும் ஆகாரத்தை விட்டவரும் பூமியில் சயனம் செய்பவருமாக நீர் வீட்டில் வஸிப்பதை நானும் (என்) ஸகோதரர்களும் தெரிந்துகொள்ளவில்லை. நீர் முந்தி எனக்கு நம்பிக்கையையுண்டு பண்ணி இவ்விதமான துக்கத்தை அனுபவித்தீர்; ஆகையால், வெளிப்படையாக இல்லாத புத்தியையுடைய உம்மால் மூடனை நான் வஞ்சிக்கப் பட்டேன். ஆ! ராஜரே! என்னுடைய (பிதாவான) நீர் இவ்விதமான துக்கங்களை அடைந்தீர். ஆகையால், எனக்கு ராஜ்யத்தாலும் போகங்களாலும் யஜ்ஞங்களாலும் ஸுகத்தாலும் என்ன பயன்? அரசரே! இப்பொழுது துக்கத்தையுடையவராயிருக்கும் உம்முடைய இந்த வார்த்தையால் என்னையும் ராஜ்யத்தையும் பீடிக்கப்பட்டவர்களாக அறிகிறேன். நீர் எங்களுக்குத் தகப்பனார். நீர் தாயார். நீர் சிறந்த குரு. நாங்கள் உம்மைப்பிரிந்து எவ்விதம் இருப்போம்? ராஜஶ்ரேஷ்டரே! மஹாராஜரே! உம்முடைய ஔரஸகுமாரனை யுயுத்ஸுவானவன் ராஜாவாக இருக்கட்டும். அல்லது வேறு எவனை நீர் விரும்புகிறீரோ, (அவன் ராஜாவாக இருக்கட்டும். அல்லது), நீரே ராஜாவாக இருந்துகொண்டு இந்த ராஜ்யத்தை ஆளும். நான் கானகம் செல்லுகிறேன். அபகீர்த்தியால் எரிக்கப்பட்ட என்னை நீர் மறுபடியும் எரிக்கவேண்டாம். நான் அரசனல்லேன். நீர்தாம் அரசர். நான் உமக்கு வசப்பட்டிருக்கிறேன். குருவும் தர்மங்களை அறிந்தவருமான உமக்கு இப்பொழுது நான் எவ்விதம் அனுமதி கொடுக்கத் துணிவேன்? குற்றமற்றவரே! துர்யோதனன்விஷயத்தில் என்னுடைய மனத்தில் ஓர் கோபமுமில்லை, அது அவ்விதம் ஆகவேண்டியதாக இருந்ததால் நாங்களும் மற்றவர்களும் மதிமயக்கமடைந்தோம். நாங்கள் உமக்குத் துர்யோதனன் முதலானவர்கள்போலப் புத்திரர்களே. காந்தாரியும் குந்தியும் என்னால் வேற்

றுமையில்லாதவர்களாகக் கருதப்பட்டிருக்கின்றனர். ராஜஸ்ரேஷ்டரே! அவ்விதமான நீர் என்னை விட்டுவிட்டுச் செல்வீரானல் நானும் உம்முடன்கூடவே வருவேன். உண்மையாக என்மீது சபதம் செய்கிறேன். தனங்கள்நிறைந்ததும் கடல் சூழ்ந்ததுமான இந்தப்பூமியானது, உம்மைப்பிரிந்த எனக்குப் பிரீதியை உண்டுபண்ணுது. ராஜஸ்ரேஷ்டரே! இவையெல்லாம் உம்முடையனவே. நான் உம்மைத் தலைவணங்கிப் பிரார்த்திக்கிறேன். நாங்கள் உமக்கு ஸ்வாதீனர்களாக இருக்கிறோம். உம்முடைய மனத்திலுள்ள வருத்தம் விலகட்டும். பூபதியே! நீர் அவசியம் வரவேண்டியதை அடைந்தீரென்று எண்ணுகிறேன். நான் ஸந்தோஷமாக உமக்குப் பணிவிடைசெய்து மனத்திலுள்ள தாபத்தைப் போக்குகிறேன்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரன், 'குருநந்தன! ஐய! என்னுடைய மனமானது தவம்புரிவதில் நோக்கமுள்ளதாயிருக்கிறது. பிரபுவே! நம்முடைய குலத்தில் கானகம் செல்வது வழக்கமாகவுமிருக்கிறது. புத்திரனே! நான் வெகுகாலம் (இங்கு) வாஸம் செய்தேன். நீயும் எனக்கு வெகுகாலம் பணிவிடை செய்தாய். ராஜனே! (ஆகையால், இப்பொழுது) நீ எனக்கு அனுமதிகொடுக்கவேண்டும்' என்று சொன்னன்.

அம்பிகாபுத்திரனை திருதராஷ்டிரராஜன், நடுக்கமுள்ளவரும் அஞ்சலிசெய்துகொண்டிருப்பவருமான தர்மராஜரைப் பார்த்து இவ்விதம் சொல்லிவிட்டு, விதுரரையும் மஹாத்மாவான ஸஞ்சயனையும் மஹாரதரான கிருபரையும் நோக்கி, 'நீங்கள் இப்பொழுது பூபதியான யுதிஷ்டிரனை ஸமாதானம் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். வயது மிக அதிகமாகியிருப்பதினுலும் அதிகமாகப்பேசின ஸ்ரமத்தினுலும் என்னுடைய மனம் வாடுகிறது. வாயும் உலருகிறது' என்று சொன்னன். தர்மாத்மாவும் வயதுமுதிர்ந்தவனும் அரசனும் கௌரவஸ்ரேஷ்டனும் புத்திசாலியுமான அந்தத்திருதராஷ்டிரன் இவ்விதம் சொல்லிவிட்டு உயிர்போனவன்போல விரைவாகக் காந்தாரியின்மீது சாய்ந்தான். அந்தக்கௌரவன் பிரஜ்ஞையற்றவன்போல வீற்றிருப்பதைக்கண்டு குந்தியின் புத்திரரும் பகைவர்களைக் கொல்பவருமான யுதிஷ்டிரராஜர் மிக்க மனவருத்தமடைந்தார். 'எவர் லக்ஷம் யானைகளுக்குச்சமமான பலமுள்ளவரோ அப்படிப்பட்ட இந்த அரசர் உயிர்போனவர்போல ஸ்திரீயை ஆஸ்ரயித்துப் படுத்திருக்கிறார். பலசாலியான எவர் முன்இரும்பினுல்செய்த பீமஸேனனுடைய பிரதிமையைப் பொடியாகச்செய்தாரோ அவர் (இப்பொழுது) பலமில்லாத ஸ்திரீயை

ஆஶ்ரயித்திருக்கிறார். தர்மம் தெரியாதவனான என்னையும் என்னுடைய புத்தியையும் கல்வியையும் நிந்திக்கவேண்டும். இவ்விதம் ஆகத்தகாதவரான இவ்வரசர் என்னிமித்தம் (இவ்விதம்) படுத்திருக்கிறாரே! இந்த அரசரும் புகழ்பெற்றவளான காந்தாரியும் போஜனம் செய்யாவிட்டால் நானும் என்குருவான இவர்போல உபவாஸமிருக்கிறேன்' என்று சொன்னார். அரசரே! பிறகு, தர்மத்தை அறிந்தவரான பாண்டவர் ஜலத்தால் குளிர்ந்திருக்கும் கையினால் அவருடைய மார்பையும் முகத்தையும் மெல்லத் தடவினார். ரத்தினங்களும் ஓஷதிகளுமுள்ளதும் புண்யமானதும் நல்ல மணமுள்ளதுமான யுதிஷ்டிரராஜருடைய அந்தப் பாணிஸ்பரிசத்தால் அந்த அரசன் பிரஜ்ஞையை அடைந்தான். மறுபடியும், கையினால் தடவிக்கொண்டிருக்கும் பாண்டவரைத் தழுவிக்கொண்டு தர்மத்தை உணர்ந்தவனான திருதராஷ்டிரராஜன், சுபமான வார்த்தையைச் சொல்லலானான். 'தாமரை மலர்போன்ற கண்களுள்ளவனே! நீ அதிகமாகத் தொட்டதால் நான் ஜீவித்தேன். ராஜனே! என் பிராணனுக்கு அனுகூலமான உன்னைக் கைகளால் அணைந்து உன்னுடைய சிரஸை மோக்க விரும்புகிறேன். கௌரவஶ்ரேஷ்டனே! நான் ஆகாரம் செய்து இப்பொழுது [1]எட்டு வேளைகளாகின்றன. அதனால், நான் கைகால்களை அசைக்கவும் சக்தியற்றவனாக இருக்கிறேன். உன்னிடம் (அனுமதியை) யாசிக்கின்ற நான், இவ்வித ஶ்ரமத்தையும் அடைந்தேன். ஐயனே! ஆகையால், நான் மனம்வாடிப் பிரஜ்ஞையற்றவன்போலானேன். பிரபுவே! குருகுலஶ்ரேஷ்டனே! உன்னுடைய அமிருதம்போன்ற ஸுகமான ஸ்பர்சமுள்ள கையினால் தொடப்பட்டு நன்கு பிரஜ்ஞையையடைந்தேனென்று எண்ணுகிறேன்' என்று சொன்னான்.

பாரதரே! மூத்ததந்தையினால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் குந்தியின் புத்திரருமான யுதிஷ்டிரர் அப்பொழுது ஸ்னேகத்தால் மனமிரங்கி அவனைச் சரீரமுழுதும் தடவிக்கொடுத்தார். பிறகு, திருதராஷ்டிரராஜன், உயிரை அடைந்து தர்மபுத்திரரைக் கைகளால் கட்டிக்கொண்டு தலையில் மோந்தான். விதுரர்முதலான அவர்கள் எல்லோரும் மிக்க துயரமுற்றவர்களாகி அழுதார்கள். அதிகதுக்கத்தால் யுதிஷ்டிரராஜரை நோக்கி ஒன்றும்சொல்லவில்லை. ராஜரே! தர்மங்களை அறிந்த

1 ஒரு தினத்திற்கு இரண்டுவேளைப் போஜனமாகையால் 'போஜனம் செய்து நான்கு தினங்களாயின' என்பது பழையவுரை. ஆஶ்வ. 296-ம் பக்கம் குறிப்பில் காண்க.

வளான காந்தாரியோ, மிக்க துயரங்களை மனத்தில் அடக்கிவைத்துக் கொண்டு 'இப்படி செய்யவேண்டாம்' என்று மட்டும் சொன்னாள். குந்தியோடுகூடின மற்ற ஸ்திரீகளெல்லாரும் மிக்கதுயரமுள்ளவர்களும் கண்ணீர்நிரம்பிய கண்களுள்ளவர்களுமாகச் சுற்றி நின்றுகொண்டிருந் தார்கள். பிறகு, திருதராஷ்டிரன் மறுபடியும் யுதிஷ்டிரரைநோக்கி, 'ராஜனே! பரதஸ்ரேஷ்டனே! எனக்குத் தவம்புரிய அனுமதிகொடு. ஐயா! அடிக்கடி பேசுவதால் என் மனம் வாடுகிறது. புத்திரனே! என்னை இனிமேல் இதுவிஷயத்தில் நீ ஸ்ரமப்படுத்தக்கூடாது' என்ற வாக் கியத்தைச்சொன்னான். கௌரவஸ்ரேஷ்டனான அந்தத் திருதராஷ்டி ரன் அந்தப்பாண்டவனிடம் அவ்விதம்சொன்னபொழுது அந்தப்புர ஸ்திரீகளெல்லாரும் தீனமான சப்தத்தை உரக்க வெளியிட்டனர். யுதிஷ்டிரர், இளைத்தவனும் நிறம்மாறினவனும் அவ்வித நிலைமையை அடையத்தகாதவனும் உபவாஸத்தால் களைத்தவனும் தோலும் எலும்பு களும் மட்டும் நிறைந்திருப்பவனும் மகாப்பிரபுவும் அரசனுமான தமது தந்தையைப் பார்த்து (அவனை)த்தழுவிச் சோகத்தால் கண்ணீர் சொரி ந்து மீண்டும் பின்வரும் வசனத்தைச்சொல்லலானார். 'புருஷஸ்ரேஷ் டரே! பகைவரை வாட்டுபவரே! உமக்குப் பிரியத்தைச்செய்ய எனக்கு விருப்பமிருப்பதுபோல் உயிர் வாழ்க்கையிலும் பூமியிலும் எனக்கு விருப்பமில்லை. நான் உமக்கு அநுக்கிரகிக்கத் தகுந்தவனும் இஷ்டனு மாக இருந்தால், இப்பொழுது போஜனம் செய்யும். பிறகு, நான் மேலே செய்யவேண்டியதைத் தெரிந்துகொள்ளுகிறேன்' என்று சொன் னார். பிறகு, மிக்க தேஜஸுள்ள திருதராஷ்டிரன் யுதிஷ்டிரரை நோக்கி, 'புத்திரனே! உன்னால் அநுமதி கொடுக்கப்பட்டால், போஜ னம் செய்ய விரும்புவேன்' என்று சொன்னான். திருதராஷ்டிர மஹா ராஜன் இவ்விதம் சொல்லும்பொழுது, ரிஷியும் ஸத்யவதியின் புத்திர ருமான வியாஸர் வந்து யுதிஷ்டிரரைநோக்கி (பின்வரும்) வசனத்தைச் சொல்லலானார்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

(வியாஸர் திருதராஷ்டிரனுக்கு அநுமதி கொடுக்கும்படி யுதிஷ்டிரனுக்குச் சொல்லிச் சென்றதும், யுதிஷ்டிரர் வருத்தத்துடன் ஸம்மதித்ததும்.)

வியாஸர், 'யுதிஷ்டிர! சிறந்தகைகளுள்ளவனே! குருகுலத்தில் பிறந்தவனும் மிக்க தேஜஸுள்ளவனுமான திருதராஷ்டிரன் எவ்விதம் சொல்லுகிறானே அவ்விதம் ஆலோசியாமல் செய். முதுமையடைந்தவனும் அதிலும் புத்திரர்களை இழந்தவனுமான இந்த அரசன் நீண்ட காலம் இந்தக்கஷ்டத்தை ஸஹிக்கமாட்டான் என்று நான் எண்ணுகிறேன். மஹாராஜனே! பெரிய பாக்கியம்பெற்றவளும் சிறந்த அறிவுள்ளவளும் தைன்யத்தைத் தெரிவிக்கின்றவளுமான காந்தாரியும் புத்திரசோகத்தை மிக்க தைரியத்தால் பொறுக்கிறாள். நானும் இதனையே உன்னிடம் சொல்லுகிறேன். என்னுடைய வார்த்தையைச் செய். திருதராஷ்டிரராஜனுக்கு அநுமதியைச் செய். இவன் வீணாக இங்கு மரிக்க வேண்டாம். புத்திசாலியான இவன் மலர்களின் தேனினால் வாஸனையுள்ள வனங்களில் கவலையற்றவனாக இருக்கட்டும். இந்த அரசன் புராதனர்களான ராஜரிஷிகளின் கதியைப் பின்தொடரட்டும். ராஜரிஷிகளெல்லாருக்கும் முடிவில் வனத்தை அடைவது வழக்கம்' என்று சொன்னார். ஆச்சரியமான செய்கையுள்ள வியாஸரால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் மிக்க தேஜஸுள்ளவரும் அரசருமான அந்தத் தர்மராஜர் அப்பொழுது வியாஸமஹாமுனிவரைப் பார்த்து, 'பகவானே எங்களுக்குப் பூஜிக்கத்தக்கவர். பகவானே எங்களுக்குக் குரு. பகவானே இந்தராஜ்யத்திற்கும் குலத்திற்கும் முக்யகதி. பகவானே! நானே புத்திரன். திருதராஷ்டிரராஜரோ எனக்குப் பிதாவும் குருவுமாக இருக்கிறார். புத்திரனான நான் தர்மப்படி பிதாவின் கட்டளைக்கு வசப்பட்டிருக்கிறேன்' என்று மறுமொழி கூறினார்.

இவ்விதம் சொல்லப்பட்டவரும் வேதங்களை அறிந்தவர்களுள்சிறந்தவரும் மிக்க தேஜஸுள்ளவரும் மஹாகவியுமான அந்த வியாஸர், மறுபடியும், அந்தயுதிஷ்டிரரை நோக்கி, 'சிறந்தபாக்கியமுள்ளவனே! பாரத! நீ சொல்லும் இது உண்மையே. இந்தஅரசன் வயதுமுதிர்ந்தவனும் சிறந்த [1]பிரமாணமுமாக இருக்கிறான். இந்தஅரசனுக்கு நான் உத்

1 நம்பத்தகுந்த உண்மையானவார்த்தையைச் சொல்பவன்.

தரவு கொடுத்துவிட்டேன். நீயும் அனுமதிகொடு. இவன் தன்னுடைய இஷ்டத்தைச்செய்யட்டும். நீ இடையூற்றைச்செய்யாதே. யுதிஷ்டிர! ராஜரிஷிகளுக்கு இதுவே மேலானதர்மம். யுத்தத்தில் மரிக்கவேண்டும்; அல்லது, வனத்தில் விதிப்படி மரிக்கவேண்டும். ராஜஸ்ரேஷ்டனே! உன்னுடையதந்தையும் பூமிக்கிறைவனுமான பாண்டுவானவன் சிஷ்யனாகஇருந்துகொண்டு இந்தமன்னனைக் குருவைப்போல உபாஸித்தான். இவன் தக்ஷிணைகளுள்ளவைகளும் மலைகள்போன்ற ரத்தினக்குவியல்களால் விளங்கும்படி செய்யப்பட்டவைகளுமான மஹாயாகங்களைச் செய்தான்; பூமியை அனுபவித்தான்; பிரஜைகளையும் பரிபாலித்தான்; நீ கானகம்சென்றிருந்தபொழுது, புத்திரனிடத்தில் நிலைபெற்றிருக்கும் விசாலமான ராஜ்யத்தைப் பதின்மூன்றுவருஷம் அனுபவித்தான்; பலவிதமான தனத்தையும் தானம்செய்தான். புருஷஸ்ரேஷ்டனே! குற்றமற்றவனே! நீயும் வேலைக்காரர்களுடன்கூடினவனாக இவனையும் புகழ்பெற்றகாந்தாரியையும் ஆராதித்தாய். யுதிஷ்டிர! தந்தைக்கு அனுமதி கொடு. இவனுக்குத் தவம்புரிய(இதுதான்)ஸமயம். இவனுக்குக் கொஞ்சமேனும் கோபமில்லை' என்று சொன்னார். வியாஸர், இவ்வளவுவார்த்தையைச்சொல்லி யுதிஷ்டிரராஜரை ஸமாதானப்படுத்திக் குந்தியின் மைந்தரான அவரால் 'அப்படியேஆகட்டும்' என்று சொல்லப்பட்டுக் கானகம் சென்றார். வியாஸபகவான் சென்றவுடன், பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரராஜர் அப்பொழுது பிராயம்முதிர்ந்தவனான தந்தையைநோக்கி வணக்கத்துடன் மிக்கமிருதுவான வாக்கியத்தைச் சொல்லலானார். 'வியாஸபகவான் எதைச்சொல்லுகிறாரோ உமக்கு எது இஷ்டமோ மகாவில்லாளியான கிருபரும் விதுரரும் யுயுத்ஸுவும் ஸஞ்சயனும் எவ்விதம்சொல்லுகிறார்களோ அதை அவ்விதமே நான் சீக்கிரமாகச் செய்கிறேன்.(இவர்கள்)எல்லாருமே எனக்குப் பூஜிக்கத்தக்கவர்களும் குலத்திற்கு நன்மையைவிரும்புகின்றவர்களுமாக இருப்பவர்களல்லரோ? ராஜரே! நான் உம்மைத் தலையால்வணங்கி இதொன்றைமட்டும் யாசிக்கிறேன். இப்பொழுது போஜனஞ்செய்யும். பிறகு, ஆஸ்ரமத்தைக் குறித்துச் செல்லும்' என்று சொன்னார்.

---

## ஆறுவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

—————:o:—————

(திருதராஷ்டிரன் யுதிஷ்டிரனுக்கு ராஜநீதியை உபதேசித்தது.)

பிறகு, யுதிஷ்டிரராஜரால் அனுமதிகொடுக்கப்பட்டவனும் உறுதியான சித்தமுள்ளவனும் மெலிந்த பிராணன்களுடைய ஸஞ்சாரமுள்ளவனும் புத்திசாலியும் பூபாலனுமான அந்தத் திருதராஷ்டிரராஜன் அப்பொழுது காந்தாரியினால் பின்தொடரப்பட்டு, கிழத்தனத்தை அடைந்த கஜபதிபோல ஸ்ரமப்பட்டு அடிவைப்புக்களைச்செய்துகொண்டு தன்வீடு சென்றான். அவனை வித்வானான விதுரரும் ஸூதனான ஸஞ்சயனும் பெரியவில்லாளியும் சாரத்வதருமான அந்தக்கிருபரும் பின்தொடர்ந்து சென்றார்கள். அந்தஅரசன் வீடுசென்று காலைக்கடன்களைமுடித்துப் பிராம்மணஸ்ரேஷ்டர்களுக்குத் திருப்திசெய்வித்துப் பிறகு போஜனம் செய்தான். பாரதரே! தர்மங்களை அறிந்தவளும் உறுதியானசித்தமுள்ளவளுமான காந்தாரியும் மருகிகளால் உபசாரத்துடன் பூஜிக்கப்பட்டுக் குந்தியுடன் போஜனம் செய்தாள். விதுரர்முதலான அவர்களெல்லாரும் பாண்டவர்களும் போஜனம்செய்துவிட்டு, போஜனம்செய்தவனும் கௌரவஸ்ரேஷ்டனுமான அந்தஅரசனுக்கு அருகில்வந்து உட்கார்ந்தார்கள். பிறகு, அம்பிகாபுத்திரனான திருதராஷ்டிரமஹாராஜன், அருகில் உட்கார்ந்திருக்கும் குந்திபுத்திரரான யுதிஷ்டிரரை முதுகில் தடவிக்கொடுத்து (பின்வருமாறு)சொல்லலானான்.

'குருநந்தன! ராஜஸ்ரேஷ்டனே! [1]எட்டுஅங்கங்களுள்ளதும் தர்மத்தை முதன்மையாகக்கொண்டதுமான ராஜ்யத்தில் நீ எவ்விதத்திலும் தவறுதலுள்ளவனாகக்கூடாது. மஹாராஜனே! பாண்டுநந்தன! அந்த ராஜ்யத்தைத் தர்மத்தால் ரக்ஷிக்கக்கூடும். குந்தியின்புத்திரனே! நீ வித்வானானகையால் அதைத்தெரிந்துகொள். யுதிஷ்டிர! நீ எப்பொழுதும் கற்றறிந்தபெரியோர்களை உபாஸிக்கவேண்டும். அவர்கள்சொல்வதைக் கேட்கவேண்டும். அதை ஆலோசியாமல் செய்யவேண்டும். ராஜனே! விடியற்காலையில் எழுந்திருந்து அவர்களை விதிப்படி பூஜித்துக் காரியத்திற்குரிய காலம் வந்தபொழுது உன்னுடைய காரியத்தைப்பற்றி வினவ

---

1 தலைவன், அமைச்சன், தேசம், கோட்டை, பொக்கசம், துணைவர், படை, நகரவாசிகளைஆகிய எட்டும் என்பது. ஸபாபர்வம் 20-ம் பக்கம் குறிப்பிலும் காண்க.

வேண்டும். ராஜனே! ஐயா! பாரத! அவர்கள் உலகத்திற்கு நன்மையை விரும்பும் உன்னால் நன்கு பூஜிக்கப்பட்டால், எல்லாவிதத்தாலும் உனக்கு நன்மையைச் சொல்லுவார்கள். எல்லா இந்திரியங்களையும் குதிரைகளைப்போலக் காப்பாற்று. அவைகள் ரக்ஷிக்கப்பட்ட தனம்போல நன்மையின்பொருட்டே ஆகும். பரீக்ஷிக்கப்பட்டவர்களும் தகப்பன்பாட்டன்பரம்பரையாக வந்தவர்களும் சுத்தர்களும் மனவடக்கமுள்ளவர்களும் எல்லாக்கார்யங்களிலும் முக்கியர்களுமான மந்திரிகளை முக்கியமான கார்யங்களில் ஏவுவாயாக. பிறர்களால் அறியப்படாமலிருந்துகொண்டு பரீக்ஷிக்கப்பட்டவர்களும் பலவிதமாக இருப்பவர்களுமான சாரர்களை எப்பொழுதும் உன்தேசங்களிலும் வேறுதேசங்களிலும் ஸஞ்சரிக்கும்படி செய். உறுதியான பிராகாரங்களும் வெளிவாயில்களுமுள்ளதும் [1]அட்டங்களாலும் [2]அட்டாலகங்களாலும் நிறைந்ததும் [3]ஆறு ஸ்தானங்களுள்ளதுமான பட்டணமானது உன்னால் எல்லாத்திசைகளிலும் ரக்ஷிக்கப்பட்டதாக இருக்கவேண்டும். அந்தப்பட்டணத்திற்குப் போதுமானவைகளும் பெரியவைகளுமான எல்லாவாயில்களும் எங்கும் நன்கு அமைக்கப்பட்டவைகளும் யந்திரங்களால் எங்கும் ரக்ஷிக்கப்பட்டவைகளுமாக இருக்கவேண்டும். குலமும் சீலமும் அறியப்பட்ட மனிதர்களால் உனக்கு வேண்டியகாரியத்தைச் செய்துகொள். பாரத! போஜன முதலானவைகளிலும் ஸஞ்சாரகாலங்களிலும் போஜனகாலங்களிலும் மாலைகளிலும் படுக்கைகளிலும் ஆஸனங்களிலும் எப்பொழுதும் உன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். யுதிஷ்டிர! உன்னுடைய ஸ்திரீகளும், வயதுமுதிர்ந்தவர்களும் ஆப்தர்களும் நல்லொழுக்கமுள்ளவர்களும் நற்குலத்தில் பிறந்தவர்களுமான பண்டிதர்களால் பரிபாலித்து நன்குரக்ஷிக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டும். வித்தைகளில் தேர்ச்சிபெற்றவர்களும் வணக்கமுள்ளவர்களும் குலீனர்களும் தர்மத்திலும் அர்த்தத்திலும் ஸமர்த்தர்களும் நேர்மையுள்ளவர்களுமான பிராம்மணர்களை மந்திரிகளாகச் செய்துகொள். நீ, சேர்ந்திருப்பவர்களும் தனித்திருப்பவர்களும் அநேகர்களுமான அவர்களுடன் ஓர் முக்கியமான காரியத்தைக்குறித்துச் சிறிது ஆலோசிக்கவேண்டும். நன்குமறைக்கப்பட்ட

1 தூர்க்கத்திற்குமேற்பிரதேசத்திலுள்ள ஸஞ்சரிக்கத்தக்கஇடங்கள் என்பது பழையவுரை. 2 மேல்மெத்தைவீடுகள்.

3 'ஷட்பதம்' என்பது மூலம்; 'எவரும்வரக்கூடிய ஆறிடங்களுள்ளதென்றதால் ஏழுமதில்களுள்ளனவென்பதும் இவற்றில் ஏழாவதுமதிலினுள் அந்தப்புரமிருத்தலால் எவரும் செல்லலாகாதென்பதும்' பழையவுரையின் கருத்து.

மந்திரகிரஹத்திலுள்ள இடத்தில் ஏறியாவது த்ருணங்களுமில்லாத வனத்திலாவது ஆலோசனைசெய். எவ்விதத்திலும் இரவில் ஆலோசனை செய்யாதே. மந்திரகிருஹத்தில், மனிதர் சொல்லியதைச் சொல்லும் வானரங்கள் பறவைகள் மூடர்கள் நொண்டிகள் (இவர்கள்) எல்லாரையும் விலக்கவேண்டும். ஆலோசனை வெளிப்பட்டால் அரசர்களுக்கு உண்டாகும் குற்றங்களை எவ்விதத்திலும் அடக்கமுடியாதென்பது என்னுடைய எண்ணம். ராஜனே! பகைவரை அடக்குபவனே! நீ மந்திரிகளின்கூட்டத்தில் மந்திரம் வெளிப்படுவதிலுள்ள குற்றங்களையும் வெளிப்படாமலிருப்பதிலுள்ள குணங்களையும் அடிக்கடி சொல்லவேண்டும். யுதிஷ்டிர ராஜனே! கௌரவஶ்ரேஷ்டனே! நகரத்திலும் கிராமத்திலுமுள்ளவர்களுடைய சுத்தியும் அசுத்தியும் எவ்விதம் அறியப்படுமோ அவ்விதம் செய்யவேண்டும். ராஜனே! உன்னுடைய (ராஜ்ய) வியவஹாரத்தை எப்பொழுதும் ஆப்தர்கள் பரிபாலிக்கவேண்டும். ராஜனே! அதை ஸந்தோஷமுள்ளவர்களும் ஹிதர்களுமான சாரர்கள் எப்பொழுதும் அனுஷ்டித்து உபயோகப்படுத்தவேண்டும். பாரத! யுதிஷ்டிர! உன்னுடைய அதிகாரிகள் குற்றம் தண்டனை இவற்றினுடைய அளவை அறிந்து தண்டிக்கத்தக்கவர்களுக்குத் தண்டனையை விதிக்கவேண்டும். பரிதானம் வாங்குவதில் பிரியமுள்ளவர்களும் பிறருடைய மனைவியை அடைபவர்களும் கடுமையான சிக்ஷையை முக்கியமாகக்கொண்டவர்களும் பொய்யாக நியாயம்சொல்லுகிறவர்களும் வைபவர்களும் பேராசையுள்ளவர்களும் திருடுகிறவர்களும் பிடிவாதகாரியத்தில் பிரியமுள்ளவர்களும் ஸபைகூடுவதைக் கலைப்பவர்களும் வர்ணங்களைக் கெடுப்பவர்களும், தேசத்தையும் காலத்தையும் அனுஸரித்து ஸுவர்ணம் அபராதம்விதிக்கப்படவும் கொலைசெய்யப்படவும் தக்கவர்கள். அந்தப்புரப்ரதேசத்தில் வேலைக்காரர்களுடன் பானம் செய்யக்கூடாது. அவர்கள் மதம்பிடித்து வைவார்கள்; மனைவியையும் பிடிப்பார்கள். மறைந்திருந்து ஆயுதத்தால் கொல்லவும் விரும்புவார்கள்; மதம்பிடித்துக் கூத்தாடுவார்கள்; பலவித நிந்தைகளைச் சொல்லுவார்கள்; சேரத்தக்கதையும் சேரத்தகாததையும் அறியமாட்டார்கள்; அரசனும் அதிகமாகப் பானம் செய்தால் எல்லாப் பொக்கசத்தையும் அழித்துவிடுவான்; பாடகர்களுக்கு வீணைகத் தனக்குவியலையும் கொடுப்பான்; தனக்கு நிந்தையையும் தோஷங்களையும் அடைவான்; ஆகையால், மிக்க பராக்ரமம் விருத்தியடைவதற்காகப் பத்தினியுடன் தனித்துப் பானம்செய்யவேண்டும். (ஆனாலும்) அதுவும் குறிப்பினால்

வெளிப்பட்டுவிடுகிறது. உனக்குப் பிரியமான காரியத்தைச் செய்பவர் களை விடியற்காலையிலேயே பார். பிறகு, அலங்காரத்தையும் அதற்கு மேல் ஆகாரத்தையும் செய்துகொள். பிறகு, நீ எப்பொழுதும் யுத்த வீரர்களை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு பார்க்கவேண்டும். எப்பொழு தும் தூதர்களையும் சாரர்களையும் ஸாயங்காலத்தில் பார்க்கவேண்டும். எப்பொழுதும் பின் இரவில் காரியங்களுடைய விஷயத்தை நிச்சயிக்கவேண்டும். எப்பொழுதும் நீ நடுநிசியிலும் மத்தியான்ன காலத்திலும் விளையாட்டாயிருக்கவேண்டும். பரதஶ்ரேஷ்டனே! எல் லாக்காலங்களும் காரியங்களுக்கு யோக்கியமானவைகள். அவ்வாறே, தகுந்த காலத்தில் நீ அலங்காரம்செய்துகொண்டு மிகுதியாகத் தக்ஷிணை கொடுப்பவனாக நிற்கவேண்டும். ஆபரணத்தைக் கழற்றிவிட்டும் (வேண் டாமென்று) விலக்கிவிட்டும் இருக்கக்கூடாது. எப்பொழுதுமே இவ் வுலகில் மங்களகரமானதும் பாவத்தைப்போக்குவதுமான வஸ்துவை உபயோகித்துக்கொள்ளவேண்டும். ஐயனே! காரியங்கள் எப்பொழுதும் உருளைபோல மாறிமாறிக் காணப்படுகின்றன. நீ எப்பொழுதும் நியாய மாகப் பொக்கசத்தைச் சேர்ப்பதில் முயற்சிசெய். மஹாராஜனே ! விப ரீதமான பலவித காரியத்தையும் விட்டுவிடு. ராஜனே! அரசர்களுக்குக் கெடுதிசெய்யக்கூடிய ஸமயத்தை எதிர்பார்க்கும் பகைவர்களைச் சாரர் களால் அறிந்து அவர்களை ஆப்தர்களான மனிதர்களைக்கொண்டு தூரத் திலேயே கொல்விப்பாயாக. கௌரவஶ்ரேஷ்டனே! மேலும், நீ வேலைக் காரர்களைச் செய்கையைப்பார்த்து சேர்த்துக்கொள். காரியத்தையும் அகாரியத்தையும் அறிந்த வேலைக்காரர்களைக்கொண்டு காரியங்களைச் செய்துகொள். ஐயனே! உறுதியான விரதமுள்ளவனும் சூரனும் கஷ் டத்தை ஸகிப்பவனும் நன்மையைச் செய்பவனும் பக்தியுள்ளவனுமான மனிதன் உனக்குப் படைத்தலைவனாக இருக்கட்டும். பாண்டவ! தேசத் திலுள்ள தொழிலாளிகளான எல்லாரும் காளைபோலவும் கழுதைபோல வும் (போஷிக்கப்பட்டால்) உன்னுடைய காரியங்களைச் செய்வார்கள். யுதிஷ்டிர! நீ எப்பொழுதுமே உன்னைச் சேர்ந்தவர்களிடத்திலும் பிறர் களிடத்திலும் உன்னுடைய ரந்திரத்தையும் பிறருடைய ரந்திரத்தையும் உற்றுப்பார்க்கவேண்டும். தம் கார்யங்களில் சூரர்களும் ஹிதர்களுமான தேசத்திலுள்ள மனிதர்களையும் நீ தகுந்த போஷணைகளைச் செய்து அனுக்ரஹிக்கவேண்டும். ராஜனே ! அறிஞனானவன் (தனக்கு) நன்மை யைவிரும்புகிறவர்களுக்கு நன்மையைச் செய்யவேண்டும். உனக்கு அவர் கள் எப்பொழுதும் மலைகள்போல ஆராயத்தகாதவர்களாயிருப்பார்கள்.

---

## ஏழாவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி).

——:o:——

(த்ருதராஷ்டிரன்உபதேசத்தொடர்ச்சி.)

பாரத! உன்னைச்சேர்ந்தவையும் பகைவரைச்சேர்ந்தவையும் உதாஸீனகுணமுள்ளவர்களைச் சேர்ந்தவையும் மத்யஸ்தர்களைச் சேர்ந்தவையுமான மண்டலங்களைத் தெரிந்துகொள். பகைவரைத்துன்பப்படுத்துபவனே! நீ [1]நான்குவகைச்சத்துருபக்ஷத்தார்களையும் [2]எல்லா ஆததாயிகளையும் மித்ரனையும் உதாஸீனனுடையமித்ரனையும் தெரிந்துகொள்ளவேண்டும். கௌரவஶ்ரேஷ்டனே! மேலும், பலவிததேசங்களும் பலவிததுர்க்கங்களும் சேனைகளும் பகைவரால் கெடுக்கப்படாமல் இருக்கவேண்டும். குந்தியின்குமாரனே! அந்தப் [3]பன்னிரண்டு அரசர்களும் பலவித ஸ்வரூபமுள்ளவர்களாக இருப்பார்கள். ப்ரபுவே! மந்திரிமுதலான அங்கங்கள் அறுபது, (அரசர்கள்) பன்னிரண்டு ஆகியஇவற்றை மண்டலமென்று நீதிசாஸ்திரமறிந்த ஆசார்யர்கள் சொல்லுகின்றனர். யுதிஷ்டிர! இதில் [5]ஆறுகுணங்களும் வசப்பட்டிருக்கின்றன. அதைத்தெரிந்துகொள். கௌரவஶ்ரேஷ்டனே! வ்ருத்தியும் க்ஷயமும் ஸ்தானமும் [6]எழுபத்திரண்டுகளிலும் இருப்பனவாகத் தெரிந்துகொள்ளத்தக்கவைகள். அவற்றிலிருந்து ஆறுகுணங்களாலாகிய குணங்கள்உண்டாகின்றன. குந்தியின் புத்திரனே! எப்பொழுது தன்பக்ஷம் பலமுள்ளதாகவும் பகைவருடைய பக்ஷம் பலமற்றதாகவும் இருக்கின்

1 பகைவன், பகைவனுக்குத்துணைவன், இரண்டு பக்கத்துக்கும் வெற்றியை விரும்புகிறவன், இரண்டு பக்கத்துக்கும் தோல்வியை விரும்புகிறவன்.

2 விராடபர்வம் 175-ம் பக்கம் குறிப்பிலும், சல்யபர்வம் 87-ம் பக்கம் குறிப்பிலும் பார்க்க.

3 சத்ருவும் அவனுக்கு மித்ரனும் இருவருக்கும் வெற்றியை விரும்புகிறவனும் இருவருக்கும் தோல்வியை விரும்புகிறவனும் ஆததாயிகள் அறுவரும் மித்ரனும் உதாஸீனனுக்கு மித்ரனும் ஆகப் பன்னிருவர்.

4 சேர்க்கக்கூடிய கிருஷிமுதலிய எட்டும் சேர்க்கக்கூடாத பாலர் முதலிய இருபதும் நாஸ்திக்யமுதலிய தோஷங்கள் பதினான்கும் மந்திரமுதலிய உபாயங்கள் பதினெட்டும் ஆக அறுபது என்பது பழையவுரை.

5. ஸபாபர்வம் 15-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

6 அறுபத்துநான்கு கலைகள், ஸாமமுதலான நான்கு உபாயங்கள், நால்வகைச் சேனைகள் ஆக எழுபத்திரண்டு என்பது லக்ஷாபரண வ்யாக்யானம்; 64 கலைகளின் பெயர்கள் ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தம் 45-வது அத்யாயம் 36 வது ஶ்லோகம் ஸ்ரீதரவ்யாக்யானத்தில் காண்க.

றனவோ அப்பொழுது அரசன் பகைவர்களைச் சண்டைக்கு எதிர்த்துச் செல்லவேண்டும். எப்பொழுது பகைவர்கள் பலிஷ்டர்களும் தன்னைச் சேர்ந்தவர்கள் பலம் குறைந்தவர்களுமாயிருக்கின்றனரோ அப்பொழுது பலம் குறைந்திருப்பவன் அதை அறிந்து பகைவர்களுடன் ஸந்தியைச் செய்துகொள்ளவேண்டும். திரவியங்களையும் மிக அதிகமாகச் சேர்த்து வைத்துக்கொள்ளவேண்டும். பாரத! எப்பொழுது சீக்கிரமாக யுத்தத்திற்குச் செல்லத் திறமையுள்ளவனாக இருக்கிறானோ அப்பொழுது அவன் (தன்னிடத்தில்) இருக்கும்பொழுதே எல்லாவற்றையும் ஸித்தம் செய்துகொள்ளவேண்டும். தானும் பகைவனும் ஸமமாக இருந்தால் (சண்டையைப்பற்றி) ஆலோசிக்கவேண்டும். சத்துருவுக்கு அற்பமான பயனைத் தரத்தகுந்த பூமியைக் கொடுக்கவேண்டும். ஸந்திசெய்வதில் தேர்ச்சிபெற்றவன் தான் ஸுவர்ணமும் வெள்ளியும் நிறைந்திருக்கும் சத்துருவின் மித்திரனைப் பலம் குறைந்தவனும் பொக்கசமற்றவனுமாகச் செய்து பிடித்துக்கொள்ளவேண்டும். பரதர்களில் சிறந்தவனே! புத்திர! ஸந்திசெய்துகொள்வதற்காக (சத்துருவான) அரசனுடைய குமாரனையாவது பிடித்துக்கொள்ளவேண்டும். ஓர் ஆபத்து நேர்ந்தகாலத்தில் அவனை விட்டுவிடுவது நன்மையன்று. ராஜேந்திர! உபாயத்தையும் ஆலோசனையையும் அறிந்தவனான நீ அந்த ஆபத்தினின்று விடுவித்துக் கொள்ள முயற்சியைச் செய். அரசனானவன் பிரஜைகளுள் தீனர்களைப் பூஜிக்கவேண்டும். தான் தன்னுடைய ராஜ்யத்தை ரக்ஷித்துக்கொண்டு கிரமமாகவாவது ஒரே ஸமயத்திலாவது [1]வியஸனங்களுடைய பலாபலங்களை அறிந்து முயற்சியுடன் சத்துருக்களுக்குத் துன்பத்தையாவது அடக்குதலையாவது பொக்கசத்தின் நாசத்தையாவது செய்யவேண்டும். க்ஷேமத்தை விரும்புகிறவன் தன்னிடம் வந்த அடுத்ததேசத்தரசனை வருத்தக் கூடாது. குந்தியின்புத்திரனே! அது பூமியை ஜயிக்கவிருப்பமுள்ள உனக்கு நன்மையாகும். நீ (அவனுடைய) குணங்களை மாற்றுவதில் மந்திரிகளுடன்சேர்ந்து யுக்தியைச்செய்ய விரும்பு. மிக்கபலமுள்ளவன் நல்லோரைச் சேர்த்துக்கொள்வதிலும் தீயோரை விலக்குவதிலும் எப்பொழுதும் வீட்டில் பரிபாலனங்களைத் தன்வசப்படுத்திக்கொள்வதிலும் முயற்சிசெய்யவேண்டும். ஒருபொழுதும் பலஹீனர்களைத் தேடக் கூடாது. ராஜஸ்ரேஷ்டனே! பலிஷ்டனான அரசன் துர்ப்பலனான உன்னை எதிர்த்துவந்தால், [2]நீர்நொச்சியின் செய்கையைப் பின்பற்றிநில்.

1. சாந்திபர்வம் 181-ம் பக்கம் குறிப்பில் காண்க.
2 சாந்திபர்வம் 113-ம் அத்யாயம் பார்க்க.

அவனைக் கிரமமாக ஸாமம்முதலான உபாயங்களால் விலக்குவாயாக. முடியாவிட்டால் மந்திரிகளுடன்சேர்ந்து யுத்தத்திற்குப்போகவேண்டும். பொக்கசத்தினாலும் தனக்குப்பிரியத்தைச் செய்யும்பட்டணத்தார்களைக் கொண்டு யுத்தத்தினாலும் (பகைவனை விலக்கவேண்டும்). எல்லாஉபாயங்களும் பயன்படாவிட்டால் முக்யமான தானே(யுத்தத்திற்குப்)போகவேண்டும். இம்முறையால் சரீரத்திற்குமட்டும் விடுதல் ஏற்படும்.

## எட்டாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

———:0:———

(திருதராஷ்டிரன்உபதேசத்தொடர்ச்சி.)

ராஜஸ்ரேஷ்டனே! யுதிஷ்டிர! நீ இப்பொழுது (பலிஷ்டன் துர்ப்பலனென்று) இரண்டுகாரணங்களுள்ளனவும் பலவிதஉபாயங்களுள்ளனவும் அநேகவிதங்களுமான ஸந்திவிக்ரஹங்களையும் தெரிந்துகொள். கௌரவ்ய! நீ உறுதியுள்ளவனாகஇருந்துகொண்டு உன்னுடைய பலாபலங்களைத் தெரிந்துகொள். ஸந்தோஷமும் புஷ்டியுமுள்ள ஜனங்களுள்ள சத்ருவைப் பொருளுள்ளவனென்று நினைக்கவேண்டும். அவ்விதமில்லாத சத்துருவைக்குறித்து எதிர்த்துச்செல்லவேண்டுமென்று விதிக்கப்படுகிறது. (பகைவன்) துன்பப்படும் காலத்தில் முயற்சிசெய்வது அதிலும்சிறந்தது. சத்துருக்களுக்கு வியஸனத்தையும் பேதப்படுத்துவதையும் ஹிம்ஸையையும் பயத்தையும் யுத்தத்தில் பலவிதக்குறைவையும் அப்பொழுது செய்விக்கவேண்டும். யுத்தத்திற்குச் செல்லுகின்றவனும் சாஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றவனுமான அரசன் தனக்கும்பகைவனுக்குமுள்ள மூன்றுவிதமான சக்தியை ஆலோசிக்கவேண்டும். பாரத! [1]உத்ஸாஹசக்தி பிரபுசக்தி மந்திரசக்தி இவைகளுடன்கூடின அரசன்(யுத்தத்திற்குச்)செல்லவேண்டும். இவைகள் இல்லாவிடில் யுத்தத்தைவிலக்கவேண்டும். பிரபுவே! ராஜனே! நியாயமாகச் செல்வமும் க்ஷேமமும் உறுதியாகவுள்ள அரசன் மூலபலத்தையும் மித்திரனுடைய சேனையையும் காட்டிலுள்ளசேனையையும் கூலிப்படையையும் ஸ்ரேணியிலுள்ள சேனையையும் [2]மித்திரனுக்கு மித்திரனுடைய சேனையையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். ராஜனே! அவைகளுள், மித்ரனுடைய

1 உத்ஸாஹசக்தி=மனோவேகம்; பிரபுசக்தி=தனமுதலியன; மந்த்ரசக்தி=ஆலோசனை.
2 'மித்ர மித்ர' என்று மாற்றப்பட்டது.

சேனையும் மூலபலமும் மேன்மையுள்ளவை. ஸ்ரேணியிலுள்ள சேனையும் சம்பளத்திற்கு இருக்கும் ஸேனையும் ஸமமானவை என்பது என்னுடைய எண்ணம். ராஜனே! அவ்வாறே, சாரர்களும் ஸேனையும் பரஸ்பரம் ஸமமானவர்கள் என்று அரசன் ஸமயம் வந்து ஸேனைகளைக் கணக்கிடும்பொழுது தெரிந்துகொள்ளவேண்டும். ராஜனே! கௌரவ்ய! அரசன், நேரிடக்கூடிய அனேகவித ஆபத்துக்களையும் தெரிந்துகொள்ளவேண்டும். அவைகளைத்தனித்தனியாகக் கேள். ராஜனே! பாண்டுகுமாரனே! ஆபத்துக்களுடையவகைகள் அனேக விதமானவை. அரசன் எப்பொழுதும் அவைகளை ஸாமமுதலான உபாயங்களால் வெளிப்படுத்தி விலக்கவேண்டும். பகைவரை வாட்டுபவனே! அரசன் ஆறுவித சேனைகளோடுகூடினவனும் தேசகாலங்களோடும் தனக்குத்தகுந்த (உதவி) ஸேனைகளோடும்கூடினவனுமாக (யுத்த) யாத்திரை செல்லவேண்டும். க்ஷேமம் அடைவதில் ஆசையுள்ள அரசன் ஸந்தோஷமும் புஷ்டியுமுள்ள ஸேனையோடுகூடிச் செல்லவேண்டும். குறைவில்லாதவனாக இருப்பவன் தகாத ருதுவிலும் செல்லலாம். அம்புப்பெட்டிகளாகிற கற்களுள்ளதும் குதிரைகளும் தேர்களுமாகிற பிரவாகமுள்ளதும் த்வஜங்களாகிற மரங்களால் சூழப்பட்ட கரைகளுள்ளதும் காலாட்களாலும் யானைகளாலும் மிக்க சேறுள்ளதுமான சேனையாகிற நதியை அரசன் பகைவனுடைய நாசத்திற்காக ஏவவேண்டும். பாரத! பிரபுவே! மேலும், தகுந்தவைகளான சகடம் பத்மம் வஜ்ரம் என்னும் இந்தவியூகங்கள் சுக்ராசாரியர் இயற்றிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. பிறனுடைய பலத்தை ஸஞ்சரிக்கும்படிசெய்து தன்னுடைய படையைக் காண்பித்துத் தன்னுடைய பூமியில் யுத்தம் செய்யவேண்டும். பிறனுடைய பூமியிலும் யுத்தம் செய்யவேண்டும். அரசன் சேனைக்கு நன்மொழி கூறவேண்டும். (அதில்) பலசாலிகளான மனிதர்களை இருக்கச்செய்யவேண்டும். அதில் தான்செய்யவேண்டிய விஷயத்தை அறிந்து ஸாமமுதலான உபாயங்களால் தொடங்கவேண்டும். மஹாராஜனே! எல்லாவிதத்தாலும் இவ்வுலகில் சரீரத்தைத் தரித்துக்கொண்டிருந்து இவ்வுலகிலும் இறந்தபின்னும் தனக்கு மேலானக்ஷேமத்தைச் செய்துகொள்ளவேண்டும். ராஜனே! பிரஜைகளைத் தர்மமாகப் பரிபாலித்துக்கொண்டு இவ்விதம் செய்யும் அரசன் இவ்வுலகில் நல்ல வார்த்தைகளைக் கேட்பான்; இறந்தபின்னும் ஸ்வர்க்கத்தை அடைவான். கௌரவஸ்ரேஷ்டனே! ஐயனே! நீ இரண்டு உலகங்களையும் அடைவதற்காக எப்பொழுதும் பிரஜைகளிடம்

இவ்விதம் இரு. ராஜஸ்ரேஷ்டனே! பீஷ்மரும் கிருஷ்ணனும் விதுரரும் உனக்கு எல்லாவற்றையும் சொல்லியிருக்கின்றனர். ஆனாலும், நானும் உனக்குப் பிரீதியினால் சொல்லவேண்டியது அவசியமே. மிகுதியான தக்ஷிணையைக் கொடுப்பவனே! நீ இவற்றையெல்லாம் நீதிதவறாமல் செய். அவ்விதம் செய்தால் நீ பிரஜைகளுக்குப் பிரியனாகி ஸ்வர்க்கத்தில் ஸுகத்தை அடைவாய். ஆயிரம் அஸ்வமேதங்களைச் செய்யும் அரசனும் பிரஜைகளைத் தர்மமாகப் பரிபாலிக்கும் அரசனும் ஸமமான பயனை அடைவார்கள்' என்று சொன்னான்.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

(திருதராஷ்டிரன் நகரஜனங்களை அழைப்பித்து வனஞ்செல்ல அனுமதி கேட்டது.)

யுதிஷ்டிரர், ' அரசரே! ராஜஸ்ரேஷ்டரே! நீர் சொல்லியவண்ணம் இதைச்செய்கிறேன். நீர் இன்னமும் எனக்குப் புத்திசொல்லவேண்டும். பீஷ்மர் ஸுவர்க்கத்தையடைந்து வாஸுதேவரும் விதுரரும் ஸஞ்சயரும் (வேறிடம்) சென்றிருக்கும்பொழுது, வேறுயார் எனக்குச் சொல்லத்தக்கவர்? பூபாலரே! நன்மையைச்செய்வதில் நிலைபெற்றிருக்கும் நீர் இப்பொழுது இதுவிஷயத்தில் எனக்கு எதை உபதேசித்தீரோ அதை நான் செய்கிறேன். ராஜரே! கவலையற்றிரும்' என்று சொன்னார். பரதஸ்ரேஷ்டரே! புத்திசாலியான தர்மராஜரால் இவ்விதம் சொல்லப்பட்ட ராஜரிஷியான அந்தத் திருதராஷ்டிரராஜன் குந்தியின் புத்திரரிடம் அனுமதிபெற விரும்பி, 'புத்திரனே! களைப்பாறு. எனக்கும் ஸ்ரமம் அதிகமாக இருக்கிறது' என்று சொல்லிவிட்டு, அப்பொழுது காந்தாரியினுடைய வீட்டுக்குச் சென்றான். தர்மங்களை அனுஷ்டிப்பவளும் காலத்தை அறிந்தவளுமான காந்தாரிதேவியானவள், அக்காலத்தில் ஆஸனத்தில் வீற்றிருப்பவனும் பிரம்மாவுக்கு ஒப்பானவனுமான அந்தப் பர்த்தாவைநோக்கி, 'அந்த வியாஸமஹரிஷியானவர் உமக்கு நேரில் அனுமதி கொடுத்துவிட்டார். யுதிஷ்டிரனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு எப்பொழுது கானகம் செல்லப்போகிறீர்?' என்று வினவினாள். திருதராஷ்டிரன், 'காந்தாரி! தந்தையும் மஹாத்மாவுமான வியாஸர் எனக்கு நேரில் அனுமதி கொடுத்துவிட்டார். யுதிஷ்டிரனிடம்

அனுமதிபெற்றுக்கொண்டு சீக்கிரம் செல்லப்போகிறேன். நானோ இப்பொழுது என்னுடைய வீட்டில் எல்லாஜனங்களையும் வருவித்து எதிரில் வைத்துக்கொண்டு, கொடியசூதாட்டத்தைச் செய்தவர்களான அந்தப்புத்திரர்களெல்லாருக்கும் பரலோகத்திற்குரிய திரவியத்தைத் தானம் செய்யவிரும்புகிறேன்' என்று சொன்னான். திருதராஷ்டிரன் அப்பொழுது தர்மராஜருக்கு இவ்விதம் சொல்லியனுப்பினான். அந்த யுதிஷ்டிரராஜரும் அவனுடைய உத்தரவின்படி எல்லாரையும் வருவித்தார். பிறகு, ஆழ்ந்தகருத்துள்ளவர்களான குருஜாங்கலதேசத்திலுள்ள பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைஸ்யர்களும் சூத்திரர்களும் வந்தார்கள். யுதிஷ்டிரராஜர் அப்பொழுது அந்த அந்தப்புரத்திலிருந்து வெளிப்பட்டு அந்த எல்லாஜனங்களையும் எல்லாமந்திரிகளையும் பார்த்தார். பூபாலரே! சிறந்த புத்தியுள்ளவனும் அம்பிகாபுத்திரனுமான திருதராஷ்டிரராஜன், ஒன்றுசேர்ந்து வந்திருக்கும் அந்தப்பட்டணத்து ஜனங்கள் கிராமத்துஜனங்கள் ஸுஹ்ருத்துக்களானஜனங்கள் பலதேசங்களிலிருந்து வந்திருக்கும் பிராம்மணர்கள் ஆகிய எல்லாரையும் பார்த்துப் (பின்வருமாறு) சொல்லலானான்.

'(ஜனங்களே!) நீங்களும் கௌரவர்களும் நெடுங்காலம் சேர்ந்து வஸித்தவர்கள். ஒருவருக்கொருவர் நண்பர்கள்; ஒருவர் மற்றொருவருடைய நன்மையில் ஆசையுள்ளவர்கள். நான் இப்பொழுது இக்காலத்திற்கேற்றதான எந்தவார்த்தையைச் சொல்லுகிறேனோ என்னுடைய அந்தவார்த்தையை நீங்கள் ஆலோசியாமல் அவ்விதமே செய்யவேண்டும். வியாஸரிடத்திலும் குந்தீபுத்திரனான யுதிஷ்டிரராஜனிடத்திலும் அனுமதிபெற்றுக்கொண்டு காந்தாரியுடன் கானகம் செல்லவேண்டுமென்று எனக்கு எண்ணமுண்டாயிருக்கிறது. நீங்களும் எனக்கு அனுமதிகொடுக்கவேண்டும் உங்களுடைய ஆலோசனை கௌரவிக்கத்தக்கதன்றோ? எங்களுக்கும் உங்களுக்குமிருந்த சாஸ்வதமான பிரீதியானது மற்றத்தேசங்களில் (பிரஜைகளுக்கும்) அரசர்களுக்கும் இராது என்று நான் எண்ணுகிறேன். குற்றமற்றவர்களே! நானும் காந்தாரியும், இந்தப்பிராயத்தினாலும் புத்திரர்களை இழந்ததாலும் பலம் குறைந்தவர்களும் உபவாஸத்தால் இளைத்தவர்களுமாக இருக்கிறோம். ராஜ்யமானது யுதிஷ்டிரனை அடைந்தபின் பெரியஸுகத்தையும் அடைந்தேன். (இவர்களுடைய ஐஸ்வர்யமானது) துரியோதனனுடைய ஐஸ்வர்யத்தைக்காட்டிலும் பலகுணங்களால் மேலானதென்று நினைக்கிறேன். பெரிய பாக்கியம்பெற்றவர்களே! குருடனும் பிராயம் முதிர்ந்தவனும்

புத்திரர்களை இழந்தவனுமான எனக்கு வனத்தைத் தவிர வேறுகதி ஏது? ஆகையால், நீங்கள் எனக்கு அனுமதிகொடுக்கவேண்டும்' என்று சொன்னான். பரதர்களுள் சிறந்தவரே! அவனுடைய அந்த வசனத்தைக்கேட்டுக் குருஜாங்கல தேசத்தார்களான அவர்களெல்லாரும் கண்ணீரால் தழுதழுத்த வார்த்தையுடன் அழுதார்கள். மிக்க தேஜஸுள்ளவனான திருதராஷ்டிரன், சோகம் மேலிட்டவர்களும் மறுமொழியொன்றும் கூறாதவர்களுமான அவர்களனைவரையும் நோக்கி மறுபடியும் பின்வருமாறு வார்த்தை சொல்லலானான்.

---

## பத்தாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o;——

(திருதராஷ்டிரன், துர்யோதனனைச்சார்ந்து தான்செய்த தவறுகளைப் பொறுக்கும்படி ஜனங்களிடம் வேண்டினதும், யுதிஷ்டிரனை அவர்களிடம் ஒப்பித்துத் தான்வனஞ்செல்ல அனுமதி கேட்டதும்)

திருதராஷ்டிரன், '(ஜனங்களே!) சந்தனுவானவர் இந்தப்பூமியை உள்ளபடி பரிபாலித்தார். அவ்வாறே, எங்களுடைய தகப்பனாரான விசித்ரவீர்யரும் பீஷ்மரால் பரிபாலிக்கப்பட்டு (இப்புவியைப்) பரிபாலித்தார். இது உங்களுக்குத் தெரிந்தவிஷயம்; ஸம்சயமில்லை. உங்களுக்கு மிக்க பிரியனாகஇருந்தவனும் என்னுடையஸஹோதரனுமான பாண்டுவும் நீதிதவறாமல் பரிபாலித்தான். அதனையும் நீங்கள் அறிவீர்கள். பிறகு, யுதிஷ்டிரன் தந்தையினிடம் அனுமதிபெற்றுக்கொண்டு இதுவிஷயத்தில் ஒருகாலும் சிறிதும்பொய்சொல்லவில்லை என்பது என்னுடைய எண்ணம். பெரியபாக்யம் பெற்றவர்களே! குற்றமற்றவர்களே! நானும் உங்களை ஆராதித்தேன். அது செவ்வையாக இருந்தாலும் செவ்வையாக இல்லாமலிருந்தாலும் நீங்கள் ஆதரவுடன் பொறுத்துக்கொள்ள வேண்டும். துர்யோதனன் பகைவரற்றதான இந்தராஜ்யத்தை அனுபவித்தபொழுது மந்தனும் கெட்டபுத்தியுள்ளவனுமான அவன் உங்களுக்கு அபராதம் செய்யாமலிருந்தானா? கெட்டபுத்தியுள்ளவனான அந்தத்துர்யோதனனுடைய குற்றத்தினாலும் கர்வத்தினாலும்; அவன்செய்த அநீதியினாலும் அரசர்களுக்கு மிகப்பெரிய சண்டையுண்டாயிற்று. கௌரவர்களும் கொல்லப்பட்டார்கள். பூமியும் அழிக்கப்பட்டது. அது

விஷயத்தில் நான்செய்தது நல்லதாயிருந்தாலும் கெட்டதாயிருந்தாலும் அதனை நீங்கள் சித்தத்தில் வைக்கக்கூடாது. நான் இதோ அஞ்சலி செய்கிறேன். 'இந்த அரசன் முதியவன்; புத்திரர்களை இழந்தவன்; துக்கப்பட்டவன்; முன்னிருந்த மன்னர்களுடையபுத்திரன்' என்று எண்ணி நீங்கள்பொறுத்துக்கொள்ளவேண்டும். எளிமையுற்றவளும் முதியவளும் புத்திரர்களை இழந்தவளும் (பார்ப்பவர்) துக்கிக்கத்தக்கவளும் புத்திரசோகத்தால் பீடிக்கபபட்டவளுமான இந்தக்காந்தாரியும் என்னைப்போல உங்களிடம் யாசிக்கிறாள். 'இவ்விருவர்களும் புத்திரர்களை இழந்தவர்கள்; முதியவர்கள்; துக்கமுற்றவர்கள்' என்றறிந்து அநுமதிகொடுங்கள். உங்களுக்கு க்ஷேமமுண்டு. உங்களைச்சரணமடைகிறோம். நீங்களெல்லாரும் குருகுலத்தில்பிறந்தவனும் குந்தியின்புத்திரனுமான இந்தயுதிஷ்டிரராஜனையும் நல்லகாலங்களிலும் கெட்டகாலங்களிலும் பார்த்துக்கொள்ளவேண்டும். இவன் ஒருபொழுதும் கெட்ட காரியத்தைச் செய்யமாட்டான். இவனுக்குப் பெரியதேஜஸுள்ளவர்களும் லோகபாலர்களுக்கொப்பானவர்களும் எல்லாத்தர்மார்த்தங்களையும் அறிந்தவர்களுமான இந்தநான்குஸஹோதரர்களும் ஸஹாயர்களாயிருக்கின்றனர். பகவானும் எல்லாப்பிராணிகளுக்கும் உலகங்களுக்கும் பிரபுவுமான பிரம்மாவானவர் நான்குலோகபாலர்களுடைய நடுவில் (ஸஞ்சரிப்பது)போல, இவன் (இவர்களுடைய நடுவில்) ஸஞ்சரிக்கிறான். மிக்க கைவன்மையுள்ளவனும் பீமன் அர்ஜுனன் நகுலன் ஸஹதேவன் இவர்களால் சூழப்பட்டவனும் மிக்க தேஜஸுள்ளவனுமான யுதிஷ்டிரன் அவ்வாறே உங்களைப் பரிபாலிப்பான். அவசியமாகவே சொல்லவேண்டியதென்றெண்ணி உங்களிடம் (ஒருவிஷயம்) சொல்லுகிறேன். நான் இந்தயுதிஷ்டிரனை உங்களனைவர்களிடத்திலும் அடைக்கலமாக ஒப்பித்திருக்கிறேன். நான் உங்களையும் இந்தவீரனிடத்தில் அடைக்கலமாக வைத்திருக்கிறேன். என்னுடையபுத்திரர்களும் என்னுடைய வேறுவேலைக்காரனும் உங்களுக்கு ஏதாவது அப்பிரியத்தைச் செய்திருந்தால் அதனை நீங்கள் பொறுக்கவேண்டும். நீங்கள் எனக்கு இது வரையில் எவ்விதத்திலும் அபராதம் செய்யவேஇல்லை. குருவினிடத்திற்போல (என்னிடத்தில்) மிக்கபக்தியுள்ள உங்களுக்கு இதோ அஞ்சலிசெய்கிறேன்; இதோ நமஸ்கரிக்கிறேன். குற்றமற்றவர்களே! சஞ்சலமானபுத்தியுள்ளவர்களும் ஆசையுள்ளவர்களும் இஷ்டப்படி நடப்பவர்களுமான அவர்களின்நிமித்தம் இப்பொழுது நானும் காந்தாரியும் உங்களெல்லாரையும் வேண்டுகிறோம்' என்றுசொன்னான். அந்தத்

திருதராஷ்டிரனால் இவ்விதம் சொல்லப்பட்டவர்களும் பட்டணத்தி லிருந்தும் கிராமத்திலிருந்தும் வந்தவர்களுமான அந்தஜனங்களெல்லா ரும் கண்ணீரால் குரல் தழுதழுத்தவர்களாகி ஒன்றும் மறுமொழிகூறு மல் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

## பதினோராவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

———:o:———

(நகரஜனங்கள் பிராம்மணன்மூலமாகத் திருதராஷ்டிரனைத்தேற்றி வனஞ்செல்ல மிக்கவருத்தத்தோடு அனுமதிகொடுத்தது.)

குருகுலத்தில்பிறந்தவரே! வயோதிகனான அந்தத்திருதராஷ்டிர ராஜனால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப்பட்டணத்து ஜனங்களும் கிராமத்துஜனங்களும் பிரஜ்ஞையற்றவர்கள்போலானார்கள். பூபால னான திருதராஷ்டிரராஜன், பிறகு, கண்ணீரால் (தடுக்கப்பட்ட) குர லுள்ளவர்களும் பேசாமலிருப்பவர்களுமான அவர்களைநோக்கி மறுபடி யும் சொல்லலானான். 'ஸாதுக்களுள் சிறந்தவர்களே! தோஷமற்றவர் களே! தர்மத்தை அறிந்தவர்களே! நான் அடிக்கடி தலைவணங்கிப் பிரார்த்திக்கிறேன். முதியவனும் புத்திரர்களை இழந்தவனும் தர்மபத்தி னியான இந்தக்காந்தாரியுடன் தீனமாகப் பலவிதம்புலம்புகின்றவனும் பிதாவான வியாஸராலும் அரசனான யுதிஷ்டிரனாலும் நேரில் அனுமதி கொடுக்கப்பட்டவனுமான எனக்குக் காந்தாரியுடன்கூடி வனவாஸம் செய்வதற்காக நீங்கள் அனுமதிகொடுக்கவேண்டும்' என்றுசொன்னான்.

வேந்தரே! கௌரவராஜனுடைய தீனமான அந்தச்சொற்களைக் கேட்டு ஒன்று சேர்ந்திருக்கும் அந்தக்குருஜாங்கல தேசத்தார்களெல்லா ரும் அழுதார்கள். அவர்கள் தாய்தந்தையர்போலச் சோகத்தால் நன்கு தபிக்கப்பட்டு உத்தரீயங்களாலும் கைகளாலும்முகங்களைமூடிக்கொண்டு ஒருமுகூர்த்த காலம் அழுதார்கள். அவர்கள் திருதராஷ்டிரன் கான கம்செல்வதாலுண்டான துக்கத்தை வேறொன்றும் தோன்றாத உள்ளத் தில் தரித்துப் பிரஜ்ஞையற்றவர்கள்போலானார்கள். அவர்கள் அப்பொ ழுது திருதராஷ்டிரனுடைய பிரிவாலுண்டான அந்தமனவருத்தத்தை மெல்லமெல்ல விலக்கி ஒருவருக்கொருவர் தம்தம் அபிப்பிராயங்களைச் சொல்லிக்கொண்டார்கள். பிறகு, அவர்களெல்லாரும் சுருக்கமாக வாக் யங்களை ஆலோசித்து ஒருபிராம்மணனிடத்தில் காரியத்தை ஒப்பித்துத்

திருதராஷ்டிரராஜனைநோக்கிச் [1]சொன்னார்கள். அரசரே! பிறகு, நல்லொழுக்கமுள்ளவனும் (பெரியோர்களால்) ஏற்றுக்கொள்ளப்பட்டவனும் கருத்தைவிளக்குவதில் திறமையுள்ளவனும் கௌரவிக்கத்தக்கவனும் [2]அநேகவேதங்களைக் கற்றவனும் காம்பீர்யமுள்ளவனும் மேதாவியுமான அந்தப் [3]பிராம்மணன் மஹாராஜனை ஸமாதானப்படுத்தி ஸதஸிலிருப்பவரையும் நன்குஸம்பாஷித்துத் திருதராஷ்டிரராஜனை நோக்கிச் சொல்லலானான்.

'அரசரே! இந்த ஜனங்களுடையவாக்யமெல்லாம் என்னிடத்தில் ஒப்பிக்கப்பட்டிருக்கின்றன. வீரரே! அதனை நான் சொல்லுகிறேன். ராஜரே! அதனை ஏற்றுக்கொள்ளும். ராஜஶ்ரேஷ்டரே! பிரபுவே! நீர் சொல்வது உண்மையே. இதில் பொய்யானவார்த்தை ஒன்றுமில்லை. நீரும் நாங்களும் பரஸ்பரம் ஸுஹ்ருத்துக்கள். இந்தவம்சத்து அரசர்களுள் ஓர் அரசராவது ஒருபொழுதும் பிரஜைகளுக்கு அப்பிரியராகப் பரிபாலித்துக்கொண்டிருந்தவரில்லை. நீங்கள் எங்களைத் தந்தைபோலவும் தாய்போலவும் பரிபாலிக்கிறீர்கள். துர்யோதனராஜனும் அயுக்தமான ஓர் காரியத்தையும் செய்தவனல்லன். எல்லாருக்கும் பிரியங்களைச்செய்துகொண்டு அநுஸரிப்பதிலேயே முயற்சியுள்ளவனாக இருந்தான். மஹாராஜரே! ஸத்யவதியின்புத்திரரும் தர்மாத்மாவுமான வியாஸமுனிவர் எவ்விதம் சொல்லுகிறாரோ அவ்விதம்செய்யும். அவர் நமக்குச் சிறந்த குருவல்லரோ? அரசரே! உம்மால்விடப்பட்ட நாங்களோ உம்முடைய அநேக நற்குணங்களால் (மனம்) கவரப்பட்டு நெடுங்காலம் துக்கமும் சோகமும் மேலிட்டவர்களாகப்போகிறோம். மன்னரே! சந்தனுவும் சித்ராங்கதராஜனும் பீஷ்மருடைய பராக்ரமத்தால் காக்கப்பட்ட உம்முடையபிதாவும் உம்முடையபுத்தியை அநுஸரித்த பாண்டுராஜனும் எவ்விதம் பரிபாலித்தார்களோ அவ்விதமே துர்யோதனராஜனும் (பிரஜைகளை) நன்கு பரிபாலித்தான். ராஜரே! உம்முடையபுத்திரன் சிறிதும் அப்பிரியத்தைச்செய்யவில்லை. மன்னரே! நாங்கள் அந்தமன்னனிடத்திலும் தந்தையினிடத்தில்போல இனிது ஸுகம்பெற்று நல்லவாழ்நாளுள்ளவர்களாக இருந்தோமென்பது உங்களுக்குத்தெரியும். அவ்விதமே, புத்திசாலியும் தைரியமுள்ளவரும் குந்தியின்புத்திரருமான யுதிஷ்டிரரால் அநேக ஆயிரம்வருஷங்கள் பரிபாலிக்கப்பட்டு ஸுகம்பெறப்

1 சொல்வித்தார்கள்.
2 ரிக்வேதி எனினுமாம் 3 இவனுக்கு ஸாம்பனென்பது பெயர்.

போகிறோம். மஹாராஜரே! தர்மாத்மாவும் மிகுதியான தக்ஷிணைகளைக் கொடுப்பவருமான இந்தயுதிஷ்டிரர் உங்களுடைய முன்னோர்களும் புண்யமான செய்கையுள்ளவர்களுமான குரு, [1]ஸம்வரணன்முதலான ராஜரிஷிகளுடைய நடையையும் புத்திசாலியானபரதருடைய நடையையும் அனுஸரிக்கிறார். இவரிடத்தில் சிறிதுந்தோஷமில்லை. நாங்கள் உம்மால் பரிபாலிக்கப்பட்டு எப்பொழுதும் ஸுகமாக வாஸம்செய்தோம். உம்மிடத்திலும் உமதுபுத்திரனிடத்திலும் சிறிதும் அப்பிரியமில்லை. குருநந்தனரே! இந்த ஞாதிகளின்சண்டைவிஷயத்தில் துர்யோதனனைப் பற்றி எதைச்சொல்லுகிறீரோ அதுவிஷயத்திலும் உம்மை ஸமாதானப் படுத்துகிறேன் கௌரவர்கள் நாசத்தையடைந்ததென்பது துர்யோதனனாலும் உம்மாலும் கர்ணனாலும் சகுனியினாலும் செய்யப்பட்டதன்று. அது தெய்வத்தால் நடந்ததென்று கருதுகிறோம். அந்தத் தெய்வத்தைத் தடுக்க முடியாது. தெய்வத்தை மனிதனுடைய முயற்சியினால் தடுக்க முடியாது. மஹாராஜரே! பதினெட்டு அக்ஷௌஹிணி ஸேனைகள் (யுத்தத்திற்கு)வந்தன. அவைகள் போர்வீரர்களுள் சிறந்த கௌரவர்களாலும் பீஷ்மர், துரோணர், கிருபர்முதலானவர்களாலும் மஹாத்மாவான கர்ணனாலும் வீரனான யுயுதானனாலும் திருஷ்டத்யும்னனாலும் பீமன் அர்ஜுனன் நகுலன் ஸஹதேவன் என்னும் நான்குபாண்டவர்களாலும் யுத்தத்தில் பதினெட்டு நாட்களில் கொல்லப்பட்டன. வேந்தரே! இந்த நாசமானது தெய்வபலமின்றி நடக்கவில்லை. க்ஷத்திரியன் போர்க்களத்தில் க்ஷத்திரியனுடன் யுத்தம்செய்து கொல்வதும் காலம்வந்தவுடன் மரிப்பதும் மிக்க அவச்யமே. கல்விபலமும் பாகுபலமும் பொருந்தின அந்தப் புருஷச்ரேஷ்டர்களால் குதிரைகளுடனும் தேர்களுடனும் யானைகளுடனும் கூடின இந்தப்பூமிமுழுவதும் அழிக்கப்பட்டது. மஹாத்மாக்களான அரசர்களுடைய வதத்தில் உம்முடையபுத்திரனும் நீரும் உம்முடைய வேலைக்காரர்களும் கர்ணனும் சகுனியும் காரணமல்லர். கௌரவச்ரேஷ்டரே! அரசர்கள் ஆயிரக்கணக்காகக் கொல்லப்பட்டனர் என்பது முழுதும் தெய்வத்தால்செய்யப்பட்டதென்று தெரிந்துகொள்ளும். இதுவிஷயத்தில் எவன் என்னசொல்லத் தகுந்தவன்? நீர் இந்தஉலகத்திற்கெல்லாம் பிரபுவாகவும் குருவாகவும் எண்ணப்பட்டவர். ஆகை

1 அஜமீடபுத்திரனான ருக்ஷனுடைய புத்திரன். ஆதிபர்வம் 187-ம் அத்யாயம் பார்க்க.

யால், உம்முடையபுத்திரனைத் தர்மாத்மாவென்று அறிகிறோம். அந்த அரசன் பிராம்மணஸ்ரேஷ்டர்களால் அனுமதி கொடுக்கப்பட்டுத் துணை வீரர்களுடன் வீரலோகம்சென்று ஸுகமாக மகிழட்டும். நீரும் எப்பொழுதும் தர்மத்தில் நிலைபெற்றவராகிப் புண்ணியத்தை அடையப் போகிறீர். நீண்டகைகளுள்ளவரே! நீர் உலகத்திலுள்ளதும் வேதத்திலுள்ளதுமான தர்மத்தை அறிவீர். புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்களுடைய பராக்ரமமும் எங்களுக்குத் தெரியும். அவர்கள் தேவலோகத்தையும் பரிபாலிக்கத் திறமையுள்ளவர்கள் பூமியைப் பரிபாலிப்பார்களென்பதில் என்ன ஸந்தேஹம். சிறந்த புத்தியுள்ளவரே! குருகுலஸ்ரேஷ்டரே! சீலத்தை அணியாகக்கொண்ட பாண்டவர்களை நல்ல காலங்களிலும் கெட்ட காலங்களிலும் பிரஜைகள் அனுஸரிப்பார்கள். அரசரான பாண்டவர் பிராம்மணர்களுக்குக் கொடுத்த அக்ரஹாரங்களையும் (குடை முதலான) பிருதுகளையும் முந்திய அரசர்கள் செய்த தானங்களையும் அவஸ்யம் பரிபாலித்தே வருகிறார். குந்தியின் புத்திரரான இந்த யுதிஷ்டிரர் நீண்ட ஆலோசனையுள்ளவர்; மென்மையான தன்மையுள்ளவர்; குபேரன்போல எப்பொழுதும் மனவடக்கமுள்ளவர்; பெருந்தன்மையுள்ள மந்திரிகளுள்ளவர்; சிறந்தமனமுள்ளவர்; பகைவனிடத்திலும் தயையுள்ளவர்; சுத்தர்; பரதர்களுள் சிறந்தவர். மேதாவியான இவர் ருஜுவாகப் பார்க்கிறார்; எப்பொழுதும் எங்களைப் புத்திரர்களைப்போல ரக்ஷிக்கிறார். ராஜரிஷியே! அவ்வாறே, பீமார்ஜுனர் முதலானவர்களும் யுதிஷ்டிரருடைய சேர்க்கையால் இந்த ஜனங்களுக்கு அப்பிரியத்தைச் செய்யமாட்டார்கள். கௌரவரே! அவர்கள் மிருதுவாக இருப்பவர்களிடம் மிருதுத்தன்மையுள்ளவர்களும் க்ரூரத் தன்மையுள்ளவர்களிடத்தில் ஸர்ப்பத்திற்கொப்பானவர்களும் சிறந்த வீர்யமுள்ளவர்களும் மஹாத்மாக்களும் பட்டணத்திலுள்ளவர்களுக்கு நன்மையைச் செய்வதில் ஆசையுள்ளவர்களுமாக இருக்கின்றனர். குந்தியும் திரௌபதியும் உலூபியும் ஸுபத்திரையும் இந்த ஜனங்களுக்கு ஒருகாலும் பிரதிகூலங்களைச் செய்யமாட்டார்கள். உம்மால் செய்யப்பட்டதும் யுதிஷ்டிரரால் வளர்க்கப்பட்டதுமான இந்தஸ்நேஹத்தைப் பட்டணத்து ஜனங்களும் கிராமத்துஜனங்களும் விடமாட்டார்கள். மஹாரதர்களான குந்திபுத்திரர்கள் அதர்மிஷ்டர்களாயிருக்கும் மனிதர்களையும் தர்மமார்க்கத்தைக் கைப்பற்றியவர்களாகிப் பரிபாலிப்பார்கள். ராஜரே! (ஆகையால்), நீர் யுதிஷ்டிரரைப்பற்றி மனத்திலுள்ள துக்கத்தைவிலக்கிவிட்டுத் தர்மத்துடன்கூடின காரியங்களைச் செய்யும்.

பரதஶ்ரேஷ்டரே! உமக்கு நமஸ்காரம்.' என்றுசொன்னார். தர்மத்துடன்கூடினதும் குணங்களால் மேன்மைபெற்றதுமான அவருடைய அந்தவசனத்தை அந்த ஜனங்களெல்லாரும் 'நல்லது; நல்லது' என்று கௌரவித்து அங்கீகரித்தனர். திருதராஷ்டிரனும் அந்தவாக்கியத்தை அடிக்கடி அப்பொழுது பாராட்டி (அந்த) ஜனங்களை மெள்ளமெள்ள அனுப்பினான். பரதஶ்ரேஷ்டரே! அந்த ஜனங்களால் நன்குபூஜிக்கப் பட்டவனும் சுபமாகப்பார்க்கப்பட்டவனுமான அந்தஅரசன் அஞ்சலி செய்து அந்தஜனங்களைக் கௌரவித்தான். பிறகு, திருதராஷ்டிர ராஜன் காந்தாரியுடன் தன்வீடுசென்று, இரவுவந்தவுடன், ஸுகமாகச் சயனஞ்செய்துகொண்டான்.

---

## பன்னிரண்டாவது அத்யாயம்.

### ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

**(திருதராஷ்டிரன், பீஷ்மர்முதலியோருக்கு ஶ்ராத்தஞ்செய்யப் பொருள் வேண்டினதும், பீமன் மறுக்க மற்றையோர் கொடுத்ததும்.)**

பிறகு, இரவுவிடிந்தபின், அம்பிகாபுத்திரனான திருதராஷ்டிரன், விதுரரை யுதிஷ்டிரருடைய வீட்டுக்கு அனுப்பினான். சிறந்த தேஜஸுள்ளவரும் புத்திசாலிகள் எல்லாரிலும் சிறந்தவருமான விதுரர் சென்று, திருதராஷ்டிர ராஜனுடைய கட்டளையினால், தர்மம்தவறாதவரும் தலைவருமான யுதிஷ்டிரரைநோக்கிச் சொல்லலானார். 'அரசரே! திருதராஷ்டிரமஹாராஜர் வனவாஸத்திற்காகத் தீக்ஷைபெற்றிருக்கிறார். வரப்போகிற இந்தக் [1]கார்த்திகியில் அரண்யம் செல்லப்போகிறார். குருகுலஶ்ரேஷ்டனே! அவர் உன்னை ஒருகாரியத்திற்காகப் பார்க்கவிரும்புகிறார். நீ அனுமதிகொடுத்தால் அவர் மஹாத்மாவும் கங்காபுத்திரருமான பீஷ்மருக்கும் துரோணருக்கும் ஸோமதத்தனுக்கும் புத்திசாலியான பாஹ்லீகனுக்கும் எல்லாப் புத்திரர்களுக்கும் கொல்லப்பட்ட மற்றுமுள்ள ஸுஹ்ருத்துக்களுக்கும் இழிவான ஸைந்தவனுக்கும் ஶ்ராத்தம் செய்ய விரும்புகிறார்' என்று சொன்னார். விதுரருடைய இந்த வசனத்தைக் கேட்டுப் பாண்டவரான யுதிஷ்டிரரும் அர்ஜுனனும் மனமகிழ்ந்து கொண்டாடினர். உறுதியான கோபமுள்ளவனும் சிறந்த

---

1 க்ருத்திகாநக்ஷத்ரம் சேர்ந்த பூர்ணிமை

பராக்ரமமுள்ளவனுமான பீமனோ, அப்பொழுது துரியோதனன் செய்ததை நினைத்து விதுரருடைய அந்த வார்த்தையை அங்கீகரிக்கவில்லை. கிரீடியான பல்குனன் பீமஸேனனுடைய கருத்தை உணர்ந்து சிறிது வணக்கத்துடன் நரஶ்ரேஷ்டனான அவனை நோக்கி, 'பீம! மன்னரும் தந்தையும் முதியவரும் வனவாஸத்திற்காகத் தீக்ஷை அடைந்திருப்பவருமான திருதராஷ்டிரர் எல்லா ஸுஹ்ருத்துக்களுக்கும் ஶ்ராத்த காரியத்தைச் செய்யவிரும்புகிறார். சிறந்த கைகளுள்ளவனே! கௌரவர் உன்னால் ஜயிக்கப்பட்ட தனத்தைப் பீஷ்மர் முதலானவர்களுக்காகக் கொடுக்க விரும்புகிறார். அதைப்பற்றி நீ அனுமதி கொடுக்கவேண்டும். நீண்ட கைகளுள்ளவனே! முன் எந்தத்ருதராஷ்டிரரை நாம் யாசித்தோமோ அவர் இப்பொழுது நம்மை யாசிக்கிறார். இது தெய்வச் செயல். காலத்தின் மாறுதலைப் பார்! இந்த அரசர் முன்பு பூமிமுழுவதற்கும் பிரபுவாயிருந்து (இப்பொழுது) பிறர்களால் மந்திரிகள் கொல்லப்பட்டவராகிக் கானகம்செல்ல விரும்புகிறார். புருஷஶ்ரேஷ்டனே! தானத்தைத் தவிர வேறு உன்னுடைய தரிசனம் வேண்டாம். சிறந்த புஜபலமுள்ளவனே! இதைத்தவிர மற்றது அபகீர்த்தியைத் தருவதும் அதர்மமுமாகும். மூத்த ஸஹோதரரும் தலைவருமான யுதிஷ்டிரராஜரை அனுஸரிப்பாயாக. பரதஶ்ரேஷ்டனே! கொடுக்கவும் கொடாமலிருக்கவும் நீ தகுந்தவனல்லை' என்று சொன்னான். இவ்விதம் சொல்லுகின்ற அர்ஜுனனை யுதிஷ்டிரரும் கொண்டாடினார்.

பீமஸேனனோ அப்பொழுது கோபத்துடன் அர்ஜுனனைப் பார்த்து, 'அர்ஜுன! பீஷ்மருக்கும் ஸோமதத்தராஜனுக்கும் பூரிஶ்ரவஸுக்கும் ராஜரிஷியான பாஹ்லீகனுக்கும் மஹாத்மாவான துரோணருக்கும் மற்ற ஸுஹ்ருத்துக்களுக்கும் நாம் ஶ்ராத்தம் செய்வோம். கர்ணனுக்குக் குந்தி செய்வாள். புருஷஶ்ரேஷ்டனே! கௌரவராஜன் ஶ்ராத்தங்களைச் செய்யவேண்டாம். இவ்விதம் என்னுடைய புத்தியிருக்கிறது: உங்களுடைய பகைவர்கள் ஸந்தோஷிக்கவேண்டாம். குலத்தைக் கெடுத்த பாபிகளான எவர்கள் இந்தப்பூமியை முழுவதும் அழித்தார்களோ துர்யோதனன் முதலான அவர்களெல்லாரும் கஷ்டத்திலிருந்து பெரிய கஷ்டத்தை அடையட்டும். பன்னிரண்டு வருஷங்களிலிருந்த விரோதத்தையும் திரௌபதிக்குச் சோகத்தை வளரச்செய்த அஜ்ஞாத வாஸயாத்திரையையும் நீ இப்பொழுது எவ்விதம் மறந்தாய்? நீ (முன்) [1]ஆபரணங்களையும் பூஷணங்களையும் கழற்றிவிட்டுக் கிருஷ்ணாஜி

1 அணியின் வகை,

னத்தை உத்தரீயமாகக்கொண்டு பாஞ்சாலபுத்திரியுடன் திருதராஷ்டிர ராஜனுக்கருகில் சென்றாயே; அப்பொழுது திருதராஷ்டிரனுக்கு நம்மி டத்திலிருந்த ஸ்நேஹம் எங்கே போயிற்று? நீங்கள் பன்னிரண்டு வரு ஷங்கள் அரண்யத்தில் அரண்யத்திலுள்ளவற்றைப் புஜித்துக்கொண்டி ருந்தீர்களே; அப்பொழுது அந்தத்துரோணரும் பீஷ்மரும் ஸோமதத்த னும் எங்கே இருந்தார்கள்? அப்பொழுது பெரியதகப்பனார் பிதாவாயி ருந்துகொண்டு உன்னைப் பார்க்கவில்லையே? பார்த்த! குலத்தில் இழிவா னவனும் கெட்ட புத்தியுள்ளவனுமான இவன் விதுரரை நோக்கி, 'சூ தாட்டத்தில் என்ன ஜயிக்கப்பட்டது? என்று சொன்னானே; அதை நீ மறந்து விட்டாயா?' என்று சொன்னான். இவ்விதம் சொல்லுகின்ற அந்தப் பீமஸேனனை புத்திசாலியும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரராஜர் அதட்டி, 'பேசாமலிரு' என்று சொன்னார்.

## பதின்மூன்றாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

**(பீமன் துரியோதனன் முதலியோரின் ஸ்ராத்தத்துக்குப் பொருள்கொடுக்க மறுத்ததும், யுதிஷ்டிரர் தம்பொக்கசத்திலிருந்து வேண்டும்பொருளை எடுத்துக்கொள்ளும்படி திருதராஷ்டிரனுக்குத் தெரிவித்ததும்.)**

அர்ஜுனன், 'பீமஸேன! நீ எனக்கு மூத்த ஸஹோதரனும் குருவுமாக இருக்கிறாய். ஆகையால், நானே வேறொன்றும் சொல்லத் துணியவில்லை. ராஜரிஷியான திருதராஷ்டிரரோ எல்லாவிதத்தாலும் பூஜிக்கப்படத்தக்கவர். பெரியோர்களுடைய மரியாதையைக் கடக்காத வர்களும் புருஷோத்தமர்களுமான ஸாதுக்கள் அபகாரங்களை நினைக்க மாட்டார்கள். உபகாரங்களையே நினைப்பார்கள்' என்று சொன்னான். மஹாத்மாவான அந்த அர்ஜுனனுடைய இவ்விதமான வார்த்தையைக் கேட்டுத் தர்மாத்மாவும் குந்தியின் புத்திரருமான யுதிஷ்டிரர் விதுரரை நோக்கி, 'விதுரரே! 'புத்திரர்களுக்காகவும் உபகாரம் செய்தவர்களான பீஷ்மர் முதலான எல்லா ஸுஹ்ருத்துக்களுக்காகவும் எவ்வளவு தானம் செய்ய விரும்புகிறாரோ அவ்வளவையும் நான் என்னுடைய பொக்கசத் திலிருந்து கொடுக்கிறேன்' என்று நான் சொன்னதாகக் கௌரவராஜ ரிடம் சொல்லும். பிரபுவே! பீமன் மனவருத்தப்பட வேண்டாம்' என்று சொன்னார். தர்மராஜர் இவ்விதம் சொல்லி அந்த அர்ஜுனனைப் புகழ்ந்

தார். பீமஸேனன் அர்ஜுனனைக் கடைக்கண்ணால் பார்த்தான். பிறகு, புத்திசாலியான அந்த யுதிஷ்டிரர் விதுரரைப் பார்த்து, 'அந்த அரசர் பீமஸேனன்மீது கோபிக்கக்கூடாது. ஏனெனில், புத்திசாலியான பீமஸேனன் கானகத்தில் பனி மழை வெயில் முதலான பலவித துக்கங்களால் மிகக் கஷ்டப்பட்டவன். இது உமக்குத் தெரியும். ஆகையினால், 'நீர் விரும்புகிறதையெல்லாம் என்னுடைய வீட்டிலிருந்து பெற்றுக் கொள்ளும்' என்று நான் சொன்னதாகப் பரதஸ்ரேஷ்டரான திருதராஷ்டிர ராஜனிடம் சொல்லும். 'மிகக் கஷ்டப்பட்டவனான பீமஸேனன் கோபத்தால் எதைச் செய்கிறானோ அதை மனத்தில் வைக்கக்கூடாது' என்று அந்த அரசரிடம் சொல்லவேண்டும். 'என்னுடைய வீட்டிலும் அர்ஜுனனுடைய வீட்டிலுமிருக்கிற தனத்திற்கு மஹாராஜரான நீரே உடையவர்' என்று அந்த அரசனிடம் சொல்ல வேண்டும். அரசர் இஷ்டப்படி பிராம்மணர்களுக்குக் கொடுக்கட்டும்; செலவு செய்யட்டும். அவர் இப்பொழுது புத்திரர்களுக்கும் ஸுஹ்ருத்துக்களுக்கும் கடன் தீர்ந்தவராகட்டும். 'ராஜரே! என்னுடைய இந்தச் சரீரமும் தனங்களும் உம்முடைய அதீனமானவை. [1]இதில் எனக்கு ஸம்சயமில்லை என்று நீர் தெரிந்துகொள்ளும்' (என்று அவரிடம் சொல்லும்)' என்று சொன்னார்.

## பதினைன்காவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

**(விதுரர், யுதிஷ்டிரர் பொருள் கொடுக்கச் சம்மதித்ததைத் திருதராஷ்டிரனுக்குத் தெரிவித்தது.)**

ராஜரே! யுதிஷ்டிரராஜரால் இவ்வாறு சொல்லப்பட்டவரும் அறிவில் சிறந்த பண்டிதருமான அந்தவிதுரர் திருதராஷ்டிரனிடம் சென்று சிறந்த பொருளுள்ள பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானார். 'உம்முடைய வசனத்தை ஆதியிலிருந்து யுதிஷ்டிரராஜனிடம் சொன்னேன். மிக்க ஒளியுள்ள அவனும் உம்முடைய வாக்கியத்தைக் கேட்டுக் கொண்டாடினான். மிக்க தேஜஸுள்ளவனான அர்ஜுனன் அவனுடைய வீட்டையும் வீட்டிலுள்ள பொருளையும் முக்கியமான பிராணனையும் உமக்கு அர்ப்பணம் செய்கிறான். ராஜரிஷியே! உம்முடைய புத்திர

1 வேறுபாடம்.

ஞன யுதிஷ்டிரனும் ராஜ்யத்தையும் பிராணன்களையும் தனங்களையும் இளைய ஸஹோதரர்களையும் மற்றுமுள்ளவற்றையும் உமக்கு அர்ப்பணம் செய்கிறான். மிக்க பாகுபலமுள்ள பீமஸேனனோ மிகுதியான எல்லாத் துயரங்களையும் நினைத்துப் பெருமூச்சுவிட்டுக் கஷ்டப்பட்டு அனுமதி கொடுத்தான். ராஜரே! நீண்டகைகளுள்ள அவனைத் தர்மசீலஞன யுதிஷ்டிரராஜனும் அர்ஜுனனும் ஸமாதானம்செய்து ஸௌஹ்ருத்தாக இருக்கும்படி நிலைநிறுத்தினார்கள். யுதிஷ்டிரன் உமக்குச் சொன்னதாவது, 'பீமஸேனன் அந்த விரோதத்தை நினைத்து அநீதியாக எதைச்செய்தானோ அதைப்பற்றி நீர் கோபித்துக்கொள்ளக் கூடாது. மன்னரே! க்ஷத்திரியர்களுடைய தர்மமானது இவ்விதமானதன்றோ? இந்தப் பீமஸேனன் மாசற்ற க்ஷத்திரிய தர்மத்தில் உறுதியாக இருக்கிறான். அரசரே! பீமஸேனனுக்காக நானும் அர்ஜுனனும் அடிக்கடி யாசிக்கிறோம். கிருபை செய்யும். என்னிடத்தில் இருக்கும் பொருளுக்கு நீரே தலைவர். ராஜரே! உமக்கு விருப்பமுள்ள வரையில் தனத்தைக் கொடும். பாரதரே! எங்களுடைய ராஜ்யத்திற்கும் பிராணன்களுக்கும் நீரே தலைவர்' என்பது. (மேலும்) குந்தியின் புத்திரரான யுதிஷ்டிரராஜரும் அர்ஜுனனும் என்னை நோக்கி, 'கௌரவச்ரேஷ்டரான திருதராஷ்டிரர் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்க அக்கிரகாரங்களையும் புத்திரர்களுக்குச் சிராத்தத்தையும் ரத்தினங்களையும் பசுக்களையும் வேலைக்காரிகளையும் வேலைக்காரர்களையும் வெள்ளாடுகளையும் செம்மறியாடுகளையும் பிராம்மணர்களுக்குப் பூஜைசெய்து கொடுக்கட்டும். விதுரரே! நீர் மன்னருடைய உத்தரவினால் ஆங்காங்கு ஏழைகளுக்கும் குருடர்களுக்கும் சக்தியற்றவர்களுக்கும் மிகுதியான அன்னமும் ரஸமும் பானமும் நிறைந்த ஸபைகளையும், பசுக்களுக்குத் தொட்டிகளையும் செய்விப்பீராக. மற்றுமுள்ள பலவித புண்ணியத்தையும் செய்யும்' என்று சொன்னார்கள். மேல் எதைச் செய்யவேண்டுமோ அதை நீர் சொல்லவேண்டும்' என்று சொன்னார். ஜனமேஜயரே! விதுரர் இவ்விதம் சொன்னவுடன், திருதராஷ்டிரன் அவர்களைப் புகழ்ந்து கார்த்திகியில் மஹாதானம் செய்ய மனத்தில் எண்ணினான்.

---

## பதினைந்தாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(திருதராஷ்டிரன் ஸ்ராத்தஞ்செய்து பிராம்மணர்களை அன்னமுதலியவற்றால் திருப்தியடைவித்தது.)

அரசரே! விதுரரால் இவ்விதம் சொல்லப்பட்ட திருதராஷ்டிர ராஜன் யுதிஷ்டிர ராஜருடைய செய்கையினாலும் அர்ஜுனனுடைய செய்கையினாலும் பிரீதியுள்ளவனானான். பிறகு, அந்த ராஜஸ்ரேஷ்டன் பீஷ்மர், புத்திரர்கள், ஸுஹ்ருத்துக்கள் இவர்களின் நிமித்தம் ஆயிரக்கணக்கான தகுந்த பிராம்மணர்களையும் ரிஷிஸ்ரேஷ்டர்களையும் நன்கு பார்த்து அன்னங்களையும் பானங்களையும் செய்வித்து வாகனங்களையும் வஸ்திரங்களையும் ஸுவர்ணங்களையும் [1]மணிகளையும் [2]ரத்தினங்களையும் வேலைக்காரிகளையும் வேலைக்காரர்களையும் பிருதுகளையும் சிறந்த கம்பளங்களையும் கிராமங்களையும் நிலத்தையும் தனத்தையும் அலங்கரிக்கப்பட்ட யானைகளையும் குதிரைகளையும் கன்னிகைகளையும் உத்தம ஸ்திரீகளையும் துரோணர் பீஷ்மர் பாஹ்லிகன் ஸோமதத்தன் துரியோதனராஜன் மற்றப் புத்திரர்கள் ஜயத்ரதன் முதலான எல்லாஸுஹ்ருத்துக்கள் இவர்களுடைய பெயரைத் தனித்தனிசொல்லி எல்லாப்பிராம்மணர்களுக்கும் குறிப்பிட்டுக் குறிப்பிட்டுக் கொடுத்தான். அநேகமான பசுக்களையும் தனங்களையும் தக்ஷிணையாகக் கொண்டதும் அதிகமான தனக்குவியலும் ரத்தினக்குவியலுமுள்ளதுமான அந்தச் சிராத்தமாகிற யஜ்ஞமானது அப்பொழுது யுதிஷ்டிரருடைய அனுமதியின்மேல் நடந்தது. அந்தச்சிராத்தமாகிற யஜ்ஞத்தில் அப்பொழுது கணக்கிடுகிறவர்களும் எழுதுகிறவர்களும் யுதிஷ்டிரருடைய உத்தரவினால் அந்தத்ருதராஷ்டிர ராஜனை நோக்கி, 'அரசரே! இவர்களுக்குக் கொடுக்கத்தக்க எதைக் கொடுக்கலாம்? உத்தரவு செய்யும்' என்று எப்பொழுதும் கேட்டார்கள். அதில் அப்பொழுது அவர் சொன்னவுடன் அதைக்கொண்டு வந்தும் கொடுத்தார்கள். குந்தியின் புத்திரரும் புத்திசாலியுமான யுதிஷ்டிராராஜருடைய உத்தரவினால் நூறு கொடுக்க வேண்டியதற்கு ஆயிரமும் ஆயிரத்திற்குப் பதினாயிரமும் கொடுக்கப்பட்டன. இவ்விதம் தனங்களாகிற நீர்த்தாரைகளைப் பொழிகின்ற அரசனாகிற மேகமானது அந்தப் பிராம்மணர்களை மழைபொழிகின்ற மேகமானது பூமி

1 முத்து முதலியன. 2 மாணிக்க முதலியன.

யைத் திருப்தியடையும்படி செய்வதுபோலத் திருப்தியடையும்படிசெய்தது. சிறந்த புத்தியுள்ளவரே! அரசன் அதில் அதற்குப் பிறகே எல்லா வர்ணத்தார்களேயும் அன்னம் பானம் ரஸம் இவற்றின் பெருக்கினுல் முழுகும்படி செய்தான். வஸ்திரம் தனம் ரத்தினம் இவற்றின் குவியலாகிற பிரவாஹமுள்ளதும் மிருதங்கங்களுடைய சப்தமாகிற ஒலியுள்ளதும் பசுக்களும் குதிரைகளுமாகிற மகரங்களும் சுழல்களுமுள்ளதும், பலவித ரத்தினங்களாகிற பெரிய நிதிகளுள்ளதும் கிராமங்களும் அக்ரகாரங்களுமாகிற தீவுகளால் நிறைந்ததும் மணிகளும் ஸுவர்ணமுமாகிற ஜலமுள்ளதும் திருதராஷ்டிரனுகிற தெப்பத்தால் அலைக்கப்பட்டதுமான அந்தச் சிராத்தமாகிற ஸமுத்திரமானது உலகத்தை முழுகும்படி செய்தது. மஹாராஜரே! இவ்விதம் அந்தத் திருதராஷ்டிரன் புத்திரர்களுக்கும் பௌத்திரர்களுக்கும் பித்ருக்களுக்கும் தனக்கும் காந்தாரிக்கும் ஸ்ராத்தத்தைச் செய்தான். அந்த அரசன் மிகுதியான தானங்களைக்கொடுத்து எப்பொழுது களைப்படைந்தானே அப்பொழுது தானயஜ்ஞத்தை நிறுத்தினுன். இவ்விதம் குருகுலத்தில் பிறந்தவனுன அந்த அரசன் நடர்களும் நர்த்தகர்களும் மிக நர்த்தனம் செய்யப்பெற்றதும் அதிகமான அன்னமும் ரஸமும் தக்ஷிணையுமுள்ளதுமான தானமாகிற பெரியயாகத்தைச் செய்தான். பரதர்களுள் சிறந்தவரே! அம்பிகாபுத்திரனுன (திருதராஷ்டிர) ராஜன் இவ்விதம் பத்துநாட்கள் தானங்களைச்செய்து புத்திரர்களுக்கும் பௌத்திரர்களுக்கும் கடன் தீர்ந்தவனுனன்.

---

## பதினுருவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(திருதராஷ்டிரன் காந்தாரியின் தோளையும் காந்தாரி குந்தியின் தோளையும் பிடித்துக்கொண்டு அனைவரும் வருந்திப் பின்தொடரக் காட்டுக்குப் புறப்பட்டது.)

பிறகு, விடியற்காலையில், சிறந்த புத்தியுள்ளவனும் அம்பிகாபுத்திரனுமான அந்தத் திருதராஷ்டிரராஜன் காந்தாரியுடன் வனவாஸத்தில் ஆவலுள்ளவனுகிப் பாண்டவவீரர்களை வரவழைத்து விதிப்படி (அவர்களுக்கு) ஆசிர்வாதம்செய்து கார்த்திகியில் வேதத்தின் கரையை அடைந்தவர்களான பிராம்மணர்களைக் கொண்டு(உதவஸநீய மென்னும்,)

இஷ்டியைச் செய்வித்து மரப்பட்டையையும் கிருஷ்ணாஜினத்தையும் உடுத்துக்கொண்டும் அக்னிஹோத்திரத்தை முன்னிட்டுக்கொண்டும் [1] மருகிகளால் சூழப்பட்டவனாகி அந்த வீட்டிலிருந்து புறப்பட்டான். பிறகு, விசித்திரவீர்யனுடைய புத்திரனான திருதராஷ்டிரராஜன் புறப்படும்பொழுது கௌரவஸ்திரீகளும் பாண்டவஸ்திரீகளும் கௌரவராஜனுடைய வம்சத்தில்பிறந்த ஸ்திரீகளும் (பிரயாணத்தை நிறுத்தும்படி) பிரார்த்திக்க, அப்பொழுது அவர்களுடைய (அந்தச்) சப்தமானது தோன்றியது. பிறகு, புருஷஸ்ரேஷ்டனான திருதராஷ்டிரராஜன் பொரிகளாலும் விசித்திரமானபுஷ்பங்களாலும் அந்தவீட்டைப் பூஜித்து எல்லா வேலைக்காரர்களுக்கும் குதிரைகளைக் கொடுத்து அனுப்பிவிட்டு அவ்விடமிருந்து செல்லலானான். பிறகு, யுதிஷ்டிரராஜர் நடுக்கமுற்று அஞ்ஜலி செய்துகொண்டு கண்ணீரால் தழுதழுத்த குரலுடன், 'மஹாராஜரே! ஸாதுவே! ஐயா! எங்கே போகிறீர்?' என்று உரத்த குரலுடன் சொல்லிப் பூமியில்விழுந்தார். அவ்வாறே, பரதஸ்ரேஷ்டனான அர்ஜுனனும் கடுந்துயரத்தால் மிகத்தபித்து அடிக்கடி பெருமூச்சுவிட்டு யுதிஷ்டிரரை, 'இவ்விதம் செய்யவேண்டாம்' என்றுசொல்லித் தடுத்துப் பிறகு மிக்க மனத்தளர்ச்சியுள்ளவனானான். வீரர்களான பீமஸேனனும் அர்ஜுனனும் நகுலனும் ஸஹதேவனும் விதுரரும் ஸஞ்சயனும் யுயுத்ஸுவும் கிருபரும் தௌம்யரும் (மற்றப்) பிராம்மணர்களும் கண்ணீரால் தழுதழுத்த குரலுள்ளவர்களாகப் பின்சென்றனர். பிறகு, குந்தியானவள், நேத்திரங்களைக் கட்டிக்கொண்டிருப்பவளும் செல்லுகின்றவளுமான காந்தாரியைத் (தன்) தோளில் வைக்கப்பட்ட அவளுடைய கையைச் சுமந்துகொண்டு சென்றாள். சிறப்புற்றவனான திருதராஷ்டிரராஜன் காந்தாரியினுடைய தோளைக் கையால் பிடித்துக்கொண்டு சென்றான். அவ்வாறே, துருபதன்பெண்ணான கிருஷ்ணையும் ஸுபத்திரையும் பாலனான புத்திரனுள்ளவளும் குருகுலத்தவளுமான உத்தரையும் சித்திராங்கதையும் மற்றுமுள்ள எல்லாஸ்திரீகளும் நாட்டுப்பெண்களும் திருதராஷ்டிரனுடன் புறப்பட்டார்கள். ராஜரே! அப்பொழுது, துக்கத்தால் குரரிபக்ஷிகள்போல் அழுகின்ற அந்தஸ்திரீகளுடைய சப்தமானது உரக்கத் தோன்றிற்று. பிறகு, பிராம்மணர்கள் க்ஷத்திரியர்கள் வைஸ்யர்கள் சூத்திரர்கள் இவர்களுடைய மனைவிகளும் நாற்புறமும் சூழ்ந்துகொண்டனர். ராஜரே! அந்தத் திருதராஷ்டிரன் (வனத்திற்குச்)செல்லும்பொழுது ஹஸ்தினாபுரத்திலுள்ள ஜனங்கள், முன்பு

---

1 ராஜா என்னும் சொல் விடப்பட்டது.

பாண்டவர்கள் கௌரவர்களுடைய ஸபையில் சூதாடி (க்கானகம்) செல்லும்பொழுது துயரப்பட்டதுபோல, துயரப்பட்டார்கள். சந்திரனும் ஸூரியனும்பார்த்திராத சிலஸ்திரீகளும், கௌரவச்ரேஷ்டனுன அந்த அரசன் மஹா வனத்திற்குச் செல்லும்பொழுது சோகத்தால் பீடிக்கப்பட்டவர்களாகி ராஜமார்க்கத்தில் வந்தார்கள்.

---

## பதினேழாவது அத்யாயம்.

## ஆச்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

:o:

**(திருதராஷ்டிரன் காட்டுக்குப் புறப்படும்போது விதுரரும் ஸஞ்சயனும் கூடப்புறப்பட்டதும், குந்தியும் பாண்டவர்கள் பலவாறு தடுத்தும் அவர்களைத் தேற்றிக் காந்தாரியுடன் காட்டுக்கே புறப்பட்டதும்.)**

அரசரே! பிறகு, அரண்மனைகளின் உப்பரிகைகளிலும் பூமியிலும் ஸ்திரீகளுடையதொலியும் புருஷர்களுடையதொலியும் மிகவும் அதிகமாகத் தோன்றின. புத்திசாலியான அந்த அரசன் நடுக்கமுற்று அஞ்சலி செய்துகொண்டு புருஷர்களாலும் ஸ்திரீகளாலும் நெருக்கமுள்ள ராஜமார்க்கத்தால் மிகச்ரமப்பட்டு வெளிப்பட்டான். அவன் ஹஸ்திநபுரத்திலிருந்து பெரிய வாயிலின்வழியாக வெளிப்பட்டு அந்தக் கூட்டத்தை அடிக்கடி திரும்பிச் செல்ல அநுமதிகொடுத்தான். விதுரரும் ஸேனாதிபதியும் ஸூதனும் கவல்கண குமாரனுமான ஸஞ்சயனும் அரசனுடன் வனம்செல்ல உத்ஸாஹமுள்ளவர்களானார்கள். பூபாலனான திருதராஷ்டிரன் கிருபரையும் மஹாரதனான யுயுத்ஸுவையும் திரும்பும்படி செய்து யுதிஷ்டிரரிடத்தில் ஒப்புவித்தான். பட்டணத்தார்களின்கூட்டமானது திரும்பினவுடன், அந்தப்புரத்துடன் கூடின யுதிஷ்டிரராஜர் அப்பொழுது திருதராஷ்டிரனால் அநுமதி கொடுக்கப்பட்டுத் திரும்புவதற்கு விரும்பினார். பரதச்ரேஷ்டரே! அவர், தாயாரான குந்தியினிடம் சென்று, 'நான் அரசருடன் செல்லுகிறேன். நீ திரும்பு. அரசியே! நீ மருமகள்களால் சூழப்பட்டு நகரம் செல். தவத்தில் நிச்சயமுள்ளவரும் தர்மாத்மாவுமான இந்த அரசர் செல்லட்டும்' என்று சொன்னார். தர்மபுத்திரரால் இவ்விதம் சொல்லப்பட்டவளும் கண்ணீரால் கலங்கின கண்களுள்ளவளுமான குந்தியானவள் அப்பொழுது காந்தாரியைப் பிடித்துக்கொண்டு சென்றுகொண்டேயிருந்தாள். குந்தி, 'மஹாராஜனே! ஸஹதேவன்மீது ஒருபொழுதும்

கோபித்துக் கொள்ளாதே. ராஜனே! அவன் எப்பொழுதும் என்னிடத்திலும் உன்னிடத்திலும் ஆசையுள்ளவனன்றோ? யுத்தங்களில் பின்வாங்கி ஓடாதவனான கர்ணனை எப்பொழுதும் நினைப்பாயாக. அந்தவீரன் அக்காலத்தில் அறிவில்லாதவளான என்னால் [1]விரதத்தை இழந்தவனாகச் செய்யப்பட்டான். அருமைப் புத்திரனே! ஸூரிய குமாரனான கர்ணனைப் பாராதவளும் அறிவில்லாதவளுமான என்னுடைய ஹிருதயமானது நூறாகப் பிளந்துபோகாமலிருப்பதால் அது நிச்சயமாக இரும்பினால் செய்யப்பட்டதே. பகைவரை அடக்குபவனே! இவ்விதம் நடந்தபின் நான் என்ன செய்யக்கூடும்? ஸூரிய புத்திரனை நான் விளங்கச் சொல்லாமலிருந்தது என்மேல் பெரிய குற்றம். நீண்ட கைகளுள்ளவனே! பகைவரை அழிப்பவனே! நீ எப்பொழுதுமே பிராதாக்களுடன் ஸூரிய புத்திரனான அக்கர்ணனுக்காக உத்தமமான தானத்தைக்கொடு. பகைவரை அழிப்பவனே! நீ எப்பொழுதும் திரௌபதிக்குப் பிரியத்தைச் செய்வதில் உறுதியாக இருக்க வேண்டும். கௌரவஸ்ரேஷ்டனே! நீ பீமஸேனனையும் அர்ஜுனனையும் நகுலனையும் ஸமாதானம் செய்யவேண்டும். ராஜனே! குலத்தின் பாரமானது இப்பொழுது உன்னைச் சார்ந்திருக்கிறது. நான் வனத்தில் [2]மாமனார் மாமியார்களுடைய பாதங்களில் பணிவிடை செய்துகொண்டு மேனியில் அழுக்குப்படிந்து தவஞ்செய்பவளாகக் காந்தாரியுடன் வஸிக்கப் போகிறேன்' என்று சொன்னாள்.

இவ்விதம் சொல்லப்பட்டவரும் தர்மாத்மாவும் இந்திரியங்களை வென்றவரும் புத்திசாலியும் ஸஹோதரர்களுடன் கூடினவருமான அவர் மனவருத்தமுற்று ஒன்றும் பேசாமலிருந்தார். தர்மராஜரான யுதிஷ்டிரர் ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்துத் தைன்யத்துடன் சிந்தையும் சோகமும் மேலிட்டவராகித் தாயாரை நோக்கி, '(அன்னையே!) என்ன இது செய்ய முயன்றாய்? நீ இவ்விதம் சொல்லக்கூடாது. நான் உனக்கு அனுமதி கொடுக்கமாட்டேன். நீ கிருபைசெய்ய வேண்டும். நீ முந்தி எங்களுக்குச் சுபத்தைப் பார்க்கும் விஷயத்தில் உத்ஸா

1 அவனுக்கு க்ஷத்ரியனுக்குரிய க்ரியைகளில்லாமற்போனமை இங்கு குறிப்பிடப்பட்டது; 'அவகீர்ண:' என்பது மூலம்; 'எறியப்பட்டான்' என்றும் கொள்ளலாம்.

2 'திருதராஷ்டிரன் பாண்டுவுக்குத் தமையனாகையால் பிதாவுக்குச் சமமானது பற்றி இவ்விதம் கூறப்பட்டது' என்பது பழையவுரை.

ஹத்தை உண்டுபண்ணி (இப்பொழுது,) [1]விதுலையினுடைய வார்த்தைகளால் எங்களை விடத் தகுந்தவளல்லை. நான் உன்னுடைய புத்தியைப் புருஷோத்தமரான வாஸுதேவரிடமிருந்து கேட்டு அரசர்களைக் கொன்று இந்த ராஜ்யத்தை அடைந்தேன். முன்பு நான் கேட்ட உன்னுடைய அந்தப் புத்தியானது இப்பொழுது எங்கே போயிற்று? க்ஷத்திரியதர்மத்திலிருக்கும் என்னை விட்டுவிட்டு நீ இப்பொழுது போகக் கூடாது. புகழ்பெற்றவளே! எங்களையும் ராஜ்யத்தையும் விட்டுவிட்டு நாட்டுப்பெண்களுமில்லாமல் செல்லக்கடினமான வனங்களில் எவ்விதம் வஸிக்கப்போகிறாய்? இப்பொழுது என்மீது கிருபைசெய்' என்று சொன்னார். குந்தியானவள் கண்ணீரால் தழுதழுத்த புத்திரனுடைய இவ்விதமான வார்த்தைகளைக் கேட்டுக் கண்ணீர் நிறைந்த கண்களுள்ளவளாகிச் சென்றுகொண்டேயிருக்க, பீமஸேனன் அவளைநோக்கி, 'தாயே! புத்திரர்களால் ஜயிக்கப்பட்ட இந்த ராஜ்யத்தை அனுபவிக்க வேண்டியதும் ராஜதர்மங்களை அடையவேண்டியதுமான காலத்தில் உனக்கு இந்தப்புத்தி எங்கிருந்து வந்தது? நீ முன்பு எங்களை எதற்காகப் பூமியை அழிக்கும்படி செய்தாய்? (இப்பொழுது) என்னகாரணத்திற்காக (எங்களை) விட்டுவிட்டு வனம் செல்ல விரும்புகிறாய்? நீ பாலர்களான எங்களையும் துக்கமும் சோகமும்மேலிட்டவர்களும் மாத்ரியின் புத்திரர்களுமான இந்த நகுல ஸஹதேவர்களையும் வனத்திலிருந்து இங்கு எதற்காக அழைத்து வந்தாய்? தாயே! கிருபை செய். புகழ்பெற்றவளே! நீ இப்பொழுது கானகம் செல்லக்கூடாது. அம்மா! அர்ஜுனனுடைய வன்மையால் ஸம்பாதிக்கப்பட்ட யுதிஷ்டிரருடைய செல்வத்தை நீ அனுபவி' என்று சொன்னான். சீக்கிரம் வனவாஸத்தில் உத்ஸாஹமுள்ளவளும் நிச்சயமுள்ளவளுமான அந்தக் குந்தியானவள் இவ்விதம் புலம்புகின்ற புத்திரர்களுடைய பலவிதமான வார்த்தைகளையும் ஏற்றுக்கொள்ளவில்லை. அப்பொழுது திரௌபதியும் துக்கம் அடைந்த முகத்தையுடையவளாகி அழுதுகொண்டு, ஸுபத்ரையுடன், வனவாஸத்தின் பொருட்டுச் செல்லுகின்ற மாமியாரைப் பின்தொடர்ந்து சென்றாள். வனம் செல்ல நிச்சயம் செய்துகொண்டவளும் சிறந்த அறிவுள்ளவளுமான அந்தக் குந்தியானவள், அழுகின்ற எல்லாப் புத்திரர்களையும் அடிக்கடி பார்த்துக்கொண்டு சென்றுகொண்டே

1 ஸௌவீரராஜன் மனைவி; இவள் தன் மகனைப் போருக்குத் தூண்டினாளென்னும் கதை குந்தியால் சொல்லப்பட்டிருக்கிறது. உத்யோக பர்வம் 133-வது அத்யாயமுதல் காண்க.

யிருந்தாள். பாண்டவர்களோ வேலைக்காரர்களுடனும் அந்தப்புரத்துட னும் அவளைப் பின்தொடர்ந்து சென்றனர். பிறகு, அந்தக் குந்தியான வள் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு புத்திரர்களை நோக்கிப் பின் வரும் வார்த்தையைச் சொல்லலானாள்.

---

## பதினெட்டாவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(குந்தி, வருந்திய பாண்டவர்களைக் காரணங்கூறி ஸமாதானப்படுத்தியது.)

குந்தி, 'சிறந்தகைகளுள்ளவனே! பாண்டவ! நீ சொல்லும் இது உண்மைதான். மன்னவர்களே! நான் முன்பு கஷ்டப்படும் உங்களை ரக்ஷித்தேன். சூதாடி ராஜ்யம் கவரப்பட்டவர்களும் ஸுகத்தையும் இழந்தவர்களும் ஞாதிகளால் அவமதிக்கப்பட்டவர்களுமான உங்களை நான் காப்பாற்றினேன். புருஷஶ்ரேஷ்டர்களே! பாண்டுவின் ஸந்ததி நசியாமலும் உங்களுடைய கீர்த்தி அழியாமலும் இருக்கவேண்டு மென்று (உங்களை யான்) ரக்ஷித்தேன். நீங்களெல்லாரும் இந்திரனுக்கு ஒப்பானவர்களும் தேவர்களுக்குச்சமமான பராக்கிரமமுள்ளவர்களும் பிறருடைய முகத்தை எதிர்பாராதவர்களுமாக இருக்கவேண்டுமென்று நான் அவ்விதம் செய்தேன். தர்மத்தைச் செய்பவருள் சிறந்தவனும் அரசனும் இந்திரனுக்கொப்பானவனுமான நீ மறுபடியும் காட்டில் கஷ் டப்படக்கூடாதென்று எண்ணி (நான் உங்களை) ரக்ஷித்தேன். பதினா யிரம் யானைகளுக்குச் சமமான வன்மையுள்ளவனும் பிரஸித்திபெற்ற பராக்ரமமும் ஆண்மையுமுள்ளவனுமான இந்தப் பீமஸேனன் நாசமடை யக்கூடாதென்றெண்ணி (உங்களை நான்) ரக்ஷித்தேன். அவ்வாறே, பீம ஸேனனுக்குத் தம்பியும் இந்திரனுக்கொப்பானவனுமான இந்த அர்ஜு னன் நாசமடையக்கூடாதென்றெண்ணி (இவனை நான்) ரக்ஷித்தேன். மூத்தோர்களிடம் பக்தியுள்ளவர்களான இந்த நகுல ஸஹதேவர்களும் பசியினால் நாசமடையக்கூடாதென்று (நான் இவர்களை) ரக்ஷித்தேன். பருத்தவளும் கருமை நிறமுள்ளவளும் மிக்கவிசாலமான கண்களுள்ள வளுமான இந்தத் திரௌபதியும் ஸபையின்கண் வீணாகத் துன்பப் படுத்தப்பட்டவளாகக்கூடாது என்றும் அந்தக் காரியம் செய்யப்பட் டது. பீமஸேன! நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே வாழை

யைப்போல நடுக்கமுற்றவளும் பெண்களுடைய தர்மத்தை ஆச்ரயித்தவளும் அழகான மேனியுள்ளவளும் சூதாடி ஜயிக்கப்பட்டவளுமான திரௌபதியைத் துச்சாஸனன் எப்பொழுது மூர்க்கத்தனத்தால் தாஸியைப்போல இழுத்தானோ அப்பொழுதே, இந்த வம்சமானது, அவமதிக்கப்பட்டதென்று நான் தெரிந்துகொண்டேன். அப்பொழுது என்னுடைய மாமனார் முதலான கௌரவர்களும் உட்கார்ந்திருந்தார்கள். அவள் தெய்வத்தையே நாதனாகவேண்டிக் குரரிபக்ஷிபோலப் புலம்பினாள். மன்னர்களே! பாவியும் கெட்ட புத்தியுள்ளவனுமான துச்சாஸனன் எப்பொழுது இவளைக் கூந்தலில் பற்றியிழுத்தானோ அப்பொழுது நான் மூர்ச்சையடைந்தேன். அருமைப் புத்திரர்களே! உங்களுக்குத் தேஜஸ் விருத்தியடைய வேண்டியதற்காக நான் அப்பொழுது விதுரனுடைய வாக்கியத்தால் உங்களை ரக்ஷித்தேனென்று தெரிந்துகொள்ளுங்கள். புத்திரர்களே! இந்த ராஜவம்சமானது பாண்டுவுக்குப் பிறகு என்னுடைய புத்திரர்களை அடைந்து நாசமடையாமலிருக்கவேண்டுமென்று (நான் உங்களை) ரக்ஷித்தேன். ராஜனே! எவனுக்குப் பிறகு வம்சமானது அழிந்துபோகிறதோ வம்சத்தைக் கெடுத்தவனான அவனுடைய புத்திரர்களும் பௌத்திரர்களும் புண்ணிய லோகங்களை அடையமாட்டார்கள். புத்திரர்களே! முன்பு நான் பர்த்தாவினுடைய விஸ்தாரமான ராஜ்யத்தின் பயனை அனுபவித்தேன். மஹாதானங்களைக் கொடுத்தேன். விதிப்படி ஸோமபானம் செய்தேன். நான் என்னுடைய பிரயோஜனத்திற்காக வாஸுதேவனைத் தூண்டவில்லை. விதுரனின் அவ்விதப் புலம்பல்களால் (உங்களை) ரக்ஷிக்க வேண்டி அந்தக் காரியம் செய்யப்பட்டது. புத்திரர்களே! நான் புத்திரர்களால் ஜயிக்கப்பட்ட ராஜ்யத்தின் பயனை விரும்பவில்லை. பிரபுவே! புண்ணியமான பர்த்தாவின் உலகங்களைத் தவத்தால் (அடைய) விரும்புகிறேன். யுதிஷ்டிரா! நான் வனத்தில் வசிக்கின்ற மாமனாருக்கும் மாமியாருக்கும் பணிவிடைசெய்து தவத்தால் சரீரத்தை உலர்த்தப் போகிறேன். கௌரவச்ரேஷ்டனே! பீமஸேனன் முதலானவர்களுடன் திரும்பு. உன்னுடைய புத்தியைத் தர்மத்தில் நிறுத்து. சித்தமும் சிறந்ததாக இருக்கட்டும்' என்று சொன்னாள்.

---

## பத்தொன்பதாவது அத்யாயம்.

### ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:0:——

(பாண்டவர் முதலியோர் வருத்தத்துடன் திரும்பியதும், திருதராஷ்டிரன் முதலியோர் கங்கைக்கரையில் மாலைக்கடன்களைச் செய்து இரவைக்கழித்ததும்.)

ராஜஶ்ரேஷ்டரே! பாரதரே! குந்தியின் வசனத்தைக் கேட்டுப் பாண்டவர்கள் வெட்கிப் பாஞ்சாலியுடன் திரும்பினார்கள். பிறகு, அவ்விதம் சென்றவளான குந்தியைப் பார்த்து, அப்பொழுது அழுகின்ற எல்லா அந்தப்புரஸ்திரீகளினுடைய ஒலியும் பெரிதாகவே உண்டாயிற்று. பிறகு, பாண்டவர்கள் அப்பொழுது திருதராஷ்டிர ராஜனைப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து அந்தக் குந்தியைத் திருப்பாமல் தாம் திரும்பினார்கள். பிறகு, சிறந்த தேஜஸுள்ளவனும் அம்பிகையின் புத்திரனுமான திருதராஷ்டிரன், காந்தாரியையும் விதுரரையும் நல்வார்த்தை கூறிப் பிடித்துக்கொண்டு, 'யுதிஷ்டிரனுடைய தாயான குந்திதேவியானவள் நன்கு திரும்பிச்செல்லட்டும். யுதிஷ்டிரன் சொல்வதெல்லாம் உண்மையே. எவள் புத்திரர்களுடைய இந்தப் பெரியசெல்வத்தையும் பெரும்பயனையும் புத்திரர்களையும் விட்டுவிட்டு அறிவில்லாதவள்போலச் செல்லமுடியாத கானகம் செல்லுவாள்? இவள் ராஜ்யத்திலிருந்துகொண்டே தவம்புரியவும் பெரிதான தானங்களையும் விரதங்களையும் செய்யவும் கூடும். இப்பொழுது என்னுடைய வார்த்தையைக் கேட்கவேண்டும். காந்தாரி! மருமகள் பணிவிடைசெய்து அதனால் நான் மிக்க ஸந்தோஷமடைந்தேன். தர்மங்களை அறிந்தவளே! ஆகையால், நீ இவளுக்கு அனுமதி கொடுக்கவேண்டும்' என்று சொன்னான். அரசனால் இவ்விதம் சொல்லப்பட்ட காந்தாரியானவள் குந்தியை நோக்கி அரசன் சொன்ன அந்த எல்லா வசனத்தையும் விசேஷமான தன்னுடைய வாக்கியத்தையும் சொன்னாள். தேவியான அந்தக் காந்தாரி, அப்பொழுது வனவாஸம் செய்ய எண்ணங்கொண்டவளும் தர்மத்தை முக்கியமாகக் கொண்டவளும் பதிவ்ரதையுமான குந்தியைத் திருப்புவதற்குச் சக்தியற்றவளானாள். அப்பொழுது கௌரவஸ்திரீகள் அந்தக் குந்தியின் அவ்வித நிலைமையையும் நிச்சயத்தையும் உணர்ந்து கௌரவஶ்ரேஷ்டர்கள் திரும்பினதையும் பார்த்து அழுதார்கள். அப்பொழுது, குந்தியின் புத்திரர்களும் எல்லா மருகிகளும் திரும்பினவுடன், சிறந்த பிரஜ்ஞை

யுள்ள திருதராஷ்டிரராஜன் வனத்தைக்குறித்துச் சென்றான். அப்பொழுது அந்தப் பாண்டவர்களனைவரும் மிக்க தைன்யமுற்றவர்களும் துக்கமும் சோகமும் மேலிட்டவர்களுமாகி ஸ்திரீகளுடன் வாகனங்களில் ஏறி நகரம் சென்றனர். ஸ்திரீகளுடனும் முதியவர்களுடனும் சிறுவர்களுடனும் கூடின ஹஸ்தினபுரமென்னும் அந்தப் பட்டணமானது, (அப்பொழுது) ஸந்தோஷமும் ஆனந்தமுமற்று உத்ஸவத்தை இழந்ததுபோல இருந்தது. குந்தியைவிட்டுப்பிரிந்த பாண்டவர்களனைவரும் (தாயை) விட்டுப்பிரிந்த கன்றுகள்போல உத்ஸாஹமற்றவர்களும் மனத்தளர்ச்சியுள்ளவர்களும் மிக்க துயரத்தால் பீடிக்கப்பட்டவர்களுமாயிருந்தார்கள். பிரபுவான திருதராஷ்டிரனே அந்தப்பகலில் நெடுந்தூரம்சென்று, பிறகு, கங்கையின் கரையில் வாஸம் செய்தான். தபோவனத்தில் ஆங்காங்கு வேதத்தின் கரையை அடைந்தவர்களான பிராம்மணஶ்ரேஷ்டர்களால் முறைப்படி மூட்டப்பட்ட அக்னிகள் விளங்கின. பிராயம் முதிர்ந்த அந்த அரசனும் அக்கினியை மூட்டினான். பாரதரே! அப்பொழுது அந்தஅரசன் அக்கினிகளைப் பூஜித்தும் விதிப்படி ஹோமம் செய்தும் ஸந்தியாகாலத்தை அடைந்த ஸூரியனை உபாஸித்தான். பிறகு, விதுரரும் ஸஞ்சயனும் கௌரவவீரனான மன்னனுக்கும் காந்தாரிக்கும் குசங்களால் அருகில் படுக்கையை ஏற்படுத்தினார்கள். யுதிஷ்டிரருடைய தாயும் நல்ல விரதத்திலிருப்பவளுமான குந்தியானவள் காந்தாரிக்கு அருகில் தர்ப்பத்தின்மீது ஸுகமாகச் சயனம்செய்தாள். அவர்களுடைய அனுமதியின்மேல் விதுரர் முதலானவர்களும் ரித்விக்குக்களும் கூடவந்த பிராம்மணர்களும், தகுந்த இடத்தில் சயனம் செய்தனர். நன்கு அத்தியயனம்செய்கிற பிராம்மணஶ்ரேஷ்டர்களையுடையதும் நன்கு ஜ்வலிக்கின்ற அக்னியுள்ளதுமான அந்த ராத்திரியானது அவர்களுக்கு [1]ப்ராம்மீராத்ரிபோல ஸந்தோஷத்தை விருத்தி செய்வதாயிற்று. பிறகு, இரவு சென்றவுடன், அவர்களெல்லாரும் காலைக்கடன்களைச் செய்து அக்கினியில் ஹோமம்செய்துவிட்டு உபவாஸத்தை முக்கியகதியாகக் கொண்டவர்களாகி வடக்கு முகமாகப் பார்த்துக்கொண்டு கிரமமாகச் சென்றார்கள். பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ள ஜனங்களுடன் பேசுகின்றவர்களும் துக்கிக்கின்றவர்களுமான அவர்களுக்கு முதல்நாள் அந்த வாஸமானது அதிக துக்ககரமாயிருந்தது.

---

1 'வேதகோஷம் செய்யப்படுகிற ஓர் இரவு' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பிலுள்ள குறிப்பு.

## இருபதாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(திருதராஷ்டிரன் விதுரர் முதலானவருடன் குருக்ஷேத்ரஞ்சென்று சதயூபாஸ்ரமத்தில் வியாஸர் உபதேசித்தபடி கடுந்தவஞ் செய்தது.)

பிறகு, அரசன் விதுரருடைய ஸம்மதத்தின்மேல் பரிசுத்தமும் புண்ணியம் செய்த ஜனங்களுக்குத் தகுந்ததுமான கங்கைக் கரையில் வாஸம் செய்தான். பரதஸ்ரேஷ்டரே! அவ்விடத்தில் அவரை வனத்தில் வசிக்கும் பிராம்மணர்களும், க்ஷத்திரியர்கள், வைஸ்யர்கள், சூத்திரர்கள் இவர்களில் அநேகம் கூட்டங்களும் பூஜித்தார்கள். அவர்களால் சூழப்பட்ட அந்த அரசன் சிஷ்யர்களுடன்கூடின அவர்களைக் கதைகளால் ஸந்தோஷப்படுத்தி விதிப்படி பிரதிபூஜை செய்து அனுமதி கொடுத்தான். ஸாயங்காலத்தில் அந்த அரசனும் புகழ்பெற்றவளான காந்தாரியும் அவ்விடமிருந்து கங்கைக்குச் சென்று விதிப்படி சுத்தி செய்துகொண்டார்கள். பாரதரே! அப்பொழுது விதுரர்முதலான மற்றுமுள்ள அந்த எல்லாப் புருஷர்களும் தீர்த்தங்களில் தனித்தனி ஸ்நானம் செய்து எல்லாக் கிரியைகளையும் செய்தார்கள். ராஜரே! பிறகு, குந்திபோஜனுடைய புத்திரியான குந்தியானவள், சுத்தி செய்து கொண்டவரும் முதியவருமான மாமனாரையும் காந்தாரியையும் கங்கைக் [1]கரைக்கு அழைத்துக்கொண்டு வந்தாள். அப்பொழுது ரித்விக்குக்கள் அரசனுக்கு வேதியில் [3]பரிஸ்தரணத்தைச் செய்தார்கள். ஸத்திய ஸந்தனான அந்த அரசன் அப்பொழுது அக்னியில் ஹோமம் செய்தான். பிறகு, வ்ருத்தனும் நியமமுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனுமான அந்த அரசன் உடன் வருகிறவர்களுடன் கங்கைக் கரையிலிருந்து குருக்ஷேத்திரம் சென்றான். புத்திசாலியான அந்த அரசன் அங்கு ஆஸ்ரமமிருக்கும் இடத்தை நோக்கிச் சென்று பண்டிதனான சதயூபனென்னும் ராஜரிஷியை அடைந்தான். அவனே கேகய தேசங்களில் பகைவரை வாட்டுபவனும் சிறந்தவனுமான அரசனாக இருந்தான். அவன் தன் புத்திரனை மனிதர்களுக்கு அரசனாக இருக்கச் செய்துவிட்டு வனத்திற்கு வந்தான். அந்த திருதராஷ்டிரராஜன் அந்தச் சதயூபனுடன் வியாஸருடைய ஆஸ்ரமத்திற்குச் சென்றான். ராஜரே! அங்கு வியாஸர்

---

1. வேறுபாடம். 2. அக்நிமேடை.

3. அக்நியைச் சுற்றித் தர்ப்பை முதலியவற்றைப் பரப்புதல்.

அந்தக் கௌரவஸ்ரேஷ்டனை விதிப்படி வரவேற்றார். அப்பொழுது கௌரவ புத்திரனான அந்த அரசன் அவ்விடத்தில் தீக்ஷையைப் பெற்று அந்தச் சதயூபனுடைய ஆஸ்ரமத்தில் வாஸம் செய்தான். மஹாராஜரே! அப்பொழுது, சிறந்த அறிவுள்ள (சதயூபனென்னும்) அரசன் அந்தத் திருதராஷ்டிர ராஜனுக்கு அரண்யத்தில் செய்யவேண்டிய விதியை முழுதும் வ்யாஸருடைய அனுமதியின்மேல் சொன்னான். அரசரே! இவ்விதம், சிறந்த மனமுள்ளவனான அந்தத் திருதராஷ்டிரன் அப்பொழுது தன்னையும் கூடவந்தவர்களான அவர்களையும் தவம் புரியும்படி செய்தான். மஹாராஜரே! அவ்வாறே தேவியான காந்தாரியானவள் மரப்பட்டையையும் கிருஷ்ணாஜினத்தையும் உடுத்துக் கொண்டு குந்தியுடன் சமமான விரதத்தை அனுஷ்டித்தாள். வேந்தரே! அவர்கள் இந்திரியக் கூட்டத்தை நன்கு அடக்கிச் செய்கையினாலும் மனத்தாலும் வாக்காலும் நேத்ரத்தினாலும் சிறந்ததான தவத்தைச்செய்தார்கள். அந்தத் திருதராஷ்டிரராஜன் அங்கு தோலும் எலும்புமானவனும் நன்கு உலர்ந்த மாம்ஸமுள்ளவனும் ஜடையும் கிருஷ்ணாஜினமும் தரித்தவனும் மரப்பட்டையை மேனியில் போர்த்துக் கொண்டவனும் மோஹம் விலகியவனுமாயிருந்துகொண்டு மஹரிஷிபோலக் கடுந்தவம் புரிந்தான். அப்பொழுது தர்மார்த்தங்களை அறிந்தவரும் சிறந்த புத்தியுள்ளவருமான விதுரரும் ஸஞ்சயனுடன் கடுமையான தவத்தில் உறுதியுள்ள சித்தமுள்ளவரும் இளைத்தவரும் மரப்பட்டையையும் சீரத்தையும் உடுத்தவருமாயிருந்துகொண்டு மனைவியுடன் கூடின அந்த அரசனை உபசரித்தார்.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(நாரதர் முதலியோர் திருதராஷ்டிரனைக் காண வந்ததும், நாரதர் அந்தவனம் ராஜரிஷிகளுக்கு ஸ்வர்க்கம்தந்ததைத் திருதராஷ்டிரனுக்குக் கூறி அவர்களுக்கும் ஸித்திதருமென்றதும்.)

பிறகு, முனிஸ்ரேஷ்டர்களான நாரதரும்,பர்வதரும், மஹா தபஸ்வியான தேவலரும், சிஷ்யருடன்கூடின வியாஸரும், மற்றுமுள்ள பண்டிதர்களான ஸித்தர்களும், வ்ருத்தனும் மிக்க தார்மிகனுமான சதயூபனென்னும் ராஜரிஷியும் திருதராஷ்டிரராஜனைப் பார்ப்பதற்காக அவ்

விடம் வந்தார்கள். மஹாராஜரே! குந்தியானவள் அவர்களுக்கு விதிப்படி பூஜையைச் செய்தாள். அந்தத் தவசிகளும் அவள் செய்த உபசாரத்தால் ஸந்தோஷமடைந்தார்கள். ஐயா! அந்த மஹரிஷிகள் அப்பொழுது மஹாத்மாவான திருதராஷ்டிரராஜனை ஸந்தோஷிக்கச் செய்து கொண்டு தர்மத்துடன்கூடின கதைகளைச் சொன்னார்கள். பிறகு, எல்லாவற்றையும் பிரத்யக்ஷமாகக் கண்டவரும் தேவரிஷியுமான நாரதர் ஒரு கதையின் நடுவில் பின்வரும் கதையைச் சொல்லலானார்.

'முற்காலத்தில் பிரம்மதேவருக்கொப்பானவரும் ஓரிடமிருந்தும் பயமில்லாதவரும் ஸஹஸ்ரசித்யரென்று சொல்லப்பட்டவரும் சதயூபனுக்குப் பிதாமஹருமான அரசர் ஒருவர் இருந்தார். தர்மாத்மாவான ஸஹஸ்ரசித்யரென்னும் அந்த அரசர் மிக்க தார்மிகனான மூத்தகுமாரனிடத்தில் ராஜ்யத்தை வைத்துவிட்டு வனம் சென்றார். பூபதியும் சிறந்த ஒளியுள்ளவருமான அவர் ஜ்வலிக்கின்ற தவத்தின் முடிவை அடைந்து இந்திரனுடைய வீடு சென்றார். ராஜரே! தவத்தால் பாவத்தை எரித்தவரான அந்த அரசரை முன்பு நான் வரும்பொழுது இந்திரனுடைய வீட்டில் பலமுறை பார்த்திருக்கிறேன். அவ்வாறே, பகதத்தனுடைய பிதாமஹனும் மனிதர்களைப் பரிபாலித்தவனுமான சைலாலயனென்னும் அரசனும் தபோபலத்தினாலேயே இந்திரனுடைய வீடு சென்றான். ராஜனே! அவ்வாறே, வஜ்ரபாணியான இந்திரனுக்கொப்பான ப்ருஷத்ரன். என்னும் ஓர் அரசன் இருந்தான். அவனும் இவ்விடம் வந்து தவம்புரிந்து தேவலோகம் சென்றான். ராஜனே! இந்த ஆரண்யத்தில் மாந்தாதாவின் புத்திரனான புருகுத்ஸனென்னும் அரசனும் சிறந்த ஸித்தியை அடைந்தான். நதிகளுள் சிறந்த நர்மதை [1]எவனுக்குமனைவியாயிருந்ததோ அந்த அரசன் இந்த ஆரண்யத்தில் தவம்புரிந்து ஸ்வர்க்கம் சென்றான். ராஜனே! மிக்க தார்மிகனான சசலோமனென்னும் ஓர் அரசன் இருந்தான். அவனும் இந்த வனத்தில் நன்கு தவம்புரிந்து அதனால் ஸ்வர்க்கம் சென்றான். ராஜனே! நீயும் வியாஸருடைய அனுக்கிரகத்தினால் இந்தத் தபோவனத்தை அடைந்து (மற்றவரால்) அடைய முடியாததும் சிறந்ததுமான ஸித்தியை அடைவாய். ராஜஶ்ரேஷ்டனே! நீயும் தவத்தின் முடிவில் ஒளியினால் சூழப்பட்டவனாகிக் காந்தாரியுடன் அந்த மஹாத்மாக்களுடைய கதியை அடையப்போகிறாய். இந்திரனுடைய

1 இக்ஷ்வாகுவம்சத்துத் துர்யோதனன் என்பவன்; அநு, பர்வம், பக்கம் 9.

ஸமீபத்திலிருக்கும் பாண்டுவானவன் எப்பொழுதும் உன்னை நினைத்துக் கொண்டிருக்கிறான். மஹாராஜனே! அவனும் உனக்கு எப்பொழுதும் க்ஷேமத்தைச் செய்வான். உன்னுடைய மருகியும் யுதிஷ்டிரனுடைய தாயும் புகழ்பெற்றவளுமான குந்தியானவள் உனக்கும் காந்தாரிக்கும் பணிவிடைசெய்வதால் பர்த்தாவின் உலகத்தை அடைவாள். அந்த யுதிஷ்டிரன் ஸநாதனமான தர்மமல்லவா? ராஜனே! நாங்கள் இதைத் திவ்யதிருஷ்டியினால் பார்க்கிறோம். விதுரனும் மஹாத்மாவான யுதிஷ்டிரன்மீது பிரவேசிக்கப்போகிறான். ஸஞ்சயன் அவனைத் தியானம்செய்து இங்கிருந்து ஸ்வர்க்கத்தை அடையப்போகிறான்' என்று சொன்னார். கௌரவஶ்ரேஷ்டனும் மஹாத்மாவும் வித்வானுமான திருதராஷ்டிரன் மனைவியுடன் இதைக்கேட்டு ஸந்தோஷமுள்ளவனாகி நாரதருடைய வாக்கியத்தைப் புகழ்ந்து (அந்த) நாரதருக்கு நிகரற்ற பூஜையைச் செய்தான். ராஜரே! பிறகு, அந்த எல்லாப் பிராம்மணக்கூட்டங்களும் திருதராஷ்டிரராஜனுடைய ஸந்தோஷத்தால் மிக்க ஸந்தோஷமுள்ளனவாகி அப்பொழுது அடிக்கடி நாரதரை மிகப் பூஜித்தன.

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

### ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

———:o:———

(சதயூபரால் கேட்கப்பட்ட நாரதர், திருதராஷ்டிரன் மூன்று வருஷத்துக்குப் பிறகு காந்தாரியுடன் தபோலோகமடைவானென்றது.)

பிராம்மணஶ்ரேஷ்டர்கள் நாரதருடைய அந்தவாக்கியத்தைப் புகழ்ந்தார்கள். சதயூபனென்னும் ராஜரிஷியோ நாரதரை நோக்கி, 'சிறந்த காந்தியுள்ளவரே! பகவானை உம்மால் கௌரவராஜனுக்கும் இந்த எல்லா ஜனங்களுக்கும் எனக்கும் ஶ்ரத்தை விருத்திபண்ணப்பட்டது. தேவரிஷியே! உலகங்களால் பூஜிக்கப்பட்டவரே! திருதராஷ்டிரராஜரைப்பற்றிச் சொல்ல ஒரு விருப்பம் இருக்கிறது. அதை நான் சொல்லுகிறேன்; கேளும். பிரம்மரிஷியே! எல்லாவிருத்தாந்தங்களின் உண்மையையும் அறிந்தவரும் திவ்யதிருஷ்டியுடன்கூடினவருமான நீர் மனிதர்களின் பலவித கதிகளையும் பார்க்கிறீர். பல அரசர்கள் மஹேந்திரனுடைய உலகத்தை அடைந்திருப்பதை நீர் சொன்னீர். சிறந்த முனிவரே! இந்த மன்னருக்குக் கிடைக்கும் உலகங்களை நீர்

சொல்லவில்லை. பிரபுவே! இந்த அரசரும் எப்பொழுது எப்படிப் பட்ட ஸ்தானத்தை அடைவாரென்று உம்மிடமிருந்து கேட்க விரும்பு கிறேன். அதனை எனக்கு உள்ளபடி சொல்லும்' என்ற வாக்கியத் தைச் சொன்னான். அந்தச் சதயூபனால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் திவ்யஜ்ஞானமுள்ளவரும் சிறந்த தவமுள்ளவருமான நாரதர் ஸபை யின் நடுவில் எல்லாருடைய மனத்திற்குமிசைந்ததான வாக்கியத்தைச் சொல்லலானார். 'ராஜரிஷியே! நான் (ஒரு ஸமயம்) தற்செயலாக இந் திரனுடைய ஸபைக்குச் சென்றேன். அங்கு சசீபதியான இந்திரனை யும் அரசனான பாண்டுவையும் கண்டேன். ராஜனே! அங்கு இந்தத் திருதராஷ்டிரராஜன் இப்பொழுதும் செய்வதும் (ஒருவராலும்) செய்ய முடியாததுமான இந்தத்தவத்தைப்பற்றிய பின்வரும் கதை நடந்தது. அங்கு நான் இதை இந்திரன் நேரில் சொல்லக் கேட்டேன். (அதா வது)—இந்தத் திருதராஷ்டிரராஜனுக்கு ஆயுள்முடிய மூன்றுவருஷங் கள் மிச்சமிருக்கின்றன. பிறகு, வியாஸமஹரிஷியின் புத்திரனும் பெரிய பாக்கியம் பெற்றவனும் தவத்தால் பாவத்தை எரித்தவனுமான இந்தத் திருதராஷ்டிரராஜன், திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவ னும் குபேரனால் பூஜிக்கப்பட்டவனுமாகிக் காந்தாரியுடன் இஷ்டப்படி செல்லும் விமானமேறிக் குபேரனுடைய உலகத்திற்குச் செல்லப்போகி றான். தர்மாத்மாவான அவன் வியாஸருடைய தபோபலத்தால் தேவர் கள் கந்தர்வர்கள் ராக்ஷஸர்கள் இவர்களின் உலகங்களிலும் தன் இஷ்டப் படி ஸஞ்சரிக்கப்போகிறான்—(என்பது). பெரிய தேவரஹஸ்யமான இதை நான் உங்களுக்குப் பிரியத்தால் சொன்னேன். நீங்களோ கல்வி யைத் தனமாகக் கொண்டவர்கள்; தவத்தால் பாவத்தை எரித்தவர்கள்' என்று சொன்னார். இவ்விதம் தேவரிஷியான அந்த நாரதருடைய இனி மையான அந்த வார்த்தையைக்கேட்டு அந்த எல்லாப் பண்டிதர்களும் அந்த அரசனும் ஸந்தோஷமுள்ளவர்களாயினர். வித்வான்களும் ஸித் தர்களுடையகதியை அடைந்தவர்களுமான அவர்கள் இவ்விதம் கதை களைச் சொல்லிக்கொண்டு திருதராஷ்டிரனுடனிருந்து, பிறகு, இஷ் டப்படி சென்றார்கள்.

---

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

-:o:—

(யுதிஷ்டிரர் முதலியோர் குந்தி முதலியோர்களின் பிரிவினாலும் அபிமன்யு முதலியவர்களின் மரணத்தினாலும் உண்டான துக்கத்தால் தம்தம் வேலைகளையும் நன்கு பாராமலிருந்தது.)

அரசரே! கௌரவேந்திரன் வனம் சென்றவுடன், பாண்டவர்கள் துக்கத்தோடும் சோகத்தோடும் கூடினவர்களும் தாயாருடைய (பிரிவினாலுண்டான) சோகத்தோடு கூடினவர்களுமானார்கள். அவ்வாறே, பட்டணத்திலுள்ள ஜனங்களெல்லோரும் ராஜனைப்பற்றித் துக்கித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது, பிராம்மணர்கள் அரசனைப்பற்றிய கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். (அவையாவன)—பிராயம் முதிர்ந்தவனான அந்த அரசன் நிர்ஜனமானவனத்தில் எவ்விதம் வஸிப்பான்? பெரிய பாக்கியமுள்ள காந்தாரியும் பிருதையென்னும் அந்தக் குந்தியும் எவ்விதம் வஸிப்பார்கள்? ஸுகத்திற்குத்தக்கவனும் அறிவைக் கண்ணாகக் கொண்டவனும் சிறந்த மனமுள்ளவனுமான அந்த ராஜரிஷியானவன் ஸுகத்தை இழந்து பெரிதான அந்தவனத்தை அடைந்து என்ன நிலைமையை அடைந்தானோ? குந்தியானவள் செய்வதற்கு மிகவும் அரிதான காரியத்தைச் செய்தாள். அவள் புத்திரர்களையும் ராஜ்யஸம்பத்தையும் விட்டுவிட்டு வனத்தில் பிரியப்பட்டாளே! பிராதாவுக்குப் பணிவிடைசெய்பவரும் நல்ல அறிவுள்ளவருமான விதுரரும், புத்திசாலியும் எஜமானனிட்ட அன்னத்தைப் பயன்படுத்துபவனும் கவல்கண குமாரனுமான அந்த ஸஞ்சயனும் என்ன நிலைமையை அடைந்தார்களோ?—(என்பன). சிறுவர் முதலான பட்டணத்திலுள்ள அந்த ஜனங்கள் சிந்தையும் சோகமும் மேலிட்டவர்களாகி ஆங்காங்கு ஒருவரோடொருவர் சேர்ந்து (இவ்விதமான) கதைகளைச் சொல்லிக் கொண்டார்கள். அந்த எல்லாப் பாண்டவர்களும் மிக்க சோகமேலிட்டவர்களாகி வயது முதிர்ந்தவளான தாயையும் அவ்வாறே வயது முதிர்ந்தவனும் புத்திரர்களை இழந்தவனும் தந்தையுமான திருதராஷ்டிரராஜனையும் பெரியபாக்கியமுள்ள காந்தாரியையும் சிறந்த அறிவுள்ள விதுரரையும்பற்றித் துக்கித்துக்கொண்டு பட்டணத்தில் சிறிது காலம் வாஸம் செய்தார்கள். அவர்களைப்பற்றிக் கவலைப்படுகின்றவர்களான அந்தப் பாண்டவர்களுக்கு அப்பொழுது ராஜ்யத்திலும் ஸ்திரீகளிடத்திலும் வேதாத்யயனங்களிலும் விருப்பம் உண்டாகவில்லை. அவர்கள்

அரசரைப் பற்றிச் சிந்தித்தும் கோரமான அந்த ஞாதிகளின் வதத்தை அடிக்கடி நினைத்தும் மிக்க ஒழிவை அடைந்தார்கள். அந்த வீரர்கள் பாலனை அபிமன்யுவுக்குப் போர்முனையில் நேர்ந்த நாசத்தையும் சிறந்த புஜபலமுள்ளவனும் யுத்தங்களில் (புறங்காட்டி) ஓடாதவனுமான கர்ணனுக்கு நேர்ந்த மரணத்தையும் அவ்வாறே திரௌபதியின் குமாரர்களுக்கும் மற்ற ஸுஹ்ருத்துக்களுக்கும் நேர்ந்தவதத்தையும் நினைத்து மனத்துயரமுள்ளவர்களாயினர். பாரதரே! அவர்கள் சிறந்த வீரர்கள் கொல்லப்பட்டதும் ரத்தினங்களை இழந்ததுமான பூமியை எப்பொழுதும் சிந்தித்தும் ஆறுதலை அடையவில்லை. புத்திரர்களை இழந்தவளான திரௌபதியும் கோபமுள்ளவளான ஸுபத்திரையுமாகிய இரண்டுதேவிகளும் அப்பொழுது பிரீதியும் ஸந்தோஷமும் அற்றவர்களாயிருந்தார்கள். உமது முந்திய பிதாமஹர்களான அவர்கள் உத்தரையின் புத்திரனும் உன்னுடையதந்தையுமான பரிக்ஷித்தைக் கண்டு உயிரைத் தரித்துக்கொண்டிருந்தார்கள்.

## இருபத்துநான்காவது அத்யாயம்.

### ஆ்ஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(யுதிஷ்டிரர் திரௌபதிமுதலியவருடனும் தம்பிமாருடனும் நகரஜனங்களுடனும் குந்திமுதலியவர்களைக் காணக் காட்டுக்கு வந்தது.)

இவ்விதம், புருஷஶ்ரேஷ்டர்களும் தாயாரை ஸந்தோஷிக்கச் செய்கின்றவர்களும் வீரர்களுமான அந்தப் பாண்டவர்கள் தாயாரை நினைத்து மிக்க துக்கமுள்ளவர்களானார்கள். எந்தப் பாண்டவர்கள் முன்பு எப்பொழுதும் ராஜகாரியங்களில் மனத்தைச் செலுத்தினவர்களாக இருந்தார்களோ அவர்கள் அப்பொழுது பட்டணத்திலுள்ள ராஜகாரியங்களையெல்லாம் செய்யவில்லை. சோகாவேசம் கொண்டவர்கள்போல ஒன்றிலும் ஸந்தோஷமடையவில்லை. அவர்கள் ஸம்பாஷணை செய்யப்பட்டாலும் சிறிதும் மறுமொழி கூறவில்லை. வீரர்களும் (பிறரால்) அவமதிக்க முடியாதவர்களும் காம்பீர்யத்தில் கடலுக்கொப்பானவர்களுமான அவர்கள் சோகத்தால் கெடுக்கப்பட்ட அறிவுள்ளவர்களாகிப் பிரஜ்ஞையற்றவர்கள்போலிருந்தார்கள். பிறகு, அந்தப் பாண்டுபுத்திரர்கள், 'மிக இளைத்தவளான குந்தியானவள் வயதுமுதிர்ந்தவர்களான திருதராஷ்டிரரையும் காந்தாரியையும் எவ்விதம் போஷிப்பாள்?'

என்று தாயாரைப்பற்றிச் சிந்தித்தார்கள். புத்திரர்களை இழந்தவரும் ஆதரவற்றவருமான அந்த அரசரும் ஒருவராக மனைவியுடன் துஷ்ட மிருகங்கள் வஸிக்கப்பெற்ற வனத்தில் எவ்விதம் வஸிப்பார்? தேவியும் பெரிய பாக்கியமுள்ளவளும் பந்துக்களை இழந்தவளுமான அந்தக் காந்தாரியும் நிர்ஜனமான வனத்தில் குருடரும் பிராயம் முதிர்ந்தவருமான பர்த்தாவை எவ்விதம் பின்தொடர்ந்து செல்வாள்?' (என்றும் சொன்னார்கள்.) இவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கும் அவர்களுக்கு அப்பொழுது திருதராஷ்டிரனைப் பார்க்க வேண்டுமென்கிற விருப்பத்தால் ஆவலும் (வனம்) செல்லப் புத்தியும் உண்டாயின. ஸஹதேவனோ, யுதிஷ்டிரராஜரை நமஸ்கரித்துப் பின்வரும் வசனத்தைச் சொல்லலானான். 'ஓ! ராஜேந்திரரே! (வனம்) செல்லும் விஷயத்தைப்பற்றி உம்முடைய எண்ணத்தை நான் கண்டுகொண்டேன். உம்மிடம் கௌரவத்தால் சீக்கிரமாகப் பேசுவதற்கு என்னால் முடியவில்லை. (வனம்) செல்ல வேண்டியதற்காக இதோ நான் ஆயத்தமாக இருக்கிறேன். வயது முதிர்ந்தவளும் ஜடை தரித்தவளும் தவம் செய்பவளும் தர்ப்பங்களாலும் நாணல்களாலும் காயப்படுத்தப் பட்டவளும் (பிறரால்) துக்கப்படத்தகுந்த நிலைமையிலிருப்பவளுமான அந்தக் குந்தியைப் பாக்கியத்தினால் பார்க்கப்போகிறேன். அரண்மனைகளிலும் உப்பரிகைகளிலும் வளர்ந்தவளும் மிக்க ஸுகத்தை அடைந்தவளும் (இப்பொழுது) மிகவும் துக்கத்தை அடைந்தவளும் களைத்தவளுமான தாயாரை நான் எப்பொழுது பார்ப்பேன்? பரதஸ்ரேஷ்டரே! மனிதர்களுடைய நிலைமைகள் நிலையற்றவை. (ஆகையினால்தான்,) ராஜபுத்திரியான குந்தியானவள் வனத்தில் கஷ்டப்பட்டு வஸிக்கிறாள்' என்று சொன்னான். ஸஹதேவனுடைய வார்த்தையைக் கேட்டு ஸ்திரீகளுள் சிறந்தவளான திரௌபதீ தேவியானவள் யுதிஷ்டிரராஜரைப் பூஜித்துப் புகழ்ந்து சொல்லலானாள். ராஜரே! அந்தக் குந்திதேவியை நான் எப்பொழுது பார்ப்பேன்? அந்தக் குந்தியானவள் ஜீவித்திருப்பாளா? இப்பொழுது அவள் ஜீவித்திருந்தால்தான் எனக்கு ஸந்தோஷமுண்டாகும். உமக்கு எப்பொழுதும் இந்தப் புத்தியானது இருக்க வேண்டும். உம்முடைய சித்தமானது தர்மத்தில் மகிழட்டும். ராஜேந்திரரே! நீர் இப்பொழுது எங்களுக்கு மேன்மையைச் செய்யப்போகிறீரே. ராஜரே! இந்தஸ்திரீகளை, குந்தியையும் காந்தாரியையும் மாமனாரையும் பார்க்க விருப்பம் கொண்டு (வனம் போகக்) காலை முன்வைத்திருப்பவர்களாகத் தெரிந்து

கொள்ளும்' என்று சொன்னாள். பரதர்களில் சிறந்தவரே! திரௌபதிதேவியினால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த அரசர், ஸேனாதிபதிகளை வரவழைத்து எல்லாரையும் நோக்கி, 'மிகுதியான தேர்களும் யானைகளுமுள்ள என்னுடைய சேனையை வெளிப்படுத்துங்கள். வனத்திலிருக்கும் திருதராஷ்டிரராஜரைப் பார்க்கப் போகிறேன்' என்று இந்த வசனத்தைச் சொல்லினர். யுதிஷ்டிரராஜர் அந்தப்புரக்காவலாளர்களை நோக்கி, 'பலவிதமான என்னுடைய எல்லாவாகனங்களும் ஆயிரக்கணக்கான பல்லக்குக்களும் ஆயத்தம் செய்யப்பட வேண்டும். வண்டிகளும் கடைகளும் தாவளிவீதிகளும் பொக்கசமும் சிற்பிகளும் பொக்கசாதிகாரிகளும் குருக்ஷேத்திரத்திலுள்ள ஆஶ்ரமத்தைக்குறித்துச் செல்லவேண்டும். பட்டணத்திலுள்ள எந்த மனிதன் அரசரைப் பார்க்க விரும்புகிறானோ அவனும் தடுக்கப்படாமல் அநுமதி கொடுக்கப்பட்டும்; நன்கு ரக்ஷிக்கப்பட்டும் செல்லட்டும். என்னுடைய [1]ஸூதர்களும் [2]பௌரோகவர்களும் எல்லாச் சமையல் செய்யும் உபகரணத்தையும் பலவிதமான பக்ஷியங்களையும் போஜ்யங்களையும் வண்டிகளில் கொண்டு போகட்டும். நாளைக்கே பிரயாணமென்று பறையறையச் செய்யவேண்டும். தாமதம் வேண்டாம். இப்பொழுதே மார்க்கத்திலும் பலவிதமான வீடுகள் அமைக்கப்படட்டும்' என்று சொன்னார். அரசரே! பாண்டவரான அந்த அரசர் இவ்விதம் உத்தரவு செய்துவிட்டு மறுநாள் பிராதாக்களுடன் ஸ்திரீகளையும் வ்ருத்தர்களையும் முன்னிட்டுக்கொண்டு புறப்பட்டார். அந்த அரசர் ஜனஸமூகத்தைப் பரிபாலித்துக்கொண்டு ஐந்து தினங்கள் வெளியில் வஸித்தார். பிறகு, வனத்தைக் குறித்துச் சென்றார்.

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

———:O:———

(யுதிஷ்டிரர் வாகனங்களிலேறிய ஸஹோதரர் முதலியவருடன் சதயூபாஶ்ரமவனம் சென்றது.)

பிறகு, பரதஶ்ரேஷ்டரான யுதிஷ்டிரர் லோகபாலர்களுக்கு ஒப்பானவர்களும் அர்ஜுனனை முதன்மையாகக் கொண்டவர்களுமான மனிதர்களால் ரக்ஷிக்கப்படுகின்ற சேனைக்குக் கட்டளையிட்டார். பிறகு,

1. சமையற்காரர்கள். 2. சமையலதிகாரிகள்.

அந்தச் சேனையில் 'பூட்டப்படட்டும்; பூட்டப்படட்டும்' என்றும் 'பூட்டியாயிற்று; பூட்டியாயிற்று' என்றும் பிரியத்துடன் உரக்கச்சொல்லுகின்ற குதிரைக்காரர்களுடைய சப்தமானது பெரிதாகத் தோன்றிற்று. ராஜரே! சில மனிதர்கள் [1]யானங்களோடும் சிலர் மிக்க வேகமுள்ள குதிரைகளோடும் சிலர் ஜ்வலிக்கின்ற அக்னிக்கொப்பான பொற்றேர்களோடும் மற்றும் சிலர் சிறந்த யானைகளோடும் சிலர் ஒட்டகங்களோடும் சென்றார்கள். [2]நகரங்களாலும் பிராஸங்களாலும் போர் புரிகின்றவர்களான மற்றவர்கள் காலாட்களாகச் சென்றார்கள். திருதராஷ்டிரனைப் பார்க்க விருப்பமுள்ளவர்களான பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ள ஜனங்களும் பலவித வாகனங்களோடு கௌரவராஜரான யுதிஷ்டிரரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். படைத்தலைவரும் கௌதமருமான அந்தக் கிருபாசாரியரும் அரசருடைய வசனத்தால் சேனையை நடத்திக்கொண்டு ஆஸ்ரமத்தைக் குறித்துச் சென்றார். பிறகு, கௌரவராஜரும் கௌரவஸ்ரேஷ்டருமான யுதிஷ்டிரர் பிராம்மணர்களால் சூழப்பட்டவரும் அநேகர்களான ஸூதர்களாலும் மாகதர்களாலும் வந்திகளாலும் ஸ்தோத்திரம் செய்யப்படுகின்றவரும் தலையில் பிடிக்கப்படுகின்ற வெண்குடையுடன் கூடினவருமாகப் பெரிய தேர்ப்படையுடன் சென்றார். பயங்கரமான செய்கையுள்ளவனும் வாயுகுமாரனுமான பீமஸேனன் மலைக்கொப்பானவைகளும் ஆயத்தமாயிருக்கும் யந்திரங்களுடனும் ஆயுதங்களுடனும் கூடினவைகளுமான யானைகளோடு சென்றான். அவ்வாறே, மாத்ரீபுத்திரர்களான நகுலஸஹதேவர்களும் குதிரைகளின்மீது ஏறிக்கொண்டு (வீரர்களால்) நன்கு சூழப்பட்டவர்களும் வேகமாகச் செல்லுகின்றவர்களும் கவசமணிந்தவர்களும் த்வஜமுள்ளவர்களுமாகச் சென்றார்கள். இந்திரியங்களை ஜயித்தவனும் சிறந்த தேஜஸுள்ளவனுமான அர்ஜுனனும், ஸூர்யனுடைய காந்திபோன்ற காந்தியுள்ளதும் வெண்குதிரைகள் பூட்டப்பட்டதும் திவ்யமுமான ரதத்துடன் அரசனைப் பின்தொடர்ந்து சென்றான். திரௌபதி முதலான ஸ்திரீகளின்கூட்டங்களும் பல்லக்குக்களில் ஏறிக்கொண்டு ஸ்திரீபாலகர்களால் ரக்ஷிக்கப்பட்டு மிகுதியான தனத்தைத் தானஞ்செய்துகொண்டு சென்றார்கள். பரதஸ்ரேஷ்டரே! தேர்களும் யானைகளும் குதிரைகளும் நிறைந்ததும் புல்லாங்குழல் வீணை இவைகளின் ஒலியுள்ளதுமான அந்தப்பாண்டவருடைய சேனையானது

1. 'மனிதர்களால் சுமக்கத்தக்கவை' என்பது பழைய உரை.
2. புலிநகம்

அப்பொழுது பிரகாசித்தது. ராஜரே! அந்தக் கௌரவஸ்ரேஷ்டர்கள் அழகான நதிகளின் தீரங்களிலும் தடாகங்களிலும் வஸித்துக்கொண்டு நாளடைவில் சென்றார்கள். சிறந்த தேஜஸுள்ள யுயுத்ஸுவும் புரோஹிதரான தௌம்யரும் யுதிஷ்டிரருடைய வசனத்தால் பட்டணத்தை ரக்ஷித்துக்கொண்டிருந்தார்கள். பிறகு, யுதிஷ்டிரராஜர் கிரமமாக மிக்க பரிசுத்திகரமான யமுனாநதியைக் கடந்து குருக்ஷேத்திரம் சென்றார். குருகுலத்தில் பிறந்தவரே! அந்த யுதிஷ்டிரர் புத்திசாலியான சதயூபனென்னும் அந்த ராஜரிஷியினுடைய ஆஸ்ரமத்தையும் திருதராஷ்டிரனுடைய ஆஸ்ரமத்தையும், தூரத்தில் கண்டார். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, எல்லா ஜனங்களும் மிக்க ஸந்தோஷமடைந்து சீக்கிரமாக அந்த வனத்தை மிகப்பெரிய சப்தங்களால் நிரப்பிக்கொண்டு பிரவேசித்தார்கள்.

## இருபத்தாறுவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

———:o:———

(யுதிஷ்டிரர்முதலியோர் திருதராஷ்டிரன்முதலியவர்களைக் கண்டு தம்தம் பெயரைச்சொல்லி வணங்கியதும், திருதராஷ்டிரன்நிலைமையைக் கண்டு வருந்திய அவர்களை அவன் தேற்றியதும்.)

பிறகு, அந்தப் பாண்டவர்கள் தூரத்திலேயே (வாகனங்களிலிருந்து) இறங்கிக் காலால் நடந்து மிக்க வணக்கத்துடன் திருதராஷ்டிரராஜனுடைய ஆஸ்ரமத்தைக்குறித்துச் சென்றார்கள். அந்த எல்லா யுத்தவீரர்களும் பட்டணத்திலிருந்து வந்த ஜனங்களும் கௌரவஸ்ரேஷ்டர்களுடைய மனைவிகளும் அப்பொழுது கால்களாலேயே நடந்து சென்றார்கள். பிறகு, அந்தப் பாண்டவர்கள் ஒருவருமில்லாததும் மான் கூட்டங்களால் வியாபிக்கப்பட்டதும் வாழைத் தோட்டங்களால் விளங்கும்படி செய்யப்பட்டதுமான திருதராஷ்டிரருடைய ஆஸ்ரமத்தை அடைந்தார்கள். பிறகு, விரதானுஷ்டானமுள்ளவர்களான தபஸ்விகள், வந்திருக்கும் பாண்டவர்களைப் பார்ப்பதற்காக மிக்க களிப்புடன் அவ்விடம் வந்தார்கள். பிறகு, யுதிஷ்டிரராஜர் கண்ணீரால் நனைக்கப்பட்டவராகி அவர்களை நோக்கி, 'கௌரவ வம்சத்தைப் போஷிப்பவரும் எங்களுடைய பெரிய தந்தையாருமான அவர் எங்கே சென்றார்?' என்று வினவினார். பிறகு, அவர்கள், அவரை நோக்கி,

'பிரபுவே! அவர் ஸ்நானம் செய்துவிட்டுப் புஷ்பங்களும் குடத்தில் தீர்த்தமும் கொண்டுவருவதற்காக யமுனைக்குப் போயிருக்கிறார்' என்ற வாக்யத்தைச் சொன்னார்கள். பிறகு, அந்தப் பாண்டவர் அவர்களால் சொல்லப்பட்ட மார்க்கத்தோடு கால்நடையாகச் சீக்கிரம் சென்று அருகில் அவர்களனைவரையும் கண்டார்கள். பிறகு, அவர்கள் பிதாவைப் பார்க்க விரும்பி வேகமாகச் சென்றார்கள். புத்திசாலியான ஸஹதேவனோ, வேகமாகக் குந்தியிருக்குமிடத்திற்கு ஓடித் தாயாருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு உரக்க அழுதான். அந்தக் குந்தியும், கண்ணீரால் கலக்கமுற்ற முகமுள்ளவளாகிப் பிரியனான புத்திரனைப் பார்த்து (அந்த)ச் சிறியகுமாரனை இருகைகளாலும் கட்டித் தூக்கிக் காந்தாரியினிடம் ஸஹதேவன் வந்திருப்பதாகச் சொன்னாள். குந்தியானவள், பிறகு, யுதிஷ்டிரராஜரையும் பீமஸேனனையும் அர்ஜுனனையும் நகுலனையும் கண்டு வேகமாக அருகில் வந்தாள். அந்தக் குந்தி, தம்பதிகளும் புத்திரர்களை இழந்தவர்களுமான அந்தக் காந்தாரிக்கும் திருதராஷ்டிரனுக்கும் முன்னால் (நின்று) அவர்களை இழுத்துக் கொண்டு வந்தாள். பிறகு, அந்தப் பாண்டவர்கள் அவளைக்கண்டு பூமியில் விழுந்தார்கள். ராஜரே! புத்திரர்களை இழந்தவர்களான அவ்விருவர்களின் பாதங்களிலும் விழுந்தார்கள். உறுதியான சித்தமுள்ளவனும் மேதாவியும் பிரபுவுமான திருதராஷ்டிரராஜன் அவர்களைக் குரலைக்கொண்டும் தொட்டும் தெரிந்துகொண்டு ஸமாதானப்படுத்தினான். பிறகு, மஹாத்மாக்களான அந்தப் பாண்டவர்கள் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு காந்தாரியையும் அரசனையும் தாயையும் விதிப்படி பூஜித்தார்கள். அப்பொழுது, அந்தப் பாண்டவர்கள் தாயாலும் மறுபடியும் தேறுதலடையும்படி செய்யப்பட்டுப் பிரஜ்ஞையை அடைந்து எல்லாருடைய தீர்த்தகலசங்களையும் தாம் வாங்கிக்கொண்டார்கள். அவ்வாறே, புருஷச்ரேஷ்டர்களுடைய மனைவிகளும் அந்த அந்தப்புரஜனங்களும் பட்டணத்து ஜனங்களும் கிராமத்துஜனங்களும் அப்பொழுது அந்தத் திருதராஷ்டிரராஜனைப் பார்த்தார்கள். அப்பொழுது, யுதிஷ்டிரராஜர் அந்த ஜனங்களைப் பெயருடனும் கோத்திரத்துடனும் (அரசனுக்குத்) தெரிவித்தார். அவனும் அவர்களை உபசரித்தான். அவர்களால் சூழப்பட்டவனும் ஆனந்த பாஷ்பத்தால் கலங்கின கண்களுள்ளவனுமான அந்தத் திருதராஷ்டிரராஜன் தன்னை முன்போல் ஹஸ்தினபுரத்தில் வீட்டில் இருப்பவனாக எண்ணினான். புத்திசாலியான அந்த அரசனும் காந்தாரியும் குந்தியும், திரௌபதி முதலான

மருமக்களால் நமஸ்கரிக்கப்பட்டு ஆசீர்வாதம் செய்தனர். பிறகு, திருத ராஷ்டிரன் [1]ஸித்தர்களாலும் சாரணர்களாலும் ஸேவிக்கப்பட்டதும் பார்க்க விருப்பமுள்ளவர்களால் நிறைந்ததும் நக்ஷத்திரக்கூட்டங்களால் வியாபிக்கப்பட்ட ஆகாயம் போன்றதுமான ஆஶ்ரமத்திற்கு வந்தான்.

---

## இருபத்தேழாவது அத்யாயம்.

## ஆ ஶ் ர ம வா ஸ ப ர் வ ம். (தொடர்ச்சி.)

—:o:—

(ஸஞ்சயன் தவசிகளுக்கு யுதிஷ்டிரர் முதலியோரைக் காட்டிப் பெயர் முதலியவற்றையும் கூறியது.)

பரதஶ்ரேஷ்டரே! அந்தத் திருதராஷ்டிரராஜன், புருஷஶ்ரேஷ்டர்களும் அழகிய தாமரைமலர்போன்ற கண்களுள்ளவர்களும் பிராதாக்களுமான அந்தப் பாண்டவர்களுடனும், விசாலமான மார்பையுடையவர்களும் கௌரவராஜருடைய புத்திரர்களுமான பாண்டவர்களைப் பார்ப்பதற்காகப் பலதேசங்களிலிருந்துவந்தவர்களும் பெரிய பாக்கியமுள்ளவர்களுமான தாபஸர்களுடனும், அந்த ஆஶ்ரமத்தில் உட்கார்ந்தான். அந்தத் தாபஸர்கள், 'இவர்களுள் யுதிஷ்டிரர் யார்? பீமன் யார்? அர்ஜுனன் யார்? நகுலன் யார்? ஸஹதேவன் யார்? புகழ்பெற்ற திரௌபதி யார்? அறிய விரும்புகிறோம்' என்று வினவ, அப்பொழுது ஸூதனை ஸஞ்சயன் அவர்களுக்கு அந்தப் பாண்டவர்களையும் திரௌபதியையும் மற்றுமுள்ள எல்லாக் கௌரவஸ்திரீகளையும் முக்கியமாகப் பெயருடன் சொல்லலானான். ஸஞ்சயன், 'ஸுவர்ணம்போலச் சுத்தமான மஞ்சள் நிறமுள்ளவரும் மெலிந்தவரும் பெரியஸிம்மம்போல மிக வளர்ந்திருப்பவரும் நீண்டுஉயர்ந்த மூக்குள்ளவரும் அகன்றும் நீண்டும் சிவந்துமிருக்கிற கண்களுள்ளவருமான இவர் கௌரவராஜரான யுதிஷ்டிரர். மதம்கொண்ட கஜராஜன்போலச் செல்பவனும் புடம்போட்ட ஸுவர்ணம்போலச் சுத்தமான மஞ்சள் நிறமுள்ளவனும் பருத்த விசாலமான தோள்களுள்ளவனும் பருத்தும் நீண்டுமிருக்கிற கைகளுள்ளவனுமான இவன் பீமஸேனன். இவனைப் பாருங்கள்; பாருங்கள். இவனுக்குப் பக்கத்திலிருப்பவனும் சிறந்த வில்லாளியும் கருமை நிறமுள்ளவனும் தருணனும் கஜயூதபதிபோலப் பிரகாசிப்பவனும் ஸிம்மம்போல் உயர்ந்த தோள்களுள்ளவனும் யானைபோல் உல்லாஸ

---

1. இதை ஆகாயத்திற்கு விசேஷணமாகவும் கொள்ளலாம்.

மாக நடப்பவனும் தாமரைமலர்போன்ற விசாலமான கண்களுள்ளவனு மான இந்தவீரன் அர்ஜுனன். குந்தியின் பக்கத்தில் இருப்பவர்களும் புருஷோத்தமர்களும் விஷ்ணுவுக்கும் மஹேந்திரனுக்கும் ஒப்பானவர்க ளும் அழகிலும் வன்மையிலும் சீலத்திலும். மானிடலோகத்தில் முழு தும் ஒப்பில்லாதவர்களுமான இவர்கள் இரட்டையர்கள். தாமரை இதழ் போல நீண்ட கண்களுள்ளவளும் சிறிது யௌவனப் பருவத்தை அடைந்தவள்போலிருப்பவளும் நீலோத்பலம் போன்ற காந்தியுள்ள வளும் நகரதேவதை போன்றவளும் வடிவமெடுத்துவந்த லக்ஷ்மிபோல நிற்பவளுமான இவள் திரௌபதி. பிராம்மணச்ரேஷ்டர்களே! இவளுக் குப் பக்கத்தில் நிற்பவளும் ஸுவர்ணத்திற்கொப்பான மேனியுள்ள வளும் வடிவத்துடன்கூடின பார்வதிபோன்றவளும் ஸத்யம் தவறாத வளுமான இவள், சக்கரத்தை ஆயுதமாகக்கொண்டவரும் ஒப்பற்றவரு மான அந்த வாஸுதேவருடைய ஸஹோதரி. ஸுவர்ணம்போலச் சுத்தமான மஞ்சள் நிறமுள்ளவளான இவள் நாகராஜனுடைய புத்திரி யும் அர்ஜுனனுடைய மனைவியுமான உலூபிகை. [1]புதிய இலுப்பைப் புஷ்பங்களுக்கொப்பான நிறமுள்ள இவள் ராஜகுமாரியான சித்ராங் கதை. செழுமையான நீலோத்பலமாலைக்கொப்பான நிறமுள்ள இவள் மன்னர்களுடைய படைகளுக்குத் தலைவனும் எப்பொழுதும் [2]அர்ஜுன னுக்கு மேற்போக முயல்பவனும் அரசனுமான திருஷ்டத்யும்னனுடைய தங்கை; பீமஸேனனுடைய முக்ய மனைவி. சம்பகமாலைபோல மஞ்சள் நிறமுள்ளவளான இவள் ஜராஸந்தனென்று பிரஸித்திபெற்றவனும் மகததேசாதிபதியுமான மன்னனுடைய புத்திரி; மாத்ரியின் இளைய குமாரனான ஸஹதேவனுடைய மனைவி. நீலோத்பலம்போலக் கருமை நிறமுள்ள சரீரமுள்ளவளும் தாமரைமலர்போல நீண்ட கண்களுள்ளவ ளும் மரத்திற்கருகிலுள்ள கொடிபோல நிற்பவளுமான மற்றும் இவள் மாத்ரியின் மூத்தகுமாரனான நகுலனுடைய மனைவி. புடம் போட்ட ஸுவர்ணம்போல மஞ்சள் நிறமுள்ளவளும் புத்திரனையுடையவளுமான

---

1. 'ஸமமான ஜாதியில் பிறந்தவளும் புதிய இலுப்பைப் புஷ்பங்களை அணிந்தவளும்' என்பது பழைய உரை.

2. 'பஸ்பர்த்த க்ருஷ்ணேந ஸதா ந்ருபோ யஃ' என்பது மூலம். 'கிருஷ் ணனோடு எப்போதும் ஸ்பர்த்தையுள்ள சல்யன்' என்று நீலகண்ட வ்யாக்யா னம் கூறுகிறது. 'க்ருஷ்ணேந' என்பதற்கு 'அர்ஜுனனோடு' என்று பொருள் கொண்டு 'அர்ஜுனனோடு எப்போதும் ஸ்பர்த்தையுள்ள திருஷ்டத்யும்னன்' என்று லக்ஷாபரண வ்யாக்யானம் கூறுகிறது. இங்கே லக்ஷாபரண வ்யாக்யா னத்தின் கருத்தே கொள்ளப்பட்டது.

இவள் விராடராஜனுடைய புத்திரியும் யுத்தத்தில் ரதத்தில் இருக்கும் துரோணர் முதலான அந்த வீரர்களால் ரதத்தை இழந்திருக்கும் ஸமயத்தில் கொல்லப்பட்டவனான அபிமன்யுவின் மனைவியுமான உத்தரை. (அலங்காரமின்றி) வகிர்ந்த கூந்தலுள்ளவர்களும் வெண்மையான உத்தரீயமுள்ளவர்களும் நூற்றுக்குமேலிருப்பவர்களுமான இவர்கள் மன்னர்களின் மனைவிகளும் மானிட வீரர்களால் புத்திரர்களும் பர்த்தாக்களும் கொல்லப்பட்டவர்களுமான முதியவரான இந்தத் திருதராஷ்டிரராஜருடைய மருகிமார்கள். [1]பிரம்மத்தைப்பற்றிய எண்ணமுள்ளவர்களே! கபடமற்ற புத்தியும் ஸ்வபாவமுமுள்ளவர்களே! உங்களால் வினவப்பட்டவர்களும் மிக்க பரிசுத்தமான ஸ்வபாவமுள்ளவர்களும் மன்னர்களுடைய மனைவிகளுமான இவர்களையெல்லாம் முக்கியமானவர்களாக உங்களுக்குச்சொன்னேன். நீங்களெல்லாரும் சிறந்த தபோபலமுள்ளவர்கள்; பொறுமையுள்ளவர்கள்; இந்திரியங்களை அடக்கினவர்கள்; நற்குலத்தில் பிறந்தவர்கள்' என்று சொன்னார். (அந்தத்) தவஞ்செய்வோர்களெல்லாரும் போனபின், கௌரவருள் வயதுமுதிர்ந்தவனும் சிறந்தவனுமான அந்தத் திருதராஷ்டிரராஜன் இவ்விதம் அந்த ராஜபுத்திரர்களுடன் சேர்ந்து அப்பொழுது க்ஷேமத்தையெல்லாம் விசாரித்தான். யுத்த வீரர்களும், அந்த ஆஸ்ரமமண்டலமென்றெண்ணி, வாகனத்தை விட்டுப் பிரவேசித்தும் ஸ்திரீகளும் முதியோர்களும் பாலர்களும் நன்கு பிரவேசித்துமிருக்கும்பொழுது, (அரசன்) அவர்களைத் தக்கபடி க்ஷேமங்களை விசாரித்தான்.

---

## இருபத்தேட்டாவது அத்யாயம்.

### ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(திருதராஷ்டிரனும் யுதிஷ்டிரனும் ஒருவரை ஒருவர் க்ஷேமம் விசாரித்ததும், விதுரரைப்பற்றி யுதிஷ்டிரர் கேட்டதும், விதுரர் கூட்டத்தைக் கண்டு விலகுவதை ஒருவன் காட்ட யுதிஷ்டிரர் விரைந்து விதுரரிடம் ஓடியதும், அவர் யுதிஷ்டிரரிடம் யோகத்தால் பிரவேசித்ததும், யுதிஷ்டிரர் அந்த அதிசயத்தைத் திருதராஷ்டிரன்முதலியோருக்குச் சொல்லியதும்.)

திருதராஷ்டிரன், 'யுதிஷ்டிர! சிறந்த கைகளுள்ளவனே! நீ எல்லாப் பிராதாக்களுடனும் பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ள ஜனங்களுட

1. 'பிரம்மண்ய பாவா ருஜுபுத்திஸத்வா:' என்று மாற்றப்பட்டது.

னும் க்ஷேமமாக இருக்கிறாயா? ராஜனே! உன்னை அடுத்துப் பிழைப்ப வர்களும் உன்னுடைய மந்திரிகளும் வேலைக்காரர்வகைகளும் ஆசாரியர் களும் க்ஷேமமாக இருக்கிறார்களா? அவர்கள் உன்னுடைய தேசத்தில் பயமின்றி வஸிக்கின்றனரா? புராதனமாகவுள்ளதும் ராஜரிஷிகளால் அநுஷ்டிக்கப்பட்டதுமான நடையை அனுஸரிக்கிறாயா? நீதிகளைக் கடவாமல் உன்னுடைய பொக்கசம் நிரப்பப்படுகிறதா? பகைவர்களி டத்திலும் மத்யஸ்தர்களிடத்திலும் மித்திரர்களிடத்திலும் (அவரவர் களுக்குத்) தக்கபடி நடந்துகொள்ளுகிறாயா? பிராம்மணர்களுக்கு அக் கிரஹாரங்களைக் கொடுத்து நன்கு பரிபாலிக்கிறாயா? பரதஸ்ரேஷ்டனே! உன்னுடைய நல்லொழுக்கத்தால் பகைவர்களும் ஸந்தோஷப்படுகின்ற னரா? (அப்படியிருந்தால்) பட்டணத்து ஜனங்களும் வேலைக்காரர்களும் பந்துவும் ஸந்தோஷிக்கிறார்களா என்று விசாரிக்கவும் வேண்டுமா? ராஜேந்திர! நீ ஶ்ரத்தையுடன் பித்ருக்களையும் தேவர்களையும் உத்தேசித் து யாகம் செய்கிறாயா? பாரத! அதிதிகளை அன்னபானங்களால் பூஜிக் கிறாயா? குடும்பிகளான பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைஶ்யர் களும் சூத்திரர்களும் தங்கள் கர்மங்களை அநுஷ்டித்துக்கொண்டு உன் னுடைய நீதிமார்க்கத்தில் இருக்கின்றனரா? ஸ்திரீகளும் பாலர்களும் விருத்தர்களும் துயரப்படாமலும் உன்னிடம் யாசியாமலும் இருக்கின்ற னரா? புருஷஶ்ரேஷ்டனே! உன்னுடைய வீட்டில் ஸுமங்கலிகள் பூஜிக்கப்படுகின்றனரா? மஹாராஜனே! இந்த ராஜரிஷிவம்சமானது உன்னை அரசனாக அடைந்து தக்க கீர்த்தி குன்றாமலிருக்கின்றதா?' என்று வினவினன். இவ்விதம் வினவுகின்ற அந்தத்திருதராஷ்டிரனை நோக்கி நியாயத்தை அறிந்தவரான அந்த யுதிஷ்டிரர், குசலப்பிரஶ் னத்துடன்கூடின வாக்கியத்தை மறுமொழியாகக் கூறலானார்.

யுதிஷ்டிரர், 'ராஜரே! உமக்குத் தவம் வ்ருத்தியடைகின்றதா? உமக்கு ஶ்ரமமும் சிறிதாக இருக்கிறதா? என்னுடைய தாயான இவளும் களைப்பின்றிப் பணிவிடை செய்கிறாளா? ராஜரே! இவளுடைய வனவாஸ மானது பயனுள்ளதாகுமா? என்னுடைய பெரிய தாயும் குளிர்ச்சியினு லும் காற்றினாலும் வழிநடப்பதாலும் மெலிந்தவளாகச் செய்யப்பட்ட வளும் கோரமான தவத்துடன்கூடினவளும் தேவியுமான இந்தக் காந் தாரியும் துயரப்படாமலிருக்கிறாளா? கொல்லப்பட்டவர்களும் சிறந்த வீரியமுள்ளவர்களும் க்ஷத்திரியதர்மத்தை முக்கிய கதியாகக்கொண்ட வர்களுமான புத்திரர்களையும் எப்பொழுதும் பாபத்தைச் செய்தவர் களான எங்களையும் நினையாமலிருக்கிறாளா? ராஜரே! இந்த விதுரர்

எங்கே? அவரை நாங்கள் காணவில்லையே? இந்த ஸஞ்சயரும் தவத்தில் உறுதிபெற்று க்ஷேமமாக இருக்கிறாரா?' என்று வினவினர். இவ்விதம் வினவப்பட்ட திருதராஷ்டிரன், அந்த மன்னரை நோக்கி, 'புத்திரனே! விதுரன் க்ஷேமமாக இருக்கிறான்; கோரமான தவத்தை அடுத்திருக்கிறான். வாயுவை ஆகாரமாகக் கொண்டவனும் (வேறு) ஆகாரமில்லாதவனும் இளைத்தவனும் நரம்புகள் நிறைந்தவனுமாயிருக்கிறான். அவன் ஒருஸமயம் பிராம்மணர்களால் இந்தச் சூன்யமான வனத்தில் ஓரிடத்தில் காணப்படுகிறான்' என்று சொன்னர். அவன் இவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, ஜடைதரித்தவரும் [1]வாயில் கல்லைக்கௌவிக்கொண்டிருப்பவரும் இளைத்தவரும் திகம்பரரும் அழுக்கினல் பூசப்பட்ட சரீரமுள்ளவரும் காட்டிலுள்ள புழுதிபடிந்தவரும் தூரத்தில் காணப்பட்டவருமான விதுரர், 'தர்மாத்மாவான விதுரர் ஜனத்தைக் கண்டு இதோ திரும்புகிறார்' என்று அப்பொழுது அரசனிடம் சொல்லப்பட்டார். ஆஶ்ரமத்திலுள்ள ஜனத்தைக்கண்டு சீக்கிரமாகத் திரும்பிக் கோரமான வனத்தில் பிரவேசிக்கின்றவரும் ஓரிடத்தில் காணப்பட்டும் ஓரிடத்தில் காணப்படாமலுமிருப்பவருமான அந்த விதுரரை யுதிஷ்டிரராஜர் ஒருவராகவே பின்தொடர்ந்து ஓடினர். அரசர், 'ஓ! ஓ! விதுரரே! நான் உமக்குப் பிரியனான யுதிஷ்டிரன்' என்று சொல்லிக்கொண்டு முயற்சியுடன் அவருக்கு எதிரில் வந்தார். பிறகு, அறிஞருள் சிறந்தவரான விதுரர் அந்த வனமத்தியில் பரிசுத்தமும் ஏகாந்தமுமான இடத்தில் ஓர்மரத்தில் சாய்ந்துகொண்டு நின்றார். சிறந்த புத்தியுள்ள யுதிஷ்டிரராஜர் மிக இளைத்தவரும் உருவத்தால் மட்டும் அறிவிக்கப்பட்டவரும் சிறந்த புத்தியுள்ளவருமான அவரைத் தெரிந்துகொண்டார். ராஜாவானவர், 'நான் யுதிஷ்டிரன்' என்ற வாக்கியத்தைச் சொல்லி விதுரருடைய [2]ஆஶ்ரமத்தில் எதிரில் நின்றார். அவரும் குறிப்பால் மறுமொழி கூறினர். பிறகு, அந்த விதுரர் மனத்தை ஒருவழிப்படுத்தி இமைகொட்டாமலிருந்துகொண்டு தம்முடைய நேத்திரத்தை அவருடைய நேத்திரத்தோடுசேரும்படி செய்து, அந்த அரசரை உற்றுப்பார்த்தார். புத்திசாலியான விதுரர் (தம்முடைய) அவயவங்களை (அவருடைய) அவயவங்களுடனும் பிராணன்களைப் பிராணன்களுடனும் இந்திரியங்களை இந்திரியங்களுடனும் பிரவேசிக்கும்படி செய்தார். தேஜஸினல் ஜ்வலிப்ப

1. இப்படி செய்வது மௌனம் கருதிப் போலும்.

2. 'விதுரர் கேட்கும்படி எதிரில் நின்று அவரைத் துதித்தார்' என்பது வேறுபாடத்தின் பொருள்.

வர் போலிருக்கும் அந்த விதுரர், யோகபலத்தை அவலம்பித்து, அரச ரான தர்மராஜருடைய சரீரத்தில் பிரவேசித்தார். அப்பொழுது, யுதிஷ்டிரராஜர், விதுரருடைய சரீரத்தை அவ்வாறே நிச்சலமான கண்களுள்ளதும் விருக்ஷத்தை ஆச்ரயித்ததும் ஜீவனை இழந்ததுமாகக் கண்டார். மிக்கதேஜஸுள்ளவரும் பாண்டவருமான தர்மராஜர் அப்பொழுது தம்மைப் பலமடங்கு பலமுள்ளவராக எண்ணினார்; தாமும் விதுரரும் ஒரே தர்மத்தின் அம்சத்திலிருந்து பிறந்தவர்களென்பதையும் நினைத்துக்கொண்டார். ராஜரே! மிக்க தேஜஸுள்ள யுதிஷ்டிரர், வியாஸர் சொல்லியபடி தமக்குப் புராதனமாகவுள்ளதும் வரப்போகின்றதுமான யோகதர்மத்தை முழுதும் நினைத்துக்கொண்டார். வித்வானான தர்மராஜரும் அப்பொழுது அவருக்கு அவ்விடத்தில் ஸம்ஸ்காரம் செய்ய விரும்பித் தகனம் செய்ய விருப்பமுள்ளவரானார். பிறகு, (அசரீரியான) வாக்கானது, 'ஓ! ஓ! ராஜரே! விதுரரென்று பெயருள்ள இந்தச் சரீரத்தை நீர் இங்கு இவ்விதம் தகனம் செய்யவேண்டாம். இவர் ஸநாதனமான தர்மம். பாரதரே! இவருக்கு [1]வைகர்த்தன மென்னும் உலகம் கிடைக்கப்போகிறது. பகைவரை வாட்டுபவரே! இவர் யதிதர்மத்தை அடைந்தவர். இவர் துக்கிக்கப்படத்தக்கவரல்லர்' என்று சொல்லிற்று. இவ்விதம் சொல்லப்பட்ட அந்தத்தர்மராஜர், மறுபடியும், அவ்விடமிருந்து திரும்பி விசித்திரவீர்யனுடைய குமாரனை திருதராஷ்டிரராஜனுக்கு அதை முழுதும் அறிவித்தார். பிறகு, தைரியமுள்ள அந்தத் திருதராஷ்டிரராஜனும் அந்த எல்லா ஜனங்களும் பீமஸேனன்முதலானவர்களும் மிக்க ஆச்சரியமடைந்தார்கள். திருதராஷ்டிர ராஜன், அதைக் கேட்டுப் பிரீதியுள்ளவனாகித் தர்மராஜரை நோக்கி, 'ராஜனே! என்னுடையனவான இந்தத் தீர்த்தத்தையும் கிழங்கையும் கனியையும் பெற்றுக்கொள். மனிதன் எதைப் புஜிக்கிறானோ அதையே அவன் அதிதிக்குக் கொடுக்கவேண்டுமென்று கருதப்பட்டிருக்கிறது' என்று சொன்னான். இவ்விதம் சொல்லைக்கேட்ட அந்தத் தர்மபுத்திரர் அரசனை நோக்கி, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி, அரசன் கொடுத்த கனியையும் கிழங்கையும் தம்பிகளுடன் புஜித்தார். அவர்கள் எல்லாரும் கனியையும் கிழங்கையும் ஜலத்தையும் புஜித்துவிட்டு, பிறகு, மரங்களின் அடிகளில் இடத்தை ஏற்படுத்திக்கொண்டு அன்றிரவு வாஸம் செய்தார்கள்.

1. 'ஸாந்தானிகமென்னும் உலகங்கள்' என்பது வேறுபாடம்.

## இருபத்தோன்பதாவது அத்யாயம்.

## ஆஶ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:O:——

(யுதிஷ்டிரர் திருதராஷ்டிரனிடம் அநுமதிபெற்றுத் தம்பிமாருடன் மஹரிஷிகளின் ஆஶ்ரமங்களைப் பார்த்ததும், சதயூபர் முதலியவர்களும் சிஷ்யருடன்கூடிய வியாஸரும் திருதராஷ்டிரனுடைய ஆஶ்ரமத்துக்கு வந்ததும்.)

அரசரே! பிறகு, புண்ணியமான கர்மமுள்ள இவர்களுக்கு ஆஶ்ரமத்தில் சுபமானதும் நக்ஷத்திரங்கள் நிறைந்ததுமான அந்த இரவு சென்றுகொண்டிருந்தது. பிறகு, அவர்களுக்கு அவ்விடத்தில் தர்மத்தையும் அர்த்தத்தையும் நிமித்தமாகக்கொண்டனவும் விசித்ரமான பதங்களின் பிரயோகமுள்ளனவும் பலவித ஶ்ருதிகளுடன்கூடினவைகளுமான கதைகள் நடந்தன. ராஜரே! அப்பொழுது, பாண்டவர்கள் மிகச் சிறந்த சயனங்களை விட்டுவிட்டுத் தாயைச்சூழ்ந்து நாற்புறங்களிலும் பூமியில் சயனம் செய்தனர். அப்பொழுது, அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் சிறந்த மனமுள்ள திருதராஷ்டிரராஜன் எதை ஆகாரம் செய்தானோ அதையே புஜித்து அன்றிரவு வஸித்தார்கள். இரவு சென்றவுடன், யுதிஷ்டிரராஜர் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு பிராதாக்களுடனும் அந்தப்புரங்களுடனும் பரிவாரங்களுடனும் வேலைக்காரர்களுடனும் புரோஹிதருடனும் திருதராஷ்டிரனுடைய அநுமதியின்மேல் ஆஶ்ரம மண்டலத்தை ஸுகமாக ஒவ்வோர் இடத்தையும் பார்த்தார். அந்த ஆஶ்ரமங்களில் நன்கு ஜ்வலிக்கின்ற அக்னியுள்ளவைகளும் ஸ்நானம் செய்தவர்களும் அக்னியில் ஹோமம் செய்தவர்களுமான முனிவர்களால் அருகிலிருக்கப் பெற்றவைகளும் வனத்திலுள்ள புஷ்பஸமூஹங்களோடும் நெய்யை ஹோமம் செய்வதால் கிளம்பின புகைகளோடும் வேதமே வடிவெடுத்தாற்போன்ற சரீரங்களையுடைய முனிவர்களின் கூட்டத்தோடும் கூடினவைகளுமான அந்த வேதிகளையும் பார்த்தார். பிரபுவே! அந்த ஆஶ்ரம மண்டலமானது ஆங்காங்கு பயமின்றித் தங்கியிருக்கும் மான்களின் கூட்டங்களாலும் பயமின்றிக் கானம்செய்வது போலக் (கத்துகின்ற) பறவைக் கூட்டங்களாலும் மயில்களுடைய கேகாசப்தங்களாலும் [1]தாத்யூஹங்களுடைய ஒலிகளாலும் ஸுகரமாகவும் காதுக்கு இனிமையாகவுமிருக்கின்ற குயில்களுடைய கூவொலிகளாலும்

1. ஒருவகைக் குருவி.

பிராம்மணர்களுடைய வேதாத்தியயன கோஷங்களாலும் ஒவ்வோரிடத்திலும் அலங்கரிக்கப்பட்டதும் கனி கிழங்குகளினுடைய பெரிய குவியல்களால் விளங்கும்படி செய்யப்பட்டதுமாயிருந்தது. அரசரே! பாரதரே! மனிதர்களை ரக்ஷிப்பவரே! பிறகு, பூபதியான அந்த யுதிஷ்டிர ராஜர் தபஸ்விகளுக்காகக் கொண்டுவரப்பட்ட பொற்கலசங்களையும் அத்திக்கட்டையால் செய்த கலசங்களையும் கிருஷ்ணாஜினங்களையும் கம்பளங்களையும் ஸ்ருக்கையும் ஸ்ருவத்தையும் கமண்டலுக்களையும் ஸ்தாலிகளையும் குடங்களையும் இருப்புப்பாத்திரங்களையும் (மற்றும்) பலவிதப் பாத்திரங்களையும் மற்றும் விரும்பப்பட்டதையும் (எவரெவர்) எது எதை எவ்வளவு எவ்வளவு விரும்பினரோ (அவரவருக்கு) அதை அதை அவ்வளவு அவ்வளவாகக் கொடுத்தார். தர்மாத்மாவும் பூபதியுமான அந்த அரசர் இவ்விதம் ஆச்ரம மண்டலத்தைச் சுற்றிவந்து (தபஸ்விகளுக்கு) அந்தத்தனத்தையெல்லாம் கொடுத்துவிட்டு மறுபடியும் திரும்பிவந்து ஆன்னிகத்தைச் செய்துவிட்டுக் காந்தாரியுடன் கவலையின்றி வீற்றிருப்பவனும் பூபதியுமான திருதராஷ்டிரராஜனை அப்பொழுது பார்த்தார். தர்மாத்மாவான அவர், சிஷ்யைபோல் வணக்கத்துடன் அருகிலிருப்பவளும் சிஷ்டாசாரமுள்ளவளும் தாயுமான குந்தியையும் பார்த்தார். அந்த யுதிஷ்டிரர் அந்த அரசனைப் பூஜித்துத் தம்முடைய பெயரையும் சொல்லி (அவனால்) 'உட்காரு' என்று அநுமதி கொடுக்கப்பட்டு முனிவர்களுக்குரிய ப்ருஸி என்னும் குசாஸனத்தில் உட்கார்ந்தார். பரதச்ரேஷ்டரே! பீமஸேனன் முதலான பாண்டவர்களும் (திருதராஷ்டிரனை) நமஸ்கரித்து அபிவாதனம் செய்து அவனுடைய அநுமதியின்மேல் உட்கார்ந்தார்கள். அவர்களால் சூழப்பட்ட அந்தக் கௌரவராஜன் பிரம்மதேஜஸைத் தரிப்பவரும் தேவர்களால் சூழப்பட்டவருமான பிருஹஸ்பதிபோல மிகவும் விளங்கினான். அவர்கள் அவ்வாறு உட்கார்ந்திருக்கும்போது குருக்ஷேத்திரத்தில் வாஸம் செய்பவர்களும் சதயூபர் முதலானவர்களுமான மஹரிஷிகள் வந்தார்கள். பகவானும் பிராம்மணரும் தேவகணங்களாலும் ரிஷிகணங்களாலும் பணிவிடை செய்யப்பெற்றவரும் சிஷ்யர்களால் சூழப்பட்டவரும் மிக்க தேஜஸுள்ளவருமான வியாஸரும் (வந்து) அரசனுக்குக் காட்சி கொடுத்தார். பிறகு, குருகுலத்தில் தோன்றியவனான அந்தத் திருதராஷ்டிரராஜனும் குந்தீபுத்திரரான யுதிஷ்டிரரும் பீமஸேனன் முதலானவர்களும் எதிர்சென்று அபிவாதனம் செய்தார்கள். பிறகு, வியாஸர் சதயூபர் முதலானவர்களால் சூழப்பட்டவராகவந்து திருதராஷ்டிரராஜனை, 'உட்காரு' என்று சொன்

ஞர். அப்பொழுது வியாஸரானவர் சிறந்ததும் பட்டினால் செய்யப் பட்டதும் கிருஷ்ணாஜினமும் தர்ப்பமும் மேலே போடப்பட்டதும் தமக்காக அமைக்கப்பட்டதுமான ஆஸனத்தில் உட்கார்ந்தார். விஸ் தாரமான தேஜஸுள்ளவர்களான அந்த அந்தணஸ்ரேஷ்டர்களெல்லா ரும் வியாஸரால் அனுமதிகொடுக்கப்பட்டு நாற்புறங்களிலும் ஆஸனங் களில் உட்கார்ந்தார்கள்.

## முப்பதாவது அத்யாயம்.

## ஆஸ்ரமவாஸபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

(வியாஸர் திருதராஷ்டிரனை க்ஷேமம் விசாரித்து விதுரநுடைய உண்மை வடிவ முதலியவற்றைக் கூறி மற்றமுனிவரால் செய்யமுடியாத திருதராஷ்டிரனுடைய விருப்பத்தைச் செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்தது.)

பிறகு, மஹாத்மாக்களான பாண்டவர்கள் உட்கார்ந்தவுடன், ஸத்தியவதியின் புத்திரரான வியாஸர், (திருதராஷ்டிர) ராஜனை அழைத் துச் சொல்லலானார். 'திருதராஷ்டிர! சிறந்தகைகளுள்ளவனே! ராஜனே! உனக்குத் தவம் நடந்துகொண்டிருக்கிறதா? உன்னுடைய மனமானது வனவாஸத்தில் பிரியமுள்ளதாயிருக்கிறதா? ராஜனே! உன்னுடைய உள்ளத்தில் புத்திரர்களுடைய விநாசத்தினாலுண்டான சோகமானது இல்லாமலிருக்கிறதா? குற்றமற்றவனே! உனக்கு எல்லா ஞானங்களும் நன்கு தெளிந்திருக்கின்றனவா? புத்தியை உறுதியாகச் செய்துகொண்டு வனவாஸத்திற்குரிய விதியைச் செய்கிறாயா? (என்னுடைய) மருமக ளான காந்தாரியானவள் சோகத்தால் கவரப்படாமல் இருக்கிறாளா? அவள் சிறந்த [1]பிரஜ்ஞையுள்ளவள்; [2]புத்தியுள்ளவள். தேவியும் தர் மார்த்தங்களை அறிந்தவளும் ஜனன மரணங்களின் தத்வத்தை அறிந்த வளுமான அவள் துக்கப்படாமலிருக்கிறாளா? ராஜனே! தன்புத் திரனை விட்டுவிட்டுக் குருவான உனக்குப் பணிவிடைசெய்ய ஆசை கொண்டவளான குந்தியானவள் அகங்காரமில்லாமல் உனக்குப் பணி விடைசெய்கிறாளா? தர்மபுத்திரனான அரசன் உன்னால் (ஆசீர்வாதம் செய்து) ஸந்தோஷிக்கும்படி செய்யப்பட்டானா? இந்தப்பீமனும் அர்

1. மூன்றுகாலங்களிலுமுள்ளவற்றின் அறிவு. 2 நிகழ்காலத்திலுள்ள தின் அறிவு.

ஜுனனும் நகுலனும் ஸஹதேவனும் தேறுதலடையும்படி செய்யப் பட்டார்களா? இவர்களைப்பார்த்து நீ ஸந்தோஷப்படுகிருயா? உன் னுடையமனம் நிர்மலமாக இருக்கிறதா? அரசனே! நீ ஞானமுண்டாகி நல்ல எண்ணமுள்ளவனுக இருக்கிருயா? பாரத! மஹாராஜனே! பகையின்மை உண்மை கோபமின்மை இம்மூன்றும் எல்லாப் பிராணி களுக்கும் சிறந்தனவல்லவா? பாரத! உனக்கு வனவாஸத்தால் மோஹமானது இல்லாமலிருக்கிறதா? வனத்திலுள்ள ஆகாரமும் உபவாஸமும் உனக்குப் பிரியமாக இருக்கின்றனவா? ராஜேந்திர! மஹாத்மாவும் தர்ம ஸ்வரூபியும் மிகச்சிறந்த புத்தியுள்ளவனுமான விதுரன் இந்தவிதியால் சென்றதும் அறியப்பட்டது. அந்தத் தர்ம ராஜன் மாண்டவ்யருடைய சாபத்தால் விதுரனுகப் பிறந்தான். அவன் சிறந்த புத்தியுள்ளவன்; மஹாயோகி; மஹாத்மா; மிகச் சிறந்தமனமுள் ளவன். தேவர்களுள் பிருஹஸ்பதியும் அஸுரர்களுள் சுக்கிரரும் புருஷஶ்ரேஷ்டனை விதுரனைப்போலப் புத்திசாலிகளல்லர். அக் காலத்தில் மாண்டவ்யரென்னும் ரிஷியானவர் நெடுங்காலமாக ஸம்பாதிக் கப்பட்ட தபோபலத்தை அழித்து ஸநாதனமான தர்மத்தைச் சபித்தார். மஹாராஜனே! தேவர்களுக்குத் தெய்வமும் ஸநாதனமுமான அந்தத் தர்மமானது முந்தி பிராம்மணருடைய உத்தரவினுலும் என்னுலும் தன்னுடைய சக்தியினுலும் விசித்திரவீர்யனுடைய க்ஷேத்திரத்தில் உனக்கு மிகச்சிறந்த புத்தியுள்ள பிரர்தாவாகப் பிறந்தது. மனத்தால் தரிப்பதினுலும் தியானஞ்செய்வதாலும் அதனைத் தர்மமென்று கவிகள் சொல்லுகின்றனர். ஸனுதனமான அந்தத் தர்மமானது ஸத்தியத்தினு லும் இந்திரியங்களின் அடக்கத்தினுலும் மனத்தின் அடக்கத்தினுலும் அஹிம்ஸையினுலும் தானத்தினுலும் தவத்தினுலும் வ்ருத்தியடை கிறது. அரசனே! பேரறிவாளனும் அளவற்றபுத்தியுள்ளவனுமான அந் தத்தர்மராஜனுல் கௌரவராஜனுன தர்மனென்னும் இந்தயுதிஷ்டிரன் யோகபலத்தால் பிறந்தான். அக்னிபோலவும் வாயுபோலவும் ஜலம் போலவும் பூமிபோலவும் ஆகாசம்போலவும் தர்மமானது இவ்வுலகத்தி லும் மேலுலகத்திலும் இருக்கிறது. ராஜேந்திர! சராசரமான எல்லா வற்றையும் வியாபித்து எல்லாரிடத்திலும் இருப்பதான அந்தத் தர்ம மானது தேவதேவர்களாலும் பாவமற்றவர்களான ஸித்தர்களாலும் காணப்படுகிறது. தர்மமே விதுரன். விதுரனே யுதிஷ்டிரன். ராஜனே வேலைக்காரன்போல நிற்கும் அப்படிப்பட்ட இந்தப்பாண்டவன் உன் னுல் பார்க்கத்தக்கவன். உன்னுடைய பிராதாவும் புத்திக்கிசைந்த

வனும் மஹாத்மாவும் சிறந்த யோகபலத்தோடுகூடினவனுமான அந்த விதுரன் குந்தியின் குமாரனும் மஹாத்மாவுமான யுதிஷ்டிரனைக் கண்டு அவனிடம் பிரவேசித்துவிட்டான். பரதஶ்ரேஷ்டனே! நான் உனக்கும் சீக்கிரத்தில் க்ஷேமத்தை உண்டுபண்ணுகிறேன். அருமைப்புத்திரனே! என்னை ஸம்சயத்தை அறுப்பதற்காக வந்தவனாக அறி. உலகத்தில் முன்பு எந்த மஹாரிஷிகளாலும் செய்யப்படாததும் ஆச்சரியமாக இருப்பதும் தவத்தின் பயனுமான செய்கையை உங்களுக்குக் காண்பிக்கிறேன். பூபாலனே! என்னிடத்திலிருந்து எதை அடைய விரும்புகிறாய்? குற்றமற்றவனே! பார்க்கவும் தொடவும் கேட்கவும் விரும்பப்பட்டதை உனக்கு நான் செய்கிறேன்' என்று சொன்னார்'' என்றார்.

ஆஶ்ரமவாஸபர்வம் முற்றிற்று.

## முப்பத்தோராவது அத்யாயம்.

## புத்ரதர்சனபர்வம்.

—:o:—

(யுதிஷ்டிரர் முதலியோர் திருதராஷ்டிராஶ்ரமத்தில் ஒருமாதம் வஸித்ததும், வியாஸர் நாரதர் முதலிய எல்லாரும் சேர்ந்திருக்கையில் காந்தாரி திருதராஷ்டிரனுக்குப் புத்ரர்களை நேரிற்காண விருப்பமிருப்பதைச் சொல்லியதும், வியாஸர் குந்தியின் விருப்பம் என்னவென்று அவளைக் கேட்டதும்)

ஜனமேஜயர், "பிராம்மணரே! ராஜஶ்ரேஷ்டனான திருதராஷ்டிரராஜன் மனைவியுடனும் மருமகளான குந்தியுடனும் வனவாஸத்தை அடைந்தும், தர்மங்களை அறிந்தவரான விதுரர் தர்மராஜரிடம் பிரவேசித்தும், பாண்டுபுத்திரர்களெல்லாரும் ஆஶ்ரமமண்டலத்தில் வஸித்துக்கொண்டிருக்கும்போது, மிக்க தேஜஸ்வியான வியாஸ மஹரிஷியானவர் எந்த ஆச்சரியத்தைச் செய்கிறேனென்று சொன்னாரோ அதை எனக்குச் சொல்லும். தர்மம்தவறாதவரும் குருகுலத்தில் பிறந்தவருமான யுதிஷ்டிரராஜர் அப்பொழுது ஜனங்களுடன் எவ்வளவு காலம் வனத்தில் வாஸம்செய்தார்? பிரபுவே! சேனையுடனும் அந்தப்புரத்துடனும் அந்த மஹாத்மாக்கள் எதைப்புஜித்துக்கொண்டு அங்கு வாஸம் செய்தார்கள்? இதனைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"மஹாராஜரே! யுதிஷ்டிரர் வனவாஸத்தை அடைந்திருக்கும் பூபதியான திருதராஷ்டிரனைப் பார்ப்பதற்காகப் பிராதாக்களுடனும் சேனையுடனும் (அரண்யம்) சென்றார். பரதஸ்ரேஷ்டரே! அவ்விடத்தில் அவர்களுக்கு முதல்தினம் ஜலமும் கிழங்கும் கனியும் போஜனமாகவும், பூமி படுக்கையாகவும் இருந்தன. ராஜரே! அப்பொழுது பாண்டவர்கள் குருராஜனான திருதராஷ்டிரனால் அனுமதி கொடுக்கப்பட்டு (மறுநாள்முதல்) வனத்தில் பலவிதமான அன்னபானங்களையும் படுக்கைகளையும் அடைந்தார்கள். அவர்கள் சேனையுடனும் அந்தப்புரத்துடனும் ஒருமாஸம் வனத்தில் வாஸம் செய்தார்கள். குற்றமற்றவரே! அப்பொழுது வியாஸர் அவ்விடம் வந்தார். ராஜரே! பாரதரே! அவ்வாறே, அவர்களெல்லாரும் திருதராஷ்டிரராஜனுக்கு அருகில் அந்த வியாஸருடன் உட்கார்ந்து கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கும்போது, நாரதரும் பர்வதரும் பெரியதவமுள்ள தேவலரும் மற்ற முனிவர்களும் விஸ்வாவஸுவும் தும்புருவும் சித்ரஸேனனும் வந்தார்கள். பெரியதவமுள்ளவரும் கௌரவராஜருமான யுதிஷ்டிரர் திருதராஷ்டிரனால் அனுமதிசெய்யப்பட்டு அவர்களுக்கும் முறைப்படி பூஜையைச் செய்தார். அவர்கள் எல்லாரும் யுதிஷ்டிரரிடமிருந்து பூஜையை அடைந்து, பிறகு, புண்ணியமானவைகளும் பறவைகளின் இறகுகளாகிற பஞ்சுகளால் செய்யப்பட்டவைகளும் சிறந்தவைகளுமான ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். கௌரவஸ்ரேஷ்டரே! அவர்கள் அங்கு உட்கார்ந்தவுடன், சிறந்த புத்தியுள்ளவனான அந்த திருதராஷ்டிரராஜன் பாண்டவர்களால் சூழப்பட்டு உட்கார்ந்தான். பிறகு, காந்தாரியும், குந்தியும், திரௌபதியும், ஸுபத்ரையும், மற்றுமுள்ள ஸ்திரீகளும், மற்ற ஸ்திரீகளுடன் உட்கார்ந்தார்கள். அரசரே! அப்பொழுது, அவர்களுக்குத் திவ்யமானவைகளும், மிக்க தர்மமுள்ளவைகளும், முன்னோர்களான ராஜரிஷிகளையும் தேவர்களையும் அஸுரர்களையும் பற்றியவைகளுமான கதைகள் நடந்தன. பிறகு, கதையின் முடிவில் பேசுகிறவர்களுள் சிறந்தவரும் பிரீதியுள்ளவரும் மிக்க தேஜஸுள்ளவரும் வேதங்களை அறிந்தவர்களனைவரினும் சிறந்தவருமான அந்த வியாஸர், பிரஜ்ஞையைக் கண்ணாகக்கொண்டவனும் பிரபுவுமான அந்தத் திருதராஷ்டிரனை நோக்கி, மறுபடியும் பின்வரும் இந்த வார்த்தையைச் சொல்லலானார்.

'ராஜேந்திர! நீ மனத்தில் சொல்ல விரும்பியிருப்பதை நான் அறிவேன். மஹாராஜனே! புத்திரர்களால் உண்டுபண்ணப்பட்ட சோகத்

தினால் எரிக்கப்படுகின்ற உனக்கும் காந்தாரிக்கும் எப்பொழுதும் மனத்திலிருக்கும் துக்கத்தையும், குந்திக்கும் திரௌபதிக்கும் மனத்திலிருக்கும் துக்கத்தையும், கிருஷ்ணனுடைய ஸஹோதரியான ஸுபத்ரையானவள் பொறுப்பதும் புத்திரனுடைய விநாசத்தினாலுண்டானதுமான கடுந்துயரத்தையும் நான் அறிவேன். அரசே! கௌரவ நந்தன! நீங்களெல்லாரும் சேர்ந்திருப்பதைக் கேட்ட பிறகு, (உங்களுடைய) ஸந்தேஹத்தை அறுப்பதற்காக நான் வந்தேன். இந்தத் தேவர்களும், கந்தர்வர்களும் இந்த எல்லா மஹரிஷிகளும், நீண்ட காலமாக ஸம்பாதிக்கப்பட்ட என்னுடைய தவத்தின் வீர்யத்தை இப்பொழுது பார்க்கட்டும். சிறந்த அறிவுள்ளவனே! ஆகையால், நான் உனக்கு எந்த இஷ்டத்தைக் கொடுக்கவேண்டும்? சொல்லு. வரனைக்கொடுக்க ஆயத்தனாக இருக்கிறேன். என்னுடைய தபோபலத்தைப் பார்' என்று சொன்னார்.

அளவற்ற அறிவுள்ள வியாஸரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த ராஜேந்திரன், ஒரு முகூர்த்த காலம் ஆலோசித்துச் சொல்லத் தொடங்கினான். 'எனக்கு இப்பொழுது இங்கு ஸாதுக்களான உங்களுடன் சேர்க்கை நேர்ந்தபடியினால், நான் தன்யனானேன்; அனுக்ரஹிக்கப்பட்டவனானேன். என்னுடைய உயிர்வாழ்க்கையும் பயனுள்ளதாயிற்று. தபோதனர்களே! நான் பிரம்மதேவருக்கொப்பான உங்களுடன் சேர்க்கைபெற்றேனாதலால், எனக்கு இப்பொழுதே இஷ்டமானகதி கிடைக்குமென்று எண்ணுகிறேன். பாவமற்றவர்களே! உங்களைப் பார்த்ததினாலேயே நான் பரிசுத்தனானேன்; இதில் ஸந்தேகமில்லை. எனக்குப் பரலோகத்தைப்பற்றிய பயமுமில்லை. ஆனால், மிகக்கெட்ட புத்தியுள்ளவனும் மூடனுமான அந்தத் துரியோதனனுடைய மிக்க அநீதிகளை நினைத்துப் புத்திரனிடத்தில் ஆசையுள்ள என்னுடைய மனம் எப்பொழுதும் பரிதபிக்கிறது. பாபபுத்தியுள்ள அவனால் குற்றமற்றவர்களான பாண்டவர்கள் பீடிக்கப்பட்டார்கள். யானைகளோடும் குதிரைகளோடும் மனிதர்களோடும் கூடின பூமியானது அவனால் அழிக்கப்பட்டது. என்னுடைய (அந்தப்) புத்திரனிமித்தம் மஹாத்மாக்களும் பற்பல தேசங்களுக்குத் தலைவர்களுமான எல்லா அரசர்களும் வந்து மிருத்யுவின்வசத்தை அடைந்தார்கள். அந்தச் சூரர்கள் மனத்திற்குப் பிரியமான பெற்றோர்களையும் மனைவிகளையும் பிராணன்களையும் இழந்து யமனுடைய வீட்டை அடைந்தார்கள். பிராம்மணரே! மித்திரன்நிமித்தம் போரில் கொல்லப்பட்ட அவர்களுக்கும் அவ்வாறே யுத்தத்தில் கொல்லப்பட்ட என்னுடைய புத்திரர்களுக்கும் பேரர்களுக்கும் என்னகதி? மிக்க பலமுள்ளவரும் வ்ருத்தரும்

சந்தனுவின் புத்திரருமான பீஷ்மரையும் பிராம்மணஶ்ரேஷ்டரான துரோணரையும் உயிர்துறக்கச் செய்வித்து என்னுடைய மனமானது அடிக்கடி பரிதபிக்கின்றது.' மூடனும் பாபியும் சிக்ஷிக்கப்படாத புத்தியுள்ளவனும் பூலோகத்து அரசாட்சியை விரும்பினவனுமான என்னுடைய புத்திரனால், பிரகாசித்துக்கொண்டிருந்த குலமானது, அழிக்கப்பட்டது. ஐயா! அந்தச் சூரர்கள் என்னிமித்தம் மனத்துக்குப் பிரியர்களான மனைவிகளையும் மக்களையும் பலவிதபோகங்களையும் யாகங்களையும் தடாகநிர்மாணங்களையும் இழந்து யமனுடைய வீட்டிற்குச் சென்றார்கள்.. இவற்றையெல்லாம் நினைத்து இரவும் பகலும் பரிதபிக்கின்றவனும் தூக்கமும் சோகமும் மேலிட்டவனுமான நான் ஆறுதலை அடையவில்லை. தந்தையே! இவ்விதம் சிந்திக்கின்ற எனக்கு ஆறுதல் உண்டாகவில்லை' என்று சொன்னான்.

ஜனமேஜயரே! அந்த ராஜரிஷியினுடைய பலவிதமான அந்தப் புலம்பலைக்கேட்டுக் காந்தாரிக்கும் குந்திக்கும் திரௌபதிக்கும் ஸுபத்ரைக்கும் கௌரவருடைய மருகிகளான அந்த உத்தம ஸ்திரீகளுக்கும் சோகமானது மறுபடியும் புதிதாக உண்டுபண்ணப்பட்டதாயிற்று. புத்திரசோகத்தால் கவரப்பட்டவளும் கட்டப்பட்ட கண்களுள்ளவளுமான காந்தாரிதேவி எழுந்திருந்து அஞ்சலிசெய்துகொண்டு மாமனாரை நோக்கிப் பின்வரும் வசனத்தைச் சொல்லலானாள். 'கௌரவத்தைக் கொடுப்பவரே! பகவானே! இவர், லோகாந்தரம் சென்ற புத்திரர்களைப் (பார்க்க) விரும்புகிறார். இவருடைய மனத்திலுள்ள அதுவும் உம்மால் தவத்தால் அறியப்பட்டது. முனிஶ்ரேஷ்டரே! பிரபுவே! கொல்லப்பட்ட புத்திரர்களைப்பற்றித் துக்கிக்கின்ற இந்த அரசருக்குப் பதினாறு வருஷங்கள் சென்றன; துயரம் தணியவில்லை. முனிவருள் சிறந்தவரே! புத்திரசோகத்தினால் கவரப்பட்டவரும் பெருமூச்சுவிடுகின்றவருமான இந்தத் திருதராஷ்டிரராஜர் ஓரிடத்திலும் படுக்கிறாரில்லை. நீர் தபோபலத்தினால் வேறு எல்லாஉலகங்களையும் படைக்கத் திறமையுள்ளவராயிருக்கிறீர். லோகாந்தரம் சென்ற புத்திரர்களை அரசருக்குக் காண்பிப்பதைப்பற்றி என்ன ஸந்தேஹம்? எல்லா மருமகள்களுள்ளும் பிரியமான மருமகளும் மிக்க ஞாதிகளையும் மக்களையும் இழந்தவளும் த்ருபதன் பெண்ணுமான இந்தத் திரௌபதியும் மிகத் துயரப்படுகிறாள். அவ்வாறே, கிருஷ்ணனுடைய ஸஹோதரியும் அழகாகப் பேசும் தன்மையுள்ளவளுமான இந்த ஸுபத்ரையென்னும் பெண்ணும் அபிமன்யுவின் வதத்தால் வருத்தமுற்று மிகத்துயரப்படுகிறாள். பூரிஶ்ரவ

வின் மனைவியும் உத்தமியென்று ஒப்புக்கொள்ளப்பட்டவளுமான இந்தப் பெண்ணும் கணவனுடைய வியஸனத்தாலுண்டான சோகத்தால் பீடிக்கப்பட்டு மிகத்துயரப்படுகிறாள். இவளுடையுமாமனாரும் புத்திசாலியும் பாஹ்லிக தேசத்தரசரும் கௌரவஸ்ரேஷ்டருமான ஸோமதத்தரும் தந்தையுடன் பெரிய யுத்தத்தில் கொல்லப்பட்டாரன்றோ? மஹா முனிவரே! ஸ்ரீமானும் சிறந்தபுத்தியுள்ளவரும் யுத்தங்களில் (முதுகுகாட்டி) ஓடாதவரும் உம்முடைய புத்திரருமான இவருடைய எந்த நூறு புத்திரர்களும் போர்க்களத்தில் கொல்லப்பட்டார்களோ அவர்களுடைய இந்த நூறு மனைவிகளும் துக்கத்தாலும் சோகத்தாலும் வியாபிக்கப்பட்டு மன்னருக்கும் எனக்கும் அடிக்கடி சோகத்தை வளரச்செய்துகொண்டு சிறிதும் ஆகாரமில்லாமல் என்னை உபாஸிக்கிறார்கள். பிரபுவே! சூரர்களும் மஹாத்மாக்களும் என்னுடைய மாமனார்களும் மஹாரதர்களுமான அந்த ஸோமதத்தன் முதலானவர்களின் கதி எப்படிப்பட்டது? சிறந்த முனிவரே! பகவானே! இந்த மன்னரும் உம்முடைய மருமகளான இந்தநானும் உம்முடைய அருளால் சோகமற்றுக் காலத்தைப்போக்கவேண்டும்' என்றாள்.

காந்தாரியானவள் இவ்விதம் சொன்னவுடன், விரதத்தினால் இளைத்தமுகத்தையுடைய குந்தியானவள் ரஹஸ்யமாகப் பிறந்தவனும் ஸூரியனுக்கொப்பானவனுமான அந்தப் புத்திரனை நினைத்தாள். ரிஷியும் வரத்தைக்கொடுப்பவரும் தூரத்திலுள்ள விஷயத்தையும் கேட்கவும் பார்க்கவும் திறமையுள்ளவருமான வியாஸர், துயரப்படுகின்றவளும் ஸவ்யஸாசியின் தாயுமான குந்திதேவியைப் பார்த்தார். பிறகு, வ்யாஸரானவர் அவளை நோக்கி, 'பெரிய பாக்கியமுள்ளவளே! நீ எந்தக் காரியத்தைச் சொல்லவிரும்புகிறாயோ எது உன்னுடைய மனத்தில் இருக்கிறதோ அதைச் சொல்' என்று சொன்னார். பிறகு, குந்தியானவள் மாமனாருக்குத் தலைவணங்கி லஜ்ஜையுடன் புராதனமான வரலாற்றை அப்பொழுது விரித்துரைக்கத் தொடங்கினாள்.

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(குந்தி கர்ணன்பிறப்பைக் கூறித் தான் அவனைப் பார்க்க விரும்பியதை வியாஸரிடம் சொல்லியதும், வியாஸர் அது குற்றமன்றென்பதைக் காரணத்துடன் கூறிக் குந்தியின் ஸந்தேகத்தைப் போக்கியதும்.)

குந்தி, 'பகவானே! நீர் எனக்கு மாமனாரும் தெய்வத்திற்கும் தெய்வமுமாக இருக்கிறீர். எனக்குத் தெய்வத்திற்கு மேலான தெய்வமான அப்படிப்பட்ட நீர் என்னுடைய உண்மையான வார்த்தையைக் கேளும். தபஸ்வியும் கோபமுள்ளவருமான துர்வாஸர் என்னும் பிராம்மணர் பிக்ஷையைப் புஜிப்பதற்காக என்னுடைய பிதாவினிடம் வந்தார். நான் அவரைச் சந்தோஷிக்கும்படி செய்தேன். அவர் (என்னுடைய) சுத்தியினாலும் குற்றம் செய்யாமையாலும் சுத்தமான மனத்தினாலும் பெரிய கோபகாரணங்களிலும் ஒருபொழுதும் கோபிக்காமலிருந்தார். கிருத கிருத்யரும் மஹா முனிவருமான அவர், என்னிடம் பிரீதியடைந்து வரன் கொடுக்க விரும்பி என்னை நோக்கி, '(பெண்ணே!) நீ அவச்யம் வரனைப் பெற்றுக்கொள்ள வேண்டும்' என்று சொன்னார். பிறகு, நான், சபித்துவிடுவர் என்கிற பயத்தால், மறுபடியும் அந்த பிராம்மணரை நோக்கி, 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னேன். அந்தப் பிராம்மணர் மறுபடியும் என்னை நோக்கி, 'கல்யாணி! அழகிய முகமுள்ளவளே! நீ தர்மத்திற்குத் தாயாகப் போகிறாய். நீ எந்தத் தேவர்களை அழைப்பாயோ அந்தத் தேவர்கள் உன்னுடைய வசத்திலிருப்பார்கள்' என்று சொன்னார். (அந்தப்) பிராம்மணர் இவ்விதம் சொல்லிவிட்டு மறைந்தார். பிறகு, நான் ஆச்சரியமுள்ளவளானேன். எல்லா நிலைமைகளிலும் எனக்கு நினைவு விலகவில்லை. பிறகு, நான் உப்பரிகையிலிருக்கும்போது உதிக்கின்ற ஸூரியனைக் கண்டு ரிஷியினுடைய அந்த வாக்கியத்தை நினைத்து (அந்த) ஸூரியனை விரும்பிப் பாலஸ்வபாவத்தால் அதில் தோஷத்தை உணராமல் நின்று கொண்டிருந்தேன். பிறகு, தேவனான ஸூரியன் என்னுடைய ஸமீபத்தில் வந்தான். அவன் தன்னுடைய சரீரத்தைப் பூமியில் (ஒன்றும்) ஆகாயத்தில் (ஒன்றுமாக) இரண்டாகச் செய்து ஒன்றால் உலகங்களைத் தபிக்கச் செய்துகொண்டு இரண்டாவது சரீரத்துடன் எனனிடம் வந்தான். அவன் நடுக்கமுள்ளவளான என்னை நோக்கி,

'(பெண்ணே !) என்னிடம் வரத்தைக் கேட்டுக்கொள்' என்று சொன்னான். நான் அவனைத் தலைவணங்கி, '(ஐயா !) போம்' என்று சொன்னேன். உக்ரமான கிரணங்களுள்ள அவன் என்னை நோக்கி, '(பெண்ணே!) என்னை வீணாக அழைப்பது தகுதியன்று. உன்னையும் உனக்கு வரன் கொடுத்த பிராம்மணனையும் எரித்துவிடுவேன்' என்று சொன்னான். பிறகு, நான் அபகாரம் செய்யாதவரான அந்த பிராம்மணரைச் சாபத்திலிருந்து ரக்ஷிக்கவேண்டி, 'தேவனே! உனக்குச் சமமான புத்திரன் எனக்கு உண்டாகவேண்டும்' என்று சொன்னேன். பிறகு, ஸூரியன் தேஜஸினால் என்னை மோஹிக்கச் செய்து, என்னிடம் பிரவேசித்து, '(பெண்ணே !) உனக்குப் புத்திரன் உண்டாவான்' என்று சொல்லி ஆகாயம் சென்றான். பிறகு, நான் வீட்டிற்குள் ரஹஸ்யமாகப் பிறந்தவனும் பாலனுமான கர்ணனென்னும் புத்திரனைப் [1]பிதாவின் சித்தத்தை ரக்ஷிப்பதற்காக ஜலத்தில் விட்டேன். பிராம்மணரே! அந்த ரிஷி என்னிடம் சொன்னபடி நான் அந்தத் தேவருடைய அனுக்கிரஹத்தினாலேயே மறுபடியும் கன்னிகையானேன். பிரம்மரிஷியே! அறிவில்லாதவளான நான் அந்தப் புத்திரனைப் புத்திபூர்வமாக உபேக்ஷை செய்ததென்பது என்னை எரிக்கிறது. அது உமக்கு நன்றாகத் தெரியும். பகவானே! பாவமோ, பாவமன்றோ, நான் வெளிப்படையாகச் சொன்னேன். எனக்கு அந்தப் புத்திரனைப்பார்க்க விருப்பமிருக்கிறது. அதை நீர் (நிறைவேற்றி) விலக்கவேண்டும். குற்றமற்றவரே! முனிவருள் மிகச்சிறந்தவரே! இந்த மன்னருடைய உள்ளத்திலிருப்பதும் உமக்குத் தெரியும். அவரும் அந்த இஷ்டத்தை இப்பொழுதே அடையவேண்டும்' என்று சொன்னாள்.

இவ்விதம் சொல்லக் கேட்டவரும் வேதத்தை அறிந்தவருள் சிறந்தவருமான வியாஸர், '(குந்தி!) நீ என்னிடம்சொன்ன இவையெல்லாம் இவ்விதமே நடக்கத்தக்கவையும் நல்லகாரியங்களுமாக இருக்கின்றன. உனக்குக் குற்றமுமில்லை. நீ கன்னிகையாயிருந்தவளன்றோ? ஈஸ்வரத்தன்மையுள்ளவர்களான தேவர்கள் (இதர) சரீரங்களில் பிரவேசிப்பதுண்டு. தேவக்கூட்டங்கள் ஸங்கல்பம் வார்த்தை பார்வை ஸ்பரிசம் புணர்ச்சி ஆகிய ஐந்துவிதத்தினாலும் புத்திரர்களை உண்டுபண்ணிக்கொண்டிருக்கின்றன. குந்தி! மனுஷ்யர்களுடைய தர்மமானது தேவர்களுடைய தர்மத்தால் தோஷத்தையடையாதென்று நீ தெரிந்துகொள். உன்

1 'பித்ரு வ்ருத்தாந்த ரக்ஷிணீ' என்பது வேறுபாடம்; 'தந்தையின் நடையைக் காப்பவள்' என்பது பொருள்.

னுடைய மனத்திலுள்ள வருத்தம் விலகட்டும். பலவான்களுக்கு எல்லாம் பத்தியமாகும். பலவான்களுக்கு எல்லாம் சுத்தமாகும். பலவான்களுக்கு எல்லாம் தர்மமாகும். பலவான்களுக்கு எல்லாம் தம்முடையனவாகும்.

---

## முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(வியாஸர் பேரில் இறந்தவர்களைக் காட்டுவதாகச் சொல்லித் திருதராஷ்டிரன் முதலியோர் யார் யார் அம்சமென்பதையும்கூறி எல்லாரையும் கங்கைக்கரை செல்லக் கட்டளையிட்டதும், அவர்கள் சென்றதும்.)

கல்யாணி! காந்தாரி! புத்திரர்களையும் பிராதாக்களையும் அவர்களின் பரிவாரங்களையும் (தம்தம்) பர்த்தாக்களுடன்கூடிய மருகிகளையும் இரவில் தூங்கி விழித்தவர்களைப்போலப் பார்க்கப்போகிறாய். குந்தி கர்ணனையும் ஸுபத்ரை அபிமன்யுவையும் திரௌபதி ஐந்து புத்திரர்களையும் பிதாக்களையும் பிராதாக்களையும் பார்க்கப் போகின்றனர். அரசனும் நீயும் குந்தியும் என்னைத் தூண்டுவதற்கு முந்தியே என்னுடைய ஹிருதயத்தில் இந்த நிச்சயமிருந்தது. மஹாத்மாக்களும் புருஷச்ரேஷ்டர்களுமான அவர்களெல்லாரும் துக்கிக்கப்படத்தக்கவர்களல்லர். அவர்கள் க்ஷத்திரிய தர்மத்தை முக்கியமாகக்கொண்டு மரணத்தை அடைந்தார்களன்றோ? நிந்திக்கப்படாதவளே! அந்தத் தேவகார்யமானது அவச்யம் நடக்கத்தகுந்ததுதான். அதற்காகவே எல்லாத்தேவர்களும் அம்சங்களால் பூமியில் அவதரித்தார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் பிசாசர்களும் குஹ்யகர்களும் ராக்ஷஸர்களும் புண்ய ஜனங்களும் ஸித்தர்களும் [1]தேவரிஷிகளும் தேவர்களும் தானவர்களும் நிர்மலர்களான தேவரிஷிகளும் அவதரித்தார்கள். அப்படிப்பட்ட இவர்கள் குருக்ஷேத்திரத்தின்கண் போர்க்களத்தில் மரணமடைந்தார்கள். புத்திசாலியும் திருதராஷ்டிரனென்று பிரஸித்தி பெற்றவனுமான கந்தர்வராஜனே மானிடலோகத்தில் உன்னுடைய பர்த்தாவான திருதராஷ்டிரனாகப் பிறந்தான். தவறாதபுகழுள்ளவனும் மிக்க மேன்மைபெற்றவனுமான பாண்டுவை, மருத்கணத்திலிருந்து உண்டானவனாகத் தெரிந்துகொள். தர்மத்தின் அம்சமானது விதுரனாகவும் யுதிஷ்டிரராஜனாகவும் பிறந்தது.

1. இது இரட்டித்து வருகிறது

துரியோதனனைக் கலியாகவும் சகுனி என்னும் அரசனைத் துவாபரமாக வும் தெரிந்துகொள். அழகிய காட்சியுள்ளவளே! நீ துச்சாஸனன் முதலானவர்களை ராக்ஷஸர்களாகத் தெரிந்துகொள். பலசாலியும் பகை வரை அடக்குபவனுமான பீமஸேனனை மருத்கணத்திலிருந்துண்டான வனாகவும் குந்தியின் புத்திரனான இந்தத் தனஞ்சயனை நரனென்னும் ரிஷியாகவும் கிருஷ்ணனை நாராயணனாகவும் நகுல ஸஹதேவர்களை அஶ்வினீ தேவர்களாகவும் நீ தெரிந்துகொள். குந்தியின் புத்திரனான கர்ணனைத் தன்னுடைய சரீரத்தை இரண்டாகச் செய்துகொண்டு உல கங்களைத் தபிக்கச்செய்கின்றவனும் பிரகாசிப்பவர்களுள் சிறந்தவனுமான ஸூரியனாகத் தெரிந்துகொள். கல்யாணி! அழகிய காட்சியுள்ளவளே! விரோதத்திற்காகக் கிளம்பினவனும் சண்டையை விளைவித்தவனுமான அந்தக் கர்ணனை ஸூரியனாகத் தெரிந்துகொள். ஆறு மஹாரதர்களால் கொல்லப்பட்டவனும் அர்ஜுனகுமாரனுமான அபிமன்யுவானவன், யோகத்தினால் இரண்டுவிதமாகி இவ்வுலகில் பிறந்த சந்திரன். திரௌபதி யுடன் அக்னியினின்றும் உண்டான திருஷ்டத்யும்னன் சுபமான அக்னியின் அம்சமாகவும் சிகண்டியை ராக்ஷஸனாகவும் தெரிந்துகொள். துரோணரைப் பிருஹஸ்பதியின் அம்சமாகவும் அஶ்வத்தாமாவை ருத் திரரிடமிருந்துண்டானவராகவும் தெரிந்துகொள். [1]கங்காபுத்திரரான பீஷ்மரை மானிடத் தன்மையை அடைந்த வஸுவாகத் தெரிந்து கொள். சிறந்த அறிவுள்ளவளே! கல்யாணி! இவ்விதம் இந்தத் தேவர் கள் மானிடத் தன்மையை அடைந்து காரியத்தைச் செய்துவிட்டு மறு படியும் ஸ்வர்க்கம் சென்றனர். (உங்கள்) எல்லாருக்கும் பரலோகத் தைப்பற்றிய பயத்தால் நெடுங்காலமாக உள்ளத்திலிருந்த துயரத்தை இப்பொழுது போக்குகிறேன். நீங்கள் எல்லாரும் கங்கையென்னும் நதிக்குச் செல்லுங்கள். அவ்விடத்தில் அந்தப் போரில் கொல்லப்பட்ட வர்களையெல்லாம் பார்ப்பீர்கள்' என்று சொன்னார்.

இவ்விதமான வியாஸருடைய வசனத்தைக் கேட்டு எல்லா ஜனங் களும் அப்பொழுது பெரிய ஸிம்மநாதம் செய்துகொண்டு கங்கையை நோக்கிச் சென்றனர். திருதராஷ்டிரனும் மந்திரிகளுடனும் பாண்ட வர்களுடனும் முனிஶ்ரேஷ்டர்களுடனும் வந்திருக்கும் கந்தர்வர்களு டனும் சென்றார். பிறகு, ஸமுத்ரம் போன்ற அந்த ஜனங்களெல்லா ரும் கங்கைக்கருகில் சென்று மனக்களிப்புடன் ஸுகமாக வீற்றிருந் தனர். புத்திசாலியான திருதராஷ்டிரராஜனும் பாண்டவர்களுடனும்

1 வேறுபாடம்.

கூடவந்தவர்களுடனும் ஸ்திரீகளையும் வ்ருத்தர்களையும்முன்னிட்டு வீற்றிருந்தான். மரித்த மன்னர்களைப் பார்க்க விரும்பி இரவை எதிர் பார்க்கும் அவர்களுக்கு அந்தப் பகலும் நூறுவருஷங்கள்போலச் சென்றது. பிறகு, ஸூரியன் புண்யமும் சிறந்ததுமான அஸ்தகிரியை அடைந்தான். பிறகு, அவர்கள் நீராடி மாலைக்கடனைக் கழித்தனர்.

## முப்பத்துநான்காவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

**(வியாஸர் இரவில் கங்கையிலிறங்கிப் போரிலிறந்தவரை அழைத்ததும், இறந்தோரும் தம் தம் ஆபரணம் ஆயுதம் வாகன முதலியவற்றுடன் கங்கையினின்று தோன்றிக் கரைக்கு வந்ததும், த்ருதராஷ்டிரன் வியாஸர் கொடுத்த ஞானக் கண்ணால் எல்லாரையும் நேரில் கண்டதும்.)**

பிறகு, அவ்விடத்தில் வந்திருந்தவர்கள்எல்லாரும் ஸாயங்காலத தில் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்துவிட்டு, இரவு வந்தவுடன், வியாஸரிடம் வந்தார்கள். தர்மாத்மாவான திருதராஷ்டிரனோ அப் பொழுது சுத்தனும் ஒரேமனமுள்ளவனுமாகிப் பாண்டவர்களுடனும் அந்த ரிஷிகளுடனும் உட்கார்ந்தான். ஸ்த்ரீகளோ ஒன்றுசேர்ந்து காந் தாரியுடன் உட்கார்ந்தார்கள். பட்டணத்தாரும் தேசத்தாருமான ஜனங் களெல்லாரும் வயதின் கிரமப்படி உட்கார்ந்தார்கள். பிறகு, பெரிய தேஜ ஸுள்ளவரான வியாஸரென்னும் மஹாமுனிவர் புண்ணியமான கங்கா ஜலத்தில் இறங்கி எல்லா உலகங்களையும் பாண்டவர்களையும் கௌரவர் களையும் சேர்ந்த எல்லாப்போர்வீரர்களையும் பெரியபாக்கியமுள்ளவர்க ளும் பற்பல தேசவாஸிகளுமான அரசர்களையும் அழைத்தார். அங்குவந் திருந்தவர்களெல்லாரும் அவர்களுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டி ருந்தார்கள். ஜனமேஜயரே! பிறகு, ஜலத்தின் நடுவில் கௌரவ பாண்ட வர்களுடைய படைகளிரண்டும் சேர்ந்ததுபோல மிகப் பெரிய ஒலி உண் டாயிற்று. பிறகு,பீஷ்மரையும்துரோணரையும்முதன்மையாகக்கொண்ட அந்த அரசர்களெல்லாரும் சேனைகளுடன் அந்த ஜலத்திலிருந்து ஆயி ரக்கணக்காக உயரவந்தார்கள். புத்திரர்களுடனும் சேனைகளுடனும் கூடி னவர்களான விராடன் துருபதன் இருவர்களும் திரௌபதியின் புத்திரர் களும் அபிமன்யுவும் ராக்ஷஸனான கடோத்கசனும் கர்ணனும் துரியோ தனனும் மஹாரதனான சகுனியும் துச்சாஸனனை முதன்மையர்கக்

கொண்டவர்களும் மிக்க பலமுள்ளவர்களுமான திருதராஷ்டிரகுமாரர்களும் ஜராஸந்தனுடைய புத்திரனும் பகதத்தனும் வீர்யமுள்ளவனான ஜலஸந்தனும் பூரிஸ்ரவஸும் சலனும் சல்யனும் தம்பியுடன் கூடின விருஷஸேனனும் ராஜகுமாரனான லக்ஷ்மணனும் புத்திரனுடன் கூடின திருஷ்டத்யும்னனும் சிகண்டியின் எல்லாப் புத்திரர்களும் தம்பியுடன் கூடின திருஷ்டகேதுவும் அசலனும் விருஷகனும் அலாயுதனென்னும் அரக்கனும் பாஹ்லிகனும் ஸோமதத்தனும் சேகிதானனென்னும் அரசனுமாகிய இவர்களும் அதிகமாக இருப்பதால் பெயர்சொல்லப்படாதவர்களான மற்றுமுள்ளபலருமான எல்லாரும் பிரகாசிக்கின்ற வடிவத்துடன் அந்த ஜலத்திலிருந்து மேலே வந்தார்கள். எந்தவீரனுக்கு எந்த அலங்காரமும் எந்தத்துவஜமும் எந்தவாகனமும் எந்தக்கவசமும் எந்த ஆயுதமும் இருந்தனவோ அவன் அதனுடன் காணப்பட்டான். எல்லாரும் திவ்யமான ஆடை உடுத்தவர்களும் எல்லாரும் ஜ்வலிக்கின்ற குண்டலமணிந்தவர்களும் திவ்யமான மாலையும் ஹாரமும் தரித்தவர்களும் திவ்யமான அப்ஸரஸுகளால் சூழப்பட்டவர்களும் பகையும் அஹங்காரமும் கோபமும் பொறாமையுமற்றவர்களும் கந்தர்வர்களால் கானம் செய்யப்படுகின்றவர்களும் வந்திகளால் ஸ்தோத்திரம் செய்யப்படுகின்றவர்களுமாக இருந்தார்கள். ராஜரே! அப்பொழுது, வியாஸமுனிவர் பிரீதியினால் திருதராஷ்டிரனுக்கும் திவ்யமான நேத்திரத்தைத் தபோபலத்தால் கொடுத்தார். புகழ்பெற்றவளான காந்தாரியும் திவ்ய ஜ்ஞானபலத்தை அடைந்து அந்த எல்லாப் புத்திரர்களையும் போரில் கொல்லப்பட்ட மற்றவர்களையும் பார்த்தாள். அந்த எல்லா ஜனங்களும் மிகப் பெரிய ஆச்சரியமும் சிந்திக்க முடியாததும் மயிர்சிலிர்க்கச்செய்வதுமான அதனை வியப்புற்றுக் கண் இமையாமல் பார்த்தார்கள். உத்ஸவங்களுள் மிகச்சிறந்ததும் மனம்மகிழ்ந்த ஸ்திரீகளும் புருஷர்களும் நிறைந்ததுமான அது படத்தில் எழுதின சித்திரம்போல் ஆச்சரியமாகக் காணப்பட்டது. பரதஸ்ரேஷ்டரே! திருதராஷ்டிரனே அந்த முனிவருடைய அனுக்கிரஹத்தினால், திவ்யநேத்திரத்தால் அவர்களனைவரையும் பார்த்து ஸந்தோஷமடைந்தான்.

---

## முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(திருதராஷ்டிரன் யுதிஷ்டிரர் முதலியோர் போரிலிறந்தவருடன் அளவளாவி இரவு முழுமையும் விளையாட்டாகக் கழித்தது.)

அரசரே! பிறகு, புருஷஶ்ரேஷ்டர்களான அவர்களெல்லாரும் கோபமும் பகையும் கெட்ட எண்ணமுமற்றவர்களும் தேவலோகத்தில் தேவர்கள்போல மிக்க மனக்களிப்புள்ளவர்களுமாயிருந்துகொண்டு பிரம்மரிஷியினால் ஏற்படுத்தப்பட்டதும் சிறந்ததும் சுபமுமான விதியை ஆஶ்ரயித்துப் புத்திரன் தந்தையோடும் தாயாரோடும், மனைவிகள் கணவர்களோடும், பிராதா பிராதாவோடும், நண்பன் நண்பனோடுமாக ஒருவரோடொருவர் சேர்க்கைபெற்றனர். பாண்டவர்களோ பெரிய வில்லாளியான கர்ணனையும் அபிமன்யுவையும் திரௌபதியின் புத்திரர்களனைவரையும் மிக்க ஸந்தோஷத்துடன் அடைந்தார்கள். பூபாலரே! பிறகு, அந்தப் பாண்டவர்கள் கர்ணனுடன் சேர்ந்து ஸந்தோஷமடைந்து ஸ்நேகத்தில் உறுதிபெற்றிருந்தனர். பரதஶ்ரேஷ்டரே! இவ்விதம் அந்தப்போர்வீரர்களும் அந்த க்ஷத்திரியர்களும் முனிவருடைய அனுக்கிரகத்தினால் கோபமற்றவர்களாகி ஒருவரோடொருவர் சேர்க்கை பெற்றுப் பகையை இழந்து நட்பில் உறுதிபெற்றனர். இவ்விதம் புருஷஶ்ரேஷ்டர்களான எல்லாக் கௌரவமன்னர்களும் மற்றுமுள்ள மன்னர்களும் ஆசாரியர்களோடும் பந்துக்களோடும் புத்திரர்களோடும் சேர்க்கைபெற்று அவ்விரவு முழுவதும் உலாவி மனக்களிப்புற்று மிக்க ஸந்தோஷத்தினால் (தங்களைத்) தேவர்களைப்போல எண்ணினார்கள். பரதஶ்ரேஷ்டரே! அன்று ஒருவரோடொருவர் சேர்க்கைபெற்ற போர்வீரர்களுக்குச் சோகமும் பயமும் நடுக்கமும் சோர்வும் அபகீர்த்தியும் உண்டாகவில்லை. அந்த ஸ்திரீகள் பிதாக்களையும் பிராதாக்களையும் கணவர்களையும் புத்திரர்களையும் ஸந்தித்துப் பெரிய ஸந்தோஷத்தை அடைந்து துக்கத்தை விட்டார்கள், கர்மங்களால் தேவலோகத்தை அடைந்தவர்களும் பிரம்மாவின் ஸபையை அடைந்தவர்களும் வருணலோகத்தை அடைந்தவர்களும் கோலோகத்தை அடைந்தவர்களும் ஸௌரிய லோகத்தையடைந்தவர்களும் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் பிசாசர்களையும் உத்தர குருதேசங்களையும் விசித்திரமான வேறுகதிகளையும் அடைந்தவர்களுமான மனிதர்களெல்லாரும் (முன்போல்) அந்த வயதும்

ரூபமும் வேஷமுமுள்ளவர்களாக அங்குவந்திருந்தனர். இவ்விதம் அந்த வீரர்களும் அந்த ஸ்திரீகளும் ஓரிரவு விளையாடி ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் செய்து விடைபெற்றுக்கொண்டு பிறகு வந்ததுபோலச் சென்றார்கள். பிறகு, முனிஸ்ரேஷ்டரான வியாஸர் அந்த ஜனங்களுக்கு அனுமதி கொடுக்க, அவர்கள் க்ஷணத்திற்குள் இவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே மறைந்தனர். மஹாத்மாக்களான அவர்கள் புண்யமான கங்காநதியில் முழுகி, ரதங்களுடனும் த்வஜங்களுடனும் தங்களுடைய வீடுகளுக்குச் சென்றனர். சிலர் தேவலோகத்தையும் சிலர் பிரம்மாவின் ஸபையையும் சிலர் வருணலோகத்தையும் சிலர் குபேர லோகத்தையும் சில அரசர்கள் ஸூரிய லோகத்தையும் சிலர் ராக்ஷஸர் களுடைய உலகத்தையும் சிலர் பிசாசங்களுடைய உலகத்தையும் உத்தரகுருதேசங்களையும் அடைந்தார்கள். விசித்திரமான கதியுள்ள வர்களும் மஹாத்மாக்களுமான அவர்களெல்லாரும் எந்த உலகங்களி லிருந்து தேவர்களுடன் வாகனங்களோடும் பரிவாரங்களோடும் வந்தார்களோ (அந்த உலகங்களை அடைந்தார்கள்.) அப்பொழுது, அவர்களெல்லாரும் போனவுடன், ஜலத்திலிருப்பவரும் மஹா முனி வரும் தர்மசீலரும் மிக்க தேஜஸுள்ளவரும் கௌரவர்களுக்கு நன்மை யைச் செய்பவருமான வியாஸர், கணவனை இழந்தவர்களான அந்த க்ஷத்திரியஸ்திரீகளெல்லாரையும் நோக்கி, 'எந்த எந்த உத்தமஸ்திரீகள் பர்த்தாக்களால் ஸம்பாதிக்கப்பட்ட உலகங்களைவிரும்புகிறார்களோ அவரவர்கள் சீக்கிரமாக உத்ஸாகத்துடன் கங்காஜலத்தில் பிரவேசிக் கட்டும்' என்று சொன்னார். பிறகு, அவருடைய வார்த்தையைக் கேட்டு நம்பிக்கையுள்ள உத்தமஸ்திரீகள் மாமனாரிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு கங்காஜலத்தில் பிரவேசித்தார்கள். ராஜரே! பிறகு, பதிவிரதைகளான அந்த எல்லாஸ்திரீகளும் மானிட சரீரங்களால் விடப்பட்டவர்களாகிப் பர்த்தாக்களுடன் சேர்ந்தார்கள். இவ்விதம் நல்லொழுக்கமுள்ளவர்களும் பதிவிரதைகளுமான அந்தஸ்திரீகள் எல்லாரும் வரிசையாக கங்கா ஜலத்தில் பிரவேசித்து (மானிடசரீரங்க ளால்) விடப்பட்டுப் பர்த்தாக்களுடைய உலகங்களை அடைந்தார்கள். சீலமும் குணமும் பொருந்தியவர்களும் எல்லாக்குணங்களோடும் கூடி னவர்களுமான அந்தஸ்திரீகளெல்லாரும் தங்களுடைய பர்த்தாக்கள் போலவே திவ்யமான வடிவமுள்ளவர்களும் திவ்யமான ஆபரணங்க ளால் அலங்கரிக்கப்பட்டவர்களும் திவ்யமான மாலையும் வஸ்திரமும் தரித்தவர்களுமாகி விமானத்திலேறிக்கொண்டு சிரமமற்றவர்களாகித்

தம்மிடம் சென்றனர். வரமளிப்பவரும் தர்மத்தில் பிரியமுள்ளவரு மான வியாஸர், அந்தச்சமயத்தில் எவனெவனுக்கு எது (எது) இஷ் டமோ (அவனவனுக்கு) அதையதைக்கொடுத்தார். அரசர்கள் மறுபடி யும் வந்தார்களென்பதைக் கேட்டுப் பற்பல தேசவாஸிகளான மனிதர் களும் ஸந்தோஷமும் பெரிய ஆனந்தமுமுள்ளவர்களானார்கள். பட்ட ணத்தார்களான அந்த மனிதர்களெல்லாரும் அந்த உத்தமமான ஆச்சரி யத்தைக்கண்டு பய எண்ணம் அற்றவர்களும் பாவம் தொலைந்தவர்களு மானார்கள்.

எந்தமனிதன், அவர்கள் பிரியர்களுடன் சேர்ந்ததை நன்கு கேட் டானோ அவன் இங்கும் இறந்த பின்னும் எப்பொழுதும் பிரியங்களை அடைவான். இஷ்டர்களுடனும் உறவினர்களுடனும் சேர்க்கையையும் க்ஷேமத்தையும் சிரமமின்றி அடைவான். வித்வானும் தர்மத்தை நன்கு அறிந்தவனுமான எவன் இதை வித்வான்களுக்குச் சொல்லுவானோ அவன் இவ்வுலகில் புகழையும் பரலோகத்தில் சுபமான கதியையும் அடைவான். பாரதரே! வேதமோதியவர்களும் தவம்புரிந்தவர்களும் நல்லொழுக்கமுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் தானத் தால் பாவத்தை விலக்கினவர்களும் கபடமற்றவர்களும் சுத்தர்களும் சாந்தர்களும் ஹிம்ஸையும் பொய்யுமற்றவர்களும் ஆஸ்திகர்களும் ஸ்ரத் தையுள்ளவர்களும் தைரியமுள்ளவர்களுமான மனிதர்கள் ஆச்சரியமான இந்தப் பர்வத்தைக் கேட்டால் சிறந்த கதியை அடைவார்கள். மறுபடி யும் காணப்படுதலை அடைந்த அவர்கள், அடிக்கடி கீர்த்திக்கப்படுவார்க ளானால் கேட்பவர்களுக்கு எப்பொழுதும் மேன்மேலும் அபயத்தைக் கொடுப்பார்கள்" என்று சொன்னார்.

## முப்பத்தாறுவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(ஜனமேஜயர் இறந்தவர் திரும்புவதெப்படி என்று கேட்டதும், வைசம்பாயனர் காரணத்துடன் விடையளித்ததும்.)

அப்பொழுது, வித்வானான ஜனமேஜயராஜர் பிதாமஹர்களெல்லா ரும் சென்றதும் வந்ததுமான இதைக் கேட்டு ஸந்தோஷமுள்ளவரா னார். ஸந்தோஷமுள்ளவரான அவர், 'சரீரத்தை இழந்தவர்கள் மறுபடி

யும் அந்தஸ்வரூபத்தைக் காண்பித்ததென்பது எவ்விதம்?" என்று (அவர்கள்) மறுபடியும் வந்ததைப்பற்றி வினவினார். அவ்விதம் வினவப் பட்டவரும் பிராம்மணஶ்ரேஷ்டரும் வியாஸருடைய ஶிஷ்யரும் பிரதாப முள்ளவரும் பேசுகிறவர்களுள் சிறந்தவருமான அந்த வைசம்பாயனர், அந்த ஜனமேஜயராஜரை நோக்கி, (மறுமொழி) கூறலானார்.

வைசம்பாயனர், "அரசரே! எல்லாருக்கும் கர்மங்கள் (பயனை அனு பவிக்கும் வரையில்) அழிகிறதில்லையென்பது நிச்சயம். சரீரங்களும் சரீரங்களின் உருவங்களும் கர்மங்களாலுண்டானவை. (அவை) அநித்ய மானவை. [1]மஹாபூதங்களான பித்ராதி சரீரங்கள் பிராணிகளுக்கு அதி பதியான ஈஶ்வரனை அடுத்து (ஹ்ருதயாகாசத்தில்) இருப்பதால் நித்ய மானவை. அநித்யமான கர்மசரீரங்கள் நித்யமான பித்ராதி சரீரங்களோடு சேர்ந்திருக்கின்றன. கர்மசரீரங்கள் அழியும்பொழுது நித்யசரீரங் கள் அழிகிறதில்லை. கருதாமல் செய்த கர்மத்திற்கும் பயன் கிடைக்கு மென்பது (பெரியோர்களின்) கருத்து. ஜீவன் இந்தக் கர்மங்களோடு கூடினவனாகி ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறான். ஆத்மாவானவன் எக் காலத்திலும் அழியும்படி செய்யப்பட முடியாதவனென்பது நிச்சயம். ஆராய்ந்து பார்க்கும் பிராணிகளுக்கு ஆத்மாவென்னும் இந்தப் பொருள் நித்யமாகக் காணப்படுவதாகும். எதுவரையில் கர்மாவானது அழிய வில்லையோ அதுவரையில் அந்தச் சரீரமானது ஸ்வரூபத்துடன் கூடின தாக இருக்கும். கர்மமானது அழிந்தவுடன் உலகத்தில் மனிதன் வேறு சரீரத்தை அடைகிறான். வெவ்வேறாயிருக்கும் இந்திரியம் முத லானவைகள் சரீரத்தை அடைந்து ஒன்றாயிருக்கும் தன்மையை அடை கின்றன. சரீரத்தைக் காட்டிலும் ஜீவன் வேறு என்று அறிபவர்களுக்கு அவைகள் நித்யமானவைகளாகின்றன. அஶ்வமேதயாகத்தில் அஶ் வத்தைக் கொல்லும் விஷயத்தில் இவ்விதமான ஶ்ருதியும் இருக்கிறது. குதிரைக்கு இந்திரியங்கள் நிச்சயமாக நித்தியமானவைகளும் லோகாந் தரத்திலுமுள்ளவைகளுமாயிருக்கின்றனவல்லவா? ராஜரே! உமக்குப் பிரியமாக இருந்தால் நான் ஹிதமான இதைச் சொல்லுகிறேன். யாகத் தைச் செய்தால் தேவயான மார்க்கங்கள் உண்டென்று நீர் கேட்டிருக்கி

---

1. 'ஜீவர்கள் ஸ்வப்ன காலத்தில் வேறு சரீரத்தை அடைந்து ஸுகத் தையோ துக்கத்தையோ அநுபவித்துவிட்டு ஸ்வப்ன சரீரம் அழிந்தபின் அக் காலத்தில் அழியாத கர்ம சரீரத்தை அடைவதுபோலக் கர்ம சரீரத்தை அடைந்து ஸுகத்தையோ துக்கத்தையோ அனுபவித்துவிட்டு அந்தக் கர்ம சரீரம் அழிந்த பின் ஹ்ருதயாகாசத்தில் ஈஶ்வரனுடனிருக்கும் நித்யமான பித்ராதி சரீரத்தை அடைகின்றனர்' என்பது பழைய உரை.

நீரன்றோ? நீர் எப்பொழுது யாகத்தை நன்றாகச் செய்கிறீரோ அப்பொழுதே தேவர்கள் உமக்கு ஹிதர்களாகிறார்கள். பிராணிகளை அந்த அந்த உலகங்களை அடையும்படி செய்வதில் ஈச்வரர்களான தேவர்கள் அப்பொழுதே ஒன்று சேர்ந்தவர்களாகின்றனர். ஆகையால், நித்யர்களான ஜீவர்கள் (தேவர்களைக் குறித்து) யாகம்செய்து கதியுள்ளவர்களாகின்றனர். யாகம்செய்யாதவர்கள் கதியற்றவர்களாகின்றனர். ஐந்து பூதங்களின் சேர்க்கையாலாகிய இச்சரீரமும் ஆத்மாவும் நித்யமானவைகளாகையால், எந்தப் புருஷன் இந்தச் சரீரத்திற்கு நாசத்தையும் சேர்க்கையையும் பார்க்கிறானோ அவன் வீணான புத்தியுள்ளவன். பிரிவில் மிக்க துயரப்படுகின்றவன் மூடனென்பது என்னுடைய எண்ணம். பிரிவில் தோஷத்தைப் பார்ப்பவன் சேர்க்கையை விலக்கவேண்டும். பற்றுதலற்ற ஆத்மாவுக்குச் சேர்க்கையும் பிரிவாலுண்டாகும் துக்கமும் உண்டாக மாட்டா. தத்வஞானமில்லாதவனோ பராபரங்களை அறிந்தவனும் அபிமானமற்றவனும் ஸகுணப் பிரம்மத்தை அறிந்தவனுமாகிப் (பிறகு) மேலான பிரம்மஞானத்தை அடைந்து அஜ்ஞானத்திலிருந்து விடப்படுகிறான். (முக்தனானவன்) அறியமுடியாத வஸ்துவினிடமிருந்து வந்தவன், மறுபடியும் அறியமுடியாத வஸ்துவை அடைந்தான் நானும் அவனை அறிகிறேனில்லை. அவனும் என்னை அறிகிறானில்லை; எனக்கோ வைராக்யமுண்டாகவில்லை. ஈச்வரனல்லாத இந்த ஜீவன் எந்தச் சரீரத்தால் எதை (எதைச்) செய்கிறானோ அந்த அந்தச் சரீரத்தால் (அதை அதை) அநுபவிக்கிறான். மனத்தால் செய்ததை மனத்தாலும் சரீரத்தால் செய்ததைச் சரீரத்தாலும் அடைகிறான்.

## முப்பத்தேழாவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

—:0:—

(ஜனமேஜயர் பரிக்ஷித்தைக் காட்டவேண்டினதும், வியாஸர், பரிக்ஷித்தையும் சமீகரையும் ச்ருங்கி முதலியவரையும் காட்டியதும் ஜனமேஜயர் அவப்ருதஸ்நானம் செய்து ஆஸ்திகரைப் பூஜித்ததும்.)

கௌரவ ச்ரேஷ்டரே! ரிஷியினுடைய அனுக்கிரகத்தினால் தமது வடிவத்துடன் கூடின புத்திரர்களுடைய தரிசனத்தை அடைந்தவனும் மனிதர்களைப் பரிபாலிப்பவனும் புருஷச்ரேஷ்டனுமான அந்த

அரசன, புத்திரர்கள் காணுமற் போனவுடன், வியாஸரிடமிருந்து ராஜ தர்மங்களையும் பிரம்மத்தைப்பற்றிய உபநிஷத்தையும் ஞானத்தின் நிச்சயத்தையும் அடைந்தான். மஹாபிராஜ்ஞரான விதுரர் தபோபலத்தால் ஸித்தியை அடைந்தார். திருதராஷ்டிரன் தபஸ்வியான வியாஸரை ஆஸ்ரயித்து ஸித்தியை அடைந்தான்" என்று கூறினர்.

ஜனமேஜயர், "வரமளிப்பவரான வியாஸர் என்னுடைய தகப்பனுரையும் அவ்வித ஸ்வரூபமும் வேஷமும் பிராயமுமுள்ளவராகக் காண்பித்தால் அதையெல்லாம் நம்புவேன்; எனக்குப் பிரியமாக இருக்கும். நான் நிச்சயமுள்ளவனும் கிருதார்த்தனுமாவேன். ரிஷிஸ்ரேஷ்டருடைய அனுக்கிரகத்தினுல் என்னுடைய இஷ்டம் நிறைவேறட்டும்" என்று கூறினர். அந்த அரசர் இவ்விதமான வசனத்தைச் சொன்னவுடன், பிரதாபமுள்ளவரும் புத்திசாலியுமான வியாஸர் கிருபைசெய்து பரிக்ஷித்தை வருவித்தார். பிறகு, அந்த அரசர், அதே ஸ்வரூபமும் வயதுமுள்ளவரும் ஸ்வர்க்கத்திலிருந்து வந்தவரும் காந்தியுள்ளவரும் தந்தையாருமான பரிக்ஷித்தென்னும் அரசரைப் பார்த்தார். மஹாத்மாவான சமீகரையும் அவருடைய புத்திரரான ஸ்ருங்கியையும் கொல்லப்பட்டவர்களான மன்னனுடைய மந்திரிகளையும் பார்த்தார். பிறகு, பூபதியான ஜனமேஜயராஜர் ஸந்தோஷமடைந்து அவபிருதத்தில் பிதாவுக்கு ஸ்நானம்செய்வித்துத் தாமும் ஸ்நானம் செய்தார். பரிக்ஷித்தும் அவ்விடத்திலேயே மறைந்தார்.

அப்பொழுது, அந்த ஜனமேஜயராஜர் ஸ்நானம் செய்துவிட்டு யாயாவரகுலத்தில் பிறந்தவரும் ஜரத்காருவின் புத்திரருமான ஆஸ்தீகரென்னும் அந்தணரை நோக்கி, "ஆஸ்தீகரே! இப்பொழுது என்னுடைய பிதாவானவர் வந்து என்னுடைய சோகத்தைப் போக்கினுராகையால் இந்தயாகமானது பலவித ஆச்சரியமுள்ளதென்பது என்னுடைய எண்ணம்" என்று சொன்னுர். ஆஸ்தீகர், "குருகுலஸ்ரேஷ்டனே! புராணரும் தவத்திற்குநிதியும் ரிஷியுமான வியாஸர் எவருடைய யாகத்தில் இருக்கிருரோ அவருக்கு இரண்டு உலகங்களும் ஜயிக்கப்பட்டனவாகும். பாண்டவகுமார! உன்னுல் விசித்திரமான கதையானது கேட்கப்பட்டது. ஸர்ப்பங்களும் நீருக்கப்பட்டு (உன்) தந்தையின் மார்க்கத்தை அடைந்தன. ராஜனே! நீ ஸத்யஸந்தனுதலால் தக்ஷகனும் மிக்க சிரமத்தால் விடப்பட்டான். எல்லா ரிஷிகளும் பூஜிக்கப்பட்டார்கள். மஹாத்மாவினுடைய கதியானது பார்க்கப்பட்டது. பாபத்தைப் போக்குகின்ற இதிஹாஸத்தைக் கேட்டு மிக்கவிஸ்தாரமான தர்மம்

அடையப்பட்டது. மஹாத்மாக்களான ஜனங்களைத் தரிசனம் செய்த தால் உள்ளத்திலுள்ள [1]முடிப்பானது அவிழ்க்கப்பட்டது. எவர்கள் தர்மத்தில் விஸ்வாஸமுள்ளவர்களோ எவர்கள் நல்லொழுக்கத்தில் பிரிய முள்ளவர்களோ எவர்களைக் கண்டால் பாவம் தொலையுமோ அவர்களை நமஸ்கரிக்கவேண்டும்'' என்று சொன்னார். அந்த ஜனமேஜயராஜா பிராம்மணஸ்ரேஷ்டரிடமிருந்து இந்த வாக்கியத்தைக்கேட்டு அந்த ரிஷியை அடிக்கடி புகழ்ந்து பூஜித்தார். மிகச்சிறந்தவரே! தர்மத்தை அறிந்தவரான ஜனமேஜயர் (விரதத்தினின்று) தவறாதவரான வைசம் பாயனரென்னும் அந்த ரிஷியை நோக்கி வனவாஸத்தைப்பற்றிய கதை யின் மிச்சத்தையும் வினவலானார்.

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## புத்ரதரிசனபர்வம். (தொடர்ச்சி.)

———:0:———

(திருதராஷ்டிரன் முதலியோர் ஆஸ்ரமம் வந்ததும், வியாஸர் கட்டளைப் படி திருதராஷ்டிரன் முதலியவர்கள் யுதிஷ்டிராதியரை நகரம் செல்ல வற்புறுத்தியதும், அவர்கள் சென்றதும்.)

ஜனமேஜயர், "புத்திரர்களையும் பௌத்திரர்களையும் (மற்ற) உறவினர்களையும் பார்த்துவிட்டுத் திருதராஷ்டிரராஜரும் யுதிஷ்டிரராஜரும் என்னசெய்தார்கள்?'' என்று வினவ, வைசம்பாயனர் சொல் லலானார். "அந்த ராஜரிஷியானவர் மீண்டும் புத்திரர்களுடைய தரிசன மென்னும் அந்தப் பெரிய ஆச்சரியத்தைக் கண்டு சோகமற்றவராகி மறுபடியும் ஆஸ்ரமத்திற்கு வந்தார். மற்ற எல்லா ஜனங்களும் அந்தப் பரமரிஷிகளும் திருதராஷ்டிரனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு இஷ் டப்படி திரும்பிச் சென்றார்கள். மஹாத்மாக்களான பாண்டவர்களோ மிகச்சிலரான வீரர்களுடனும் மனைவிகளுடனும் மஹாத்மாவான அந்தப் பூபதியைப் பின் தொடர்ந்து சென்றனர். புத்திசாலியும் பிரம்மரிஷியும் உலகங்களால் பூஜிக்கப்பட்டவருமான வியாஸர், ஆஸ்ரமத்தை வந்து அடைந்திருக்கும் அந்தத் (திருதராஷ்டிர) ராஜனை நோக்கிப் பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்.

'திருதராஷ்டிர! சிறந்தகைகளுள்ளவனே! கௌரவநந்தன! கேள். உன்னால் ஞானவ்ருத்தர்களும் புண்ணியமான செய்கையுள்ள

1 தி. மான அஜ்ஞானம்.

வர்களும் நற்குலத்தில் பிறந்தவர்களும் பிராயம் முதிர்ந்தவர்களும் வேதங்களேயும் வேதாங்கங்களேயும் அறிந்தவர்களும் தர்மத்தை அறிந்தவர்களும் புராணர்களுமான ரிஷிகளால் சொல்லப்பட்ட பலவிதமான கதைகள் நன்கு கேட்கப்பட்டன. தேவர்களேக் கண்டவரான நாரதரிடமிருந்து தேவரஹஸ்யமானது உன்னல் கேட்கப்பட்டது. சோகத்தில் மனத்தைச் செலுத்தாதே. தெய்வத்தாலாகிய காரியத்தைப்பற்றி அறிஞன் வருத்தமடையான். அவர்கள் சஸ்திரத்தால் பரிசுத்தமானதும் சுபமுமான கதியை க்ஷத்திரியதர்மத்தால் அடைந்தார்கள். உன்னல் புத்திரர்கள் எவ்விதம் பார்க்கப்பட்டார்களோ அவ்விதம் இஷ்டப்படி ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றனர். இபற்கையிலேயே புத்திசாலியான யுதிஷ்டிரன் எல்லாப் பிராதாக்களோடும் மனைவிகளோடும் நண்பர்களோடும் கூடினவனுக உன்னைப் பின்பற்றுகிறுன்.. இவனே அனுப்பு. இவன் சென்று தன்ராஜ்யத்தை ஆளட்டும். வனத்தில் வஸிக்கும் இவர்களுக்கு ஒருமாசத்திற்குமேல் சென்றுவிட்டது. அரசனே! இந்த (ராஜ்யமென்னும்) ஸ்தானமானது எப்பொழுதும் முயற்சியுடன் ரக்ஷிக்கப்படத்தக்கதன்ஞே? கௌரவஸ்ரேஷ்டனே! இந்த ராஜ்யமானது பல பகைவர்களால் விரும்பக் கூடியதன்ஞே?' என்று சொன்னர்.

அளவற்ற புத்தியுள்ளவரான வியாஸரால் இவ்விதம் சொல்லப்பட்டவனும் நன்குபேசும் திறமையுள்ளவனுமான கௌரவராஜன், பிறகு, யுதிஷ்டிரரை அழைத்துப் (பின்வரும்) வசனத்தைச் சொல்லலானன். 'பகைவரற்றவனே! உனக்கு க்ஷேமமுண்டாகுக. தம்பிகளுடன் என்னுடைய (வார்த்தையைக்) கேள். பூபாலனே! உன்னுடைய சித்தசுத்தியால் சோகமானது எங்களேப்பிடிக்கவில்லை. புத்திரனே! கற்றறிந்தவனே! நான் இஷ்டர்களிடத்தில் அன்புள்ளவனும் நாதனுமான உன்னுடன் சேர்ந்து முன் ஹஸ்திஞபுரத்திற் போல மகிழ்கிறேன். நான் உன்னிடமிருந்து புத்திரனுலாகிய பயனே அடைந்தேன். எனக்கு உன்னிடத்தில் பிரீதி அதிகமாக இருக்கிறது சிறந்தகைகளுள்ளவனே! எனக்குக் கோபமில்லை. நீ போகலாம். தாமதிக்காதே. இங்கு உன்னேக் கண்டபின் நான் தவத்தை விட்டுவிட்டேன். [1]தவம்செய்துகொண்டிருந்த சரீரமும் உன்னேக்கண்டபின் மறுபடியும் போஷிக்கப்பட்டது. புத்ர! இலைச் சருகுகளேப் புஜித்துக்கொண்டு என்னேப் போல் வ்ரதத்தை அனுஷ்டிப்பவர்களும் உன்னுடைய தாயார்களுமான இவ்விருவர்களும், (இனி)

1. வேறுபாடம்.

நெடுங்காலம் இருக்கமாட்டார்கள். உன்னுடைய சேர்க்கையாலும் வியாஸருடைய தவத்தின் வன்மையினாலும் லோகாந்தரம் சென்றிருந்த துரியோதனன் முதலானவர்கள் பார்க்கப்பட்டார்கள் குற்றமற்றவனே! நான் ஜீவித்திருப்பதன் பிரயோஜனம் சென்று நெடுங்காலமாயிற்று. நான் கடுந்தவம் புரியப்போகிறேன். நீ அனுமதிகொடுக்கவேண்டும். இப்பொழுது பிண்டமும் கீர்த்தியும் இந்தக் குலமும் உன்னிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. சிறந்தகைகளுள்ளவனே! நீ இன்றைக்காவது நாளைக்காவது போகவேண்டும். தாமதம் செய்யாதே. பரதஶ்ரேஷ்டனே! நீ மிக்க அதிகமான ராஜநீதியைக் கேட்டிருக்கிறாய். பிரபுவே! (உனக்குச்) சொல்லத்தகுந்ததை நான் காணவில்லை. இவ்வளவே போதுமானது' என்று சொன்னான்.

இவ்விதவசனத்தைச் சொன்ன அந்த அரசனை நோக்கி, யுதிஷ்டிரராஜர், 'தர்மங்களை அறிந்தவரே! குற்றமற்றவனான என்னை நீர் விடுவது தகுதியன்று. என்னுடைய பிராதாக்களெல்லாரும் வேலைக்காரர்களும் இஷ்டப்படி செல்லட்டும். நான் விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு உமக்கும் இரண்டு தாயார்களுக்கும் பணிவிடை செய்துகொண்டிருக்கிறேன்' என்று சொன்னார். பிறகு, காந்தாரியானவள், அவனை நோக்கி, 'புத்திரனே! இவ்விதம் சொல்லாதே. (என்னுடைய வார்த்தையையும்) கேள். குருகுலமும் என் மாமனாருடைய பிண்டமும் உன்னை அடுத்திருக்கின்றன. புத்திரனே! நீ போகலாம். (உன்னால்) நாங்கள் பூஜிக்கப்பட்டோம். இவ்வளவு போதுமானது. புத்திரனே! பிதாவான அரசர் சொல்லும் வார்த்தையை நீ செய்யவேண்டும்' என்று சொன்னாள். காந்தாரியினால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்த யுதிஷ்டிரர் குந்தியை நோக்கி ஸ்நேஹத்தாலுண்டான கண்ணீரால் நிறைந்த இரண்டு கண்களையும் துடைத்து வணக்கத்துடன் பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்.

'மன்னரும் புகழ்பெற்ற காந்தாரியும் என்னைப் போகச் சொல்லுகின்றனர். உன்னிடத்தில் கட்டப்பட்ட சித்தமுள்ள நான் துக்கத்துடன் எவ்விதம் செல்வேன்?' தர்மத்தை அனுஷ்டிப்பவளே! நான் உன்னுடைய தவத்திற்கு இடையூற்றைச்செய்யத் துணியவில்லை. தவத்தைக் காட்டிலும் மேலானது இல்லை. தவத்தால் பெரும்பயனை அடையலாம். அரசியே! எனக்குப் புத்தியானது முன்போல ராஜ்யத்தில் பற்றவில்லை. என்னுடைய மனமானது எல்லாவிதத்தாலும் தவத்திலேயே ஆசையுள்ளதாயிருக்கிறது. கல்யாணி! சூன்யமாக இருக்

கும் இந்த அகண்டமான பூமியும் எனக்குப் பிரியத்தைச் செய்யவில்லை. என்னுடைய பந்துக்கள் அழிந்துவிட்டார்கள் எனக்கு முன்போல வன்மையுமில்லை. பாஞ்சாலர்கள் கன்னிகையைமட்டும் மிச்சமாக வைத்துவிட்டு முழுதும் அழிந்துவிட்டனர். கல்யாணி! அவர்களுடைய குலத்தை விருத்திசெய்பவனை ஒருவனையும் நான் காணவில்லை. அவர்களெல்லாரும் துரோணரால் யுத்தகளத்தில் பஸ்மமாகச் செய்யப்பட்டார்கள். மிச்சமிருந்தவர்களும் முந்தி நம்மால் பார்க்கப்பட்ட சேதிதேசத்தார்களும் மாத்ஸ்யர்களும் அஶ்வத்தாமாவினால் இரவில் கொல்லப்பட்டார்கள். வாஸுதேவரை அடுத்திருந்தும் விருஷ்ணிகளுடைய படையும் சூன்யமாகிவிட்டது. அதைக்கண்டு நான் தர்மத்திற்காக இருக்கவிரும்புகிறேன்; பொருளுக்காக இருக்க விரும்பவில்லை. அம்மா! எங்களெல்லாரையும் சுபமான கண்ணால் பார். உன்னுடைய தரிசனமானது கிடைப்பதற்கு அரிதாகப்போகிறது. மன்னரோ, கடுந்தவம் புரியப்போகிறார்' என்று சொன்னார்.

இந்த வார்த்தையைக்கேட்டுச் சிறந்த கைகளுள்ளவனும் போர் வீரர்களுக்குத் தலைவனுமான ஸஹதேவன் கண்ணீரால் கலங்கின கண்களுள்ளவனாகி யுதிஷ்டிரரை நோக்கிப் பின்வரும் வசனத்தைச் சொல்லலானான். 'பரதஶ்ரேஷ்டரே! நான் தாயாரை விடுவதற்குத் துணியவில்லை. நீர் சீக்கிரமாகத் திரும்பிப்போம். நான் வனத்தில் தவம்புரியப் போகிறேன். மன்னருடைய திருவடிகளிலும் இந்த இரண்டு மாதாக்களுடைய திருவடிகளிலும் பணிவிடைசெய்வதில ஆசையுள்ள நான் இவ்விடத்திலேயே இந்தச் சரீரத்தைத் தவத்தால் உலர்த்தப்போகிறேன்' என்று சொன்னான். பிறகு, குந்தியானவள், நீண்ட கைகளுள்ள அந்த ஸஹதேவனைக் கட்டிக்கொண்டு, 'புத்திரனே! நீ இவ்விதம் சொல்லாதே. நான் சொல்லுகிறபடி செய்; (ஊருக்குப்) போ. புத்திரர்களே! உங்களுக்குச் சாஸ்திரங்கள் க்ஷேமத்தைச் செய்பவைகளாக இருக்கட்டும். நீங்கள் கவலையற்றவர்களாயிருங்கள். நீங்கள் இவ்விதம் செய்தால் எங்களுடைய தவத்திற்கு இடையூறு உண்டாகும். உன்னிடத்திலுள்ள ஸ்நேகமாகிற பாசத்தால் கட்டப்பட்டவளான நான் சிறந்த தவத்திலிருந்து விலகிவிடவேண்டியவளாவேன். புத்திர! ஆகையால், நீ போ. பிரபுவே! எங்களுக்கு ஆயுள் சிறிதே மிச்சமிருக்கிறது' என்று சொன்னாள்.

ராஜேந்திரரே! இவ்விதம் குந்தியினால் பலவிதவாக்கியங்களால் ஸஹதேவனுடைய மனமும் யுதிஷ்டிரராஜருடைய மனமும் விசேஷ

மாக நன்கு நிலைநிறுத்தப்பட்டன. தாயாராலும் அரசனாலும் நன்கு அனுமதி கொடுக்கப்பட்டவர்களான அந்தக் கௌரவஸ்ரேஷ்டர்கள் கௌரவஸ்ரேஷ்டனை திருதராஷ்டிரனை நமஸ்கரித்து விடைபெற்றுக் கொள்ளத் தொடங்கினார்கள். யுதிஷ்டிரர், 'அரசரே! நாங்கள் உம்மால் க்ஷேமாசீர்வாதத்தால் ஸந்தோஷிக்கும்படி செய்யப்பட்டவர்களும் அனுமதி கொடுக்கப்பட்டவர்களுமாக மனக்கலக்கமின்றி ராஜ்யத்தைக் குறித்துச் செல்லுகிறோம்' என்று சொன்னார். மஹாத்மாவான தர்ம ராஜரால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்த ராஜரிஷியானவன் யுதிஷ்டிரருக்கு மரியாதைசெய்து ஜயாசீர்வாதம் நன்கூறி அனுமதிகொடுத்தான். அரசன் பலசாலிகளுள் சிறந்தவனான பீமனையும் ஸமாதானம்செய்தான். மேதாவியும் பராக்ரமமுள்ளவனுமான அவனும் அவனுடைய (நன்மொழியை) நன்கு ஏற்றுக்கொண்டான். அந்தக் கௌரவன் அர்ஜுனனையும் பரதஸ்ரேஷ்டர்களான இரட்டையர்களையும் ஆலிங்கனம் செய்து (ஆசீர்வாதத்தால்) ஆனந்தப்படுத்தி அனுமதி கொடுத்தான். காந்தாரியினுடைய பாதங்களில் வந்தனம் செய்து அவளால் அனுமதி கொடுக்கப்பட்டவர்களும் தாயாரால் ஆலிங்கனம் செய்து (சிரத்தில்) மோக்கப்பட்டவர்களுமான அவர்களெல்லாரும் பால் குடிப்பதினின்று தடுக்கப்பட்ட கன்றுகள் (தாயைப்) பார்ப்பதுபோலத் திருதராஷ்டிரராஜனை அடிக்கடி பார்த்துக்கொண்டு பிரதக்ஷிணம் செய்தார்கள். திரௌபதி முதலான எல்லாக் கௌரவ ஸ்திரீகளும் மாமனாருக்கு முறைப்படி (வந்தனம் முதலான) உபசாரத்தைச்செய்து பிறகு இரண்டு மாமியார்களாலும் ஆலிங்கனம் செய்து கொண்டாடப்பட்டவர்களும் அனுமதி கொடுக்கப்பட்டவர்களும் செய்யவேண்டிய காரியத்தைப்பற்றி உபதேசிக்கப்பட்டவர்களுமாகிக் கணவர்களுடன் சென்றார்கள். பிறகு, 'பூட்டுங்கள்' என்று சொல்லும் ஸாரதிகளுடைய ஒலியும் சப்திக்கின்ற ஒட்டகங்களுடைய ஒலியும் கனைக்கின்ற குதிரைகளுடைய ஒலியும் நன்கு உண்டாயின. பிறகு, யுதிஷ்டிரராஜர் மனைவிகளுடனும் ஸைனிகர்களுடனும் பந்துக்களுடனும் மறுபடியும் ஹஸ்தினாபுரமென்னும் பட்டணத்திற்கு வந்தார்.

புத்ரதர்சனபர்வம் முற்றிற்று.

## முப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## நாரதாகமனபர்வம்.

—:0:—

(நாரதர் ஹஸ்திநபுரம் வந்து திருதராஷ்டிரன் முதலியோர் ஸ்வர்க்கம் சென்றதையும் திருதராஷ்டிரன்கட்டளைப்படி ஸஞ்சயன் இமயமலைக்குச் சென்றதையும் கூறியது.)

அரசரே! [1] அந்தப் பாண்டவர்கள் திரும்பிவந்த பிறகு, தேவ ரிஷியான நாரதர் நற்செயலாக யுதிஷ்டிரரிடம் வந்தார். சிறந்த கைக ளுள்ளவரும் பேசுகிறவர்களுள் சிறந்தவரும் கௌரவராஜருமான யுதிஷ் டிரர் அவரைப் பூஜித்து, (அவர்) உட்கார்ந்து களைப்பாறியபின், அவரை நோக்கி, 'பிராம்மணரே! பகவானுன நீர் இவ்விடம் வந்து எனக் குத் தரிசனம் கொடுத்து நீண்ட காலமாயிற்று. நீர் க்ஷேமமா? உமக்கு நல்வரவா? உம்மால் எந்தத் தேசங்கள் பார்க்கப்பட்டன? உமக்கு யான் என்ன செய்யவேண்டும்? அதைச் சொல்லும். நீர் பிராம்மணர்களுள் சிறந்தவர். எங்களுக்கும் பிரியமான அதிதியாயிருக்கிறீர்' என்று வின வினுர். நாரதர், 'ராஜனே! நான் உன்னைப் பார்த்து வெகுகாலமாயிற் றென்று தபோவனத்திலிருந்து வந்தேன். என்னுல் மற்றத் தீர்த்தங் களும் கங்கையும் பார்க்கப்பட்டன' என்று சொன்னுர். யுதிஷ்டிரர், 'பக வானே! கங்காதீரத்தில் வசிப்பவர்களான புருஷர்கள், 'மஹாத்மாவான திருதராஷ்டிரர் சிறந்த தவத்தைச் செய்கிருர்' என்று என்னிடத்தில் இப்பொழுது சொல்லுகின்றனர். அவரை அங்கு நீர் பார்த்ததுண்டா? கௌரவ ஶ்ரேஷ்டரான அவரும் காந்தாரியும் குந்தியும் ஸூதபுத்திர னுன ஸஞ்சயனும் க்ஷேமமாக இருக்கின்றனரா? என் தந்தையாரான அம்மன்னவர் இப்பொழுது எவ்விதம் இருக்கிருர்? உம்மால் (அந்த) அரசர் பார்க்கப்பட்டிருந்தால் (சொல்லும்.) கேட்க விரும்புகிறேன்?' என்று வினவினுர்.

நாரதர், 'மஹாராஜனே! நான் அந்தத்தபோவனத்தில் கண்டதும் கேட்டதுமான வரலாற்றை உள்ளபடி (சொல்லுகிறேன்.) நீ உறுதி யாக இருந்து கேள். குருநந்தன! வேந்தே! நீங்கள் வனவாஸத்திலி ருந்து திரும்பிய பின், புத்திசாலியான உன்னுடைய பிதாவானவன் காந் தாரி மருமகப்பெண்ணுன குந்தி ஸூதனுன ஸஞ்சயன் அக்னிஹோத்ர

1. 'பாண்டவர்கள் வந்து இரண்டு வருஷங்களான பிறகு' என்பது வேறு பாடம்.

ரம் புரோஹிதர் இவர்களுடன் குருக்ஷேத்திரத்திலிருந்து கங்காத்வாரம் சென்றான். உன்னுடைய தந்தையும் தவத்தைத் தனமாகக் கொண்டவனுமான அம்முனிவன் (அங்குக்) காற்றைப் புஜிப்பவனாகி வாயில் [1]அக்னியை வைத்துக்கொண்டு கடுந்தவம் புரிந்தான். சிறந்த தவமுள்ளவனான அந்த அரசன் (அந்த) வனத்தில் எல்லாமுனிவர்களாலும் பூஜிக்கப்பட்டுத் தோலும் எலும்பும் மட்டும் மிச்சமுள்ளவனாக ஆறு மாஸங்கள் வஸித்தான். பாரத! காந்தாரியானவள் ஜலத்தை ஆஹாரமாகக் கொண்டவளும் குந்தியானவள் மாஸோபவாஸம் இருப்பவளும் ஸஞ்சயன் ஆறுவது காலத்தில் புஜிப்பவனுமாக இருந்தனர். பிரபுவே! அப்பொழுது, அந்த வனத்தில் அரசன் பார்த்துக்கொண்டிருந்தாலும் பாராமலிருந்தாலும் புரோஹிதர்கள் விதிப்படி அக்னிகளில் ஹோமம் செய்தார்கள். பிறகு, அந்த அரசன் நிலையற்றவனாகி வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். ஒன்றுசேர்ந்திருக்கும் அவ்விரு தேவிகளும் ஸஞ்சயனும் அவரைப் பின்தொடர்ந்தனர். ஸமமான இடங்களிலும் மேடுபள்ளமான இடங்களிலும் ஸஞ்சயன் அரசனுக்கு (வழி சொல்லி) அழைத்துக்கொண்டுபோகிறவனாக இருந்தான். புகழப்பட்டவளான குந்தியானவள் காந்தாரிக்குக் கண்ணாக இருந்தாள். பிறகு, ஒரு ஸமயம் புத்திசாலியான அந்த ராஜச்ரேஷ்டன் கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டுக் கங்கைக்கரையிலுள்ள ஆச்ரமத்தை நோக்கிச் சென்றான். பிறகு, காற்றுடன் பெரியகாட்டுத்தீயானது உண்டாகி அந்த வனத்தை நாற்புறமும் பற்றிக்கொண்டு முழுதும் எரித்தது. நாற்புறங்களிலும் மான்களுடைய கூட்டங்களும் அரவங்களும் எரிக்கப்பட்டன. பன்றிகளுடைய கூட்டங்கள் தடாகங்களை அடைந்தன. (இவ்விதம்) அந்தவனம் எரிக்கப்பட்டுப் பெரிய துயரம் நேரிடவே, ஆகாரமின்மையால் வன்மையும் செய்கையும் குன்றின மன்னனும் மிக இளைத்திருந்த உன் இருதாயார்களும் விலகிச்செல்லத் திறமை அற்றவர்களாயினர். பிறகு, வெற்றி பெறுபவருள் சிறந்தவனான அந்த அரசன் அருகில் வரும் அக்னியைக் கண்டு, பிறகு, ஸூதனான ஸஞ்சயனை நோக்கி, 'ஸஞ்சய! எந்த விடத்தில் அக்னியானது உன்னை ஒருகாலும் எரிக்காதோ அவ்விடம் செல். நாங்கள் இங்கு அக்னியுடன் கூடிச் சிறந்த கதியை அடைகிறோம்' என்று சொன்னான். பேசுகிறவர்களுள் சிறந்தவனான ஸஞ்சயன் அவனை நோக்கி, 'ராஜேந்த்ர! வீணான அக்னியால் அநிஷ்டமான இந்த மரணமானது உமக்கு உண்டாகக் கூடாது.

1. 'வீடாய' என்பது வேறுபாடம், 'கல்லை' என்பது பழைய வுரை.

தீயினின்று விடுவிப்பதற்குரிய உபாயமும் எனக்குத் தெரியவில்லை. இப்பொழுது மேலே செய்யவேண்டியதை நீர் சொல்லவேண்டும்' என்று சொன்னான். ஸஞ்சயனால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த அரசன் மறுபடியும் (ஸஞ்சயனை நோக்கி), 'ஸஞ்சய! வீட்டிலிருந்து தாமாக வெளிப்புறப்பட்ட எங்களுக்கு இந்த மரணம் அனிஷ்டமன்று. ஜலமும் அக்னியும் வாயுவும் உண்ணாமையும் தபஸ்விகளுக்குப் புகழப்படுகின்றன. நீ போ; தாமதிக்காதே' என்று சொன்னான்.

அப்பொழுது, மன்னன், ஸஞ்சயனிடம் இவ்விதம் சொல்லிவிட்டு, மனத்தை ஒருவழிப்படுத்திக்கொண்டு காந்தாரியுடனும் குந்தியுடனும் கிழக்கு முகமாக உட்கார்ந்தான். பிறகு, மேதாவியான ஸஞ்சயன் அவ்விதமிருக்கும் அவனைக்கண்டு பிரதக்ஷிணம் செய்து அவனை நோக்கி, 'பிரபுவே! ஆத்மாவை யோகத்தைச் செய்யும்படி செய்யும்' என்று சொன்னான். ரிஷியின் புத்திரனும் வித்வானுமான அந்த அரசன் அவனுடைய வசனப்படி அப்பொழுது இந்திரிய ஸமூகத்தைத் தடுத்துக் கட்டை போலிருந்தான். பெரிய பாக்கியம்பெற்ற காந்தாரியும் உன்னுடைய தாயான குந்தியும் உன்னுடைய பிதாவான அந்த அரசனும் காட்டுத்தீயுடன் சேர்ந்துவிட்டார்கள். மஹாப்பிராஜ்ஞனான ஸஞ்சயனோ அந்தக் காட்டுத்தீயினின்று விடப்பட்டுக் கங்கையின் கரையில் தாபஸர்களால் சூழப்பட்டிருக்க நான் பார்த்தேன். தேஜஸ்வியும் புத்திசாலியுமான அந்த ஸஞ்சயன் அந்தத் தாபஸர்களிடம் இதை முழுதும் தெரிவித்து அனுமதிபெற்றுக்கொண்டு இமயமலையை நோக்கிச் சென்றான். வேந்தே! உறுதியான சித்தமுள்ள அந்தக் கௌரவ ராஜனும் உன்னுடைய தாயார்களான காந்தாரியும் குந்தியும் இவ்விதம் மரணமடைந்தனர். பாரத! பிறகு, அங்கே தொடர்ந்து சென்ற என்னால் அரசனுடைய சரீரமும் அந்த இரண்டு தேவிமார்களுடைய சரீரங்களும் தற்செயலாகப் பார்க்கப்பட்டன. பிறகு, அந்தத் தபோதனர்கள் அந்தத் தபோவனத்திற்கு வந்து அப்பொழுது அரசனுடைய நிஷ்டையையும் கதிகளையும் கேட்டுத் துயரப்படவில்லை. புருஷர்களுள் மிகச் சிறந்தவனே! பாண்டவ! அரசனும் அந்த இருதேவிகளும் எரிக்கப்பட்டனரென்னும் இதை முழுதும் நான் அவ்விடத்தில் கேட்டேன். ராஜஶ்ரேஷ்டனே! துயரப்படவேண்டாம். மன்னவனும் காந்தாரியும் உன் அன்னையும் அக்னியின் சேர்க்கையைப் பெற்று ஸ்வர்க்கத்திலிருக்கின்றனர்' என்று சொன்னார்.

திருதராஷ்டிரனுடைய இந்த மரணத்தைக் கேட்டு, மஹாத்மாக்

களான எல்லாப் பாண்டவர்களுக்கும் பெரியசோகமுண்டாயிற்று. மஹாராஜரே! அப்பொழுது அரசனுடைய கதியைக்கேட்டு அந்தப்புரஸ்திரீகளும் பட்டணத்திலிருப்பவர்களும் தீனமான ஸ்வரத்தை உரக்க வெளியிட்டனர். யுதிஷ்டிரராஜர் தாயைநினைத்து மிக்கதுயரமடைந்து கைகளை உயரத்தூக்கிக்கொண்டு, 'ஓ! ஓ! கஷ்டம்!' என்று சொல்லி அலறிஅழுதார். பீமஸேனன் முதலான அந்தப் பிராதாக்களெல்லாரும் அப்பொழுது துக்கத்தால்வாடிக் குந்தியை வர்ணித்துக்கொண்டு அழுதார்கள். மஹாராஜரே! குந்தி அவ்விதநிலைமையை அடைந்ததைக்கேட்டு அப்பொழுது அந்தப்புரங்களிலும் மிகப்பெரிய அழுகையொலி உண்டாயிற்று. வயது சென்றவனும் புத்திரர்கள் கொல்லப்பட்டவனும் அவ்விதம் எரிக்கப்பட்டவனுமான அவ்வரசனையும் துயரப்படத்தக்கவளான காந்தாரியையும்பற்றி அவர்களெல்லாரும் துயரப்பட்டார்கள். பாரதரே! ஒரு முகூர்த்தத்திற்குள் அந்தச் சப்தமானது ஓய்ந்தவுடன், தர்மராஜர் தைரியத்தினால் கண்ணீரை அடக்கிக்கொண்டு பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்.

### நாற்பதாவது அத்யாயம்.

### நாரதாகமனபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(யுதிஷ்டிரர் முதலியவர்கள் திருதராஷ்டிரன் முதலியோரின் மரணத்தைக் கேட்டுப் புலம்பி அவர்கள் காட்டுத் தீயாலெரிக்கப் பட்டதற்கு வருந்தியது.)

யுதிஷ்டிரர், 'மஹாத்மாவும் கடுந்தவம் புரிகின்றவருமான அவருக்குப் பந்துக்களான நாங்கள் இருக்கும்போது நாதனற்றவனுக்குப் போல அவ்விதம் மரணம் நேர்ந்தது. பிராம்மணரே! விசித்ரவீர்யருடைய புத்திரரான இவர் இவ்விதம் காட்டுத் தீயினால் எரிக்கப்பட்டாரானபடியால் மனிதர்களுடைய கதியானது அறியஅரிதென்பது என்னுடைய எண்ணம். எவருக்கு ஸ்ரீமான்களும் கைவண்மையால் விளங்குகின்றவர்களுமான நூறுபுத்திரர்களிருந்தார்களோ பதினாயிரம் யானை பலமுள்ளவரான அந்த அரசர் காட்டுத் தீயினால் எரிக்கப்பட்டார். எவரை முந்தி உத்தம ஸ்திரீகள் விசிறிகளால் விசிறினார்களோ காட்டுத்தீயினால் கவரப்பட்ட அவரை (இப்பொழுது) கழுகுகள் விசிறின. (முன்)

32873



சயனம் செய்துகொண்டிருக்கும் எவரை ஸூதமாகதர்களுடைய கூட டங்கள் எழுப்பினவோ, அந்த அரசர் (இப்பொழுது) கழுகுகளாலும் காக்கைகளாலும் இழுக்கப்பட்டுப் பூமியில் படுத்திருக்கிறார். புத்திரர்களை இழந்தவளும் புகழ்பெற்றவளும் பர்த்தாவினுடைய விரதத்தை அனுஷ் டித்துப் பர்த்தாவினுடைய உலகத்தைக் கூடஅடைந்தவளுமான காந் தாரியைப்பற்றி நான் துயரப்படவில்லை. நிறைந்த செல்வமுள்ளதும் மிகப்பெரிதும் பிரகாசிக்கின்றதுமான புத்திரர்களுடைய ஐஸ்வரி யத்தை விட்டுவிட்டு வனவாஸத்தில் பிரியப்பட்டவளான குந்தியைப் பற்றியே துயரப்படுகிறேன். மரித்தவர்கள் (போன்ற) நாங்கள் ஜீவித்தி ருக்கிறோம். ஆகையால், எங்களுடைய இந்த ராஜ்யம் நிந்திக்கத்தக்கது; பலம் நிந்திக்கத்தக்கது; பராக்ரமம் நிந்திக்கத்தக்கது; க்ஷத்தி ரிய தர்மமும் நிந்திக்கத்தக்கது. பிராம்மணஸ்ரேஷ்டர்களுள் சிறந்த வரே! அந்தக் குந்தியானவள் ராஜ்யத்தை விட்டுவிட்டு வனவா ஸத்தில் பிரியப்பட்டாளாகையால், உலகத்தின் கதியானது மிக்க ஸூக்ஷ்மமானது. யுதிஷ்டிரனுக்கும் பீமனுக்கும் விஜயனுக்கும் தாயானவள் அநாதைபோல் எவ்வாறு எரிக்கப்பட்டாளென்று ஆலோசித்து மதிமயங்குகிறேன். 'ஸவ்யஸாசியினால் காண்டவ வனத் தில் அக்னியானவன் வீணாகத் திருப்தியடையும்படி செய்யப்பட் டான். அவன் உபகாரத்தை அறியாமல் நன்றி கொன்றவனானன்' என் பது என்னுடைய எண்ணம். எவன் (முந்தி) பிராம்மணவேஷம் பூண்டு பிக்ஷையை யாசித்துக்கொண்டு வந்தானோ பகவானான அந்த அக்னி (இப்பொழுது) அர்ஜுனனுடைய தாயையே கொன்றான். ஆகையால், அக்னியையும் அர்ஜுனனுடைய பிரவஸித்திபெற்ற ஸத்யப்பிரதிஜ்ஞை யையும் நிந்திக்கவேண்டும். பகவானே! ராஜாவுக்கு வீணான அக்னி யோடு சேர்க்கை நேர்ந்ததென்னும் இது வேறு பெரிய கஷ்டமாக எனக் குத் தோன்றுகிறது. இந்தப் பூமியை ஆண்டுவிட்டு அவ்வாறு தவம் புரிந்தவரும் ராஜரிஷியுமான அந்தக் கௌரவருக்கு இவ்விதமரணம் எவ் வாறு நேர்ந்தது? அவருக்கு மந்திரத்தால் பரிசுத்தமான அக்னிகள் இருக் கும்பொழுது, என்னுடைய பிதாவான அவர் மஹாவனத்தில் வீணான அக்னியுடன் சேர்ந்து முடிவை அடைந்தார். இளைத்தவளும் நரம்புகள் நிறைந்தவளுமான என் தாயான குந்தியானவள் பெரிய பயம் நேர்ந்த வுடன், நடுக்கமுற்று, 'அப்பனே! தர்மராஜனே!' என்று என்னை அழைப்பவளும், 'பீம! பயத்தினின்று காப்பாற்று' என்று அலறுகின்ற வளுமாயிருந்துகொண்டு காட்டுத்தீயினால் நாற்புறங்களிலும் பற்றப்பட்

டிருப்பானென்று நினைக்கிறேன். அவனுக்கு (எல்லா)ப் புத்திரர்களையும் காட்டிலும் ஸஹதேவனிடத்தில் பிரியம் அதிகம். வீரனும் மாத்திரியின் புத்திரனுமான அவனும் இவளைவிட்டுப் பிரிந்ததேயில்லை' என்று சொன்னார். அதைக் கேட்டுப் பஞ்சபாண்டவர்களனைவரும் யுகாந்தத்தில் பிராணிகள்போலத் துக்கத்தால் பீடிக்கப்பட்டு ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு அழுதார்கள். அழுகின்றவர்களான அந்தப் புருஷஸ்ரேஷ்டர்களுடைய அழுகையொலியானது அரண்மனையினுடைய விஸ்தாரத்தால் தடுக்கப்பட்டிருக்கும் ஆகாயத்தையும் பூமியையும் எதிரொலியிடும்படி செய்தது.

## நாற்பத்தோராவது அத்யாயம்.

## நாரதாகமனபர்வம். (தொடர்ச்சி.)

——:o:——

**(நாரதர் திருதராஷ்டிராதியரை எரித்தது அவனுடைய மந்திராக்னிதானென்றதும், யுதிஷ்டிரர் யுயுத்ஸுவைக்கொண்டு காந்தாரி திருதராஷ்டிரர்களுக்கும் தாமே குந்திக்கும் தர்ப்பணம் ச்ராத்தமுதலியன செய்ததும், பிறகு ஸுகமாக அரசாட்சி செய்ததும்.)**

நாரதர், 'ராஜனே! விசித்ரவீர்யனுடைய புத்திரனை (திருதராஷ்டிர) ராஜன் வீணான அக்னியினால் எரிக்கப்படவில்லை. அவ்விதம் நான் அவ்விடத்தில் கேள்வியுற்றேன். (ஆகையால்,) அவனைப்பற்றி நீ துயரப்படவேண்டாம். காற்றைப் புஜிப்பவனும் சிறந்த புத்தியுள்ளவனுமான அவன் வனத்தில் பிரவேசிக்கும்போது இஷ்டியைச் செய்வித்து அக்னிகளை உண்டுபண்ணினானென்று நமக்குக் கேள்வி. பரதஸ்ரேஷ்டனே! பிறகு, அவனுடைய புரோஹிதர்கள் அந்த அக்னிகளை நிர்ஜனமான வனத்தில் போட்டுவிட்டு இஷ்டப்படி சென்றார்கள். அப்பொழுது, அந்த அக்னியானது அந்தவனத்தில் விருத்தியடைந்ததாம். அதனால், அந்த வனமானது நாற்புறத்திலும் பற்றப்பட்டதென்று அந்தத் தாபஸர்கள் சொன்னார்கள். பரதருள் சிறந்தவனே! நான் உனக்குக் கூறியவண்ணம் அந்த அரசன் கங்கைக் கரையில் தன்னுடையதாகவே இருக்கும் அந்த அக்னியோடு கூடினவனானான். குற்றமற்றவனே! யுதிஷ்டிர! கங்கைக் கரையில் என்னால் பார்க்கப்பட்டவர்களான அந்த முனிவர்கள் இவ்விதமே என்னிடம் சொன்னார்கள். பூபதியே! இவ்விதம் (அந்த) அரசன் தன்னு

டையதான அக்னியோடு சேர்க்கைபெற்று உத்தம கதியை அடைந்தான். நீ மன்னனைப்பற்றித் துயரப்படவேண்டாம். ராஜனே! உன்னுடையதாயும், குருவுக்குப் பணிவிடை செய்ததினாலேயே மிகச் சிறந்த ஸித்தியை அடைந்தாள். இதுவிஷயத்தில் எனக்கு ஸந்தேகமில்லை. ராஜேந்திர! நீ எல்லாப் பிரதார்க்களுடனும் அவர்களுக்கு உதகக் கிரியையைச் செய்யவேண்டும். இப்பொழுது இது செய்யப்படட்டும்' என்று கூறினார்.

பிறகு, பூபாலரும் பாண்டவர்களுள தலைமை பெற்றவரும் புருஷ ப்ரேஷ்டருமான அந்த யுதிஷ்டிரர் ஸஹோதரர்களுடனும் மனைவியுடனும் வெளிப்புறப்பட்டார். பட்டணத்தார்களும் தேசத்தார்களுமான ஜனங்களும் ராஜபக்தியை முன்னிட்டு ஒற்றைவஸ்திரத்தை உடுத்து அவரைச் சூழ்ந்துகொண்டு கங்கைக்குச் சென்றனர். பிறகு, அந்தக் கௌரவ ப்ரேஷ்டர்களெல்லாரும் ஜலத்தில் ஸ்நானம்செய்து யுயுத்ஸுவை முன்னிட்டுக்கொண்டு மஹாத்மாவான திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் குந்திக்கும் பெயரையும் கோத்திரத்தையும் சொல்லி விதிப்படி உதகதானம் செய்தார்கள். அப்பொழுது, அவர்கள் சுத்தியை உண்டுபண்ணிக்கொள்ள வேண்டியதற்காகப் பட்டணத்திற்கு வெளியில் வாஸம் செய்தார்கள். அந்த யுதிஷ்டிரர், விதியை அறிந்தவர்களும் ஆப்தர்களாகக் காரியம் செய்பவர்களுமான மனிதர்களைக் கௌரவ ப்ரேஷ்டனை அரசன் எரிக்கப்பட்ட இடமான கங்காத்வாரத்திற்கு அனுப்பினர். யுதிஷ்டிரராஜர் அப்பொழுது அந்தக் கங்காத்வாரத்திலேயே அவர்களுக்குத் தக்க கிருத்யங்களைச் செய்ய வேண்டுமென்று அந்த மனிதர்களிடம் வேண்டியவற்றைக் கொடுத்து உத்தரவு செய்தார். அந்த யுதிஷ்டிரராஜர் பன்னிரண்டாவது தினத்தில் சுத்தியைச் செய்துகொண்டு அவர்களுக்கு விதிப்படி தக்ஷிணையுள்ள ப்ராத்தங்களைச் செய்தார். அந்த அரசர், திருதராஷ்டிரரை உத்தேசித்து ஸுவர்ணத்தையும் வெள்ளியையும் பசுக்களையும் மிக்க அதிகமான விலைபெற்ற படுக்கைகளையும் தானம் செய்தார். தேஜஸ்வியான அரசர், காந்தாரியினுடைய பெயரையும் குந்தியினுடைய பெயரையும் தனித்தனியாகச் சொல்லி மிகச் சிறந்த தானத்தைக் கொடுத்தார். படுக்கை போஜனம் வாகனம் மணிகள் ரத்தினங்கள் தனம் இவற்றுள் எதை எந்தப் பிராம்மணன் எவ்வளவு விரும்பினானோ அவன் அதை அவ்வளவையும் அடைந்தான். பூபதியான அரசர், அந்த இரண்டுதாயார்களையும் உத்தேசித்து வாகனத்தையும் போர்வையையும் போகங்களையும் நன்கு அலங்கரிக்கப்பட்ட

வேலைக்காரிகளையும் கொடுத்தார். பிறகு, புத்திசாலியான அந்தப் பூபாலர் மிகுதியான ப்ராத்தங்களைக் கொடுத்துவிட்டு மறுபடியும் ஹஸ்திநபுரம் சென்றார். அரசருடைய உத்தரவின்மேல் சென்றிருந்த புருஷர்களும் அவர்களுடைய எலும்புகளைப் பொறுக்கிக்கொண்டு அவ்விடமிருந்து திரும்பிவந்தார்கள். அவர்கள் அவர்களுடைய எலும்புகளைப் பலவிதமான மாலைகளாலும் சந்தனங்களாலும் விதிப்படி பூஜித்து (கங்கையில்) சேர்த்துவிட்டு, அதை அரசரிடம் சொன்னார்கள். நாரதமஹாரிஷியும் தர்மாத்மாவான யுதிஷ்டிரராஜரைத் தேற்றிவிட்டு ஸந்தோஷத்துடன் இஷ்டப்படி சென்றார். யுத்தத்தில் புத்திரர்கள் கொல்லப்பட்டவனும் ஞாதிகளுக்கும் ஸம்பந்திகளுக்கும் மித்திரர்களுக்கும் பிராதாக்களுக்கும் பந்துக்களுக்குமாக எப்பொழுதும் தானங்களைக் கொடுக்கின்றவனும் சிறந்த புத்தியுள்ளவனுமான திருதராஷ்டிரனுக்கு இவ்விதம் நகரத்தில் பதினைந்து வருஷங்களும் வனவாஸத்தில் மூன்று வருஷங்களும் சென்றன. ஞாதிகளையும் பந்துக்களையும் இழந்தவரான யுதிஷ்டிரராஜரோ அப்பொழுது மனத்தில் அதிக ஸந்தோஷமில்லாமல் அந்த ராஜ்யத்தைப் பரிபாலித்தார்'' என்று கூறினர்.

நாரதாகமன பர்வம் முற்றிற்று.

ஆஶ்ரமவாஸிகபர்வம் முற்றிற்று

ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயநாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்

## மௌஸலபர்வம்

### முதலாவது அத்யாயம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் ।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ॥

(யுதிஷ்டிரர் உத்பாதங்களைக் கண்டதும், பிறகு பலராமகிருஷ்ணர்களின் முக்தியையும் யாதவர்களைவரும் உலக்கையாலடித்துக்கொண்டு மிச்சமின்றி மாண்டதையும் கேட்டதும்.)

வைசம்பாயனர், "பிறகு, கௌரவநந்தனரான யுதிஷ்டிரர் தாம் பட்டத்துக்குவந்த முப்பத்தாறுவது வருஷம் வந்தவுடன், விபரீதமான நிமித்தங்களைக் கண்டார். இடியோடுகூடினவைகளும் கடுமையாயிருக்கின்றவைகளும் பருக்கைக்கற்களைப் பொழிகின்றவைகளுமான காற்றுக்கள் வீசின. பறவைகள் அபஸவ்யமான மண்டலங்களைச் செய்தன. மஹாநதிகள் மேற்கு முகமாகச் சென்றன. திசைகள் பனியினால் மூடப்பட்டன. கொள்ளிகள் தழலைப்பொழிந்துகொண்டு ஆகாயத்தினின்று பூமியில் விழுந்தன. ராஜரே! ஸூரியன் தினந்தோறும் உதய காலத்தில் புழுதியினால் நன்குமறைக்கப்பட்ட மண்டலமுள்ளவனும் கிரணமற்றவனும் தலையற்ற உடல்களால் அலங்கரிக்கப்பட்டவனுமாக இருந்தான். சந்திர ஸூரியர்களுக்குப் பயங்கரமானவைகளும் மூன்று நிறங்களுள்ளவைகளும் கறுத்த க்ரூரமானமுனையுள்ளவைகளும் பஸ்மம்போலவும் சிவப்பாகவும் இருக்கும் ஒளியுள்ளவைகளுமான பரி

---

1. இதன் உரைவிசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கம் குறிப்பில் காண்க

வேஷங்களும் காணப்பட்டன. சிறந்தபாக்யமுள்ளவரே! குற்றமற்றவரே! ஜகந்நாதரே! எந்த வாஸுதேவருடைய அனுக்ரகத்தினால் இந்தத் தர்மமானது கிருதயுகத்திலிருந்ததுபோலக் கலியுகத்திலுமிருந்ததோ, பாண்டவர்களும் புகழ்பெற்றனரோ, அவர் பரமபதம் ஏறவிரும்பினபொழுது, பயத்தைத்தெரிவிக்கின்ற இவைகளும் மற்றும் அனேகங்களுமான உத்பாதங்கள் காணப்பட்டன. (துர்நிமித்தத்தைக்கண்டு) பயந்தவரும் கௌரவராஜருமான அந்த யுதிஷ்டிரர் சிலகாலம் சென்ற பிறகு, விருஷ்ணிகளுடைய கூட்டமானது உலக்கையால் கொல்லப்பட்டதென்றும் வாஸுதேவரும் பலராமரும்மட்டும் விடப்பட்டார்களென்றும் கேள்விப்பட்டுப் பிராதாக்களை அழைத்து, 'என்ன செய்வோம்?' என்று சொன்னார். விருஷ்ணிகள் பிராம்மணசாபத்தால் தூண்டப்பட்டு ஒருவரையொருவர் எதிர்த்து மடிந்தார்களென்று கேள்வியுற்று அந்தப் பாண்டவர்கள் மிக்கமனவருத்தம் அடைந்தனர். (பாண்டவ) வீரர்கள் சார்ங்கமென்னும் வில்லையுடையவரான கிருஷ்ணபகவான் மரிப்பதென்பது 'ஸமுத்ரம் வற்றியதுஎன்பது போன்றது' என்று அவருடைய மரணத்தை நம்பவில்லை. அந்தப் பாண்டவர்கள், (விருஷ்ணிகள்) உலக்கையினால் கொல்லப்பட்டனரென்பதை உள்ளத்தில் நினைத்துத் துக்கமும் சோகமுமுள்ளவர்களும் வாட்டமுற்றவர்களும் மனத்தில் (வேறு) பிரவிருத்தியற்றவர்களுமாக உட்கார்ந்திருந்தனர்'' என்று கூறினார்.

## இரண்டாவது அத்யாயம்.

———:o:———

(விஸ்வாமித்ரர் முதலியோர் துவாரகைக்கு வந்ததும், யாதவர் சிலர் கர்ப்பிணி வேஷம் பூண்ட ஸாம்பனுக்கு என்ன பிறக்குமென்று அம்முனிவரைக் கேட்டதும், அவர்கள் யதுகுலத்தை அழிக்கும் இருப்புலக்கை பிறக்குமென்று சபித்ததும், உலக்கை பிறந்ததும், யாதவர்கள் அதனைப் பொடியாக்கிக் கடலில் கொட்டியதும்.)

ஜனமேஜயர், "பகவானே! வாஸுதேவர் பார்த்துக்கொண்டிருக்கும்போது, அந்தகர்களும் விருஷ்ணிகளும் மஹாரதர்களான போஜர்களும் எவ்விதம் அழிந்தனர்?'' என்று வினவினார். வைசம்பாயனர், "முப்பத்தாறாவது வருஷம் வந்தவுடன், விருஷ்ணிகள் பெரிய குற்றத்தைச் செய்தனர். (அதனால்) அவர்கள் காலத்தால் தூண்டப்பட்டு

ஒருவரை யொருவர் உலக்கைத் துணுக்குக்களால் அடித்துக்கொண்டனர்'' என்று சொன்னார்.

ஜனமேஜயர், "பிராம்மணச்ரேஷ்டரே! வீரர்களான அந்த விருஷ்ணிகளும் அந்தகர்களும் போஜர்களும் எவரால் சபிக்கப்பட்டு நாசத்தை அடைந்தார்கள்? நீர் இதனை எனக்கு விரிவாகச் சொல்லும்'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார். "ஸாரணனை முதன்மையாகக்கொண்ட வீரர்கள், விச்வாமித்திரரும் கண்வரும் தபோதனரான நாரதரும் துவாரகைக்கு வந்திருப்பதைக் கண்டு, அவர்கள் தெய்வத்தின் ஆஜ்ஞையினால் பிடிக்கப்பட்டவர்களாகி ஸாம்பனை ஸ்திரீயைப்போல் அலங்கரித்து முன்னிட்டுக்கொண்டு அம்முனிவர்களிடம் சென்று, 'ரிஷிகளே! இவள் புத்திரனை விரும்புகின்றவனும் அளவற்றதேஜஸுள்ளவனுமான பப்ருவினுடைய மனைவி. இவள் எதைப் பெறுவாள்? நன்கு பாருங்கள்' என்றுசொன்னார்கள். அரசரே! நராதிபரே! இவ்விதம்சொல்லப்பட்டவர்களும் விபரீதமான வார்த்தையினால் அவமதிக்கப்பட்டவர்களுமான அந்த முனிவர்கள் அவர்களுக்குக் கூறின மறுமொழியைக் கேளும். ராஜரே! பிறகு, துராத்மாக்களான அவர்களால் அவமதிக்கப்பட்ட முனிவர்கள் கோபத்தால் கண்கள் சிவந்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு (அவர்களை நோக்கி), 'வாஸுதேவருடையபுத்திரனான இந்தஸாம்பன் விருஷ்ணிகளும் அந்தகர்களும் அழிவதின்பொருட்டுக் கோரமான இருப்புலக்கையைப் பிறப்பிப்பான்; அதனால் மிக்க கெட்ட நடையுள்ளவர்களும் கொடியவர்களுமான நீங்கள் சினங்கொண்டு, பலராமரையும் கிருஷ்ணரையும் தவிரக் குலத்தை முழுதும் அழிக்கப்போகிறீர்கள். ஸ்ரீமானும் கலப்பையை ஆயுதமாகக் கொண்டவருமான பலராமர் சரீரத்தை விட்டுவிட்டு ஸமுத்திரத்தில் பிரவேசிக்கப்போகிறார். ஜரன் என்னும் செம்படவன், பூமியில் சயனம் செய்துகொண்டிருக்கும் கிருஷ்ணரைப் பிளக்கப் போகிறான்' என்று சொன்னார்கள். அந்த முனிவர்கள் அவ்வாறு சொல்லிவிட்டு, பிறகு, [1]வந்தவழியே சென்றனர்.* பிறகு, முடிவை அறிந்தவரும் சிறந்த புத்தியுள்ளவருமான வாஸுதேவர் அப்பொழுது இதைச்செவியுற்று அந்த விருஷ்ணிகளை நோக்கி, 'அக்குலத்திற்கு அவ்விதம் வரவேண்டியதே' என்று சொன்னார். அப்பொழுது, அவர் இவ்விதம்சொல்லிவிட்டுப் பட்டணம் சென்றார். ஜகத்திற்குப்

1. 'கேசவரை அடைந்தார்கள்' என்பது வேறுபாடம். அதற்கு, 'நாங்கள் கொடுத்த சாபத்தை நீர் பொறுத்துக்கொள்ளவேண்டுமென்று தியானம்செய்தார்கள்' என்பது பழைய உரை.

பிரபுவான அவர் ஸித்தாந்தத்தை வேறுவிதமாகச் செய்ய விரும்பவில்லை. பிறகு, மறுநாள், ஸாம்பன் விருஷ்ணிகுலத்திலும் அந்தககுலத்திலுமுள்ள ஆண்மக்களைப் பஸ்மமாகச் செய்வதும் விருஷ்ணிகளையும் அந்தகர்களையும் கொல்வதற்காக (வந்த) யமதூதன் போன்றதும் பெரிதும் சாபத்தால் உண்டானதும் கோரமுமான உலக்கையைப் பெற்றான். அதை அரசனிடம் தெரிவித்தார்கள். ராஜரே! அரசன் மிக்க மனவருத்தமுற்று அதைச் சிறியபொடியாகச் செய்வித்தான். வேலைக்காரர்கள் அந்தப் பொடியை ஸமுத்திரத்திலும் போட்டுவிட்டார்கள். அவர்கள் ஆஹுகன் கிருஷ்ணர் பலராமர் மஹாத்மாவான பப்ரு இவர்களுடைய உத்தரவின்மேல், 'இது முதல் இந்நகரில் விருஷ்ணிகுலத்தினரும் அந்தக குலத்தினரும் நகரவாசிகளுமான அனைவரும் கள்ளையும் சாராயத்தையும் (பானம்) செய்யக்கூடாது. எந்த மனிதனாவது பானம் செய்ததாக எங்களுக்குத் தெரிந்தால், அவன், தான் செய்ததற்காகத் தன்பந்துக்களுடன் உயிரோடு சூலத்தில் ஏறவேண்டும்' என்று பட்டணத்தில் பறையறையச் செய்தனர். பிறகு, ஜனங்களெல்லாரும் அப்பொழுது மஹாத்மாவான அந்த மன்னருடைய உத்தரவை அறிந்து ராஜ பயத்தினால் நியமத்தைச் செய்துகொண்டனர்.

## மூன்றாவது அத்யாயம்.

—:o:—

(வாஸுதேவர் துவாரகையில் பல உற்பாதங்களைக் கண்டு காந்தாரியின் சாபத்தை நினைந்து அதனை உண்மையாக்க விரும்பி யாதவர்களைத் தீர்த்த யாத்திரை செய்யக் கட்டளையிட்டது.)

இவ்விதம், விருஷ்ணிகளும் அந்தகர்களும் அடங்கியிருக்கும்போது காலமானது (கோட்டான் முதலான வடிவத்துடன்) எல்லாருடைய வீடுகளிலும் தினந்தோறும் ஸஞ்சரித்தது. பயங்கரனும் விசாலமாக இருப்பவனும் [1]முண்டனும் கருமைநிறமும் பொன்னிறமுமுள்ளவனுமான புருஷன் விருஷ்ணிகளுடைய வீடுகளில் பிரவேசித்து மீண்டும் ஓரிடத்தில் மறைந்தான். அப்பொழுது, சிறந்த வில்லாளிகள் லக்ஷக் கணக்கான கணைகளால் அவனை அடித்தார்கள். எல்லாப் பிராணிகளையும் கொல்பவனான அவனை அடிக்கக் கூடவில்லை. விருஷ்ணிகள் அந்தகர்கள் இவர்களுடைய நாசத்தின்பொருட்டுத் தினந்தோறும் மயிரைச்

---

1. கேசமற்றவன்.

சிலிர்க்கச் செய்கின்றவைகளும் பயங்கரமானவைகளுமான பல பெருங் காற்றுக்கள் உண்டாயின. தெருவீதிகள் அதிகமான எலிகளுள்ளனவும் உடைக்கப்பட்ட மண்பாத்திரங்களுள்ளனவுமாக இருந்தன. இரவில், தூங்குகின்றவர்களுடைய கூந்தல்களையும் நகங்களையும் எலிகள் தின்றன. விருஷ்ணிகளுடைய வீடுகளில் நாகணவாய்ப் பட்சிகள் 'சீசீ, கூசீ' என்று சப்தித்தன. அந்தச் சப்தமும் இரவும் பகலும் ஓயவில்லை. பாரதரே! ஸாரஸபக்ஷிகள் கோட்டான்கள்போலச் சப்தித்தன. ஆடுகள் நரிகள்போல ஊளையிட்டன. அப்பொழுது, வெண்மை நிறமுள்ளவைகளும் சிவந்த பாதங்களுள்ளவைகளுமான கம்போதங்களென்னும் பறவைகள் காலத்தால் தூண்டப்பட்டு விருஷ்ணிகளின் வீடுகளிலும் அந்தகர்களின் வீடுகளிலும் ஸஞ்சரித்தன. பசுக்களிடத்திலும் ஒட்டகங்களிடத்திலும் [1]அச்வதரிகளிடத்திலும் கழுதைகளும், நாய்களிடத்தில் பூனைகளும், கீரிகளிடத்தில் எலிகளும் பிறந்தன. அப்பொழுது, விருஷ்ணிகள் வெட்கமின்றிப் பாபகாரியங்களைச் செய்தார்கள். அவ்வாறே, பிராம்மணர்களையும் பித்ருக்களையும் தேவர்களையும் [2]துன்பப்படுத்தினார்கள்; ஆசாரியர்களையும் அவமதித்தார்கள். [3]பலராமரையும் கிருஷ்ணரையுமோ அவமதிக்கவில்லை. பத்னிகள் பர்த்தாக்களை வஞ்சித்தார்கள். அவ்வாறே, பர்த்தாக்கள் பத்னிகளை வஞ்சித்தார்கள். ஜ்வலிக்கும்படி செய்யப்பட்ட அக்னியானது நீலமாகவும் சிவப்பாகவும் மஞ்சள் வர்ணமாகவுமிருக்கிற ஜ்வாலைகளைத் தனித்தனியாக உண்டுபண்ணிக்கொண்டு இடமாகச் சுற்றிற்று. அந்தப்பட்டணத்தில் தினந்தோறும் ஸூரியன் உதயகாலத்திலும் அஸ்தமனகாலத்திலும் தலையற்ற புருஷசரீரங்களால் நெருக்கமாகச் சூழப்பட்டவனாகக் காணப்பட்டான். பாரதரே! சுத்தமாயிருக்கும் சமையலறைகளில் மிகவும் நன்றாகப் பக்குவம் செய்யப்பட்டிருக்கும் அன்னத்தில் ஆயிரக்கணக்கான புழுக்கள் காணப்பட்டன. புண்யாஹமந்திரம் சொல்லும்படி செய்து மஹாத்மாக்கள் ஜபம் செய்துகொண்டிருக்கும்போது, ஜனங்கள் ஓடும் ஓலிகள் கேட்கப்பட்டன; ஒருவனும் காணப்படவில்லை. அவர்களெல்லாரும் க்ரஹங்களால் அடிக்கடி ஹிம்ஸிக்கப்படும் ஒருவர் மற்றவருடைய நக்ஷத்திரத்தைப் பார்த்தார்கள். எவ்விதத்திலும் தம் நக்ஷத்திரத்தைப் பார்க்கவில்லை. விருஷ்ணிகளுடைய வீட்டிலும் அந்தகர்க

1 குதிரையினிடத்தில் கழுதையினால் பிறந்தவை.

2 'பகைத்தார்கள்' என்பது வேறுபாடம்.

3 பலராமரும் கிருஷ்ணருமோ அவ்விதம் செய்யவில்லை என்றுமாம்.

ருடைய வீட்டிலும் சப்திக்கின்ற பாஞ்சஜன்யத்தைச்சுற்றிக் கழுதை கள் பயங்கரமான ஸ்வரத்துடன் சப்தித்தன. வாஸுதேவர், இவ்விதம் நேர்ந்திருக்கும் காலத்தின்மாறுதலேயும் பதின்மூன்ருவதுநாளில் அமா வாஸ்யைவந்ததையும் கண்டு, அவர்களைப்பார்த்து, 'ராகுவினல் மறுபடி யும் இந்தச் சதுர்த்தசியானது பூர்ணிமையாகச் செய்யப்பட்டது பாரதயுத்தம் நெருங்கினபொழுது நேர்ந்த இது இப்பொழுதும் நம் முடைய நாசத்தின்பொருட்டு வந்துவிட்டது' என்று சொன்னர். கேசியைக்கொன்றவரான அந்த ஜனர்த்தனர் அந்தக் காலத்தைப் பற்றி ஆராய்ந்து ஆலோசித்துக்கொண்டே முப்பத்தாருவது வருஷம் வந்துவிட்டதாக எண்ணினர். பிறகு, அவர், 'புத்திரசோகத்தால் நன்கு தபிக்கப்பட்டவளும் பந்துக்களையிழந்தவளுமான காந்தாரியானவள் துயரத்துடன் எதைச்சொன்னளோ அது இதோ வந்துவிட்டது.. முன்பு ஸேனைகள் அணிவகுக்கப்பட்டிருக்கும்போது மிகக்கொடிய வைகளான உத்பாதங்களைக்கண்டு யுதிஷ்டிரர் எதைச் சொன்னரோ அது இதோ வந்துவிட்டது' என்று சொன்னர். பகைவரை அடக்குபவ ரான வாஸுதேவர் இவ்வாறு சொல்லிவிட்டு அந்த வசனத்தை உண்மையாகவே செய்யவிரும்பி அப்பொழுது தீர்த்தயாத்திரை செய்ய வேண்டுமென்று கட்டளையிட்டார். அப்பொழுது, வேலைக்காரர்கள், கிருஷ்ணருடைய உத்தரவின்மேல், 'புருஷஶ்ரேஷ்டர்களே! ஸமுத் திரத்தைக்குறித்துத் தீர்த்தயாத்திரை செய்யவேண்டும்' என்று பறை யறையச் செய்தார்கள்.

## நான்காவது அத்யாயம்.

—:o:—

(துவாரகா வாஸிகள் தீக்கனவு கண்டதும் வாஸுதேவர் கட்டளைப்படி பிரபாஸக்ஷேத்ரம் சென்றதும், அங்கே பாட்டுக் கூத்துக்களுடன் குடித்ததும், ஸாத்யகி கிருதவர்மாவை நிந்தித்ததும், ஸ்யமந்தக மணியின்வரலாறுகேட்டு வருந்திய ஸத்யபாமையை மகிழ்வித்தற்காக ஸாத்யகி கிருதவர்மாவைக் கொன்றதும், உலக்கைத்தூளாலுண்டான புற்களால் இருதிறத்தாரும் ஒருவரை ஒருவர் கொன்றதும்.)

ஸ்வப்னங்களில், கருமை நிறமுள்ளவளும் வெண்மை நிறமுள்ள பற்களுள்ளவளுமான ஸ்திரீயானவள் நகைத்துக்கொண்டு இரவில்

துவாரகையில் பிரவேசித்து (ஸ்திரீகளுடைய மங்களதந்து முதலான வற்றைத்) திருடிக்கொண்டு ஓடினாள். கனவில், பயங்கரமான கழுகுகள், அக்னி ஹோத்திர கிருகங்களிலும் [1]வாஸ்துக்களின் நடுவிலும் வீடு களிலும் விருஷ்ணிகளையும் அந்தகர்களையும் தின்றன. அலங்காரங் களும் குடையும் த்வஜங்களும் கவசங்களும் மிக்க பயங்கரர்களான ராக்ஷஸர்களால் அபஹரிக்கப்படுகின்றனவாகக் காணப்பட்டன. அப் பொழுது, அக்னியினால் கொடுக்கப்பட்டதும் வஜ்ரம்போன்ற நாபியுள்ள தும் உருக்குமயமானதுமான கிருஷ்ணனுடைய அந்தச் சக்கரமும் விருஷ்ணிகள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஆகாயம் சென்றது. மனம்போன்றவேகமுள்ளவைகளும் குதிரைகளுள் சிறந்தவைகளுமான அந்த நான்கு குதிரைகளும், தாருகன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, ஆயத்தமாக இருப்பதும் திவ்யமானதும் சூரியன்போல விளங்குகின்றதுமான ரதத்தை இழுத்துக்கொண்டு ஸமுத்திரத்துக்கு மேலே சென்றன. பலராமராலும் கிருஷ்ணராலும் நன்குபூஜிக்கப்பட்ட சிறந்த த்வஜங்களாகஇருக்கும் அந்தப் பனைமரமும் கருடனும் தேவ லோக வாஸிகளான அப்ஸரஸ்திரீகளும் (ரதங்களை) மேலே இழுத்த னர். தேவர்கள், 'தீர்த்தயாத்திரைக்குச் செல்லுங்கள்' என்று சொன் னார்கள். பகவானான கிருஷ்ணரைத் தரிசித்தும் பரிசித்தும் தியானித் தும் விஸ்தாரமான ஸுகத்தை அடைந்தவர்களான அந்தத் தேவர்கள் ஸ்வர்க்கத்திற்குச் செல்லவேண்டியதற்காக விமானங்களோடு ஆகாயம் சென்றனர். பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களும் மஹாரதர்களுமான அந்த விருஷ்ணிகளும் அந்தகர்களும் அந்தப்புரங்களுடன் (துவாரகையை விட்டுச்) செல்ல விருப்பமுள்ளவர்களாகித் தீர்த்தயாத்திரையை விரும் பினார்கள். பிறகு, (அழகினால்) மனத்தைக் கவருகின்றவர்களான அவர் கள் காலத்தால் தூண்டப்பட்டவர்களாகி ஸந்தோஷத்துடன் பானம் செய்யத் தகுந்ததையும் மாம்ஸத்தையும் மதுக்களையும் மிகுதியாகவும் பற்பலவிதமாகவும் விரைந்து செய்தனர். பிறகு, கள்ளில் ஆசையுள்ள வர்களும் செல்வம் நிறைந்தவர்களும் கொடிய சக்தியுள்ளவர்களுமான அவர்கள் வாகனங்களுடனும் குதிரைகளுடனும் யானைகளுடனும் பட் டணத்திலிருந்து வெளிப்புறப்பட்டனர். பிறகு, அதிகமான தின்பண் டங்களும் குடிக்கத்தக்கவைகளுமுள்ளவர்களும் மனைவிகளோடுகூடின வர்களுமான அந்த யாதவர்கள் அப்பொழுது பிரபாஸத்தில் குறிப்பிடப் பட்ட வீட்டில் வஸித்தனர். பிறகு, யோகத்தை அறிந்தவரும் மோக்ஷத்

1 வீடுகட்டத் தகுந்த பூமிகள்.

தில் பண்டிதருமான அந்த உத்தவர் அவர்கள் ஸமுத்திரத்தினருகில் வஸிப்பதைப் பார்த்து அந்த வீரர்களிடம் அனுமதிபெற்றுக்கொண்டு சென்றார். வந்தனம் செய்து அஞ்சலிசெய்துகொண்டு புறப்பட்டவரும் மஹாத்மாவுமான அந்த உத்தவரை, விருஷ்ணிகளுடைய நாசத்தை அறிந்தவரான வாஸுதேவர் தடுக்க விரும்பவில்லை. பிறகு, காலத்தால் சூழப்பட்டவர்களும் மஹாரதர்களுமான அந்த விருஷ்ணிகளும் அந்தகர்களும் உத்தவர் தேஜஸினால் ஆகாயத்தையும் பூமியையும் வியாபித்துக் கொண்டு செல்லுகின்றதைப் பார்த்தார்கள். அந்த மஹாத்மாக்களான பிராம்மணர்களுக்காக விசித்திரஞ்செய்யப்பட்டதும் ஸுரையின் வாஸனையோடுகூடியதுமான அன்னத்தை அவர்கள் [1]குரங்குகளுக்குக் கொடுத்தார்கள். பிறகு, கடுமையான பராக்கிரமமுள்ள அவர்களுக்குப் பிரபாஸத்தில் அநேகம் தூரியங்களால் நெருங்கியதும் நடர்களாலும் நர்த்தகர்களாலும் வியாபிக்கப்பட்டதுமான சிறந்தபானம் நடந்தது. கிருஷ்ணனுடைய ஸந்நிதியில் கிருதவர்மாவுடன் பலராமரும் யுயுதானனும் கதனும் பப்ருவும் பானஞ்செய்தார்கள். பிறகு, ஸபையின் நடுவில் மிக்கமதமுள்ளவனான யுயுதானன் கிருதவர்மாவைப் பரிஹஸித்தும் அவமதித்தும், 'ஹார்த்திக்ய! எந்தக்ஷத்திரியன், (தான்) கொல்லப்பட்டாலும் இறந்தவர்களைப்போலத் தூங்குகின்றவர்களைக் கொல்லுவான்? உன்னால்செய்யப்பட்ட அந்தக்காரியத்தை யாதவர்கள் பொறுக்கவில்லை' என்று சொன்னான். யுயுதானனால் இவ்விதம் சொல்லப்பட்டவுடன், ரதிகர்களுள் சிறந்தவனான பிரத்யும்னன் கிருதவர்மாவை அவமதித்து அந்தவசனத்தைப் பூஜித்தான். பிறகு, கிருதவர்மாவானவன் கடுஞ்சினங்கொண்டு அப்பொழுது அவனை அவமதிப்புடன் இடக்கையினால் காண்பித்துக் கொண்டு, 'யுத்தத்தில் கையறுக்கப்பட்டவனும் பிராயோபவேசம் செய்தவனுமான பூரிச்ரவஸை வீரனான நீ எவ்வாறு மிகக்கொடியவதஞ் செய்து வீழ்த்தினாய்?' என்று சொன்னான். அவனுடைய இவ்விதமான வசனத்தைக்கேட்டுச் சத்துருவீரர்களைக் கொல்பவரான வாஸுதேவர் கோபங்கொண்டு கோபத்தோடுகூடின நேத்திரத்தினால் குறுக்காகப் பார்த்தார். ஸ்யமந்தகமென்னும் எந்தமணியானது ஸத்ராஜித்தினிடமிருந்ததோ அதைப்பற்றிய கதையை ஸாத்யகியானவன் மதுஸூதனருக்குச் சொன்னான். அப்பொழுது, ஸத்யபாமையானவள் அதைக் கேட்டு மிக்க கோபங்கொண்டு கிருஷ்ணருக்குக் கோபத்தை உண்டு

1. 'பிராம்மணர்களுக்கென்று விசித்தம் செய்ததை வேறுவகையில் செலவிட்டது ஆயுளின் குறைவுக்குக் காரணம்' என்பது பழையவுரையின் கருத்து.

பண்ணிக்கொண்டும் அழுதுகொண்டும் கிருஷ்ணருடைய ஸமீபம் சென்றாள். பிறகு, ஸாத்யகியானவன் கோபத்துடன் எழுந்திருந்து, 'திரௌபதியின் ஐந்துகுமாரர்கள் திருஷ்டத்யும்னன் சிகண்டி இவர்களுடைய ஸ்தானத்தை நான் அடைகிறேன். அவ்வாறு, உண்மையாகச் சபதம்செய்கிறேன். அழகிய இடையுள்ளவளே! நித்ராகாலத்தில் நித்திரைசெய்யும் அவர்களைத் துராத்மாவும் பாபியுமான எந்தக்கிருதவர்மாவானவன் அஸ்வத்தாமாவை உதவியாகக்கொண்டு கொன்றானோ, அவனுடைய ஆயுளும் புகழும் இப்பொழுது முடிவுபெற்றன' என்று வாக்கியத்தைச் சொன்னான். கோபங்கொண்ட அவன் இவ்விதம் சொல்லிவிட்டு, வாஸுதேவருக்கு ஸமீபத்திலிருந்து எதிர்த்தோடிக் கத்தியினால் கிருதவர்மாவினுடைய தலையைவெட்டினான். அப்பொழுது, அவ்வாறே, நாற்புறங்களிலுமுள்ள மற்றவர்களையும் கொல்லுகின்ற யுயுதானனைத் தடுப்பதற்காகக் கேசவர் ஓடினார். மஹாராஜரே! பிறகு, எல்லாப்போஜர்களும் அந்தகர்களும் காலத்தின் வேற்றுமையால் தூண்டப்பட்டு ஒன்றுசேர்ந்து யுயுதானனைச் சூழ்ந்துகொண்டார்கள். சிறந்த தேஜஸுள்ளவரும் காலத்தின் வேற்றுமையை அறிந்தவருமான வாஸுதேவர், அவர்கள் கோபத்துடன் வேகமாக வருவதைக்கண்டும் கோபங்கொள்ளவில்லை. பிறகு, பானத்தால் வெறிகொண்டவர்களும் காலதர்மத்தால் தூண்டப்பட்டவர்களுமான அவர்களோ அப்பொழுது யுயுதானனை எச்சிற்பாத்திரங்களால் அடித்தார்கள். அதன்பிறகு, ஸாத்யகியானவன் அடிக்கப்படும்பொழுது, ருக்மிணியின் குமாரனான பிரத்யும்னன் கோபங்கொண்டு சினியின்புத்திரனான ஸாத்யகியை விடுவிப்பதற்காக வந்தான். அவன் போஜர்களோடு சண்டைசெய்தான். ஸாத்யகியானவன் அந்தகர்களோடு சண்டைசெய்தான். அப்பொழுது, போர்புரிகின்றவர்களும் வீரர்களும் கைவன்மையினால் பிரகாசிக்கின்றவர்களுமான அவ்விருவர்களும் (எதிரிகள்) அதிகமாக இருந்ததால் கேசவர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கொல்லப்பட்டார்கள். பிறகு, யதுநந்தனரான மாதவர் ஸாத்யகியும் புத்திரனும் கொல்லப்பட்டதைக்கண்டு கோபங்கொண்டு ஒரு பிடி [1]ஏரகங்களைப் பிடுங்கினார். அந்தப்பிடி பயங்கரமும் வஜ்ரம் போன்றதும் உருக்கினால் செய்யப்பட்டதுமான உலக்கையாயிற்று. வாஸுதேவர் அதனால் எவரெவர்கள் எதிரிலிருந்தார்களோ அவர்களையெல்லாம் அடித்தார். பிறகு, அந்தகர்களும் போஜர்களும் சைனேயர்களும் விருஷ்ணிகளும் காலத்தால் தூண்

1. ஒரு வகைக் கோரை.

டப்பட்டுப் போரில் உலக்கைகளால் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டார்கள். மனிதர்களைக் காப்பவரே! ராஜரே! பிரபுவே! அவர்களுள் எவனாக இருந்தாலும் கோபங்கொண்டு ஏரகத்தை எடுத்தால் அது அப்பொழுது வஜ்ரமானதுபோலக் காணப்பட்டது. அப்பொழுது, த்ருணமும் உலக்கையாகக் காணப்பட்டது. ராஜரே! அவையெல்லாம் பிராம்மண சாபத்தால் செய்யப்பட்டனவென்று தெரிந்துகொள்ளும். அரசரே! அவர்கள் அந்தத் திருணங்களால் சுழற்றிச் சுழற்றி அடித்தார்கள். அந்தப் புல் அப்பொழுதே வஜ்ரத்தினாலாகிய உறுதியான உலக்கையாகக் காணப்பட்டது பாரதரே! மகன் தந்தையையும் தந்தை மகனையும் கொன்றனர். மதம்பிடித்த அவர்கள் யுத்தம்செய்துகொண்டு ஒருவர்மீதொருவர் விழுந்தனர். அந்தக் குகுரர்களும் அந்தகர்களும் விட்டிற்பூச்சிகள் நெருப்பில் விழுவதுபோல விழுந்தனர். கொல்லப்படுகின்ற ஒருவனுக்கும் ஓடுவதில் புத்தி உண்டாகவில்லை. அப்பொழுது, சிறந்த கைகளுள்ளவரும் காலத்தின் மாறுதலை அறிந்தவருமான அந்த வாஸுதேவர் உலக்கையைப் பிடித்துக்கொண்டு பார்த்துக்கொண்டே நின்றார். பாரதரே! அவர் ஸாம்பனும் சாருதேஷ்ணனும் பிரத்யும்னனும் அநிருத்தனும் கொல்லப்பட்டதைப் பார்த்தபிறகு கோபங்கொண்டார். சார்ங்கத்தையும் சக்ரத்தையும் கதையையும் ஏந்தியவரான அந்த வாஸுதேவர், கதனும் படுத்திருப்பதைக் கண்டு மிக்க கோபங்கொண்டு, அப்பொழுது, (அவர்களை) மிச்சமின்றிச் செய்தார். (அவ்வாறு) கொல்லுகின்றவரான அந்தக் கேசவரை நோக்கி மிக்க தேஜஸுள்ளவனும் பகைவரின் பட்டணங்களை ஜயிப்பவனுமான பப்ருவும் தாருகனும் சொல்லியதைத் தெரிந்துகொள்ளும். (அதாவது) 'பகவானே! மிகுதியான எல்லா மனிதர்களும் உம்மால் கொல்லப்பட்டனர். பலராமரிருக்கும் இடத்தைத் தேடும். அவர் இருக்குமிடம் செல்வோம்' என்பது.

---

## ஐந்தாவது அத்யாயம்.

—:o:—

(வாஸுதேவர் பலராமரைத் தேடிக் கண்டதும், தாருகனைப் பாண்டவரிடம் அனுப்பியதும், பலராமர் சேஷனாகிக் கடலிற் சென்றதும், வாஸுதேவர் சரீரத்தை விடுவதற்கு யோகத்தோடு படுத்ததும், வேடன் மிருகமென்றெண்ணி அவரை அடித்துப் பச்சாத்தாபப்பட அவர் அவனுக்கு முக்திகொடுத்துத் தாமும் பரமபதமடைந்ததும்)

பிறகு, வாஸுதேவரும் தாருகனும் பப்ருவும் பலராமரிருக்குமிடத்தைக் குறித்து வேகமாகச் சென்று, அளவற்ற பராக்ரமமுள்ளவரும் ஒருவருமில்லாதவிடத்தில் மரத்தினடியில் உட்கார்ந்து ஆலோசித்துக்கொண்டிருப்பவருமான பலராமரைப்பார்த்தார்கள். பிறகு, மஹானுபாவரான வாஸுதேவர் அருகில் சென்று அப்பொழுது தாருகனை நோக்கி, 'நீ கௌரவர்களிடம் சென்று பார்த்தனிடத்தில் யாதவர்களுக்கு நேர்ந்த இப் பெரியநாசத்தை முழுதும் சொல். பிறகு, அர்ஜுனன், யாதவர்கள் பிராம்மண சாபத்தால் மரித்ததைக் கேட்டுச் சீக்கிரம் இங்குவரட்டும்' என்று உத்தரவு செய்தார். இவ்வாறு சொல்லப்பட்டவனும் பிரஜ்ஞையை இழந்தவனுமான அந்தத்தாருகன் அப்பொழுது ரதத்தோடு குருதேசத்தை நோக்கிச் சென்றான். பிறகு, வாஸுதேவர், தாருகன் சென்றவுடன் அருகிலிருக்கும் பப்ருவைப் பார்த்து, 'நீ ஸ்திரீகளை ரக்ஷிப்பதற்காகச் சீக்கிரம் செல். அவர்களைத் திருடர்கள் பொருளில் ஆசைகொண்டு துன்பம் செய்யவேண்டாம்' என்று சொன்னார். கேசவரால் உத்தரவு செய்யப்பட்டவனும் மதத்தால் கவரப்பட்டவனும் ஞாதிகளுடைய வதத்தினால் வருத்தமுற்றவனுமான அவன் புறப்பட்டான். ஒருவனாக விரைந்துசெல்லுகின்றவனும் பிராம்மணனால் சபிக்கப்பட்டவனுமான அந்தப் பப்ருவைக் கிருஷ்ணருக்கருகிலேயே யந்திரத்தில் கட்டப்பட்டிருந்ததும் பெரிதுமான வேடனுடைய உலக்கையானது வேகமாக (விழுந்து) கொன்றது. பிறகு, உக்ரமான தேஜஸுள்ள யாதவர், பப்ருகொல்லப்பட்டதைக் கண்டு, மூத்தஸஹோதரரான பலராமரை நோக்கி, 'ராமரே! நான் ஸ்திரீகளை ஞாதிகளிடம் ஒப்பிக்கிறேன். நீர் இவ்விடத்திலேயே என்னை எதிர்பார்த்துக்கொண்டிரும்' என்று சொன்னார். பிறகு, அவர் த்வாரகா நகரம் சென்று, தந்தையை நோக்கி, 'நீர் அர்ஜுனனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டு நம்மு

ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயநாய நம:

# ஸ்ரீமஹாபாரதம்.

## ஸ்வர்க்காரோஹணபர்வம்.

### முதலாவது அத்யாயம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் ।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ॥

(யுதிஷ்டிரர் ஸ்வர்க்கத்தில் துரியோதனனுடைய மேன்மையைக் கண்டு அவனுடன் வஸிக்கப் பொறாமல் பீமன் முதலியோரைக் காண விரும்பியது.)

ஜனமேஜயர், "முனிவரே! என்னுடைய பாட்டன்மார்களான பாண்டவர்களும் திருதராஷ்டிரகுமாரர்களும் ஒன்றின்லொன்று மேலான பலன்களும் முன்றிடங்களுமுள்ள ஸ்வர்க்கத்தை அடைந்து எந்தஸ்தானங்களை அடைந்தார்கள்? இதனை நான் கேட்க விரும்புகிறேன். ஆச்சரியமான செய்கையுள்ளவரான வியாஸமஹரிஷியினால் அனுமதிகொடுக்கப்பட்டீர், எல்லாம் அறிந்தவராகஇருக்கிறீரென்று என்னால் கருதப்படுகிறீர்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"அரசரே! உம்முடைய பாட்டன்மார்களான யுதிஷ்டிரர் முதலானவர்கள் த்ரிவிஷ்டபமென்னும் ஸ்வர்க்கத்தைஅடைந்து எதைச் செய்தார்களோ அதைக்கேளும். தர்மராஜரான யுதிஷ்டிரர், த்ரிவிஷ்டபமென்னும் ஸ்வர்க்கத்தை அடைந்து, (அங்கு) ஒளிபொருந்தியவனும், ஆஸனத்தில் வீற்றிருப்பவனும், வீரலக்ஷ்மியினால் சூழப்பட்டு ஸூரியன்போல ப்ரகாசிப்பவனும், புண்ணிய கர்மத்தைச் செய்தவர்களும் பிரகாசிக்கின்றவர்களுமான தேவர்களோடும் ஸாத்யர்களோடும்கூடினவனுமான துரி

1. இதன் உரை விசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கம் குறிப்பில் காண்க.

யோதனனைப் பார்த்தார். பிறகு, யுதிஷ்டிரராஜர் துரியோதனனுடைய செல்வத்தைக்கண்டு அவன்மீது பொறாமைகொண்டு அங்குள்ளவர்களை நோக்கி, 'பேராசையுள்ளவனும் நீண்ட ஆலோசனையில்லாதவனுமான துரியோதனனுடன் சேர்ந்து (இருக்கும்படியான) உலகங்களை நான் விரும்பவில்லை. தேவர்களே! முன்பு பெரியவனத்தில் கஷ்டப்பட்டவர்களான நாங்கள் எவன்நிமித்தம் எல்லாப் பூமியையும் ஸுஹ்ருத்துக்களையும் பந்துக்களையும் யுத்தத்தில் பலாத்காரமாகக் கொன்றோமோ, பாஞ்சாலனுடைய புத்ரியும் தர்மத்தை அனுஷ்டிப்பவளும் மேன்மை பெற்ற அங்கங்களுள்ளவளும் எங்களுடைய பத்னியுமான திரௌபதியும் ஸபையின் நடுவில் குருக்களின் முன்னிலையில் இழுக்கப்பட்டாளோ, (அப்படிப்பட்ட) துரியோதனனைப் பார்க்க எனக்கு இஷ்டமில்லை. என்னுடைய பிராதாக்கள் எங்கு இருக்கின்றனரோ அவ்விடம் செல்ல நான் விரும்புகிறேன்' என்ற வார்த்தையை உரக்கச் சொல்லிக்கொண்டு விரைவாகத் திரும்பினார்.

நாரதர், அவரை நோக்கி, நகைத்துக்கொண்டு, 'ராஜஸ்ரேஷ்டனே! இவ்விதம் செய்ய வேண்டாம். ஸ்வர்க்கத்தில் வாஸம் செய்தால் விரோதமும் நசிந்துவிடும். யுதிஷ்டிர! சிறந்தகைகளுள்ளவனே! துரியோதனராஜனைப்பற்றி இவ்வித வார்த்தையை எவ்விதத்திலும் சொல்லாதே. என்னுடைய இந்த வார்த்தையையும் கேள். இந்தத் துரியோதனராஜன் தேவர்களுடன்கூட வித்வான்களும் ஸ்வர்க்கத்தில் வஸிப்பவர்களுமான ராஜஸ்ரேஷ்டர்களால் பூஜிக்கப்படுகிறான். தேவர்களுக்கொப்பான நீங்களெல்லாரும் எவனால் யுத்தத்தால் துன்புறுத்தப்பட்டு உங்கள சரீரத்தை யுத்தத்தில் ஹோமம் செய்து வீரலோக கதியை அடைந்தீர்களோ, பெரிய பயம் நேர்ந்த பொழுதும் பயமில்லாமல் பூமியில் ஆண்டு வந்தவனான அப்படிப்பட்ட இந்தத்துரியோதனன் க்ஷத்திரியதர்மத்தால் இந்தஸ்தானத்தை அடைந்தான். புத்திரனே! சூதாட்டத்தால் உண்டுபண்ணப்பட்டதை மனத்தில் வைக்கக்கூடாது. நீ திரௌபதியின் கஷ்டத்தையும் சிந்திக்கக்கூடாது. யுத்தங்களிலும் மற்ற விஷயங்களிலும் உங்களுக்கு ஞாதிகளால் உண்டுபண்ணப்பட்ட மற்றக் கஷ்டங்களையும் நீ நினைக்கக்கூடாது. முறைப்படி துரியோதனராஜனுடன் சேர்ந்திரு. ராஜனே! இது ஸ்வர்க்கம். இங்கு விரோதங்கள் இருக்கமாட்டா' என்று சொன்னார்.

நாரதரால் இவ்விதம் சொல்லப்பட்டவரும் மேதாவியும் கௌரவராஜருமான யுதிஷ்டிரர் பிராதாக்களைப்பற்றி வினவலாகிப் பின் வருமா

வாக்கியத்தைச் சொல்லலானார். 'பிராம்மணரே! நாரதரே! தர்மத்தை அறியாதவனும், பாபியும், பூமியிலுள்ள நல்லோர்களுக்குத் தீமையைச் செய்தவனும், மனிதர்களுடனும் யானைகளுடனும்கூடின பூமியானது சீக்கிரம் அழியவும் நாங்களும் பகை தீர்க்க விரும்பிக் கோபத்தால் எரிக்கப்படவும் காரணமாயிருந்தவனுமான துரியோதனனுக்கு ஸநாதனமான இந்த வீரலோகங்கள் கிடைத்திருக்கின்றமையால் வீரர்களும் மஹாத்மாக்களும் சிறந்த விரதமுள்ளவர்களும் ஸத்யமான பிரதிஜ்ஞையுள்ளவர்களும் உலகத்தில் சூரர்களும் ஸத்யவாதிகளுமான என்னுடைய பிராதாக்களுக்கு எந்த உலகங்கள் கிடைத்திருக்கின்றன? அவர்களையும், மஹாத்மாவும் ஸத்யஸந்தனும் குந்தியின் மைந்தனுமான கர்ணனையும் திருஷ்டத்யும்னனையும் ஸாத்யகியையும் திருஷ்டத்யும்னனுடைய புத்திரர்களையும் நான் பார்க்க விரும்புகிறேன். எந்த அரசர்கள் க்ஷத்திரியதர்மத்தால் ஆயுதங்களால் மரணமடைந்தார்களோ அவர்கள் எங்கே இருக்கின்றனர்? அந்த மன்னர்களை நான் (எங்கே) பார்ப்பேன்? நாரதரே! விராடனையும் துருபதனையும் த்ருஷ்டகேது முதலான அவர்களையும் பாஞ்சால குமாரனான சிகண்டியையும் திரௌபதியின் எல்லாப் புத்திரர்களையும் (ஒருவராலும்) அவமதிக்கமுடியாதவனான அபிமன்யுவையும் பார்க்க விரும்புகிறேன்' என்றார்.

## இரண்டாவது அத்யாயம்.

———:o:———

(யுதிஷ்டிரர் தம்மவரிருக்குமிடத்திலேயே வஸிக்கவிரும்பியதும், தேவதூதன் உறவினரைக்காட்ட யுதிஷ்டிரரை நரகத்துக்கழைத்துப் போனதும், அதனைக்காணப்பொறாமல் திரும்பின யுதிஷ்டிரர் அங்குள்ளவர் தம்மவரெனத்தெரிந்து தாம் இந்திரனிடம் வர மறுத்ததும், தூதன் அதனை இந்திரனுக்குத் தெரிவித்ததும்.)

(அவர்), 'தேவர்களே! அளவற்ற பராக்ரமமுள்ளவனான கர்ணனையும் பிராதாக்களும் மஹாத்மாக்களுமான யுதாமன்யுவையும் உத்தமௌஜஸையும் இங்கு நான் பார்க்கவில்லை. எந்த மஹாரதர்கள் (என்னிமித்தம்) யுத்தமாகிற அக்னியில் சரீரங்களை ஹோமம் செய்தார்களோ, எந்த அரசர்களும் அரசகுமாரர்களும் என்னிமித்தம் யுத்தத்தில் கொல்லப்பட்டார்களோ, மஹாரதர்களும் புலிக்கொப்பான பராக்ரமமுள்ளவர்களுமான அவர்களெல்லாரும் எங்கே? புருஷச்ரேஷ்டர்களான அவர்களா

னும் இந்த உலகமானது ஜயிக்கப்பட்டதா? தேவர்களே! அந்த மஹாரதர்களெல்லாரும் இந்த உலகங்களை அடைந்திருந்தால், நான் அந்த மஹாத்மாக்களுடன்சேர்ந்து வஸிப்பேனென்று தெரிந்துகொள்ளுங்கள். அந்த அரசர்களால் அழிவற்றதும் சுபமுமான இந்த உலகம் அடையப்படவில்லையா? அப்படியானால் ப்ராதாக்களும் ஞாதிகளுமான அவர்களில்லாமல் நான்வஸிக்கமாட்டேன். அக்காலத்தில், (இறந்தவர்களுக்கு) ஜலதர்ப்பணம் செய்யும்போது, 'கர்ணனுக்கு ஜலதர்ப்பணம்செய்' என்று சொன்ன தாயாரினுடைய வசனத்தைக் கேட்டு அதனால் (இப்பொழுதும்) வருத்தமடைகிறேன். தேவர்களே! ஒப்பற்ற அறிவுள்ளவனான அந்தக்கர்ணனுடைய தாயாருடைய பாதங்களுக்கொப்பான இருபாதங்களையும் பார்த்தும் நான் பிறருடையபடையைப் பிடிப்பவனான அவனை அனுஸரிக்கவில்லையென்பதைப்பற்றியும் அடிக்கடி பரிதபிக்கிறேன். கர்ணனுடன் சேர்ந்த எங்களை யுத்தத்தில் இந்திரனும் ஜயிக்கமாட்டான். எவன் என்னால் அறியப்படாமல் ஸவ்யஸாசியினால் கொல்லப்பட்டானோ ஸூரியகுமாரனான அந்தக்கர்ணனை எவ்விடத்திலிருப்பவனாயினும் நான் பார்க்கவிரும்புகிறேன். பயங்கரமான பராக்ரமமுள்ளவனும் எனக்குப்பிராணனைக்காட்டிலும் மிக்க பிரியனுமான பீமனையும் இந்திரனுக்கொப்பான அர்ஜுனனையும் யமனுக்கொப்பான நகுலஸஹதேவர்களையும் தர்மத்தைச் செய்பவளான அந்தப் பாஞ்சாலியையும் நான் பார்க்க விரும்புகிறேன். இங்கு இருக்க எனக்கு விருப்பமில்லை. இவ்விதம் உண்மையாக உங்களுக்குச் சொல்லுகிறேன். தேவஶ்ரேஷ்டர்களே! ப்ராதாக்களில்லாதவனான எனக்கு ஸ்வர்க்கத்தால் என்னபயன்? 'அவர்கள்எங்கே இருக்கிறார்களோ அது எனக்கு ஸ்வர்க்கம். இது ஸ்வர்க்கமன்று' என்பது என்னுடைய கருத்து' என்று சொன்னார்.

தேவர்கள், '(யுதிஷ்டிரரே!) உமக்கு அவ்விடத்தில் ஶ்ரத்தையிருக்குமானால் அவ்விடம் போகலாம், தாமதிக்கவேண்டாம். நாங்கள் தேவராஜனுடைய கட்டளையினால் உமக்குப் பிரியத்தைச்செய்ய (ஆயத்தர்களாக) இருக்கிறோம்' என்று சொன்னார்கள். தேவர்கள் அந்த யுதிஷ்டிரரை நோக்கி இவ்விதம் சொல்லிவிட்டுப் பிறகு தேவதூதனை நோக்கி, 'பகைவரைத்தபிக்கச் செய்பவனே! யுதிஷ்டிரருக்கு ஸுஹ்ருத்துக்களைக் காண்பிப்பாயாக' என்று உத்தரவுசெய்தார்கள். ராஜஶ்ரேஷ்டரே! பிறகு, குந்திபுத்திரரான அரசரும் தேவதூதனும் சேர்ந்து அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் இருக்குமிடம் சென்றார்கள். முன்னால் தேவதூதனும் பின்னால் யுதிஷ்டிரராஜருமாக அமங்களமான

தும், செல்லமுடியாததும், பாபகர்மத்தைச் செய்தவர்களால் அடையப்பட்டதும், இருளால் சூழப்பட்டதும், பயங்கரமானதும், தலைமயிர்களாகிற பாசிக்கொத்துக்களும் புல்தரைகளுமுள்ளதும், பாவத்தைச் செய்தவர்களுடைய வாஸனைகளுடன் கூடினதும், மாம்ஸமும் உதிரமுமாகிற சேறுள்ளதும், காட்டு ஈக்களாலும் [1]பயங்கரமான கரடிகளாலும் ஈக்களாலும் கொசுக்களாலும் சூழப்பட்டதும், இங்குமங்குமாக நாற்புறங்களிலும் பிணங்களால் சூழப்பட்டதும், எலும்புகளாலும் கூந்தல்களாலும் நிறைந்ததும், பூச்சிகளாலும் புழுக்களாலும் வியாபிக்கப்பட்டதும், ஜ்வலிக்கின்ற அக்னியினால் நாற்புறங்களிலும் சூழப்பட்டதும், இரும்புபோன்ற முகமுள்ள காகம் முதலானவைகளாலும் கழுகுகளாலும் ஸஞ்சரிக்கப்பட்டதும், ஊசிபோன்ற முகமுள்ளவைகளும் விந்தியமலைக்கொப்பானவைகளுமான பிரேதங்களால் சூழப்பட்டதும், புஜங்களும் தொடைகளும் கைகளும் வயிறுகளும் பாதங்களும் வெட்டப்பட்டவர்களும் மேதஸ் உதிரம் இவைகளுடன் கூடினவர்களும் ஆங்காங்கு உள்ளே தள்ளப்பட்டவர்களுமான மனிதர்களுடன் கூடினதுமான மார்க்கத்தில் சென்றார்கள். தர்மாத்மாவான அந்த அரசர் பிணங்களால் கெட்டநாற்றமுள்ளதும் அசுபமானதும் மயிர்க் கூச்சத்தை உண்டுபண்ணுவதுமான அந்த மார்க்கத்தின் மத்தியில் பலவாறாக ஆலோசனை செய்துகொண்டு சென்றார். குந்தியின் புத்திரரான யுதிஷ்டிரர் உஷ்ணமான ஜலத்தால் நிறைந்ததும் அடைவதற்குச் சிறிதும் முடியாததுமான நதியையும், கூர்மையுள்ளதும் கத்திகளால் சூழப்பட்டதுமான அஸிபத்ரவனத்தையும், வறுக்கப்பட்ட சிறிய பாற்கற்களையும், காய்ச்சப்பட்ட இரும்புமயமான கற்களையும், நாற்புறங்களிலும் கொதிக்கும்படி செய்யப்பட்டவைகளும் இரும்பினால் செய்யப்பட்டவைகளுமான எண்ணெய்க்குடங்களையும், கூரிய முட்களுள்ளதும் தொடமுடியாததுமான ஸால்மலிவனத்தையும், பாப கர்மத்தைச் செய்தவர்களுக்கு மற்றுமுள்ள யாதனைகளையும் பார்த்தார். அவர் கெட்டநாற்றமுள்ள அந்த மார்க்கத்தைக்கண்டு தேவதூதனை நோக்கி, 'நாம் இவ்விதமான இந்த மார்க்கத்தில் எவ்வளவு தூரம் போகவேண்டும்? என்னுடைய பிராதாக்களான அவர்கள் எங்கே இருக்கின்றனர்? அதனை எனக்குச் சொல். இந்தத் தேசமானது தேவர்களுள் யாருடையது? இதனை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று வினவினார்.

1. 'உத்பாதக' என்பது மூலம்.

அந்தத் தேவதூதன் தர்மராஜருடைய அந்த வார்த்தையைக் கேட்டுத் திரும்பி அவரை நோக்கி, 'நீர் இது வரையில் தான் வரலாம். என்னால் திருப்பிவிடத் தகுந்தவராகிறீர். தேவர்களால் நான் அவ்விதம் சொல்லப்பட்டேன். ராஜஸ்ரேஷ்டரே! நீர் களைப்படைந்திருந்தால் வந்து விடும்' என்று சொன்னான். பாரதரே! யுதிஷ்டிரரோ துயர முற்றவரும் அந்த வாசனையினால் மூர்ச்சையடைந்தவருமாகித் திரும்புவதில் மனங்கொண்டு திரும்பினார். திரும்பினவரும் தர்மாத்மாவும் துக்கத்தாலும் சோகத்தாலும் வியாபிக்கப்பட்டவருமான அவர் அவ்விடத்தில் நாற்புறங்களிலும் சொல்லுகின்றவர்களுடைய தீனமான வார்த்தைகளைக் கேட்டார். (அவையாவன)—'ஓ! ஓ! தர்மபுத்திரரே! ராஜர்ஷியே! புண்ணியமான குலத்தில் பிறந்தவரே! பாண்டவரே! எங்களை அனுக்கிரஹிக்கவேண்டியதற்காக ஒரு முகூர்த்தம் வரையில் நில்லும். ஐயா! (ஒருவராலும்) அவமதிக்கமுடியாதவரான நீர் வரும்பொழுது உம்முடைய மணத்தைப் பின்தொடர்ந்தும் புண்யமுமான காற்றானது வீசுகிறது. அதனால், எங்களுக்கு ஸுகமுண்டாயிற்று. குந்தியின் குமாரரே! புருஷஸ்ரேஷ்டரே! ராஜஸ்ரேஷ்டரே! நாங்கள் உம்மை பார்த்துக்கொண்டிருந்தால் நீண்டகாலம் ஸுகம் பெறுவோம். நீண்டகைகளுள்ளவரே! பாரதரே! கௌரவ்யரே! நீர் ஒரு முகூர்த்தகாலம் இங்கு நில்லும். நீர் நின்றுகொண்டிருந்தால் யாதனையானது எங்களைப் பீடிக்கிறதில்லை' (என்பன). ராஜரே! அவர் அவ்விடத்தில் நாற்புறங்களிலும் சொல்லுகின்றவர்களும் வேதனையுள்ளவர்களுமான ஜனங்களுடைய இப்படிப் பலவிதமான தீனவசனங்களைக் கேட்டார். அந்த யுதிஷ்டிரரும், தீனமாகச் சொல்லுகின்ற அவர்களுடைய வார்த்தையைக் கேட்டுக் கருணைமேலிட்டு 'ஆ! கஷ்டம்' என்று சொல்லி நின்றார். அந்தப் பாண்டவர், வாட்டமுற்றவர்களும் துக்கப்படுகின்றவர்களுமான அவர்களுடைய அந்த வார்த்தைகளை, முன் அடிக்கடி கேட்கப்பட்டவைகளாக இருந்தும், (அப்பொழுது) அறியவில்லை. அந்த வார்த்தைகளை அறியாதவரும் தர்மபுத்திரருமான யுதிஷ்டிரர், 'நீங்கள் யார்? எதற்காக இங்கிருக்கிறீர்கள்?' என்று வினவினார். இவ்விதம் வினவப்பட்ட அவர்களெல்லாரும், பிறகு, 'பிரபுவே! நான் கர்ணன்; நான் பீமஸேனன்; நான் அர்ஜுனன்; நான் நகுலன்; நான் ஸஹதேவன்; நான் திருஷ்டத்யும்னன்; நான் திரௌபதி; (நாங்கள்) திரௌபதியின் புத்திரர்கள்' என்று இவ்விதம் நாற்புறங்களிலும் உரக்கக் கூவினார்கள். அரசரே! அப்பொழுது, அவ்வரசர் அவ்விடத்திற்குத் தகுந்த

வைகளான அந்த வார்த்தைகளைக் கேட்டு, பிறகு, 'இது தெய்வத் தால் செய்யப்பட்டதா? மஹாத்மாக்களான கர்ணனாலும் அழகிய இடையுள்ளவளான திரௌபதியினாலும் திரௌபதியின்குமாரர்களா லும் செய்யப்பட்ட பாப கர்மமா? பாபஸம்பந்தமுள்ளதும் மிக்க பயங் கரமுமான இந்த இடத்தில் இருப்பவர்களும் புண்யகர்மத்தைச் செய்த வர்களுமான இவர்களனைவரிடத்திலும் பாவத்தை நான் அறியவில்லை. திருதராஷ்டிரபுத்திரனான துர்யோதனராஜன் என்னசெய்து, அவ்விதம் ஒளியுடன் கூடினவனும் மஹேந்திரன்போலச் செல்வமுள்ளவனும் மிகப் பூஜிக்கப்பட்டவனுமாகிப் பாவிகளான எல்லா அஸுரர்களுடனும் வஸிக் கிறான்? தர்மத்தையறிந்தவர்களும் சூரர்களும் ஸத்யத்தையும் சாஸ்திரங் களையும் முக்கியமாகக்கொண்டவர்களும் க்ஷத்திரியதர்மத்தில் பற்றுத லுள்ளவர்களும் வித்வான்களும் விதிப்படி யாகஞ்செய்தவர்களும் மிகுதி யான தக்ஷிணையைக்கொடுத்தவர்களுமான இவர்களெல்லாரும் இப்பொ ழுது நரகத்தை அடைந்திருப்பது எதனுடையகாரியம்? நான் தூங்குகி றேனா? விழித்துக்கொண்டிருக்கிறேனா? அறிவுள்ளவனாக இருக்கிறேனா? ப்ரஜ்ஞையை இழந்தவனாக இருக்கிறேனா? ஓ! ஓ! இது சித்தத்தின் விகா ரமா? அல்லது, எனக்குச் சித்தப்பிரமமா?' என்று ஆலோசித்தார். யுதிஷ்டிரராஜர் இவ்விதம் துக்கத்தாலும் சோகத்தாலும் கவரப்பட்ட வரும் சிந்தையினால் கலங்கின இந்திரியங்களுள்ளவருமாகிப் பலவிதம் ஆலோசித்தார். தர்மபுத்திரரான யுதிஷ்டிரராஜர் கடுஞ்சினங்கொண்டு தேவர்களையும் தர்மத்தையும் நிந்தித்தார். கடுமையான சோகத்தால் மிகத் தபிக்கப்பட்டவரான அவர் தேவதூதனை நோக்கி, 'நீ எவர்களுடைய தூதனோ அவர்களிடம் செல். 'நான் அவ்விடம் வரமாட்டேன். (இவ் விடத்திலேயே) வஸிக்கிறேன்' என்று சொல். ஸங்கத்தை அனுபவித்த வர்களான என்னுடைய இந்தப் பிராதாக்கள் என்னை ஆச்ரயித்ததனால் ஸுகப்படுகின்றனர்' என்று சொன்னார். அரசரே! புத்தியுள்ளவரும் பாண்டுவின் புத்திரருமான யுதிஷ்டிரரால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தத் தேவதூதன் அப்பொழுது தேவர்களுக்கரசனான இந்திரன் இருக்குமிடம் சென்று தர்மராஜர் செய்யவிரும்பியிருப்பதை, அவர் சொல்லியபடி, முழுவதும் தெரிவித்தான்.

---

## மூன்றாவது அத்யாயம்.

—:o:—

**(யுதிஷ்டிரரின் உறுதியைக்கண்டு இந்திரன்முதலியவர்கள் வந்ததும், யமன் யுதிஷ்டிரரைப் புகழ்ந்து நரகங்கள் மாயையால் வந்தன வென்றதும், யுதிஷ்டிரர் தேவசரீரம் பெற்றுத் தேவரிஷிகள் துதிக்கத் தம்பியரிருக்குமிடம் சென்றதும்.)**

கௌரவ்யரே! குந்தியின் புத்திரரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர் ஒரு முகூர்த்தகாலம் நின்றவுடன், இந்திரன் முதலான தேவர்கள் அவ்விடம் வந்தார்கள். அந்தத் தர்மரும், அந்த வேந்தனை நன்கு பரீக்ஷை செய்துவிட்டு வடிவமெடுத்துக்கொண்டு குருராஜரான அந்த யுதிஷ்டிரர் எவ்விடத்திலிருக்கிறாரோ அவ்விடம் வந்தது. ராஜரே! பிரகாசிக்கின்ற வடிவமுள்ளவர்களும் புண்யமும் பரிசுத்தமுமான செய்கையுள்ளவர்களுமான அந்தத் தேவர்கள் வந்தவுடன், அந்த இருள் விலகிவிட்டது. அவ்விடத்திலிருந்தவைகளான பாவிகளுடைய அந்த யாதனைகளும் வைதரணியென்னும் நதியும் முள்ளிலவமரமும் பயங்கரமான இருப்புக்குடங்களும் கற்களும் அங்கு நாற்புறங்களிலுமிருந்த விகாரமான சரீரங்களும் காணப்படவில்லை. கௌரவ்யரான அரசர் மிகச் சிறந்த ஒளியுள்ள அவர்களனைவரையும் கண்டார். பாரதரே! பிறகு, ஸுகமான ஸ்பரிசமுள்ளதும் புண்ணியமான வாஸனையைத் தரிப்பதும் சுத்தமும் மிக்க குளிர்ச்சியுள்ளதுமான காற்றானது தேவர்களுடைய அருகிலிருந்து வீசிற்று. மருத்துக்களும் இந்திரனும் வஸுக்களும் அச்வினிதேவர்களும் ஸாத்யர்களும் ருத்ரர்களும் ஆதித்தியர்களும் மற்றமுள்ள தேவர்களும் ஸித்தர்களும் சிறந்த ரிஷிகளுமான எல்லாரும், சிறந்த தேஜஸ்ஸுள்ளவரும் தர்மபுத்திரருமான அரசர் இருக்குமிடத்திற்கு வந்தார்கள். பிறகு, தேவர்களுக்கரசனும் சிறந்த காந்தியுள்ளவனுமான இந்திரன், யுதிஷ்டிரரை நோக்கி ஸமாதானம் செய்துகொண்டு, பின்வரும் வசனத்தைச் சொல்லலானான்.

'யுதிஷ்டிரரே! சிறந்த கைகளுள்ளவரே! தேவக்கூட்டத்தார் உம்மிடத்தில் ஸந்தோஷமடைந்தார்கள். புருஷஸ்ரேஷ்டரே! பிரபுவே! இவ்வளவு போதும். வாரும்; வாரும். நீண்ட கைகளுள்ளவரே! உம்மால் ஸித்தியானது அடையப்பட்டது. உமக்கு அக்ஷயமான உலகங்களும் கிடைத்தன. (உம்முடைய) பிராதாக்களுக்கும் ஸுஹ்ருத்துக்களுக்கும் நித்யமும் மிகப் பூஜிக்கப்பட்டதுமான கதியானது ஏற்பட்டது. நீர் கோபித்துக்கொள்ளக்கூடாது. என்னுடைய இந்த

வார்த்தையையும் கேளும். ஐயா! எல்லா அரசர்களும் அவச்யமாக நரகத்தைப் பார்க்கவேண்டும். புருஷச்ரேஷ்டரே! புண்யங்களும் பாவங்களும் இரண்டு வகைகளாக இருக்கின்றன. (அவற்றுள்) எவன் முந்திப் புண்யத்தை அனுபவிக்கிறானோ அவன் பிந்தி நரகத்தை அடைகிறான். எவன் முந்தி நரகத்தை அடைகிறானோ அவன் பிந்தி ஸ்வர்க்கத்தை அடைகிறான். எவன் அதிகமான பாவத்தைச் செய்தவனோ அவன் முதலில் ஸ்வர்க்கத்தை அடைகிறான். தர்மம் தவறாதவரே நீர் அதிகமான புண்ணியகர்மங்களைச் செய்தவர். சிறிது பாவமுள்ளவர். அரசரே! ஆகையால், மேன்மையை விரும்புகிறவனை என்றால் நீர் இவ்விதம் நடத்தப்பட்டீர். உம்மால் துரோணர் புத்திரர்விஷயத்தில் வியாஜத்தால் வஞ்சிக்கப்பட்டாரன்றோ? அரசரே! ஆகையால், உமக்கு வியாஜத்தினாலேயே நரகம் காண்பிக்கப்பட்டது. பீமஸேனனும் அர்ஜுனனும் நகுல ஸஹதேவர்களும் கிருஷ்ணையென்னும் திரௌபதியும் உம்மைப் போலவே வியாஜத்தால் நரகத்தை அடைந்தார்கள். புருஷச்ரேஷ்டரே! வாரும். அவர்களும் பாபத்திலிருந்து விடுபட்டார்கள். பரதச்ரேஷ்டரே! உம்முடைய பக்ஷத்தைச் சார்ந்தவர்களான எந்த அரசர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்களோ அவர்களனைவரும் ஸ்வர்க்கத்தை அடைந்து விட்டார்கள். அவர்களைப் பாரும். நீர் எவனுக்காகப் பரிதபிக்கிறீரோ சிறந்த வில்லாளியும் ஆயுதங்களை ஏந்தியவர்களான அனைவருள்ளும் சிறந்தவனுமான அந்தக் கர்ணனும் உத்தமமான ஸித்தியை அடைந்தான். பிரபுவே! சிறந்த கைகளுள்ளவரே! புருஷச்ரேஷ்டரே! புருஷச்ரேஷ்டனும் தனக்குரிய ஸ்தானத்தை அடைந்தவனும் ஸூரியகுமாரனுமான அந்தக் கர்ணனைப் பாரும். சோகத்தை விடும். தம் தம் ஸ்தானத்தை அடைந்தவர்களான பிராதாக்களையும் புத்திரர்களையும் உமது பக்ஷத்தைச்சார்ந்த மன்னர்களையும் பாரும். உம்முடைய மனத்திலுள்ள வருத்தம் விலகட்டும். கௌரவரே! நீர் முதலில் கஷ்டத்தை அனுபவித்தீர். இனிமேல் சோகமும் ரோகமுமற்றவராக என்னுடன் ஸஞ்சாரம் செய்யும். சிறந்த கைகளுள்ளவரே! ராஜரே! நீர் செய்த புண்ய கர்மங்கள் தவங்கள் தானங்கள் அடைந்தஞானங்கள் இவற்றின் பயனை அடையும். இப்பொழுது, உம்மைத் தேவர்களும் கந்தர்வர்களும் சிறந்தவர்களான அப்ஸரஸுகளும் அழுக்கற்ற ஆடைகளையும் ஆபரணங்களையும் தரித்துக்கொண்டு மங்களமாக ஸ்வர்க்கத்தில் உபசரிக்கட்டும். சிறந்த கைகளுள்ளவரே! நீர் ராஜஸூயத்தால் ஜயிக்கப்பட்டவைகளும் அச்வமேதத்தால் உண்டுபண்ணப்பட்டவைகளுமான உலகங்களையும்

தவத்தின் சிறந்த பயனையும் அடையும். யுதிஷ்டிரரே! எல்லா அரசர்களுக்கும் மேலாகவுள்ள உலகங்கள் உமக்குக் கிடைத்தன. பார்த்தரே! நீர் அவைகளில் ஹரிச்சந்திரன்போல ஸஞ்சரிக்கப்போகிறீர். மாந்தாதா என்னும் ராஜரிஷியானவர் எவ்விடத்தில் இருக்கிறாரோ பகீரதனென்னும் அரசன் எந்த இடத்தில் இருக்கிறானோ துஷ்யந்த குமாரனான பரதன் எந்த இடத்தில் இருக்கிறானோ அந்தவிடத்தில் நீர் ஸஞ்சரிக்கப் போகிறீர். குந்தியின் புத்திரரே! ராஜேந்திரரே! புண்ணியமானதும் மூவுலகங்களையும் பரிசுத்தப்படுத்துகின்றதுமான ஆகாசகங்கை யென்னும் தேவநதியானது இதோ இருக்கிறது. இதில் ஸ்நானம் செய்து செல்லும். இதில் ஸ்நானம் செய்தால் உமக்கு மானிடத்தன்மை விலகிவிடும். சோகமும் சிரமமும் பகையுமற்றவராவீர்" என்று சொன்னான்.

தேவேந்திரன் இவ்விதம் சொல்லும்பொழுது, பிரத்யக்ஷமாகச் சரீரத்தை அடைந்த தர்மராஜாவானவர், தம்முடைய புத்திரரும் கௌரவ ஶ்ரேஷ்டருமான யுதிஷ்டிரரை நோக்கி, "ஓ! ஓ! ராஜனே! சிறந்தப் பிரஜ்ஞையுள்ளவனே! புத்திரனே! என்னிடத்தில் பக்தியினாலும் உண்மையான வாக்கியங்களினாலும் பொறுமையினாலும் இந்திரியங்களின் அடக்கத்தாலும் நான் உன்னிடத்தில் பிரீதியுள்ளவனானேன். ராஜனே! என்னால் உன்னை இது மூன்றாவது பரீக்ஷை செய்யப்பட்டது. பார்த்தனே! நீ ஸ்வபாவத்திலிருந்து காரணத்தைக்கொண்டு சலிக்கச்செய்ய முடியாதவனாக இருக்கிறாய். நீ முன்னம் த்வைதவனத்தில் அரணியைக்கொண்டுபோன மானைத் தேடினபொழுது என்னால் கேள்விகேட்டுப் பரீக்ஷிக்கப்பட்டாய். அதனையும் தாண்டினாய். பாரத! ஸ்வர்க்காரோஹணகாலத்தில், திரௌபதியும் ஸஹோதரர்களும் மரித்தபொழுது, நாயின் வடிவத்தைத் தரித்த என்னால் மறுபடியும் நீ அவ்விடத்தில் பரீக்ஷிக்கப்பட்டாய். சிறந்த பாக்கியமுள்ளவனே! பிராதாக்களின் நிமித்தம் நீ (நரகத்தில்) நிற்கவிரும்புகிறாய் என்னும் இது மூன்றாவது. பரிசுத்தனும் பாபமற்றவனும் ஸுகமுள்ளவனுமாக இருக்கிறாய். பார்த்த! ராஜனே! உன்னுடைய பிராதாக்கள் நரகத்தை அடையத்தகுந்தவர்களல்லர். இது தேவராஜனான மஹேந்திரனால் பிரயோகிக்கப்பட்ட மாயை. ஐயனே! எல்லா அரசர்களாலும் நரகங்கள் அவஶ்யம் பார்க்கப்படத்தக்கவைகள். ஆகையால், உன்னால் ஒரு முகூர்த்தகாலம் இந்தப் பெரிய துக்கம் அடையப்பட்டது. ராஜனே! ஸவ்யஸாசியாவது பீமஸேனனாவது புருஷஶ்ரேஷ்டர்களான நகுல ஸஹதேவர்களாவது ஸத்யமானவாக்குள்ளவனும் சூரனுமான கர்ணனாவது நீண்டகாலம் நர

கத்தை அடையத் தகுந்தவர்களல்லர். ராஜபுத்திரியான திரௌபதியும் எவ்விதத்திலும் நரகத்தை அடையத்தகுந்தவளல்லள். பரதஸ்ரேஷ்டனே! வா; வா. [1]மூவுலகங்களிலும் செல்லுகின்றதான கங்கையைப் பார்' என்று சொல்லினர்.

இவ்வாறு சொல்லக்கேட்டவரும் உம்முடைய பாட்டனாரும் அரசருமான அந்த ராஜரிஷியானவர் தர்மதேவதையோடும் எல்லாத் தேவர்களோடும், தேவநதியும் புண்ணியமானதும் பரிசுத்தியைச் செய்கின்றதும் ரிஷிகளால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டதுமான கங்கைக்குச் சென்று அதில் ஸ்நானம் செய்து மானிடசரீரத்தை விட்டார். அந்தத் தீர்த்தத்தில் நன்கு ஸ்நானஞ்செய்த தர்மராஜரான யுதிஷ்டிரர், பிறகு, திவ்யமான சரீரமுள்ளவரும் பகையும் மனவருத்தமும் அற்றவருமானார். பிறகு, புத்திமானும் கௌரவராஜருமான அவர், தேவர்களால் சூழப்பட்டவரும் தர்மதேவதையோடுகூடினவரும் மஹரிஷிகளால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவருமாகப் புருஷஸ்ரேஷ்டர்களும் சூரர்களுமான அந்தப் பாண்டவர்களும் திருதராஷ்டிரகுமாரர்களும் எந்த இடத்தில் கோபமற்றவர்களாகத் தம் ஸ்தானங்களை அடைந்திருக்கிறார்களோ அவ்விடம் சென்றார்.

## நான்காவது அத்யாயம்.

---:o:---

(யுதிஷ்டிரர் ஸ்வர்க்கத்தில் கிருஷ்ணர் கர்ணன் முதலியவர்களைக் கண்டதும், தம்தம் இடத்தை அடைந்த திரௌபதீ புத்திரர் முதலியவர்களை இந்திரன் யுதிஷ்டிரருக்குக் காட்டியதும்.)

பிறகு, யுதிஷ்டிரராஜர், தேவர்களாலும் ரிஷிகளாலும் மருத்கணங்களாலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு அந்தக் கௌரவ ஸ்ரேஷ்டர்கள் இருக்குமிடம் சென்றார். குந்தியின் குமாரரான அவர், அவ்விடத்தில் [2]பிரம்மத்தினுடையதான சரீரத்துடன்கூடினவரும் முன் பார்க்கப்பட்ட அந்தச் சரீரத்துடன் ஒத்திருப்பதினாலேயே அறிவிக்கப்பட்டவரும் தம் சரீரத்தினால் ஜ்வலிக்கின்றவரும் கோரமானவைகளும் சிறந்தவைகளும் புருஷவடிவமுள்ளவைகளும் திவ்யமானவைகளுமான சக்ரம்

---

1. வேறுபாடம்.
2. 'பிரம்மாவினால் ஆராதிக்கத் தகுந்த' என்பது பழைய உரை.

முதலான அஸ்திரங்களால் ஸேவிக்கப்பட்டவரும், வீரனும் அழகிய காந்தியுள்ளவனுமான அர்ஜுனனால் உபாஸிக்கப்படுகின்றவரும், அவ்வித ஸ்வரூபமுள்ளவரும் மதுஸூதனருமான கோவிந்தரைக் கண்டார். புருஷஶ்ரேஷ்டர்களும் தேவர்களால் பூஜிக்கப்பட்டவர்களுமான அவ்விருவர்களும் யுதிஷ்டிரரைப் பார்த்து வழக்கம்போலப் பூஜை செய்தார்கள். குருநந்தனரான யுதிஷ்டிரர், பிறகு, சஸ்திரதாரிகளுள் சிறந்தவனும் பன்னிரண்டு ஸூரியர்களோடுகூடினவனுமான கர்ணனை வேறு இடத்தில் பார்த்தார். பிறகு, வேறு இடத்தில், மருத்கணத்தால் சூழப்பட்டவனும் பிரபுவும் அந்தச் சரீரத்தோடேயே இருப்பவனும் சரீரமுள்ள வாயுவின் பக்கத்தில் திவ்யமான சரீரத்துடன் இருப்பவனும் சிறந்த ஒளியுள்ளவனும் மேலான ஸித்தியை அடைந்தவனுமான பீமஸேனனைப்பார்த்தார். குருநந்தனர், அவ்வாறே, அஶ்வினீதேவர்களுடைய ஸ்தானத்தில் தம் தேஜஸினால் ஜ்வலிக்கின்றவர்களான நகுலனையும் ஸஹதேவனையும் பார்த்தார். அவ்வாறே, தாமரை மலர்களாலும் குவளைமலர்களாலுமாகிய மாலையை அணிந்தவளும் சரீரத்தால் ஸ்வர்க்கத்தை விளங்கச் செய்பவளும் ஸூரியன்போன்ற ஒளியுள்ளவளுமான திரௌபதியைப் பார்த்தார். அப்பொழுது, யுதிஷ்டிரராஜர் விரைவாக [1] அவளைத் தொடவிரும்பினார்.

பிறகு, தேவராஜனும் பகவானுமான இந்திரன் அவரை நோக்கி, 'யுதிஷ்டிரரே! இவள், கர்ப்பத்தில் பிறவாதவளும் உலகங்களுக்குப் பிரியமானவளும் புண்ய ஸம்பந்தமுள்ளவளுமான லக்ஷ்மி. இவள் உமக்காகத் திரௌபதி வடிவமெடுத்துக்கொண்டு மானிடத்தன்மையை அடைந்தாள். இவள் உங்களுடைய போகத்திற்காகப் பரமசிவனால் படைக்கப்பட்டுத் துருபதனுடைய குலத்தில் பிறந்தாள், உங்களாலும் அநுபவிக்கப்பட்டாள். ராஜரே! சிறந்த பாக்கியமுள்ளவர்களும் அக்னியினுடைய ஒளிபோன்ற ஒளியுள்ளவர்களும் அளவற்ற பராக்ரமமுள்ளவர்களுமான இந்த ஐந்து கந்தர்வர்களும் உங்களுக்கும் திரௌபதிக்கும் புத்திரர்கள். திருதராஷ்டிரனென்னும் பண்டிதனான கந்தர்வராஜனைப் பாரும். நீர் இவனைத் தந்தையின் மூத்த ப்ராதா என்று தெரிந்து கொள்ளும். இவன், குந்தியின் குமாரனும் அக்னியின் ஒளிபோன்ற ஒளியுள்ளவனும் ஸூரியகுமாரனும் ரதிகஶ்ரேஷ்டனும் ராதேயனென்று பிரஸித்திபெற்றவனுமான உம்முடைய மூத்தஸஹோதரன்; ஆதித்யர்களுடன்கூடி விளங்குகிறான். புருஷஶ்ரேஷ்டனை இவனைப்

1. 'எல்லாவற்றையும் வினவ விரும்பினார்' என்பதுவேறுபாடம்.

பாரும். ராஜச்ரேஷ்டரே! மேலும், மஹாரதர்களான விருஷ்ணிகளை யும் அந்தகர்களையும் ஸாத்யகி முதலான வீரர்களையும் மிக்க பலமுள்ள வர்களான போஜர்களையும், ஸாத்யர்கள் தேவர்கள் விச்வேதேவர்கள் மருத்துக்கள் இவர்களுடைய கூட்டங்களில் பாரும். சந்திரனோடு சேர்ந்திருப்பவனும் ஸுபத்திரையின் புத்திரனும் (ஒருவராலும்) ஜயிக் கப்படாதவனும் சிறந்த வில்லாளியும் சந்திரனுக்குச் சமமான காந்தியுள் ளவனுமான அபிமன்யுவைப் பாரும். உம்முடைய பிதாவும் சிறந்த வில்லாளியுமான இந்தப் பாண்டுவானவர் குந்தியுடனும் மாத்ரியுடனும் கூடி விமானத்துடன் எப்பொழுதும் என்னுடைய அருகில் வருகிறார். வஸுக்களுடன் சேர்ந்தவரும் சந்தனுவின் புத்திரரும் அரசருமான பீஷ்மரைப் பாரும். பிருஹஸ்பதியின் பக்கத்தில் குருவான இந்தத் துரோணரைப் பாரும். பாண்டவரே! மற்றுமுள்ள இந்த மன்னர்களும் உம்முடைய யுத்தவீரர்களும் கந்தர்வர்களுடனும் யக்ஷர்களுடனும் [1]புண்ய ஜனங்களுடனும்கூடினவர்களாகச் செல்லுகின்றனர். சில அரசர் கள் குஹ்யகர்களுடைய கதியை அடைந்தார்கள். பரிசுத்தமான வாக்கும் புத்தியும் செய்கையும் உடையவர்களால் சரீரத்தைவிட்டு ஸ்வர்க்கம் ஜயிக்கப்பட்டது என்று கூறினேன்" என்று சொன்னார்.

## ஐந்தாவது அத்யாயம்

—:0:—

(பீஷ்மர் முதலியவர்கள் ஸ்வர்க்கத்தை அநுபவித்துத் தம்தம் தேவருபத்திற் கலந்ததும், ஜனமேஜயர் ஆஸ்தீகர் முதலியவர்களைப் பூஜித்து யாகத்தை முடித்து ஹாஸ்தினபுரம் வந்து அரசாட்சி செய்ததும், ஸூதர் பாரதகதையை முடித்து அதன் மஹிமையைக் கூறியதும்.)

ஜனமேஜயர், "மஹாத்மாக்களான பீஷ்மர் துரோணர் இருவர் களும் திருதராஷ்டிரராஜனும் விராடன் துருபதன் இருவர்களும் சங்க னும் உத்தரனும் திருஷ்டகேதுவும் ஜயத்ஸேனனும் ஸத்யஜித் என்னும் அந்த அரசனும் துரியோதனனுடைய புத்திரர்களும் ஸுபல புத்திரனான சகுனியும் பராக்ரமசாலிகளான கர்ணபுத்திரர்களும் அரசனான ஜயத்

1. தேவலோக வாஸிகளில் ஒருவகையார்; ராக்ஷஸர் என்னும் பொருளில் வழங்குகிறது.

ரதனும் கடோத்கசன் முதலானவர்களும் சொல்லப்படாதவர்களான மற்றவர்களும் சொல்லப்பட்டவர்களும் வீரர்களும் ஜ்வலிக்கின்ற சரீரமுள்ளவர்களுமான மற்ற அரசர்களும் ஸ்வர்க்கத்தில் எவ்வளவு காலம் இருந்தார்கள்? அதனையும் எனக்குச் சொல்லும். பிராம்மணஸ்ரேஷ்டரே! அல்லது, அவர்கள் அவ்விடத்திலேயே எந்நாளும் இருந்தார்களா? அந்தப் புருஷஸ்ரேஷ்டர்கள் கர்மங்களின்முடிவில் எந்தக் கதியை அடைந்தார்கள்? பிராம்மண ஸ்ரேஷ்டரே! இதனை (உம்மால்) சொல்லப்பட்டு நான் கேட்க விரும்புகிறேன். நீர் எல்லாவற்றையும் ஜ்வலிக்கின்ற தவத்தால் பார்க்கிறீரல்லவா?" என்று வினவினர். இவ்விதம் வினவப்பட்டவரும் மஹாத்மாவான வியாஸரால் அனுமதி கொடுக்கப்பட்டவரும் பிரம்மரிஷியுமான அந்த வைசம்பாயனர் அந்த அரசருக்கு (அவற்றை) விரித்துரைக்கத் தொடங்கினர்.

"மனிதர்களுக்குப் பிரபுவே! ராஜரே! பரதஸ்ரேஷ்டரே! கர்மங்கள் முடிந்தவுடன் எல்லாராலும் அடையத்தகுந்ததும் தேவர்களுக்கும் ரஹஸ்யமுமான இதைக் கேளும். கௌரவ்யரே! இதைச் சிறந்த தேஜஸுள்ளவரும் திவ்ய நேத்திரமுள்ளவரும் பிரதாபமுள்ளவரும் புராதனரும் சிறந்த விரதமுள்ளவரும் ஆழ்ந்த புத்தியுள்ளவரும் எல்லாவற்றையுமறிந்தவரும் எல்லாக் கர்மங்களின் கதியையும் அறிந்தவருமான வியாஸமுனிவர் சொன்னார். 'கர்மங்களின் முடிவில் தம் தம் சரீரத்தை அடைந்தார்கள்' என்று அவரால் சொல்லப்பட்டது. பரதஸ்ரேஷ்டரே! சிறந்த பராக்ரமமுள்ளவரும் சிறந்த ஒளியுள்ளவருமான பீஷ்மரானவர் வஸுக்களையே அடைந்தார். எட்டு வஸுக்களே காணப்படுகின்றனரல்லவா? துரோணரானவர், ஆங்கிரஸின் புத்திரர்களுள் சிறந்தவரான பிருஹஸ்பதியினிடம் பிரவேசித்தார். ஹார்த்திக்யனான கிருதவர்மாவோ மருத்கணங்களில் பிரவேசித்தான். ப்ரத்யும்னன் வந்தது போலவே ஸனத்குமாரரிடம் ப்ரவேசித்தான். திருதராஷ்டிரனும் அவனுடன் கூடப் புகழ்பெற்றவளான காந்தாரியும் அடைவதற்கு அரியனவான குபேரனுடைய உலகங்களை அடைந்தார்கள். பாண்டுவானவன் இரண்டு பத்தினிகளுடனும் மஹேந்திரனுடைய ஆலயம் சென்றான். விராடன் துருபதன் இருவர்களும் அரசனான திருஷ்டகேதுவும் நிசடனும் அக்ரூரரும் ஸாம்பனும் பானுவும் [1]கம்பனும் விதூரதனும் பூரிஸ்ரவஸும் சலனும் பூபதியான பூரியும் கம்ஸனும் உக்ரஸேனனும் வஸுதேவரும் புருஷஸ்ரேஷ்டனான உத்தரனும் (அவனுடைய) பிராதாவான சங்க

1. வேறுபாடம்.

னும் ஆகிய புருஷஸ்ரேஷ்டர்களான அவர்கள் விஸ்வேதேவர்களிடம் பிரவேசித்தார்கள். சிறந்த பராக்ரமமுள்ளவனும் பிரதாபமுள்ளவனும் ஸோமபுத்திரனுமான வர்ச்சஸ் என்பவன் புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனனுக்கு அபிமன்யுவென்னும் புத்திரனாகப் பிறந்தான். தர்மாத்மாவும் மஹாரதனுமான அவன் ஒருவராலும் மற்ற மனிதனால் செய்யப்படாததான யுத்தத்தை க்ஷத்திரிய முறைப்படி செய்து கர்மாவின் முடிவில் ஸோமனிடம் பிரவேசித்தான். புருஷஸ்ரேஷ்டரே! கொல்லப்பட்டவனான கர்ணன் ஸூரியனிடத்தில் பிரவேசித்தான். சகுனி துவாபரத்தை அடைந்தான். திருஷ்டத்யும்னன் அக்னியை அடைந்தான். திருதராஷ்டிரனுடைய புத்திரர்களெல்லாரும் ராக்ஷஸர்களை அடைந்தார்கள். விதுரரும் யுதிஷ்டிரராஜரும் தர்மராஜனிடத்திலேயே பிரவேசித்தார்கள். பகவானும் தேவருமான [1]பலராமர் பிதாமஹருடைய ஆஜ்ஞையினால் யோகம் செய்து பாதாளத்தில் பிரவேசித்துப் பூமியைத் தரித்தார். தேவர்களுக்கும் தேவரும் ஸநாதனரும் பிரஸித்திபெற்றவருமான அந்த நாராயணருடைய அம்சமான வாஸுதேவரோ (தாம் செய்யவேண்டிய) காரியத்தின் முடிவில் அவரிடத்திலேயே பிரவேசித்தார். ஜனமேஜயரே! வாஸுதேவருடைய மனைவிகளான அந்தப் பதினாறாயிரம் ஸ்திரீகளும் (சிறிது) காலத்தில் ஸரஸ்வதியில் முழுகி அதில் சரீரங்களை விட்டுவிட்டு ஸ்வர்க்கம் சென்று அப்ஸரஸுகளாகி மறுபடியும் வாஸுதேவரிடம் சென்றார்கள். அந்தப் பெரிய போரில் கொல்லப்பட்டவர்களும் வீரர்களும் மஹாரதர்களுமான கடோத்கசன் முதலானவர்கள் தேவர்களையும் யக்ஷர்களையும் அடைந்தார்கள். அரசரே! துர்யோதனனுக்கு ஸஹாயர்களாயிருந்த எந்த ராக்ஷஸர்கள் (என்றால்) சொல்லப்பட்டார்களோ அவர்கள் கிரமமாக மிகச் சிறந்தவைகளான எல்லா உலகங்களையும் அடைந்தார்கள். புருஷஸ்ரேஷ்டர்கள், இந்திரன் குபேரன் வருணன் இவர்களுடைய உலகங்களை அடைந்தார்கள். சிறந்த ஒளியுள்ளவரே! பாரதரே! கௌரவர்கள் பாண்டவர்கள் இவர்களுடைய இந்த எல்லாச் சரித்திரத்தையும் உமக்கு முழுதும் விஸ்தாரமாகச் சொன்னேன்'' என்று சொன்னார்.

அந்த ஜனமேஜயராஜர், யாககர்மங்களில் இடைக் காலங்களில் பிராம்மணஸ்ரேஷ்டரான வைசம்பாயனரிடமிருந்து இதைக் கேட்டு மிக்க ஆச்சரியமடைந்தவரானார். பிறகு, [2]யாஜகர்கள் அவருடைய

1. 'அனந்த:' என்பது மூலம்.

2. யாகம் செய்விப்பவர்கள் ருத்விக்குக்கள்.

அந்தக்கர்மாவை முடிவுபெறச் செய்தார்கள். ஆஸ்திகரும் ஸர்ப்பங்களை விடுதலை அடையும்படிசெய்து ஸந்தோஷமுள்ளவரானார். பிறகு, ஜனமேஜயர் அந்த எல்லாப் பிராம்மணர்களையும் தக்ஷிணைகளால் ஸந்தோஷமடையும்படி செய்தார். ஜனமேஜயராஜரால் பூஜிக்கப்பட்டவர்களான அவர்களும், பிறகு, வந்ததுபோலச் சென்றார்கள். அந்த ஜனமேஜயராஜரும் அந்தப்பிராம்மணர்களை அனுப்பிவிட்டு ஸந்தோஷத்துடன் தக்ஷசிலையிலிருந்து மறுபடியும் ஹஸ்தினபுரம் வந்தார். ஜனமேஜயராஜருடைய ஸர்ப்பயாகத்தில் வியாஸருடைய அனுமதியினால் வைசம்பாயனரால் சொல்லப்பட்டதும் (என்னால்) நன்கு அறியப்பட்டதுமான இக்கதைச் சரித்திரத்தை முழுதும் சொன்னேன்.

பிராம்மணரே! புண்யமும் பவித்ரமும் உத்தமுமான இதிஹாஸமென்று பெயருள்ள இந்தக்கிரந்தமானது, ஸத்யவாதியும், ஸர்வஜ்ஞரும், விதியை அறிந்தவரும், தர்மத்தைப்பற்றிய ஞானமுள்ளவரும், வித்வானும்,[1] அதீந்திரியரும், பரிசுத்தரும், தவத்தால் பரிசுத்தமாகச்செய்யப்பட்டசித்தமுள்ளவரும்,ஐஶ்வர்யத்தில்நிலைபெற்றவரும், ஸாங்கியமும் யோகமுமுள்ளவரும், அநேக [2]தந்திரங்களை நன்கு அறிந்தவரும், மஹாத்மாக்களான பாண்டவர்கள் மிகுதியான செல்வமும் பராக்ரமமுமுள்ள மற்ற க்ஷத்திரியர்கள் இவர்களுடைய கீர்த்தியையும் தேவர்களுக்கும் தேவரும் சார்ங்கபாணியுமான வாஸுதேவருடைய விளையாட்டையும் எல்லாத்தேவர்களுடைய அம்சங்களின் பிறப்பையும் ஸாயுஜ்யத்தையும் உலகத்தில்பிரஸித்தப்படுத்துகின்றவருமான வியாஸமுனிவரால் திவ்யதிருஷ்டியினால் பார்த்துச் செய்யப்பட்டது. வித்வானும் பிராம்மணஶ்ரேஷ்டனுமான எவன் இதைப்பர்வங்களில் கேட்பனோ அவன் பாவங்களைஉதறியவனும் ஸ்வர்க்கத்தைஜயித்தவனுமாகி மோக்ஷத்தை அடையத் [3]தகுந்தவனாகிறான். வியாஸரால் செய்யப்பட்ட இந்த வேதத்தை முழுதும் எவன் மனவடக்கத்துடன் கேட்பனோ (அவனுடைய) பிரம்மஹத்தியினால் உண்டுபண்ணப்பட்ட பாபமும் அந்த க்ஷணத்திலேயே நசிக்கிறது. எவன் இதை ஶ்ராத்தத்தில் பிராம்மணர்களை அருகிலிருந்துகொண்டு ஒருஶ்லோகத்தில் நான்கிலொரு பாகத்தையாவது கேட்கச் செய்வனோ அவனுடைய பித்ருக்களை அன்னமும் பானமும் குறைவின்றி அடைகின்றன. [4]ஸாயங்காலத்தில் மஹாபாரதத்தைப் படித்தால் பகலில் இந்திரியங்களாலும் மனத்தாலும் செய்த

1. இந்திரியங்களை வசப்படுத்தினவர். 2. ஸித்தாந்தங்களை

3. 4. வேறுபாடம்.

பாபத்தினின்று விடப்படுவான். பிராம்மணன் காலையில் மஹாபாரதத்தைப்படித்தால், ஸ்திரீகளுடைய கூட்டங்களால் சூழப்பட்டு இரவில் செய்தபாபத்தினின்று விடப்படுகிறான். இது [1]மஹத்தாக இருப்பதினா லும் [2]பாரமுள்ளதாக இருப்பதினாலும் மஹாபாரதமென்று சொல்லப் படுகிறது. இதனுடைய [3]நிருக்தத்தை எவன் அறிகிறானோ அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடப்படுகிறான். பதினெட்டுப் புராணங் களும் எல்லாத் தர்மசாஸ்திரங்களும் அங்கங்களுடன் கூடின வேதங் களும் ஒரு தட்டிலும் பாரதம் ஒரு தட்டிலும் இருக்கின்றன. மஹாத் மாவும் பதினெட்டுப் புராணங்களையும் செய்தவரும் வேதத்திற்குப் பெருங்கடலாயிருப்பவருமான அந்த முனிவருடைய இந்த வஸிம்மநாத மானது கேட்கப்படட்டும். பிரபுவும் பகவானுமான வியாஸமுனிவர், சிறந்ததும் புண்யமுமான இந்தப்பாரதம் முழுதினையும் மூன்றுவருஷங் களில் செய்தார். ஜயமென்று பெயருள்ள (இந்த) மஹாபாரதத்தை எப்பொழுதும் பக்தியுடன் கேட்டால் அவனுக்குச் செல்வமும் புகழும் கல்வியும் எப்பொழுதும் சேர்ந்தே உண்டாகின்றன. பரதச்ரேஷ்டரே! அறம் பொருள் இன்பம் வீடுகளைப்பற்றி இதில் உள்ளதுதான் மற்றதி லும் இருக்கின்றது. இதில் இல்லாதது ஓரிடத்திலும் இல்லை. ஜய மென்று பெயருள்ள மஹாபாரதமானது எப்பொழுதும் எவ்விடத்தில் படிக்கப்படுகிறதோ அவ்விடத்தில் ஸ்ரீயும் கீர்த்தியும் வித்தையும் எப் பொழுதும் ஸந்தோஷமாக இருக்கின்றன. அக்காலத்தில் ஜனமேஜயர் முதலான அரசர்களும் ஆஸ்திகர் முதலான பிராம்மணர்களும் தர்மதத் தன் முதலான வைச்யர்களும் ஸோமச்ரவஸ்ஸு முதலான சூத்திரர் களும், பாரதத்தைச் சொல்லுகின்றவரும் பிரம்மரிஷியும் மஹாகுருவு மான வைசம்பாயனரைப் பொற்பீடத்தில் வீற்றிருக்கச் செய்து மஹா குருவான அவரை லக்ஷம் நிஷ்கங்களாலும் பதினாயிரம் நிஷ்கங்களா லும் ஆயிரம் நிஷ்கங்களாலும் நூறுநிஷ்கங்களாலும் பத்து நிஷ்கங்களா லும் பூஜித்தார்கள். மரித்துப்பிறக்கும் புத்திரனுள்ளவன் பத்து நிஷ்கங் களைக்கொடுத்து மரிக்காதபுத்திரனுள்ளவனானான். ஜ்வரம்முதலானவியா திகளுள்ளவன் நூறு நிஷ்கங்களைக் கொடுத்து வியாதியற்றவனானான். ஸந் ததியில்லாதவன் ஆயிரம் நிஷ்கங்களைக்கொடுத்துப் புத்திர ஸந்ததியுள்ள வனானான். அவர்கள் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் ஐச்வரியத்தையும்

---

1. பெரிதாக இருப்பது 2. கௌரவமுள்ளது.
3. பெயரின் உறுப்புக்களைப் பிரித்துப் பொருள் சொல்வது.

அன்னத்தையும் புத்திரர்களையும் அடைந்தார்கள். ஸுவர்ணத்தையும் வெள்ளியையும்ரத்தினத்தையும் எல்லா ஆபரணங்களையும் எல்லாஸாமக்ரிகளோடுங்கூடினதும் புதையலுடனும் பொக்கசத்துடனும் கூடினதும் செங்கல்லுகளாலாகிய சுவர்களுடன் கூடினதும் அக்னிபாதை முதலானவை அற்றதும் தேவர்களைப் பூஜிப்பதற்கும் அக்னிஹோத்ரம் முதலானவை செய்வதற்கும் படிப்பதற்குமுள்ள வீடுகளுள்ளதும் உள்ளிலும் வெளியிலும் மதில்களுள்ளதும் உப்பரிகைகளுடன்கூடினதும் கோசாலைகளுடன் கூடினதுமான வீட்டை ஸ்வர்க்காரோஹணபர்வத்தைக் கேட்கும் காலத்தில் தனித்தனியாகவாவது சேர்த்தாவது கொடுக்கவேண்டும். மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனுக்குக் கொடுத்தால், (அவனுக்கு) மறுபடியும் பிறப்பில்லை. ஆசையுள்ளவனாக இருந்தால் பிரம்ம கல்பம் வரையில் பிரம்மாவின் கிருஹத்தில் ஸுகமாக வஸிப்பான். புராணத்தின் முகமாக வேதாந்தஜ்ஞானமானது அடையப்படுகிறது. ஆகையினால், அவர் குருவென்று சொல்லப்பட்டார். அவரைப்பூஜிப்பது ஈஶ்வர பூஜையாகும். பாரதத்தைச் சொல்லுகின்றவனையும் கேட்பவர்களையும் எழுதுகின்றவர்களையும், ஸித்தர்களும் பரமரிஷிகளும் மிக்கஸந்தோஷத்துடன் பூஜிக்கிறார்கள். மஹாபாரதத்தைச் சொல்பவனை இவ்வுலகில் எந்தமனிதர்கள் பூஜிக்கவில்லையோ அவர்களுடைய எல்லாநற்கர்மங்களும் நசித்துவிடும் தேவர்களும் சபிப்பார்கள். ஜயமென்று பெயருள்ள இந்த இதிஹாஸமானது ஜயத்தை விரும்புகின்ற [1]அரசனாலும் அரசகுமாரர்களாலும் கர்ப்பிணியான ஸ்திரீயினாலும் கேட்கத்தக்கது. ஸ்வர்க்கத்தை விரும்புகின்றவன் ஸ்வர்க்கத்தை அடைவான். ஜயத்தை விரும்புகிறவன் ஜயம் பெறுவான். கர்ப்பிணியானவள் புத்திரனையாவது மிக்க பாக்கியமுள்ள புத்திரியையாவது அடைவாள். நித்யஸித்தரும் முக்திபெற விருப்பமுள்ளவரும் பிரபுவுமான வியாஸர் இந்தப் பாரதத்தின் [2]ஸந்தர்ப்பத்தைத் தர்மத்தில் விருப்பத்துடன் செய்தார். அவர் (நான்கு) வேதங்களையும் காட்டிலும் வேறான அறுபது லக்ஷம் [3]ஸம்ஹிதைகளைச் செய்தார். (அவற்றுள்) தேவலோகத்தில் முப்பது லக்ஷங்களும் பித்ருலோகத்தில் பதினைந்து லக்ஷங்களும் யக்ஷலோகத்தில் பதினான்கு லக்ஷங்களும் வைக்கப்பட்டனவென்று அறியவேண்டும். ஒரு லக்ஷம் ஸம்ஹிதைகள் மானிடலோகங்களில் சொல்லப்பட்டன. நாரதர் தேவர்களுக்கும், அஸிதரென்னும்தேவலர் பித்ருக்களுக்கும், சுகர்

1. 'பிராம்மணனாலும், அரசனாலும்' என்பது வேறுபாடம்.
2. கதையின் பொருத்தம். 3. பதங்களின் சேர்க்கை.

ராக்ஷஸர்களுக்கும் யக்ஷர்களுக்கும், வைசம்பாயனர் மனிதர்களுக்கும் சொன்னார்கள். சௌனகரே! புண்யமும் சிறந்த அர்த்தமுள்ளதும் வேதத்திற்கொப்பானதும் வியாஸரால் சொல்லப்பட்டதுமான இந்த இதிஹாஸத்தை எவன் பிராம்மணனை முன்னால்வைத்துக்கொண்டு கேட்கிறானோ அந்தமனிதன் இவ்வுலகில் எல்லா இஷ்டங்களையும் கீர்த்தியையும் அடைந்து மேலான ஸித்தியையும் அடைவான். இதில் எனக்கு ஸம்சயமில்லை. புண்யமான இந்த ஸம்ஹிதையைப் புத்திரரான சுகருக்கு ஓதுவித்த வியாஸரிடத்தில் மிக்க ஶ்ரத்தையுடனும் பக்தியுடனும் ஶ்லோகத்தின் நான்கிலொருபாகத்தையாவது படித்துப் பிறருக்குச் சொல்பவன் பாரதத்தை (முழுதும்) அத்தியயனம்செய்த புண்ணியத்தை அடைந்து (மேலான ஸித்தியை அடைவான்). (அவனால்) 'ஸம்ஸாரங்களில் அனுபவிக்கப்பட்டவர்களும் வந்திருக்கிறவர்களும் வரப்போகின்றவர்களுமான ஆயிரக்கணக்கான தாய் தந்தையர்களும் நூற்றுக்கணக்கான மக்கள் மனைவிகளும் (மேலான கதியை) அடைவார்கள், ஆயிரக்கணக்கான ஸந்தோஷகாரணங்களும் நூற்றுக்கணக்கான பயகாரணங்களும் தினந்தோறும் மூடனை அடைகின்றன; பண்டிதனை அடைகிறதில்லை. நான், கைகளை உயரத் தூக்கிக்கொண்டு உரக்கச் சொல்லுகிறேன். என்னுடைய வார்த்தையை ஒருவரும் கேட்கவில்லை. தர்மத்தால் பொருளும் இன்பமும் உண்டாகின்றன. அந்தத் தர்மம் ஏன் அநுஷ்டிக்கப்படவில்லை? காமத்தினாலாவது பயத்தினாலாவது ஆசையினாலாவது ஜீவனத்தின் நிமித்தமாகவாவது தர்மத்தை ஒருகாலும் விடக்கூடாது. தர்மம் நித்யமானது. ஸுக துக்கங்களோ அநித்யமானவை. ஜீவன் நித்யமானது. அதற்குக் காரணமோ அநித்யமானது' என்னும் இந்தப் பாரதஸாவித்ரியை எவன் விடியற்காலையில் எழுந்திருந்து படிப்பானோ அவன் பாரதத்தைப்படித்த பயனை அடைந்து பரப்ரம்மத்தை அடைவான். பெருமை பொருந்திய ஸமுத்திரமும் இமயமலையும் இரண்டும் ரத்தினங்களுக்கு நிதிகளென்று பிரஸித்தமானவைகளாக இருப்பதுபோலப் பாரதமும் (ரத்தினங்களுக்கு நிதியாகச்) சொல்லப்படுகின்றது. வித்வானானவன் வியாஸரால் செய்யப்பட்ட இந்த வேதத்தைப் பிறருக்குச் சொன்னால், பொருளை அடைவான். எவன் மிக்க மனவடக்கத்துடன் இந்தப்பாரதமென்னும் ஆக்யானத்தைப்படிப்பனோ அவன் சிறந்தஸித்தியை அடைவான். இது விஷயத்தில் எனக்கு ஸந்தேகமில்லை. எவன் வியாஸருடைய உதடுகளினின்று வெளிப்பட்டதும் அறியமுடியாதமஹிமையுள்ளதும்

புண்யமும் பவித்ரமும் பாவத்தைக் கவர்வதும் சுபமுமான பாரதத்தை (ஒருவர்) சொல்லும்பொழுது நன்கு தெரிந்துகொள்கிறனோ அவனுக்குப் புஷ்கரஜலங்களில் ஸ்நானத்தினால் என்ன பயன்? ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட நூறு பசுக்களை வேதத்தைஅறிந்தவனும் அதிகமானசாஸ்திரங்களைப் படித்தவனுமான பிராம்மணனுக்குக் கொடுப்பவனுக்கும் புண்யமான பாரதகதையை எப்பொழுதும் கேட்பவனுக்கும் ஸமமானபயன்கிடைக்கின்றது. ஆஸ்திகனும் புத்தியுள்ளவனுமான புருஷன் ச்ரத்தையோடு கூடினவனும் ஸந்தோஷமுள்ளவனுமாக இருந்துகொண்டு (பாரதத்தைக்) கேட்டால் மிக்க இஷ்டமான விருப்பத்தையெல்லாம் அடைவான். எந்த வித்வான் சுத்தனாக இருந்துகொண்டு தாமரைமலர்போல நீண்டகண்களுள்ளவரானவாஸுதேவரை நினைத்துக்கொண்டு அவரிடத்தில் சென்ற மனமுள்ளவனாகிப் புண்யமும் சிறந்த பொருளுள்ளதும் வேதத்திற்கொப்பானதுமான இந்த இதிஹாஸத்தைப் பிராம்மணனை முன்னால் வைத்துக்கொண்டு (மற்ற) வர்ணத்தார் முதலானவர்களைக் கேட்கும்படி செய்வனோ அவன் எல்லாப் பாவங்களும் தொலைந்து பரிசுத்தமான ஆத்மாவுள்ளவனாகி இவ்வுலகில் புகழ் பெற்றுப் போகங்களை அடைந்து சிறந்த ஸுகத்தை அனுபவித்து, பிறகு, வியாஸருடைய அனுக்கிரஹத்தால் ஸ்வர்க்கலோகத்தை அடைவான். த்விஜனானவன் இதனை முழுதும் தெரிந்துகொண்டால் எல்லா வேதங்களின் அர்த்தங்களையும் அறிந்தவனும் எப்பொழுதும் பூஜிக்கத்தக்கவனும் கௌரவிக்கத்தக்கவனுமாவான்'' என்று சொன்னார்.

---

## ஸ்வர்க்காரோஹணபர்வம் முற்றிற்று.

### *மஹாபாரதச்ரவணவிதி அத்யாயம்.

-:0:-

ஜனமேஜயர், "பகவானே! வித்வான்கள் பாரதத்தை எந்த விதியுடன் கேட்கவேண்டும். பயன் என்ன? இதைப் [1]பாராயணம் செய்யும்

---

* இந்த அத்யாயம் ஹரிவம்சத்தில் உள்ளது. மஹாபாரதத்தைப் படிப்பவர்களின் உபயோகத்திற்காக இங்கே சேர்க்கப்பட்டுள்ளது.

1. 'பாரணேஷு' என்பது மூலம்;' மஹாபாரதத்தை விதிப்படி ஒரு முறைப்படித்து முடிப்பது' என்பர். 'ஒருமுறை உட்கார்ந்து படித்து முடிக்கும் அளவு'என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

காலங்களில் எந்தத் தேவதைகளைப் பூஜிக்கவேண்டும்? பகவானே! ஒவ்வொரு பர்வமும் முடிந்தவுடன் எதைத் தானம் செய்யவேண்டும்? இதைச் சொல்லுகிறவன் எப்படிப்பட்டவனாக இருக்க வேண்டுமென்று விரும்பத்தக்கவன்? இதனை எனக்கு சொல்லும்'' என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்.

"அரசரே! ராஜேந்திரரே! நீர் என்னிடம் வினவியதாகிய இந்த விதியையும் பாரதத்தைப்படிப்பதாலுண்டாகும்பயனையும்கேளும். பூபாலரே! தேவர்கள் விளையாட்டிற்காக ஸ்வர்க்கத்திலிருந்து பூமிக்கு வந்து இந்தக் காரியத்தையும் செய்துவிட்டு, பிறகு, ஸ்வர்க்கம் சென்றார்கள். ரிஷிகளும் தேவதைகளும் பூமியில் பிறந்ததைப்பற்றி நான் உமக்குக் கருணையுடன் சொல்லுகிறதை ஜாக்கிரதையாகக் கேளும். பரதஸ்ரேஷ்டரே! ருத்திரர்களும் ஸாத்யர்களும் சாஸ்வதர்களான விஸ்வேதேவர்களும் ஆதித்யர்களும் அஸ்வினிதேவர்களும் லோகபாலர்களும் மஹரிஷிகளும் குஹ்யகர்களும் கந்தர்வர்களும் நாகர்களும் வித்யாதரர்களும் ஸித்தர்களும் தர்மமும் ஸ்வயம்புவும் சிறந்தவரான காத்யாயனரென்னும் முனிவரும் மலைகளும் ஸமுத்திரங்களும் நதிகளும் அப்ஸரஸுகளின் கூட்டங்களும் கிரஹங்களும் ஸம்வத்ஸரங்களும் அயனங்களும் ருதுக்களும் சராசரஸ்வரூபமான ஜகத்தும் எல்லாத் தேவாஸுரர்களும் இந்தப்பாரதத்தில் ஒரேஇடத்தில் இருக்கின்றவர்களாகக் காணப்படுகின்றனர். மனிதன் அவர்களுடைய பிரதிஷ்டையைக் கேட்டுப் பெயரையும் செய்கையையும் கீர்த்தனஞ்செய்தால் கொடிய பாபத்தைச் செய்திருந்தாலும் (அதினின்று) உடனே விடப்படுவான். மனிதன் சித்தத்தை அடக்கியவனும் சுத்தனுமாயிருந்துகொண்டு இந்த இதிஹாஸத்தை உள்ளபடி முறையாகக்கேட்டு முடிக்கவேண்டும். பரதஸ்ரேஷ்டரே! பாரதத்தைக்கேட்ட பிறகு, [1]அவர்களை உத்தேசித்துச் சக்திக்குத்தக்கவாறு பக்தியுடன் பிராம்மணர்களுக்கு ஸ்ராத்தங்கள் கொடுக்கத்தக்கவை. மஹாதானங்களும் கொடுக்கத்தக்கவை. பலவித ரத்தினங்களும் கறக்க வெண்கலப் பாத்திரத்துடன் கோக்களும் நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களும் எல்லா இஷ்டங்களுடனும் குணங்களுடனும் கூடினவர்களுமான கன்னிகைகளும் பலவித விமானங்களும் விசித்ரமான வீடுகளும் பூமியும் வஸ்திரங்களும் ஸுவர்ணமும் வாகனங்களும் குதிரைகளும் மதங்கொண்ட யானைகளும் படுக்கையும் பல்லக்குக்களும் நன்கு அலங்கரிக்கப்பட்ட ரதங்களும் கொடுக்கத்தக்கவை. வீட்டில் எந்த எந்

1. மஹாபாரதத்தில் கூறப்பட்ட ரிஷ்யாதிகள்.

வஸ்து சிறந்ததாக இருக்கிறதோ எந்த எந்தச் சிறந்ததனம் இருக்கிறதோ அவைகளும் ஆத்மாவும் மனைவியும் மக்களும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்கவை. கேட்க விருப்பமுள்ளவன் நல்ல சித்தமுள்ளவனும் ஸந்தோஷமுள்ளவனும் உண்மையிலும் நேர்மையிலும் ஆசையுள்ளவனும் இந்திரியங்களை அடக்கியவனும் சுத்தனும் சுத்தமான சித்தமுள்ளவனும் ச்ரத்தையுள்ளவனும் கோபத்தை ஜயித்தவனுமாக இருந்துகொண்டு மிக்க ச்ரத்தையுடன் முடிந்தவரையில் கிரமமாக அந்தப் பாரதத்தின் முடிவை அடைந்து பாபமற்றவனாகி ஸித்தியை அடையும் விதத்தைக் கேளும்.

சுத்தனும் நல்லஸ்வபாவமும் ஒழுக்கமுமுள்ளவனும் வெள்ளைபாடை உடுத்தவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் ஸம்ஸ்காரம் பெற்றவனும் எல்லாச் சாஸ்திரங்களையும் அறிந்தவனும் ச்ரத்தையுள்ளவனும் அஸூயையில்லாதவனும் சிறந்த வடிவமுள்ளவனும் அழகுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனும் ஸத்தியவாதியும் இந்திரியங்களை ஜயித்தவனும் கொடையும் கௌரவமும் பொருந்தியவனுமாக இருப்பவன் சொல்லுகிறவனாகச் செய்யப்படத் தகுந்தவன். சொல்லுகிறவன் கவலையற்றவனும் நன்கு மனஅடக்கமுள்ளவனுமாக நன்கு உட்கார்ந்துகொண்டு தாமதமில்லாமலும் ச்ரமமில்லாமலும் வேகமில்லாமலும் வித்வான்களால் பூஜிக்கப்பட்டதாகவும் அக்ஷரங்களும் பதங்களும் கலக்காமலும் ஸ்வரத்தோடும் அபிப்பிராயத்தோடும் கூடினதாகவும் [1]அறுபத்துமூன்று அக்ஷரங்களோடு கூடினதாகவும் [2]எட்டுஸ்தானங்களினின்றும் உண்டானதாகவும் இருக்கும்படி சொல்லவேண்டும். நாராயணரையும் நரோத்தமனை நரனையும் ஸரஸ்வதீதேவியையும் வியாஸரையும் நமஸ்கரித்து, பிறகு, ஜயமென்னும் பாரதத்தைச் சொல்லவேண்டும். ராஜரே! பாரதரே! கேட்பவன் நியமமுள்ளவனும் சுத்தனுமாக இருந்துகொண்டு இவ்விதமாக இருக்கும் சொல்லுகிறவனிடமிருந்து பாரதத்தைக் கேட்டால் அவன் கேட்டதினாலாகிய பயனை அடைவான். மனிதன் முதன்முறை முடித்தலை அடைந்து பிராம்மணர்களை இஷ்டங்களால் திருப்தியடையும்படி செய்தால், அக்னிஷ்டோமமென்னும் யாகத்தின் பயனை அடைகிறான்.

---

1. எழுதக்கூடிய 52 அக்ஷரங்களும், எழுதக்கூடாமல் ஒலிவடிவமாக மாத்ரமுள்ள நாதம் முதலிய 11 அக்ஷரங்களும்.

2. அக்ஷரங்கள் பிறக்குமிடம் எட்டு. அவை:—மார்பு, மிடறு, தலை, நாவினடி, பற்கள், மூக்கு உதடுகள், மேலவாய் என்பன.

அவன் அப்ஸரஸ்ஸுகளுடைய கூட்டங்களால் நிறைந்ததும் சிறந்தது மான விமானத்தை அடைந்து ஸந்தோஷத்துடன் தேவர்களோடு கூடின வனாக ஸ்வர்க்கம் செல்வான். இரண்டாமுறை பூர்த்தி செய்தவன் அதிராத்ரமென்னும் யாகத்தின் பயனை அடைந்து எல்லா ரத்தினங்களாலும் செய்யப்பட்டதும் திவ்யமுமான விமானத்திலேறி (தேவலோகம் சென்று) திவ்யமான மாலையும் வஸ்திரமும் தரித்தவனும் திவ்யமான சந்தனத்தால் அலங்கரிக்கப்பட்டவனும் திவ்யமான தோள்வளை அணிந்தவனுமாக எப்பொழுதும் தேவலோகத்தில் பூஜிக்கப்படுவான். மூன்றாமுறை பூர்த்தி செய்தவன் த்வாதசாஹமென்னும் யாகத்தின் பயனை அடைந்து தேவனுக்கொப்பானவனாகி பதினாயிரம் வருஷங்கள் தேவலோகத்தில் வஸிப்பான். நான்காவதுமுறை வாஜபேயத்தின் பயனை அடைந்தும் ஐந்தாவதுமுறை வாஜபேயத்தின் இரண்டு மடங்கு பயனை அடைந்தும் உதித்த ஸூரியனுக்கொப்பானதும் அக்னிபோல் ஜ்வலிக்கின்றதுமான விமானத்தில் தேவர்களோடுகூட ஏறி ஸ்வர்க்கம் சென்று அங்கு பதினாயிரம் வருஷங்கள் இந்திரனுடைய வீட்டில் மகிழ்வான். ஆறாவதுமுறை இரண்டு மடங்கு பயனும் ஏழாவதுமுறை மூன்று மடங்கு பயனும் கிடைக்கும். கைலாஸ பர்வதத்தின் கொடுமுடி போன்ற ஸ்வரூபமுள்ளதும் வைடூர்யமணிகளாலாகிய மேடைகளுள்ளதும் பலவிதமாக நாற்புறங்களிலும் செல்லுகின்றதும் மணிகளாலும் பவளங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் இஷ்டப்படி செல்வதும் அப்ஸரஸ்ஸுகளுடைய கூட்டங்களோடுகூடினதுமான விமானத்திலேறிக்கொண்டு இரண்டாவது ஸூரியன்போல எல்லா உலகங்களிலும் ஸஞ்சரிப்பான். எட்டாவதுமுறை பூர்த்திசெய்தால் ராஜஸூயமென்னும் யாகத்தின பயனை அடைந்து, சந்திரோதயத்திற்கு நிகரானதும், அழகுள்ளதும் சந்திர கிரணங்களுக்கு ஒப்பானவைகளும் மனத்தின் வேகம் போன்ற வேகமுள்ளவைகளுமான குதிரைகளோடு கூடினதுமான விமானத்திலேறி, மேகலைகளுடைய ஒலியோடும் நூபுரங்களுடைய ஒலியோடும்கூடின உத்தமஸ்திரீகளுடைய சந்திரனைக்காட்டிலும் மிக்க அழகுள்ள முகங்களால் ஸேவிக்கப்பட்டு அவர்களுடையமடியில் ஸுகமாக நித்திரைசெய்து விழித்துக்கொள்வான். பாரதரே! ஒன்பதாவதுமுறை பூர்த்திசெய்தால் யாகங்களுட் சிறந்த அச்வமேதத்தின் (பயனை அடைந்து) ஸ்வர்ணமயமான தூண்களும் மேதிகைகளும் வைடூர்யத்தால் செய்யப்பட்ட மேடைகளுமுள்ளதும் ஸுவர்ணமயமானவைகளும் திவ்யமானவைகளுமான சாளரங்களால் நாற்புறங்களிலும் சூழப்பட்ட

தும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களாலும் கந்தர்வர்களாலும் சாரணர்களாலும் ஸேவிக்கப்பட்டதுமான விமானத்திலேறி உத்தமமான ஒளியினால் ஜ்வலிக்கின்றவனும் திவ்யமானமாலைகளையும் வஸ்திரங்களையும் தரித்தவனும் திவ்யமான சந்தனத்தால் பூசப்பட்டவனுமாகி ஸ்வர்க்கத்தில் வேறு தேவன்போலத் தேவர்களோடுகூடி மகிழ்வான். பத்தாவதுமுறை பூர்த்தி செய்து பிராம்மணர்களை வந்தனம் செய்தால் சலங்கைகளுடைய கூட்டத்தின் ஒலியுள்ளதும் பதாகைகளாலும் த்வஜங்களாலும் விளங்குகின்றதும் ரத்தினமயமான மேடைகள் நிறைந்ததும் வைடூர்ய மணிகளால் செய்யப்பட்ட தோரணங்களுள்ளதும் நாற்புறமும் ஸுவர்ணமயமான பலகணிகளுள்ளதும் பவளத்தால் செய்யப்பட்ட கொடுங்கைகளின் முன்புறங்களுள்ளதும் கானத்தில்தேர்ந்தவர்களான கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும் விளங்கும்படி செய்யப்பட்டதும் புண்ணியம் செய்தவர்கள் வாஸம்செய்யத்தகுந்ததுமான விமானத்தை ஸுகமாகவே அடைந்து, ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதும் அக்னியின் நிறம் போன்ற நிறமுள்ளதுமான கிரீடம்தரித்தவனும் திவ்யமானசந்தனத்தால் பூசப்பட்ட மேனியுள்ளவனும் திவ்யமானமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவனும் திவ்யமான போகங்களோடுகூடினவனும் சிறந்த காந்தியுள்ளவனுமாகித் தேவர்களுடைய அனுக்கிரகத்தால் திவ்யமான உலகங்களில் ஸஞ்சரிப்பான். இவ்விதம், அநேகவருஷங்கள் ஸ்வர்க்கலோகத்தில்பூஜிக்கப்படுவான். பிறகு, கந்தர்வர்களுடன் சேர்ந்து இருபத்தோராயிரம் வருஷங்கள் அழகான இந்திரனுடைய பட்டணத்தில் இந்திரனுடன்கூடி மகிழ்வான். திவ்யமான வாகனங்களிலும் விமானங்களிலும் (ஏறிக்) தெய்வப் பெண்களுடைய கூட்டங்களால் சூழப்பட்டுத் தேவன்போலப் பலவிதமான உலகங்களில் வஸிப்பான். அரசரே! பிறகு, ஸூரியனுடைய கிருகத்திலும் சந்திரனுடைய கிருகத்திலும் சிவனுடைய கிருகத்திலும் (வஸித்து) விஷ்ணுவினுடைய உலகம் செல்வான். மஹாராஜரே! இது இவ்விதமே. இதில் ஆலோசனை செய்யவேண்டாம். ச்ரத்தையுள்ளவனாக இருக்கவேண்டும். இவ்விதம் என்னுடைய குருசொல்லினர். சொல்லுகிறவனுக்கு மனத்தில் விரும்பியவையெல்லாம் கொடுக்கவேண்டும். யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் விமானங்களையும் வாகனங்களையும் தோள்வளைகளையும் குண்டலங்களையும் சிறந்த யஜ்ஞோபவீதத்தையும் விசித்திரமான வஸ்திரத்தையும் சந்தனத்தையும் விசேஷமாகக் கொடுக்கவேண்டும். அவனைத் தெய்வத்தைப்போலப் பூஜிக்கவேண்டும். (இவ்விதம் செய்தால்) விஷ்ணுவின் உலகத்தை அடைவான்.

வேந்தரே! இதற்குமேல், பாரதத்தைப் படிக்கச்செய்தால் ஒவ்வொரு பர்வத்திலும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தக்கவைகளைச் சொல்லுகிறேன். ராஜரே! பரதஶ்ரேஷ்டரே! க்ஷத்திரியர்களுடைய ஜாதியையும் தேசத்தையும் உண்மையையும் மாஹாத்மியத்தையும் தர்மத்தையும் விருத்தியையும் தெரிந்துகொண்டு முதலில் பிராம்மணர்களை ஆசீர்வாதம் செய்யச்செய்து, பிறகு, காரியத்தைத் தொடங்கவேண்டும். பர்வம் முடிந்தவுடன், தன் சக்திக்குத் தக்கவாறு பிராம்மணர்களைப் பூஜிக்கவேண்டும். மன்னரே! ஆதிபர்வத்தில், சொல்லுகிறவனுக்கு வஸ்திரத்தையும் சந்தனத்தையும் கொடுத்து அவனுக்கும் (மற்றவர்களுக்கும்) விதிப்படி மதுவையும் உத்தமமான பாயஸத்தையும் போஜனம் செய்விக்கவேண்டும். அரசரே! பிறகு, ஆஸ்தீகபர்வத்தில் கனிகளும் கிழங்குகளும் நிறைந்ததும் தேனுடனும் நெய்யுடனும் கூடினதுமான பாயஸத்தைப் போஜனம் செய்விக்க வேண்டும்; சர்க்கரான்னத்தையும் கொடுக்கவேண்டும். ராஜேந்திரரே! ஸபாபர்வத்தில் அதிரஸங்களோடும் அப்பங்களோடும் மோதகங்களோடும் கூடின அன்னத்தைப் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்விக்கவேண்டும். ஆரண்யக பர்வத்தில் பிராம்மணோத்தமர்களுக்குக் கனிகளாலும் கிழங்குகளாலும் திருப்தி அடைவிக்க வேண்டும். அரணீபர்வத்தில் ஜலம் நிறைந்த குடங்களைக் கொடுக்கவேண்டும். திருப்தி அடைவிக்கக்கூடியவைகளும் சிறந்தவைகளுமான காட்டிலுள்ள கனிகளையும் கிழங்குகளையும் இஷ்டமானஎல்லாக் குணங்களுடனும்கூடின அன்னத்தையும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கவேண்டும். விராட பர்வத்தில் பலவிதமான வஸ்திரங்களைக் கொடுக்கவேண்டும். பரதஶ்ரேஷ்டரே! உத்யோகபர்வத்தில் பிராம்மணர்களைச் சந்தனத்தாலும் மாலைகளாலும் அலங்கரித்து இஷ்டமான எல்லாக் குணங்களுடனும்கூடின போஜனத்தைப் புஜிக்கச்செய்யவேண்டும். ராஜேந்திரரே! பீஷ்மபர்வத்தில் மிகச் சிறந்ததான வாகனத்தைக் கொடுத்துப், பிறகு, எல்லாக் குணங்களுடனும் கூடினதும் நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்டதுமான அன்னத்தைக் கொடுக்கவேண்டும். ராஜேந்திரரே! துரோண பர்வத்தில் பிராம்மணர்களுக்கு மிகவும் பூஜிக்கப்பட்ட போஜனத்தையும் பாணங்களையும் விற்களையும் சிறந்த கத்திகளையும் கொடுக்கவேண்டும். அவ்வாறே, கர்ணபர்வத்திலும் மனத்தை நன்குஅடக்கிக்கொண்டு எல்லாருடைய இஷ்டத்திற்கும் இசைந்ததும் ஸம்ஸ்கரிக்கப்பட்டதுமானபோஜனத்தைப் பிராம்மணர்களுக்கு நன்குகொடுக்கவேண்டும். ராஜேந்திரரே! சல்யபர்வத்தில் மோதகங்களோடும் சர்க்கரான்னங்

களோடும் திருப்திசெய்விக்கின்றவைகளான அபூபங்களோடும்கூடின எல்லாஅன்னத்தையும் கொடுக்கவேண்டும். அவ்வாறே, கதாபர்வத்திலும் பயறு கலந்த அன்னத்தைக் கொடுக்கவேண்டும். அவ்வாறே, ஸ்திரீபர்வத்தில் பிராம்மணோத்தமர்களை ரத்தினங்களால் திருப்திசெய்யவேண்டும். ஐஷீக பர்வத்திலோ முதலில் நெய்கலந்த அன்னத்தைக் கொடுக்கவேண்டும். பிறகு, எல்லாக் குணங்களுடனும் கூடினதும் நன்கு ஸம்ஸ்கரிக்கப்பட்டதுமான அன்னத்தைக் கொடுக்கவேண்டும். அவ்வாறே, சாந்திபர்வத்திலும் பிராம்மணர்களை அன்னத்தைப் புஜிக்கச் செய்யவேண்டும். ஆஸ்வமேதிக பர்வத்தில் எல்லாருடைய இஷ்டத்திற்கும் இசைந்த போஜனத்தைக் கொடுக்கவேண்டும். அவ்வாறே, ஆஸ்ரமவாஸிக பர்வத்தில் பிராம்மணர்களை அன்னத்தைப் புஜிக்கச்செய்யவேண்டும். மௌஸல பர்வத்தில் எல்லாக்குணங்களோடும்கூடின கந்தம் மாலை சந்தனம் இவைகளையும் மஹாப்ராஸ்தானிக பர்வத்தில், அவ்வாறே, இஷ்டமான எல்லாக் குணங்களுடனும் கூடின அன்னத்தையும் கொடுக்கவேண்டும். ஸ்வர்க்கபர்வத்திலும் அவ்வாறே பிராம்மணர்களை அன்னத்தைப் புஜிக்கும்படி செய்யவேண்டும். ஹரிவம்சம் முடிந்தவுடன், ஆயிரம் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்விக்கவேண்டும். அரசரே! நிஷ்கத்தோடு கூடின ஒரு பசுவைப் பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும். ஏழையாயிருந்தாலும் அந்த நிஷ்கத்தில் பாதியுடனாவது கொடுக்கவேண்டும். ஒவ்வொரு பர்வமும் முடிந்தவுடன், வித்வானானவன் சொல்பவனுக்கு ஸுவர்ணத்துடன்கூடின புஸ்தகத்தைக் கொடுக்கவேண்டும். வேந்தரே! பரதஸ்ரேஷ்டரே! ஹரிவம்சபர்வம் பூர்த்தியாகும்தோறும் உள்ளபடி பாயஸத்தைப் புஜிக்கும்படி செய்யவேண்டும். சாஸ்திரத்தில் பாண்டித்யம் பெற்றவன் பரிசுத்தனாக இருந்துகொண்டு எல்லா ஸம்ஹிதைகளையும் பூர்த்திசெய்துவிட்டு (அவற்றைப்) பட்டுவஸ்திரத்தினால் மூடிச் சுபமான இடத்தில் வைத்து வெள்ளை வஸ்திரம் உடுத்தவனும் மாலையணிந்தவனும் சுத்தனும் நன்கு அலங்கரிக்கப்பட்டவனும் முயற்சியுள்ளவனும் மிக்க மனவடக்கமுள்ளவனுமாக இருந்துகொண்டு ஸம்ஹிதா புஸ்தகங்களைத் தனித்தனியாக முறைப்படி சந்தனங்களாலும் மாலைகளாலும் பக்ஷ்யங்களாலும் [1]போஜ்யங்களாலும் பேயங்களாலும் சுபமான பலவித விருப்பங்களாலும் பூஜிக்கவேண்டும். பிறகு, வெள்ளியையும் ஸுவர்ணத்தையும் தக்ஷிணையாகக் கொடுக்கவேண்டும். பரிசுத்தமான மனத்துடன் எல்லாருக்கும் மூன்றுபலமுள்ள ஸுவர்ணந்

1. 'போஜ்யை:' என்று மாற்றப்பட்டது.

தைக் கொடுக்கவேண்டும். அதில் பாதியையாவது காற்பாகத்தையாவது தனத்தில் வஞ்சனையின்றிக் கொடுக்கவேண்டும். எது எது தனக்கு இஷ்டமோ அதை அதைப் பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும். (பாரதத்தைச்) சொன்னவனும் தனக்குக் குருவுமான புருஷனைப் பக்தியுடன் எல்லா விதத்தாலும் ஸந்தோஷப்படுத்தவேண்டும். எல்லாத்தேவதைகளையும் நரநாராயணர்களையும் கீர்த்தனம் செய்யவேண்டும். பிறகு, பிராம்மணோத்தமர்களைச் சந்தனங்களாலும் மாலைகளாலும் அலங்கரித்துப் பலவிதமான இஷ்டங்களாலும் பலவித தானங்களாலும் திருப்தி அடைவிக்கவேண்டும். (இவ்விதம் செய்தால்), மனிதன் அதிராத்ரமென்னும் யாகத்தின் பயனை அடைவான். அவ்வாறே, ஒவ்வொரு பர்வத்திலும் யாகத்தின் பயனை அடைவான். பரதஸ்ரேஷ்டரே! சொல்லுகிற வித்வானானவன் வியக்தமான அக்ஷரங்களும் பதங்களும் ஸ்வரமுமுள்ளவனாக இருந்துகொண்டு பவிஷ்யமான பாரதத்தைச் சொல்லவேண்டும். பரதர்களில் சிறந்தவரே! பிராம்மணஸ்ரேஷ்டர்கள் போஜனம் செய்தபின் சொல்லுகிறவனுக்குப் போஜனம் செய்வித்து நன்கு அலங்கரித்து உள்ளபடி (இஷ்டத்தைக்) கொடுக்கவேண்டும். பரதஸ்ரேஷ்டரே! சொல்லுகிறவன் ஸந்தோஷமடைந்தால் மிகச் சிறந்ததும் சுபமுமான ப்ரீதியானது உண்டாகும். பிராம்மணர்கள் ஸந்தோஷமடைந்தால் எல்லாத் தேவர்களும் அருள்புரிவார்கள். பரதர்களில் சிறந்தவரே! ஆகையினால்தான், சிறந்தவைகளும் பலவிதமானவைகளுமான எல்லா இஷ்டங்களாலும் பிராம்மணர்களை முறைப்படி பிரார்த்திக்கவேண்டும். புருஷர்களுள் சிறந்தவரே! நீர் என்னிடம் வினவிய இந்த விதியானது இவ்விதம் என்னால் உமக்குச் சொல்லப்பட்டது. (நீர்) ஸ்ரத்தையுள்ளவராக இருக்கவேண்டும். அரசரே! ராஜஸ்ரேஷ்டரே! சிறந்த மேன்மையை விரும்புகிறவன் எப்பொழுதும் பாரதத்தைக் கேட்பதிலும் படிப்பதிலும் முயற்சியுள்ளவனாக இருக்கவேண்டும். எப்பொழுதும் பாரதத்தைக் கேட்கவேண்டும். பாரதத்தைப் படிக்கவேண்டும். பாரதம் எவனுடைய வீட்டில் இருக்கிறதோ ஜயம் அவனுடைய கையை அடைந்ததாகும். பாரதம் சிறந்த புண்ணியமானது. பாரதத்தில் பலவித கதைகள் இருக்கின்றன. பாரதம் தேவர்களால் ஸேவிக்கப்படுகின்றது. பாரதமானது சிறந்த ஸ்தானம். பரதஸ்ரேஷ்டரே! பாரதமானது எல்லாச் சாஸ்திரங்களுள்ளும் உத்தமமானது. பாரதத்தால் மோக்ஷமானது அடையப்படுகிறது. இது உண்மை என்று சொல்லுகிறேன். மஹாபாரதமென்னும் ஆக்யானத்தையும் பூமியையும் பசுவையும் ஸரஸ்வதியையும் பிராம்மணர்களையும் கேசவரையும் சொல்லுகிறவன் கஷ்டப்படமாட்டான். பரதர்களுள் சிறந்தவரே! புண்யமான வேதத்திலும் ராமாயணத்திலும் பாரதத்திலும் அடியிலும் நடுவிலும் முடிவிலும் எல்லாவிடங்களிலும் விஷ்ணுவானவர் கானம் செய்யப்படுகிறார். பரமபதத்தை விரும்புகிற மனிதன் இவ்வுலகில் எதில் திவ்யமான விஷ்ணுகதைகளும் ஸநாதனமான ஸ்ருதிகளும் இருக்

னது. இது தர்மத்தை அறிவிக்கிறது. எல்லாக்குணங்களுடனும் கூடின இதனை க்ஷேமத்தை விரும்புகிறவன் கேட்கவேண்டும். (இதனைக் கேட்டால்) மன மொழி மெய்களால் ஸம்பாதிக்கப்பட்ட பாவமெல்லாம், ஸூரியன் உதிக்கும்பொழுது இருள் நாசமடைவதுபோல, நாசத்தை அடையும். பதினெட்டுப் புராணங்களையும் கேட்டால் எந்தப் பயன் உண்டாகுமோ அந்தப்பயனை (இதைக் கேட்டு) விஷ்ணுவினிடத்தில் பக்தியுள்ளவன் அடைகிறான்; இதில் ஸம்சயமில்லை. ஸ்திரீகளும் புருஷர்களும் விஷ்ணுவின் பதத்தை அடைவார்கள். புத்திரனை அடைய விருப்பமுள்ளவர்களான ஸ்திரீகளும் விஷ்ணுவினுடைய புகழைக் கேட்கவேண்டும். சொல்லியவண்ணம் பயனை விரும்புகிறவன் சக்திக்குத் தக்கவாறு இதைப் படிப்பவனுக்கு ஐந்து ஸுவர்ணநிஷ்கங்களையாவது கொடுக்கவேண்டும். தனக்கு மேன்மையை விரும்புகிறவன் (பாரதத்தைப்) படிக்கிறவனுக்கு ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட கொம்புகளுள்ளதும் கன்றுடன்கூடினதும் வஸ்திரத்தால் போர்க்கப்பட்டதுமான கபிலைப்பசுவைக் கொடுக்கவேண்டும். பரதஸ்ரேஷ்டரே! இரண்டு கைகளுக்கும் அலங்காரத்தையும் காதுகளுக்கு ஆபரணத்தையும் மிக்க தனத்தையும் கொடுக்கவேண்டும் அரசரே! படிப்பவனுக்குப் பூமிதானம் செய்யவேண்டும். பூமிதானத்திற்குச் சமமான தானம் இருந்ததுமில்லை; இருக்கப்போவதுமில்லை. மனிதன் எப்பொழுதும் (இந்தப் பாரதத்தைக்) கேட்டாலும் சொன்னாலும் எல்லாப்பாவங்களாலும் விடப்பட்டு விஷ்ணுவின் பதத்தை அடைவான். பரதர்களுள் சிறந்தவரே! பதினொரு தலைமுறையாகவுள்ள எல்லாப் பித்ருக்களையும் தன்னையும் மனைவியையும் மக்களையும் கரையேற்றுவான். அரசரே! [1]இதில் பத்தில் ஓர் அம்சமான ஹோமமும் செய்யவேண்டும். புருஷஸ்ரேஷ்டரே! இது முழுதும் என்னால் உம்முடைய முன்னிலையில் சொல்லப்பட்டது'' என்று சொன்னார்.

—:0:—

பாரதஸ்ரவண விதி அத்யாயம் முற்றிற்று.

# ஸ்ரீ மஹாபாரதம் முற்றிற்று.



1. 'தசாம்சம்' என்பது மூலம்; லக்ஷம் ஸ்லோகத்தில் பத்தில் ஒன்று; அதாவது பதினாயிரம் ஹோமம்.